# பணவியலும் பாங்கியலும்

(இரண்டாம் பாகம்)

(பாங்கியல், பன்னாட்டுப் பணவியல், வாணிக இயல்)

சி. வேலாயுதம்



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—11

# பணவியலும் பாங்கியலும்

(இரண்டாம் பாகம்)

(பாங்கியல், பன்னாட்டுப் பணவியல், வாணிக இயல்)

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகிறது)

ஆசிரியர் :
சி. வேலாயுதம், எம்.ஏ., எல்.டி., பி.காம்.,
(ஆனர்சு, லண்டன்),
முன்னாள் தலைமைப் பேராசிரியர்,
பொருளாதாரத்துறை,
மாநிலக் கல்லூரி,
சென்னை



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition - April, 1963
Revised Edition-October, 1975

T.N.T.B.S. (C.P.) No. 11



# MONEY AND BANKING—Part - II

S. VELAYUDHAM

*Price Rs. 11-00*

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

***Printed by***
Nanbargal Achagam,
Madras-600018

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினோர் ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பட்டப் படிப்பு வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தை யும் தமிழிலேயே கற்று வருகின்றனர். நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரண மாக இத்திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத் தக்க வகையில் நடைபெற்று வருகிறது.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், மெய்ப்பொருளியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டம் ஆகிய பல துறைகளில் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'பணவியலும் பாங்கியலும்-II' என்ற இந் நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் சார்பில் வெளி யான 11ஆவது வெளியீடாகும். தமிழ் மக்களின் பேராதரவி னாலும் தமிழைப் பயிற்சி மொழியாகக் கொண்டவர்களின் நல்லூக்கத்தினாலும், இதன் முந்தைய பதிப்புப் படிகள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன. ஆதலின் இப்பொழுது இந் நூல் மீண்டும் வெளிவருகின்றது. இந் நூல் மைய அரசு, கல்வி, சமூகநல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும், கலையியற் பாடங் களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயில வேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு ஆற்றல் எளிதாக, விரைவாக வளர வேண்டும் என்பது தான். 'எதிலும் தமிழ் எங்கும் தமிழ்' என்ற குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு, தமிழகத்து ஆசிரியப் பெரு மக்களையும் மாணவர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப் புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

பக்கம்

பக்கம்

# 19. வணிக பாங்குத் திட்டம்

## (The Commercial Banking System)

### 1. பெயரும் பணியும்

நாம் இனி பணத்துறை நிலையங்களைப் (Monetary Institutions) பற்றிப் படிக்கப் போகிறோம். இவைகளில் முக்கியமானவை வணிக பாங்குகள் (Commercial Banks) எனப்படுவன. இவைகளின் கடன்களே (debts) முன்னேறிய நாடுகளின் பணத்தொகையில் பெரும் பகுதிக்குக் காரணமாக இருக்கின்றன. இக் கடன்களின் தொகையில் மாறுதல்களே நாட்டின் பணத்தொகை மாறுதல்களுக்குக் காரணமாயிருக்கின்றன.

இந்த வணிக பாங்குகளின் அமைப்பைப் பற்றியும் நடவடிக்கைகளைப் பற்றியும் பார்ப்போம். பின்னர் அவை பண அங்காடியில் எவ்விதமாகச் சிறப்புடையன என்பதைக் காண்போம்.

'வணிக பாங்குகள்' என்ற பெயர் உண்மையில் இன்று பொருத்தமான பெயரன்று என்று கூறலாம். ஏனெனில், இப்பெயர் அவைகளின் கடன் லேவாதேவி வகைகள் அனைத்தையும் குறிப்பிடுவதாக இல்லை. பாங்குகள் குறுங்காலக் கடன்களாகிய வணிகக் கடன்களை (commercial loans) மட்டும் தான் தரலாம் என்ற கொள்கையின் அடிப்படையில் இப்பெயர் ஆதியில் தோன்றியது. வணிகக் கடன்கள் எனப்படுபவை, விற்பனைப் பொருள்களை இருப்புச் செய்வதற்கும், சில தற்காலிக உற்பத்தி வேலைகளுக்கும், சில மாதங்களிலே திருப்பித்தர வேண்டுமென்ற நிபந்தனையுடன் கொடுக்கப்படுவன. ஆனால் இன்று பாங்குகள் வேறு காரியங்களுக்கும், நுகர்ச்சிச் செலவுக்கும், தொழிற் பங்கு (Share) பேரம் செய்வதற்கும், நெடுங்காலத்துக்கும் ஓரளவுக் கடன் தருவதுண்டு.

நிற்க, வணிகத்துறைச் சார்பற்ற வேறு பணிகளையும் பாங்குகள் இன்று செய்யக் காண்கிறோம். டிரஸ்டிகளாகவும், ஏஜண்டுகளாகவும், தொழில்களின் பங்குகளை விற்றுக் கொடுப்பவர்களாகவும், இன்னும் பல வகைகளிலும் பாங்குகள் பணி செய்கின்றன.

எல்லாவற்றுக்கும் மேலாக இவைகளின் பண உற்பத்திச் சக்தியை இப்பெயர் புலப்படுத்தவில்லை. நிதி நிலையங்கள் அனைத்திலும் இவைகளின் தனிச் சிறப்புப் பணத்தைத் தோற்றுவிக்கவும் அழிக்கவும் இவைகளுக்கிருக்கும் சக்தியே யாகும். ஆகவே இவைகளை இன்று 'பண உற்பத்திப் பாங்குகள்' என்று அழைப்பது பொருத்தமாக இருக்கலாம். ஆனால் ஆட்சியிலிருக்கும் சொல்லை விலக்க முயல்வது குழப்பத்தையே உண்டாக்குமாதலால், பழைய பெயரே இருந்து வருகிறது. ஆயினும் அப் பெயரால் சுட்டப்படாத அம்சங்களும் பாங்குகளுக்கு உண்டு என்பதை மறக்கக்கூடாது.

## 2. பாங்குகளின் வேலைகள்

இந்நூலின் முதற் பாகத்தில் கூறப்பட்ட பாங்குப் பரிணும விவரங்களிலிருந்து, தம் பணத்தையும் பிறர் பணத்தையும் கடன் தந்து ஆதாயம் தேடுவதுதான் பாங்குகளின் முக்கியமான பூர்வத் தொழிலெனத் தோன்றுகிறது. நாளடைவில் அநேக இதர வேலைகளையும் பாங்குகள் மேற்கொண்டன. புது வேலைகள் தோன்றிக் கொண்டே உள்ளன. பாங்கு என்றால் என்ன என்று விளக்கும் இலக்கணம் இதுவரை யாராலும் எல்லாரும் ஒப்பும் வகையில் வரையப்படவில்லை. நடப்புக் கணக்கேற்று, அதன் பேரில் எழுதப்படும் காசோலைகளை மதித்துப் பணம் தருவது பாங்கின் சிறப்பு என்பது ஹார்ட் (Hart) கொடுத்த இலக்கணம். ஒரு வணிக பாங்கின் வேலைகளைப் பல வகைகளில் கூறுபடுத்தலாம். கீழே தரப்பட்டுள்ளது ஒருவகை :

1. **பாங்கு வேலைகள்:** பாங்கு கடன் வாங்குகிறது. கடன் கொடுக்கிறது. கடன் வாங்கும் நிலையில் அது வைப்புகளை (deposits) ஏற்கிறது. இவ்வைப்புகள் நடப்பு வைப்புகள் (current deposits), தவணை வைப்புகள் (fixed deposits), சேமிப்பு வைப்புகள் (savings deposits) என்று மூவகைப்படும். இவ்விதமாகப் பலவித வைப்புகளின் மூலம் நிதியைத் திரட்டுவது ஒரு வேலை.

இதனோடு இணைப்புடைய மற்றொரு வேலை கடன் தருவது. கடன் வகைகள் பல. இவைகளைப் பின்னர் விளக்குவோம். கடன் தரும் வேலையை ஆற்றும் வழியில் உண்டியல் கழிவு செய்வது (discounting bills) என்ற வேலையும் தோன்றுகிறது.

கடன் வேலையின் கிளையாகத் தோன்றிய வேலை பணத்தை உற்பத்தி செய்தல் (creation of money). பாங்குகளின் கடன் பொறுப்பே (liability) பணமாகச் செலாவணியில் ஆளக்கூடியது. பாங்கின் கடன் பொறுப்புகள் நோட்டுருவிலும் வைப்புருவிலும் செலாவணியில் இருக்கின்றன. தற்போது வணிக பாங்குகள் நோட்டு வெளியிடும் உரிமையை இழந்து விட்டன. ஆனால் வைப்பைப் பெருக்கும் உரிமை இருந்து வருகிறது. காசோலை மூலம் வைப்புகளைப் பணமாக ஆள வசதி செய்வது பாங்குகளின் பணிகளில் மிக முக்கியமான வேலை. இந்த வேலையே வணிக பாங்குகளை நில அடைமான பாங்கு போன்ற பிற வகைக் கடன் தரும் நிலையங்களினின்றும் வேறுபடுத்துவது.

2. **ஏஜண்டு வேலைகள்:** பாங்குகள் தங்கள் வாடிக்கைக்காரர்களுக்கு ஏஜண்டாகச் சில வேலைகளைச் செய்கின்றன. உதாரணமாக :

(அ) வாடிக்கைக்காரர்கள் சார்பில் புரோ நோட்டுகள், காசோலைகள், உண்டியல்கள், டிவிடண்டுகள், வாடகை முதலியவைகளை வசூலித்தலும், செலுத்தலும்.

(ஆ) செக்யூரிடிகளை வாங்கலும் விற்றலும்.

(இ) பணத்தை ஓரிடமிருந்து மற்றோரிடத்துக்கு அனுப்புதல் (remittance). டிராஃப்ட் வழியாகவோ, தந்தி வழியாகவோ பாங்குகள் தம் வாடிக்கைக்காரர்கள் விரும்பும் வேற்றூர்களுக்குப் பணத்தை அனுப்புகின்றன.

(ஈ) நிறைவேற்றுவோர் (Executor), நம்பகர் (Trustee), அட்டார்னி (Attorney) ஆகியோர் செய்யும் பணிகளைச் செய்தல்.

வாடிக்கைக்காரர்களின் பிரதிநிதிகளாக அவர்கள் விரும்பும் அநேக வேலைகளைப் பாங்குகள் தாமே செய்கின்றன. வருமான வரி அதிகாரிகளிடம் கடிதத் தொடர்பு கொள்ளல், கடற்பயணச் சீட்டுகளை வாங்கல், வரும் கடிதங்களைத் திருப்புதல் ஆகிய பல வேலைகளைச் செய்கின்றன.

3. **பிற பணிகள்:** இவை 'ஏஜண்டு' முறையில் செய்யப்படாமல், அவ்வப்போது கூலிக்குச் செய்யும் பணிகள். உதாரணமாக,

(அ) கடன்வசதிச் சீட்டுகள் (Letters of Credit), சுற்றுச் சீட்டுகள் (Circular Notes), பாங்கு டிராஃப்டுகள் (Bank Drafts), பிரயாணிச் செக்குகள் (Travellers' Cheques) முதலியவைகளை வழங்கல்.

(ஆ) அந்நியச் செலாவணி (foreign exchange) விற்றல், வாங்கல்.

(இ) உலோகக் கட்டிகளை (bullion) வாங்கல், விற்றல்.

(ஈ) அரசாங்கம், பொதுத்துறை நிறுவனங்கள், கம்பெனிகள் ஆகியவைகளின் பங்குகளை விற்கும் பொறுப்பேற்றல் (under-writing).

(உ) வாடிக்கைக்காரர்களின் பொருளாதார நிலை, தொழில் துறை நாணயம், கண்ணியம் ஆகியவற்றுக்குச் சான்று தருதல்.

(ஊ) வர்த்தகம் (trade), வாணிபம் (commerce), தொழில் (industry) முதலியவை சம்பந்தமான விவரங்களைச் சேகரித்தல்.

(எ) மதிப்புமிக்க ஆபரணம், தஸ்தாவேஜுகள், செக்கூரிடிகள் ஆகியவற்றைப் பாதுகாத்துத் தருதல்.

இந்திய பாங்குக் கம்பெனிச் சட்டம் ஒரு பாங்குக் கம்பெனி மேற்கொள்ளக் கூடிய பணிகளை விளக்குகிறது.

## 3. பாங்கு வகைகள் (Kinds of Banks)

கடன் வாங்குவது அல்லது தருவது போன்ற சில வேலைகள் ஓரளவுக்கு எல்லா வகைகளிலும் காணப்படலாமாயினும் பாங்கென்ற பெயருடைய நிறுவனங்களை ஒருவாறு வகைப் படுத்தலாம்.

(அ) **வணிக பாங்குகள்** (Commercial Banks): இவை பெரும்பாலும் குறுங்கால நடப்பு வைப்புகளைப் பெற்று, குறுங்காலத்துக்குக் கடன் தருபவை. இவைகளின் நடவடிக்கையைத்தான் நாம் பணவியலில் சிறப்பாக ஆராய வேண்டியிருக்கிறது. ஏனெனில், இவைகள்தாம் செலாவணியைக் கூட்டவும் குறைக்கவும் வல்லன.

(ஆ) **தொழில் பாங்குகள்** (Industrial Banks): இவை தொழில் துறையோரின் நெடுங்கால மூலதனத் தேவைகளையும் செயல் முதலையும் (Working Capital) தருவன. இவை நெடுங்காலக் கடன் வாங்கவும் கொடுக்கவுமான தொழிலைக் கடன் அங்காடியில் (Loan Market) செய்துவருகின்றன. இவை களின் கடன் பொறுப்புகள் பணமாகச் செலாவணியில் வழங்கக்கூடியன அல்ல.

(இ) **விவசாய பாங்குகள்** (Agricultural Banks): விவசாயத்தின் தனிப்பட்ட அம்சங்கள் காரணமாகத் தனிவகை பாங்குகள் தேவைப்படுகின்றன. விவசாயிகளுக்கு மூவ்வகைக் கடன்கள் தேவை. குறுங்காலக் கடன் விதை, எரு ஆகியன வாங்கவும், இடைக்காலக் கடன் கருவிகள், ஆடு மாடுகள் வாங்கவும், நெடுங் காலக் கடன் நிலத்தைப் பதப்படுத்தல், வடிகால் அமைத்தல் போன்றவற்றுக்கும் தேவைப்படுகின்றன. வணிக பாங்குகள் விவசாயிகளின் தேவையைப் பூர்த்திசெய்ய முன்வருவதில்லை. ஏனெனில் விவசாயத் தொழில் பாங்குக் கடனுக்கு ஏற்றதன்று. விவசாயி, கடனுக்கு ஏற்ற ஈடு வைக்க முடியாது. மாசூல் கைக்கு வந்த பின்பே கடனைத் திருப்பிக் கொடுக்க முடியும். ஆனால் மாசூல் நிச்சயமில்லாதிருக்கலாம். விலையும் பேரளவில் மாறலாம். விவசாயி நிலந்தவிர வேறு ஈடு காட்ட முடியாது. பாங்குகள் அசையாச் சொத்துகளை விரும்புவதில்லை. ஆகவே, தனிவகை பாங்குகள் இன்றியமையாதன வாகின்றன.

(ஈ) **மைய பாங்குகள்** (Central Banks): நாட்டின் பாங்குகள் அனைத்துக்கும் தலைமையாய், வழிகாட்டியாய் நின்று, அரசாங் கத்தின் பண நிர்வாகப் பொறுப்பில் பங்கு கொண்டு இருப்பது மைய பாங்கு. வணிக பாங்கு, மைய பாங்கு ஆகிய இரண்டுக்கும் உள்ள வேற்றுமை அவைகளின் வேறுபட்ட நோக்கங்கள் (objects) காரணமானது. வணிக பாங்கின் முக்கிய நோக்கம் இலாபம். மைய பாங்கின் முக்கிய நோக்கம் நாட்டுப் பொருளா தாரத்தின் நலம்.

(உ) **சேமிப்புப் பாங்குகள்** (Savings Banks): சேமிப்பு நிலையங்களின் சிறப்பான அம்சம் குறிப்பிட்ட தொகைக்குமேல் ஒரு குறிப்பிட்ட காலப் பகுதியில் வைப்பைத் திருப்பிப் பெற முடியாமையே. இந்தத் தடைக்குக் காரணம் சேமிப்பு சிதைந்து போகக் கூடாதென்பதே. இந்த நியதி இப்போதில்லை. இன்று வணிக பாங்குகளே சேமிப்புப் பாங்குகளாகவும் பணி செய்கின்றன.

(ஊ) **கூட்டுறவு பாங்குகள் (Co-operative Banks):** இவை ஏழைகளின் பணத்தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக ஏற்பட்டவை. இவைகளில் மேனிலை நிறுவனங்கள், மாநிலக் கூட்டுறவு பாங்குகள் (State Co-operative Banks) போன்றவை, கூட்டுப் பங்கு பாங்குகள் செய்யும் பணிகளைச் செய்வதுண்டு. ஆயினும் இவைகளின் சிறப்பம்சம் கடனுதவி செய்வதாகும். அமைப்பில் இவை கூட்டுப் பங்கு பாங்குகளினின்று மிகவும் வேறுபட்டவை.

**மைய பாங்கும் வணிக பாங்குகளும்**

மைய பாங்கு தன் நடவடிக்கையை நாட்டுப் பொருளாதாரம் எப்படிப் பாதிக்கப்படும் என்ற அளவுகோலால் தீர்மானிக்கிறது. ஆனால், வணிக பாங்கும் தன் எதிர்கால நிலைபேற்றைக் கருதுமானால் குறுகிய நோக்கத்தோடு இலாபத்தை மட்டும் கருதாது. இலாப ஆசையினால் தன் நிலைபேற்றைப் பாதிக்கும்படியான பேரங்களில் எந்தப் பாங்கும் ஈடுபடாது. மைய பாங்கு தனியார் மூலதனத்தினால் நிறுவப்பட்டிருக்குமானால், பங்குதாரர்களுக்கு ஆதாயம் தேடித்தர வேண்டிய கடமை யுடையதாகும். ஆயினும், ஆதாயம் இரண்டாந்தர நோக்கமாகவே இருக்கும். தற்காலப் போக்குப்படி மைய பாங்கு அநேகமாக அரசாங்கப் பாங்காகவே இருக்கும். வணிக பாங்குகள் பெரும்பாலும் தனியார் துறையில் இருக்கும்.

ஒரு நாட்டில் வணிக பாங்குகள் பல இருக்கலாம். ஆனால், மைய பாங்கு ஒன்றுதான் இருக்கும். சாதாரண பாங்குகளைப் போலன்றி மைய பாங்கு பொதுமக்கள் கணக்குகளை வைத்துக் கொள்வதில்லை; பாங்குப் பணி எதுவும் செய்வதில்லை; வணிக பாங்குகளுடனும், சில குறிப்பிட்ட நிதி நிலையங்களுடனும்தான் தொடர்பு வைத்துக்கொள்கிறது.

**5. வணிக பாங்குத் திட்டத்தின் அமைப்பு** (The Structure of the Commercial Banking System)

வணிக பாங்குகள் கம்பெனி முறையில் அமைக்கப்பெறுகின்றன. தற்காலத்தில் எல்லாத் துறைகளிலும் கூட்டுப்பங்கு முறையில் நிறுவப்பட்ட கம்பெனிகள் பேருரு உடையனவாக இருப்பது போல, வணிக பாங்குகளும் பேருரு உடையனவாக உள்ளன. ஒவ்வொன்றுக்கும் அநேகக் கிளை அகங்கள் நாடு முழுதும், பிற நாடுகளிலும் கூடப் பரவியுள்ளன. இவ்வித

மாகக் கிளைகளையுடைய பாங்குகள் ஒரு நாட்டில் பொதுவாக மலிந்து காணப்படுமாயின் அந்நாடு 'கிளை பாங்கு முறை' (Branch Banking) யை ஆள்வதாகக் கூறப்படும். இங்கிலாந்து, கனடா, ஆஸ்திரேலியா நாடுகளில் இம்முறையே காணப் படுகிறது. இங்கிலாந்து கிளை பாங்கு முறைக்கு இலக்கியமாக அமைந்துள்ள தென்பர். அங்குப் பெரிய ஐந்து பாங்குகள் (The Big Five) கிளை பாங்கு முறையில் உலகத்திலேயே பெயர் பெற்றவை. இவ்வைந்தும் சுமார் 9,500 பாங்குக் கிளைகளை யுடையன. அமெரிக்காவில் இந்த நூற்றுண்டின் துவக்கத்தி லிருந்து கிளை பாங்கு முறை பரவிக்கொண்டு வருகிறது என்பது உண்மையாயினும், அமெரிக்க முறை 'தனி பாங்கு (Unit Banking) முறை'யே யாகும். சில கிளைகள் இருப்பினும் அவை குறிப்பிட்ட வட்டாரத்துக்குள்ளே தான் இருக்கும். இதற்குக் காரணம் பத்தொன்பதாம் நூற்றுண்டில் பாங்குகள் நிறுவு வதற்கு இருந்த எளிய அனுமதியும் கிளைகள் நிறுவுவதற்கிருந்த தடையு மாகும். தவிர, அமெரிக்க மக்கள் இயற்கையாகவே பண ஆதிக்கத்துக்குப் (money trust) பயந்தவர்கள் ஆகவே, கிளை பாங்கு முறையை அவர்கள் விரும்பவில்லை. இதனுல் தேச பாங்குச் சட்டம் (National Banking Act) கிளைகளைப்பற்றி ஒன்றும் கூறவில்லை. ஒன்றும் கூருததனுல் கிளைகளுக்குத் தடை யுள்ளதாகக் கருதப்பட்டு வந்தது. 1865இல் தான் ஓர் இராஜ்ய பாங்கு (State Bank) தேச பாங்காக (National Bank) மாறும் போது அதன் முன்னைய கிளைகள் அப்படியே இருக்கலாம் என்று விதிவிலக்கு ஏற்பட்டது. ஆனுல் இராஜ்யங்கள் பலவாறு சட்டம் செய்திருந்தன. அநேக இராஜ்யங்களில் கிளைகளுக்கு அனுமதி யில்லை. சிலவற்றில் கிளை நிறுவும் எல்லை அல்லது எண்ணிக்கை வரையறை செய்யப்பட்டது. இதனுல் தனி பாங்குகளை நிறுவல் தூண்டப்பட்டது. பாங்கு ஐக்கியங்களும் தடைப் பட்டன.

1900இல் அமெரிக்காவில் 8,700 பாங்குகளுக்கு மேல் இருந்தன. இவைகளில் 87 பாங்குகளுக்குத்தான் ஒன்றுக்கு மேற்பட்ட அலுவலகங்கள் இருந்தன. ஆயினும் கிளைகளின் எண்ணிக்கை 119 தான். 1920இல் கூட 30,000 பாங்குகளில் 530 பாங்குகள் தாம் கிளைகள் உடையனவாயிருந்தன. இவை களின் கிளைகளின் எண்ணிக்கை 1,281 தான். ஆனுல் பிற் காலத்தில் கிளை பாங்கு முறை பரவலாயிற்று. 1957-க்குள் பாங்கு களின் எண்ணிக்கை 13,566 ஆகப் பல காரணங்களால் குறைந்த போது 1,893 பாங்குகள் 7,968 கிளைகளுடன் இருந்தன. 1963இல் வணிக பாங்குகள் 13,427. இதில் 2,683 பாங்குகள் 12,345

கிளைகளுடன் இருந்தன. இவை வணிக பாங்குகளின் சொத்தில் பாதியை உடையனவாயிருந்தன.

இவ்விதமான தனி பாங்கு முறையில் இருந்த சில இடையூறுகளை அமெரிக்கர்கள் தொடர்பு (Correspondent) பாங்கு முறையால் தவிர்த்தனர். இம்முறையை விளக்குவோம். ஒரு நாட்டுப்புற பாங்கு (Country Bank) அருகிலுள்ள நகர பாங்கு ஒன்றில் ரொக்க வைப்பு வைத்திருக்கும். இந்நகர பாங்கு பெரு நகரங்களான நியூயார்க் போன்ற இடங்களிலுள்ள பெரிய பாங்குகளில் ரொக்கம் வைத்திருக்கும். இந்த நகர பாங்குகளிலுள்ள கணக்கின் மூலம் நாட்டுப்புற பாங்குகள் தமக்குள் ஒன்றுக்கொன்று பணம் செலுத்துவதோ வசூலிப்பதோ ஆகிய வசதிகளைச் செய்து கொள்கின்றன. நியூயார்க், சிகாகோ போன்ற நகரங்களிலுள்ள பெரிய பாங்குகள் ஆயிரக்கணக்கான நாட்டுப்புற பாங்குகளுடன் தொடர்பு வைத்திருக்கின்றன. பாஸ்டன், பிலடல்பியா, சான்பிரான்சிஸ்கோ போன்ற இராஜ்ய நகரங்களிலும் பாங்குகள் இவ்விதமான தொடர்புப் பணி செய்கின்றன. இவ்வகையில் நகர பாங்குகளில் இருக்கும் வைப்புகள் நாட்டுப்புற பாங்குகளுக்குப் பலவகைகளில் பயன் படுகின்றன. பெடரல் ரிசர்வ் திட்டத்தில் இணைக்கப்பட்ட அங்க பாங்குகள் (Member Banks) பெடரல் ரிசர்வு பாங்குகளில் வைத்திருக்கும் இருப்புதான் சட்டப்படி ரொக்க ரிசர்வாகக் (Cash Reserve) கருதப்படுகின்றனவாயினும், அங்கத்தின ரல்லாத பாங்குகள் (Non-member Banks) வேறு வணிகப் பாங்குகளிடம் வைத்திருக்கும் வைப்புகளையும் ரொக்கமாகக் கருத இராஜ்யச் சட்டங்கள் அனுமதிக்கின்றன. ஆகவே, தொடர்புப் பாங்குகளிடம் வைத்திருக்கும் இருப்புகள் சட்ட ரிசர்வாகப் பயன் படுகின்றன. இரண்டாவது, நாட்டுப்புற பாங்குகள் செலுத்த வேண்டியதையும் வசூலிப்பதையும் தொடர்புப் பாங்குகள் மூலம் நடத்திக் கொள்கின்றன. தொடர்புப் பாங்குகள் தீர்வகம்போல் பணி செய்கின்றன. மூன்றாவது, அயல்நாட்டுச் செலுத்துகளும் இப் பாங்குகள் மூலம் செய்யப்படுகின்றன. நான்காவது, செக்கூரிடிகளை வாங்குவது, விற்பது, பங்கு மார்க்கெட்டுக்குக் கடன் தருவது, உண்டியல் ஏற்பது ஆகிய உதவிகளை நாட்டுப்புற பாங்குகளின் ஏஜண்டாகத் தொடர்புப் பாங்கு செய்யும். ஐந்தாவது, நாட்டுப்புற பாங்குகள் தம்மிடம் எச்சமாக உள்ள வைப்பை நகர பாங்குக்கு அனுப்பி இலாபகரமாகக் கடன் கொடுக்கச் செய்யலாம். ரொக்கம் தேவையானல் நகர பாங்கிடமுள்ள வைப்பிலிருந்து எடுத்துக் கொள்ளலாம். இதனல் பணம் பிரதேசங்களுக்கிடையே

புரளுவது அதிகப்படுகிறது. பாங்குகளின் எண்ணிக்கை ஆயிரக் கணக்கில் இருப்பதால் தொழிலில் போட்டி மும்முரமாக இருக்கும் என்று நினைக்கக் கூடாது. நகரங்கள் ஆயிரக் கணக்கில் உள்ள நாட்டில் ஊருக்கு ஒன்றிரண்டு பாங்குகளே இருந்தபோதிலும் எண்ணிகை பல்லாயிரமாக இருப்பது இயற்கையே.

தவிர, அநேக தனி பாங்குகள், நிர்வாகத்தில் பிணை பட்டுள்ளன. பாங்குத் தொடர்கள் (Chains or Groups) பல அமெரிக்காவில் காணப்படுகின்றன. தொடர் எனப்படுவது பொதுப்பட்ட உரிமை (Common Ownership) அல்லது பொதுப் பட்ட நிர்வாகம் (Control) உடையது. இது கிளை பாங்கு முறைக்குள்ள தடைகளைத் தாண்டுகிறது. சுமார் 400 பாங்குகள் இவ்விதமாக 46 பிடிப்புக் (holding) கம்பெனிகளின் கீழ் அடங்கி யிருப்பதாகச் சேயர்சு (Sayers) தெரிவிக்கிறார். பாங்குத் தொகுதிகள் (Group Banking) சுமார் 1926ஆம் ஆண்டில் தோன்றின. 1929-க்குள் 300 தொகுதிகள் இருந்தன. இவை களில் 2,000 பாங்குகள் அடங்கின. மூன்று முதல் 108 வரை ஒரு தொகுதியிலிருந்தன. பெரும்பாலும் பத்துக்குக் குறைந் தனவே. 1929-க்குப்பின் தொகுதிகள் எண்ணிக்கையில் குறைந்தன. 1939இல் 31 இராஜ்யங்களில் 427 பாங்குகள்தாம் 41 தொகுதிகளில் இருந்தன. இம் முறையினால் ஹோல்டிங் கம்பெனி முறையின் நலமும் சேமமும் பெறப்பட்டன.

பாங்குத் தொடர் (Chain Banking) தொகுதியைவிடத் தளர்ந்த அமைப்புடையது; 19ஆம் நூற்றாண்டின் நடுவில் தோன்றி. இந்நூற்றாண்டில் இரண்டாம் மூன்றும் பத்துகளில் அநேகம் முறிந்ததனால் புகழிழந்தது. 1925இல் 933 பாங்குகளை உள்ளடக்கிய 133 தொடர்கள் இருந்தன. தவிர ஐக்கியத்தினால் அநேக பாங்குகள் சமீப காலத்தில் ஒன்றுபட்டு விட்டன. இங்கிலாந்தில் 'பெரிய ஐந்து' தோன்றியபோது நடந்த வாதங்கள் அமெரிக்காவிலும் நடைபெற்றுள்ளன அநேக நகரங்களில் ஏற்கனவே பாங்கு மையப்பாடு (Concentration) குறிப்பிடத்தக்க அளவு இருக்கக் காண்கிறோம். ஆகவே இன்று அமெரிக்காவைச் சிறு பாங்குகள் நாடு (Country of Small Banks) என்று குறிப்பிட முடியாதென்பது சேயர்சு கருத்து. ஆயினும் பொதுவில் தனி பாங்கு நாடு எனலாம். (சிறு பாங்கு நாடு என்பதற்கும் தனி பாங்கு நாடு என்பதற்கும் வேறுபாடு காண்க.)

## 6. கிளை பாங்கு முறையின் நன்மை தீமைகள்

கிளை பாங்கு முறையில் நலங்கள் பெரும்பாலும் பேரளவில் தொழில் செய்வதில் ஏற்படும் நலங்களாகும். பேரளவில் தொழில் செய்வதன் நலம் வேலைப் பகுப்பு சாத்தியமாவதி லிருந்து உண்டாகிறது. அலுவலர்கள் தனித்தனிப் பணியில் ஈடுபட்டுத் திறம்படலாம். சிறந்த திறமையுடையவர்கள் நிர்வாகக் காரியங்களில் ஈடுபடுத்தப்படலாம். இப்படி வேலைப் பகுப்பு செய்வதற்கு ஓர் எல்லையுண்டு. ஏனெனில் மிகச் சில வாடிக்கைக்காரர்களுக்கே பணி செய்ய வேண்டியிருக்கும். சிற்றூர்களில் எல்லா வகைப் பணிகளையும் ஒரே அலுவலகம் செய்ய வேண்டியிருக்கும்.

ரிசர்வு சிக்கனம் (economy of reserve) மற்றொரு நன்மை. பெரிய பாங்கு தன் கிளைகள் ஒவ்வொன்றிலும் சிற்றளவில் ரிசர்வு வைத்திருந்தால் போதும். ஒரு கிளையில் நெருக்கடி உண்டானால் மற்றக் கிளைகளிலிருந்து நெருக்கடியைச் சமாளிக் கலாம். தொடர்பு முறையிலும் தொடர்புப் பாங்குகளிடமுள்ள ரிசர்விலிருந்து உதவி கிடைக்குமானால் ரிசர்வு சிக்கனம் ஏற்படும். தனி பாங்கு முறையில் ஒவ்வொரு பாங்கும் பேரளவில் ரிசர்வு வைத்திருக்க வேண்டும்.

பணத்தை அனுப்புதல் (remittance) தனி பாங்குமுறையில் நடப்பதை விட மலிவாக இருக்கும். கிளைகளுக்குள்ளே பரிவர்த்தனை செய்வது எளிது. தொடர்புப் பாங்குகளும் இவ்வித வசதியைத் தரக்கூடுமாயினும், செலவு அதிகமாக இருக்கும்.

கடன் முதலைப் பல வட்டாரங்களுக்கிடையேயும் எளிதில் பரிமாறலாம். இதனால் வருமானம் அதிகமாகும். கிளைக்குக் கிளை பருவகாலத் தேவையில் வேறுபாடுண்டாயின் கிளை பாங்கு முறையின் கீழ் இவைகளை எளிதில் சமாளிக்கலாம். இப்படிக் கடன் முதலுக்கு இடப் பெயர்ச்சியும் காலப் பெயர்ச்சியும் ஏற்படுவது, வட்டியைப் பல்வேறிடங்களுக்கிடையேயும் காலங் களுக்கிடையேயும் சமப்படுத்துகிறது.

தனி பாங்கு முறையில் ஒரு பாங்கின் வாழ்வும் தாழ்வும் அது இருக்கும் பிராந்தியத்தின் தொழில்களின் வாழ்வு தாழ்வைப் பொறுத்திருக்கும். ஆனால் கிளை பாங்கு முறையில் ஒரு பிராந் தியத்தில் மந்தத்தால் வாராக் கடன் முதலிய ஆபத்துகள் (risks) அதிகமாயினும் வேறு பிராந்தியங்களில் உள்ள செழிப்பு

ஈடு செய்யும். நாடு முழுவதையும் பாதிக்கும் மந்தம் வந்தால்தான் இருவித பாங்கு முறையிலும் ஆபத்து ஒன்றேயாகும். ஒவ்வொரு தனி பாங்கைப் போல ஒவ்வொரு கிளையும் ஒரே சமயத்தில் பாதிக்கப்படும். இந்த நிலையிலும் கூடத் தனி பாங்கு அதிகம் ஆபத்துக்குள்ளாகக் கூடும். ஏனெனில் உறுதிப் பொருள் (durable goods) உற்பத்தித் தொழில்கள் குறிப்பிட்ட இடங்களில்தான் காணப்படுமாகையினால் அவ்வட்டாரத்தில் வேலை செய்யும் தனி பாங்கின் வாழ்க்கை அதனுடன் பிணைபட்டிருக்கும். பொது மந்த காலத்தில் (general depression) இவ்வகைத் தொழில்களே மிகவும் மோசமாகப் பாதிக்கப்படுகின்றன. ஆதலால் இவைகளைச் சார்ந்த தனி பாங்குகள் மிகவும் ஆபத்துக்குள்ளாகின்றன.

நாடு முழுவதும் கிளைகள் பரவியுள்ள காரணத்தால் ஆபத்துகளைச் சமாளிக்கும் சக்தியுடைய பாங்கில் மக்களுக்கு நம்பிக்கை உண்டாவது இயற்கை. கிளைகள் அவ்வவ் வட்டாரத் தேவைகளை அனுசரித்துப் பணி புரியக்கூடும். ஒரு வட்டாரத்தில் சேமிப்பு அதிகமாயிருக்கும். அங்குப் பணத்தைச் சேகரிக்கலாம். வேறொரு வட்டாரத்தில் பணம் தேவைப்படும், அங்குக் கொடுக்கலாம். இவ்விதக் கிளைகளுடைய பாங்கு, மக்களின் தேவையை நன்கு பூர்த்தி செய்து செல்வாக்கடைய முடிகிறது.

ஆனால், கிளை பாங்கு முறையில் உள்ள சில குறைபாடுகளை மறக்கக்கூடாது, கிளை பாங்குகளை நிறுவுவதற்கும் ஓர் எல்லையுண்டு. ஓர் அளவுக்கு மேல் இணைப்பது இலாபகரமாக இருக்காது. அன்றியும் கிளைகள் அயல் நாட்டில் நிறுவப்படுமாயின், மொழி வேறுபாடு, பண வேறுபாடு, சட்ட வேறுபாடு, வழக்கு வேறுபாடு ஆகியன இடையூறுகளை உண்டாக்கும். ஆகவேதான், அயல் நாடுகளில் கிளைகளை நிறுவுவதைவிட உப கம்பெனிகளை (Subsidiary Companies) நிறுவுவது வழக்கம். அவை தனித்துச் சுயேச்சையாகச் சூழ்நிலைக்கேற்ப இயங்கும்.

பாங்குக் கிளைகள் தம் வட்டார மக்களின் தேவைகளை நன்கு பூர்த்தி செய்ய முடியும் என்பது ஓரளவுக்கு உண்மை. ஆனால் அலுவலர்கள் அடிக்கடி மாற்றப்படுவார்கள். கிளை அலுவலகத்துக்கு அதிகாரம் கிடையாது. இந்த வகையில் பார்த்தால் தனி பாங்கு முறை சிறப்புடையதாகத் தோன்றுகிறது. ஆனால், கிளை அலுவலகங்கள் நல்ல வாடிக்கைக்காரர்களுக்கு உதவி செய்யும்படி மேலிடத்துக்குச் சிபார்சு செய்யலாம். தகாதவர்களுக்கு மேலிடத்தின் மேல் பழியைப் போட்டு உதவி மறுக்கலாம். தனி

பாங்குத் தலைவர் இவ்விதமாகச் சொல்லித் தப்பமுடியாது. இவ் வகையில் பார்த்தால் கிளை பாங்கு முறை தனி பாங்கு முறையைவிடச் சிறந்ததாகத் தெரிகிறது.

கிளை பாங்கு முறையில் பாங்குகள் பெரியனவாயிருப்பதால் பண ஆதிக்கத்திற்கு இடம் உண்டாகும் என்பது ஒரு பயம். இதனுற்ருன் அமெரிக்காவில் இம்முறை அனுமதிக்கப்படவில்லை. ஆனால் தொழில் துறையில் பெரு நிறுவனங்களே விதியாகக் காணப்படும் இக் காலத்தில் பணத்துறையில் பெரும் நிறுவனங் களைத் தடுக்க முடியாது. பெரும் தொழில் நிறுவனங்கள் தோன்றி நிலைபெற வேண்டுமானால் பெரிய பாங்குகளும் தோன்றி நிலைபெறுவது இன்றியமையாததாகிறது.

பல பெரிய பாங்குகள் போட்டியிட்டுக் கிளைகளை நிறுவுகின்ற நிலையில் பாங்குகள் சிக்கனக் கேட்டை அடையலாம் என்பர் சிலர். ஆனால், இது நிர்வாகிகளின் தவறே ஒழிய, கிளை பாங்கு முறையின் இன்றியமையாத குறைபாடன்று. அவசியமான இடங்களில்தான் கிளைகள் நிறுவப்படுகின்றன என்ற அனுமானத்தில் நாம் நன்மை தீமைகளை ஆராய்கிறோம்.

ஆகவே, கிளை பாங்கு முறையே சிறந்தது என்பது தெளிவாகிறது. எனவே இந்த முறையே புதிதாக முன்னேறும் நாடுகளில் ஆளப்படும்.

## 7. செக்குத் தீர்வு (Clearing of Cheques)

எப்படிப் பல பாங்குகளுக்கிடையே பாக்கிகள் பைசலாகின்றன என்று பார்ப்போம். ஒவ்வொரு பாங்கிலும் வாடிக்கைக்காரர்கள் தினம் நூற்றுக்கணக்கான செக்குகளைக் கொண்டு வந்து வசூலித்துத் தருமாறு கொடுக்கின்றனர். செக்கு எழுதினவரும், செக்கு பெற்றவரும் ஒரே பாங்கில் வாடிக்கைக்காரராயின் இருவருக்குள்ளும் பைசல் வேலை எளியது. செக்கு எழுதினவர் கணக்கில் பற்று எழுதி, செக்குப் பெற்றவர் கணக்கில் வரவு எழுதிவிடலாம். ஆனால் ஒரு பாங்கின் மேல் எழுதப்பட்ட செக்கு மற்றொரு பாங்கிடம் வசூலிப்புக்குத் தரப்பட்டால் செக்கைப் பெற்ற பாங்கு வசூலிப்பதற்கு நேராக ஆளை அனுப்பித் தொகையைப் பெற்றுக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனால், பல்வேறு மூலைகளில் அல்லது ஊர்களிலுள்ள பல பாங்குகளிடமிருந்தும் வசூலிக்க வேண்டுமானால் இப்படி நேரடியாக ஆள்மூலம் வசூல் செய்வது முடியாது.

ஆகவே தீர்வு (Clearing) முறை ஆளப்படுகிறது. இலண்டனில் 1775இலிருந்தும் நியூயார்க்கில் 1853இலிருந்தும் செக்குத் தீர்வகங்கள் (Clearing Houses) என்பவை வேலை செய்து வருகின்றன. எல்லா பாங்குகளின் பிரதிநிதிகளும் கூடிச் செக்குகளைப் பரிவர்த்தனை செய்வதற்காக ஏற்பட்ட இடம்தான் தீர்வகம் என்பது. இது எப்படி வேலை செய்கிறதென்று பார்ப்போம். ஒவ்வொரு பாங்கும் பிற பாங்குகளிடமிருந்து வசூலிக்க வேண்டியிருக்கும். அவைகளுக்குத் தானும் செலுத்த வேண்டியிருக்கும். ஒவ்வொரு செக்கையும் தனித்தனியே எடுத்து ரொக்கம் தந்து தீர்வு செய்வதைவிட, ஒவ்வொரு பாங்கும் பிற பாங்குகளுக்குக் கொடுக்க வேண்டியதையும் அவற்றிடமிருந்து வரவேண்டியதையும் ஒரு பட்டியலில் எழுதி ஒப்பிட்டு எச்சத்துக்கு மட்டும் ரொக்கம் கொடுத்துப் பைசல் செய்தால் போதுமல்லவா? இப்படித்தான் தீர்வகத்தில் செய்கிறார்கள். ஆனால், நெடுங்காலமாக ரொக்கத்தைக்கொண்டு பைசல் செய்வதும் நிறுத்தப்பட்டு, மைய பாங்கு வைப்பில் (Deposit with Central Bank) இருந்து பைசல் செய்யும் முறை ஆளப்பட்டு வருகிறது. மைய பாங்கினுடைய அதிகாரி ஒருவரும் தீர்வகத்தில் வந்திருப்பார்.

சிறு நகரத்தில் இரண்டொரு பாங்குகள் இருக்குமிடத்தில் ஏதாவது ஒரு பாங்கினுடைய அறையில் இவ் விதத் தீர்வு நடைபெறலாம். பெரிய நகரங்களில் திர்வுக்கான ஒரு தனி இடம் இருக்கலாம். இதுவே தீர்வகம் (Clearing House) என்பது. ஒவ்வொரு பாங்கும் இரண்டு பிரதிநிதிகளை, (ஒரு பட்டுவாடா குமாஸ்தா (Delivery Clerk), ஒரு பைசல் குமாஸ்தா (Settling Clerk) வைத் தீர்வகத்துக்கு அனுப்பும். குறிப்பிட்ட தீர்வக நேரம் (Clearing Hours) வந்ததும் பைசல் குமாஸ்தா தனக்குரிய இடத்தில் அமர்வார். பட்டுவாடா குமாஸ்தா பிற பாங்குகளின் மேல் எழுதப்பட்ட செக்குகளைக் கொடுத்து, தன் பாங்கின் மேல் எழுதப்பட்ட செக்குகளை மற்ற பாங்குகளின் பட்டுவாடா குமாஸ்தாக்களிடமிருந்து பெறுவார். பைசல் குமாஸ்தா தன் பாங்கு எவ்வளவு கொடுக்க வேண்டியிருக்கிறது என்று தெரிந்து கொண்டு இந்தத் தொகையைத் தன் பாங்குக்கு மற்றவர்கள் கொடுக்க வேண்டிய தொகையோடு ஒப்பிடுவார். தீர்வகமே வசூலிப்பதாக ஐதிகமாகையினால் முன் தொகை தீர்வகத்துக்குக் கொடுக்க வேண்டியதாகவும், பின் தொகை தீர்வகம் தன் பாங்குக்குக் கொடுக்கவேண்டியதாகவும் இருக்கும். இவ்விதமாக எல்லாப் பைசல் குமாஸ்தாக்களும் தத்தம் பாங்கினுடைய நிகரப் பற்று வரவுகளைக் கணக்கிடுவார்கள். பாக்கிகளை

மைய பாங்கிலுள்ள தத்தமது வைப்பிலிருந்து பைசல் செய்வார்கள். தீர்வகத்தை நடத்துவது மைய பாங்கேயாதலால் இது எளிதாகிறது. கணக்கில் தவறில்லையாயின் அனைவரும் கொடுக்க வேண்டியவைகளின் கூட்டுத் தொகையும் அனைவருக்கும் வரவேண்டியவைகளின் கூட்டுத் தொகையும் சமமாக இருக்கும். கீழே உள்ள பட்டியல் தீர்வக முறையை விளக்குகிறது :

| கொடுக்க வேண்டியவர்கள் | A | B | C | D | E | தீர்வகத்தின் பற்று |
|---|---|---|---|---|---|---|
| | ஆயிரம் ரூபாய்கள் | | | | | |
| பெற வேண்டியவர்கள் A | — | 10 | 14 | 16 | 8 | 48 |
| B | 14 | — | 16 | 20 | 6 | 56 |
| C | 18 | 8 | — | 4 | 10 | 40 |
| D | 2 | 6 | 14 | — | 10 | 32 |
| E | 8 | 12 | 10 | 14 | — | 44 |
| தீர்வகத்தின் வரவு | 42 | 36 | 54 | 54 | 34 | 220 |

தீர்வகத்துக்கு ஐந்து பாங்குகளிடமிருந்தும் ரூ. 220 ஆயிரம் வரவேண்டியிருக்கிறது. தான் அவர்களுக்குத் தரவேண்டியது ரூ. 220 ஆயிரம். ஒவ்வொரு பாங்கின் நிகர பாக்கியை எளிதில் கணக்கிடலாம்.

| | பற்று | வரவு | நிகரம் |
|---|---|---|---|
| A | 42 | 48 | + 6 |
| B | 36 | 56 | + 20 |
| C | 54 | 40 | − 14 |
| D | 54 | 32 | − 22 |
| E | 34 | 44 | + 10 |
| | 220 | 220 | 0 |

இந்தக் கணக்குப்படி ஒவ்வொரு பாங்கின் பேரிலும் மைய பாங்கின் வைப்புக் கணக்குகளில் நிகரப் பற்று வரவு எழுதப் படும். குமாஸ்தாக்கள் தங்கள் பாங்குகளுக்குச் செல்லும்போது தத்தமது பாங்கின் மேல் எழுதப்பட்ட செக்குகளுடன் செல்வார்கள். சம்பந்தப்பட்ட வாடிக்கைக்காரர்களின் கணக்கு களில் பற்று வரவு எழுதுவார்கள். பின்னர்த் தணிக்கைக்காக வாடிக்கைக்காரர்களுக்கே பைசலான செக்குகளை ஒரு ஸ்டேட் மெண்டுடன் அனுப்புவதுமுண்டு.

எல்லா பாங்குகளும் ஒரே வீதத்தில் கடனைப் பெருக்கவோ, சுருக்கவோ செய்வார்களானால் எந்த ஒரு பாங்கும் தீர்வகத்தில் தொடர்ந்து பற்று நிலையிலோ, வரவு நிலையிலோ இருக்காது. சராசரி ஒரு மாதத்தில் வரவும் பற்றும் சமமாக இருக்கும். ஆனால் யாதொரு பாங்கு மற்றவைகளைவிட அதிகமாகக் கடனைப் பெருக்குகிறதோ அது நிகரப் பற்றுடையதாகி, மைய பாங்கு இருப்பிலிருந்து பைசல் செய்வதன் மூலம் தன் ரொக்க நிலை மோசமாதலைக் காணும்.

# 20. பாங்கு நடவடிக்கைகளும் கணக்கும்

## (Banking Operations and Accounts)

எந்தத் தொழிலுக்கும் மூலதனம் (Capital) வேண்டும். தொழிலுக்கேற்ப மூலதனத் தொகை வேறுபடும். ஆனால், மூலதனத் தொகைக்கும் ஒரு நிறுவனத்தின் பொறுப்புகளுக்கும் ஒரு நியதியான விகிதம் இல்லை. ஆனால், குறிப்பிட்ட முதலைக் கொண்டு செய்யக்கூடிய பேரங்கள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கும் முதல் மேல் வரும் இலாப வீதம் அதிகமாக இருக்கும். ஆனால், எந்த அளவுக்கு ஒரு குறிப்பிட்ட முதலைக் கொண்டே சமாளிக்க முடியும் என்பது துறையைப் பொறுத்தது. அமெரிக்காவில் பாங்குத் துறையில் மூலதனத்துக்கும் வைப்புக்கும் (கடன் பொறுப்புக்கும்) விகிதாசாரம் நியமிக்கப்படுவதுண்டு. ஆனால், இவ்விகிதம் ஒரு யூகமாக இருக்குமே ஒழிய உறுதியாகக் கணிக்கக் கூடியதன்று. ஆகவே, இதை நிர்வாகிகளின் பகுத்தறிவுக்கு விட்டுவிடுவது சரி என்றும், சட்டத்தால் வரையறுக்க வேண்டியதில்லை என்றும் சிலர் கூறுகின்றனர். ஆயினும் பல சிறு பாங்குகள் ஆயிரக்கணக்கில் தோன்றிய அமெரிக்கா நாட்டில் யாதேனும் ஒரு வரையறை இருப்பது அவசியமெனக் கருதப்பட்டு இராஜ்யங்களில் மூலதன விகிதம் விதிக்கப்பட்டுள்ளது.

பாங்குகள், கம்பெனிச் சட்டத்தின் கீழ் நிறுவப்படுவதால், பங்குகள் மூலம் மூலதனம் சேகரிக்கப்படும். பங்குதாரரின் உரிமைகள் மற்ற வகைக் கம்பெனிகளின் பங்குதாரர்களுக்குள்ளவை போன்றவையே. பங்குதாரர்கள் செலுத்திய பங்குப் பணம் ரொக்கமாகச் செலுத்தப்பட்டிருக்கும். கணக்கை இரட்டைப் பதிவுக் கணக்கு (Double Entry Book-Keeping System) முறையில் எழுதினால் பாங்கின் அவ்வப்போதைய நிலையை ஓர் இருப்புநிலைக் குறிப்பு (Balance Sheet) மூலம்

காட்டலாம். இருப்புநிலைக் குறிப்பு என்பது ஒரு நிறுவனத்திற்கு ஒரு குறிப்பிட்ட தேதியில் உள்ள பொறுப்புகள், சொத்துகள் ஆகியவற்றைக் காட்டும் ஒரு பட்டியலாகும். ஒரு பாங்கு 10 இலட்ச ரூபாய் மூலதனத்துடன் துவங்கியதாக வைத்துக் கொண்டால் அதன் இருப்புநிலைக்குறிப்பு கீழ்க் கண்டவாறிருக்கும்:

| பொறுப்புகள் | சொத்துகள் |
|---|---|
| மூலதனம் ரூ. 10,00,000 | ரொக்கம் ரூ. 10,00,000 |

மூலதனம் எப்படிப் பொறுப்பாகும் எனில், மூலதனம் பங்குதாரருக்குச் சேர வேண்டியதாகையால் அது பாங்கின் பொறுப்பாகிறது. ஆனால், இந்தப் பொறுப்புக்கு எதிராக, பாங்குக்குரிய சொத்தும் உள்ளது. அதுவே 10 இலட்சம் ரூபாய் ரொக்கம்.

இப்பாங்கு ரூ. 50,000க்கு ஒரு கட்டடத்தையும் சாமான்களையும் வாங்கி, தொழிலைத் துவக்குவதாக வைத்துக் கொள்வோம். அப்போது இருப்புநிலைக் குறிப்பு கீழ்க்கண்டவாறிருக்கும்.

| பொறுப்புகள் | | சொத்துகள் | |
|---|---|---|---|
| மூலதனம் | ரூ. 10,00,000 | ரொக்கம் ரூ. | 9,50,000 |
| | | கட்டடம் முதலியன ரூ. | 50,000 |
| | ரூ. 10,00,000 | | ரூ. 10,00,000 |

பாங்கு, தன் பணச் சொத்தில் ஒரு பகுதியைக் கட்டடம் முதலியவைகளாக மாற்றி விட்டது. சொத்தின் தொகையிலும் பொறுப்பின் தொகையிலும் மாறுதல் ஒன்றும் இல்லை என்பதை நோக்குக. இன்னும் பாங்கு ஆதாயமான காரியம் எதுவும் தொடங்கவில்லை.

ஒரு பாங்கு தன் மூலதன ரொக்கத்தை அரசாங்க செக்கூரிடி போன்ற உரிமைகளில் முதலீடு செய்து அதிலிருந்து வரும் வருமானத்தோடு திருப்தி அடைவதானால் அது 'பாங்கு' என்ற பெயருக்கு உரியதன்று. இவ் வருமானம் பாங்கின் செலவுக்குப் போதாது. ஆகவே, பாங்கு வைப்புகளைக் கோர வேண்டியிருக்கிறது. வைப்புகளில் இரண்டு வகையுண்டு. ஒன்று உரியவர் வேண்டியபோது மீட்டுக்கொள்ளக்கூடியது. இதை

நடப்புச் வைப்பு (Current deposit) அல்லது தேவை வைப்பு (Demand deposit) என்பர். மற்றொன்று தவணை வைப்பு (Fixed Doposit or Time deposit). இது குறிப்பிட்ட காலங் கழித்தே மீட்கக் கூடியது. நடப்பு வைப்புகள் அவ்வப்போது உரியவரின் செலவுக்குச் செக்கு மூலம் ஆளப்படும். இவ்வகை வைப்புக்கு பாங்குகள் சாதாரணமாக வட்டி தருவதில்லை. தவணை வைப்பு குறிப்பிட்ட காலத்துக்குப் பாங்கிடம் இருக்குமாதலால் பாங்கு அதை இலாபகரமான வழியில் ஆண்டு ஆதாயம் சம்பாதிக்கக் கூடும். ஆதலால் பாங்கு தவணை வைப்புக்கு வட்டி தரும். இவ்வித வைப்புகள் இருப்புநிலைக் குறிப்பில் இடம் பெறும். தேவை வைப்பு ரூ. 50,000-மும், தவணை வைப்பு ரூ. 10,000-மும் வந்துள்ளதாகக் கொள்வோம். இருப்புநிலைக் குறிப்பு கீழ்க் கண்டவாறிருக்கும்:

| பொறுப்புகள் | | | சொத்துகள் | | |
|---|---|---|---|---|---|
| மூலதனம் | ரூ. | 10,00,000 | ரொக்கம் | ரூ. | 10,10,000 |
| தேவை வைப்பு | ரூ. | 50,000 | கட்டடம் முதலியன | ரூ. | 50,000 |
| தவணை வைப்பு | ரூ. | 10,000 | | | |
| | ரூ. | 10,60,000 | | ரூ. | 10,600,000 |

ரூ. 60,000 வைப்புகள் பிறருக் குரியன வாதலால் பொறுப்பின்கீழ் எழுதப்படுகின்றன. வைப்பு வந்த 60,000 ரூபாய் அளவுக்கு ரொக்கம் உடனே உயருமாதலால் ரொக்கம் அதே அளவுக்கு ரூ. 9,50,000இலிருந்து ரூ. 10,10,000 ஆக உயர்ந்து விட்டது.

இனி இப் பாங்கு கடன் கொடுக்க ஆரம்பிப்பதாக வைத்துக் கொள்வோம். ஒருவனுக்கு ரூ. 10,000 கடன் தருவதாக வைத்துக் கொள்வோம். அப்போது இருப்புநிலைக் குறிப்பு கீழ்கண்டவாறு மாறும்.

| பொறுப்புகள் | | | சொத்துகள் | | |
|---|---|---|---|---|---|
| மூல்தனம் | ரூ. | 10,00,000 | ரொக்கம் | ரூ. | 10,00,000 |
| வைப்புகள் | ரூ. | 60,000 | கடன் | ரூ. | 10,000 |
| | | | கட்டடம் முதலியன | ரூ. | 50,000 |
| | ரூ. | 10,60,000 | | ரூ. | 10,60,000 |

'கடன்' வர வேண்டியது பாங்குக்கு உரியதாகையால் அதுவும் ஒரு சொத்து. ரொக்கம் என்ற சொத்தில் ரூ. 10,000 குறைந்து, கடன் என்ற வேறு வகைச் சொத்து தோன்றி யுள்ளது.

வைப்பு, ரொக்கம் வருவதால் மட்டும் தோன்றுகிறது என்று நினைக்கக்கூடாது. பாங்கு ஒருவனுக்கு கடன் கொடுத்தால் அவன் பெரும்பாலும் பாங்கிலேயே அத் தொகையைத் தன் கணக்கில் இருப்பு வைத்து ('வைப்பு' செய்து) வேண்டும்போது செக்கு மூலம் ஆள்வான். அப்போது சொத்தின்கீழ்க் கடன் தொகை உயரும்; அதே அளவுக்குப் பொறுப்பின்கீழ் வைப்பும் உயரும்.

பாங்குகளின் வைப்புகள் பெரும்பாலும் தேவை வைப்பு களாக இருக்கும். இவை உரியவர் வேண்டும்போது உடனே கொடுக்க வேண்டியவை. தவணை வைப்பும் கூட, ஒப்பந்தப்படி குறிப்பிட்ட காலத்துக்குப் பின்னரே கொடுக்கவேண்டிய தாயினும், உரியவர் விரும்பினால், வட்டியை இழக்க அவர் தயாராக இருந்தால், சாதாரணமாகக் கொடுக்கப்படும். ஆகவே பாங்கு எப்போதும் வைப்பாளிகளுக்கு (depositors) ரொக்கம் கொடுக்கத் தயாராக இருக்க வேண்டியிருக்கிறது. இதற்காகப் பாங்குகள் தங்களிடம் வரும் பணத்தை, எளிதில் ரொக்கமாக்கக் கூடிய சொத்தினங்களை வாங்குவதில் பெரும்பாலும் ஆளும். இவ்வகையில் சிறந்த சொத்தினம் வர்த்தகரின் உண்டியல் (Bill of Exchange). உண்டியலின் தன்மை, தோற்றம் ஆகியவற்றைப் பற்றிப் பின்னர் விளக்கமாகப் பார்ப்போம். இங்கு அது ஒருவகை யான கடன் ஒப்புதல் சீட்டு என்று மட்டும் கொண்டால் போது மானது. வர்த்தகன் இரண்டு மூன்று மாதத் தவணையில் கடன் பெற முடியுமானால், தான் செய்யும் காரியம் முடிந்தவுடன் முதலைத் திருப்பிக் கொடுக்கக்கூடும். வர்த்தகத் துறையில் நடை பெறும் முறை :—உண்டியல் ஒப்புதலின் மேல் ஒருவன் மற்ற வனுக்கு ஒரு பொருளை விற்பான். தான் பெற்ற உண்டியலை ஒரு பாங்கிடம் விற்பான். பாங்கு மூன்று மாத வட்டியை முன் கூட்டியே கழித்துக்கொண்டு மீதியை அவனுக்குக் கொடுக்கும். மூன்று மாதம் சென்றதும் உண்டியலை அதற்குப் பொறுப்பான வியாபாரியிடம் காட்டி வசூல் செய்துகொள்ளும். ஆகவே பாங்கு வாங்கும் சொத்தினங்களில், உண்டியல் ஒரு வகை. அமெரிக் காவில் வியாபாரியின் புரோ நோட்டையே பாங்கு வாங்கிக் கொண்டு கடன் கொடுக்கும். அப்போது புரோநோட்டே ஒரு சொத்தாகும். இவ்வகையில் வரும் சொத்தைக் கடன்கள் (Loans and Advances) என்பர்.

மேலே கூறிய கடன், உண்டியல், புரோநோட்டு ஆகியவை பாங்குகளின் சொத்தாகும். பாங்குகள் வாங்கும் மற்றொரு முக்கியமான சொத்து வகை அரசாங்கப் பாண்டுகள். இவைகளை வாங்குவதை முதலீடு (investment) என்று குறிப்பிடுவது வழக்கம். தொழிற் பங்குகளைப் (industrial shares) பாங்குகள் அதிகம் விரும்புவதில்லை. ஏனெனில் அவைகளின் மதிப்பு மிகவும் மாறக்கூடியது. ஆகவே முதலையே இழக்க நேரிடலாம். பாங்குகள் அடமானங்களை (mortgages) வாங்குவதில்லை. (அமெரிக்காவில்தான் அசையாச் சொத்து ஈடாக ஏற்கப்படுகிறது). அடமானம் எளிதில் ரொக்கமாக்க முடியாத சொத்து.

இனி ஓர் ஆண்டு நடவடிக்கைக்குப் பின், பலவகைச் சொத்துகளைப் பெற்ற பின், நம் பாங்கின் இருப்புநிலைக் குறிப்பு கீழ்க்கண்டவாறு இருக்கலாம் :

| பொறுப்புகள் | | | சொத்துகள் | | |
|---|---|---|---|---|---|
| மூலதனம் | ரூ. | 10,00,000 | ரொக்கம் | ரூ. | 50,000 |
| வைப்புகள் | ரூ. | 60,000 | உண்டியல் | ரூ. | 1,00,000 |
| இலாபம் | ரூ. | 40,000 | கடன்கள் | ரூ. | 5,00,000 |
| | | | முதலீடுகள் | ரூ. | 4,00,000 |
| | | | கட்டடம் முதலியன | ரூ. | 50,000 |
| | ரூ. | 11,00,000 | | ரூ. | 11,00,000 |

இந்தப் பாங்கு தன் மூலதனத்தைக் கொண்டே பெரும்பாலும் லேவாதேவி செய்திருக்கிறது. கடன் 5 இலட்சம் கொடுத்திருந்தாலும், அது தன் மூலதனத்திலிருந்தே கொடுக்கப்பட்டிருக்கிறது. வைப்பு நிறைய வந்து கடன் பெருக்கப்படவில்லை. தவிர, ரூ. 60,000 வைப்புக்கு எதிராக ½ இலட்சம் ரொக்கமாக இருக்கிறது. எளிதில் ரொக்கமாகக்கூடிய உண்டியல் 1 இலட்சம் இருக்கிறது. ஆகவே இப் பாங்கு கடன் தருவதுமூலம் தன் பொறுப்புகளை ரொக்கத்துக்குப் பன்மடங்காகப் பெருக்கி இலாபம் பெறலாம். வைப்புப் பொறுப்புக்கெதிராக 10% ரொக்கம் வைத்திருந்தால் போதுமென்று அனுபவத்தில் அறிந்திருந்தால் அல்லது சட்டம் விதித்திருந்தால், ரொக்கம் ரூ. 50,000த்தின்

ஆதரவில் ஐந்து இலட்சம் வரைக்கும் கடன் கொடுப்பது மூலம் இலாபம் பெறலாம். இப்படிச் செய்தால் சொத்துகளின் கீழ்க் 'கடன்' ரூ. 5,00,000லிருந்து, ரூ. 10,00,000 ஆகும். வைப்புகளும் ரூ. 60,000லிருந்து ரூ. 5 இலட்சமாகும்.

கடன் கொடுப்பது மூலம் வைப்பு உயர்வது போல், முதலீடுகள் (பாண்டு முதலியன) வாங்குவது மூலமாகவும் வைப்பு உயரலாம். அப்போது 'முதலீடு' உயர்வதற்கேற்ப வைப்பும் உயரும்.

வைப்பு உயர்வது கடன் கொடுப்பதாலோ, முதலீடுகள் வாங்குவதாலோ, காரணம் எதுவாயினும், பாங்குகள், ரொக்க நெருக்கடி ஏற்படாதபடி நீர்மை (liquidity) கருதி, ரொக்கத்துக்கும் வைப்புக்கும் ஒரு குறிப்பிட்ட விகிதாசாரம் இருக்கும்படி பார்த்துக்கொள்ளும்.

# 21. ஓர் இந்திய பாங்கின் இருப்புநிலைக் குறிப்பு

கீழே பெரிய பாங்கு ஒன்றின் கற்பனையான இருப்பு நிலைக் குறிப்பு சுருக்கிக் கொடுக்கப்பட்டுள்ளது.

——————பாங்கு

டிசம்பர் 31, 19——இல் இருப்புநிலைக் குறிப்பு

| மூலதனமும் பொறுப்புகளும் (Capital and Liabilties) | ரூ. இலட்சம் | உடைமைகளும் சொத்துகளும் (Property and Assets) | ரூ. இலட்சம் |
|---|---|---|---|
| 1. மூலதனம் (paidup Capital) | 100.00 | 1. ரொக்கம் (Cash) | 365.00 |
| 2. ரிசர்வு (Reserve) | 70.00 | 2. பிற பாங்குகளில் இருப்பு (Balances with other Banks) | 95.00 |
| 3. வைப்புகள் (Deposits) | 4000.00 | 3. அழைப்புப் பணமும் குறு நோட்டீசுப் பணமும் (Money at call and short notice) | 60.00 |
| 4. பிற பாங்குக் கம்பெனிகளிலிருந்து கடன் (Borrowing from other Banking Companies, Agents etc.) | 100·00 | 4. முதலீடுகள் (Investments) | 1305.00 |

| ரூ. இலட்சம் | | ரூ. இலட்சம் | |
|---|---|---|---|
| 5. உண்டியல் செலுத்த வேண்டியது (Bills Payable) | 115.00 | 5. அட்வான்சுகள் (Advances) | 2575.00 |
| 6. வசூலில் உள்ள உண்டியல் (Bills for collection being bills receiveble, per contra) | 300.00 | 6. உண்டியல் வசூலில் வர வேண்டியது (Bills receivable being bills for collection, per contra) | 300.00 |
| 7. பிற பொறுப்புக்கள் (Other liabilies) | 100.00 | 7. ஏற்பு, புறக்குறிப்புகள் (Constituents' liabilities for acceptances, endorsements and other obligations, per contra) | 320.00 |
| 8. ஏற்புகள், புறக் குறிப்புகள் (Acceptances, endorsements and other obligations, per contra) | 320.00 | 8. இடம் (Premises) (தேய்மானம் போக) | 15.00 |
| 9. இலாப நஷ்டம் (Profit and Loss) | 35.00 | 9. சாமான்கள் (furniture, fittings etc.) | 15.00 |
| 10. ஐயப்பாடான பொறுப்புகள் (Contingent liabilities) | | 10. பிற சொத்துகள் | 60.00 |
| | | 11. பாங்குத்துறை சாராத சொத்துகள் (Non-banking assets acquired in satisfaction of claims) | 30.00 |
| | 5140.00 | | 5140.00 |

முதலில் பொறுப்பு இனங்களை விளக்குவோம்:

(1) மூலதனம் என்ற தலைப்பின்கீழ் மூலதனத்தைப் பற்றிய விவரங்கள் அனைத்தும் தரப்படுகின்றன. அனுமதித்த முதல் (Authorised Capital), வெளியிட்ட முதல் (Issued Capital),

ஒப்பிய முதல் (Subscribed Capital), அழைத்த முதல் (Called up Capital), பங்குகளின் சிறப்பு மதிப்புக் கணக்கு (Share Premium Account) ஆகியவற்றின் தொகைகள் தரப்படுகின்றன. ஆனால் உண்மையில் செலுத்தப்பட்ட முதல் (Paid-up Capital) மட்டும் தான் குறிப்பிட்ட தேதியில் பாங்கின் பொறுப்பு என்பது வெளிப்படை. இந்தத் தொகை ரூ. 85.00 இலட்சம். இதனுடன் பங்குகளை சிறப்பு மதிப்புடன் விற்றதால் வந்த தொகை (Share Premium Account) ரூ. 15.00 இலட்சமும் சேர்ந்து மொத்தம் ரூ. 100 00 இலட்சம் என காட்டப்பட்டிருக்கிறது. வெற்றி கரமான கம்பெனிகள் தங்களுடைய பங்குகளை முகமதிப்புக்கு ஏற்றமாகவே விற்கக்கூடும். இந்த அதிகப்படியே சிறப்பு மதிப்பு (Premium) எனப்படுவது. சட்டப்படி இந்தச் சிறப்பு மதிப்புத் தொகை பங்குதாரர்களுக்கு உரியதன்று. அவர்களுக்கு பங்கு முகமதிப்பே (Nominal value) உரியது. ஆகவே இந்தத் தொகை ஒரு தனிக் கணக்கில் (Account) வைக்கப்படுகிறது. இருப்பு நிலைக் குறிப்பில் தனியே காட்டப்படுகிறது. இந்தத் தொகையைப் பாங்குக் கம்பெனி பல்வேறு வழிகளில் ஆளும். போனஸ் பங்கு தருவதற்கும், பங்கு விற்பனைச் செலவுகளை எழுதுவதற்கும் வேறு பல காரியங்களுக்கும் உபயோகிக்கப்படும். நாட்டுரிமை யான பாங்குகளில் மூலதனம் அரசாங்கத்துக்குரியது.

(2) ரிசர்வுகள் : பாங்குக் கம்பெனிச் சட்டத்தில் 17-வது பிரிவின்படி பாங்கின் ரிசர்வு செலுத்திய முதலுக்குச் சமமாகும் வரையில் இலாபத்திலிருந்து 20%ஐ ஒவ்வொரு கம்பெனியும் ஒதுக்கக் கடமைப்பட்டது. (ரிசர்வு என்ற சொல் இங்கு வைப்புக் கெதிராக வைக்கவேண்டிய ரொக்க விகிதத்தைக் குறிக்கவில்லை என்பதை உணர்க). இப்படிக் குவிந்த தொகை இத்தலைப்பின் கீழ்க் காட்டப்படும்.

(3) வைப்புகள் : இந்தத் தலைப்பின்கீழ் நான்கு வகைகள் காட்டப்படலாம். (அ) தவணை வைப்புகள். (ஆ) குறுங்கால வைப்புகள் (Short Term Deposits), அதாவது ஒன்றல்லது இரண்டு மாதம் என்ற காலத்துக்குப் பெருந் தொகைகளை வைப்பது. (இ) சேமிப்பு வைப்புகள்—இவைகளின் ஆட்சி சம்பந்தமாகச் சில வரையறைகள் உண்டு. (ஈ) நடப்புக் கணக்கு கள் (Current Accounts). தவிர, ஐயப்பாடு கணக்குகளும் (Contingency Accounts) இதன்கீழ் வரும்.

(4) பிற பாங்குக் கம்பெனிகளிடமிருந்து கடன் : ரிசர்வு பாங்கு, ஸ்டேட் பாங்கு, நிதிக் கார்ப்பரேஷன்கள் போன்ற துறை

களிலிருந்து பெற்ற கடன்களும் அயல்நாட்டுக் கடன்களும் இதில் அடங்கும்.

(5) செலுத்த வேண்டிய உண்டியல்கள்: இதில், தேவை டிராஃப்ட்டுகள் (demand drafts) ஆகியவை அடங்கும். (வணிக உண்டியல்கள் இங்குக் காட்டப்படவில்லை.)

(6) பிறருக்காக வசூலில் இருக்கும் உண்டியல்கள் சம்பந்தமான பொறுப்பு. வாடிக்கைக்காரர்களுக்குரிய செக்குகள், டிராஃப்ட்டுகள் முதலியன வசூலில் இருக்கும் நிலையில் இத் தலைப்பின் கீழ் வரும். பிறருக்குரியனவாதலால் இங்குப் பொறுப்பாகவும், தன் வசமிருப்பதனால் சொத்தாகவும் இருபுறமும் காட்டப்படும். இப்படி இருபுறமும் பதிவுள்ளதைக் குறிப்பதற்கு (Per contra) என்ற குறிப்பும் காணப்படும். இத் தலைப்பின் கீழ் ஒரே தொகை இருபுறமும் வருவது காண்க.

(7) பிற பொறுப்புக்கள்: இதில் அடங்குவன: செக்கூரிடி வைப்புகள் (Security depoist), கழிவு செய்த உண்டியல் மேல் ரிபேட்டு (received on bills discounts), கிளைகளுக்கிடையே திருத்துகள் (Adjustments) போன்றவை (வேறு தலைப்புகளில் வராதவை) இங்குக் காணப்படும்.

(8) ஏற்புகள்: புறக்குறிப்புகள் முதலியன வாடிக்கைக் காரர்களுக்காக பாங்கு ஏற்றுக்கொண்ட பொறுப்புகள். எதிரிடையாக வாடிக்கைக்காரர்கள் பாங்குக்குப் பொறுப்புள்ளவர்களாதலால் அவர்கள் பொறுப்பு பாங்குக்குச் சொத்தாகும். இதனால் இந்த இனமும் (Per contra) குறிப்புடன் இரு புறங்களிலும் காணப்படும்.

(9) இலாப நஷ்டம்: இத் தலைப்பின்கீழ்ச் சென்ற வருஷத்திய நிகர இலாபமும் அதை ஆண்ட விவரங்களும், மீதியும் காட்டப்பட்டு இந்த வருஷ நிகர இலாபம் கூட்டப்பட்டு, மொத்தத் தொகையின் ஆட்சி விவரம் தரப்படும்.

உதாரணமாக ஒரு பாங்கின் இருப்பு நிலைக்குறிப்பில்,

| | இலட்சம் |
|---|---|
| சென்ற வருஷ நிகர இலாபம் | ரூ. 34 |
| சென்ற ஆண்டு ஆட்சி | ரூ. 32 |
| மீதி | ரூ. 2 |
| இந்த ஆண்டு நிகர இலாபம் | ரூ. 40 |
| ஆகமொத்தம் | ரூ. 42 |

இந்த ஆண்டு ஆட்சி :
டிவிடெண்டு ரிசர்வ் ஒதுக்கு ரூ. 10

மீதி ரூ. 32

எனக் காணலாம்.

(10) ஐயப்பாடான பொறுப்புகள் (Contingent Liabilities) என்ற ஓர் இனம் கடைசியில் காட்டப்படுகிறது. பாங்கின் மேல் பிறர் தொடுத்துள்ள நடவடிக்கைகள், உத்திரவாதங்கள் (Guarantees), மறு கழிவு செய்த மாற்று உண்டியல்கள் (Bills of Exchange rediscounted), எதிர்நோக்கிய மாற்று ஒப்பந்தங்கள் (Forword Exchange Contracts) ஆகியவை சம்பந்தமான பொறுப்புகள் இத் தலைப்பின் கீழ் காட்டப்படும். ஆனால் கணக்கில் சேரா.

அடுத்தபடி சொத்து வகைகளை விளக்குவோம்.

(1) ரொக்கம் : கையிலும், ரிசர்வு பாங்கிலும், ஸ்டேட் பாங்கிலும் இருக்கும் இந்திய சட்டப் பணமும் அயல் நாட்டுப் பணமும் ரொக்க ரிசர்வுக்குக் காணக்காகிறது. ஷெடியூல்டு பாங்குகள் ரிசர்வு பாங்குச் சட்டம் 42-வது பிரிவின் படியும் பிற பாங்குகள் பாங்குக் கம்பெனிச் சட்டம் 18-வது பிரிவின்படியும் தேவை வைப்புக்கெதிராக 5——20 சதவீதமும், தவணை வைப்புக் கெதிராக 2——8 சதவீதமும் ரொக்கம் வைத்திருக்க வேண்டியிருக்கிறது.

(2) பிற பாங்குகளிடம் இருப்பு : இது தவணை வைப்பு, நடப்புக் கணக்கு, (உள்நாடு, வெளிநாடு) என்று பிரித்துக் காட்டப்படும்.

(3) அழைப்புப் பணமும் குறுங்கால நோட்டீசுப் பணமும்: அழைப்புப் பணம் கேட்ட நாளிலேயே திருப்பித் தர வேண்டுமென்றும், நோட்டீசுப் பணம் பத்து நாட்களுக்குட்பட்ட நோட்டீசு தரப்பட்டால் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்றும் நிபந்தனையுடன் பிற பாங்குகளுக்குக் கொடுத்த பணம். இவை செக்கூரிடி இன்றித் தரப்படுபவை.

(4) முதலீடுகள் : அரசாங்க செக்கூரிடிகளும், டிரஸ்டி செக்கூரிடிகளும், கருவூல உண்டியல்களும் (Treasury bills), பங்குகளும் (Shares), டிபஞ்சர்களும் பொன்னும் அடங்கும். அயல்நாட்டுக் கிளைகளின் மூலம் வாங்கிய அயல்நாட்டுச் செக்கூரிடிகளும்அடங்கும்.

(2) அட்வான்சுகள்: இதில் பல வகைகள் உள:

(அ) கடன்கள் (Loans): இவை குறிப்பிட்ட தொகைக் கடன்கள். ரொக்கப் பற்று (Cash credits): பண்டங்கள் (Goods) ஈட்டின்மேல் தரப்படுவது. சில அடமானம் (Hypothecation) பேரிலும், சில அடகு (Pledge) பேரிலும் தரப்படும். அடகுக் கடனைவிட அடமானக் கடனுக்கு வட்டி சுமார் ½% அதிகமாக இருக்கும். ஏனெனில் அடகானால் பாங்கின் காபந்தில் பொருள் இருக்கும். அடமானத்தில் கடனாளி காபந்தில் பொருளிருக்கும்.

(ஆ) மிகைப்பற்று (Ovedraft) என்பது குறிப்பிட்ட தொகைக்கு வாடிக்கைக்காரன், தன் கணக்கில் இருப்புக் குறைவாயிருக்கிறபோது, அதிகப்பற்றுச் செய்யும் தொகை. அதிகப்பற்றுச் செய்யக்கூடிய தொகை முன்கூட்டியே ஒப்பந்தம் செய்யப்பட்டிருக்கும். இது ஈடு (Cover) ஒன்றும் இன்றியும் தரப்படுவதுண்டு. ஈடு இருப்பின் இது பெரும்பாலும் இன்சூரன்சு பாலிசி, பங்குகள், அரசாங்க செக்கூரிடிகள் ஆகியவையாக இருக்கும். கடன் வட்டி வீதத்தைவிட மிகைப் பற்று வட்டி வீதம் அதிகமாக இருக்கும். ஏனெனில் ஆண்ட அளவுக்குத்தான் வட்டி பெற வேண்டியிருக்கும்.

(இ) வாங்கிய அல்லது கழிவு செய்த தனியார் வணிக உண்டியல்கள்: இதில் கருவூல உண்டியல்கள் சேரா.

(6) பொறுப்பின்கீழ் வந்த 6-வது இனத்தின் எதிர்க் குறிப்பு. விளக்கம் அங்குத் தரப்பட்டது.

(7) பொறுப்பின்கீழ் வந்த 8-வது இனத்தின் எதிர்க் குறிப்பு.

(8) இடம் (Premises): (தேய்மானம் போக) கட்டடச் சொத்துகள்.

(9) இரும்புப் பெட்டி, தட்டுமுட்டுச் சாமான்கள் முதலியன.

(10) பிற சொத்துகள் என்பதில் கையிலுள்ள சில்லரைப் பொருள்களின் மதிப்புகள் தரப்படும். வரவேண்டிய வரி பாக்கி, கார், நூலகம், ஸ்டேஷனரி, வரி முன்கூட்டிய செலுத்து etc.

(11) பாங்குகள் சாதாரணமாக வாங்காத சொத்துகள்: உதாரணமாகக் கோர்ட்டு வழியே பாக்கி வசூல் மூலம் கைக்கு வருவனவற்றின் மதிப்பு.

# 22. பாங்குச் சொத்துகள்-கைக்கோள்

பாங்குகளின் சொத்துகளை ரொக்கம், கடன், முதலீடுகள் என முக்கியமாக மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். இவை சம்பந்தமாகப் பாங்குகள் அநுசரிக்கும் விதிகளை இங்கு ஆய்வோம் :

## 1. பாங்குகளின் ரொக்கம் (Cash)

இங்கு 'ரொக்கம்' என்பது வைப்புக்கு எதிராகத் தற்காப்பாக வைக்கப்படுவதையே குறிக்கிறது. பெரும்பாலான நாடுகள் பாங்குகளின் சொத்தில் குறிப்பிட்ட ஒரு விகிதம் ரொக்கமாக இருக்க வேண்டுமென்று சட்ட வரையறை செய்யக் காண்கிறோம். சில நாடுகளில் (உதாரணமாக இங்கிலாந்தில், கனடாவில்) இந்த வரையறை சட்டத்தால் நிர்ணயமாகவில்லை. இப்படிச் சட்டம் வரையறை செய்யாத போது பாங்குகளே புத்திசாலித்தனமாகத் தகுந்த அளவு ரொக்கம் வைக்கும். பாங்குகள் எல்லாமே ஏற்ற முறையில் நடக்கும் என்று நம்புவதற்கில்லை என்பதை வரலாறு காட்டுகிற தாதலால் சட்டத்தால் ரொக்க வீதத்தை வரையறுப்பது நல்லது. இந்தியாவில் சட்ட வரையறை உள்ளது. ரொக்கம் என்பதைக் கணக்கிடும்போது இந்தியாவில் தன்னிடமுள்ளதோடு பிற பாங்குகளிடம் வைத்துள்ள வைப்பும் கணக்கில் சேரும். ரொக்க வீதம் நாட்டுக்கு நாடு வேறுபடும்.

### ரொக்கத்தின் அவசியம் என்ன?

நோட்டுகளுக்கு எதிராக ரொக்க ரிசர்வு இருக்க வேண்டுமென்ற கொள்கையிலிருந்து வைப்புகளுக்கு எதிராகவும் ரொக்க விகிதம் வேண்டும் என்ற கொள்கை தோன்றியது. சென்ற நூற்றாண்டில் பாங்குகளுடைய பொறுப்புகள் பெரும்பாலும் நோட்டுக்களாக இருந்த காலத்தில், மக்கள் வேண்டும்

போது நோட்டுக்களை மீட்பதற்காக, ஓரளவு நாணயம் வைத்திருக்க வேண்டுமென்று கருதப்பட்டது. தற்காலத்தில் சாதாரண பாங்குகளுக்கு நோட்டு வெளியிட உரிமையில்லை யாதலால், ரொக்க விகிதம் வைப்புப் பொறுப்புடன் இணைக்கப் பட்டிருக்கிறது. முன்பு நோட்டுக்கு எதிராக வைக்கப்பட்டது நாணயம். இன்று நாணயமாக இருக்க வேண்டுவதில்லை. மைய பாங்கினுடைய நோட்டுக்களாக அல்லது மைய பாங்கில் வைப்பாக இருக்கலாம். மைய பாங்கின் பொறுப்பு ரொக்கத்துக்குச் சமம். இந்த வகையில் வைப்புடன் இணைத்து ரொக்க விகிதத்தை நிர்ணயிப்பது, பாங்குகளின் பணப்பெருக்க சக்தியை மைய பாங்கின் ஆதிக்கத்துக்குட்படுத்துகிறது. இதுவே இன்றைய ரொக்க விதியின் நோக்கம்.

**பாங்குகள் ரொக்க ரிசர்வு பெறும் வழிகள்**

தம் வாடிக்கைக்காரர் மூலம் மற்றொரு பாங்கிடமிருந்து ரொக்கம் பெறலாம். ஆனால், அப்போது மற்ற பாங்குகள் தம் ரொக்கம் குறையக் காணும். ஆகவே, எல்லா பாங்குகளும் தம்முடைய ரொக்கத்தில் ஏற்றம் காண வேண்டுமானால் மைய பாங்கு தன்னுடைய கடன் (loan) அல்லது முதலீட்டை (investment) அதிகப்படுத்தி, நாட்டின் ரொக்கத்தை அதிகப் படுத்தவேண்டும். பாங்குகளின் பொறுப்பு (நம் வைப்புகள்) எப்படி நமக்கு ரொக்கமாக இருக்கின்றதோ, அப்படியே பாங்கு களுக்கு மைய பாங்கின் பொறுப்பு (வைப்புகள்) ரொக்கமாக இருக்கிறது.

இனி எப்போது பாங்குகளின் ரொக்க ரிசர்வு மாறக்கூடும் என்பதற்குச் சில உதாரணங்களைக் கூறுவோம். மைய பாங்கு பொன் வாங்கினால் பொன்னை விற்பவர்கள் மைய பாங்கு தந்த செக்கைப் பெற்றுத் தம் பாங்குகளில் போடுகிறார்கள். அப் பாங்குகளின் 'மைய பாங்கு இருப்பு' (Banker's Deposit) உயர்கிறது. ஆகவே வணிக பாங்கு ரொக்கம் பெறுகிறது.

மக்களின் செலாவணித் தேவை குறைந்து, பாங்குகளிடம் ரொக்கம் வந்தால் பாங்குகளுடைய ரொக்கம் அதிகப்படலாம். (ஆனால், மக்கள் செலாவணியை வைப்பாக மாற்றும்போது வைப்பு உயர்வதால் பாங்கின் ரொக்கத் தேவையும் ஓரளவு அதிகப்படும் என்பதையும் நோக்குக.)

கருவூலமோ (Treasury) அந்நிய பாங்குகளோ (Foreign Banks) தமக்குரிய மைய பாங்கு வைப்பிலிருந்து செலவு

செய்வதனுல் சாதாரண பாங்குகளுடைய ரொக்கம் அதிகப் படலாம். அரசாங்கம் ஒரு வியாபாரிக்கு அல்லது அரசாங்க பாண்டை தன்னிடம் விற்பவனுக்கு இலட்ச ரூபாய்க்குச் செக்கு கொடுத்தால் அவன் தன்னுடைய பாங்கில் வைப்பான். வைப்பு அரசாங்கத்தின் கணக்கிலிருந்து பாங்கின் கணக்குக்கு மாறும். ஓர் அயல்நாட்டுக் கம்பெனி ஓர் இலட்ச ரூபாய் நம் நாட்டுக்குக் கொடுக்க வேண்டியிருந்தால் அது நம் மைய பாங்கில் வைத்திருக்கும் வைப்பில் இருந்து கொடுக்கும். அது ஒரு தனி பாங்குக்குப் போய்ச் சேரும். இந்த இரண்டு வகையிலும் பாங்கினுடைய மொத்த ரொக்கம் அதிகப்படும்.

மைய பாங்கு சாதாரண பாங்குகளுக்குக் கடன் கொடுப்பதன் மூலம் சாதாரண பாங்குகளின் ரிசர்வு அதிகப் படலாம்.

இனி, பாங்குகளின் ரொக்கக் கைக்கோளை எப்படி நிர்ணயிக்க வேண்டும் என்பதைப்பற்றிக் கூறப்படும் யோசனைகளில் சிலவற்றைப் பார்ப்போம்.

1. எல்லா பாங்குகளும் 100 சதவீத ரிசர்வு வைத்திருக்க வேண்டும் என்பது ஒன்று. இது நடைமுறையில் இருந்துவரும் பின்ன முறைக்கு (Fractional System) நேர்மாருனது.

2. நெருக்கடி காலங்களில் மட்டும் ஒரு குறிப்பிட்ட அளவுக்குமேல் வைப்பு உயர்ந்தால், வழக்கத்துக்கு மேற்பட்ட விகிதத்தில் ரொக்கம் விதிக்கப்பட வேண்டும் என்பர் சிலர். சில நாடுகளில் இந்த எச்ச ரொக்கம் நூற்றுக்கு நூறு வீதம் இருக்க வேண்டும் என்று வகுத்துள்ளனர். பாங்குகளின் ரொக்கம் மிகுந்து, பண வீக்கத்துக்குச் காரணமாகக்கூடிய நிலையில் இம் முறை ஆளப்படுவதுண்டு.

3 வேண்டியபோது ரொக்க விகிதத்தை உயர்த்துவதற்கு அதிகாரம் மைய பாங்குக்குத் தரப்பட வேண்டுமென்று சிலர் கூறுகிருர்கள். இதுவும் முன் கூறிய யோசனையும் பாங்கு களுடைய வருமான சக்தியைக் குறைத்துவிடும். ஆகவே சிலர் அதிகப்படி கோரப்படும் ரொக்கத்தைக் குறுங்கால அரசாங்கச் செக்கூரிட்டிகளில் (Short term Govt. Securities) வைத்திருக்கச் செய்தால் போதும் என்பர். ஆனால், இது பாங்குகளிடம் நிறையச் செக்கூரிடிகள் இருக்கச் செய்து, அவைகளின் ரொக்கப்பேறு சக்தியை அதிகப்படுத்திவிடும். ஆகவே, மைய பாங்கின் பணக் கட்டுப்பாடு (monetary control) சக்தி குறையும். தவிர,

பாங்குகள் அரசாங்கச் செக்யூரிட்டிகளில் மாத்திரம் முதலீடு செய்ய வேண்டுமென்றால், தனியாருக்கு பாங்குக் கடன் கிடைக்காமல் போகலாம் என்பதும் ஓர் ஆட்சேபனை.

4. சிலர் ரிசர்வு விகித நிர்ணயத்தில் தேவை வைப்பு, தவணை வைப்பு என்ற வேறுபாடு கூடாது என்பர். (அமெரிக்காவில் விகித விஷயத்தில் உள்நாட்டுப் பாங்குகள், நகர பாங்குகள் என்கிற வேறுபாடு இருக்கிறது). இன்னும் சிலர் ஒரு பாங்கு வைக்க வேண்டிய ரொக்கம் ஓரளவுக்குத்தான் வைப்பைப் பொறுத்திருக்க வேண்டும்; மற்ற பகுதி அதனுடைய அன்றாடப் பற்றின் (debit) அடிப்படையில் நிர்ணயிக்கப்பட வேண்டும் என்பர். அமெரிக்காவில் 1931இல் ரிசர்வு சம்பந்தமாக ஆலோசித்த ஒரு கமிட்டி, வைப்புகளுக்கு எதிராக 5 சத வீதமும், அன்றாடச் சராசரிப் பற்றுக்கு எதிராக 50%ம், ஆனால் மொத்தத்தில் வைப்பில் 15 சதவீதத்துக்குமேற்படாமலும் இருக்க வேண்டுமென்று கூறியது. அன்றாடப் பற்று, ரொக்க வீத நிர்ணயத்து அடிப்படையாக இருக்க வேண்டுமென்று கூறுவது ரொக்க வீதத்தை வைப்பு சுழலும் வேகத்தின் (Velocity of deposits) அடிப்படையில் நிர்ணயிப்பதாகிறது. உதாரணமாக, 1000 ரூபாய் வைப்பு ஓர் ஆண்டில் 21 முறை சுழலுமானால், மேற்கண்ட விதிப்படி கணித்தால், வைக்க வேண்டிய மொத்த ரொக்க ரிசர்வு 85 ரூபாய் ஆகும். எப்படியெனில் ஓர் ஆண்டில் ஒரு நாளைக்குச் சராசரி வைப்பு 1000 ரூபாயானால், அதற்கு எதிராக வேண்டியது $1000 \times 5\% = 50$ ரூபாய். ஆனால் இவ்வைப்பு 21 முறை சுழல்வதனால் ஆண்டு மொத்தப் பற்று 21,000 ரூபாய். ஆண்டில் பாங்கு வேலை செய்யும் நாட்கள் 300 என்று வைத்துக்கொண்டால் ஒரு நாளைக்குச் சராசரிப் பற்று $\frac{21,000}{300} = 70$ ரூபாய் ஆகிறது. அதில் $50\% = 35$ ரூபாய். ஆக மொத்தம் 85 ரூபாய் ஆகிறது. இம்முறைப்படி வியாபார மும்மரத்தினால் வைப்பினுடைய சுழற்சி அதிகப்படுமானால். வைக்க வேண்டிய ரொக்கம் அதிகப்படும். ஆயிரம் ரூபாய் வைப்புக்கெதிராக 85 ரூபாய் வேண்டுமானால் 100-க்கு 8·5% ஆகிறது. இந்த ரொக்கவீதம் இப்போது விதிக்கப்படும் வீதங்களைவிடக் குறைவாகக் காணப்படுகிறது. ஆனால், இந்த விகிதம் தேவை வைப்புக்கும் தவணை வைப்புக்கும் பொதுவாகக் கணிக்கப்பட்டுள்ளது. வைப்புகளை வகைப்படுத்தும்போது இதை விடக் குறைவாக ரொக்கம் தேவைப்படும். நாட்டில் தேவை வைப்புத் தொகையும் தவணை வைப்புத் தொகையும் 4:1 வீதத்தில் இருக்கிறதானால், 1,000 ரூபாய் தேவை வைப்புக்கு

எதிராக 10%ம், 250 ரூபாய் தவணை வைப்புக்கு 2%ம் சேர்த்து 100+5=105 ரூபாய் ரொக்கம் தேவையாகிறது. மேற்கண்ட முறையில் சராசரி 8·5% தேவையானால் 1250×8.5%= 106.25 ரூபாய் தேவைப்படும். ஆனால் வேறு வீதங்களை ஆண்டால் இவ்வித விளைவில்லாமல் இருக்கக்கூடும். இந்த யோசனையின் சிறப்பென்னவெனில் ரொக்க ரிசர்வானது வைப்பின் ஆட்சியோடு (புழக்கத்தோடு) இணைக்கப்படுகிறது; வகையோடு இணைக்கப்படவில்லை. பொருளாதார நிலை பண ஓட்டத்தைப் (Moneyflow) பொறுத்ததே ஒழியத் தொகையைப் பொறுத்ததன்று. வீக்க காலத்தில் இம்முறையில் ரொக்க ரிசர்வை நிர்ணயிப்பது முறையாகத் தோன்றுகிறது. ஆனால் இந்த முறையின் கீழ் எவ்வளவு ரொக்க ரிசர்வு தேவைப்படும் என்பதைக் கணக்கிடுவது சிறிது கடினமாக இருக்கலாம். எல்லா பாங்குகளும் ஒரே அளவு பாதிக்கப்படமாட்டா. ஆனால் இந்தக் குறைபாடுகள் முக்கியமானவை அல்ல. மற்றொரு குறை முக்கியமானது. பாங்கு வைப்புப் புரட்டு (Turnover) இரண்டு காரணங்களால் அதிகப்படலாம். எதிர்காலத்தைப் பற்றிய நன்னம்பிக்கையால் (optimism) புரட்டு அதிகப்படும். இந்நிலையில் ரொக்க ரிசர்வுத் தேவையை உயர்த்துவது ஒரு கடிவாளமாக இருக்கும். யூக வாணிகம் தடைபடும். ஆனால் பணத்தில் நம்பிக்கை (confidence) இழந்தபோதும் புரட்டு அதிகப்படும். இந்நிலையில் பாங்குகள் கடன் தொகையைக் கட்டுப்படுத்தக் கூடுமே ஒழிய புழக்க வேகத்தைக் குறைக்கும் சக்தி அவைகளுக்கில்லை.

5. மற்றொரு யோசனை பாங்கின் சொத்தின் தன்மைக்கேற்ப ரொக்க ரிசர்வு நிர்ணயிக்கப்பட வேண்டுமென்பது. ஒரு பாங்கின் சொத்து மிக நீர்மையுடையதாக, மற்றொன்றினுடைய சொத்துகள் பெரும்பாலும் 'கடன்' ஆக இருக்கலாம். இந்த யோசனைப்படி கடன் வகைக்கேற்ப ரொக்க ரிசர்வு விகிதம் நிர்ணயிக்கப்படும். இப்படிச் செய்வது பெருக்கத்தைக் கட்டுப்படுத்த ஒரு வழியாகும். ஆனால், மைய பாங்கு ஏற்கனவே பாங்குகளுடைய கடன் முறைகளைக் கட்டுப்படுத்த அதிகாரம் உடையதாக இருந்தால் இது அவசியமில்லை. பாங்குகளுக்கு இவ்விஷயத்தில் சுயேச்சை தருவது நல்லது.

6. மற்றொரு யோசனை ஒவ்வொரு பாங்குக்கும் தனியே ரொக்க ரிசர்வை அதன் தொழில் வகை, இடம் ஆகியவற்றைக் கருதி நிர்ணயிப்பதாகும்.

## 2. கடன்கள் (Loans)

பாங்கினுடைய சொத்துகள் இரு வகையில் முக்கியம். முதலாவது, அவைகள்தாம் பாங்கினுடைய வருமானத்துக்கு முக்கியமான வழி. இரண்டாவது, (பாங்கின் சொத்து அதிகமாகும்போது வைப்புகளும் அதிகப்படுவதனால்) சொத்துகள் மூலமாக பாங்குப் பணம் உற்பத்தியாகிறது. சொத்து பாங்குத் திட்டத்திலுள்ள வரையில் பணம் புழக்கத்திலிருக்கும். ஆனால் பாங்குகளுக்கு இந்த அம்சம் முக்கியமன்று. அவைகளின் அக்கரை சொத்து சம்பாதிக்கும் வருமானத்திலேதான்.

ரொக்கம் வருமானமற்ற சொத்து. இது ஒருபுறமிருக்க, பாங்குச் சொத்துக்கள் பலவிதமானவை. அவைகளைப் பல வகைகளில் பிரிக்கலாம்; ஒரு முக்கியப் பிரிவினை: கடன்கள், முதலீடுகள் என்பது முதலீடு என்பதும் ஒரு வகையில் கடன் கொடுப்பதேயாகும். முக்கிய வேறுபாடுகள்: (1) பங்கு (share) மூலம் கடன் வாங்குபவர்களுக்கும் பாங்குக்கும் நேரடியான தொடர்பில்லை. (2) முதலீடுகள் கடன்களைவிட நெடுங்காலத் தவணை உடையன, (3) கடனாளிக்குப் பாங்கு ஒன்றே கடனீவியாக (creditor) இருக்கும். ஆனால் பங்குகளில் முதலீடு செய்வோர் பலர். முதலீடுகளைப்பற்றிப் பின்னர் விளக்கமாக அறிவோம்.

கடன்களை (அ) வாங்குவோர், (ஆ) ஈடு, (இ) காலம், (ஈ) காரணம் ஆகியவற்றின் அடிப்படையில் பகுக்கலாம்.

அதாவது கடன்கள் வாங்குவோர் வாடிக்கைக்காரர்களா அல்லது மற்றவர்களா? வாங்குவோரின் நாணயத்தின் பேரில் கடன் தரப்படுகிறதா அல்லது ஒரு குறிப்பிட்ட சொத்து ஈடு வைப்பதன் பேரில் கடன் தரப்படுகிறதா? குறுங்காலத்தில் (3 மாதத்திற்குள்) திருப்பித் தர வேண்டுமா அல்லது சில ஆண்டுகளுக்குள் திருப்பித் தர வேண்டுமா? எந்தக் காரணத்துக்குக் கடன் வாங்கப்படுகிறது? வாணிகத்துக்கா, செக்கூரிட்டிகள் வாங்கவா, விவசாயத்துக்கா, நிலம், வீடு வாங்கவா, நுகர்ச்சிக்கா, வேறு காரணத்துக்கா?

### (அ) கடனாளியின் தன்மை

கடன் திரும்பி வரும் என்ற நம்பிக்கை பாங்குக்கு அவசியம். பிறருடைய பணத்தைக் கடன் கொடுக்கவேண்டி இருப்பதால் எச்சரிக்கை வேண்டியிருக்கிறது என்று நினைக்கலாம். ஆனால்,

இது சரியான கருத்தன்று. பாங்குகள் கொடுப்பது தம் நாணயத்தை; பாங்குகள் தம் நாணயத்தைக் காப்பாற்றித் தொழிலில் நிலைக்க வேண்டுமானால் கடன் கொடுப்பதைப் பற்றி எச்சரிக்கையாக இருக்க வேண்டும். பாங்குத் தொழில் ஓர் ஆபத்து நிறைந்த தொழில். 100 ரூபாய் நஷ்டமானால் அதைச் சம்பாதிக்க இலட்சக்கணக்கில் லேவாதேவி வேண்டும். ஏனெனில் மொத்த வருமானத்தில் நிர்வாகச் செலவு விழுங்கியது போக எஞ்சுவது சிறிதே. தவிர பாங்கின் சொத்தில் ஒரு முக்கியமான பகுதியை வருவாயின்றி ரொக்கமாக வைத்திருக்க வேண்டியிருக்கிறது. ஆகவே, பாங்குகளுக்குத் தற்காப்பு (safety) முக்கியம். ஆகவேதான் பாங்குகள் கடன் கொடுப்பதற்கு முன் தீர விசாரிக்க வேண்டியிருக்கிறது. எப்படி விசாரிப்பது என்பது பாங்கின் பருமன், இருக்குமிடம், கடனாளியின் தன்மை, கடன் காரணம் ஆகியவற்றைப் பொறுத்தது. ஒரு சிற்றூரில் இருக்கும் பாங்கு தன்னிடம் கடன் கேட்போரைப்பற்றிய முழு விவரங்களையும் எளிதில் அறிந்துகொள்ளலாம். ஒரு வியாபாரி கடன் கேட்டால் அவனுடைய இருப்பு நிலைக் குறிப்பை ஆராய வேண்டும். ஆராய்ந்து, அவனுடைய நடப்புச் (current) சொத்துகளுக்கும் நடப்புப் பொறுப்புகளுக்குமுள்ள விகிதாசாரத்தைக் கவனிக்க வேண்டும். நடப்புச் சொத்துகள் பொறுப்புகளைவிட அதிகமாக இருந்தால் மட்டும் போதாது. சொத்தில் எவ்வளவு நிச்சயமாக உடனே ரொக்கமாகுந் தன்மையுடையது என்பது முக்கியம். கையில் இருக்கும் பண்ட இருப்பு எளிதில் ரொக்கம் ஆகுமா, பாக்கிகள் வருவது உறுதியா, என்பவை முக்கியம்.

அடுத்தபடி சமீப காலத்திய வரவு செலவு ஸ்டேட்மெண்டையும் பார்க்கவேண்டும். பல ஆண்டுகளின் போக்கைப் பார்த்தால் இலாபம் அதிகப்பட்டுக் கொண்டு வருகிறதா, குறைந்து வருகிறதா என்பது தெரியும். தவிர, கடன் கேட்போன் இதுவரையில் எவ்வளவு நாணயமாகக் கடனைத் தீர்த்து வந்திருக்கிறான் என்பதையும் ஆராய வேண்டும். அவன் இதுவரையில் தொடர்பு வைத்திருந்தவர்களை அணுகி அவர்கள் மூலம் அவனுடைய தகுதியைப் பற்றி அறிந்துகொள்ளவேண்டும். கடன் வாங்குவோன் காட்டும் ஈட்டை விற்கவேண்டி வந்தால் கடன் அடையுமா என்பதையும் பார்க்க வேண்டும்.

ஒவ்வொரு தடவையும் ஆராய்ச்சி செய்ய அவசியமில்லாமல், வாடிக்கைக்காரருக்கு ஓரு கடன் எல்லை வகுப்பதுண்டு. இதை

மிகைப்பற்று (Overdraft) முறை என்பர். இந்த எல்லை வகுப்ப தற்கு முன் நன்ருகப் பாங்குகள் நிறுவனத்தைப் பற்றி முடிவுக்கு வந்திருக்கும். குறித்த எல்லை அளவுக்குக் கடன் வாங்கப்படாம லிருக்கலாம். அவ்வப்போதுள்ள பாக்கி அளவுக்கே வட்டி வசூலிக் கப்படும். பாங்கும் ஒப்பந்த அளவுக்கு அவனுக்குக் கடன் கொடுக்க வேண்டும் என்கிற நியதி இல்லை. ஏனெனில் அவ்வப்போது பாங்கு தன் ரிசர்வு நிலையைப் பார்த்துக் கடனைக் கட்டுப்படுத்த லாம் அல்லது மறுக்கலாம். சில பாங்குகள் ஒரு குறிப்பிட்ட தேதியில் எல்லாக் கடனும் பைசலாகி இருக்கவேண்டுமென்றும், வேண்டுமானுல் மீண்டும் கடன் பெறலாம் என்றும் விதிப்ப துண்டு. சில பாங்குகள் கடனில் ஒரு குறைந்தபட்சப் பகுதி (minimum balance) எப்போதும் வைப்பில் இருக்கவேண்டும் என்றும் விதிப்பதுண்டு. முதல் வகை நிபந்தனைக்குக் காரணம் கடன் வாங்குவது தற்காலிகத் தேவைக்காகவேயன்றி நிலை முதலுக்காக (Fixed Capital) அன்று என்பதை உறுதி செய்வதற் காகும். ஆனுல், கடனுளி ஒரு பாங்கின் கடன்களை எல்லாம் ஒரு சேரத் தீர்ப்பதற்காக மற்ருெரு பாங்கில் கடன் வாங்கலா மாகையால் இந்த நிபந்தனை அவ்வளவு சக்தியுடையதன்று. இரண்டாவது வகை நிபந்தனை எதற்கு? பாங்கின் கடன் கொடுக்கும் சக்தி அதனிடத்தில் உள்ள ரொக்க ரிசர்வு எச்சத் தைப் பொறுத்தது. வாடிக்கைக்காரன் ஒருவன் வைப்பிலிருந்து 10,000 ரூபாயை எடுத்தால் பாங்கினுடைய வைப்பு மட்டுமன்றி ரொக்கமும் பத்தாயிரத்துக்குக் குறைகிறது. 10 சதவீதம் ரொக்க ரிசர்வு இருக்க வண்டுமென்ருல், ரூ. 10,000 வைப்பு குறையும் போது ரொக்கம் ரூ. 1000 தான் குறையலாம். ஆனுல் மேலும் ரூ. 9 ஆயிரம் குறைகிறது. இருந்தும் ஒரு வாடிக்கைக்காரன், மறுக்காமல் தனக்குப் பாங்கு கடன் தர வேண்டும் என்று எதிர் பார்த்தால், அவன் எப்போதும் தன்னிடம் ஓரளவு வைப்பு வைத்துப் பாங்கின் கடனளிப்புச் சக்தியை உறுதிப்படுத்த வேண்டுமென்று எதிர்பார்ப்பது முறைமையானதே. இந்த விதமான கட்டுப்பாடு பாங்குக்கு இலாபகரமானது. குறைந்த பட்சம் ஒரு தொகை பாங்கிடத்தில் எப்போதும் இருக்கும். பிற தேவைக்குக் கடன் வாங்குவதோடு குறைந்த பட்ச இருப்புக் காகவும் கடன் வாங்க வேண்டியிருப்பது பாங்குக்கு ஆதாய மானது. வேண்டும்போது கடன் கொடுக்கும்படியான பொறுப் புக்கு ஈடாக இந்த வழியில் பாங்கு இலாபம் பெறுவதும் ஒரு வகையில் நியாயமே. குறைந்தபட்ச இருப்பு எவ்வளவு இருக்க வேண்டும் என்பதைப்பற்றி ஒரு நியதி இல்லை. பாங்குக்குப் பாங்கு, கடன்காரர்களுக்கு ஏற்ப இது வேறு படலாம்.

(ஆ) கடன் ஈடுவகை

இது இருவகைப்படும்: (1) ஈடுடைய கடன் (secured loan), (2) ஈடில்லாக் கடன் (unsecured loan). ஈடுவைக்க வழி இல்லாவிட்டால் பாங்கினிடம் கடன் வாங்குவதே கடினமாகும். தவிர, ஈடு வைத்தால் குறைந்த வட்டியில் கடன் வாங்க முடியும். சிறு வியாபாரிகள் பெரும்பாலும் ஈடு வைத்தே கடன் பெற முடியும். பாங்கினிடம் கடன் வாங்கி, ஒரு சொத்தை வாங்கி, அச்சொத்தையே பாங்குக்கு ஈடு காட்டுவதுண்டு. முக்கியமாக ஈட்டுக்கு வரும் சொத்துகளை ஐந்து வகையாகப் பிரிக்கலாம். அவையாவன ; (1) கூட்டுப் (Joint) புரோநோட்டுக்கள். (2) உற்பத்திக் கருவிகள் (equipments). (3) இயந்திர நிலையம் அல்லது நிலச் சொத்து (real estate), (4) பாண்டு பத்திரங்கள், (5) பண்ட இருப்பு (stock).

ஒரு ஃபர கையொப்பமிட்ட பாண்டின் மேல் மற்றொருவரும் கையொப்பமிட்டால் அது பாண்டின் தரத்தை உயர்த்துகிறது வெளிப்படை. ஒரு தொழில் தன்னுடைய நிலச் சொத்தையாவது இயந்திரத்தையாவது ஈடு வைத்துக் கடன் வாங்கலாம். இயந்திரங்கள் வாங்கும்போது அதையே அடமானமாக (mortgage) வைத்துக் கடன் வாங்குவது சாதாரண வழக்கம். கடனாளிக்குரிய பாண்டுகள், பத்திரங்கள் ஆகியவற்றை அடமானம் வைத்து அவன் கடன் வாங்குவதற்கும் சொத்துகளை அடமானம் வைத்து அவன் கடன் வாங்குவதற்கும் வேறுபாடிருக்கிறது. மற்ற அடமானப் பொருள்கள் கடனாளியின் கையிலுள்ள உரிமையான சொத்துகள். பாண்டுப் பத்திரங்கள் அவனுக்கு வரவேண்டிய உரிமையைக் காட்டுவன. ஆகவே தன்மையில் வேறு. ஈடுகளில் முக்கியமானது பண்ட இருப்பு (stock) ஈடு. இது பாங்குகள் ஆளும் பழைய ஈடு முறை. வியாபாரிகள் இருப்புவைக்க வேண்டின் பாங்குகளிடத்தில் பண்டஇருப்பையே ஈடு காட்டிக் கடன் வாங்குவர். இதனால் அவர்கள் தங்கள் சொந்தப் பணத்தைத் தம் விருப்பப்படி வேறு வகைகளில், உதாரணமாக நிலமுதலில், ஆள முடிகிறது. இயந்திரங்கள் முதலிய நிலை முதற் பொருள்களுக்கு ரொக்கம் கொடுத்து வாங்குவதனால் ரொக்கக் கழிவு (cash discount) கிடைக்குமாதலால் தம் பணத்தை இதற்காண்டு, பாங்கிடம் கடன் வாங்கிக் கச்சாப் பொருள்களையும் வினைமுற்றுப் பொருள்களையும் வாங்குவார்கள். பொருள்களை இவர்கள் ஒரு பண்டசாலையில் (warehouse) வைத்து, பாங்குகளுக்கு ஈட்டுரிமைச் சீட்டு எழுதிக் கொடுத்துக் கடன் வாங்குவார்கள். ஈட்டுப்

பொருள்களை விற்கவேண்டுமானல், பாங்கிடம் முன் ஏற்பாடு செய்து, எடுத்து விற்று, விற்பனைத் தொகையைப் பாங்குக்குச் செலுத்துவார்கள்.

அடுத்தபடி, ஈடில்லாக் கடன்களைப் பார்ப்போம். தொழிலுக்குக் கொடுக்கும் கடன்களில் பெரும் பகுதி இவ்வகையைச் சேர்ந்ததே. ஈடில்லாக் கடன் என்பதால் எச்சரிக்கையின்றிக் கொடுத்த கடன் என்பதன்று. பாங்கு எந்தக் கடனையும் தகுதி நோக்கித்தான் கொடுக்கிறது. ஒரு கடனாளி தொழிலிலும் நாணயத்திலும் சிறந்தவனுக இருந்தால் அவனுடைய பொதுத் திறமையை, நாணயத்தைக் கருதி, அதையே தகுந்த ஈடாக நினைத்துக் கொண்டு பாங்கு கடன் கொடுக்கும். பெரிய கம்பெனிகள் இந்த வகையில் ஈடில்லாது கடன் வாங்க முடிகிறது. இதற்குக் காரணங்கள் பல கூறலாம். இவை தங்களுடைய பொருளாதார நிலையை உலகம் அறியும்படி ஆண்டுதோறும் இருப்பு நிலைக் குறிப்பை வெளியிடுகின்றன. இவை பெருந் தனமுடையனவாகையால், பணத்துக்குப் பாங்குகளைப் பெரும்பாலும் எதிர்பார்க்க வேண்டியதில்லை. வேண்டும்போது பங்குகளையும் டிபஞ்சர்களையும் விற்றுப் பணம் பெறலாம். இவை பல பாங்குகளில் கணக்கு வைத்திருக்குமாதலால் எந்த ஒரு பாங்குமட்டும் ஈடு கேட்க அஞ்சும்; அவையும் எந்த ஒன்றுக்கு மட்டும் ஈடு காட்ட முடியாது. இப்படிப்பட்ட பெரிய கம்பெனிக்கு எல்லா பாங்குகளும் ஈடின்றிக் கடன் கொடுக்கத் தயாராக இருக்கும்.

### (இ) கடன் காலம்

காலத்தை அனுசரித்துக் கடன்களை (1) அழைப்புக் கடன்கள் (2) தவணைக் கடன்கள் என்று பிரிக்கலாம். அழைப்புக் கடன் (Call Loans) அல்லது தேவைக்கடன் (Demand Loans) என்பவைகளுக்குக் குறிப்பிட்ட முதிர்வு தேதி இல்லை. பாங்கு விரும்பும்போது அந்தக் கடனைத் திருப்பிக் கேட்கலாம். கடனாளியும் பணம் கிடைத்தவுடன் பைசல் செய்து விடலாம். இந்த அழைப்புக் கடன்கள் அமெரிக்காவில் பெரும்பாலும் செக்கூரிட்டிகள் வாங்குவதற்கும் இங்கிலாந்தில் உண்டியல் வாங்குவதற்கும் பெறப் படுகின்றன. செக்கூரிட்டி வாங்குவதற்காகக் கடன் வாங்குபவர்கள், வாங்கும் செக்கூரிட்டிகளையே ஈடு வைப்பார்கள். இவ்வகைக் கடன் ரொக்கத்தன்மை உடையது. ஏனென்றல், கடனாளி வாங்கும் செக்கூரிட்டிகளை வேண்டும்போது அங்காடியில் விற்று ரொக்கமாக்க முடியும்.

ஈடு காட்டிய செக்கூரிட்டியின் மதிப்பு விழுமானால், கடனாளியை மதிப்பு வீழ்ச்சிக்கு ஏற்ப ரொக்க ஈடு செய்யச் சொல்வது வழக்கம்.

அழைப்புக் கடனல்லாத மற்ற வகைக் கடன்கள் குறிப்பிட்ட முதிர்வுத் தேதியை உடையன. பெரும்பாலும் பாங்குகள் ஓர் ஆண்டுக்குட்பட்ட சிறு கால முதிர்வுடைய கடன்களையே தர விரும்புகின்றன. ஏனென்றால், கூடிய மட்டும் பாங்குகளுடைய சொத்துகள் நீர்மையோடு இருக்க வேண்டும். மூன்று மாதத் தவணையில் திரும்பக் கூடிய கடன்களையே பாங்குகள் விரும்புகின்றன. பண்ட இருப்பு (stock) வைப்பதற்காக வாங்கும் கடன்கள் பெரும்பாலும் இவ்வகையானவை; சில மாதங்களில் தாமாகவே கடன் பைசலாகிவிடும்.

தொழில் துறையோருக்குச் சிலபோது ஓர் ஆண்டுக்கு மேற்பட்ட தவணையுடைய கடன் தேவைப்படும். பெரிய நிறுவனங்கள் பங்குகளை, பாண்டுகளை விற்று இத்தேவையைப் பூர்த்தி செய்து கொள்ளலாம். ஏனென்றால், இவைகளை எளிதாக விற்க முடியும். ஆனால் சிறு தொழில்கள் இவ்வழியில் பணம் எழுப்ப முடியாது. சிலபோது பாங்குகள் குறுங்காலக் கடன்களை மீண்டும் புதுப்பித்து நெடுங்காலக் கடன்களைப் போலப் பயன்பட விட்டு வைப்பதுண்டு.

சமீப காலத்தில் காலக் கடன்கள் (Term Loans) என்பவை ஆட்சியில் (அமெரிக்காவில்) வந்துள்ளன. இந்தக் கடன்கள் ஓர் ஆண்டுக்கு மேற்பட்டுக் கொடுக்கப்படுகின்றன. பெரும்பாலும் இவை பகுதிச்செலுத்து முறையில் (Instalment System) தீர்க்கும் வசதியுடையன. ஆகவே இவ்விதக் கடன்கள் சாதாரணக் குறுங்காலக் கடனுக்கும் நீண்டகாலக் (long term) கடனுக்கும் இடைப்பட்ட நிலையில் உள்ளன. இந்தக் கடன்கள் ஈட்டின் பேரிலோ ஈடின்றியோ தரப்படலாம். நிபந்தனைகள் தெளிவாக ஒப்பந்தத்தில் எழுதப்பட்டிருக்கும். இக்கடன் கொடுக்கும்போது நிறுவனத்தின் நெடுநாள் இலாப நிலை எப்படி இருக்கும் என்பது முக்கியமாக ஆராயப்படும். வேறு இடத்தில் கடன் வாங்காமலும் பார்த்துக் கொள்ளப்படும். சில சமயங்களில் இந்தக் கடன்கள் 10 ஆண்டிற்குக் கூடத் தரப்படுகின்றன. ஆனால் பெரும்பகுதி 5 ஆண்டுகளுக்குக் குறைவாகவே இருக்கின்றன. இவ்வகைக் கடனைப் பெரிய நிறுவனங்களேயன்றிச் சிறிய நிறுவனங்களும் பெரும்பாலும் ஆள்கின்றன. வட்டி மிக ஏற்றமாக இருந்தபோதிலும், ஈடு வைக்க வேண்டி இருந்தபோதிலும்,

சிறு நிறுவனங்கள் இந்த வகைக் கடனால் நன்மை பெறுகின்றன. அவை வேறு வழியில் கடன் பெறுவது எளிதன்று. அவைகளின் தேவையைக் குறுங்காலக் கடன்கள் பூர்த்தி செய்யா. பாண்டை, இருப்புகளை (stocks), வைப்பதற்குக் குறுங்காலக் கடன்கள் பயன்படுமே யொழிய இயந்திரங்கள் நிறுவுவதற்கும், தொழில் விஸ்தரிப்புக்கும் பயன்படமாட்டா.

(ஈ) **கடன் காரணம்**

முதல் காரணம் வாணிகத்துக்கும் தொழிலுக்கும் உதவுவது. இக் கடன்கள் (Commercial and Industrial Loans) நடைமுறைச் செலவுக்கும், கடனுக விற்பனைக்கும் (Credit Sales), இருப்பு (stock) வைப்பதற்கும் வியாபாரிகளுக்குத் தரப்படுகின்றன. இவ்வகைத் தேவைகளைப் பூர்த்தி செய்வதால்தான் பாங்குகளுக்கு வணிக பாங்குகள் (Commercial Banks) என்ற பெயர் வந்தது. பாங்குகளின் கடனளிப்பில் வணிகக் கடன்களே (commercial loans) மிகப் பெரும் பகுதியாகக் காணப்படும். சமீப காலத்தில் நிறுவனங்களின் நீர்மை மிகுதியால் இந்த வகை லேவாதேவி குறைந்து வருவதாக எண்ண இடமிருக்கிறது. இதுபற்றி வேறிடத்தில் ஆராய்வோம்.

செக்யூரிட்டிகள் வாங்குவதற்குக் கூட பாங்குகள் கடன் கொடுப்பது வழக்கம். பாங்குகள் நேரடியாக அல்லது தரகர்கள் மூலம் முதலிடுவோருக்கு உதவுவதும் வழக்கம். முன்னர்க் கூறியபடி இவ்விதக் கடன்கள் பெரும்பாலும் வேண்டும்போது திருப்பித் தர வேண்டும் என்கிற நிபந்தனையின் மேல் கொடுக்கப்படுவன. இந்தக் கடன்கள் வரம்புக் கட்டுப்பாடுகளுக்கு (Margin Requirements) உட்பட்டே கொடுக்கப்படுகின்றன. அதாவது பங்கின் மதிப்பில் ஒரு குறிப்பிட்ட சதவீதம் தான் கடன் கொடுக்கலாம் என்று மைய பாங்கு நிர்ணயிக்கிறது.

சாதாரணமாகப் பாங்குகள் பயிர்த் தொழிலுக்குக் கடன் கொடுப்பதில்லை. பெரும்பாலும் குடியானவர் தேவை, தனி (special) நிதி நிறுவனங்களால் பூர்த்தி செய்யப்படுகிறது. ஆகவே இந்த வகையில் கொடுக்கும் உதவி மிகவும் அற்பமானது.

நிலச் சொத்துகளின் (real estate) மேல் பாங்குகள் கடன் கொடுப்பது அரிது. வீட்டுச் சொத்தின் பேரில் கடன் கொடுப்பது ஓரளவு உண்டு. இவ்வகைக் கடன்கள் அமெரிக்காவில் மற்ற நாடுகளை விட அதிகமாகக் காணப்படுகின்றன.

பாங்குகள் நுகர்வோருக்கும் கடன் கொடுப்பதுண்டு. ஆனால் இது அதிகமாக இருப்பதில்லை. வியாபாரிகளுக்குக் கொடுக்கும் கடன் உற்பத்திக்குப் பயன்படுவதால், அது தானே கடனைத் தீர்க்க வழி செய்யுமாதலால், வர்த்தகக் கடனையே பாங்குகள் விரும்பும். நுகர்ச்சிக் கடன் தானே தீர்த்துக் கொள்ளும் திறமில்லாததினால் பாங்குகள் தயங்குகின்றன. ஆனால் சமீபத்தில் பகுதிச் செலுத்து (instalment) முறை பரவியதால், பாங்குகள் நுகர்ச்சிக் கடன் கொடுக்க முன் வந்துள்ளன.

### 3. முதலீடுகள் (Investments)

இதுவரை பாங்குகள் தம் வாடிக்கைக்காரருக்குக் கடன் கொடுப்பதை ஆராய்ந்தோம். இக்கடன்கள் எல்லாம் நேரடித் தொடர்பின் மேல் தருவன. நேரடித் தொடர்பின்றியும் பாங்குகள் கடன் தருவதுண்டு. இதைத்தான் முதலீடென்பது. பாங்குகள் அங்காடியில் தொழில் பாண்டுகளை, பங்குகளை வாங்கி முதலீடு செய்வது மூலம் கடன் கொடுக்கின்றன. அடிக்கடி அரசாங்கம் பாங்குகளிடமிருந்து கருவூல உண்டியல் மூலம் கடன் பெறுகிறது. பாங்குகள் வர்த்தகர்களின் வர்த்தக உண்டியல்களையும் வாங்குகின்றன. இந்தக் கடனையும் முதலீடாகக் கருதலாம். ஆனால் இங்கிலாந்து பாங்கு முறையில் உண்டியல் வாங்குவதை முதலீட்டின் கீழ்ச் சேர்ப்பது வழக்க மில்லை. முதலீடுகளைப் பற்றிச் சிறிது ஆராய்வோம்.

'முதலீடுகள்' என்ற சொல் மூன்றுவித நடவடிக்கைகளைக் குறிக்கலாம். (1) பண்டங்களில் முதலிடுவது, (2) பங்கு (உரிமைச் சான்று) களில் முதலிடுவது, (3) பாண்டு (கடனுக்குச் சான்று) களில் முதலிடுவது என்பன. மூன்றாவது வகையைத் தான் நாம் இங்குக் குறிப்பிடுகிறோம். சாதாரணமாகப் பாங்கு கள் முதல் வகையிலும் இரண்டாம் வகையிலும் முதலிடுவதில்லை. பாங்குகள் தொழிலில் ஈடுபடத் தயாராக இல்லை. இதற்கு நல்ல காரணமுண்டு. பாங்குகள் நிலையான சொத்துகளை வாங்கவும் வைத்திருக்கவும் கூடாது என்பது பொதுவான கொள்கை. ஆனால் பாங்குகள் பாண்டுகளையும் மற்றக் கடன் சான்றுகளையும் (evidences of debt) வாங்கலாம்.

சமீப காலத்தில் பாங்குகளுடைய சொத்துகளில் முதலீடுகள் அதிகமாகிக் கொண்டே வருகின்றன. பாங்கிகளின் பணித் துறையைப் பற்றிய கருத்து மாறிவருவதே இதற்குக் காரணம். பாங்குகள் வர்த்தகக் கடன் துறையில் மட்டும் ஈடுபட

வேண்டுமா, தொழில் முதலீட்டுத் துறையிலும் ஈடுபடலாமா என்பதைப் பற்றிய கருத்தில் மாறுதல் ஏற்பட்டுக் கொண்டு வருகிறது. சென்ற நூற்றுண்டில் ஆளப்பட்ட கோட்பாடு, வர்த்தகக் கடன் கோட்பாடு (Commercial Loan Theory) எனப்படும். அது பாங்குகள் வர்த்தகக் கடன் மட்டும் தான் கொடுக்கலாம் என்றது. ஏனெனில் பாங்கினுடைய பொறுப்புகள், நோட்டுகளோ வைப்புகளோ எதுவாயினும், வேண்டும்போது கொடுக்கப்பட வேண்டிய பொறுப்புகள். ஆகவே, பாங்குகள் தொழில் துறையில் நடைமுறை முதலுக்கு (Working Capital) மட்டும் குறுங்காலக் கடன் கொடுக்கலாம் எனப்பட்டது. குறுங்காலக் கடன் மட்டும் கொடுத்து வந்தால் பாங்கின் நீர்மை குலையாது. தவிர, குறுங்காலக் கடனுகக் கொடுத்தால், திரும்பத் திரும்பத் தொழில் துறையில் கடன் கொடுப்பதற்கு வாய்ப்பு ஏற்படும். எந்தக் கடனும் 90 நாட்களுக்கு மேல் கொடுக்கப்படாத பட்சத்தில், உண்மையில் இதைவிடச் குறைந்த காலத்துக்கே கொடுக்கும் போது, தினம் சில கடன்கள் முதிர்ந்து கொண்டு வரும். இதனுல் பாங்கு அவ்வப்போது சூழ்நிலைக்கேற்பத் தன்னுடைய கடனைப் பெருக்கிக் கொள்ளலாம் அல்லது சுருக்கிக் கொள்ளலாம் எனப்பட்டது.

இந்த வாதத்தை ஆராய்வோம். பாங்குகள் தங்களுடைய சொத்துகளை நீர்மையுடையவையாக வைத்திருக்க வேண்டு மென்பது சரியே. ஆனுல் இது காரணமாக வணிகக் கடன்கள் மட்டும் தான் பாங்குகள் கொடுக்க வேண்டுமென்று கூற முடியாது. முதலாவதாக, குறுங்காலக் (short term) கடன்கள் வணிக நோக்கங்களுக்கே யன்றி வேறு காரியங்களுக்கும் கொடுக்கப்படலாம். அழைப்புக் கடனும் நுகர்வோர் கடனும் நீர்மையுடையவையாக இருக்கக் கூடும். ஆனுல் ஒரு வகையில் இவ்வணிகக் கடன்கள் பாங்குத் திட்டத்தின் நீர்மையைக் கருதும் போது தகுதியற்றன வல்ல என்று ஒப்புக் கொள்ள வேண்டும். இரண்டாவது, பாங்குத் திட்டத்தின் நீர்மை, கடன்களின் முதிர்வு காலத்தைப் (maturity) பொறுத்தது அன்று; பாங்குகள் அவைகளை எளிதில் மறுகழிவு செய்யவோ விற்கவோ வசதி உண்டா என்பதைப் பொறுத்தது. மறு கழிவுக்கு (rediscount) வசதி இல்லாதபோதுதான் சிக்கல்கள் பாங்குகளுக்குத் தோன்ற முடியும். நெருக்கடியில் மக்கள் பயந்து தம்முடைய வைப்புகளை ரொக்கமாக மீட்க ஆரம்பித்தால், எல்லா பாங்குகளுக்கும் ரொக்க ரிசர்வு குறையும். பாங்குகள் செக்யூரிட்டிகளை விற்ருலும் அல்லது கடன் வாங்கின

வர்கள் கடனைத் திருப்பிக் கொடுத்தாலும் பாங்குத் திட்டத்தின் ரொக்க ரிசர்வு நெருக்கடியைத் தவிர்க்க முடியாது. இந்த விதமான நெருக்கடியைத் தவிர்க்க வேண்டுமானால் பாங்குகள் மைய பாங்கிடம் சொத்தை விற்கவோ கடன் பெறவோ வசதி வேண்டும். மைய பாங்கு உதவ முன் வருமானால், பாங்குகள் தம்முடைய பொறுப்புகளை ரொக்க ரிசர்வுக்கேற்ப வெட்ட வேண்டிய அவசியம் இருக்காது. நூறு ரூபாய் ரொக்க ரிசர்வுக்காக ஆயிரம் ரூபாய் கடனைக் குறைக்க வேண்டி யிருக்காது. ரொக்க ரிசர்வைப் பெறுவதற்குத் தம்மிடம் உள்ள சொத்துகளில் சிலவற்றை மைய பாங்கிடம் நேரடியாக விற்று ரொக்கத்தைப் பெற்றுக் கொள்ளலாம். அவசரமாக எல்லாச் சொத்துகளையும் விற்று நஷ்டம் அடைய வேண்டியதில்லை.

மைய பாங்கு இலாபத்துக்காக இல்லை; அது பாங்குகளுக்கு உதவி செய்யவே இருக்கிறது. அது சொத்துகளை பாங்குகளிட மிருந்து விலையைக் குறைக்காமலே ஏற்றுக் கொள்ளலாம். ஆனால் இப்படி வாதிப்பதால் பாங்கு, சொத்துகளின் முதிர்வு பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை, நீண்ட காலக் கடன் தரலாம் என்று கூறுவதாக நினைக்கக்கூடாது. தனி ஒரு பாங்கு முட்டாள்தனத் தால் சிக்கலில் அகப்பட்டால் அதை மைய பாங்கு காப்பாற்றக் கடமைப்பட்டதன்று. ஒரு பாங்கு தன்னிடத்திலுள்ள எந்தச் சொத்தையும் வாங்கின விலையில் அல்லது ஏறிய விலையில் மைய பாங்குக்கு விற்கக்கூடும் என்று எதிர்பார்க்க முடியாது. மைய பாங்கு நாட்டில் வைப்பு அமிகமாகப் பெருகி விட்டதாக நினைப்பின், வட்டி வீதத்தை அதிகப்படுத்தி, பாண்டுகளின் விலையைக் குறைக்க முற்படலாம். ஒரு பாங்கு இந்தச் சூழ்நிலையில் மைய பாங்குக்குச் செக்கூரிட்டியை விற்க நினைத்தால் நஷ்டம் இன்றியமையாதது. ஆனால் பாங்குகள் பொதுவில் மைய பாங்கினுடைய கைக்கோளுக்கு ஏற்ப நடந்து வருமானால் அவசியமான போது உதவி கிடைக்கும். ஆகவே குறுங்காலக் கடன் தவிர வேறு வகையில் ஓரளவு கடன் தர அஞ்ச வேண்டியதில்லை.

வணிகக் கடன்களின் மற்றொரு சிறப்பான அம்சமாகக் குறிப்பிடப்படுவது அதன் சுய நிறைவேற்ற (self liquidating) சக்தி எனப்படுகிறது. இவ்வகைக் கடன் உற்பத்தித் தொழிலில் ஈடுபடுவதால், உற்பத்தி விற்பனையாகிக் கடன்தானே தீரும் என்று கூறுகின்றனர். உற்பத்தி செய்வோர் கடன் வாங்கின பணத்தை, பண்டங்களை முற்றுவிப்பதில் ஆண்டு, உற்பத்தி முடிந்ததும் விற்றுக் கடனைத் திருப்பிக் கொடுத்து விடமுடியும்.

இப்படியே மொத்த வியாபாரிகளும் பாங்கினிடம் கடன் வாங்கினால் திருப்பிக் கொடுத்து விடமுடியும். பண்ட இருப்பு வைப்பதற்காகக் கடன் வாங்கினாலும் இந்த வாதம் பொருந்தும். இங்கிலாந்தில் வணிக உண்டியல் (Commercial Bill) நீர்மை யுடையதாக மைய பாங்கு ஏற்பதற்குக் காரணம் அதன் சுய நிறைவேற்ற சக்தியே. நிலைமுதலுக்காக (Fixed Capital) வாங்கின கடனும் நாளடைவில் இப்படியே தானே தீர்த்துக் கொள்ளக் கூடியதாயினும் அது குறுங்காலத்தில் திரும்பி வராது.

இவ்வித வணிகக் கடன்கள் நிலச் சொத்து (real-estate) களுடன் ஒப்பிடப்பட்டு உயர்வு கூறப்படுகிறது. நிலச் சொத்துகளின் மேல் கடன் கொடுப்பது பணத்தை முடக்கி வைப்பதாகும். தொழில்களின் பாண்டுகளை வாங்குவதும் இம்முறையில் சரியன்று. இவைகளைத் தோள் மாற்றலாமே ஒழிய அவை தாமாகவே நிறைவேறும் தன்மை உடையன அல்ல. தவிர, எல்லா பாங்குகளும் ஒரே காலத்தில் விற்க முயன்றால் பாண்டுகளின் விலை வீழ்ந்து நஷ்டம் ஏற்படலாம். இந்த முறையில் பார்த்தால் அழைப்புக் கடன்கள் (Call Loans) கூடத் தாமே நிறைவேற்றிக் கொள்ளும் தன்மை உடையன அல்ல. ஒரு பாங்கு அழைப்புக் கடனைத் திருப்பிக் கேட்டபோது, கடனாளி மற்றொரு பாங்கினிடத்தில் வாங்கிக் கொடுக்க வேண்டி வருமே யொழிய, அழைப்புக் கடன் தானாகவே கடனை நிறைவேற்றும் சக்தியுடையது அன்று. இந்த வாதத்தின் முக்கியமான கருத்து என்னவெனில், வணிகக் கடன் விஷயத்தில் பாங்கு கொஞ்சம் பொறுத்திருந்தால் கடன் வாங்கிய காரியம் நிறைவேறித் தானாகவே ரொக்கம் வந்து சேரும் என்பதே. மற்ற வகை முதலீடுகளுக்கு இச்சிறப்பு இல்லையாம்.

இந்த வாதத்தை ஆராய வேண்டியிருக்கிறது. ஒரு தனி பாங்கைப் பற்றி மட்டும் கருதினால் அந்தப் பாங்கைப் பொறுத்த மட்டிலும் வர்த்தகக் கடன்கள் தாமாகவே திருப்பிக் கொடுக்கும் சக்தியை உண்டாக்குகின்றன என்பது உண்மை. ஆனால் பாங்குத் திட்டத்தைத் தொகுதியாக நினைத்துப் பார்ப்போ மானால் மற்றக் கடன்களுக்கும் இதற்கும் வேறுபாடு காண முடியாது. எந்தக் கடனும் தானே நிறைவேற்றும் சக்தி யுடையது அன்று. பண்ட இருப்பும் தானாகப் பணமாக மாறுவதில்லை. அது இன்னொரு கைக்கு மாறியே பணமாகிறது. அதை வாங்கினவன் வேறோர் இடத்தில் கடன் வாங்கி இருக்கலாம். பண்ட இருப்புக்காகக் கடன் வாங்குபவர்களும்

பாங்கு கேட்டபோது திருப்பிக் கொடுக்க முடியாத நிலையில் இருக்கிறார்கள் என்பது அனுபவம். மற்றொரு பாங்கு அவர் களுக்கு உதவி செய்தாலன்றி முதலில் கடன் தந்த பாங்குக்கு ரொக்கம் மீளாது. ஆகவே பாங்குத் திட்டத்தை முழுதும் எடுத்துக் கொண்டால் நீர்மைக்கும் (liquidity) கைம்மாறுதலுக் கும் (shiftability) வேறுபாடு காண முடியாது.[1]

மற்றொரு வாதமும் கூறப்படுவதுண்டு. அதாவது வணிக உண்டியல் பேரில் கடன் தந்தால் வணிக நிலை மாறுவதற்கேற்ப உண்டியல்களின் தொகை மாறிப் பணப் பெருக்கமும் சுருக்கமும் நிகழும் என்பது. இதனால் விலை மட்டம் தானாகவே சமநிலையில் இருக்கும் எனப்படுகிறது.

இந்த வாதத்தில் ஓரளவு உண்மையுண்டு என்பதை மறுக்க முடியாது. வணிகக் கடன் முதிரும்போது பண்டமும் அங்காடிக்கு வருமானால், பாங்குக் கடனால் பண வீக்கம் தோன்ற இடமிருக்காது. நுகர்வோர் கைக்குப் பண்டம் வந்ததும் புதிதாகத் தோன்றிய பாங்குப் பணம் பாங்குக்கே சென்று விடுகிறது. ஆனால் பாங்குகளின் வாணிகக் கடன்கள் தேவைக்குக் குறைவாகவோ அமிதமாகவோ இருக்கக்கூடும். எப்படி எனில், முதலாவதாக, கடன் செலுத்த வேண்டிய முதிர்வு நாளுக்குமுன் கடனை ஆண்ட பண்டம் விற்கப் படுமாயின், இப் பண்டம் கைக்கு வந்த ஒருவன் பாங்கில் ஈடு காட்டித் தானும் கடன் வாங்க முடியும். இப்படியே ஒரே பணத் தொகுதியின் மேல் இரண்டு, மூன்று கடன்கள் ஒரே சமயத்தில் இருக்கக்கூடும். முதல் கடன் வழியாகத் தோன்றிய பணம் தற்காலிகமாகச் செலாவணியை உயர்த்தும். இவ்விதமான பணத்தொகை உயர்வு, வீக்கத்துக்குக் காரணமாகும். இதற் கெதிராக, கடன் முதிர்வு தேதியில் பொருளைத் தக்க விலைக்கு விற்க முடியாமல் நஷ்டத்துக்கு விற்றுக் கடனைத் தர வேண்டிய தாயின், விலைகள் விழலாம். இரண்டாவது, கடன் கொடுக்கப் பட்ட நோக்கம் ஒன்றாயும், ஆளப்படும் விதம் வேறொன்றாயும் இருக்கலாம். பொருள் வசதியுடைய நிறுவனங்கள் தம் சொந்த முதலை நீண்ட கால முதலீட்டில் ஈடுபடுத்தி, பாங்கினிடம் நடை முதலுக்குக் கடன் வாங்கலாம். இக்கடன் வெளிக்கு வணிகக் கடன்; உண்மையில் நெடுங்காலக் கடன்.

நாற்பது ஆண்டுகளுக்கு முன் வணிகக் கடன் கொள்கை எதிர்ப்பின்றி இருந்தது. ஆனால் நாளடைவில் இதனுடைய குறைகள் தெளிவாயின. மைய பாங்குகளின் உதவி நிச்சயமாகக்

கிடைக்கும் நிலை வந்தபின் பாங்குகளுக்குக் கடன் முதிர்வுக் காலத்தைப் பற்றிய கவலை குறைந்து விட்டது. சமீப காலத்தில் அரசாங்கப் பாண்டுகளில் பாங்குகள் முதலிட ஆரம்பித்துள்ளன: இது சரியான போக்கு என்று இப்போது கருதப்படுகிறது. முன்னைவிட பாங்குகளுடைய நிலைபேறு (stability) இதனால் அதிகப்பட்டதாகக் கருதப்படுகிறது. பாங்கின் வைப்புகள் பெரு வர்த்தக நிலைக்கேற்ப, மந்தத்தில் சுருங்கியும், சுபிட்சத்தில் பெருகியும் வந்த நிலையில் வியாபாரச் சுழல் பாங்குத் திட்டத்தின் நடவடிக்கையால் உறுதிப்படுத்தப்பட்டது. இனி இப்படி நடவாது. பணத்தொகை வர்த்தகத்தோடு பிணைக்கப்படா விட்டால் பாங்குகள் பொருளாதாரச் சமநிலைக் கேட்டுக்குக் காரணமாக இருப்பது குறையும்.

முதலீடுகளிலும் கடன்களைப் போலச் சில ஆபத்துகள் உள்ளன. முதலீடு செய்யும்போது எதிர்காலப் போக்கை நம்பிச் செய்ய வேண்டியிருக்கிறது. அடுத்த ஐம்பது அறுபது ஆண்டுகளில் ஒரு தொழிலின் நிலையை முன்னோக்க வேண்டி யிருக்கிறது. பாண்டு முதிர்வதற்குள் நிறுவனம், தொழிலும் கூட, மறைந்து விடலாம். வியாபாரச் சுழல் நிகழும்போது பாண்டினுடைய மதிப்பு மாறிக்கொண்டேயிருக்கும். தவிர, வட்டி மாறுவது பாண்டின் மதிப்பைப் பாதிக்கும். ஒரு பாண்டின் மதிப்பு வட்டிக்கு எதிர் முறையில் மாறும். ஒரு பாண்டில் 60 ரூபாய் வருமானம் தருவதாக வைத்துக் கொண்டால், நிகழும் நீண்ட கால வட்டி வீதம் 4 சதவீத மாக இருந்தால், உடையவன் அதை 1500 ரூபாய்க்கு விற்கலாம். நீண்ட கால வட்டி 2 சதவீதமாகக் குறைந்தால் 60 ரூபாய் வருமானமுடைய இதே பாண்டினுடைய விலை 3000 ரூபாயாக ஏறும். வட்டி வீதம் 8 சதவீதமானால் பாண்டின் விலை 750 ரூபாயாகக் குறைந்து விடும்.

முதிர்வுக் காலம் சிறிதாயிருந்தால் வட்டி பேரளவில் மாறி னாலும் பாண்டின் மதிப்பு மாறுதல் அற்பமாக இருக்கும். உண்மையில் சிறு காலத்தில் வட்டி மாறுவது மிகக் குறைவு. 90 நாட்களில் 1% வட்டி 2% ஆகலாம்; 4 சதவீதம் 8 சதவீதமாகாது. வட்டி மாறுவதற்குள் கடன் கெடு அண்மிவிடும். ஆகவே ரொக்கமாகும் காலம் அண்மையிலிருப்பதால் வட்டி இரண்டு மூன்று மடங்கானாலும், ஆயிரம் ரூபாய் முதலீட்டில், வட்டி ஏறுவதால் உண்டாகும் நஷ்டம் நாலைந்து ரூபாய்க்கு மேல் இருக்காது. ஆனால் நீண்டகால முதலீடுகளின் மதிப்பிழப்பு பேரளவாக இருக்கும்.

நீண்ட கால பாண்டுகளுக்கு இரண்டுவித ஆபத்துகள் உண்டு. ஒன்று வட்டி வீதத்தினால் மதிப்பு இறங்குவது. மற்றொன்று கடனாளி நிலை மாறுவது. ஆகவே பாண்டுகளுடைய விலை பேரளவில் மாறக்கூடும். உயர்ந்த ரகப் பாண்டுகளை வாங்கினால் கடன்காரர் நிலை மாறுவது காரணமாக ஏற்படும் ஆபத்துகளைக் குறைக்கலாம். ஆனால் வட்டி மாறுதலால் உண்டாகும் ஆபத்தைத் தவிர்க்க முடியாது. ஆயினும் பாங்குகள் முதலீடு செய்யாமல் இருக்க முடியாது. ஏனெனில் தம்மிடம் கடன் வாங்குவது குறையும்போது, வருமானத்துக்காக கையிலிருக்கும் பணத்தைப் பாண்டுகளில் முதலீடு செய்ய வேண்டி வரும். ஆனால் வாடிக்கை குறையும் காலத்தில் வட்டி வீதம் குறைவாகவும், ஆகவே பாண்டு விலைகள் ஏற்றமாகவும் இருக்கும். பின்னர் வாடிக்கைக்காரர்கள் மறுபடியும் கடன் வாங்க முன் வந்தால், பாங்குகள் தம்மிடமுள்ள செக்யூரிட்டிகளை விற்க வேண்டியும் வரும். அப்போது வட்டி ஏறுவதாலும் எல்லா பாங்குகளும் ஒரே சமயத்தில் விற்பதாலும் பாண்டின் அங்காடி விலை விழும். இப்படிப்பட்ட விலை வீழ்ச்சி முதலீட்டில் இதுவரை சம்பாதித்த வருமானத்தையே விழுங்கி விடலாம். முதல் நஷ்டத்தையும் கூட உண்டாக்கலாம்.

சில நாடுகளில் பாங்கின் முதலீடு பணத்துறை அதிகாரிகளின் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தப்படுவதுண்டு. அமெரிக்காவில் தேசிய பாங்குகளும் (National Banks), மாநில பாங்குகளும் (State Banks) இவ்விதக் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன. இவை பொதுவாகத் தொழிற் பங்கு வாங்குவது தடுக்கப்பட்டுள்ளது. இரண்டு வகைப் பாங்குகளும் நிலச் சொத்துகளில் முதலீடு செய்வது தடுக்கப்பட்டுள்ளது. இந்தியாவிலும் மற்ற எல்லா நாடுகளிலும் பாங்குகள் அரசாங்கப் பாண்டுகளை வாங்க விரும்புகின்றன.

### 4. சொத்து இனங்களின் முக்கியத்துவம்

கடன் வகைகள், முதிர்வுக் காலங்கள், ஈடு வகைகள், வாங்கும் காரணங்கள் எல்லாம் பாங்குகளின் நடவடிக்கைகளை அறிவதற்கு முக்கியமானவை. தனியாருக்குக் கடன் கொடுப்பது மூலம் பணப் பெருக்கம் ஏற்படுகிறது. தனியாளின் நாணயம் நேராகச் செல்லுபடியாகாது. அவர்களது நாணயத்தைப் பாங்கு ஏற்றுக் கொண்டு, தன் நாணயத்தைப் பணமாகச் செல்லுபடியாகச் செய்கிறது. கடன்கள் எத்தனை எத்தனை விதமோ அத்தனை வகைகளிலும் பணச் செலாவணி பெருக வழியேற்படுகிற

தென்பதைக் கடன் வகைகள் காட்டுகின்றன. பாங்குகள் கடன் மூலம் பணத்தைத் தோற்றுவிப்பதும் அழிப்பதும் எந்த ஒரு குறிப்பிட்ட பகுதியிலன்று என்பதும், பல்வேறு பகுதிகளுக்குள்ளே பாங்குகள் தம் நடவடிக்கைகளை வட்டி நிலைக்கேற்ப மாற்றிக் கொள்கின்றன என்பதும் புலனாகின்றன. கடன் அங்காடியில் ஒவ்வொரு பகுதியிலும், வணிக பாங்கின் நடவடிக்கையே அப்பகுதியில் ஆளப்படும் கடன் கருவிகளின் (Gredit Instruments) விற்பனை, விலை, விளைவு ஆகியவற்றை நிர்ணயிக்கும் முக்கிய காரணி. ஆனால் அது புகுத்தும் புதுப் பணம் அவ்வப்பகுதியில்தான் ஆளப்படும் என்று நினைக்க முடியாது. இப்படி நினைத்தே சிலர் குறிப்பிட்ட வகைப் பாங்குக் கடன்களைக் கட்டுப்படுத்தினால் அவ்வகையில் பணப் பெருக்கத்தைத் தடுத்துவிடலாம் என்று நினைக்கின்றனர். இது தவறு. ஏன்?

(1) அரசாங்கப் பத்திரங்களை ஒரு பாங்கு வாங்குவதாக வைத்துக் கொள்ளுவோம். இப்பத்திரங்களை விற்றவர்கள் பல வழிகளில் பணத்தைச் செலவு செய்யலாம். இவ்வழிகளும் அரசாங்கத்தின் செலவு வழிகளும் வேறுபடும். இப்படியே வேறு வகைச் செக்கூரிட்டிகளை வாங்கும்போதும். (2) பாங்கிடம் கடன் வாங்குவோர், தாம் ஈடு காட்டும் பொருள்களிலே தான் பணத்தைச் செலவு செய்வார்கள் என்று நினைப்பதற்கில்லை. நிலத்தை ஈடுகாட்டிப் பெறும் பணத்தை வியாபாரத்துக்கு ஆளலாம். ஆகவே ஈடு வகைக்கும், பண ஆட்சி வகைக்கும் நேரடியான தொடர்பில்லை. (3) கடன் வாங்கும்போது கூறிய காரணம் ஒன்றாக, செலவு செய்யப்படும் காரணம் வேறாக இருக்கலாம். காட்டிய காரணத்துக்கே ஆளப்படுவதாகத் தோன்றினாலும், கடன் கிடைத்த காரணத்தால் கையிலிருந்த சொந்தப் பணத்தை (பாங்குப் பணம் கிடைக்காவிட்டால் ஆளலாம் என்று வைத்திருந்த பணத்தை) வேறு வழிகளில் செலவு செய்யலாம். உதாரணமாக, பொறி வாங்கத் தன் சொந்தப் பணத்தை ஆள வேண்டியிருந்த நிறுவனம், கடன் பெற்ற காரணத்தால் அப்பணத்தை வேறு வழியில் ஆளலாம். (4) தன்னிடம் கடன் வாங்குபவன் செலவு வகையைப் பாங்கு கட்டுப்படுத்தினாலும், அவன் செலவு செய்த பின்பு பணம் எத்தனையோ வகையில் பிறரால் ஆளப்படலாம்.

இப்படிப்பட்ட விஷயங்கள் எப்படி முக்கியமானவை என்பது பின்னர் நாம் கடன் வகைக் கட்டுப்பாடு (credit controi) முறைகளை ஆயும்போது விளங்கும்.

# 23. பாங்குகளின் பொறுப்புகள்

பொறுப்புகளில் முக்கியமான இனங்கள் வைப்புகளும், மூலதனமும், ரிசர்வும் ஆகும்.

## 1. வைப்புக்கள்

பாங்குகளுடைய வைப்புகளில் இரண்டு முக்கிய வகைகளைக் குறிப்பிடலாம்:—

(1) தேவை வைப்புகள் (Demand Deposits).

(2) தவணை வைப்புகள் (Time Deposits).

இந்த இரண்டு வகைகளில் முக்கியமானவை தேவை வைப்புகளே. இவைகளின் தொகை மாறுதலே பண அளிப்பின் மாறுதலுக்குக் காரணமாகும். பாங்குத் திட்டம் கடன்களையும் முதலீடுகளையும் அதிகப்படுத்தினால் தேவை வைப்புகள் அதிகமாகின்றன. கடன்களையும் முதலீட்டையும் குறைத்தால் தேவை வைப்புகள் குறையும்.

### (அ) தவணை வைப்பு

முதலில் தவணை வைப்புகளைப் (Time Deposits) பற்றிப் பார்ப்போம். இவை குறிப்பிட்ட காலத்துக்கு எடுப்பதில்லை என்றும், எடுப்பதானால் முன்னறிவிப்பு (notice) தருவதாகவும் ஒப்பி வைப்பு செய்யப்படுபவை. ஆனால் நடைமுறையில் பாங்குகள் முன்னறிவிப்பை வற்புறுத்தா, கேட்டபோது கொடுக்கும். ஏனென்றால் கேட்டபோது கொடுப்பதனால் பாங்கிடம் நம்பிக்கை உறுதிப்படும். நெருக்கடி காலத்தில் கூட பாங்குகள் மறுப்பதில்லை. தவணைவைப்புகள் குறிப்பிட்ட காலத்துக்குத் தம்மிடம் இருக்கும் என்கிற ஒப்பந்தம் உடையனவாகையால் பாங்குகள் அவைகளை முதலீட்டில் ஆனும் தவணை,

வைப்புகளைக் கவர்வதற்காகப் பாங்குகள் தவணைக்கேற்ப வட்டி கொடுக்கின்றன.

தவணை வைப்புக்கும் தேவை வைப்புக்கும் உள்ள வேறுபாட்டை அதிகமாக வற்புறுத்தக்கூடாது. தேவை வைப்புக் கணக்கில் தொகை அமிதமாக இருக்கும்போது, அதற்குடையவன் தனக்குடனே வேண்டாத எச்சத்தைத் தவணை வைப்பாக மாற்றிக் கொள்ளலாம், ரொக்கம் வேண்டும்போது தவணை வைப்பைத் தேவை வைப்பாக மாற்றிக் கொள்ளலாம். ஆனால் மக்கள் வேறுபாடு செய்கின்றனரென்பது உண்மை. ஒன்றை வசதிக்காக வைத்துள்ளனர்; மற்றதை முதலீடு செய்யும் வரை சேர்த்து வைக்கின்றனர்.

தவணை வைப்புகளைப் பணமாகக் கருதக்கூடுமா என்பதைப் பற்றி ஒரு பெரிய விவாதம் உண்டு. தவணை வைப்புகள் முதலீடு செய்ய ஆளப்பட்டால் அப்போது பணமாகக் கருதக் கூடாது என்றும், வணிக (Commercial) பேரங்களில் பயன்படுத்தப்பட்டால் மட்டும் (தேவை வைப்பைப்போல் பயன்படுவதால்) பணமாகக் கருத வேண்டும் என்றும் சிலர் கூறுகின்றனர். இது சரியன்று. இது முன் கூறிய வணிகக் கடன் கோட்பாடு (Commercial Loan Theory) அடிப்படையில் எழும் வாதம். முதலாவது, தேவை வைப்புகள் முழுதும் ரொக்கமாகக் கொடுக்க வேண்டியிருக்குமாதலால் பாங்குகள் வணிகக் கடன்களே (commercial loans) தரலாமென்ற சித்தாந்தம் தவறென்று முன்னரே விளக்கப்பட்டது. தவிர இந்த வாதத்தின்படிப் பார்த்தால், தேவை வைப்புக்கு எதிராக முதலீடு இருந்தால், அப்போது தேவை வைப்புகள் பணமாகக் கருதப்படா. இரண்டாவது, பாங்குகள் தம்மிடம் வந்த வைப்புகளையே கடனாகக் கொடுக்கின்றன என்ற கொள்கையின் அடிப்படையில் இந்த வாதம் பேசுகிறது. முன்னர்ப் பாங்கு கடன் கொடுப்பது தன்னுடைய நாணயத்தையே யொழிய வைப்புகளை அல்ல என்பது விளக்கப்பட்டது.

இருவகை வைப்புகளும் ரொக்க ரிசர்வை அதிகப்படுத்தி, பாங்கின் கடன் கொடுக்கும் சக்தியை அதிகப்படுத்தலாம். இதனால் பாங்கு மேலும் கடன் கொடுக்குமானால், தேவை வைப்புத் தோன்றி, செக்கு மூலம் பணமாக ஆளப்படும். பாங்குப் பொறுப்பு பணமா அல்லவா என்பதைப் பாங்கினிடமுள்ள சொத்துக்களின் அடிப்படையில் தீர்மானிப்பது இதுவரை பணத்துக்குத் தந்து வந்துள்ள இலக்கணத்தைப் பொய்ப்பதாகும்.

வைப்பின் ஆட்சிக் காலத்தைக் கொண்டு அது பணமா அல்லவா என்று தீர்மானிப்பதும் சாத்தியமன்று. தேவை வைப்புத் தேங்கி இருந்தால் அது பணமன்று என முடியுமா? ஆட்சி புதுப் பணத்தின் புழக்க வேகத்தை (velocity of circulation) நிர்ணயிக்குமே ஒழியப் பணத்தொகையை நிர்ணயிக்காது. தவணை வைப்புக்கள் அடிக்கடி புரட்டப்படுமானால், இப்புரட்டு காரணமாகத் தவணை வைப்பைப் பணமாகக் கருதலாமா?

இந்தப் பிரச்சினைக்கு முடிவு என்னவெனில், இதுவரை பணத்துக்குக் கொடுத்து வந்துள்ள இலக்கணப்படி, பொருள்களை வாங்குவதற்கு எவைகள் ஆளப்படுகின்றனவோ அவையனைத்தையும் பணமாகக் கருதி, தவணை வைப்புகளைப் (Time Deposits) பணமல்ல என்று விட்டுவிட வேண்டியது தான். இவை நேரடியாகப் பணமாக மாட்டா. இவைகளைப் பணமாக அல்லது தேவை வைப்பாக மாற்றியே செலவு செய்யக் கூடும். இந்த வகையில் தவணை வைப்புகளும், பாண்டுகளும், புரோநோட்டுகளும் ஒன்றே. இவை எல்லாம் செலாவணியாகக் கருதப்பட மாட்டா. பணத் தொகைக்கும் நாட்டு வருமானம் அல்லது விலை மட்டத்துக்கும் உள்ள தொடர்பை நாம் ஆராயப் புகும்போது வைப்புகளையும் செலாவணியையும் (currency) மட்டுமே பணமாகக் கருதவேண்டும். ஆயினும் சில காரியங்களுக்கு வேறுபாட்டைப் புறக்கணித்துத் தவணை வைப்புகளையும் பணமாகப் பேசுவது வசதியாக இருக்கலாம். மக்களின் செலவு சக்தியைப் பற்றி ஆராயும்போது தேவை வைப்போடு தவணை வைப்பில் ஒரு பகுதியையும் எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கும். ஏனென்றால் அதற்கு உரியவர் அவைகளைப் பணமாகக் கருதக் கூடும். அவர்கள் செய்யும் செலவுத் தீர்மானங்கள் தவணை வைப்பையும் பொறுத்திருக்கும்.

### (ஆ) தேவை வைப்புகள் (Demand Deposits)

தேவை வைப்புகள் செக்குகளையும் ரொக்கத்தையும் பாங்கிலிடுவது மூலம் தோன்றுபவையாக நினைக்கக்கூடாது. நாட்டின் வைப்பில் பெரும்பான்மையும் பாங்கு கடன் தருவது மூலமாகத் தோன்றும் இரண்டாம் நிலை வைப்பேயாகும். ஆனால் பாங்கு முதனிலை (primary) ரொக்க வைப்புகளைப் பெற்றால் தான் இப்படி. இரண்டாம் நிலை (secondary or derivative) வைப்புகள் தோன்ற முடியும். ஏனெனில் இப்புது வைப்புகளுக்கு ரொக்க ரிசர்வு அவசியம்.

கடன் வழித் தோன்றும் வைப்புகள் பாங்கினுடைய எச்ச ரொக்க ரிசர்வை (excess cash reserve) குறைக்கின்றன, இரண்டு வகை வைப்புகளும் பாங்கு வைத்திருக்கவேண்டிய ரொக்கத் தொகையை அதிகப்படுத்தும். முதனிலை வைப்பு (Poimary Deposit), வைப்பு வந்த அளவுக்கு ரொக்க ரிசர்வையும் ஏற்றுகிறது. வைப்புயர்ந்த அளவுக்கு ரொக்க ரிசர்வு வேண்டியதில்லை. குறிப்பிட்ட ஒரு சதவீதமே போது மாதலால் எச்ச ரிசர்வுண்டாகிக் கடன் வழி வைப்பை உற்பத்தி செய்ய வாய்ப்புண்டாகிறது. இப்படி வைப்பு அதிகப்படுவது நாட்டின் பண அளிப்பை அதிகப்படுத்துகிறது. ஆனால் ஒரு பாங்கினுடைய முதனிலை வைப்புகள் அதிகப்பட்டால் நாட்டினுடைய பணத் தொகை அதிகப்படுத்தப்பட்டதெனக் கூற முடியாது. ஏனென்றால் ரொக்கப் பணம் வைப்புப் பணமாக மாறியதே தவிர, பணத்தொகை மாறாது. ரொக்கப் பணம் முடங்கி, பாங்குப் பணம் வெளி வருகிறது. ஆனால் கடன் வழி வைப்பு ஒரு பாங்கால் உற்பத்தி செய்யப்பட்டு செலவு செய்யப்படும் போது, அது வேறொரு பாங்குக்கு முதனிலை வைப்பாகி, மேலும் கடன் வழி வைப்பைத் தோற்றுவிக்கிறது. இப்படிப் பெருகி முடிவில் ஏற்கனவே செலாவணியில் இருக்கும் வைப்புகளோடு கலந்து விடுகிறது.

முன்னர் நாம் பாங்குப் பணம் எப்படிப் பெருக்கப்படுகிறது அல்லது சுருக்கப்படுகிறது என்று விளக்கினோம். பாங்கு சொத்தை வாங்குவது மூலம் [தன்னுடைய கடனையும் முதலீட்டையும் அதிகப்படுத்தினால்] வைப்பு அதிகப்படும். ஆகவே வைப்புப் பண உற்பத்தி, மக்கள் அதிக ரொக்கம் விரும்புகிறார்களா, இல்லையா என்பதைப் பொறுத்த தன்று; பாங்கின் நடவடிக்கையைப் பொறுத்தது. பாங்குத் திட்டம் வெளியிடும் அதிகப்படி பணத்தையும் மக்கள் ஏற்க வேண்டியிருக்கிறது. வேண்டாத பணத்தைச் சேமிப்பதா, வேறு எந்த உருவில் பணத்தை வைத்திருப்பது என்பதையே மக்கள் தீர்மானிக்கக்கூடும்.

பாங்குகள் தங்கள் நடவடிக்கைகள் மூலம் வைப்புகளை அதிகப்படுத்துவது தவிர, வேறு காரணங்களாலும் பாங்குகளுடைய முயற்சியின்றியே பாங்குப் பணம் அதிகரிக்கலாம். அரசாங்க நடவடிக்கை மக்கள் வைப்புகளை மாற்றக்கூடும். புழக்கத்தில் இருந்த பணம் பாங்குத் திட்டத்துக்கு வருவதும், போவதும், வைப்பையும் ரொக்க ரிசர்வையும் பாதிக்கும்.

மேற்சொன்ன காரணங்களுக்கு எதிரிடையான காரணங்களால் பாங்குகளில் வைப்புகள் குறையலாம். அரசாங்கம் வரி வசூலித்து அல்லது மக்களிடம் கடன் வாங்கி, பாங்குகள் வைத்துள்ள பாண்டுகளை வாங்கினால், பொது மக்களின் வைப்பு வரி செலுத்துவது மூலம் குறையும்.

குறுங் காலத்தில் தொழில் நிலைக்கேற்ப வைப்புகளின் தொகை மாறுவதன்னியில், பாங்குகள் தம்மிடமுள்ள வைப்புகள் நெடுங்காலமாகத் தொடர்ந்து குறைந்து செல்லவோ ஏறிச் செல்லவோ காணலாம். ஒரு வாரத்தில் வைப்பு (அதோடு ரொக்க ரிசர்வு) குறைந்தால் அது அமிதமாகக் கடன் தந்ததின் விளைவெனக் கருதி பாங்கு உடனே நிலையைச் சீர்திருத்தும். இது போலவே தன் வைப்புகளும் (ரிசர்வுகளும்) தொடர்ந்து பேரளவில் உயர்ந்தால் தான் மற்ற பாங்குகளைப் போல் கடன் கொடுக்கவில்லை என்றறிந்து கடனை அதிகரிக்கும். ஆனால் வைப்பின் அளவை மாற்றும் சக்திக்கு ஓர் எல்லை உண்டு. அதிகமாகக் கடன் கொடுத்து விட்டதாக எண்ணிப் பாங்கு கடன் கொடுக்கத் தயங்கி இழுத்துப் பிடித்தால் வாடிக்கைக்காரர்கள் வேறு பாங்குக்குப் போய்விடுவார்கள். தன் வைப்புகள் குறைந்து கொண்டே போகும்போது அதற்குக் காரணம் தன் வாடிக்கைக் காரரின் பொருளாதார நிலை மாறுதலானால் அதைத் தடுக்க முடியாது.

## (இ) இடப்பெயர்ச்சி

பாங்கு வைப்புகள் ஒரு பிரதேசத்தில் இருந்து மற்றொரு பிரதேசத்திற்கு மாறுவதும் கூடும். இப்படிப் பெயர்வது பருவ காலப் பெயர்ச்சியாக இருக்கலாம். உதாரணமாக விவசாயப் பிரதேசங்களில் குடியானவர்கள் விளைவை விற்கும்போது நகரத்திலிருந்து வைப்பு நாட்டுப் புறத்திற்குப் பெயரும். அவர்கள் வைப்பிலிருந்து செலவு செய்யும்போது நகரத்துக்குப் பெயரும்.

வைப்புகள் சமூகத்தின் ஒரு தொகுதியிலிருந்து வேறு தொகுதிக்கு மாறலாம். தனி நபர்கள் வைப்பு (individual deposits), தொழிலகங்களின் வைப்பு என்று பிரித்துப் பார்த்தால் இவ்விரு தொகுதிகளுக்கிடையில் பெயர்ச்சி காணப் படுகிறது. இவ்விரண்டின் வைப்பு வளர்ச்சியும் காலத்துக்குக் காலம் வேறுபடக் காண்கிறோம். நுகர்ச்சிப் பண்டங்கள் கிடைக்காத யுத்த காலத்தில் தனி நபர் வைப்பு உயரலாம்.

பாங்குகள் புது வாடிக்கைக்காரர்களைக் கவர்வதற்கு அநேக நடவடிக்கைகள் எடுத்துக்கொள்கின்றன. வைப்பாளிகளுக்கு வசதியான இடத்தில் தம் தொழிலகங்களை நிறுவுகின்றன. விளம்பரங்கள் செய்கின்றன. பாங்குகளுக்குள் இப்படிப் போட்டி நிகழும்போது அவைகளின் செலவுகள் அதிகப்படும். போட்டியிட்டுக்கொண்டு தேவை வைப்புக்கும் வட்டி கொடுக்கலாம். பாங்கு மக்களுக்கு இலவசமாகப் பல பணிகளைப் புரியலாம். இதனால் பாங்கில் கணக்கு வைப்பவர்களின் எண்ணிக்கை ஏராளமாகலாம். ஆனால் சிறு லேவாதேவிக்காரர்களைக் கவர்வது இலாபகரமானது அன்று. ஒருவனின் கணக்கு வைப்பது சம்பந்தமாகப் பாங்கு செய்ய வேண்டியிருக்கிற வேலைகள் அநேகம். கணக்கைச் சரியாக எழுதுவது, மாதாந்தர இருப்பு நிலை அறிக்கைகளை அனுப்புவது முதலியன வேலைகளாகும். அதோடு வட்டியும் கொடுக்க வேண்டியதாயிருந்தால் பாங்கினுடைய செலவுகள் அதிகமாகும். ஆகவே பாங்குகள் பணிக் கட்டணங்கள் வசூலிக்கின்றன. வாடிக்கைக்காரர்களுடைய சராசரி இருப்பு மொத்தத்தில் எவ்வளவு, குறைந்த பட்ச இருப்பு எவ்வளவு, எவ்வளவு செக்குகள் வருகின்றன என்பதை அனுசரித்துக் கட்டணம் விதிக்கிறார்கள். கட்டணம் விதிப்பதால் அவசியமானவர்கள்தான் கணக்கை வைப்பார்கள். இதனால் வேலை குறைந்து, பாங்குகளுடைய திறமையும் அதிகரிக்கும்.

### (ஈ) வைப்பு இன்சூரன்சு (Deposit Insurance)

பாங்குகள் அடிக்கடி முறியும் நாடுகளில் வைப்பாளிகளுக்கு நம்பிக்கையூட்டும்வண்ணம் இன்சூரன்சு முறை ஆளப்படுகிறது. 1829இல் நியூயார்க்கில் வைப்புகள் இன்சூரன்சு செய்யப்பட்டன. ஆனால் சில ஆண்டுகளுக்குப் பின், இன்சூரன்சு வசதி நோட்டுகளுக்கு மட்டுமென்று வரையறை செய்யப்பட்டது. இந்நிலை சுமார் 100 ஆண்டுகளுக்கு இருந்து வந்தது. தேவை வைப்பு முறை வளர்ந்ததும், தனி பாங்கு முறையின் (Unit Bank System) விளைவாக அநேக பாங்குகள் முறிந்ததும், பாங்கு வைப்புகளை இன்சூரன்சு செய்வது பற்றி யோசிக்கப்பட்டது. இந்த நூற்றாண்டின் துவக்கத்தில் அநேக மாநிலங்களில் வைப்பு இன்சூரன்சுத் திட்டங்கள் தோன்றின. ஆனால் அவை வெற்றிகரமாக நடைபெறவில்லை. திட்டத்தில் மாநில பாங்குகள் மட்டுமே இடம் பெற்றன. இவைகளில் பலவீனமானவை பல, நிலையை ஆராயாது சேர்க்கப்பட்டு விட்டன. சேர்ந்த பாங்குகளில் துறை வேறுபாடும் (diversification) இல்லை.

1930-32இல், அநேக பாங்குகள் முறிந்தன. அதனுலேற்பட்ட பெரிய அதிர்ச்சியின் காரணமாகப் பாங்குகளிடத்தில் நம்பிக்கை வர வேண்டுமானுல் பாங்குத் திட்டத்தில் ஒரு புரட்சிகரமான சீர்திருத்தம் வேண்டும் அல்லது திட்டத்தை அங்குமிங்கும் திருத்தி வைப்புகளுக்கு அரசாங்க உத்தரவாதம் கொடுக்கவேண்டும் என்று கூறப்பட்டது. முடிவில் 1933இல் பெடரல் வைப்பு இன்சூரன்சுக் கார்ப்பரேஷன் (Federal Deposit Insurance Corporation) நிறுவப்பட்டது. அது ஓரளவுக்கு (1935இல் ஆளொன்றுக்கு 2500 டாலர்; 1950இல் 10,000 டாலர் வரைக்கும்) இன்சூரன்சு செய்ய முன் வந்தது. 1954 இல் மொத்த வைப்புகளில் பாதிதான் இன்சூரன்சு செய்யப்பட்டிருந்தபோதிலும், வைப்பாளிகளில் 98 சதவீதம் இன்சூரன்சு பாதுகாப்புப் பெற்றனர். சிறு நிறுவனங்கள் தவிர மற்றவை திட்டத்தில் இடம் பெற்றன. கார்ப்பரேஷனின் மூலதனம் ஆரம்பத்தில் அமெரிக்கக் கருவூலத்தாலும் பெடரல் ரிசர்வ் பாங்குகளாலும் தரப்பட்டது. பின்னர்க் கார்ப்பரேஷன், கருவூலம் கொடுத்த ஆரம்ப முதலைத் திருப்பிக் கொடுத்து விட்டது. இப்போது முதலீட்டிலிருந்து வரும் வருமானத்தையும், அங்க பாங்குகளின் மேல் தீர்வையையும் (Assessment) கடன் வாங்கும் உரிமையையும் ஆண்டு பணியாற்றுகின்றது. ஆதாயம் அரசாங்கப் பத்திரங்களில் முதலீடு செய்யப்படுகிறது. முக்கிய வருமானம் இன்சூரன்சு செய்யப்பட்ட பாங்குகளின் வைப்பின் மேல் 1/12 of 1% தீர்வை தான்.

இன்சூரன்சு கட்டணம் எவ்வளவு என்பது பெரிய பிரச்சினையாக இருந்தது. சில பெரிய நகர பாங்குகள் (பலமான நிறுவனங்களாகையால்) தங்களுக்கு இன்சூரன்சு காப்பு அவசியம் இல்லையாதலால் தாங்கள் குறைந்த கட்டணம் செலுத்த வேண்டும் என்றன. இன்சூரன்சு காப்பு சில ஆயிரம் டாலருக்கு மட்டுமாகையால், தங்களுடைய மொத்த வைப்புகளில் ஒரு சிறு பகுதியே இன்சூரன்சு காப்பைப் பெறுகின்றதாகையால், தங்கள் மொத்த வைப்பின் பேரில் கட்டணம் கேட்பது சரி அல்ல என்றன. ஆனுல் முதல் வாதம் சரி அன்று. சிறு பாங்குகள் தாம் ஆபத்துக்குள்ளாகும் என்பதில்லை. இரண்டாவது வாதத்தைப் பொறுத்தமட்டில், தேவை வைப்புக்கு வட்டி தர வேண்டியதில்லையாதலால் இன்சூரன்சு கட்டணப் பளுவை பாங்குகள் எளிதில் தாங்கக் கூடும். நகர பாங்குகளிடம் ஏராளமான பாங்கிடை இருப்புகள் (Inter-Bank Deposits) இருந்ததால் இவைகளுக்கு வட்டி கூடாது என்ற தடை அவைகளுக்கு ஆதாயமானது. தவிர,

இன்சூரன்சு செய்யப்பட்ட வைப்பு அளவுக்குத்தான் கட்டணம் செலுத்துவதாயின் சிறு பாங்குகள் இன்சூரன்சு திட்டத்தால் பயன்பட முடியாது.

பின்னர்ப் பாங்குகள், கட்டணங்களைக் குறைக்க வேண்டுமென்று வாதிட்டன. கார்ப்பரேஷன் ஏராளமான உபரியைக் (surplus) குவித்து வந்தது. இவ்விதமான உபரியை வளர்ப்பதை விடக் கட்டணத்தைக் குறைக்கலாம் எனப்பட்டது. 1950 இல் கார்ப்பரேஷன் பழைய (1/12 of 1%) கட்டண வீதத்தைக் குறைப்பது முடியாதென்றும், சென்ற ஆண்டுத் தீர்வையில் கார்ப்பரேஷனின் செலவையும் நஷ்டத்தையும் கழித்து மீதியில் 60%-ஐ பாங்குகளுக்கு வரவு வைக்க வேண்டுமென்றும் காங்கிரசு முடிவு செய்தது. இதனால் பாங்குகளுடைய கட்டணப் பளு பாதியாகி விட்டது.

பாங்குகளுடைய நடவடிக்கைகளைக் கவனித்து ஆராய்ந்து திருத்த முறைகளைக் கூறி, கார்ப்பரேஷன் பாங்குகளின் தரத்தை உயர்த்தியுள்ளது. முறை என்னவெனில், முதலில் பாங்குகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரிகளுக்குக் குறிப்பிட்ட பாங்கின் திருப்தியற்ற நிலையைக் கார்ப்பரேஷன் அறிவுறுத்தும். பாங்கு உடனே வேண்டிய நடவடிக்கை எடுக்காவிடில் பாங்கினுடைய இன்சூரன்சு ரத்து செய்யப்படும். இப்படிச் செய்தால் தேசிய பாங்கு தன்னுடைய சாசனத்தை (Charter) இழக்கும். பெடரல் ரிசர்வ் திட்டத்திலிருந்து வெளியேற வேண்டிவரும். தவிர, மக்களுடைய நம்பிக்கையும் அந்தப் பாங்கில் குறைந்து முறியவும் கூடும்.

ஒழுங்கான நிலையில் இல்லாத பாங்கை எடுத்துக் கொண்டு அதனைச் சுருட்ட நடவடிக்கை (liquidation) எடுக்கலாம், அல்லது கடன் தந்து உதவி செய்து பார்க்கலாம். ஆனால் 1944-லிருந்து கார்ப்பரேஷன் இப்படிச் செய்யாமல் பலவீன பாங்கைப் பலமான பாங்கோடு ஐக்கியம் செய்யும் முறையை ஆண்டு வந்துள்ளது. சுருட்டுவதை (liquidation) விட இது சிறந்த முறை. சுருட்டுச் செலவு தவிர்க்கப்படுவதால் கார்ப்பரேஷனின் நஷ்டம் குறைகிறது. வைப்பாளிகளின் மொத்த வைப்பு புது நிறுவனத்துக்கு மாற்றப்படுவதால் சிறு வைப்பாளிகளும் பெரிய வைப்பாளிகளும் எல்லோரும் பாதுகாக்கப்படுகின்றனர்.

கார்ப்பரேஷனின் பணியை இன்னும் மதிப்பிடக் கூட வில்லை. இதுவரையில் நடந்ததைக் கொண்டு பாங்குகள் எல்லாம் இனி

ஆபத்துக்கு உட்படா என்றுவது, கார்ப்பரேஷன் பாங்கு முறிவுகளைத் தடுக்க முடியும் என்றுவது கூற முடியாது. கார்ப்பரேஷன் பேரளவில் பாங்குகள் முறிந்த காலத்தில் தோன்றியது. பலவீன பாங்குகள் மறைந்து போய்விட்டன. பலமான பாங்குகளே இன்று தங்கியிருப்பதால் இன்றைய முறிவுக்குறைவுக்குக் காரணம் சுபிட்சமா, கார்ப்பரேஷனு என்று கூறமுடியவில்லை. கார்ப்பரேஷன் தோன்றிய நாளாக நாட்டின் பொருளாதார நிலையும் மிகவும் செழிப்பாக இருந்து வந்திருக்கிறது. ஆயினும் கார்ப்பரேஷனும் பாங்குக் கட்டுப்பாடு அதிகாரிகளும் பாங்கு நடவடிக்கைகளைத் திருத்தி வருவார்களாறுல் முன்போல் பாங்குகள் பெரிய குழப்பத்தில் விழும் என்று நினைப்பதற்கு இல்லை. வைப்புக்கான எல்லாம் இன்சூரன்சு செய்யப்பட்டிருக்கின்றன என்கிற நம்பிக்கை இருப்பதால் பாங்கு வைப்பை எல்லோரும் மீட்கும் 'நெருக்'கடி இனித் தோன்றுது என்று நினைக்கலாம். அவசியமானுல் கார்ப்பரேஷனின் கடன் வாங்கும் அதிகாரத்தைக் காங்கிரஸ் அதிகப்படுத்தக்கூடும். பின்னர் இந்திய இன்சூரன்சுத் திட்டத்தைப்பற்றி விளக்கப்படும்.

## 2. மூலதனமும் ரிசர்வும்

எந்த நிறுவனத்திலும் முதல் கணக்கிருப்பு இருவகையில் பயன்படுகிறது. மூலதனத்தைத் தந்த முதலாளிகள் தொழிலின் இலாப நஷ்டத்துக்குரியவராகையினுல், தம் முதலுக்கு நஷ்ட மேற்படாமல் தொழிலைநடத்த இம்மூலதனம் தூண்டுகிறது. இரண்டாவது, அயலாருக்கு முலதனம் ஒரு காப்பாக உள்ளது. நிறுவனத்தினிடமிருந்து வரவு பெற வேண்டியவர்கள் ஓரளவு மூலதனத்தை நம்பி இருக்கிறுர்கள். ஆனுல் மூலதனம் நஷ்டத்தை ஈடுசெய்யும் ஒரு நிதி என்றுவது ஆபத்துக்குதவும் நிதி என்றுவது நினைப்பதற்கில்லை. ஆதிமூலதனம் எதுவாயினும் ஒரு போதைய மூலதனம் (capital) நிறுவனத்தின் வெளிப் பொறுப்புகளுக்கும், சொத்துகளுக்கும் உள்ள வித்தியாசம் (Difference between Assets and Uiabiiites) ஆகும். இந்த மூலதனம் முறிவு நிலையில் எந்த அளவுக்குப் பாதுகாப்பைத் தரும் என்பது சொத்துகள் எவ்வளவு சரியான முறையில் மதிப்பிடப்படுகின்றன என்பதையும் எவ்வளவு எளிதில் விற்கக்கூடும் என்பதையும் பொறுத்தது. ஆனுல் மூலதனம் எவ்வளவுக்கு அதிகமாய் உள்ளதோ அவ்வளவுக்கு நிறுவனத்திற்குக் கடனளித்தோர்களுக்குக் காப்பு அதிகம் என்பது உண்மையாகும். ஆனுல் இவை சம்பந்தமான தொகைகளைக் கண்டு ஏமாறக்கூடாது.

சொத்துகளையும் நன்மதிப்பையும் மிக்க மதிப்புடன் கணக்கில் எழுதி முதல் மதிப்பு ஏராளமாக உள்ளதாகக் காட்டலாம். அதனால் பாங்குகள் எச்சரிக்கையாகச் சொத்துகளை மதிப்பிடுவது வழக்கம்.

முதல் கணக்கில் (Capital Accounts) மூலதனப் பங்கு (Capital Stock), பங்கிடா இலாபம் (Undistributed profits) ஆகியவை இருக்கும். பாங்குகள் பெரும்பாலும் சாதாரண பங்குகள் மூலமே மூலதனத்தைச் சேகரிக்கும். ஏனெனில் ஒரே ஒரு வகைப் பங்கு வெளியிடப்பட்ட போது வாங்குவோர் மற்ற வகையோடு விளைவு அடிப்படையில் ஒப்பிட வழியில்லை. ஆகவே மதிப்பு மாறுதிருந்தும் பாங்கு, பங்குகள் மூலம் பெரிய விலை மாறுதலுக்குட்படின் நிலைபேற்றுக்கே ஆபத்துண்டாகிவிடும். ஆகவே மூலதனப் பங்குகள், டிபஞ்சர், பாண்டு, சிறப்புப் பங்குகள் (Preference Sharcs) ஆகியவைகள் மூலம் மூலதனம் சேகரிப்பதில்லை. பாங்கு இலாபத்தில் ஒரு பகுதியைப் பிரித்துக் கொடுக்காமல், (Undistritbuted profits என்று) வைத்திருக்கும்.

### 3. ரிசர்வுகள்

இவை எதிர்காலத்தில் பாங்கு செலுத்த வேண்டிய பொறுப்புக் கெதிராக இருக்கக்கூடும். வரிப் பொறுப்புக்கும், தவணை வட்டிப் பொறுப்புக்கும் இவை வைக்கப்படுவதுண்டு. இந்த வகையில் ரிசர்வுகளைக் குறிப்பிடுவது பங்கிடா லாபத்தை மிகைப்படுத்திக் காட்டாமலிருப்பதற்காகும். வாராக் கடன்களை எழுதித்தள்ளி விடுவதற்காக (write off)வும் முதலீடு நஷ்டங்களைச் சமாளிக்கவும் ஒதுக்கப்படும். ஆண்டு தோறும் இவ்வகைகளில் ஏற்படும் நஷ்டங்கள் ரிசர்வு கணக்கில் எழுதித் தள்ளப்படும்.

### மூலதன விகிதங்கள் (Capital Ratios)

பாங்கின் மூலதனம் எவ்வளவு பெரியதாயினும் அதன் முக்கியத்துவம் பாங்குப் பொறுப்புக்கு அது எவ்வளவு தூரம் ஈடுகட்டும் என்பதைப் பொறுத்தது. இரண்டு வகை விகிதங்கள் கணக்கிடப்படுவதுண்டு: (1) முதலுக்கும் வைப்புக்கும் விகிதம் (Capital-Deposit Ratio), (2) முதலுக்கும் மொத்த சொத்துகளுக்கும் விகிதம் (Capital-Assets Ratio). முன்னது மொத்த வைப்புப் பொறுப்பைத் தீர்க்க முதலாளிகளின் சொத்து எவ்வளவுள்ளது என்பதைக் காட்டுகிறது. பின்னது வைப்பாளி

களுக்கு ஆபத்துண்டாக வேண்டுமானால் எந்தச் சதவிதம் சொத்துகள் மதிப்பிழக்க வேண்டுமென்பதைக் காட்டுகிறது. ஒரு பாங்கின் மொத்தச் சொத்து 100 இலட்சம், மூலதனம் 5 இலட்சம் என்பதாயின், இவ்விகிதம் $\frac{5}{100}$ ஆகிறது. அதாவது சொத்துகள் 5% மதிப்பில் விழும் வரைக்கும் முதலிலிருந்து தனக்குக் கடனீந்தோர் பாக்கியை பாங்கு தீர்க்க முடியும் என்பது தெரிகிறது. இந்த இரண்டு விகிதங்களில் பின்னதே கருத்து வாய்ந்தது. பாங்கியின் ரீதியில் வைப்பாளிகளை நோக்க முதலாளிகள் எவ்வளவு கொடுக்கின்றனர் என்பது அவ்வளவு முக்கியமன்று. முதலாளி என்ன தந்தாலும் நெருக்கடியில் வைப்பாளிக்கு முழுக் காப்பாகாது. ஆனால் நஷ்டமுண்டானபோது எவ்வளவு தூரம் பாங்கு சமாளிக்க முடியும் என்பது அதன் முதலைப் பொறுத்ததாகையினால் பின்னதே முக்கியமான விகிதம்.

# 24. பாங்கின் திண்மையும் நீர்மையும்

இருப்பு நிலைக் குறிப்பினைக் கொண்டு நாம் அறிவதென்ன? பாங்குகள் தங்களுடைய கடன் பொறுப்பைப் பெருக்கியே, வைப்பைப் பெருக்கியே சொத்துகளைப் பெருக்குகின்றன என்பது தெரிகிறது. வைப்புகளில் பெரும் பகுதி, வேண்டுபோது ரொக்கமாகத் தர வேண்டிய பொறுப்பு. தவணை வைப்புகளும் கூடச் சில மாதங்களில் ரொக்கமாகத் தர வேண்டிய நிபந்தனை உடையன. ஆகவே இரு முடிவுகள் தோன்றுகின்றன. (1) சொத்துகளுக்கெதிராகப் பெரும் வீதத்தில் கடன் பொறுப்பு இருக்கிறது. (2) இக்கடன்கள் பெரும்பாலும் குறுங்காலத்தில் தர வேண்டியன. இந்த இரண்டு அம்சங்களிலிருந்து பாங்கு நிர்வாக சம்பந்தமாக இரண்டு பிரச்சினைகள் தோன்றுகின்றன. ஒன்று பாங்குடைய செல்வத் திண்மையைக் (solvency) குலையாமல் பார்த்துக் கொள்வதெப்படி என்பது, மற்றொன்று பாங்கின் நீர்மையைக் காப்பது எப்படி என்பது.

ஒரு பாங்கு செல்வத் திண்மை உடையது என்று கூற வேண்டுமானால் அதனுடைய சொத்துகளின் மதிப்பு பாங்கின் புறப் பொறுப்புகளை (அதாவது மூலதனம் நீங்கலாக மற்ற வகைப் பொறுப்புகளைச்) சமாளிக்கும் அளவுக்கு இருக்க வேண்டும். ஒரு பாங்கு நீர்மையுடையுது என்று கூற வேண்டுமானால் அதனுடைய சொத்துகள் எளிதில் ரொக்கமாக மாறக் கூடிய தன்மையுடையனவாக இருக்கவேண்டும். போதிய சொத்துடைமையும், சொத்து ரொக்கமாக மாறும் தன்மையுடைமையும், இரண்டும் தொடர்புள்ள அம்சங்கள். ஒரு பாங்கினிடம் ஏராளமான சொத்துகள் இருந்தும் அவை எளிதில் ரொக்கமாகக்கூடிய தன்மையுடனில்லாவிடில் பாங்கின் திண்மைக்குக் கேடுண்டாகும். இப்படியே போதிய சொத்தில்லாதிருந்தும் பாங்கொன்று நீர்மையுடன் காணப்படலாம். எல்லோரும் ரொக்கம் விரும்பாத வரைக்கும் ரொக்கத் தேவையைச் சிறு அளவு சொத்

தைக் கொண்டு நிறைவேற்றித் திண்மையுடையதுபோல் காட்சியளிக்கலாம்.

## 1. பாங்கின் திண்மை

முதலில் பாங்கின் செல்வத்திண்மையை (solvency) ஆராய்வோம். பொறுப்புக்கேற்ற சொத்தின்றி ஒரு பாங்கு தொழில் செய்வது ஆபத்தானது. பொறுப்பென்பது புறக் கடனையன்றி, பங்குதாரருக்குரிய முதலையும் திருப்பிக் கொடுக்கும் பொறுப்பாகும். திண்மையுடைய பாங்கில் பங்குதாரர் கூட முதலை இழக்க நேரிடாது. அனைவருக்கும் பொறுப்பை நிறைவேற்றும் அளவுக்குப் பாங்கிடம் சொத்தில்லையாயின், பாங்கைப் பற்றிக் கொஞ்சம் சந்தேகம் உண்டானாலும் நெருக்கடி உண்டாகும். பற்றாத சொத்துடைய பாங்கின் நிலை இருதலைக் கொள்ளி எறும்பின் நிலையை ஒக்கும். பற்றாமை நோக்கிப் பாங்கைப் மூடிவிடுவதாயின் சொத்துக்களை அற்ப நிலையில் ஏலம் போட நேரிடும். பாங்கின் வைப்பாளிகளுக்குக் கிடைப்பதும் அற்பமாக இருக்கும். இதற்கஞ்சி மூடாமல் காலம் தாழ்த்தினால், நெருக்கடி காரணத்தினால் நல்ல சொத்துகள் முதலில் விற்கப்பட்டு, முந்திக் கொண்ட (விசுவாசமற்ற) வைப்பாளிகள் நலமடைவர். விற்பனையாகாச் சொத்துகளே பின் தங்கும். பின்தங்கிய (விசுவாசமான) வைப்பாளிகள் மோசம் போவார்கள்.

பாங்கிடம் உரிமையுடைய யாரும் மோசம் போகாமல் அநேக நடவடிக்கைகள் எடுக்கப்படுவதுண்டு. (1) பாங்குகள் எந்தவிதமான சொத்துகளைத் தான் வைத்திருக்கலாம் என்பதை வரையறுக்கலாம். உதாரணமாக, சாதாரணப் பங்குகள் (ordinary shares), அசையாச் சொத்து (immovable property) முதலியவற்றை வாங்குவது தடுக்கப்படலாம். ஏனெனில் இவைகளின் மதிப்பு பேரளவில் அடிக்கடி மாறக்கூடியது. (2) பாங்கு தரும் கடன் வகைகளும் வரையறுக்கப்படலாம். (3) சொத்து வகை ஒவ்வொன்றுக்கும் விகிதாசாரம் வரையறுக்கப்படலாம். (4) மூலதனக்காரருக்கும் அலுவலருக்கும் கடன் கொடுப்பதற்கு வரையறை நிறுவலாம். ஏனெனில், இவர்களுக்குக் கடன் கண்காணிப்புடன் தரப்படமாட்டாது. (5) ஒருவருக்கு எவ்வளவு கடன் தரலாம் என்பதை வரையறை செய்யலாம். (6) பாங்கு மூலதனம் எவ்வளவு இருக்க வேண்டும் என்பதும் விதிக்கப்படலாம். அமெரிக்காவில் இது சாதாரணம். (7) டிவிடெண்டு கட்டுப்பாடிருக்கலாம்.

இப்படிப்பட்ட நடவடிக்கைகள் எடுத்தும் முறிவுகளைத் தடுக்க முடியவில்லை. இதனால்தான் மூலதனம் சம்பந்தமாகச் சில கட்டுப்பாடுகளும் வைப்பு இன்சூரன்சு முறையும் தேவைப் படுகின்றன.

## 2. பாங்கின் நீர்மை (Bank Liquidity)

பாங்கு நீர்மை முக்கியமாவதற்குக் காரணங்கள் :

(1) பாங்கின் பொறுப்புகள் பெரும்பாலும் கேட்டவுடன் அல்லது குறுந் தவணையில் சட்டப் பணத்தில் (Legal tender Money) கொடுக்க வேண்டியவை.

(2) ஆனால், பாங்கின் சொத்துகள் பெரும்பாலும் குறிப்பிட்ட கால முடிவில்தான் கைக்கு வரும் கடன்களாக உள்ளன.

(3) கேட்டவுடன் சட்டப்பணத்தில் கொடுக்க வேண்டிய பாங்குப் பொறுப்புகள், நாட்டில் உள்ள ரொக்கத்துக்குப் பன்மடங்கானவை.

சாதாரணமாகப் பாங்குகள் தம் பொறுப்புகளனைத்தும் ஒரே நேரத்தில் ரொக்கமாகக் கேட்கப்படாது என்று நினைப் பதற்கிடமுண்டு. ஆனால் இந்த நம்பிக்கை எப்போதும் நிறை வேறும் என்பதற்கில்லை. திடீரெனப் பேரளவில் ரொக்கம் தேவைப்பட்டால் ஒரு பாங்கு எப்படிச் சமாளிக்க முடியும் என்பதையும் கருதவேண்டியிருக்கிறது.

### (அ) தனி பாங்கின் நீர்மை

ஒரு தனி பாங்குக்கு ரொக்கம் இரண்டு காரியங்களுக்கு வேண்டியிருக்கிறது. தன் வாடிக்கைக்காரர்களின் ரொக்கத் தேவைகளை நிறைவேற்றவும், தீர்வக பாக்கிகளைப் பைசல் செய்யவும் வேண்டியிருக்கிறது. முதல் தேவையைச் சட்டச் செல்லுபடியுடைய எப்பணத்தாலும் நிறைவேற்றலாம். பின்னதைச் சட்டப் பணத்துடன், மைய பாங்கு வைப்பையும் கொண்டு நிறைவேற்றலாம். இவ்வசதிகள் பாங்குகளிடம் உண்டா என்று பார்க்கவேண்டும். பாங்குகளிடம் கீழ்க்கண்ட வகையான வசதிகள் இருக்கின்றன. (1) தன் கையிலிருக்கும் நாணயங்களும் நோட்டுகளும் (Coins & Currency) — ஆனால் இவைகளைக் கொண்டு பாங்கின் பொறுப்புகளில் 2%-3% க்கு மேல் தீர்க்க முடியாது. (2) மைய பாங்கில் வைப்பு—ஆனால்

இவ்வைப்பைத் தொட முடியாது. பொறுப்புக்கு ஏற்ற விகிதாசாரம் சட்டப்படி இருந்தாக வேண்டும். ஒரு வாடிக்கைக்காரன் பாங்கிடமிருந்து 10,000 ரூபாய் ரொக்கமாக எடுத்துவிட்டால், வைப்புப் பொறுப்பு இந்த அளவுக்குக் குறையும். சட்டப்படி வேண்டிய ரிசர்வு 10% ஆனால், இதற்கெதிராக 1000 ரூபாயே ரிசர்வு இருந்திருக்கும். ஆகவே இவ்வளவுதான் ரிசர்விலிருந்து எடுக்கக்கூடியது. மீதி 9000 ரூபாய் வேறு வழியில் சமாளிக்க வேண்டியிருக்கும். (3) மற்றப் பாங்குகளிடம் வைப்பு—அநேக பாங்குகள் பிற பாங்குகளிடமுள்ள வைப்பை ரொக்கமாக நினைக்கின்றன. ஆகவே மற்ற மற்ற பாங்குகள் ரொக்கமாகக் கொடுக்கக்கூடிய நிலையில் இருக்கவேண்டும். (4) கொடுத்திருந்த கடனை மீட்பது, அல்லது பாண்டுகள், உண்டியல்கள் ஆகியவற்றை அங்காடியில் விற்பது—ஆனால் இவைகளை வாங்குபவர்கள் தம் பாங்குகளிடமிருந்து ரொக்கம் பெறுவார்களானால் அவைகளின் ரொக்க நிலை பாதிக்கப்படும். இன்றி, கையிலிருந்த ரொக்கத்தைக் கொடுப்பார்களாயின் இவ்விளைவு இருக்காது. (5) தக்க சொத்துகளை மைய பாங்குக்கு விற்றல் அல்லது மைய பாங்கிடம் கடன் வாங்குதல்—ஆனால் மையப் பாங்கு உதவி சில விதிகளுக்குட்பட்டது.

பாங்குப் பிரச்சனைகளுள் பெரியது நீர்மைப் பிரச்சினையேயாகும். ஏனெனில் முழு நீர்மையை நினைத்தால் ரொக்கத்தை ஆளவே முடியாது. ஆதாயத்துக்கே வழியிருக்காது. ஆதாயத்தை நினைத்தால் நீர்மைக்கு ஆபத்துண்டாகும். நீர்மை, ஆதாயம் இவ்விரண்டு குறிக்கோள்களையும் ஒரே நேரத்தில் நிறைவேற்ற வேண்டியிருக்கிறது.

### (ஆ) பாங்குத் திட்டத்தின் நீர்மை

இதுவரை ஒரு தனி பாங்கின் நீர்மையைப் பற்றியே பேசினோம். பாங்குத் திட்டத்தின் நீர்மையைக் காப்பது எப்படி என்று பார்த்தால் சிறிது வேறுபாடு காணப்படுகிறது. (1) ஒரு தனி பாங்கு தன் ரொக்கத்தைப் பிற பாங்குகளுக்கு இழக்கலாம் அல்லது பாங்குத் திட்டத்துக்கு வெளியில் (அரசாங்கம், மைய பாங்கு ஆகிய) அயலாருக்கு இழக்கலாம். பாங்குத் திட்டத்தைக் கருதும்போது அயலாருக்கு இழப்பதைச் சமாளிக்கவே நீர்மை முக்கியம். (2) பாங்குத் திட்டத்துக்குள்ள நீர்மைச் சொத்துகள் தனி பாங்குக்கு உள்ளவைகளைவிடக் குறைவு. ஒரு தனி பாங்கு தனக்கு ரொக்கம் தேவைப்பட்டால் பிற பாங்குகளிடமிருந்து பெறலாம். அழைப்புக் கடனைப் பெறலாம். செக்

கூரிட்டிகளை விற்றுப் பிற பாங்குகளிடமிருந்து ரொக்கத்தை ஈர்க்கலாம். ஆனால் பாங்குத் திட்டம் முழுதும் இப்படிச் செய்ய முயன்றால் எல்லோருக்கும் ஆபத்தே உண்டாகும். உதாரணமாக, மக்கள் பாங்குத் திட்டத்தில் நம்பிக்கையிழந்து வைப்புகளை ரொக்கமாகப் பெற முயல்கிறார்கள் என்று வைத்துக்கொள்வோம். இதன் விளைவு என்னவாகும்? ஒவ்வொரு பாங்கும் தன் கையிலுள்ள நாணயங்களையும் நோட்டுகளையும் இழக்கும்; பிற பாங்குகளிலுள்ள வைப்பை அழைக்கும். ஆனால் ஒவ்வொரு பாங்கும் நெருக்கடியில் இருக்கும்போது இம்முயற்சி பலனளிக்காது. வாடிக்கைக்காரர் கடன்களைத் திரும்ப அழைத்தாலும், சொத்துகளை அங்காடியில் விற்றாலும் ஒவ்வொரு பாங்கும் இதே நிலையிலிருப்பதால் ரொக்கம் வர வழியில்லை; அவை வாங்கமாட்டா. பிறர் வாங்கினாலும் அவர்கள் செக்கு மூலமே செலுத்துவர். ஒரு சிலரே ரொக்கம் தரக்கூடும். ஆகவே எல்லாப் பாங்குகளும் ஒரே சமயத்தில் ரொக்கம் இழக்கும்போது, கடனை அழைப்பதாலும் சொத்துக்களை விற்பதாலும் புது ரொக்கத்துக்கு வழியில்லை; பாங்குத் திட்டத்தின் வைப்புதான் குறையும். மைய பாங்கிடமுள்ள ரிசர்வுகளையும் பாங்குத் திட்டம் பெறமுடியாது. தவிர வைப்புப் பொறுப்புக்கெதிராக மைய பாங்கிலுள்ளது ஒரு சிறு விகிதமே. அது போதாது. வேறு வழியில்தான் ரொக்கம் தேடவேண்டும். இதற்குள்ள வழி மைய பாங்கிடம் கடன் வாங்குவது அல்லது மைய பாங்குக்குச் சொத்துகளை விற்பது. ஆனால் இவ்வழியிலும் ரொக்கம் கிடைக்குமா என்பது மைய பாங்கின் விருப்பத்தைப் பொறுத்தது.

ஆகவே, பாங்குத் திட்டம் முழுதும் ரொக்கம் பெற வேண்டுமானால் மைய பாங்கையே எதிர்பார்க்க வேண்டியிருக்கிறது.

அடுத்தபடியாகப் பாங்குகள் எப்படி நீர்மைக் குறிக்கோளையும் ஆதாயக் குறிக்கோளையும் ஒருசேர நிறைவேற்றுவதற்குத் தம்மிடமுள்ள சொத்துகளையும் பொறுப்புகளையும் பல்வகைப்படுத்துகின்றன என்று பார்ப்போம்.

பாங்கு ஆதாயம் பெறுவதற்கு அடிப்படை, மக்கள் பாங்கின் கடனைப் பணமாக ஆளக்கூடும் என்று நம்புவதுதான். வைப்பைத் தோற்றுவித்துப் பாங்கு 'கடன்' தந்து வட்டி சம்பாதிக்கிறது; வைப்பைத் தோற்றுவித்தே வேறுவகைச் சொத்துகளையும் வாங்குகிறது; வட்டி வழியாகவும் சொத்து

களின் விளைவு (yield) வழியாகவும் ஆதாயம் சம்பாதிக்கிறது. ஆனால் தன் கடனைப் பணமாக மக்கள் மதிக்கவேண்டுமாயின், வைப்புகளை வாடிக்கைக்காரர் வேண்டும்போது சட்டப் பணமாக மாற்ற முடிய வேண்டும். இதனாற்றான் பாங்கு தன் நீர்மையைக் கவனிக்க வேண்டியிருக்கிறது. நீர்மையைக் காக்க வேண்டுமானால் சொத்துகள் நீர்மையுடையனவாக இருக்க வேண்டும். ஆனால் நீர்மை மிக்க சொத்துகளின் விளைவு அற்பமானது. உதாரணமாக ரொக்கம் (cash) முழு நீர்மை யுடைய சொத்து; ஆனால் வருமானமற்ற சொத்து. ஆகவே வருமானம் சம்பாதிக்க வேண்டுமானால், நீர்மை குறைந்த சொத்துகளைப் பாங்கு வாங்கவேண்டும். எப்படிப்பட்ட சொத்துகள் இவ்வகையில் பாங்குகளுக் கேற்றவை? பொது வாகக் கூறினால் எளிதில் விற்கக்கூடிய தன்மையும், விற்பனையில் முதல் நஷ்டமேற்படாத் தன்மையும் உடைய சொத்துகளே விரும்பத்தக்கவை எனலாம். உண்மையில் நீர்மை என்பதன் பொருள் இவ்விரு தன்மைகளே என்பார் பேராசிரியர் சேயர்சு. இந்த இரு அம்சங்களே எந்த அளவுக்கு ஒவ்வொரு சொத்துக்கும் உள்ளது என்பதை ஆராய்வோம். அரசாங்கச் செக்யூரிட்டிகளை எடுத்துக்கொண்டால் இவை எளிதில் விற்கக் கூடியவை; ரொக்கமாக்கக்கூடியவை; ஆனால் விற்பனையில் முதல் நஷ்டமேற்படக்கூடியவை. முதிர்வு நாளுக்கு முன் விற்பதாயின் முதல் நஷ்டம் காணப்படும். முதிர்வு நாள் வரைக்கும் காக்க முடியும் என்பது நிச்சயமாயின், இந்த வகைச் சொத்து திருப்தி யானதே. ஆனால் இது நிச்சயமில்லை. ஆகவே அரசாங்கத்தின் பாண்டேயாயினும் இதை பாங்குக்கு முழு நீர்மையுடைய சொத்து என மதிப்பதற்கில்லை.

கம்பெனிப் பங்குகளை எடுத்துக்கொண்டால் இவைகளும் எளிதில் விற்கக்கூடியவை. ஆனால் இவைகளின் மதிப்பு அரசாங்க பாண்டை விட மாறக்கூடியது. ஆகவே இவையும் பாங்குகளுக்கேற்ற சொத்தல்ல.

அடுத்தபடி சாதாரணக் கடன்களை ஆய்வோம். கடன்களில் இருவகையுண்டு. சில நுகர்ச்சிக்கு ஆளப்படுவன. பிற, தொழிலில் ஆளப்படுவன. நுகர்ச்சிக் கடன்களைத் தர பாங்குகள் தயங்கும். சம்பந்தப்பட்ட வாடிக்கைக்காரன் நாணயமுடைய வனயினும் அவன் கடன் பொறுப்பு பாங்குக்குத் தகுதியான ஒரு சொத்தாக மதிக்கப்பட அவன் வைத்துள்ள ஈடு எளிதில் நஷ்டமின்றி விற்கக்கூடியதாக இருக்கவேண்டும். வெறும் புரோ நோட்டு எளிதில் பிறருக்கு விற்கக்கூடியதன்று; ஆதலால் தகுதியான சொத்தன்று.

முதிர்வு வரைக்கும் காத்திருக்கக்கூடுமானால் அரசாங்க பாண்டு முதல் நஷ்டமற்றதாகையால், இதில் நியாயமான அளவு வைத்திருக்கும் ஒரு பாங்கு, உடனே விற்றால் முதல் நஷ்டமில்லாது எளிதில் விற்கக்கூடிய, சொத்துகளில் ஓரளவு வைத்திருந்தால் போதும். நீர்மை மிக்க சொத்துகள் நியாயமான அளவுக்கு வைத்திருக்கும் ஒரு பாங்கு, சிறிது முதல் நஷ்டமும் சிறிது விற்பனைக் கடினமும் உள்ள சொத்துகள் சில வைத்திருப்பதில் தவறில்லை. விற்க முடியாததும், முதல் நஷ்டமுடையதும் ஆன சொத்துகளைப் பாங்கு விரும்பாது. அதாவது பாங்கு, சொத்துகளைப் பெறும்போது விற்பனை எளிமை. முதலுக்காபத்தின்மை ஆகிய இரண்டு அம்சங்களையும் பார்க்க வேண்டும், ஒன்றை மட்டும் பார்த்தால் போதாது. ஆகவே ஒரு பாங்குக்கு இந்த இரண்டு அம்சங்களும் நிறைவேறும் சொத்துகள் சில அவசியம் வேண்டும். அதோடு விற்பனைக்கு எளிய, பொறுத்தால் நஷ்டமில்லாத சொத்துகளும் சில வேண்டும். மீதி, விற்பனை சிறிது கடினமாயினும் நஷ்டத்தை உண்டாக்காததாக இருக்க வேண்டும். இவைகளே அடிப்படை விதிகள்.

நாம் மேலே ஒரு தனி பாங்கு தன் சொத்துகளை விற்பது எளிதா, நஷ்டமின்றி விற்க முடியுமா என்று ஆய்ந்தோம். உண்மையில் கிளை பாங்கு முறை இருக்கும் நாட்டில் ஒரு பாங்கில் நெருக்கடி உண்டானால் பிற பாங்குகளும் பாதிக்கப்படுமாதலால், எல்லா பாங்குகளையும் ஒரு தொகுதியாகக் கொண்டு நீர்மையைக் காக்க எவ்விதச் சொத்துகள் தேவை என்று பார்க்க வேண்டும். இப்படிப் பார்க்கும்போது எல்லா பாங்குகளும் ரொக்கம் விரும்பும் நிலையில் மைய பாங்கிடமிருந்தே ரொக்கம் வர வேண்டியிருக்குமாதலால் மைய பாங்குக்கு விற்கக்கூடிய சொத்துகளே பாங்குகளுக்குத் தகுந்த சொத்துகள் என்பதாகத் தோன்றுகிறது. மைய பாங்குகள் எந்தவிதச் சொத்துகளை வாங்க ஒப்புமோ அவைகளை வணிக பாங்குகள் வாங்கும். மைய பாங்கு வாங்க ஒப்பும் சொத்துகள் பெரும்பாலும் குறுங்கால முதிர்வுடைய கருவூல உண்டியல் அல்லது வணிக உண்டியலாகவே இருக்கும். மைய பாங்கிடம் இவைகளை விற்பதை மறு கழிவு செய்தல் (rediscounting) என்று குறிப்பிடுவது வழக்கம். மறு கழிவு உள்ளதால் உண்டியல் எளிதில் விற்பனை செய்யக்கூடிய சொத்தாகிறது. முதிர்வு மூன்று மாதமே யாதலால் முதல் நஷ்டபயமும் அற்பம்.

இங்கிலாந்தில் உண்டியலை விட நீர்மையுடைய சொத்தொன்றுள்ளது. அதுதான் அழைப்புப் பணம் (Money at call

or short notice). அழைப்புப் பணம் என்பது பாங்குகள் கழிவு அங்காடிக்குக் (Discount Market) கொடுத்த கடன். இவை கேட்டபோது தரப்பட வேண்டியவையாகவோ, இரண்டொரு வாரத்துக்குள் தரப்பட வேண்டியவையாகவோ இருக்கும். பாங்குகள் விரும்பும்போது முதல் நஷ்டமின்றி வட்டியுடன் பெறக்கூடும். ஆனல் இவ்வழியாகப் பாங்குகள் நீர்மையைக் காப்பதற்கு அடிப்படையாக இருப்பது மைய பாங்கு கழிவகங்களுக்கு ரொக்கம் கொடுக்கத் தயாராக இருப்பதேயாகும். பாங்குகள் விரும்பியபோது கழிவகங்கள் மைய பாங்கிடம் சென்று தம் உண்டியல் சொத்துகளை மறு கழிவுசெய்து ரொக்கம் பெற்றுத் தருகின்றன. உண்டியலில் நஷ்டமேற்பட்டால் அது கழிவங்காடியைச் சாருமேன்றி, பாங்குகளைப் பதிக்காது. ஆகவே ரொக்கத்துக்கு அடுத்தபடியாக அழைப்புப் பணத்தை மிக்க நீர்மை உடையதாக இங்கிலாந்து பாங்குகள் நினைக்கின்றன. அடுத்தபடியாகத்தான் உண்டியல்கள். உண்டியல்களில் ஏற்பு செய்தவர்களும் புறக் குறிப்பு செய்தவர்களும் தவறக்கூடும் என்ற ஒரு சிறு ஆபத்துள்ளமையின், அரசாங்க உண்டியல் முதலிலும், பின்னரே வணிக உண்டியலும் நீர்மையுடையனவாகக் கொள்ளலாம்.

ரொக்கம், அழைப்புப் பணம், உண்டியல் ஆகிய மூன்றினங்களையே பாங்குகள் தம் நீர்மையைக் காக்கும் சொத்தினங்களாகக் கருதும். இம்மூன்றின் தொகையை மொத்த வைப்புப் பொறுப்புடன் ஒப்பிட்டுக் கணித்த விகிதமே நீர்மை விகிதம் (Liquidity Ratio) என்பது. கையிலுள்ள ரொக்கமும் மைய பாங்கிலிருப்பும் சேர்ந்து ரொக்க விகிதத்தை நிர்ணயிக்கின்றன. ரொக்க விகிதம் சட்டம் விதித்ததாக இருக்கலாம். நீர்மை விகிதம் அனுபவ அறிவு விதிப்பதாக இருக்கலாம்,

# 25. மைய பாங்கு

## (The Central Bank)

### 1. மைய பாங்கின் அவசியம்

மக்களின் ரொக்கத் தேவையையும் தீர்வு பாக்கிகளையும் நிறைவேற்ற ஒவ்வொரு பாங்கும் சிறிது ரொக்கம் வைத்திருப்பது நன்றென்று பார்த்தோம். நெடுந்தொலைவில் செலுத்தும் வசதிக்காக வேறு பாங்குகளிடமும் வைப்பு வைத்திருப்பதும் பாங்குகளின் வழக்கம். இதையும் ரொக்கமாகவே ஒரு பாங்கு கருதும். இம்முறையில் ஆளும் ரொக்கங்களின் தொகை சாதாரணமாக அதிகமில்லை. ஏனெனில் சாதாரணமாக வரவும் போக்கும் ஏறக்குறையச் சரிகட்டும் வகையில் இருக்கும். ஆனால் சிலபோது ஒவ்வொரு பாங்கும் தன்னிட முள்ள ரொக்கத்தால் சமாளிக்க முடியாத அளவுக்குப் பண எடுப்பு (withdrawal) இருக்கக் காண்பதுண்டு. இதுவேயு மன்றி, தன் வாடிக்கைக்காரர்களும் சிலபோது பேரளவில் கடன் கேட்டு நெருக்கடியை உண்டாக்கக்கூடும். இவ்விதத் திடீர்த் தேவைகளைத் தன்னிடமுள்ள நீர்மைச் சொத்துகளைக் கொண்டு ஒரு பாங்கு சமாளிக்கக் கூடும். அது புது வாடிக்கைக்காரர்களுக்குக் கடன் தர மறுத்தும், சில செக்கூரிட்டிகளை அங்காடியில் விற்றும், அல்லது ஈடு வைத்தும் (வேறு பாங்குகளிடமிருந்து) கடன் பெறலாம். ஆனால் சொத்துகளை ஈடு வைத்து அல்லது விற்று ரொக்கம் பெற வேண்டுமாயின் மற்ற பாங்குகளிடத்தில் ரொக்கம் இருக்க வேண்டும். சொத்துகளை வாங்குவோர் மற்ற பாங்குகளை நாடுவார்களாயின் அப்பாங்குகள் கடன்தர முன்வர முடியாம லிருக்கலாம். அழைப்புக் கடனை (Call loans) மீட்க முயன்றால், அதைப்பெற்ற தரகர் வேறிடத்தில் கடன் வாங்க முயல்வர். இது முடியாமல் இருக்கலாம். வியாபாரிகளுக்குக் கொடுத்த வர்த்தகக் கடன்களை மீட்டாலும் ரொக்கம் பெற முடியாமற்

போகலாம். ஏனெனில் வர்த்தகம் பாங்குக் கடன் அடிப்படையில் நடப்பது. நெருக்கப்பட்ட வர்த்தகர் தாம் விற்கும் பொருள்களுக்கு ரொக்கம் கோரினால், திடீரென வர்த்தகத் துறையில் கடன் நெருக்கடியை உண்டாக்கி விடும். இது வர்த்தகர்களின் முறிவுக்குக் காரணமாகிப் பாங்குகளின் முறிவுக்கும் காரணமாகக் கூடும்.

ஆகவே எல்லாப் பாங்குகளும் ரொக்க நெருக்கடியில் அகப்பட்டபோது, அவைகளுக் குதவுவதற்குப் புகலிடம் ஒன்று பாங்குத் திட்டத்தில் இருக்க வேண்டும். இந்தப் புகலிடம்தான் மைய பாங்கு. மைய பாங்கு ஒன்று இருக்குமானால் தனிப்பட்ட பாங்கின் நீர்மைப் பொறுப்பு ஓரளவு குறைகிறது. எப்படி எனில், மைய பாங்கின் உதவியை நம்பிச் சாதாரண பாங்கு ஓரளவுக்கு நீர்மை குறைந்த பேரங்களிலும் ஈடுபட்டுச் சம்பாதிக்க முடிகிறது. மற்ற பாங்குகளின் ரிசர்வுப் பொறுப்பை ஓரளவு ஏற்று, நாட்டின் கடன் செலாவணி நிருவாகத்துக்குப் பொறுப்பாயிருப்பதுவே மைய பாங்கின் தனிச் சிறப்பான கடமை. ஏனெனில் சாதாரண பாங்குகள் தம் கையில் அற்ப அளவு ரொக்கத்தை வைத்துக்கொண்டு மைய பாங்கில் தமக்குரிய வைப்பையும், மைய பாங்கிடம் பெறக்கூடிய கடன் வசதியையும் நம்பியே தொழில் செய்கின்றன. ஆனால் இன்று மைய பாங்குகளாகப் பணிசெய்யும் பாங்குகள் ஆதியில் தோன்றியபோது, பாங்குகளில் ரிசர்வுகளை வைத்திருப்பது அவற்றின் கடமையாக இருக்கவில்லை. சர்வாதீனத்துடன் நோட்டு வெளியிடும் உரிமையும், அரசாங்கத் தொடர்பும் இந்த வகையான வளர்ச்சிக்குக் காரணமாக இருந்திருக்கலாம். மைய பாங்குகளுக்கு முன்னோடியான இங்கிலாந்து பாங்கைப் (Bank of England) பொறுத்த மட்டில் பரிணாமம் இப்படித்தான் இருந்தது. அரசாங்க பாங்காயிருந்தமையால் சாதாரண பாங்குகள் இதனுடன் நெருங்கிய தொடர்புடையனவாயின. அதனால் வசதி கருதி இங்கிலாந்தில் பாங்கில் அவை வைப்பு வைக்க ஆரம்பித்தன. பாங்கு முறை முதிர்ச்சி அடையாத நிலையில் நோட்டுரிமைச் சர்வாதீனம் இங்கிலாந்து பாங்குக்குப் பெரும் செல்வாக்கைத் தந்தது. இக்காரணங்களால் வைக்கப்பட்ட 'வைப்பு' பின்னர் வழக்கப்படி தேவையான ரிசர்வாக மாறியது. இவ்வித மாறுதலால் பாங்குகளின் அன்றாடத் தொழில் முறையில் எந்த விதமான மாறுதலும் உண்டாகவில்லை. 18ஆம் நூற்றாண்டின் இறுதிக்கு முன்பே நெடுங் காலமாக இங்கிலாந்தில் சாதாரண பாங்குகள் தம்மிடம் ஓரளவு ரொக்கத்தை மட்டும் வைத்துக்கொண்டு மீதியை

இங்கிலாந்து பாங்கிடம் வைப்பு வைக்கும் வழக்கம் இருந்து வந்தது. 1854இல் தீர்வக முறை தோன்றியதும் இந்தப் போக்கு உறுதி பெற்றது. மற்ற நாடுகளிலும் பரிணமம் ஏறக்குறைய இவ்வாறாகவே இருந்தது.

இப்படிப் பாங்குகளின் ரிசர்வுகளை மையப்படுத்தியது (centralisation of bank reserves) மைய பாங்கு வைப்புக் களுக்குத் தனிச் சிறப்பைக் கொடுத்தது. மைய பாங்கில் வைப்பு எந்த விதமாகத் தோன்றியபோதிலும் அது ரிசர்வாக மதிக்கப் பட்டு, அதன் அடிப்படையில் பன்மடங்குக்குப் பாங்குப் பணத்தைச் சாதாரண பாங்குகள் பெருக்க முடிந்தது. மைய பாங்கு கடன் தந்தால் அல்லது சொத்து வாங்கினால் அது பாங்கு களின் ரிசர்வை உயர்த்தி,பாங்குப் பணம் பன்மடங்கு விரிவடைய வழி செய்தது. இதே போல மைய பாங்கு கடனைச் சுருக்கினால் அது பாங்குகளின் ரிசர்வைக் குறைத்து, பாங்குப் பணச் சுருக் கத்துக்கு வழி செய்கிறது. ஆகவே மைய பாங்கு கடன் தருவதையோ, முதலீடு செய்வதையோ மாற்றுவதன் மூலம் பாங்குப் பணத்தைக் கட்டுப்படுத்தும் சக்தி உடையதானது.

பாங்குகளின் ரிசர்வுகளை ஏற்பதன்றியும் அரசாங்கத்தின் இருப்புகளையும் (balances) மைய பாங்கு பெறுகிறது. மைய பாங்கிடமிருக்கும் அரசாங்க இருப்புகள் மாறின் அதற்கு எதிர் முறையில் சாதாரண பாங்குகளின் இருப்புகளும் (அதாவது ரிசர்வுகளும்), ஆகவே பாங்குப் பணத் தொகையும் மாறும். அரசாங்க இருப்பு உயர்ந்தால் பணம் மக்களிடமிருந்து வந்திருக்க வேண்டும். மக்கள் தம் பாங்குகளிடமிருந்து பெற்றுச் செலுத்தியிருப்பார்கள். ஆகவே அரசாங்க இருப்பு உயர்ந்த அளவுக்கு பாங்குகளின் இருப்பு குறையும். மைய பாங்கு களிடம் பெரும்பாலும் பாங்குகளின் இருப்பும் அரசாங்கத்தின் இருப்பும்தான் வைக்கப்படும். தனி நபர்கள், தொழிலகங்கள் ஆகியவற்றின் இருப்புகளை மைய பாங்குகள் ஏற்பதில்லை; கடனும் கொடுப்பதில்லை. இதற்குக் காரணம் பின்னர்க் காண்போம்.

ரிசர்வு மையமாக இருப்பதற்கு முன்பே மைய பாங்கு சர்வாதீன நோட்டுரிமை பெற்றிருந்தது என்று மேலே கூறினோம். மைய பாங்கு நோட்டு ரொக்கமாகக் கருதப்பட்டது.

ஆதியில் நோட்டு வெளியீட்டுரிமையின் நோக்கம் செலா வணித் தேவைக்காக அரிய பொருளான பொன்னை ஆண்டு சிதற

அடிக்கக் கூடாதென்பதே யாகும். (இங்கிலாந்தில் 1844வது ஆண்டுச் சட்டத்தின் கீழ் நோட்டுகள் பெரும்பாலும் பொன் நாணயத்துக்குப் பிரதியாகவே கருதப்பட்டன). ஆனால் நோட்டு வெளியிடும் சக்தியைக் கொண்டு மைய பாங்கு தன்னைப் பலப்படுத்திக் கொள்ள முடிகிறது; பொன்னை வாங்கி இருப்புச் செய்து தன்னிடத்தில் மக்களுக்குள்ள நம்பிக்கையை வளர்க்கிறது. சில நாடுகளில் சட்டம் ஒரு பொன் ரிசர்வுத் தொகையை அல்லது விகிதத்தை விதிக்கின்றது. நோட்டுகளில் நம்பிக்கை உண்டாக்குவது முன்பு பொன் ரிசர்வுக்கு ஒரு காரணம். மற்றொரு காரணம் (இன்றும்) அயல் நாட்டுப் பாக்கியைச் சமாளிப்பது. ஆகவே ரிசர்வு, நோட்டுக் காப்புக்கு வேண்டியதுக்கு மேல் இருக்க வேண்டியதாகிறது. ரிசர்வு எவ்வளவு இருக்க வேண்டுமென்பது மைய பாங்குகள் முடிவுக் குட்பட்டிருக்க வேண்டியதாயினும், ஒவ்வொரு நாட்டிலும் சட்டம்கூட ரிசர்வு வரையறை செய்துள்ளது. சட்டத்தின் நோக்கம் மக்களின் நம்பிக்கையைக் காப்பது மட்டுமன்று. மைய பாங்கு தன் கடன் நடவடிக்கையை எச்சரிக்கையாக ஆள வேண்டும் என்பதும் ஆகும்.

ஆகவே மைய பாங்கின் கடனும் (loan), முதலீடும் (investment) மிகவும் எச்சரிக்கையாக நடைபெற வேண்டியிருக்கின்றன. நீர்மை மிக்க (உண்டியல் போன்ற) சொத்துகளின் மேல்தான் மைய பாங்கு கடன் தரும். நீர்மையைக் கருதுவதன் நோக்கம் தன்னுதவி பயனுடைய காரியங்களுக்கு மட்டும் கிடைக்க வேண்டுமென்பதேயாகும். பயனுடைய காரியங்களுக்கு மைய பாங்கு உதவத் தவறாது என்பதை வற்புறுத்தவே, மைய பாங்கு, தக்க சொத்துகளை ஈடு காட்டிக் கடன் கேட்போருக்கு உதவியை மறுப்பதே இல்லை. இதைத் தான் 'மைய பாங்கு இறுதிக் கடனீவோன்' என்ற கூற்று குறிப்பிடுகிறது. நாட்டின் பொருளாதார நிலைக்கேற்ப மைய பாங்கு, பாங்குகளின் மூலம், உதவிக்கு வரவேண்டுமென்பதே மைய பாங்கு முறையின் அடிப்படைத் தத்துவமாகும். இந்தப் பொறுப்பை மைய பாங்குகள் நெடுநாள் உணரவில்லை. பன்முறை தவறு செய்து அறிவு வந்த பின்புதான் இப்பொறுப்பை மைய பாங்குகள் ஏற்றன. இந்தப் பொறுப்பின் அவசியத்தைத் தெளிவாக உணர்த்தியவர் வால்டர் பேஜட் என்பார். அவர் 'எக்கானமிஸ்ட்' என்ற வார இதழிலும், 'லொம்பார்டு தெரு' என்ற தம் நூலிலும் இறுதிநிலைக் கடனீவோன் பொறுப்பை மைய பாங்குகள் ஏற்கவேண்டியதன் அவசியத்தை வற்புறுத்தினர். அதன் பயன்தான் இப்பொறுப்பேற்பு.

இப்போது, நிபந்தனை எதுவானாலும், இல்லை என்று சொல்லாமல் கடன் தரவேண்டும், ரொக்கம் தேவைப்பட்ட போது (நோட்டாகவோ, பணமாகவோ) தரவேண்டும், என்ற விதிகளை எல்லா மைய பாங்குகளும் பின்பற்றுகின்றன. இதனால்தான் நெருக்கடிகளைச் சமாளிக்க முடிகிறது. இவ்விரண்டு விதிகளும் மக்களுக்கு நம்பிக்கை யூட்டி நெருக்கடியைத் தவிர்க்கும். இவ்விதிகளைப் பின்பற்றுவதே யன்றிச் சில சமயங்களில் பெரிய பாங்குகளின் செல்வாதார நிலைகுலையும் தருவாயில் தலையிட்டுச் சொத்துகளைக் காப்பாற்றி, சமாளிக்க உதவி செய்து, மக்களிடம் பாங்கு முறிவுப் பீதி உண்டாகாமல் தடுப்பதும் உண்டு.

மேலே கூறியவற்றிலிருந்து ஏன் மைய பாங்கு, ரொக்கத் தோற்றுவாயாக இருப்பது ஒரு பாங்குத் திட்டத்துக்கு அவசியம் என்பது தெளிவாகும். நெருக்கடியில் ரொக்கமும் கடனுதவியும் ஓரிடத்திலாவது கிடைக்கும் என்ற உறுதியை மையபாங்கு முறை தருகிறது. செலவாணிப் புழக்கம் வேண்டிய அளவில் இருக்கச் செய்ய பாங்குத் திட்டத்துக்குச் சக்தி உண்டென்பது மக்களுக்கு உறுதியாகிறது.

மைய பாங்கின் இலக்கணத்தை வரையறுக்க வேண்டுமாயின், அதன் இன்றியமையாப் பணியின் அடிப்படையில்தான் செய்யவேண்டும். மேலே இறுதிக் கடன் ஈவோன் பணியே வற்புறுத்தப்பட்டது. ஆகவே இறுதிக் கடனீயும் பொறுப்புடைய பாங்கே மைய பாங்கு என்று இலக்கணம் கூறலாம். ஆனால் இது மைய பாங்கு பொருளாதாரத்தைத் தன்னிச்சைப்படி இயக்கியாளும் சக்தியுடையதென்பதை உணர்த்தவில்லை. ஆகவே பலர் மைய பாங்கின் பணிகளை இலக்கணமாகக் கூறுகின்றனர்.

## 2. மைய பாங்கின் பணிகள்

மைய பாங்கின் பணிகளைப் பல ஆசிரியர்களும் பல வகையில் பகுத்துள்ளனர். பாங்கின் பணிகள் ஒன்றுக்கொன்று தொடர்புடையனவாதலின் பலவேறு விதமாகத் தொகுக்க இடமுண்டு. ஆகவே கீழே தரப்பட்டது ஒரு வகை என்று கொள்க:

1. ரொக்க வசதிக் கட்டுப்பாடு மூலம் பண அளிப்பைக் கட்டுப்படுத்தல்.

2. பொது மக்களுக்கும் தொழிலுக்கும் உள்ள தேவைக் கேற்பச் செலவாணியை (Currency) நோட்டு வெளியீட்டுச் சர்வாதீனம் (Monopoly of note-issue) மூலம் நிர்வகிப்பது.

3. சாதாரண பாங்குகளுக்குப் பாங்காக இருப்பது. இதன் காரணமாய் அவைகளின் ரொக்க ரிசர்வை வைத்திருப்பதும். அவைகளுக்குத் தீர்வக வசதி செய்வதும்.

4. இறுதிக் கடனீவோனுக (lender of last resort) இருப்பது.

5. நாட்டின் அயல் நாட்டுச் செலாவணி ரிசர்வை நிர்வகிப்பது. (இதோடு நாணய மாற்றுக் கட்டுப்பாட்டை (exchange control) நிர்வகிப்பதையும் சேர்க்கலாம்.)

6. அரசாங்கத்துக்குப் பாங்காகவும் ஏஜண்டாகவும் ஆலோசகராகவும் பணி செய்வது.

7. ஓரளவு தனிப்பட்டவருக்குப் பாங்காக இருப்பது.

இனி இவைகளை ஒவ்வொன்ருக ஆராய்வோம்.

**1. ரொக்க வசதி செய்தல்**

மைய பாங்கு வணிகப் பாங்குகளின் மீது இரு வழிகளில் செல்வாக்குடையதாகிறது. (1) வணிகப் பாங்குகள் தம் 'நீர்மை' (ரொக்க) விஷயத்தில் காட்டும் அக்கறை, (2) மைய பாங்கு ரொக்கத்துக்கு அடிமூலமாயிருப்பது. இது முக்கியமான அம்சம். ரொக்கத்தில் இருவகை:* (1) மக்கள் தம் பாங்கு வைப்புகளை மாற்றும்போது எதைப் பெறுகிருர்களோ அது ஒருவகை. பாங்கின் நீர்மை என்பது இப்படி மாற்றும் சக்தியே. (2) மைய பாங்கு நீர்மையுடையது என்று கருதும் எப்பொருளும் ரொக்கம். ஒரு நாட்டில் ரொக்கம் என்பது சட்ட ரீதியான செலுத்துக் கருவியாக அங்கீகரிக்கப்பட்ட நாணயம், மையபாங்கு நோட்டுக்கள். இது முதல்வகை. மையபாங்கில் வணிக பாங்குகள் வைத்திருக்கும் வைப்பும் ரொக்கம். இந்த வைப்புகளை வேண்டும் போது முதல் வகை ரொக்கமாக மாற்ற முடியுமாதலால், மையபாங்கு வைப்புகளும் ரொக்கம்.

ஆகவே ரொக்கம் என்பது; (1) மையபாங்கின் தேவைக் கேற்ப நாணய அச்சகத்தால் அளிக்கப்பெறும் நாணயங்கள், (2) மையபாங்கின் பொறுப்புகளான நோட்டுகளும், பாங்கு

வைப்புகளும். மேனுடுகளில் முதல் வகை ரொக்கம் ஆட்சியில் முக்கியமன்று. (நம் நாட்டில் முக்கியம்.) பாங்கு வைப்புகள் பண அளிப்பு மாறுதல்களுக்கு முக்கிய காரணம். மைய பாங்கு வணிக பாங்குகளின் கையிலிருக்கும் நோட்டுகளையும் தன்னிடம் உள்ள அவைகளின் வைப்புகளையும் தன் விருப்பப்படி மாற்ற முடியுமானல், மையபாங்கு நாட்டின் பண அளிப்பை மாற்ற முடியும். ஆனல் மைய பாங்கு தானகவே நோட்டுகளைச் செலாவணியில் கூட்டுவதோ குறைப்பதோ இல்லை: இவை பாங்குகளின் நடவடிக்கையையே பொறுத்தன. தம் மையபாங்கு வைப்பைப் பாங்குகள் இதற்காக ஆள்கின்றன. நோட்டுகளும் மையபாங்கு வைப்புகளும் வருமானமில்லாதன. மக்கள் செலாவணித் தேவைக்காகவே நோட்டுகள் தேவைப்படுவன. ஆகவே வணிக பாங்குகள் தமது நோட்டிருப்பை தம் வைப்புப் பொறுப்பில் ஒரு அற்ப சதவீதமே இருக்கும்படிப் பார்த்துக் கொள்கின்றன.

வணிக பாங்குகளின் வைப்புப் பொறுப்புகள் மக்களிடமிருந்து சொத்துகள் வாங்குவது மூலம் அதிகப்படும். இப் பொறுப்பைச் சமாளிக்கத் தம்மிடம் குறிப்பிட்ட ரொக்க விகிதம் இருக்கவேண்டும். இவ் விகிதத்தில் மையபாங்கு நோட்டுகளும் ஒரு பகுதி. நோட்டுகளும் மையபாங்கு வைப்பும் பதிலீடுகள். ஆகவே தன்னிடமுள்ள வணிக பாங்கு வைப்புக் கணியத்தை மையபாங்கு மாற்ற முடியுமானல், பாங்குகளுக்குக் கிடைக்கும் ரொக்கத்தை மாற்ற முடிவதாகிறது; ரொக்கத்தை மாற்ற முடியுமானல் பாங்குகளின் ரொக்க விகிதமும், ஆகவே பண அளிப்பும் மையபாங்கால் மாற்ற முடிவதாகிறது.

வணிக பாங்குகளின் மையபாங்கு வைப்பு மக்கள் நடவடிக்கையாலும் மாறுதல் பெறலாம். அவர்களது நோட்டுச் செலாவணித் தேவை அதிகப்பட்டு, பாங்குகளிலிருந்து நோட்டுகளை வாங்கும்போது, பாங்கில் வைப்புகள் குறையும். பாங்குகளின் ரொக்க இருப்பும் இதே அளவுக்குக் குறையும். ஆகவே ரொக்க விகிதம் வழக்கத்துக்குக் குறையும். விகிதத்தை நிலைநிறுத்த பாங்குகள் சொத்துகளைக் குறைக்க வேண்டி வரும்.

இவ்வித நிலைமையைத் தவிர்க்க ஒரு வழி மையபாங்கு தலையிடுவது. அது தன்னிடமுள்ள பாங்குகளின் வைப்பை உயர்த்தினல், விகிதம் காப்பாற்றப்படும்.

நாம் அறிவது, வணிக பாங்குகளின் வைப்புப் பொறுப்புகள்—மக்கள் ரொக்கத் தேவை யாதாயினும் சரி—மையபாங்கிடம்

வணிக பாங்குகளின் வைப்பு நிலையைப் பொறுத்தது. மைய பாங்கு இதை எவ்வாறு ஆளமுடியும்? வெளி அங்காடி நடவடிக்கை—அதாவது அங்காடியில் பத்திரங்களை வாங்குவது, விற்பது. வாங்குவது மூலம் 'ரொக்கம்' அதிகப்படுத்தப் படுகிறது.

வேறொரு வழி, ரொக்க நெருக்கடியில் பாங்குகள் பண அங்காடிக்கு கொடுத்த குறுங்காலக் கடனை மீட்க முயன்றால், அவ்வங்காடி மையபாங்கிடம் செல்லும்; இப்போது மறுகழிவு, கடன் ஆகிய மூலம் மையபாங்கு பாங்குகள் 'ரொக்கம்' பெறச் செய்யும். இது பரந்த விளைவுடையதாகையினால் வெளி அங்காடி நடவடிக்கையையே மையபாங்கு விரும்பக்கூடும். [மையபாங்கு களின் நடவடிக்கை கருவூல உண்டியல்கள் (Treasury Bills) சம்பந்தமாகவே இருக்கும்.]

ஆகவே சாதாரண பாங்கு தன் வைப்புப் பொறுப்பைச் சொத்து விற்பனை அல்லது வாங்கல் மூலம் திருத்துவது போலவே மையபாங்கும் செய்கிறது. சிலபோது மக்களே அதனிடம் வணிக உண்டியல்களைக் கொண்டு வந்து 'ரொக்கம்' நாடலாம். ஆகவே தன் சொத்துகளின்மீது தனக்கிருக்கும் ஆட்சி பாங்குகளை ஆள வசதி செய்கிறது.

பாங்குகளுடன் உள்ள தொடர்பு மூலம் அன்றியும், வேறு ஒரு தொடர்பு மூலமும் மையபாங்கு 'ரொக்க' நிலையைத் திருத்த முடியும். அரசின் பொதுத்துறை (Public) வைப்பு தன்னிட முள்ளது. அரசாங்க நடவடிக்கையால் அது குறைந்தால் சமூகத் தில் 'ரொக்கம்' வெளியேறும்; ஏறினால் சமூகத்தில் 'ரொக்கம்' குறையும். அரசாங்க நடவடிக்கையினால் ஏற்படும் ரொக்க மாறுதல்கள் சாதாரண பாங்குகளின் பேரிலுள்ள பாங்கு வைப்புகளில் பிரதிபலிக்கும். இந்த முறையில் 'ரொக்க' மாறுதல் ஏற்படுவதை மைய பாங்கு விரும்பவில்லையானால், எதிர் நடவடிக்கை எடுத்துக்கொள்ளும். வரி வசூல் காலத்தில் பொதுத் துறை வைப்பு அதிகரித்தால், 'ரொக்கம்' குறையும்; இதை ஈடு செய்ய மையபாங்கு சொத்து வாங்க ஆரம்பிக்கும். இதனால் ரொக்கம் மீண்டும் வெளியேறும்.

ஆகவே மையபாங்கு எவ்வாறு ரொக்கத்தைக் கட்டுப் படுத்தும் என்பதற்கு விடை, தன் சொத்துகளை மாற்றுவது மூலம் என்று காண்கிறோம்.

இதுவரையில் வேண்டிய அளவுக்கு மையபாங்கில் நோட்டுகள் உள்ளன என்று வைத்துக்கொண்டோம். இனி இதனுண்மையை ஆய்வோம்.

## 2. மைய பாங்கும் நோட்டு வெளியீடும்

எல்லா நாடுகளிலும் நோட்டு வெளியீடு மையபாங்கின் சர்வாதீனமாக இருந்து வந்திருக்கிறது. ஒரு காலத்தில் மைய பாங்குகளுக்கு நோட்டு வெளியீடு பாங்குகள் (Banks of Issue) என்றே பெயர் இருந்தது. அரசாங்கம் ஒரு பாங்கின் நோட்டு களைச் சட்டச்செலுத்துடையனவாகச் செய்தால் அது ரொக்கப் பணமாக மதிக்கப்படும். நாணய உற்பத்தியைத் தன் சர்வாதீன மாக வைத்துக்கொண்டு நாணயம் வேண்டியபோது மைய பாங்குக்குக் கொடுப்பதும், நோட்டு வெளியீட்டை ஒரு பாங்குக்கு விட்டு விடுவதும் அரசாங்கத்தின் வழக்கமாகிவிட்டது. அரசாங்கம் வெளியிடுவதாயின் அரசியல் கட்சிகளின் ஆதிக்கத்தில் வெளியீடு அளவு கடந்து விடும் என்கிற அச்சத்தினால் இந்த வேலை சில காட்டுப்பாடுகளுடன் தனியார் துறை பாங்கொன்றுக்கு விடப்படலாயிற்று. இங்கிலாந்து போன்ற சில நாடுகளில் அரசாங்கத்துக்குக் கடன் உதவியதற்குப் பிரதி பலனாக நோட்டு உரிமை பாங்குகளுக்குத் தரப்பட்டது. ஆதியில் நோட்டுரிமை பல பாங்குகளுக்குத் தரப்பட்டு, அதன் கெடுதல் களை அனுபவித்த பின்னர்த் தான் ஒரு தனி பாங்குக்குச் சர்வாதீன உரிமை தரப்பட்டது. இங்கிலாந்தில் 1844-இலும் அமெரிக்காவில் 1915-இலும் தான் இப்படிச் செய்யப்பட்டது. சமீப காலத்தில் தோன்றிய மைய பாங்குகள், இந்திய ரிசர்வு பாங்கைப்போல ஆரம்பத்திலிருந்தே நோட்டுரிமைச் சர்வாதீனம் பெற்றதே இவைகளை மைய பாங்குகளாகச் செய்தன எனலாம்.

இன்று மைய பாங்குகளுக்கு மட்டுமே நோட்டு உரிமை இருக்கிறது. வேறு பாங்குகள் வெளியிட்டிருந்த நோட்டுக்கள் நாளடைவில் மைய பாங்கு நோட்டுக்களில் ஐக்கியமாகி விட்டன.

இங்கிலாந்தில் 1844-வது ஆண்டுச் (Peel's Act) சட்டப்படி இங்கிலாந்து பாங்கு தவிர்த்த மற்ற பாங்குகள் அந்தத் தேதியில் வெளியிட்டிருந்த அளவுக்கு மேல் இனி வெளியிடக் கூடாது என்றும், பாங்கு முறிவு, தானே மூடுதல் முதலியன நேர்ந்த போது, அவைகளின் வெளியீட்டில் 2/3 பகுதி அளவுக்கு இங்கிலாந்து பாங்கின் உரிமையாகும் என்றும் வரையறுக்கப் பட்டது. இம்முறையில் துவங்கிய ஐக்கியப்பாடு 1920இல் தான்

முற்றுப்பெற்றது. இதே போலப் பிற நாடுகளிலும் பழைய நோட்டுக்கள் மறைந்தன. ஆனால் அமெரிக்காவில் பெடரல் ரிசர்வு பாங்குகளுக்கு முழுச் சர்வாதீனமில்லை என்று சொல்லலாம். ஏனென்றால் தேசீய பாங்குகளின் (National Banks) வெளியீடுகள் சிலவும் அரசாங்க வெளியீடுகள் சிலவும் செலாவணியில் இருக்கின்றனவென முன்னர்க் கூறியது நினைவிருக்கும். ஆயினும் பெடரல் ரிசர்வு நோட்டுகள் தாம் நோட்டுச் செலாவணி நிலையை நிர்ணயிருக்கும் அளவுக்குப் பெரியனவாக உள்ளன. ஆகவே அமெரிக்கத் திட்டத்திலும் மைய பாங்குக்குச் சர்வாதீனம் உள்ளதாகக் கூறலாம்.

மைய பாங்குக்குச் சர்வாதீனம் அவசியமா என்பது ஒரு கேள்வி. நாடு முழுவதும் ஒரு தன்மையான நோட்டுகள் செலாவணியில் இருப்பது நல்லது என்பது வெளிப்படை. நோட்டுச் செலாவணி அதிகமாக ஆளப்படும் சூழ்நிலையில் பற்பல நோட்டுக்கள் இருப்பது குழப்பத்தை உண்டாக்கும். தவிரவும் ஒரு தனி பாங்குக்கு மட்டும் உரிமையிருந்தால் அரசாங்கத்துக்கு மேற் பார்வை எளிதாக இருக்கும். மேலும் பாங்குகளே பாங்குப் பணத்தை உற்பத்தி செய்யக் கூடிய சக்தி பெற்றுள்ள சூழ்நிலையில் மைய பாங்குக்கு நோட்டுரிமை அளிப்பது அந்தப் பாங்குகளின் பணப் பெருக்கச் சக்தியைக் கட்டுப்படுத்துவதற்கு உதவியாக இருக்கும். எப்படி எனில் பாங்குச் செலாவணியைப் பெருக்கினால் அதற்கேற்ப மக்கள் கைச் செலவுக்கு நோட்டுகள் தேவைப்படும். அந்த நிலையில் சாதாரண பாங்குகள் மைய பாங்கிடம் நோட்டுகளைப் பெற வர வேண்டியிருக்கும். இன்றேல், பாங்குகள் தமக்கு வேண்டிய ரொக்கத்தைத் தாமே அச்சடித்துக் கொள்ள முடிந்து மைய பாங்கிடம் போக வேண்டாது அவை பணத்துறைக் கட்டுப் பாட்டுக் குள்ளடங்காத நிலை ஏற்படும். ஆனால் இந்த வாதத்தில் ஒரு அனுமானம் தொக்கி நிற்கிறது. ஒரு சாதாரண பாங்கின் நோட்டு மற்றெல்லா பாங்குகளாலும் மக்களாலும் ரொக்கமாக மதிக்கப்பட்டு ஏற்கப்படும் என்பது. ஏற்கப் படாதாயின் நோட்டை வெளியிட்ட பாங்கு மைய பாங்குப் பணத்தையும் இழக்கும். ஆகவே சில தனி பாங்குகளுக்கு நோட்டுரிமை தருவதால் மைய பாங்கின் செல்வாக்குக்கு ஈன முண்டாகுமென்று நினைப்பதற்கில்லை. ஆனால் எல்லா பாங்கு களும் ஒரே அளவில் நோட்டுக்களை வெளியிட்டால் நிலைமை வேறு. ஒன்றுக்கொன்று மைய பாங்கு ரொக்கத்தை இழக்க நேரிடாது. ஆயினும் மைய பாங்கில் 'பாங்கு வைப்பு' விகிதம் குறையும். ஆனால் பாங்குகள் தம்முடைய நோட்டுகளையே

தீர்வகத்தில் பைசலுக்கு ஒப்புக்கொள்ளுமாயின் 'பாங்கு வைப்பு' விகிதம் வீழ்வதால் கேடொன்றுமில்லை. ஆனால், சட்டம் மைய பாங்கில் வைப்புத்தான் ரொக்கம் என்றும், அது பாங்குகளின் வைப்புப் பொறுப்புக்கும், நோட்டுப் பொறுப்புக்கும் ஒரு விகிதமாக இருக்கவேண்டுமென்றும் வரையறுக்கலாம். உண்மையில் இப்படித்தான் எல்லா நாடுகளிலும் காணப்படுகிறது. இப்படிச் செய்யப்படின் சாதாரண பாங்குகள் நோட்டு வெளியிடுவதற்கு ஆட்சேபனை இருக்க முடியாது. வேண்டுமானால் ஒவ்வொரு பாங்குக்கும் ஓர் உச்ச எல்லையை வகுக்கலாம். இப்படிச் செய்தால் மொத்த நோட்டுச் செலாவணியை நிர்ணயிருக்கும் சக்தி மைய பாங்கிடமே இருக்கும். இன்றும் ஸ்காட்லாந்து பாங்குகள் அளவிட்ட நோட்டுரிமையுடன் இருப்பதை நினைவிற்கொள்க. அப்போது மைய பாங்கு கட்டுப்பாடு செய்ய வாய்ப்பு உண்டாகும்.

தவிரவும் பல பாங்குகள் நோட்டு வெளியிடும்போது இருப்பதைவிட ஒரு தனி பாங்கு வெளியிடும்போது நோட்டுகளுக்கு மதிப்பு அதிகமாக இருக்கும். மற்றும் நோட்டுவெளியீடு, செலவு இல்லாத, மிகவும் இலாபகரமான, பணப் பெருக்க முறை. இந்த உரிமையை ஒரு தனிப் பாங்குக்குக் கொடுத்து, வெளியீட்டு இலாபத்தில் அரசாங்கம் பங்கு பெறுவது எளிது.

அரசாங்கங்கள் நோட்டுகளைத் தாங்களே வெளியிடாததற்குச் சில காரணங்கள் கூறலாம். (1) அரசாங்க வெளியீடுகள் அளவு கடந்து போகக் கூடும் என்பதற்கு அநேகச் சான்றுகள் வரலாற்றில் காணக்கூடும். பட்ஜெட்டில் பற்றாக்குறை உண்டானபோதெல்லாம் நோட்டு வெளியீடு செய்யத் தோன்றும். அளவிறந்து வெளியிடப்பட்டு மதிப்பிழக்கும் நிலை உண்டாகலாம். (2) அவ்வப்போதுள்ள பொருளாதார நிலையை ஆய்ந்தறிந்து வேண்டிய அளவுக்குப் பணத்தைப் பெருக்கவோ குறைக்கவோ வேண்டிய அனுபவ அறிவு பாங்குத் துறையில் விருப்பவர்களுக்கே அதிகம். பொருளாதாரச் சூழ்நிலை மாறும் போதெல்லாம் பாங்குகள் உடனே உணரும் நிலையிலிருக்கின்றன. ஆகவே உடனே நடவடிக்கை எடுத்துக் கொள்ளக் கூடும். (3) அரசாங்கம் அரசியல் நெருக்கடிக்குப் பணிய வேண்டியிருக்கும். ஆனால் மைய பாங்கு அரசினர் விருப்பப்படி தன்னுடைய நடவடிக்கைகளை மாற்றிக் கொள்ள வேண்டியிருக்காது; விருப்பு வெறுப்பின்றி நாட்டுக்கு நலத்தைச் செய்யக் கூடும். (4) மைய பாங்கு இதர பாங்குகளோடு அரசாங்கத்தை விட நெருங்கிய தொடர்புடையதாகையால், அவைகளின் பணப்

பெருக்கச் சக்திகளை ஒழுங்கு படுத்த அதற்கு வாய்ப்பும் அனுபவமும் உண்டு. நாட்டின் செலாவணியைக் கட்டுப் படுத்தும் பொறுப்புடைய மைய பாங்கே நோட்டுச் செலாவணி உற்பத்தி உரிமையும் பெற்றிருப்பது பொருத்தமாகும். இப்படிப் பட்ட வாதம் நோட்டுரிமையை அரசாங்கத்திடமிருந்து பறித்த துண்மையாயினும், இன்று மைய பாங்கு அரசாங்கத்தின் விருப்பத்தையும் அனுமதியையும் அனுசரித்தே நோட்டு வெளி யீட்டை நிர்வகித்து வருகிறதென்பதையும், மைய பாங்கின் நோட்டுரிமைக்கு அரசாங்கம் வரையறைகள் செய்துள்ள தென்பதையும் மறக்கக் கூடாது.

இனி மைய பாங்குகளின் நோட்டுரிமை எந்தவிதமான கட்டுப்பாட்டுக் குட்பட்டது என்று பார்ப்போம். நோட்டு வெளியீட்டைக் கட்டுப்படுத்துவதென்றால் உச்சவரம்பு விதிப்ப தென்பதன்று. நாட்டினுடைய நேரிய தேவைக்கேற்ப வெளியீடு அமையும்படி ஏற்பாடு செய்தல் என்பதாகும். வெளியீடு தேவைக்கேற்பச் சுருங்கவும் பெருகவும் வேண்டும். இன்றேல் பணம் மனிதனுக்கு அடிமையாக இல்லாமல் அதற்கு அவன் அடிமையாக வேண்டி வரும். ஆனால் இவ்வித நேரிய வெளி யீட்டை நிர்ணயிப்பதெப்படி? நெடுங்காலமாக நோட்டு வெளி யீட்டை எம்முறையில் கட்டுப்படுத்துவது என்பது பற்றி விவாதம் நடந்து வந்திருக்கிறது. இந்த விவாவதத்தின் விளைவாகப் பல்வேறு முறைகள் வகுக்கப்பட்டுள்ளன. இவை களில் முக்கியமானவை: (1) பிரஞ்சு முறையான உச்ச நம்பக வெளியீட்டு முறை: (Maximum Fiduciary Issve System) (2) இங்கிலாந்து முறையான வரை செய்த நம்பக வெளியீட்டு முறை (Fixed Fiduciary System). (3) அமெரிக்க முறையான விகிதாசார வெளியீட்டு முறை (Proportional Reserve System). (4) இந்திய முறையான குறைந்த பட்ச ரிசர்வு முறை. (Minimum Reserve System)

இவைகளில் ஒவ்வொன்றைப் பற்றியும் சிறிது அறிய முயல்வோம். பிரான்சில் 1870 முதல் 1928 வரையில் உச்ச நம்பக வெளியீட்டு முறை இருந்தது. 1928-இல் அது விகிதா சார முறையை மேற்கொண்டது. இங்கிலாந்திலும் 1939-க்குப் பின் ஆளப்பட்டது எனலாம். இந்த உச்ச நிலைக்கு உட்பட்டுப் பொன் காப்பு இன்றி நோட்டு வெளியீடு செய்யலாம். பிரான்சில் 1928-க்கு முன் பாராளுமன்றம் அனுமதித்தாலன்றி மாறாத உச்ச வரம்பு இருந்தது. ஆனால் இங்கிலாந்தில் தற்காலிகமாகக் கருவூலம் வரம்பை மாற்றக்கூடும். பிரான்சு உச்ச வரம்புத்

திட்டத்தைக் கைவிட்டதற்குக் காரணம் பண அங்காடியின் அவ்வப்போதைய நிர்வாகத்திற்கு இம்முறை நெகிழ்ச்சியற்றதாய் இருந்ததும், பண வீக்கத்தைத் தடுக்கச் சக்தியற்றதாய் இருந்ததும் ஆகும். உச்ச வரம்பை அடிக்கடி பாராளுமன்றம் மாற்றத் தயாராயிருந்ததால் வரம்பு பண வீக்கத்துக்கு ஒரு தடையிருந்ததாகத் தெரியவில்லை. இங்கிலாந்தில் கருவூலத்துக்கு இந்த உரிமை தந்தது நெகிழ்ச்சியை அதிகப்படுத்தியது. ஆனால் கருவூலம் தவறு செய்தால் பண வீக்கத்துக்கு இடம் உண்டு. ஆகவே 1954-இல் இங்கிலாந்திலும் நோட்டுக்கு உச்ச வரம்பு நிர்ணயிக்கும் அதிகாரத்தை மீண்டும் பாராளுமன்றம் மேற்கொண்டு ஒரு வரம்பு விதித்ததில் ஆச்சரியமில்லை. உச்ச வரம்பு முறை கீன்சுக்குப் பிடித்திருந்தது. மைய பாங்குக்குக்கு அது சுயேச்சை தருவதாலும், நாட்டின் பொன் ரிசர்வு வேறு தேவைகளுக்குப் பயன்படுத்த விடுதலை செய்யப்படுவதாலும், அளவு கடந்து வெளியீடு ஏற்படாமல் தலையிட அரசாங்கத்துக்கு அதிகாரம் இருந்ததாலும் இந்த முறை மற்றவைகளை விடச் சிறந்தது என்றும், சட்ட மூலமாக நோட்டு வெளியீட்டின் தொகை நிர்ணயிக்கப்பட வேண்டுமாயின் இந்த முறையே எல்லாவற்றிலும் சிறந்தது என்றும் கீன்சு கருதினார்.

அடுத்தபடி வரை செய்த நம்பக வெளியீட்டுத் திட்டத்தைப் பார்ப்போம். இந்தத் திட்டத்தின் கீழ் நோட்டு வெளியீட்டுத் தொகை ஒரு குறிப்பிட்ட அளவுக்குப் பொன் இருப்புத் தேவையில்லாமல் இருக்கும். அதற்கு மேற்பட்டு 100 சதவீதம் பொன் காப்பு அவசியமாகும். 1844 இல் இங்கிலாந்தில் இந்தத் திட்டம் நடைமுறைக்கு வந்தது. அநேக நாடுகள் இதைப் பின்பற்றின. வரையறை எல்லைக்கு உட்பட்ட வெளியீட்டுக்கு எதிராக அரசாங்கச் செக்கூரிட்டிகள் இருக்கும். இந்த முறையின் நன்மை என்னவெனில், பொன் வேண்டா வரம்பு ஏற்றமாக இருக்குமானால், மைய பாங்கு நோட்டுத் தொகையைத் தேவைக்கேற்ப மாற்ற இடமிருக்கும். ஆனால் இதன் முக்கியமான குறை நெகிழ்ச்சியின்மை. உள்நாட்டுக்கோ, வெளிநாட்டுக்கோ பொன் வெளியேறினால் அதன் விளைவாகச் செலாவணி சுருங்கவேண்டி வரும். திடீரென்று ஒரு பீதி தோன்றிய காலத்தில், வேண்டிய அளவுக்குச் செலாவணியைப் பெருக்கமுடியாது. ஆனால் பூரிப்புக் காலத்தில் (Boom Period) நோட்டு வெளியீடு அளவு கடந்துபோகாமல் இந்த முறை தடுக்கக் கூடும். அநேகக் குறைபாடுகள் கூறப்பட்ட போதிலும் இந்த முறை இங்கிலாந்தின் மரபாக (tradition) இருந்து வந்திருக்கிறது. 1928இல் தான் நோட்டு வெளியீட்டில் ஓரளவு நெகிழ்ச்சி சட்டபூர்வமாக

ஏற்பட்டது. தற்காலிகமாக நம்பக வெளியீட்டை 260 மில்லியனுக்குமேல் அனுமதிக்கக் கருவூலகத்துக்கு அதிகாரம் தரப்பட்டது. ஆனால் இரண்டு ஆண்டுகளுக்குள் பாராளு மன்றத்தின் ஆமோதிப்புப் பெற வேண்டும். இப்படி நம்பக வெளியீட்டை உயர்த்துவது பவுண்டு பணத்தின் கௌரவத்தைப் பாதித்தது என்று அனுபவத்தில் தெரிந்தது. ஏனெனில் அது பணவீக்கத் துவக்கத்துக்கு அறிகுறியாக அயல் நாட்டாரால் கருதப்பட்டது. ஆயினும் இங்கிலாந்தில் நம்பக வெளியீட்டின் தொகை அனேக முறைகளில் 1928-க்குப் பின் மாற்றப்பட்டிருக்கிறது. முடிவில் 1953-இல் இதன் தொகை 1675 மில்லியனாக இருந்தது. இந்த ஏற்றத்தில் பெரும் பான்மை யுத்தம் துவங்கியதற்குப் பின் நிகழ்ந்ததாகும். 1939 செப்டம்பருக்குப் பின் நம்பக வெளியீட்டு முறை கைவிடப் பட்டது என்று சிலர் கூறுகிறார்கள். ஏனென்றால் அந்த ஆண்டில் மைய பாங்கிடமிருந்த பொன் அத்தனையும் மாற்றுச் சமன் செய் கணக்குக்கு (Exchange Equalisation Account) மாற்றப்பட்டு, மைய பாங்கில் பொன் இருப்பு இல்லாத நிலை தோன்றியது. இப்போது நோட்டுக்களுக்கு எதிராகச் சொற்ப உலோகமும் பெரும்பாலும் அரசாங்கச் செக்கூரிட்டிகளுமே இருக்கின்றன.

அடுத்தபடி விகிதாசார முறையைப் பார்ப்போம். இந்த முறையின்கீழ் நோட்டு வெளியீட்டில் ஒரு குறிப்பிட்ட விகிதத்துக்குப் பொன் ரிசர்வு இருக்கவேண்டும். சாதாரணமாக இந்த விகிதம் 30%—40% அளவுக்கு இருக்கக் காண்கிறோம். இந்த முறை பொது அறிவுப்படி பார்த்தாலும், தர்க்க ரீதியாகப் பார்த்தாலும் சிறப்பற்றது என்பது கீன்சுனுடைய கருத்து. எல்லாவித நோட்டுக் கட்டுப்பாடு முறைகளிலும் உள்ள குறைகளை இதில் காணலாம் என்பது அவருடைய கொள்கை. ஏனென்றால் இது பொன் அனைத்தையும் முடக்கி வைக்கிறது. நம்பக முறையில் காணப்படும் அளவு கூடப் பொன்னை விடுதலை செய்வதில்லை. பொன் நாட்டில் புகுந்தால், அவசியமோ இல்லையோ, நோட்டுப் பன்மடங்காகும். இதை மைய பாங்கு தடுக்கலாமே என்றால், ஆம், ஆனால் மைய பாங்குக்கே நோட்டுத் தொகையை நிர்ணயிக்க உரிமை தந்து விடுவது சிறப்பான வழியல்லவா? நிர்ப்பந்தம் உண்டானபோது பொன் மதிப்புக்கு ஏற்ப, நோட்டுக்களை வலிந்து குறைக்கவேண்டியிருக்கிறது. செலாவணிச் சுருக்கம் பன்மடங்காக நிகழவேண்டியிருக்கிறது. இந்த முறையை ஆள்வதினால் ஒரு நாடு செலாவணித் தகராறு களைத் தவிர்க்கமுடியும் என்று நினைப்பதற்கு இடமில்லை. ஒரு நாடு மிகவும் செல்வம் மிகுந்து ஏராளமாகப் பொன்னைக் குவித்து

வைக்க முடியுமானுலொழிய இந்த முறை ஆபத்தானது. இந்த முறைதான் அமெரிக்காவில் ஆளப்படுவது; இந்தியாவிலும் சமீபகாலம் வரையில் ஆளப்பட்டு வந்தது.

அடுத்தபடியாகக் குறைந்தபட்ச ரிசர்வு முறையைப் பார்ப்போம். இந்த முறையின் கீழ் மைய பாங்கு குறிப்பிட்ட குறைந்தபட்ச அளவுக்குப் பொன்னையோ அயல் நாட்டுச் செக்கூரிட்டிகளையோ வைத்திருக்க வேண்டியிருக்கிறது. நோட்டு வெளியீட்டுக்கு உச்ச வரம்பு ஒன்றுமில்லை. அங்காடியின் தேவைக்கேற்ப வெளியீடு செய்ய மைய பாங்குக்கு உரிமை யிருக்கிறது. இந்தியாவில் 1956 ஜூலை வரையிலும் விகிதாசார முறையிருந்தது. அந்த ஆண்டில் இந்தக் குறைந்தபட்ச ரிசர்வு முறை ஆளப்பட்டது. இதன் கீழ் ரிசர்வு பாங்கு குறைந்தபட்சம் 115 கோடி ரூபாய் மதிப்புள்ள பொன்னையும் 400 கோடி மதிப்புள்ள அயல்நாட்டுச் செக்கூரிட்டிகளையும் வைத்திருக்க வேண்டியதாயிற்று. ஆனுல் 1957இல் 115 கோடி ரூபாய் பெருமானம் உள்ள பொன் உட்பட 200 கோடி வைத்திருக்க வேண்டுமென்று சட்டம் செய்யப்பட்டது.

மேலே பல முறைகளை விளக்கினேம். நோட்டு வெளியீடு நெடுங்காலமாக விவாதிக்கப்பட்ட விஷயம் என்றும் கூறினேம். 1844–ல் இங்கிலாந்தில் இங்கிலாந்து பாங்கு சாசனச் சட்டம் வருவதற்கு முன்பு ஒரு பெரிய விவாதம் நடந்தது. வாதங்கள் இரு வகையாக இருந்தன. ஒரு பக்கம் செலாவணிக் கருத்தினர் (Currency School), மற்ருெரு பக்கம் பாங்குக் கருத்தினர் (Banking School). செலாவணிக் கருத்து உடையோர் நோட்டுகளைப் பொன்னுக்குப் பிரதியாகக் கருதினுர்கள். ஆனுல் பாங்குக் கருத்து உடையோர், மீட்சித் தேவைக்கு மட்டும் பொற்காப்பு இருந்தால் போதும் என்று கூறினுர்கள். பாங்கு உலகில் ஓரளவு இருப்பு வைத்துக்கொண்டு கடன் பொறுப்பைப் பன்மடங்கு வளர்ப்பது அனுபவமாகையினுல் நோட்டு அளவுக் குப் பொன் பாதுகாப்பு அவசியம் இல்லை என்றும் செலாவணி நெகிழ்ச்சி பொருளாதாரச் சூழ்நிலைக்கேற்ப இருக்குமென்றும் கூறினுர்கள். ஆனுல் பாங்குகள் அளவுகடந்து வெளியிடும் என்ற அனுபவத்தினுல் 1844வது ஆண்டில் மந்திரி பீல் (Peel) இரண்டு தரப்பு வாதத்தையும் மனத்தில் வைத்துக்கொண்டு ஓரளவுக்குப் பொன்காப்பு இன்றியும் அதற்குமேல் 100% பொன் காப்புடனும் நோட்டு வெளியீடு செய்யச் சட்டம் வகுத்தார்.

சரியான முறை எது என்பதைப் பற்றி உறுதியான முடிவுக்கு வரமுடியாது. இந்த விஷயத்தில் நாம் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது எதற்காகப் பொன் தேவைப்படுகிறது என்பதாகும். பொன் ரிசர்வு நாட்டு மக்களுக்குச் செலாவணியில் நம்பிக்கை ஊட்டுவதற்கு என்றும், அல்லது அயல்நாட்டு பேரங்களில் பாக்கியைத் தீர்ப்பதற்கு என்றும், இரண்டு நோக்கங்களுக்காக இருக்கலாம். ஆனால் உள்நாட்டுச் செலாவணிக்குக் காப்பாகப் பொன் ரிசர்வு வேண்டுமென்பது பழையகாலப் பழக்கத்தினால் ஏற்பட்டது. இதற்குப் பொன்னை முடக்கிவைக்க வேண்டுமானால் அந்த அளவுக்குப் பொன் அயல்நாட்டுச் செலாவணியைப் பெறப் பயன்படாது. எந்த அளவுக்குச் செலாவணிக் காப்பு நிதியாகப் பொன் வைக்கப்படுகிறதோ அந்த அளவுக்குப் பூட்டி வைக்கப்பட்டு, அயல் நாட்டுப் பாக்கியைத் தீர்ப்பதற்குப் பயன்படாது. கீன்சு இந்த நிலையைக் கண்டித்தார். உலகத்திலுள்ள பணத்துறைப் பொன்னில் மூன்றில் இரண்டு பகுதி பூட்டி வைக்கப்படுவதாகவும், அந்த அளவுக்கு நாட்டுக்குப் பயன்படாது இருக்கிறதென்றும் கீன்சு எடுத்துக் காட்டினார். பொற்பாதுகாப்பு எவ்வளவு வேண்டுமென்பது மைய பாங்கினுடைய கருத்துக்கு விடப்பட வேண்டுமென்றும், சட்டம் நிர்ணயிக்கவேண்டியது சாதாரண பாங்குகளின் ரிசர்வுமட்டும்தான் என்றும் கருதினார். சாதாரண பாங்குக்கு ரிசர்வு கட்டுப்பாடு இரு வகையில் அவசியமாகலாம். (1) அவைகளின் கடன் பணவெளியீட்டைக் கட்டுப்படுத்த. ஆனால் ரிசர்வு தேவையானால் மைய பாங்கிடம் பெறலாம். மைய பாங்குக்கு இப்படிப்பட்ட போக்கிடம் இல்லை. ஆகவே அதுவே உபரி ரிசர்வு (excess reserve) வைத்திருக்க வேண்டியிருக்கிறது. (2) சாதாரண பாங்குகள் ரிசர்வை மைய பாங்கில் வைத்திருப்பது, மைய பாங்கு நிர்வாகச் செலவுக்கு உதவி செய்வதாகும். ஆனால் மைய பாங்கு ரிசர்வு எவ்வகைப்பயனுமின்றிப் பூட்டி வைக்கப்படுகிறது. மைய பாங்கின் நிகர பலம் எச்ச ரிசர்வு எவ்வளவுள்ளதென்பதைப் பொறுத்தது. ஆகவே எவ்வளவு உயரமாக ரிசர்வு விதிக்கப்படுகிறதோ அவ்வளவுக்கும் எச்சம் குறைந்து மைய பாங்கின் பலம் குறையும். 100% பொன் வைத்திருக்க வேண்டிய மைய பாங்கு ஒன்று, இப்படி வைத்திருக்க வேண்டாத மைய பாங்கைவிட அதிக பலமுடையதன்று. கீன்சுனுடைய கருத்துப்படி மைய பாங்கினுடைய செயலை இரண்டு வகையில்தான் கட்டுப்படுத்த நியாயம் உண்டு.

முதலாவதாக, ஒரு நாட்டின் பொன் இருப்பை இரு பகுதிகளாகப் பிரித்து, ஒரு பகுதி ஆபத்துக் காலத்துக்கும்,

மற்றொன்று சாதாரணத் தேவைகளுக்கும் நெளிவுகளுக்கும் ஒதுக்கவேண்டும். முதல் தொகுதி நாட்டின் நோட்டுச் செலாவணிக்கோ பாங்குச் செலாவணிக்கோ எவ்விதக் குறிப்பிட்ட விகிதத் தொடர்புடையதாக இருக்கவேண்டிய அவசியமில்லை. ஆகவே பொன் ரிசர்வு ஒரு குறிப்பிட்ட குறைந்தபட்ச அளவுக்குக் கீழ் குறையக்கூடாது என்ற வரையறை போதும். இந்த வரையறை இன்று காணும் வரையறைகளுக்கு மிகக் குறைந்ததாகவே இருக்கும். இரண்டாவது, நம்பிக்கையூட்டுவதற்காக வேண்டுமானல் நோட்டுக்கு ஓர் உச்சவரம்பு இருக்கலாம். இப்படிப் பொன்னுக்கு ஒரு குறைந்த பட்சமும், நோட்டுக்கு ஓர் உச்ச வரம்பும் சட்டம் குறிப்பிடுமானல் வேறு எந்தவிதப் பாதுகாப்பும் அவசியமில்லை. ஆனல் இவ்விரண்டு வரம்புகளும் அவசியமானல் அரசாங்கத்தால் மாற்றக் கூடியவைகளாக இருக்கவேண்டும்.

சட்டம் ஒருபுறமிருக்க, ஒரு மைய பாங்கு எந்த அளவுக்கு ரிசர்வு வைத்திருக்க வேண்டுமென்பதையும் கீன்சு ஆராய்கிறர். ரிசர்வின் ஒரு நோக்கம் நெருக்கடியில் ரொக்கம் தருவது. இதற்கு மேற்குறிப்பிட்ட குறைந்தபட்ச இருப்பு பயன்படும். மற்றொரு நோக்கம் மேலே சொன்னபடி நம்பிக்கை உண்டாக்க. இந்த நம்பிக்கை எந்த அளவு ரிசர்வாலும் காப்பாற்றப்படலாம். ஏனெனில் மக்களுக்கு நம்பிக்கை உண்டாக்க வழக்கமான ரிசர்வு இருந்தால் போதும். வழக்கமான ரிசர்வு என்பது பேரளவு ரிசர்வு என்பதன்று. இவ்விரண்டையும்விட முக்கியமான நோக்கம் குறுங்கால அயல் நாட்டுச் செலுத்து நிலையில் ஏற்படும் மாறுதலைச் சமாளிப்பதுதான். இதுவே எவ்வளவு ரிசர்வு வேண்டுமென்பதை நிர்ணயிக்க வேண்டியது. நெடுங்காலச் செலுத்து நிலையைத் தக்க நடிவடிக்கை மூலம் ஒழுங்குபடுத்துவது மைய பாங்கினுடைய பொறுப்பு. ஆனல் இதற்குக் காலம் பிடிக்கும். ஆகவே தற்காலிக ஆட்சிக்குத்தான் பொன் தேவை. இதற்கு எவ்வளவு ரிசர்வு வேண்டுமென்பதை நிர்ணயிக்கும்போது ஒரு நாட்டின் செலுத்து நிலையில் எவ்வளவு நெளிவுகள் ஏற்படும் என்பதையும், அவைகளை மைய பாங்கு தன் நடவடிக்கையால் சீர்திருத்துவதற்குள் எவ்வளவுக்குச் செலுத்து பாக்கிகள் குவியும் என்பதையும் தற்காலிக நெளிவுகள் எவ்வளவு இருக்கும் என்பதையும் கவனிக்க வேண்டும். இந்தியாவில் ஒரு காலத்தில் நிறுவப்பட் டிருந்த பொன் திட்ட ரிசர்வை (Gold Standard Reserve) கீன்சு உதாரணமாகக் காட்டினர். இந்த ரிசர்வு, நோட்டு ரிசர்விலிருந்து வேறுபட்ட ஒரு தனி ரிசர்வாக இருந்தது.

### 3. மைய பாங்கு, வணிக பாங்குகளுக்குப் பாங்காயிருப்பது (Central Bank as Bankers' Bank)

நோட்டு வெளியீட்டுப் பணியும், அரசாங்கத்துக்குப் பாங்காகும் பணியும் பரிணமித்தபோது, மைய பாங்கு வணிக பாங்குகளின் ரொக்க ரிசர்வுகளின் காவலனாக (Custodian of Bankers' Reserves) ஆயிற்று. இங்கிலாந்தில் வணிக பாங்குகள் இங்கிலாந்து பாங்கினிடம் வைப்பு வைத்திருப்பது வழக்கமாக இருக்கிறது. இங்கிலாந்து பாங்கு நோட்டு வெளியீட்டு பாங்காகவும் அரசாங்க பாங்காகவும் இருந்ததே இதற்குக் காரணம். நாட்டின் பல இடங்களில் இங்கிலாந்து பாங்கு கிளைகளைத் திறந்தது அதனிடம் வைப்புச் செய்வதற்கு வசதி அளித்தது. 18-ஆம் நூற்றாண்டில் தனியார் பாங்குகள் ஆரம்பித்த வைப்பு வைக்கும் இம்முறை நாளடைவில் வளர்ந்து, தீர்வக முறையால் உறுதி செய்யப்பட்டு, இப்போது இங்கிலாந்து பாங்கின் பணத்துறை நடவடிக்கைக்கு ஒரு முக்கியமான கருவியாக இருக்கிறது.

பிற நாடுகளிலும் இங்கிலாந்தில் காணப்பட்ட காரணங்களுக்காகவே இம்முறை வளர்ந்தது. எல்லா நாடுகளிலும் நோட்டு வெளியிடும் பாங்குகள் சாதாரண பாங்குகளின் ரொக்க இருப்புக்குக் காவலனாகப் பரிணமித்துள்ளன. ஆனால் அமெரிக்காவில் ஃபெடரல் ரிசர்வு பாங்குகள் அமைக்கப்பட்ட போது சாதாரண பாங்குகள் ரிசர்வு பாங்குகளில் வைப்பு வைக்க வேண்டுமென்பது சட்டபூர்வமாகவே வற்புறுத்தப்பட்டது. இந்த அமெரிக்க முறையை இந்தியா போன்ற பல நாடுகள் பின்பற்றியுள்ளன.

இப்படி ரொக்க ரிசர்வு ஓரிடத்தில் வைக்கப்படுவது ஒரு நாட்டின் பாங்குத் திட்டத்துக்கு உறுதி தரும் வழிகளில் ஒன்று.

(1) பாங்குகளிடம் ரொக்க ரிசர்வு சிதறிக் கிடப்பதை விட ஓரிடத்தில் சேர்ந்திருப்பது நாட்டின் பாங்குப் பணத்தில் நம்பிக்கை உண்டாக்கும்.

(2) மைய பாங்கிடம் ரிசர்வு இருப்பது நெருக்கடிகளைச் சமாளிப்பதற்கு வசதியாக இருக்கும். பாங்குத் திட்டத்தில் எங்கு நெருக்கடி உண்டோ அங்கு ரொக்கத்தைச் செலுத்த முடியும். நாட்டிலுள்ள ரொக்கத்தை வேண்டியாங்கு ஆள இம்முறை வழி செய்கிறது.

(3) பாங்குத் திட்டத்தின் மொத்த ரொக்கத் தன்மையை, பண அளிப்பு நெகிழ்ச்சியை, அதிகப்படுத்துகிறது. ஆனால் நாட்டின் மொத்தப் பணச் செலாவணியை ரிசர்வுகள் நேரடியாக கூட்டவோ குறைக்கவோ செய்யா.

(4) மைய பாங்கு இறுதிக் கடன் ஈவோன் என்ற பொறுப்பை ஏற்றுக்கொள்ள இம்முறை வசதி செய்கிறது. பாங்குகள் மைய பாங்கில் ரிசர்வு வைப்பதால்தான் அவை களுக்குத் தேவைப்படும் போது மறு கழிவு மூலமும், கடன் மூலமும் ரொக்கம் கொடுக்க முடிகிறது.

(5) மைய பாங்கு இப்படி நெருக்கடி நிலையில் உதவும் என்ற நம்பிக்கை இல்லாவிடில் ஒவ்வொரு பாங்கும் தன் நெருக்கடிகளைச் சமாளிக்க வேண்டி, தானே ரொக்கத்தை வைத்திருக்க வேண்டும். தற்போது வணிக பாங்குகள் தங்கள் கைச் செலவுக்கு வேண்டிய ரொக்கத்தை மட்டும் வைத்துக்கொண்டு மீதியை மைய பாங்கில் வைப்பது சாதாரண வழக்கமாக இருக்கிறது. வேண்டும்போது மைய பாங்கிலிருந்து எடுப்பதும், வேண்டாத போது அதில் செலுத்துவதும் வழக்கம்.

ஆனால் மைய பாங்கிடம் வைப்பு வைப்பது பாங்குகளுக்குப் பாதுகாப்பும் திண்மையும் தருகிறது என்று கூறுவது ஓரளவுக்கே உண்மை. ஏனெனில் உண்மையில் பாங்குகளுக்கு நீர்மை யைத் தருவது மைய பாங்கில் மறு கழிவு அல்லது கடன் வசதி ஆகும். ஆனால் இப்படி ரிசர்வைத் தொகுப்பது மைய பாங்கின் கடன் உதவிச் சக்தியை அதிகப்படுத்துகிறது என்பதுண்மை. இந்த முறையில் மைய பாங்கில் தொகுக்கும் ரிசர்வு முறை மறை முகமாக பாங்குத் திட்டத்தின் நீர்மையை அதிகப்படுத்துகிறது என்று கூறலாம்.

(6) மைய பாங்கில் குறைந்தபட்ச ரிசர்வு வைப்பது, அதன் செல்வநிலையை உறுதிப்படுத்துவதோடு, பாங்குத் திட்டத்தையும் கடன் பணச் செலாவணியையும் கட்டுப்படுத்த வழி செய்கிறது. பாங்குகளிடமிருந்து ரிசர்வு கேட்பது பல வகைகளில் பயன் படும். முதலாவது, நேரடியாக ரிசர்வு விகிதத்தை மாற்றிப் பாங்குகளின் கடன் கொடுக்கும் சக்தியை மாற்றலாம். இரண்டாவது, மைய பாங்கு செம்மையான பாங்குக் கோட் பாட்டைப் பின்பற்ற அதற்குப் போதிய பொருள் வசதி உண்டாகிறது. மூன்றுவது, சாதாரண பாங்குகள் ரொக்கம் நாடிச் சொத்துகளை விற்க நினைத்தால் அவைகளை வாங்க மைய பாங்கிடம் ரிசர்வு இருப்பது நல்லது. ரிசர்வை ஒன்றுபடுத்து

வதால் மைய பாங்கின் பணத்துறை சக்தி அதிகப்படுகிறது என்பது தெரிந்தபின் ரிசர்வு வீதத்தை அவ்வப்போது மாற்றி பாங்குத் திட்டத்தைக் கட்டுப்படுத்தும் முறை தோன்றலாயிற்று.

வணிக பாங்குகள் மைய பாங்குகளிடத்தில் குறிப்பிட்ட அளவுக்கு இருப்பு வைக்க வேண்டியது கட்டாயமாக்கப்பட்டுள்ள தால் மைய பாங்கு அவைகளோடு நேரடியாகப் போட்டியிடுவது ஒழுக்கமற்றதாகக் கருதப்படுகிறது. ஏனெனில், வணிக பாங்கு களிடமிருந்து கட்டாயமாகப் பணத்தைப் பெற்று, அப்பணத் தைக் கொண்டே அவைகளுடன் போட்டியிடுவது நியாயமன்று. ஆனால் இந்த வாதம் ஓரளவுக்கே சரியானது. மைய பாங்கின் கடன் சக்தி பாங்குகளின் ரிசர்வு வைப்பை மட்டும் பொறுத்த தன்று. மைய பாங்குக்குச் சட்டபூர்வமான நோட்டுப் பணத்தை உண்டாக்க சக்தி இருக்கிறது என்பதை மறக்கக்கூடாது. ரிசர்வுகளால் ஏற்படும் சக்தி அவ்வளவு முக்கியமானதாகக் கருத முடியாது.

மைய பாங்கு போட்டியிட்டுக் கழிவு மூலமும் கடன் மூலமும் தன் பொறுப்பைப் பெருக்குமானால் அதனிடத்தில் இருக்கும் பிற பாங்குகளுக்குரிய ரிசர்வு வைப்பும் அதிகப்படும். இப்படிச் சாதாரண பாங்குகளோடு போட்டியிட்டு மைய பாங்கு பணப் பெருக்கத்தை உண்டாக்கினால் அது நாட்டின் அயல் நாட்டுச் செலுத்து நிலையைப் பாதித்து, முடிவில் மைய பாங்கின் ரிசர்வைப் பாதிக்கும். ஆகவே மைய பாங்கு இப்படிப் போட்டியிடாது. இந்த நிலை வருவதற்கு முன்னாலேயே வணிக பாங்குகள் தங்களுக்கு உரிய எச்ச வைப்பைப் பொன் உருவிலோ, அல்லது அயல் நாட்டுச் செலாவணியிலோ மீட்கும். இது முடியாதபோதுதான் வணிக பாங்குகள் எச்ச ரொக்கத்தை மைய பாங்கில் விட்டு வைக்க வேண்டி வரும். வேண்டுமானால் அவை நோட்டாகத்தான் பெற முடியும். அப்போது மைய பாங்கின் நோட்டுப் பொறுப்பும், வைப்புப் பொறுப்பும் ஒரே அளவுக்கு மாறும்.

### 4. மைய பாங்கு இறுதிக் கடனீவோனாக (Central Bank as the Lender of Last Resort)

அடுத்தபடி மைய பாங்கு இறுதிக்கடனீவியாகச் செய்யும் பணியைப் பற்றிப் பார்ப்போம். மேலே மறு கழிவுப் பணியிலிருந்து இப்பணி தோன்றியது என்றும், இரண்டு பணிகளும் இணைந்தவை என்றும் கூறினோம். இந்தப் பணியின் பொருள் என்னவெனில் பாங்குகளும் கழிவகங்களும் விரும்பும்

நியாயமான பண வசதியை மைய பாங்கு செய்ய வேண்டும் என்பதாகும். இங்கிலாந்து பாங்கு இந்தப் பொறுப்பை எளிதில் ஏற்றுக்கொள்ளவில்லை என்று வரலாறு கூறுகிறது. மறு கழிவு செய்யத் தயாராயிருந்தும் இறுதிக் கடனீவோன் பணியை முழுமனதாக அது ஏற்க வில்லை. அரசாங்கத்தின் வற்புறுத்தல் மீது அது சிறிது சிறிதாக இப்பணியை ஏற்றுக்கொண்டது. 1873 இல் பேஜட் என்ற நிபுணர் 'லொம்பார்டு தெரு' என்ற ஒரு நூலை வெளியிட்டார். அதில் அவர் மைய பாங்கின் பணியை விளக்கினர். இதற்குப் பின்பே இங்கிலாந்து பாங்கினுடைய கடமை இறுதிக்கடனீவோனாக இருப்பது என்பது எல்லோராலும் ஏற்கப்பட்டது. இங்கிலாந்து பாங்கைப் பின்பற்றிப் பின்னர்ப் பிற மைய பாங்குகளும் இப்பணியை ஏற்றன. இப்பணி மைய பாங்குகளுடைய முக்கிய அடிப்படை அம்சங்களில் ஒன்ருகும்.

மறு கழிவு செய்வது செலாவணி நெகிழ்ச்சியையும் நீர்மையையும் அதிகப்படுத்தும் வழியாகும். பாங்குகள் நீர்மை யில்லாச் சொத்தைக் குறைத்து ரொக்கத்தை உயர்த்த இது வழி செய்கிறது. சொத்துகள் வருமானம் தரக்கூடியவையாகையால் பண நெருக்கடி ஏற்பட்டாலன்றி, பாங்குகள் விற்க விரும்ப மாட்டா. எல்லாரும் நெருக்கடியில் அகப்பட்டபோது, மைய பாங்கைத் தவிர மற்றவர்களிடம் ரொக்கம் பெற முடியாது. தங்களுடைய ரொக்க ரிசர்வு, விதிக்கப்பட்ட விகிதத்துக்குக் கீழ் குறைந்தபோது, சாதாரண பாங்குகள் எங்கேயாவது ரொக்கம் பெற வேண்டியிருக்கிறது. இந்நிலையில் தகுந்த கடன் தாள்களைக் கொடுத்தால் ரொக்கம் கிடைக்கும் என்கிற நம்பிக்கை அவைகளுக்கு இருக்குமானல், அவை தைரியமாக அங்காடிக்குப் பண உதவி செய்ய முன்வரும். மைய பாங்கும் இந்தப் பொறுப்பை நிறைவேற்றுவது எளிது. நாட்டில் ரொக்கமாகக் கருதப்படும் நோட்டு அதன் பொறுப்பா கையினுல் நாட்டின் ரொக்க ரிசர்வு அதனிடம் இருக்கிறது. அங்காடிக்கு எவ்வளவு நோட்டுப்பணம் (ரொக்கம்) தேவையானுலும் அளிக்க முடியும்; அளிக்க உரிமையுண்டு. ஆகவே மறு கழிவு வசதி ஓர் அவசிய மான கருவியாகும்.

இந்த வசதியுள்ள வரையில் பாங்குகள் ஒவ்வொன்றும் கைச் செலவுக்கு வேண்டிய அளவுக்கு ரொக்கம் வைத்திருந் தால் போதும். வைப்புக்கு வரும் பணத்தில் ஓரளவு ரொக்க விகிதத்துக்கு வைத்துக் கொண்டு, மீதியைக் கடன் கொடுக்கலாம். (கடன் கொடுப்பதன் வழியாக வரும் சொத்தை வேண்டும்போது ரொக்கம் ஆக்கலாம்.) ஆகவே மறு கழிவு வசதி

ரொக்க ஆட்சியில் சிக்கனத்தை உண்டாக்குகிறது. மறு கழிவு வசதி இல்லாவிடில் ஒவ்வொரு பாங்கும் வைத்திருக்க விரும்பும் ரொக்கத் தேவை அதிகரிக்கும். வேண்டும்போதும் மைய பாங்கில் ரொக்கம் கிடைக்கும் என்கிற நம்பிக்கை இருப்பதால் தான் பாங்குகள் குறிப்பிட்ட சதவீத ரொக்கத்தை வைத்துக் கொண்டு எச்ச ரொக்கம் இல்லாமல் கடன் கொடுக்க முடிகிறது. இப்படி எச்ச ரொக்கம் இல்லாமல் பாங்குகள் கடன் கொடுப்பது அவைகளை மைய பாங்கு ஆள்வதற்கு வழி செய்கிறது. இதைப் பற்றிப் பின்னர்ப் பார்ப்போம்.

இப்படி மைய பாங்கு இறுதிக் கடனீவோன் பணியை ஏற்பதனுல், பாங்குகள் சதா மைய பாங்கை எதிர்பார்க்கும் நிலையில் தம் ரொக்க நிலையை வைத்திருக்கக்கூடாதென் பதற்காக, மைய பாங்கு தன் மறு கழிவு வசதியைப் பெறுவதற்கு நிபந்தனைகளை ஏற்படுத்தியிருக்கிறது. சாதாரணமாகப் பாங்குகள் மறு கழிவு செய்ய உரிமை உடையனவாயினும், நிபந்தனைகள் மைய பாங்கின் விருப்பத்தைப் பொறுத்தன. எந்த வகைச் சொத்துகளை மறு கழிவுக்கு ஏற்பதென்பதையும், எந்த வீதத்தில் மறு கழிவு செய்வதென்பதையும், மைய பாங்கே தீர்மானிக்கும். ஒரு பாங்கினுடைய நடவடிக்கை பிடிக்காவிடில் அதற்கு மறு கழிவு செய்ய மறுத்து விடலாம். ஒழுங்காக நடந்து வரும் பாங்குக்கு உதவி செய்வது அதன் கடமை. ஒழுங்கற்று நடந்து சிக்கிக்கொண்ட பாங்கைக் காப்பாற்றத் தலையிட்டு, தான் நஷ்டப்படுவது சரி அன்று.

அநேகமாக எல்லா நாடுகளிலும் மறு கழிவு சம்பந்தமாக ஆளப்படும் கட்டுப்பாடுகள் இங்கிலாந்துப் பாங்கைப் பின்பற்றி உண்டானவை. இங்கிலாந்து பாங்குக்கு அதன் சாசனத்தில் மறு கழிவு சம்பந்தமாகவும் கடன் சம்பந்தமாகவும் எத் தடைகளும் இல்லை. ஆயினும் அது இறுதிக் கடனீவோனுகப் பொறுப்பு ஏற்றபோது குறிப்பிட்ட வகைத் தாள்களையே மறு கழிவுக்கும், ஈட்டுக்கும் ஏற்றது. கழிவு அல்லது வட்டி வீதத்தை அவ்வப்போதிருக்கும் ரொக்கத் தேவைக்கும், தொழில் நிலைக்கும், அயல்நாட்டுச் செலுத்து நிலைக்கும் ஏற்ப மாற்றியது. நாளடைவில் இது வழக்காகிவிட்டது. பல நாடுகள் மைய பாங்கை நிறுவியபோது இதன் முறையையே வேண்டிய மாறுதல்களோடு பின்பற்றலாயின. ஆகவே சில வகைத் தாள்களையே மைய பாங்குகள் ஏற்கும் என்பது வழக்கமாகி விட்டது. அமெரிக்காவில் 1913இல் மைய பாங்கு முறை

துவங்கியபோது ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளின் அதிகாரம் வரையறுக்கப்பட்டது. இந்த பாங்குகள் தம்முடைய அங்க பாங்குகளின் தாள்களை மறு கழிவு செய்யவும், திறந்த அங்காடியில் பலவகைத் தாள்களை வாங்கவும் அதிகாரம் பெற்றன. அங்க பாங்குகளுக்கு மறு கழிவு செய்வதானல், அந்த பாங்கினுடைய கையெழுத்தும் அதன் வாடிக்கைக்காரர் கையெழுத்தும் உள்ள உண்டியல்களையும் புரோ நோட்டு களையுமே மறு கழிவு செய்யலாம்.

சமீப காலத்தில் நிறுவப்பட்ட மைய பாங்குகள் பரந்த அதிகாரத்தைப் பெற்றுள்ளன. பழைய மைய பாங்குகளுக்கும் புதிய பாங்குகளுக்கும் காணப்படும் முக்கிய வேறுபாடு, பின்னவை பொது மக்களோடு நேரிடையாகக் கழிவுத் தொடர்பு வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டதே ஆகும், வணிக பாங்குகளுக்கும் தனி நபர்களுக்கும் வேறுபாடு காட்டுவதில்லை.

**5. மைய பாங்கு பொன்னுக்கும் அயல்நாட்டுச் செலாவணிக்கும் காவலனுக இருப்பது (Central Bank as Custodian of Reserves)**

மைய பாங்கு நோட்டு வெளியிடும் பணியையும், பங்குகளின் ரொக்க ரிசர்வை வைத்திருக்கும் பணியையும் உடைமையால், அதற்கே நாட்டின் பொன் ரிசர்வையும் அயல்நாட்டு மாற்று ரிசர்வையும் வைத்திருக்கும் பணியும் தரப்பட்டது. ஒரு பாங்கு நோட்டுரிமைச் சர்வாதீனத்தைப் பெற்றதும் அந்த நோட்டுகளை மீட்பதற்கு வேண்டிய பொன் ரிசர்வையும் அதனிடம் ஒப்படைக்க வேண்டியதாயிற்று. வணிக பாங்குகள் எச்ச ரொக்கத்தை மைய பாங்கினிடம் வைத்தபோது அதன் காரணமாகவும் நாணய ரிசர்வும் பொன் ரிசர்வும் மைய பாங்குக்கு வந்தன. பொன் திட்டம் கைவிடப்பட்ட பின்னரும், அயல்நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாடு ஏற்பட்ட பின்னரும், ஒவ்வொரு நாட்டிலும் பொன் ரிசர்வு மைய பாங்கிடம் குவியலாயிற்று.

நோட்டு வெளியீட்டு பாங்கு, வணிக பாங்குகளின் ரொக்க ரிசர்வையும், நாட்டின் பொன் ரிசர்வையும் காக்கும் பொறுப்பை ஏற்றதும், நாட்டுச் செலாவணியின் மதிப்பைக் காக்கும் பொறுப்பையும் ஏற்பதாயிற்று. பொன் நாணயத் திட்டத்தின் கீழ், வெளியீட்டு பாங்கு தன் நோட்டுகளுக்குப் பதிலாகப் பொற்காசு தர வேண்டியிருந்தது. அதற்காகப் பொன் ரிசர்வு அவசியமாயிருந்தது. பின்னர் நோட்டுகளையேயன்றி, நோட்டு வெளியீட்டுப் பாங்கிலுள்ள வைப்புகளையும் வேண்டும்

போது பொன்னாக மாற்றும் வசதி அவசியம் என்று தெரிந்தது. இப்படிச் செய்ததும் நோட்டு வெளியீட்டு பாங்கின் பொன் ரிசர்வு பாங்குத் திட்டத்துக்கே அடிப்படை என்பதாயிற்று. மைய பாங்கு பணத் திட்டத்தைப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பை ஏற்றது.

நோட்டு வெளியீட்டைக் கட்டுப்படுத்தவும் நோட்டுகளின் மாற்றுரிமையை (Convertibility) உறுதி செய்யவும் நோட்டு வெளியீட்டு பாங்குகள் ஒரு குறைந்தபட்ச ரிசர்வு வைத்திருக்க வேண்டுமென்று ஒவ்வொரு நாட்டிலும் சட்டம் தோன்றியது. முன்னர் நோட்டு வெளியீடுகளைக் கட்டுப் படுத்த ஆளும் பலமுறைகள் விளக்கினோம். 1844இல் இங்கிலாந்தில் நம்பக வெளியீட்டு முறை தொடங்கியது. 1939 செப்டம்பர் மாதத்தில் இங்கிலாந்து பாங்கின் வெளியீட்டு இலாகாவிலிருந்த பொன் அனைத்தும் மாற்றுச் சமன்செய் கணக்குக்கு (Exchange Equalisation Account) மாற்றப்பட்டது. அதிலிருந்து இங்கிலாந்து நோட்டு வெளியீடு முற்றிலும் நம்பக வெளியீடாகியது. பாராளுமன்றத்தின் ஆமோதிப்புக்குட்பட்டுக் கருவூலம் அவ்வப்போது வெளியீட்டுக்கு உச்ச எல்லையை நிர்ணயிக்கும்.

1913இல் அமெரிக்க ஃபெடரல் ரிசர்வு திட்டத்தில் குறைந்த பட்ச விகிதமுறை ஆளப்பட்டது. பின்னர் அநேக நாடுகள் இந்த அமெரிக்க முறையைப் பின்பற்றின. பெரிய மந்தத்தின் போது பொன்னையும் அயல்நாட்டுச் செலாவணியையும் இழந்தது காரணமாகவும் பணத்துறையில் நெகிழ்ச்சி உண்டாக்கவும் அநேக நாடுகள் குறைந்த பட்ச ரிசர்வு விகித முறையை மேற்கொண்டன. 1933இல் உலகப் பொருளாதார மாநாடும் இம்முறையை ஆதரித்தது. இரண்டாவது யுத்தம் ஆரம்பித்ததும் அநேக நாடுகளில் இந்த ரிசர்வு தேவைகள் ரத்து செய்யப்பட்டன. பொன்னும் அயல்நாட்டுச் செலாவணியும் வெளிநாட்டுச் செலுத்துக்குப் பயன்படுத்தப்பட்டன. யுத்தத்துக்குப் பின்னும் ரிசர்வுத் தேவைகளைக் குறைப்பது அல்லது ரத்து செய்வது பல நாடுகளில் பரவியது. நியூசிலந்தில் நாட்டின் பொருளாதார நிலையையும் வெளிநாட்டு வரவு செலவை யும் கருதி, ஏற்ற அளவு ரிசர்வை வைத்திருக்கவேண்டுமென்று சட்டம் ஏற்பட்டது. சிலோனிலும் அயல்நாட்டுச் செலுத்து நிலையைக் கருதி ரிசர்வு நிர்ணயமாக வேண்டுமென்று சட்டம் செய்யப்பட்டது.

முதல் யுத்தத்துக்குமுன் அயல்நாட்டு மாற்று (foreign exchange), நோட்டு வெளியீடுகளுக்குக் காப்பாகப் பெரும்பாலும் வைக்கப்படவில்லை. ஆனால் சில காலனிகளில் இது நாட்டின் பணத்துக்குக் காப்பாக இருந்தது. உதாரணமாக இந்தியாவைக் கூறலாம். யுத்தத்துக்குப் பின் அநேக நாடுகளில் பொன் மாற்றுத் திட்டம் (Gold Exchange Standard) ஆளப்பட்டபோது, அங்குள்ள மைய பாங்குகள் தம்முடைய குறைந்தபட்ச ரிசர்வில், ஒரு பகுதியை அயல்நாட்டு மாற்றாக வைத்திருக்கச் சட்டம் அனுமதித்தது. சில நாடுகளில் ஒரு விகிதாசாரமும் வரையறுக்கப்பட்டது. சில நாடுகளில் குறிப்பிட்ட அயல்நாட்டுச் செலாவணிகள் மட்டும்தான் அனுமதிக்கப்பட்டன. இங்கிலாந்து பொன் திட்டத்தைக் கைவிட்டதும் ஸ்டெர்லிங்கை ரிசர்வாக வைத்திருந்த அநேக நாடுகள் ஸ்டெர்லிங் மாற்று வைப்பதைக் கைவிட்டன. ஆனால் ஸ்டெர்லிங் வட்டாரம் (Sterling Area) என்பதைச் சேர்ந்த நாடுகள் ஸ்டெர்லிங் மாற்றை வைக்கலாயின. இவை ஸ்டெர்லிங் மாற்றுத் திட்டத்தை (Sterling Exchange Standard) மேற்கொண்டன. வேறு சில நாடுகள் டாலர் மாற்றை வைத்து டாலர் மாற்றுத் திட்டத்தை மேற்கொண்டன.

இப்படி மைய பாங்குகள் ஏதோ ஒருவகை மாற்றுத் திட்டத்தின் கீழ் அயல்நாட்டு மாற்றை அதிகப்படியாக ரிசர்வில் வைக்க முற்பட்டன. அன்றியும், வேறு சில மைய பாங்குகள் அயல்நாட்டுச் செலாவணி மாற்று பேரத்தில் ஈடுபடலாயின. அவை அயல்நாட்டுச் செலாவணியை ரிசர்வில் வைக்க அனுமதி பெறாத போதிலும் மாற்று பேரத்துக்காக அயல்நாட்டு மாற்றுச் செலாவணியை வைத்திருந்தன. முதல் யுத்தத்துக்குப் பின் அநேகமாக எல்லா மைய பாங்குகளும் அயல்நாட்டுச் செலாவணி பேரத்தில் ஈடுபடலாயின; அயல் நாடுகளில் வைப்புகள் வைக்கலாயின. இந்த அயல்நாட்டு வைப்புகள் தம்முடைய மாற்று வீதங்களை ஒழுங்குபடுத்துவதற்குப் பயன்படுத்தப் பட்டன.

இங்கிலாந்து பாங்கு நெடுநாளாக மாற்றுப் பேரங்களில் நேரடியாகத் தலையிடுவது மைய பாங்குக்கு ஒழுங்கு அன்று என்று நினைத்தது. மாற்று வீதத்தை மறைமுகமாக, பண அங்காடியைக் கட்டுப்படுத்துவது மூலம், ஒழுங்குபடுத்தவேண்டு மென்பது அதன் கொள்கை. பொன் திட்டத்தின் கீழ் மாற்று வீதம், நோட்டுகளைப் பொன்னாக மீட்பதன் மூலம் காப்பாற்றப் பட வேண்டுமென்பது அதன் கொள்கை. 1931-இல் பொன் திட்டம் கைவிடப்பட்டதும் இங்கிலாந்து பாங்கு ஓரளவுக்கு

அயல்நாட்டுச் செலாவணி அங்காடியில் பேரங்கள் செய்தது. ஆனால் 1952இல் மாற்றுச் சமன்செய் கணக்கு தோன்றியதும் இந்தப் பொறுப்பு கருவூலத்தின் பொறுப்பானது. ஆனாலும் கருவூலத்தின் ஏஜெண்டாக இங்கிலாந்து பாங்கே மாற்றுவீத நிர்வாகத்தை மேற்கொண்டது. அதோடு இரண்டாவது யுத்தம் ஆரம்பித்தபின் அயல்நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாடும் (Foreign Exchange Control) இங்கிலாந்து பாங்கின் பொறுப்பானது. அமெரிக்காவில் நியூயார்க் ஃபெடரல் ரிசர்வு பாங்கு சொந்தமாக அயல்நாட்டுச் செலாவணியில் பேரங்கள் செய்து வந்தது. அயல்நாட்டு உண்டியல்களையும் உப ரிசர்வாக வைத்திருந்தது. இவைகளைக் கொண்டு மாற்று வீதத்தை ஒழுங்கு படுத்த முயன்றது. ஆனால் 1933இல் பொன் திட்டம் கை விடப்பட்ட பின் மாற்று வீதத்தை ஒழுங்குபடுத்தும் பொறுப்பைக் கருவூலம் மேற்கொண்டது. ஆயினும் நியூயார்க் பாங்கே இந்தக் காரியத்தைச் செய்கிறது. பிற நாடுகளிலும் மைய பாங்குகள் செலாவணி மாற்றுக் கட்டுப்பாடு வேலையை மேற்கொள்ள வேண்டியதாயிற்று. இது முக்கியமாக இரண்டாவது யுத்தத்துக்குப் பின் எல்லா நாடுகளிலும் நிகழ்ந்தது. இப்படியாக அயல் நாட்டுச் செலாவணி அங்காடியில் பேரம் செய்வது மைய பாங்குகளின் வேலையாக அமைந்து விட்டது. மைய பாங்குகள் பேரளவில் அயல்நாட்டுச் செலாவணிகளைச் சேர்த்து வைப்பது அவசியமாயிற்று. ஆகவே சட்டப்படி அவை ரிசர்வாக அனுமதிக்கப் பட்டாலும், அனுமதிக்கபடா விட்டாலும் மைய பாங்குகளில் அயல்நாட்டுச் செலாவணி நிறைய இருக்கக் காண்கிறோம்.

இதுவரை மைய பாங்குகள் பொன்னோ அயல்நாட்டுச் செலாவணியோ ரிசர்வில் சட்டப்படியோ அன்றியோ வைத்திருக்கின்றன என்பதைப் பார்த்தோம். இனி இந்த ரிசர்வுகள் வைத்திருப்பதைப் பற்றிய விதிகளை ஆராயவேண்டும். அமெரிக்காவில் ஃபெடரல் ரிசர்வு சட்டம் தற்காலிகமாகக் குறிப்பிட்ட சூழ்நிலையில், ரிசர்வு விதிகளுக்கு விலக்கு அளிக்கிறது. பின்னர், பிற நாடுகளும் மைய பாங்குகளுக்கு இப்படியே விதி விலக்கு அளித்தன. பொதுவாகக் கருவூலத்தின் ஒப்புதலின்மேல்தான் ரிசர்வைக் குறைந்தபட்ச அளவுக்குக் கீழே போகவிடலாம். ஆனால் குறைவுக்கேற்ப மைய பாங்கு வரி செலுத்த வேண்டியிருக்கலாம். இவ்விதமான விலக்கு ஏன் அவசியமெனில், விதி விலக்கின்றேல், மைய பாங்கு திடீரென்று பேரளவில் பொன்னையும் அயல்நாட்டுச் செலாவணியையும் இழக்க நேரிட்டால், அப்போது உள்நாட்டுச் செலாவணி

பாதிக்கப்படும். வரி விதிப்பு தகுந்த காரணமின்றிப் பணப் பெருக்கம் செய்யாமல் தடுக்கும். வரியின் காரணமாக மைய பாங்கு வட்டி வீதத்தை உயர்த்திப் பணச் சுருக்கத்தை உண்டாக்கி அதன் வழியே ரிசர்வின் குறைவைச் சரிப்படுத்தும் என்பது கருத்து.

பெரிய மந்தத்தின்போது அநேக மைய பாங்குகள் இந்த விதமான கட்டுப்பாடு தம்முடைய நோட்டு வெளியீட்டுக்குப் பெரிய தடையாக இருக்கக் கண்டன. வட்டி வீதங்களை உயர்த்துவது பொருளாதார நிலைக்குக் கேடு விளைவிப்பதாக இருந்தது. ஆகவே அநேக நாடுகளில் ரிசர்வு தேவை குறைக்கப் பட்டது, அல்லது நாட்டுப் பணத்தின் மதிப்பைக் குறைப்பதன் மூலம் ரிசர்வின் மதிப்பு செயற்கையாக உயர்த்தப்பட்டது, அல்லது சட்டப்படி அனுமதிக்கப்பட்ட ரிசர்வு வகைகளில் சில புது இனங்கள் சேர்க்கப்பட்டன. இன்னும் சில நாடுகளில் எந்த ரிசர்வு விதியும் இல்லாமல் கட்டுப்பாடு எடுபட்டது அல்லது புறக்கணிக்கப்பட்டது.

அடுத்தபடியாக இந்த ரிசர்வுகள் என்ன நோக்கத்துடன் வந்தன என்பது பற்றி ஆராய்வோம். ஒரு நாட்டினது அயல் நாட்டுச் செலுத்துநிலைக் கொட்டி நெளிவுகளைச் சமாளிக்க மைய பாங்கின் கையில் அயல்நாட்டுச் சொலவணி ரிசர்வு இருக்க வேண்டியது அவசியம். இன்றேல் பணத்தின் புறமதிப்பைக் காப்பாற்ற முடியாது. ஆனால் சட்டம் குறைந்தபட்ச ரிசர்வு மைய பாங்கின் நோட்டுகளுக்கோ வைப்புகளுக்கோ எதிராக வைக்க வேண்டுமென்று வரையறை செய்கிறது. நெருக்கடியில் அதன் கையில் இருக்கும் பொன்னும் அயல்நாட்டுச் செலாவணியும் மீட்கப்பட்டுவிடுகின்றன. வெளியீட்டு இருப்பு செலுத்துப் பற்றுக்குறையைச் சமாளிக்கக் கிடைக்காது. ஆகவே மைய பாங்கு இரண்டுவித ரிசர்வுகளை வைத்திருக்க வேண்டியிருக்கிறது. ஒன்று, அயல்நாட்டுக் கடன் பைசல் செய்வதற்கு, மற்றொன்று உள்நாட்டுப் பணத்தைக் காப்பதற்கு. சில நாடுகளில் பின்னது தற்காலிகமாக ரத்து செய்யப்பட்டுப் பொன்னை அயல்நாட்டுச் செலுத்து நிலைக்காக விடுதலை செய்வதுண்டு. வேறு வழியாகவும் உள்நாட்டு ரிசர்வில் இருந்து பொன்னும் அயல்நாட்டுச் செலாவணியும் விடுதலையாகக்கூடும். அயல்நாட்டுச் செலுத்து நிலை பாதகமானதும், பொன்னும் அயல்நாட்டுச் செலாவணியும் வெளி ஏறும்போது, மைய பாங்கினுடைய பொறுப்புகளும் குறைகின்றன. மைய பாங்கு வேண்டுமென்றே பணச் சுருக்க நடவடிக்கைகளைக் கையாண்டு

தன் பொறுப்பைக் குறைத்து மேலும் ரிசர்வுகளை விடுதலை செய்யலாம். தவிர ரிசர்வு விகிதத்தைக் குறைக்கலாம். பணத்தின் பொன் மதிப்பைக் குறைத்து ரிசர்வின் மதிப்பை உயர்த்திக் கொஞ்சம் பொன்னையும் அயல்நாட்டுச் செலா வணியையும் விடுதலை செய்யலாம். இப்படி உள் நாட்டு ரிசர்வில் இருந்து வெளிநாட்டுச் செலுத்துக்காக விடுதலை செய்யும் பல முறைகளும் அநேக நாடுகளில் ஆளப்பட்டு வந்தன.

ஆனால் குறைந்தபட்ச ரிசர்வு இருக்க வேண்டுமென்கிற கொள்கையைக் கைவிடவில்லை. ஏன் குறைந்தபட்ச ரிசர்வு அவசியமாகிறது? உள்நாட்டினருக்கும் அயல்நாட்டினருக்கும் பணத்தில் நம்பிக்கை உண்டாவதற்கும் பணப்பெருக்கத்துக்குத் தடை செய்வதற்கும் இவ்விதக் கட்டுப்பாடு வேண்டியதாகிறது. எல்லா நாடுகளிலும் நோட்டு வெளியீடு விஷயத்தில் நெகிழ்ச்சி அதிகப்படும்படி மாறுதல்கள் செய்யப்பட்டபோதிலும் எங்கும் மக்கள் நம்பிக்கையைக் காப்பாற்றுவதற்காக ரிசர்வு கட்டுப் பாடுகள் இருந்து வருகின்றன.

நோட்டு வெளியீட்டுக்குக் காப்பாக ரிசர்வு இருக்க வேண்டுமென்பது ஒரு காலத்தில் நோட்டை நாணயத்தின் பிரதி நிதியாகக் கருதியதன் விளைவாகும். மக்களின் செலாவணிப் பழக்கம் வளர வளர நாணய ஆட்சி வீதம் குறைந்து கொண்டே வந்திருக்கிறது. ரிசர்வில் ஓரளவு அயல்நாட்டுச் செலாவணி இருக்கவேண்டும் என்கிற பழக்கம் அவைகளை எளிதில் பொன்னாக மாற்றக்கூடும் என்பதில் இருந்து ஏற்பட்டது.

நம்பிக்கையே அடிப்படைக் காரணமாக இருந்தபோதிலும் இந்த ரிசர்வு தேவைக்குப் பொருளாதாரக் காரணமும் உண்டு. அதுதான் செலாவணியைப் பெருக்காமல் காக்கும் நோக்கம். நாட்டுச் செலாவணியில் நம்பிக்கை ரிசர்வை மட்டும் பொறுத்தது என்று சொல்ல முடியாதாயினும், மைய பாங்கினிடத்தில் அயல் நாட்டுச் செலாவணியைப் பெறும் சக்தியுடைய சொத்திருப்பது நம்பிக்கையை அதிகரிக்கும் என்பது எதிர் பார்க்கக்கூடியது. வேறுவிதச் சொத்துகளை வைத்திருப்பதை விட இவ்வகைச் சொத்துகள் அதிக நீர்மையுடையன என்பதில் சந்தேகம் இல்லை. ஆகவே இப்படிப்பட்ட ரிசர்வு எல்லா நாடுகளிலும் மைய பாங்குக்கு விதிக்கப்பட்டது இயற்கை.

இந்த வாதம் அயல்நாட்டுச் செலாவணி அல்லது பொன் இருப்பதன் நன்மையை வற்புறுத்துகிறதேயொழிய எவ்வளவு

இருக்கவேண்டுமென்பதைப் பற்றி ஒன்றும் கூறவில்லை. ஒரு குறைந்தபட்ச வரையறை இல்லாதிருப்பதும் நல்லதே. ஏனெனில் சந்தர்ப்பத்திற்கேற்ப ரிசர்வைப் பயன்படுத்த முடியும்.

குறைந்தபட்ச ரிசர்வு விதிக்கப்படுவதன் நோக்கம் மைய பாங்கின் செலாவணிப் பெருக்கத்துக்கு ஒரு தடையை ஏற்படுத்த வேண்டும் என்பதேயாகும். மிகைப் பணப் பெருக்கம் முடிவில் நாட்டின் செலுத்து நிலையைப் பாதித்து, அயல்நாட்டுச் செலாவணியை இழக்கும் நிலையை உண்டாக்கி விடலாம். ஆகவே குறைந்தபட்ச ரிசர்வுக் கருவியை ஓரளவு நெகிழ்ச்சியோடு ஆள்வது அவசியம். மைய பாங்கு மறு கழிவு பாங்காகவும், இறுதிக்கடனீவியாகவும் செய்யும் பணிகள் ரிசர்வுவைத்திருக்கும் பணியிலிருந்து தோன்றியவை எனலாம். எப்படி எனில் மைய பாங்கின் நோட்டு சட்டபூர்வமான பணமாதலால், வேண்டும் போது பாங்குகள் தம்முடைய சொத்துகளை அதனிடம் விற்றுப் பணம் பெற முயலும். மைய பாங்கு ரிசர்வுகளை வைத்திருப்பது இப்படிப் பாங்குகளுக்கு ரொக்கம் உதவி செய்யச் சக்தி தருகிறது. மைய பாங்கு மறு கழிவுக்குத் தடை செய்யாமல் இருந்தால் அது இறுதிக் கடனீவியாக வேலை செய்வதாகும்.

ஆதியில் வர்த்தக உண்டியல்களைத் (Trade Bills) தான் மைய பாங்கு மறு கழிவுக்கு ஏற்பது வழக்கம். இவைகளைப் பாங்குகளும் கழிவகங்களும் உண்டியல் தரகர்களும் பண நெருக்கடி உண்டானபோது மைய பாங்குக்குக் கொண்டு வந்து விற்பார்கள். இவைகளை மைய பாங்கு வாங்குவதே மறு கழிவு எனப்படுவது. இப்பெயருக்குக் காரணம், ஏற்கனவே வர்த்தகர்கள் கழிவு செய்து வாங்கியதை மைய பாங்கு மீண்டும் கழிவு செய்து வாங்குவதாகும். முற்காலத்தில் வியாபாரிகள் உண்டியல் மூலமாகத் தான் கடன் வசதியைப் பெற்றனர். உண்டியல்கள் தன்னிறைவேற்றச் (Self - liquidating) சொத்துகளாகையால் பாங்குகள் இவைகளை நம்பகமான சொத்துகளாக, இரண்டாம் நிலை ரொக்கக் காப்பாக (Secondary Cash Reserve) மதித்து வாங்கின. கழிவகங்களும் ஏற்பகங்களும் தோன்றிய பின், இந்த உண்டியல்களின் செலாவணி அதிகரித்து நீர்மை அதிகரித்தது. மைய பாங்குகள் இவைகளை மறு கழிவுக்கு ஏற்றதும் இவை பெரும்பான்மையாக எல்லோராலும் விரும்பப்பட்டன. மைய பாங்குகள் கடன் உதவும்போது இந்த உண்டியல்களை ஏற்றன. ஆனால் எவ்வகை உண்டியல்களை ஏற்பது என்பதைப் பற்றி அவ்வப்போது மைய பாங்குகள் கடுமையான நிபந்தனைகளை

நிறுவின. நெருக்கடி காலத்தில் தான் இந்த நிபந்தனைகள் தளர்த்தப்படும். இந்த நிபந்தனைகளின் அடிப்படைத் தத்துவம் என்னவெனில், மைய பாங்கு இப்படிப்பட்ட தன்னிறைவுப் பத்திரங்களை மட்டும் அங்கீகரித்தால் எல்லா பாங்குகளும் கழிவகங்களும் இப்படிப்பட்ட தாள்களிலேதான் ஈடுபடும். அதனால் உண்மையான வர்த்தகத் தேவைக்கு மட்டும் பாங்குகளிடமிருந்தும் மைய பாங்கிலிருந்தும் பண வசதி கிடைக்கும். இதனால் நாட்டின் உற்பத்தி நிலை, வர்த்தக நிலைக் கேற்பப் பணச் செலாவணி தானாகவே நிர்ணயமாகும்.

1914-க்கு முன் இங்கிலாந்திலும் பிற நாடுகளிலும் குறுங்கால முதிர்வுடைய வர்த்தக உண்டியல்களைத் தான் மறு கழிவு செய்ய முடியும். ஆனால், முதல் யுத்தத்தின் போதும் பின்னரும் இருந்த அசாதாரணச் சூழ்நிலையில் மைய பாங்குகள் மறு கழிவுக்கு உண்டான நிபந்தனைகளைத் தளர்த்தவேண்டிய தாயிற்று. மைய பாங்குகள் கருவூல உண்டியல்கள் மீதும் அரசாங்கச் செக்கூரிட்டிகள் மீதும் கடன் கொடுக்கும் பழக்கத்தை ஆள ஆரம்பித்தன. உண்மையில் நாளடைவில் உண்டியல் வழியாக வர்த்தகர்கள் பண வசதி பெறும் பழக்கமே குறையலாயிற்று. ஏனெனில் பாங்குகள் நேரடியாக வர்த்தகர் களுக்குப் பண வசதி செய்ய முற்பட்டு, உள்நாட்டு வர்த்தகத்தில் உண்டியல்கள் ஆட்சி குறைந்தது. அயல் நாட்டு வர்த்தகத்திலும் பாங்குகளின் மூலம், தந்தி மணியார்டர் மூலம் செலுத்துகள் செய்வது தோன்றி வர்த்தக உண்டியல்கள் எழுதுவது குறைந்தது. தவிர, பன்னாட்டு வாணிபம் பலவித வியாபாரத் தடைகளினால் சுருங்கினதாலும் உண்டியல் அளிப்பு குறைந்தது. அதேபோது அரசாங்கங்களின் கடன் பத்திரங்கள் கருவூல உண்டியல்கள் ஏராளமாக வெளிவந்தன. இவைகளைப் பாங்குகள் இரண்டாம் நிலை ரிசர்வாக வாங்கி வைக்கலாயின. மைய பாங்குகளும் மறு கழிவுக்கு ஏற்றன. இதனால் நாளடைவில் வர்த்தக உண்டியல்களை விட இவைகளே அங்காடியால் விரும்பப்படும் நீர்மைச் சொத்துகளாக ஆயின. இந்த நிலையில் பண வசதி வேண்டுமானால் மைய பாங்கில் மறு கழிவு செய்வதற்குப் பதிலாகக் குறுங்கால ஈட்டுக் கடன் வாங்கும் பழக்கம் தோன்றியது. இம்முறை ஆளப்படக் காரணம் கடன் சில நாட்களுக்கே தேவைப்பட்டதும், ஆட்சி எளிமையு மாகும். இதனால் உண்டியல்கள், புரோ நோட்டுகள், கருவூல உண்டியல்கள், அரசாங்கச் செக்கூரிட்டிகள் முதலியவைகளை ஈடுவைத்துக் கடன் பெறுவது (மறு கழிவு செய்வதைவிட) அதிகமாக ஆளப்படலாயிற்று. இப்போது மறு கழிவு என்பது

உண்மையில் இந்த வழியாகப் பணம் பெறுவதையும் கூடக் குறிக்க ஆளப்படுகிறது.

## 6. மைய பாங்கு அரசாங்கத்திற்குப் பாங்கு (The Central Bank as Banker to the Government)

மைய பாங்குகளும் அரசாங்கத்துக்குச் சில பணிகளைச்செய்கின்றன. சாதாரண பாங்குகளில் நாம் பெறும் பணிகளைப்போல அரசாங்கமும் மைய பாங்கிடமிருந்து சில பணிகளைப்பெறுகிறது. மற்றும் பொருளாதாரத் துறையில் அரசாங்கத்துக்கு ஆலோசகராகவும் (adviser), அரசாங்கத்தின் சார்பாகப் பணத் துறை நடவடிக்கைகளைச் செய்யும் ஏஜெண்டாகவும் இருக்கிறது. அரசாங்கத்துக்குப் பாங்காக இருக்கும்போது அது அரசாங்கத்தினுடைய பல இலாக்காக்களின் கணக்குகளையும் நிருவகிக்கிறது. அரசாங்கத்துக்குத் தற்காலிகமாகக் கடன் கொடுக்கிறது. அரசாங்கத்துக்கு ஆளாக அயல்நாட்டுச் செலாவணிகளை வாங்கவும் விற்கவும் செய்கிறது. நிதித்துறை நடவடிக்கைகளையும் கவனித்துக் கொள்கிறது. சாதாரண பாங்கைப் போல அது அரசாங்கத்துக்குப் பணி செய்யும்போது அதன் வைப்புகளை ஏற்றுக் கொள்கிறது; அதன் செக்குகளை மதித்துச் செலுத்துகிறது. அதற்கு வர வேண்டியதை வசூலிக்கிறது; அதன் உத்தரவின்படிச் செலுத்துகிறது. பல இலாக்காக்களுக்குள் நிதி மாற வேண்டியபோது அதைச் செய்கிறது. இப்படியெல்லாம் மைய பாங்கு கருவூலத்திற்குப் பல பணிகளைச் செய்கிறது. அரசாங்கம் நிறுவிய சில அரசாங்க நிறுவனங்களுக்கும் இதே போலப் பல பணிகளைச் செய்கிறது.

அரசாங்கத்துக்குப் பாங்காக இருப்பது அரசாங்கத்தின் வசதிக்காக மட்டுமன்று; நாட்டின் நன்மைக்காக. அரசாங்கத்தின் நிதித்துறை நடவடிக்கைகள் பேரளவின. இவை நாட்டின் பொருளாதாரத்தைப் பாதிக்கக் கூடியன. அரசாங்கம் வரிவசூல் செய்யும்போது பொருளாதாரத்திலிருந்து பணம் ஈர்க்கப்படுகிறது. மக்களிடமிருந்து அரசாங்கம் கடன் வாங்கும்போதும் மக்களின் ரொக்கத் தன்மை குறைகிறது. எதிரிடையாக அரசாங்கம் செலவு செய்யும்போது மக்களின் வருமானமும் ரொக்கத் தன்மையும் உயர்கின்றன. இப்படிச் செலாவணிச் சுருக்கமும் பெருக்கமும் அரசாங்கத்தின் நடவடிக்கையால் ஏற்படும்போது அவை பொருளாதாரத்தைப் பாதிக்காமல் பார்த்துக்கொள்வது அரசாங்கத்துக்கும் மைய பாங்குக்கும் பொதுவான பொறுப்பு. இரண்டும், அரசாங்கமும் பாங்கும், கலந்து ஒரு முடிவைச் செய்தாலன்றி நாட்டின் பொருளாதாரத்

திற்குக் கெடுதல் உண்டாகலாம். எல்லா வருவாயும் செலவீடும் மைய பாங்கு வழியாக நடக்குமானால் மைய பாங்குக்கு அரசாங்கத்தின் போக்கு அவ்வப்போது தெளிவாக இருக்கும்; அரசாங்கத்துக்குத் தகுந்த ஆலோசனையை அவ்வப்போது கொடுக்க முடியும்.

மற்றுமொரு துறையில் பாங்கு அரசாங்கத்துக்குப் பணி யாற்றுகிறது. அயல் நாட்டுச் செலாவணி அரசாங்கத்துக்குத் தேவைப்படுமானால் அதைப் பெற்றுத் தரவும், அரசாங்கத்தின் சார்பில் அயல்நாட்டில் செலுத்துகள் செய்யவும், அரசாங் கத்துக்கு வரும் அயல்நாட்டுச் செலாவணியை வசூலிக்கவும் செய்கிறது. அயல்நாட்டில் இருந்து கடன் வாங்குவதன் காரணமாக அரசாங்கம் வெளிநாடுகளில் முதலும் வட்டியும் செலுத்த வேண்டியிருக்கும். இதற்கு வேண்டிய அயல்நாட்டுச் செலாவணியைச் சேகரிப்பது மைய பாங்கின் வேலை.

அரசாங்கத்துக்கு மைய பாங்கு செய்யும் பணிகள் பல வற்றுக்கும் அரசாங்கம் ஊதியம் தர வேண்டும். சில நாடுகளில் ஊதியம் புரளும் தொகைக்கு ஏற்ப நிர்ணயிக்கப்படுவது உண்டு, அல்லது குறிப்பிட்ட தொகை நிர்ணயிக்கப்படுவதுண்டு, அல்லது அரசாங்கம் பாங்கில் ஒரு குறைந்தபட்ச குறிப்பிட்ட தொகையை வைத்திருக்க வேண்டுமென்று நியதி செய்யப் படுவதுண்டு. சில நாடுகளில் இலவசமாகக்கூட மைய பாங்கு பணிகளைச் செய்யும்படி சட்டம் நிர்ணயிக்கலாம்.

அடுத்தபடி அரசாங்கத்தின் ஏஜெண்டாக பாங்கு செய்யும் வேலைகளைப் பார்ப்போம். பொதுவாக நிதித்துறை (financial) நடவடிக்கைகளை அரசாங்கத்தின் சார்பாக மைய பாங்கு எடுக்கிறது. முக்கியமான ஒரு வேலை அரசாங்கத்தின் கடன் நிருவாகம் ஆகும். அரசாங்கப் பாண்டுகளை வாங்குபவர்களுக்கு வட்டி கொடுப்பது, பாண்டுகளின் ரிஜிஸ்தரை நிருவகிப்பது, புதுப் பாண்டுகளுக்குச் செலுத்தப்படும் தொகைகளை வசூலிப்பது, புதுப் பாண்டு விற்பனைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வது, பழைய பாண்டுகளை மீட்பது அல்லது புதுப்பிப்பது, கருவூல உண்டியல்களை வெளியிடுவது அல்லது மீட்பது, பண மார்க்கெட் நிலவரத்தை அறிவுறுத்திப் பாண்டு வெளியீடு காலத்தை நிர்ண யிப்பது, வெளியீடு நிபந்தனைகளை நிர்ணயிப்பது ஆகிய எல்லாம் ஏஜெண்டாகச் செய்யும் பணிகள்.

இவை தவிர, சமீப காலத்தில் மாற்றுக் கட்டுப்பாடு (exchange control) அல்லது மாற்றுச் சமன்செய் (cxchange

Equalisation) பணிகளும் மைய பாங்குகளுக்கு விடப் பட்டுள்ளன.

மைய பாங்கு அரசாங்கத்துக்குத் தற்காலிகக் கடன் கொடுக்க வேண்டி ,வருகிறது. வரி வருவாய்க்கும் செலவுக்கும் அவ்வப்போது பொருத்தம் இல்லாதிருக்கும்போது மைய பாங் கிடம் வழிவகைக் கடன் (Ways and Means Advance) அரசாங்கம் பெறுகிறது. பின்னர்க் கருவூல உண்டியல்களை விற்று இந்தக் கடன் தீர்க்கப்படும். இப்படி அரசாங்கத்துக்குக் கடன் கொடுப்பது முடிவில் பண அங்காடியின் ரொக்கத் தன்மையை அதிகப்படுத்தும். ஆகவே இந்த வழியாகப் பண வீக்கத்துக்கு இடமுண்டு. மைய பாங்கு பண அங்காடியைக் கட்டுப்படுத்துவதற்கு இந்த வழிவகைக் கடன் வசதி ஒரு தடையாக இருக்கக்கூடும். ஆனால் அரசாங்கத்துக்கு வரி வசூல் ஆகும் என்பது நிச்சயமாய் இருக்கும்போது, வரி வசூலால் அங்காடியில் ஏற்படக்கூடிய ரொக்க வரட்சியைத் தவிர்ப்ப தற்கு இவ்வகைக் கடன் உதவிசெய்கிறது. விரைவில் வரி வசூல் ஆனதும் இந்த வழிவகைக் கடன் பொறுப்பு தீர்க்கப் படுமானால் பண வீக்கத்திற்கு இடம் இருக்காது. அரசாங்கம் இவ்வகையில் கடன் வாங்குவது சாதாரணமாக அற்பமாகவே இருக்கும்.

மைய பாங்குக்கும் அரசாங்கத்திற்கும் எவ்விதத் தொடர்பு இருக்க வேண்டுமென்பதைப் பற்றி நெடுநாளாக விவாதம் இருந்து வந்திருக்கிறது. இரண்டும் நாட்டின் பொருளாதார நலத்தைக் கோருவனவாகையால் முரண்பாடு இருக்கக் காரணம் இல்லை என்று நினைக்கலாம். சமீபத்தில் இங்கிலாந்தில் ராட்கிளிஃப் (Radcliffe) கமிட்டி இதை ஆராய்ந்தது. இங்கிலாந்து பாங்குக்கும் அரசாங்கத்துக்கும் நெடுநாளாகத் தொடர்பு இருந்து வந்திருக்கிறது. இரண்டும் ஒத்துழைத்துப் பொருளாதாரத்தை ஒழுங்குபடுத்த முயன்றுள்ளன. 1946-ல் இப்பாங்கு நாட்டுரிமையானதற்கு முன்பே தொடர்பில் ஒரு மரபு ஏற்பட்டுவிட்டது. ஆகவே 1946வது ஆண்டுச் சட்டம் உரிமையைத் தனியாரிடமிருந்து அரசாங்கத்துக்கு மாற்றியதைத் தவிர வேறு அடிப்படை மாறுதல் ஒன்றையும் உண்டாக்கவில்லை. அரசாங்கம் பாங்கின் சர்வாதிகாரியாகி விட்டாலும் தலையீடு அதிகப்பட்டு விட்டது என்று கூறுவதற்கு இடமில்லை. முடிவில் அரசாங்கத்தின் கருத்துப்படிதான் மைய பாங்கு நடக்க வேண்டு மென்பது ஏற்கனவே முடிவான விஷயம். இங்கிலாந்து பாங்கின் அமைப்புப்படி டைரக்டர்கள் 16 பேரும், கவர்னரும், டெபுடி

கவர்னரும் அரசாங்கத்தால் நியமிக்கப்படுகின்றனர். ஆனால் உண்மையில் ஆலோசனை செய்வது ஒரு சிறு கமிட்டி ஆகும். அதற்குக் கருவூலக் கமிட்டி என்பது பெயர். அதில் கவர்னரும், உதவி கவர்னர்களும், 5 டைரக்டர்களும் இருக்கிறார்கள். அந்தக் கமிட்டியின் முடிவை டைரக்டர் சபை (Court) நிராகரிப்பதில்லை. அந்தச் சிறு கமிட்டியிலும் முக்கியமானவர் கவர்னர். அவர் அரசாங்கத்தோடு நெருங்கிய தொடர்பு உடையவர். எல்லாவித முடிவுகளும் அவருடைய பொறுப்பில் ஏற்பட வேண்டி யிருக்கிறது. அவர் கருவூலத்தின் கருத்துக்களை ஆராய்ந்து தம் கருத்தைக் கருவூலத்திற்கு அடிக்கடி தெரிவிக்கிறார். ஆகவே முரண்பாடுகள் ஏற்பட இடமில்லை. ஆனால் ராட்கிளிஃப் கமிட்டியின் முன்னால் கருத்துக் கூற வந்த சிலர், 1946-வது ஆண்டுச் சட்டத்தின் கீழ்ச் சில விவகாரங்கள் பாங்கின் தனிப் பொறுப்பு என்றும், அரசாங்கம் இவை சம்பந்தமாகக் குறிப்பிட்ட ஆணையிட்டாலொழிய, பாங்கு இச்சைப்படி நடக்கலாம் என்றும், மற்ற விவகாரங்களில் அரசாங்கத்தின் இச்சைப்படி பாங்கு நடக்கும் கடமை யுடையது என்றும் கூறினார்கள். உதாரணமாக, பாங்கு வீதத்தை மாற்றுவது என்பது பாங்கின் தனிப் பொறுப்பில் அடங்கியது என்றும், அரசாங்கம் நேரிடையான ஆணையிட்டாலன்றி இச்சைப்படி நடக்கலாம் என்றும் கூறினார்கள். ராட்கிளிஃப் கமிட்டியானது இவ்வித விளக்கத்தை ஏற்கவில்லை. ஒரு சட்டத்தின் வழியாகப் பாங்குக்கும் அரசாங்கத்துக்கும் எல்லையை நிர்ணயிக்க முடியாது என்றும், அரசாங்கத்தின் பொருளாதாரக் குறிக்கோள்கள் பாங்கைக் கட்டுப்படுத்தும் என்றும், பாங்குக்கு என்று தனிக் குறிக்கோள்—பணத்துறைக் குறிக்கோள்—இல்லை என்றும், இதை உணர்ந்தால் முரண்பாடு இருக்க வேண்டியதில்லை என்றும், பாங்கானது அரசியல் செல்வாக்குக்கு முற்றும் புறம்பாக இருக்க முடியும் என்று நம்ப முடியாதென்றும், அரசாங்கத்தின் பொறுப்பு மைய பாங்கின் பொறுப்பு என்றும், அரசாங்கத்தின் குறிக்கோளை நிறைவேற்றுவதற்குள்ள முறைகள் பலவற்றுள் பணத்துறை நடவடிக்கையும் ஒன்று என்றும், பிற முறைகளை அனுசரிக்காமல் பணத்துறைகளை நடவடிக்கைகளை மட்டும் மைய பாங்கு ஆள முடியாது என்றும், ஆகவே கருவூலத்துக்கும் அரசாங்கத்துக்கும் பரந்த தொடர்பு இன்றி யமையாதது என்றும் கமிட்டி கூறிற்று. 1946வது ஆண்டுச் சட்டப்படி அரசாங்கத்தின் சார்பாக நிதி அமைச்சர் ஆணையிட லாம். ஆனால் இதுவரையிலும் எவ்வித ஆணையும் இட்டதாகத் தெரியவில்லை. ஆணையிடுவதற்கு முன் கவர்னரையும் ஆலோசித் துத்தான் ஆணையிட வேண்டுமென்று சட்டம் கூறுகிறது.

அரசாங்கம் பணத்துறையில் வெளியிடும் முடிவுகள் கவர்னரை அனுசரித்துச் செய்யப்படுவனவாகவே இருக்கும்.

சமீப காலத்தில் எல்லா நாடுகளிலும் அரசாங்க உரிமையுடைய மைய பாங்குகளே நிறுவப்பட்டு வருகின்றன. உரிமையுடன் நிருவாகப் பொறுப்பும் அரசாங்கத்துடையதாகக் காண்கிறோம். நிருவாகத்தில் மேனிலை நிருவாகிகள் அரசாங்கத்தால் நியமிக்கப்படுகின்றனர். இவ்விதமாக அரசாங்கத்தின் ஆதிக்கம் வலுப்பெறுவதற்குக் காரணம் முன்னர்க் கூறியபடி தற்போது அரசாங்கத்துக்கும் பாங்குக்கும் பொருளாதாரத் தொடர்புகள் பெருகிவிட்டதுதான். அரசாங்கத்தின் நடவடிக்கைகள் பொருளாதாரத்தில் பரந்து ஊடுருவிச் செல்வதால் அதன் அனுசரணையின்றி மைய பாங்கு யாதொன்றையும் சாதிக்க முடியாது. பணத்துறைச் சார்பான காரியங்களில் மைய பாங்கு விற்பனன் என்ற காரணத்தால் அதன் ஆலோசனை அரசாங்கத்தினிடம் செல்வாக்குடையதாகும் என்பது உண்மையானாலும், உண்மையில் முடிவில் அரசாங்கத்தின் முடிவைவே மைய பாங்கு ஏற்கவேண்டியதாகும். இது தற்காலச் சமூகத்தில் காணும் அரசியல்—பொருளாதார நெருக்கத்தினால் ஏற்பட்ட விளைவாகும்.

## 7. மைய பாங்குகளும் பொதுமக்களும்

பழைய மைய பாங்குகள் அனைத்தும் பொது மக்கள் கணக்கை வைத்திருந்தன. ஆனால் சமீப காலத்தில் இது சரி அன்று என்பது கொள்கையாகத் தோன்றித் தனியார் கணக்குக் குறையலாயிற்று. வணிக பாங்குகளுடைய முழு மனதோடு கூடிய ஒத்துழைப்பு மைய பாங்குக்கு அவசியமாதலால் மைய பாங்கு அவைகளுடன் சாதாரண பாங்குத் தொழிலில் போட்டியிடுவது சரி அன்று. நாட்டின் நலத்துக்கு இன்றியமையாத அளவுக்குத்தான் பொது மக்களோடு நேரடியான தொடர்பு வைத்துக் கொள்ளவேண்டும். பொது மக்களுக்குப் பணம் கிடைக்கச் செய்யவேண்டுமானால் அதை வணிக பாங்குகளின் மூலமாகவோ கழிவகங்கள் அல்லது பிற நிதியங்கள் மூலமாகவோ அல்லது திறந்த அங்காடி நடவடிக்கை மூலமாகவோ அல்லது அரசாங்கக் கடன் அல்லது உண்டியல் வாங்குவது மூலமாகவோ கிடைக்கச் செய்யலாம். ஆகவே, மைய பாங்குகளில் பொது மக்கள் வைத்திருந்த கணக்குகள் முடிவு (close) செய்யப்பட்டு வருகின்றன.

# 26. மைய பாங்கு ஆளும் கடன் கட்டுப்பாடு முறை

## 1. பணக்கட்டுப்பாடு அவசியமும் முறைகளும்

பாங்குப் பணத்தைக் கட்டுப்படுத்துவது மைய பாங்கின் முக்கியமான பணியாகக் கூறலாம். மைய யாங்கின் பணிகள் அனைத்தும் இதற்குச் சம்பந்தமானவை. நோட்டு வெளியீடு செய்வது, அரசாங்கத்துக்குப் பாங்காக இருப்பது, ரிசர்வுகளை வைத்திருப்பது போன்ற பணிகள் தனித்தனியாகத் தோன்றினவையாயினும் இவை எல்லாம் இந்தப் பணிக்குத் துணைப்பணிகளேயாகும். நாட்டுச் செலாவணியை நோட்டு வெளியீட்டு மூலம் மைய பாங்கு மாற்றக்கூடுமானால் அது நாட்டின் பொருளாதார நிலையை நிர்ணயிக்கும் சக்தி யுடையதாகும் என்பது வெளிப்படை. இந்திய ரிசர்வு பாங்குச் சட்டத்தின் துவக்க வரிகள், நாட்டினுடைய செலாவணியை ஒழுங்காக நாட்டின் நலம் கருதி நிருவகிக்க வேண்டுமென்கிற நோக்கத்துடன் ரிசர்வு பாங்கு நிறுவப்படுவதாகக் கூறு கின்றன.

மைய பாங்கு கடன் பணத்தைக் கட்டுப்படுத்தும் பொறுப்பைப் பெறக் காரணம், பாங்குப் பணம் தற்காலத்தில் செலாவணியில் முக்கியப் பகுதியாக இருப்பதேயாகும். செலாவணிக்கும் விலைமட்டத்திற்கும் தொழில் நிலைக்கும் உள்ள தொடர்பு சிக்கலானது, விவாதத்திற்குரியது. ஆயினும் சம்பந்தம் உண்டு என்பதை யாரும் ஒப்புவர். ஆகவே கடன் பணத்தைக் கட்டுப்படுத்துவது அவசியம்.

ஒரு காலத்தில் கடன் கட்டுப்பாட்டின் நோக்கம் மாற்று வீதத்தை (exchange rate) நிலைப்படுத்துவதாக இருந்தது. பொன் திட்டம் இருந்தபோது மாற்றுவீத நிலைபேறு முக்கியமெனக்

கருதப்பட்டது ஆனால், இவ்விதமாக மாற்று வீதத்தை நிலைப்படுத்த முயன்றதன் விளைவாக உள்நாட்டு விலைவாசி பேரளவில் பாதிக்கப்பட்டது. இதனால் விலைவாசிகள் மாறாமல் வைப்பது கட்டுப்பாட்டின் நோக்கமாகக் கிளம்பியது. இந்த நோக்கம் முன்னுக்கு வந்தபோதும் மாற்றுவீதம் மாறாதிருக்க வேண்டும் என்கிற நோக்கம் கைவிடப்படவில்லை. ஆயினும், உள்நாட்டுப் பொருளாதார நிலையே பெரும்பாலும் பணத்துறைக் கைக்கோளை நிர்ணயிக்கலாயிற்று. உள்நாட்டு விலைவாசி வேலை நிறைவுக்கு ஏற்றவாறு இருக்கும்படி பாங்குக் கடன் நிருவகிக்கப் படவேண்டுமென்றும், அவசியமானால் மாற்று வீதம் ஏற்றபடி மாற்றப்பட வேண்டும் என்றும் ஒரு புதிய சித்தாந்தம் தோன்றியது. இங்கிலாந்து 1931இல் பொன் திட்டத்தைக் கைவிட்டபின் இந்த நோக்கமே அங்கும் வேறு நாடுகளிலும் தலையெடுக்கலாயிற்று.

அடுத்தபடி, கடன் பணக்கட்டுப்பாடு முறைகளைப பார்ப்போம். முக்கிய வகைகள்: வட்டி வீதங்களையும் கழிவு வீதங்களையும் மாற்றுவது, அங்காடியில் செக்கூரிட்டிகளையும் உண்டியல்களையும் வாங்குவது அல்லது விற்பது, கடன் பங்கீடு, நேரடி நடவடிக்கைகள், ரிசர்வு வித மாறுதல், கூடுதல் ரிசர்வுக் கட்டுப்பாடுகள். மார்ஜின் மாறுதல், நுகர்ச்சிக் கடன் கட்டுப்பாடு, அறிவுறுத்தல். இந்தப் பல முறை களோடு அரசாங்கத்தின் நோட்டு நிருவாக நடவடிக் கைகளும் பணத்துறைக் கைக்கோளை நிறைவேற்ற ஆளப் படலாம்.

### மைய பாங்கின் செல்வாக்குக்கு அவசியமானவை

கடன் நிருவாகம் வெற்றிபெறச் சில வசதிகள் வேண்டும். முதலாவது நாட்டில் ஆளப்படும் எல்லா வகைக் கடன் வசதிகளும் நேரிடையாகவோ மறைமுகமாகவோ மைய பாங்கின் கட்டுப் பாட்டுக்கு உட்பட வேண்டும். பாங்குகளிடம் கடன் வாங்குவ தன்றி, உண்டியல் மூலம், புரோ நோட்டு மூலம், அடமான மூலம் கடன் வாங்குவதும் கட்டுப்படுத்தப்பட வேண்டும். பண அங்காடியில் இன்சூரன்சு கம்பெனிகள், கட்டடக் கம்பெனிகள், பென்ஷன் நிதிகள், வியாபாரக் கடன்கள் முதலியவை செலாவணியைப் பெருக்கவும் சுருக்கவும் கூடும். இவை மைய பாங்கின் கட்டுப்பாட்டுக்கு உட்பட வேண்டும், ஆகவே, பாங்குக் கடனை மட்டும் கருதக் கூடாது. பிறவகைக் கடன் வசதிகள் பாங்குக் கடனோடு

சம்பந்தப்பட்டிருந்தாலும், கழிவு மூலம் அல்லது ஈடுகளுடைய கடன்மூலம் தோன்றினவையானாலும், அவை நேரிடையாக மைய பாங்கின் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டன அல்ல. பலவகை அங்காடி நிதியங்கள் தோன்றி, பாங்குகளின் செல்வாக்கைக் குறைத்துவிட்டன. ஆகவே மைய பாங்கு அவைகளையும் கட்டுப்படுத்த வழிசெய்ய வேண்டியிருக்கிறது. மைய பாங்குக்கு நேரிடையாக வணிக பாங்குடன் தான் தொடர்பு உண்டு, ஆயினும் மற்றவைகளையும் சந்திக்க ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கிறது.

நேரிடியாக வணிக பாங்குடன் தொடர்பு இருந்தபோதிலும் அவைகளைக்கூட கட்டுப்படுத்துவது எளிதன்று. அவைகளைக் கட்டுப்படுத்த அதிகாரம் வேண்டும். பொருள் வசதி வேண்டும். எல்லா பாங்குகளும் மைய பாங்கிடம் பேரத்தொடர்புகொள்வது இன்றியமையாததாக வேண்டும். மைய பாங்குக்கு அவைகளின் நடவடிக்கைகளைப் புலப்படுத்தக்கூடிய விவரங்கள் கிடைக்க வேண்டும். அவை முழு மனதோடு மைய பாங்கின் குறிக்கோளைப் பின்பற்ற வேண்டும். பாங்குகள் உருவில் பெரியனவும், எண்ணில் சிறியனவுமாக உள்ள நாடுகளில் மைய பாங்கு அவைகளுடன் நெருங்கிய தொடர்பு வைத்துக் கொள்வது எளிதாக முடியும். அமெரிக்கா, இந்தியா போன்ற நாடுகளில் பல சிறிய பாங்குகள் உள்ள நிலையில் இது கடினம்.

பொதுவாகக் கூறின், நாட்டில் பாங்கு முறை எந்த அளவுக்குப் பரவி இருக்கிறது என்பதையும், பிற நிதிநிலையங்களுக்கும் பாங்குகளுக்கும் எந்த அளவுக்குத் தொடர்பு இருக்கிறது என்பதையும், பாங்குகளுக்கும் மைய பாங்குக்கும் எவ்வளவு நெருக்கமான தொடர்பு இருக்கிறது என்பதையும் பொறுத்தது மைய பாங்கின் செல்வாக்கு.

இனி முற்கூறிய பணத்துறை நிருவாகக் கருவிகளை ஆராய்வோம்:

## 2. கழிவு வீதக் கைக்கோள் (Discoant Rate Policy)

### (அ) இங்கிலாந்தில் கழிவுக் கைக்கோள்

கழிவு வீதம் ஒரு கருவியாக முதன் முதலாக உருவானது இங்கிலாந்தில்தான். இங்கிலாந்து பாங்கு தன்னுடைய வட்டி வீதத்தை மாற்றுவது மூலம் நாட்டின் பொருளாதார நிலையைக் கட்டுப்படுத்த முடியும் என்பதை அனுபவத்தில் பல பண நெருக்கடிகளின்போது கண்டது. அனுபவத்தில் இரண்டு

விஷயங்கள் புலனாயின. (1) நீர்மை மோசமாவதற்கு முன்னரே மைய பாங்கு கடன் கைக்கோளை மாற்றவேண்டும், ஏனென்றால் ஓர் அளவுக்கு மேல் பெருக்கமோ சுருக்கமோ நிகழ்ந்து விட்டால் பொருளாதாரத்தின் போக்கைத் திருத்துவது முடியுமாயினும் ஆபத்தானது. (2) நெருக்கடி உண்டானபோது மைய பாங்கு தடையின்றி, தயக்கமின்றி உதவி செய்ய முன்வர வேண்டும். நியாயமான தேவைகளை மைய பாங்கு மறுக்காது என்கிற நம்பிக்கையிருந்தால், அதுவே நெருக்கடியை முளையிலேயே களைந்துவிடும்.

இப்படியாக இங்கிலாந்து பாங்கு தன்னுடைய செல்வாக்கை உணர்ந்தபோது தன்னுடைய வட்டி வீதம் ஒரு திறமையான நிருவாகக் கருவியாக இருப்பதை உணர்ந்தது. 1845-இல் தன்னுடைய வட்டி வீதம் குறைந்தபட்ச வட்டி வீதம் என்றும், அது உயர்ந்த ரக உண்டியல்களுக்கே உரியது என்றும், வேறு வகை உண்டியல்களுக்கு அவைகளின் தன்மைக்கேற்ப வட்டிவீதம் இருக்கும் என்றும் பிரசுரித்தது. முதல் தர உண்டியல்களைக் கொண்டு வருபவர்களுக்கு உதவி செய்ய மறுப்பதில்லை என்றது. மற்றொரு முக்கியமான அம்சம் நாளடைவில் உறுதியானது. அதாவது பாங்குகள் இறுதி நிலையில் கடன்பெறக்கூடிய நிலைய மாகப் பொறுப்பேற்றது. வேறிடங்களில் பணம் புரளாதபோது இதனிடம் உதவிக்கு வரலாம்; ஆனால் இதனுடைய வட்டி வீதம் அங்காடி வீதங்களை விட ஏற்றமாக இருக்கும்; இதைத் தண்டனை வீதம் (penalty rate) என்று கூறலாம். ஆகவே வேறிடம் செல்ல முடியாத நெருக்கடி சமயத்தில்தான் சாதாரண பாங்குகள் இந்த விதத்தில் உதவியை நாடும். ஆகவே அவசர நிமித்தத்தில் தான் மறு கழிவு வேலை மைய பாங்குக்கு இருக்கும்.

இப்படியாக இங்கிலாந்து பாங்கு தலைமை பாங்கு நிலையை அடைந்தது; அதனால் அங்காடி நீர்மையை நிர்ணயிக்கும் சக்தியைப் பெற்றது; அநேக நெருக்கடிகளை, இறுதிக்கடனீவோனாகப் பணியாற்றிச் சமாளித்தது. இங்கிலாந்து பாங்கின் முறையைப் பின்பற்றி அயல் நாடுகளிலும் மைய பாங்குகள் மறு கழிவு வீதத்தை நிருவாகக் கருவியாக ஆள ஆரம்பித்தன.

பொருளாதார நிலைக்கேற்ப பாங்கு வீதத்தை இங்கிலாந்து பாங்கு அடிக்கடி மாற்றிவந்தது. இதற்குச் சில காரணங்கள் கூறலாம். இலண்டன் மாநகரம் உலகத்தின் நிதி மையமாக ஆனது. இங்கிலாந்து பொன் திட்டத்தை ஆண்டபோது பொன்னும் பணமும் இங்கிலாந்துக்கு எளிதில் வந்து சேர்ந்தன. உலக பேரங்கள் ஸ்டெர்லிங் உண்டியல் மூலம் நடைபெற்றன.

இதனால் உலகத்துப் பேரங்களில் பெரும்பாலன இலண்டன் வழியாக நடக்கலாயின. சில சமயம் ஏராளமாகப் பொன் வெளியேறிய போது அதைச் சமாளிக்க வட்டியை உயர்த்த வேண்டியிருந்தது. சில சமயம் பொன் குவிந்து வட்டியைக் குறைக்க வேண்டியதாயிற்று. இவைகளால் ஏற்படும் உள்நாட்டுக் கெடுதல்களை இங்கிலாந்து பொருட்படுத்தவில்லை. லண்டனுடைய தலைமை நிலைமையால் இங்கிலாந்து பெற்ற செல்வாக்கை நோக்க இவை முக்கியம் அல்ல. பொன் ரிசர்வு மாறும்போது வட்டிவீதங்கள் மாறியதற்குக் காரணம், பொன்னுக்கும் செலாவணிக்கும் உள்ள தொடர்பாகும். இங்கிலாந்தின் வியாபாரமும் பேரளவானது; அதனுடைய அயல்நாட்டுக் கடன் நடவடிக்கைகளும் ஏராளம். இதனாலும் பொன் பெயர்ச்சிகள் அடிக்கடி ஏற்படுவதுண்டு. இது சம்பந்தமாகவும் நடவடிக்கை அவசியமாகும்.

மைய பாங்கு வீதத்துக்கும் அங்காடி வீதங்களுக்கும் நெருக்கமான தொடர்பு இருந்தாலன்றி மைய பாங்கினுடைய வீத மாறுதல்கள் செலாவணியைக் கட்டுப்படுத்த முடியாது. இவ்விதத் தொடர்பு ஏற்படுவதற்குப் பண அங்காடி நன்கு பிணைக்கப்பட்டிருக்க வேண்டும். அந்த அங்காடியில் எச்ச ரொக்கம் இருக்கக்கூடாது. அப்போது தான் புது ரொக்கம் வேண்டுமானால் மைய பாங்கினிடம் போக அவசிய மேற்படும். இங்கிலாந்தின் பண அங்காடியில் இவ்வித நிலையே எப்போதும் காணப்படும். பாங்குகள் 8%-க்குமேல்எச்ச ரொக்கம் வைத்திருப்பதில்லை. தங்களிடம்வந்த வைப்பு அனைத்தையும் கடன்கொடுத்து விட்டுத் திடீரென்று ரொக்கம்வேண்டுமானால், தம்முடைய கையிலிருக்கும் உண்டியல் போன்ற நீர்மைச் சொத்துகளை மைய பாங்குக்குக் கழிவகங்கள் மூலம் விற்று ரொக்கம் பெறுவது வழக்கம். ஆகவே மைய பாங்கு கழிவு வட்டி வீதத்தை மாற்றி அவர்களைக் கடன் விஷயத்தில் எச்சரிக்கையாய் இருக்கும்படி செய்யலாம். பாங்கு வீதம் தண்டனை வீதமாகையினால் அது அங்காடி வீதங்களைவிட ஏற்றமாக இருக்கும்; அதற் கேற்பப் பாங்குகளும் தம்முடைய வீதங்களைத் திருத்திக்கொள்ளும். ஏனென்றால், முடிவில் தாம் கொடுக்கவேண்டிய வீதம் தண்டனை வீதமாகையால் தாம் வசூலிக்க வேண்டிய வீதம் இதைவிட அதிகமாகவே இருக்கவேண்டும். ஆகவே தண்டனை வீதம் அங்காடி வீதத்தை நிர்ணயிப்பதாகும். இங்கிலாந்தில் பாங்கு வீதத்துக்கும் மற்ற வீதங்களுக்கும் உள்ள இடைவெளி வழக்கத்தால் நிர்ணயிக்கப்பட்டுள்ளது. ஏழு நாள் தவணையுடைய வைப்புகளின் மேல் தீர்வக பாங்குகள் கொடுக்கும் வீதம் பாங்கு வீதத்துக்கு 2 அல்லது $1\frac{1}{2}$ சதவீதம் குறைவாக இருக்கும். தாங்கள் கடன் தரும்

அழைப்புப் பண வீதம் (Call Rate) வைப்பு வீதத்துக்கு ½ சதவீதம் அதிகமாக இருக்கும். இந்த ½ சதவீதம் அவைகளுக்கு இலாபம். அட்வான்சு வீதம் பாங்கு வீதத்துக்கு மேல் 1 சதவீதம் ஏற்றமாய் இருக்கும். இந்த வீதங்கள் உறுதியானவையல்ல. ஒரளவு வியாபாரிக்கு ஏற்றவாறும் வேறுபடுவதுண்டு. ஆயினும், பொதுவாய் இந்தவித வழக்கமான தொடர்பு இருந்து வருகிறது.

இவ்விதமாக இலண்டன் பாங்குகள் அற்ப இலாபத்தோடு பேரம் செய்வதினாலேயும், மைய பாங்கிடம் உதவிக்குப் போக வேண்டியதினாலேயும் இங்கிலாந்து பாங்கு அவைகளை எளிதில் கட்டுப்படுத்த முடிகிறது. பாங்குகள் எச்ச ரொக்க நிலை உடையவையானால் அவை மைய பாங்கிடம் வர நேரிடாது. ஆயினும் அவைகளைக் கட்டுப்படுத்த வேண்டுமாயின் வெளி அங்காடி நடவடிக்கை என்கிற முறையை மைய பாங்குஆளும்.

முதல் யுத்தத்துக்கு முன் கழிவு வீதத்தை மாற்றுவது மூலம் பொருளாதார நிலையை மாற்ற முடிந்தது. இங்கிலாந்தின் பொருளாதாரக் கட்டமைப்பு போதியநெகிழ்ச்சியோடு இருந்தது. கூலி, வாடகை முதலிய விலைகள் பண நெருக்கடிக்கேற்பச் சுருங்கவும் பணப் பெருக்கத்திற்கு ஏற்ப ஏறவும் செய்தன. ஆகவே பணத் தொகையை மாற்றுவதன் மூலம் விலை மட்டத்தை மைய பாங்கு மாற்றிப் பொருளாதாரத்தைத் திருத்த முடிந்தது.

மற்ற நாடுகளில் இங்கிலாந்தைப் போலப் பாங்கு வீதம் அவ்வளவு செல்வாக்குடையதாக இல்லை. அங்கு இங்கிலாந்தில் கண்டது போன்ற தொடர்பு அங்காடி வீதங்களுக்கும் பாங்கு வீதத்துக்கும் இல்லை. இதற்குக் காரணங்கள் பல உண்டு. அவைகளின் பண அங்காடி அவ்வளவு நெருக்கமாக இணைக்கப் படவில்லை. இங்கிலாந்திலுள்ளதைப் போலக் கழிவகங்கள் இல்லை பாங்குகள் உண்டியல்களைக் கழிவு செய்தன. மைய பாங்கு பாங்குகளின் உண்டியல்களை மறு கழிவு செய்தன; நேராக வாடிக்கைக்காரர்களின் உண்டியல்களைக் கழிவு செய்தன. இங்கிலாந்தைப்போல இங்குப் பலவிதவட்டி வீதங்களுக்கிடையே ஒரு வழக்கமான தொடர்பில்லை. இங்கிலாந்தைப்போலப் பிற நாடுகளில் பொன் ரிசர்வைக் காப்பதற்குக் கழிவு முறையை ஆள வேண்டிய அவசியமும் இல்லை. அவைகளிடம் ரிசர்வு ஏராளமாக இருக்கலாம், அல்லது வேறு முறைகளில் அவை ரிசர்வைக் காப்பாற்றிக் கொள்ளலாம்.

## (ஆ) அமெரிக்காவில் கழிவுக் கைக்கோள்

அமெரிக்காவில் ஃபெடரல் ரிசர்வு பாங்குகள் 1914-இல் வேலை துவங்கியபோது இங்கிலாந்து பாங்கைப் போலக் கழிவு வீத முறையைப் பெரும்பாலும் ஆளத் தலைப்பட்டன; வேண்டிய போது வீதத்தை நிலைப்படுத்த, திறந்த அங்காடி நடவடிக்கையும் எடுத்தன. இலண்டனைப் போல ஒரு கழிவகத்தைத் தோற்றுவிக்க முயன்றன. நியூயார்க்குக்கு ஒரு முதிர்ச்சியுடைய பண அங்காடியை உண்டாக்குவது நோக்கமாக இருந்தது. பாங்குகளின் ஒப்புதல்களுக்கு (Bankers' Acceptances) ஓர் அங்காடியும், வர்த்தகத் தாள்களுக்கு (Commercial Papers) ஓர் அங்காடியும், குறுந்தவணை அரசாங்கச் செக்கூரிட்டிகளுக்கு ஓர் அங்காடியும், அழைப்புக் கடனுக்கு (Call Loan) ஓர் அங்காடியுமாக 4 பகுதிகளுடைய பண அங்காடி விரும்பப்பட்டது. பாங்கு ஏற்புகளையும் அரசாங்கச் செக்கூரிட்டிகளையும் கழிவகம் அல்லது உண்டியல் தரகர்களிடமிருந்து வாங்குவதற்குச் சித்தமாக இருப்பதாகவும் சலுகை வீதம் தருவதாகவும் மைய பாங்கு கூறியது. நியூயார்க்கில் அன்றி, சிகாகோ, பாஸ்டன் முதலிய நகரங்களிலும் துணைப் பண அங்காடிகள் நிறுவப்பட்டன.

ஃபெடரல் ரிசர்வு பாங்கின் கழிவு வீதத்துக்கும் மற்ற அங்காடி வீதங்களுக்கும் இலண்டன் முறைக்கு வேறுபட்ட ஒரு தொடர்பு நிறுவப்பட்டது. இங்கிலாந்தில் சாதாரண பாங்குகள் மைய பாங்கை நேரிடையாக அணுகுவதில்லை. சாதாரண பாங்குகள் கழிவகங்களுக்கும் உண்டியல் தரகர்களுக்கும் தாம் கொடுத்த கடனை மீளஅழைப்பதன்மூலம் அவர்களை மைய பாங்கிடம் சென்று பணத்தைக் கொண்டு வரும்படி செய்வது வழக்கம். ஆனால் அமெரிக்காவில் அங்க பாங்குகள் (Member Banks) நேரிடையாக ரிசர்வு பாங்குகளிடம் கழிவு செய்யலாம். தவிர இங்கிலாந்து பாங்கின் கழிவு வீதம் முதல் தர உண்டியல்களுக்கு (First Class Bills) மட்டும் செல்லுபடியான குறைந்தபட்ச வீதமாகும். இந்த உண்டியல்களுக்கு நேராக அமெரிக்காவில் பாங்குகளின் ஏற்புகளைத்தான் (Bankers' Acceptances) கூறலாம். ஃபெடரல் ரிசர்வு பாங்கின் கழிவு வீதம், அங்க பாங்கின் வாடிக்கைக்காரர்களால் எழுதப்பட்டு ஓர் அங்க பாங்கால் புறக்குறிப்பு செய்யப்பட்ட புரோநோட்டுகளுக்கும், அங்க பாங்குகள் அரசாங்கச் செக்கூரிட்டி முதலியவைகளை ஈடு வைத்து எழுதும் குறுங்கால நோட்டுகளுக்கும்தான் பொருந்தும். ஆகவே இங்கிலாந்து பாங்கினுடைய கழிவு வீதத்தைப் போல, ஃபெடரல் ரிசர்வு பாங்கினுடைய கழிவு வீதம் பாங்கர்கள் ஏற்புக்கு உள்ள அங்காடி வீதத்துக்கு மேலிருந்த போதிலும் அது வர்த்தகத்தாள்களுக்கு இருந்த அங்காடி வீதத்

துக்குமேல் இருப்பதில்லை. அங்காடி வர்த்தகத் (Commercial Paper) தாளுக்கும், பாங்குப் புறக் குறிப்புடைய வர்த்தகத் தாளுக்கும் வேறுபாடு உண்டு என்பதை நோக்குக. பாங்கும் புறக் குறிப்புக்கு ஒரு மதிப்பீடு கொடுத்தால் ரிசர்வு பாங்குகளின் கழிவு வீதங்கள் அங்காடி வீதத்துக்குக் குறைவாக இருக்காது. ஆகவே மைய பாங்கு வீதம் அங்காடி வீதத்துக்கு ஏற்றமாக இருக்க வேண்டுமென்கிற இங்கிலாந்துக் கொள்கை அமெரிக்காவிலும் இருப்பதாகத் தெரிகிறது. பொதுவில் நியூயார்க் ரிசர்வு பாங்கின் கழிவு வீதத்துக்கும் அங்காடி வீதங்களுக்கும் ஒரு தொடர்பு காணப்படுகிறது. லண்டனைப் போல நியூயார்க்கிலும் கருவூல உண்டியல்களின் (Treasury Bills) வீதம், பாங்கு உண்டியல்கள் (Bank Bills) வீதத்துக்குக் குறைவாக இருக்கின்றது. ஆனால் அழைப்புக் கடன்களுக்கும், வாடிக்கைக்காரர்களுக்குத் தரும் கடன்களுக்கும், வைப்புகளுக்கும் உள்ள வீதங்களுக்குள் எந்த விதமான நிலையான தொடர்பும் இருப்பதாகத் தெரியவில்லை. இந்த விஷயத்தில் நியூயார்க் இங்கிலாந்திலிருந்து வேறுபடுகிறது. இலண்டனில் அழைப்பு வீதம் (Call Rate) என்பது கழிவகங்களுக்குத் தரும் கடன்கள் பேரில் வசூலிப்பது. அது பாங்கு வைப்பு வீதத்துக்கும் அங்காடி கழிவு வீதத்துக்கும் இடைப்பட்ட நிலையில் இருக்கும். அமெரிக்காவில் இந்த அளிப்பு வீதம் பாங்குகள் பங்கு அங்காடிக்குக் கொடுக்கும் கடன்கள் பேரில் வசூலிக்கும் வீதத்துக்குத் தொடர்புடையதாக இருக்கிறது. ஆகவே அது மற்ற வீதங்களோடு நெருங்கின தொடர்புடையதன்று. அதன் மட்டம் பங்கு அங்காடியில் நடக்கும் யூக வாணிகத்தின் பருமனைப் பொறுத்தது.

இங்கிலாந்தில் கழிவு வீதக் கோட்பாடு பொன் ரிசர்வு வீதத்தைக் காப்பாற்றுவதற்கு ஆளப்பட்டது. அமெரிக்காவிலும் முதலில் இப்படியே ஆளப்பட்டது. ஆனால் நாளடைவில் பேரளவில் பொன் வந்து குவிந்ததனால் இந்த நோக்கம் கழிவு வீதக் கொள்கைக்கு இருக்க வேண்டியதில்லையாயிற்று. பொதுவில் அமெரிக்க அனுபவம், அந்நாட்டில் கழிவு வீதம் இங்கிலாந்தைப் போல அவ்வளவு சக்தி வாய்ந்த கருவியாக இருக்கவில்லை என்பதைப் புலப்படுத்தியது. இதற்குக் காரணங்கள் பல. (1) ரிசர்வு பாங்குகளின் கழிவு வீதத்துக்கும் சில அங்காடி வீதங்களுக்கும் வழக்கமான தொடர்பு ஒன்றுமில்லை என்பது. (2) அமெரிக்காவில் பொன் ரிசர்வு ஏராளமாக இருப்பது. (3) அமெரிக்காவில் யூக வாணிகத்தில் அதிக ஈடுபாடு இருப்பது. (4) தனி ஃபெடரல் ரிசர்வு பாங்குகளுக்குக் கழிவு வீதத்தை மாற்றுவதற்கு உரிமை இல்லாதிருப்பது.

விகிதங்களை மாற்றுவதற்கு ஃபெடரல் ரிசர்வு போர்டின் அனுமதி வேண்டும். அது அநேக முறைகளில் பாங்குகளின் கோரிக்கையை மறுத்து விட்டிருக்கிறது. (5) இங்கிலாந்தில் இருப்பதைப் போல அமெரிக்காவில் தண்டனைக் கழிவு வீதம் இல்லாதிருப்பது பலவீனத்துக்கு ஒரு முக்கியக் காரணம். அங்காடி வீதத்தை விட, பாங்கு வீதம் எல்லாவிதத் தாள்களுக்கும் அதிகமாக இருக்கவேண்டும்.

## (இ) கழிவுவீதக் கருவியின் பின்னடைவு

கழிவு வீதத்தின் முக்கியத்துவம் சமீப காலத்தில் குறைந்து கொண்டே வந்திருக்கிறது. பொன் திட்டத்தைக் கைவிட்டதற்குப் பின், அதிலும் இரண்டாவது யுத்தத்துக்குப் பின், கழிவு வீதக் கைக்கோள் மற்ற முறைகளைவிட ஆட்சி குறைந்ததாகி விட்டது. இதற்குக் காரணங்கள் பல. முதலாவது, பொருளாதார அமைப்பிலும் பண அங்காடியின் பேரங்களிலும் ஏற்பட்ட மாறுபாடு. இரண்டாவது, மாற்றுப் பணக் கட்டுப்பாடு முறைகளின் சிறப்பு. மூன்றாவது, மலிவுப் பணக்கொள்கை.

பண அங்காடியில் ஏற்பட்ட முக்கியமான மாறுதல், வர்த்தக உண்டியல்கள் குறைவாக ஆளப்படுவதாகும். பாங்குகள் மூலம் செலுத்துகள் அயல்நாடுகளுக்கு நேரடியாகச் செய்யப்படலாயின. வர்த்தக உண்டியல்கள் குறைந்ததற்கு அநேக காரணங்கள் உண்டு: (1) வியாபாரத் தடைகள். (2) செலாவணி மாற்றுத் தடைகள். (3) பாங்கு மூலம் அல்லது தந்தி மூலம் செலுத்துவது. (4) பண அங்காடியில் கருவூல உண்டியல்கள் அல்லது அரசாங்கத்தின் குறுங்காலச் செக்யூரிட்டிகள் நிறைந்து விட்டமை. பாங்குகள் இவைகளை இரண்டாந்தர ரிசர்வாகப் பேரளவில் வாங்கி வைக்கலாயின. அரசாங்கத்தின் கடன், முதல் யுத்தத்துக்குப் பின் வளர்ந்து அங்காடியில் நிறைந்து விட்டது. இவைகளெல்லாம் ஏறக்குறைய ரொக்கத்துக்குச் சமமானவை. (5) தவிர, முதல் யுத்தத்துக்குப் பின் இலண்டன் பண அங்காடிக்கும் இதர அங்காடிகளுக்குமுள்ள தராதர மதிப்பில் வேறுபாடு ஏற்பட்டு விட்டது. யுத்தத்துக்கு முன் லண்டன் அங்காடி குறுங்காலப் பணத்துக்கு உலகின் மைய ஸ்தானமாக விளங்கியது. யுத்தத்துக்கு முன் நியூயார்க், பாரிஸ், ஆம்ஸ்டர்டாம், ஸூரிக் முதலிய நகரங்களும் பண அங்காடிகளைத் தோற்றுவித்தன. ஆகவே இலண்டனின் சிறப்புக் குறைந்து விட்டது. (6) தவிர பணத்துறையிலும், வியாபாரத் துறையிலும் நாடுகளுக்குள் அநேக கோளாறுகள் ஏற்படலாயின. இதனால்

முதல் (Capital) நாடு விட்டு நாடு பெயர்வதற்குத் தயங்கியது. கழிவுவீதத்தின் செல்வாக்கு, குறைந்தது. (7) தவிர, உள்நாட்டில் கழிவு வீதம் பண அளிப்பை மாற்றுவதன் மூலம் விலை மட்டத்தை மாற்றும் என்பது கொள்கை. ஆனால் பல நாடுகளில் பொருளாதார அமைப்புகள் விரைப்பு அடைந்து இப்படி நிகழ்வது தடைப்பட்டது. பொருளாதாரங்கள் செயற்கை நிருவாகத்திற்குட்பட்டன.

வேறு வகைப் பணக் கட்டுப்பாடு முறைகள்தோன்றியதாலும் கழிவு வீத ஆட்சிக்குச் சிறப்புக் குறைந்தது. வெளி அங்காடி நடவடிக்கைகள், நேரடி நடவடிக்கைகள், அறிவுறுத்தல், ரிசர்வு வீத மாறுதல் ஆகிய புது முறைகள் ஆளப்படலாயின. இவை வட்டி வீதத்தைவிடப் பல வகைகளில் சிறப்பு உடையன வாயிருந்தன.

### 3. பாங்குவீத மாறுதலும் நாட்டின் பொருளாதார நிலையும்

கீன்சு என்ற பேராசிரியர் A Treatise on Money என்ற நூலில் பாங்கு வீதம் எப்படிப் பொருளாதாரத்தைப் பாதிக்கிற தென்பதை வரன்முறையாக யாரும் எழுதவில்லை என்பதை எடுத்துக்காட்டி, இதுகாறும் பாங்கு வீதத்தின் செல்வாக்கைப் பற்றிப் பல்வேறு கொள்கைகள் இருந்தன வென்கிறார். அதைச் சிலர் பாங்குப் பணத்தை நிர்ணயிக்கும் ஒரு கருவியாகவும், சிலர் நாட்டின் பொன்னைக் காக்கும் கருவியாகவும், சிலர் ஏதோ ஒரு வழியில் நாட்டின் முதலீட்டை நிர்ணயிக்கும் ஒரு சக்தியாகவும் சிலர் மக்களின் மனோநிலையைப் பாதித்துப் பேரங்களைப் பாதிக்கும் சக்தியாகவும் கருதினர். ஹாட்ரி என்கிற ஆசிரியர் பாங்கு வீதம் எப்படி முதலீடு வீதத்தை நிர்ணயிக்கிறது என்பதைப் பற்றி ஆராய்ந்தபோதிலும், அவர் ஒரே ஒருவகை முதலீட்டைத்தான் கருதுகிறார். அவர் வட்டிவீதம் வியாபாரிகளின் பண்ட இருப்பைத்தான் நிர்ணயிப்பதாக நினைத்தார். இதன் வழியாகத்தான் வட்டி வீதம் செல்வாக்கடைய வேண்டும் என்றார். கீன்சு இந்த விளக்கத்தை ஏற்கவில்லை. வர்த்தகர்களும் வியாபாரிகளும் தங்கள் வர்த்தக இருப்புகள் (Stock) வைப்பதற்குக் கடன் வாங்கி முதலீடு செய்வார்கள். இந்த முதலீட்டின் அளவு வட்டி வீதத்தைப் பொறுத்தது என்றும், வட்டி வீதம் உயர்ந்தால் இருப்பு வைப்பது குறைந்து இதனால் உற்பத்தி குறைந்து வருமானம் குறைந்து விலையும் இறங்கும் என்பது ஹாட்ரியின் வாதம். கீன்சின் வாதம் வட்டிவீத மாறுதல் தொழிற் பங்குகளின் மதிப்பை மாற்றுவதன்மூலம் நிலை

முதல் (Fixed Capital) தேவை பாதிக்கப்பட்டு விலைவாசிகள் மாறும் என்பது. கீன்சு வாதம் சரியா, ஹாட்ரி வாதம் சரியா என்பதை ஆராய வேண்டும். உண்மையில் கீன்சு வாதம் தான் பொருத்தமானதாகத் தோன்றுகிறது. ராட்கிளிஃப் கமிட்டிக்குக் கிடைத்த சாட்சியங்களும் இதே முடிவைத் தருகின்றன. பண்டங்களை வைப்பதற்கு வட்டியைத் தவிர அநேக வேறு செலவுகளும் உள்ளன. கிடங்கு வாடகை, தேய்மானம், இன்சூரன்சு ஆகியவை பிற செலவுகள். பண்டங்களை விற்பனை செய்யும்போது ஏற்படும் இவ்விதமான பலவகைச் செலவுகளில் வட்டிச் செலவு எவ்வளவு முக்கியமானது என்பதைப் பொறுத்தது யார் சரி என்பது. மொத்தச் செலவில் வட்டிச் செலவு பெரும் பகுதியானால் பாங்குகள் வட்டி வீதத்தை மாற்றுவது வியாபாரிகளின் தொழிலை நேரடியாகப் பாதிக்கக்கூடும்.

கீன்சு கொள்கைப்படி, குறுங்கால வட்டி நெடுங்கால வட்டியைப் பாதித்து, நிலை முதலில் முதலீட்டைப் பாதித்துப் பொருளாதார நிலையை மாற்றவேண்டும். நிலை முதலுக்கு நேரடியாகப் பாங்குகள் கடன் கொடுப்பதில்லை யாதலால், குறுங்கால வட்டி வீதம் எப்படி நெடுங்கால வட்டி வீதத்தைப் பாதிக்கிறது என்பதை அவர் விளக்குகிறார். ஆனால் குறுங்கால வட்டி வீதம் ஹாட்ரி கூறுவது போல நேரடியாகப் பண்ட இருப்பைப் பாதிப்பதன்றி மறைமுகமாகவும் கீன்சு சொல்கிற முறைப்படி பொருளாதார நிலையைப் பாதிக்கக்கூடும்' ஆகவே இருவரின் கருத்துகளும் சரியானவையாக இருக்கக்கூடும். கருத்து வேறுபாடு இரண்டில் எது முக்கியம் என்பதைப் பற்றியதாகவே இருக்கலாம். ஹாட்ரிக்குக் குறுங்கால வட்டியின் நேரடியான விளைவு எளிதாகவும் நிச்சயமாகவும் இருப்பதாகத் தோன்றுகிறது. மறைமுக விளைவைச் சந்தேகமானதாக அவர் கருதுகிறார். கீன்சைச் சேர்ந்தவர்கள் குறுங்கால வட்டி வீதத்தின் நேரடிச் சக்தி அற்பமானதாக இருக்கும் என்று கருதுகிறார்கள்.

முதலில் ஹாட்ரியினுடைய கொள்கையை விளக்குவோம். ஹாட்ரியினுடைய கொள்கையில், வர்த்தகர்கள் வினை முடிந்த அல்லது முடியாத பண்டங்களைக் கடன் வாங்கி இருப்பு செய்கிறார்கள். இப்படி இருப்பு செய்வது திடீரென்று தோன்றும் தேவை மாறுதல்களைச் சமாளிப்பதற்காகும். இப்படிக் கையில் இருப்பு வைப்பது வர்த்தகர்களுக்கு ஆதாயத்தைக் கொடுக்கக்கூடியது. வர்த்தகர் இப்படிக் கிடைக்கும் ஆதாயத்தையும் இருப்பு வைப்பதற்குப் பிடிக்கும் செலவையும் ஒப்பிட்டுப் பார்க்கிறார்கள். இருப்புச் செலவு ஏறினால்

இருப்பு வைப்பது ஆதாயமுடையதாக இல்லாதிருக்கலாம். அப்போது அவர்கள் இருப்பைக் குறைப்பார்கள். இருப்புச் செலவு குறைந்தால் இருப்பை அதிகப்படுத்துவார்கள். செலவு ஓரளவு மாறும்போது எவ்வளவு இருப்பை மாற்றுவது என்பது இருப்பு வைப்பதற்கு உள்ளதேவை நெகிழ்ச்சியைப் பொறுத்தது. இருப்பு வைப்பது அதிக நெகிழ்ச்சி உடையதாயின், சிறு செலவுக் குறைவும் பேரளவில் இருப்பு வைப்பதைத் தூண்டும். குறுங்கால வட்டி ஏறும்போது வர்த்தகர்கள் நெகிழ்ச்சிக்கு ஏற்றவாறு தம்முடைய இருப்பைக் குறைப்பார்கள். இருப்பைக் குறைக்கும் வழி உற்பத்தியாளரிடமிருந்து முன்பு வாங்கியதை விடக் குறைவாக வாங்குவது. இதனால் பண்டங்கள் விற்கப்படும் வேகத்தைவிட விற்போர் பண்டங்களை வாங்கும் வேகம் குறைவாக இருக்கும். ஆகவே, வர்த்தகரிடத்தில் விற்பனைத் தொகை, வாங்கும் தொகையைவிட எச்சமாகிக் கையில் ரொக்கம் தங்கும். இதைப் பாங்குக் கடனைக் கொடுத்துவிடப் பயன்படுத்துவார்கள். இது நிற்க, வர்த்தகர் உற்பத்திச் சாலையிலிருந்து வாங்குவதைக் குறைத்ததனால் உற்பத்தி செய்பவர்கள் தங்கள் விற்பனை குறைவதை நோக்கி உற்பத்தியைக் குறைக்க ஆரம்பிப்பார்கள்; விலைகளையும் குறைப்பார்கள். அப்போது உற்பத்தியும் விலைகளும் குறைந்து வடிப்புக்கு (deflation) அறிகுறிகள் தென்படும். வேலையும் வருமானமும் குறையும், வருமானக் குறைவு பண்டங்களை வாங்குவதைக் குறைக்கும். இது வர்த்தகர் உற்பத்திச் சாலையிலிருந்து வாங்குவதை மீண்டும் குறைக்கும். இப்படியே மந்தம் வலுப்பெறும். விலை இறங்கும்போது மக்கள் இன்னும் அதிகமான விலை இறக்கத்தை எதிர்பார்த்து வாங்குவதை ஒத்திப்போடுவதனாலும் மந்தம் மேலும் வலுப்பெறும். உற்பத்தி செய்வோர் நம்பிக்கை இழந்து தொழில் புதுக்க வேலையையோ, பெருக்க வேலையையோ மேற்கொள்ளமாட்டார்கள். இதனால் முதற்பொருள் உற்பத்தித் தொழில்களும் (Capital Goods) மந்தத்திற் குட்படும்.

இதற்கு நேரடியாகக் குறுங்கால வட்டி குறைந்தால் இருப்பு வைக்கும் செலவு குறைந்து, விற்பனைக்காக அதிவேகமாக உற்பத்தியாளரிடமிருந்து சரக்கு வரவழைக்கப்படும். இதனால் உற்பத்தி பெருகும். வருமானம் பெருகும். விற்பனை அதிகப்படும். இதன் விளைவாய் வீக்க (Inflation) நிலை தோன்றும்.

வட்டி வீதம் மாறினால் மேற்கண்ட விளைவுகள் ஏற்படக் கூடும் என்பது உண்மையே. ஆனால் இவை நிகழ்வது இருப்புச்

செலவு மொத்தச் செலவில் எந்த விகிதம் என்பதையும் இருப்பு வைப்புத் தேவையின் நெகிழ்ச்சியையும் பொறுத்தது. இருப்புச் செலவின் விகிதத்தைக் கருதுவோமானால் அது மொத்தச் செலவில் ஒரு சிறு பகுதியாகத் தோன்றுகிறது. கிடங்கு வாடிக்கை, தேய்மானம், இன்சூரன்ஸ் கட்டணம், விலை மாறுதல் ஆகியவை சம்பந்தமான செலவுகள் அடிக்கடி மாறக்கூடியன; ஒவ்வொரு பண்டத்துக்கும் வேறுபடுவன. ஆனால் வட்டி வீதம் மொத்தச் செலவில் ஒரு சிறு பகுதியாகத் தான் இருக்கும். வட்டி 20 சதவீதம் ஏறினாலும் மொத்தச் செலவில் ஏற்றம் 2 சதவீதத்துக்கு மேல் இல்லாமல் இருக்கலாம். ஆகவே இருப்பு வைப்பதற்கு உள்ள தேவை நெகிழ்ச்சி அதிகமா யிருந்தாலொழிய, இந்தச் சிறு மாறுதலின் விளைவு இருப்பு வைக்கும் அளவை அதிகமாகப் பாதிக்காது. பண்டங்களில் பெரும்பாலானவை பருமன் (bulky) ஆனவை அல்லது எளிதில் சிதையக் கூடியவை அல்லது விலை மாறக் கூடியவை என்பதை நோக்கும் போது வட்டியின் முக்கியத்துவம் குறைவாகவே இருக்கும் என்பது தெளிவாகிறது. ஹாட்ரியினுடைய கொள்கை உண்மையானதா என்பதைப் பாங்குகளின் கடன் கொடுத்தல் வட்டிவீதம் மாறும் போது எவ்வளவு மாறுகிறது என்பதை நோக்கி மதிப்பிடலாம். அப்படிப் பார்த்தால் வட்டிவீத மாறுதலுக்கேற்பக் கடன் கொடுத்தல் நெகிழ்ச்சியுடன் மாறினதாகத் தெரியவில்லை.

அடுத்தபடி கீன்சு வாதத்தைப் பார்ப்போம். பாங்கு வீத மாறுதலின் விளைவு நெடுங்கால வட்டி வீதத்தைப் பாதிப்பதன் மூலமாகத்தான் ஏற்படுகிறது என்பது அவருடைய கொள்கை. குறுங்கால வட்டி வீதங்களும் நெடுங்கால வட்டி வீதங்களும் ஒரேபோது ஒரே திசையில் மாறுகின்றன என்பது கண்கூடு. ஏன் இப்படி மாறுகின்றன என்பதை நாம் விளக்க வேண்டும்.

பாங்கு வீதம் மாற்றப்படும்போது அந்த வீதம் அங்காடி வீதங்களைப் பாதிக்கும். இந்த மாறுதல் நெடுங்கால வட்டியை எப்படிப் பாதிக்கக் கூடும்? முதலாவதாக, நபர்களும் நிறுவனங்களும் இதுவரையில் பாங்குகளிடமிருந்து கடன் வாங்குவது வழக்கமாக இருந்தால், இப்போது கடன் வாங்கும் வட்டி வீதம் ஏறினால், இப்போதும் கடன் வாங்கி நடவடிக்கைகளை நிறைவேற்றுவதா அல்லது கையிலுள்ள நெடுங்கால செக்யூரிட்டிகளை விற்றுப் பணத் தேவையைப் பூர்த்தி செய்து கொள்வதா என்று கருதுவார்கள். கடன் வட்டி வீதம் செக்யூரிட்டிகளின் விளைவை விட அதிகமாயிருந்தால் செக்யூரிட்டிகளை விற்றுப் பாங்குக் கடன்களைக் கொடுத்து

விடுவது ஆதாயமாக இருக்கும். இப்படியாக செக்கூரிட்டி விற்பனை தோன்றும். இரண்டாவது, நபர்களும் நிறுவனங்களும் கையில் மிச்சப் பணம் வைத்திருந்தால், இப்போது பாங்கில் வட்டி அதிகம் கிடைக்குமாதலால் பாங்கில் வைப்புச் செய்ய முன் வருவார்கள். செக்கூரிட்டிகளை வாங்கார்கள். பணம் பாங்குகளுக்குப் போய்ச் சேரும். பொதுவாக செக்கூரிட்டிக்கு உள்ள தேவை குறைந்து அளிப்பு அதிகமாகும் போது செக்கூரிட்டிகளின் விலைகள் இறங்கி, அவைகளின் விளைவு ஏறும். பழைய செக்கூரிட்டிகளின் விளைவு ஏறும்போது ஒருவன் நெடுங்காலக் கடன் வாங்குவதற்குக் கொடுக்க வேண்டிய வட்டியும் உடன்நிகழ்வாக ஏறும். இவ்விதமாக நெடுங்கால வட்டி ஏறுகிறது.

மேலே குறுங்கால வட்டி மாறுதல் எப்படி மக்களின் செக்கூரிட்டி அங்காடி நடவடிக்கைகளைப் பாதிக்கிறது என்று பார்த்தோம். செக்கூரிட்டி அங்காடியில் வர்த்தக பாங்குகளும் பேரம் செய்வதுண்டு. பாங்கு வீதத்தை வலுப்படுத்துவதற்காக மைய பாங்கு பணத்தின் கணியத்தை மாற்ற முயலும். ரொக்க விகிதம் ஒரு நிலையில் இருக்கையில் வட்டிவீதம் உயர்வது மொத்தத்தில் சமூகத்தில் ரொக்கம் குறைவாயுள்ளதைக் காட்டுகிறது. (மைய பாங்கு இந்த நிலையை உண்டாக்கி இருக்கலாம்.) உடனே பாங்குகள் தம்முடைய சொத்துகளைக் குறைக்க முயலும். அவைகளை விற்று ரொக்க நிலையைச் சமாளிக்க முயலும். குறைக்கப்படுவது கடன் கொடுப்பு. விற்கப்படுவன முதலீடுகள். ஆனால் கடன் கொடுப்பை பாங்கு அவ்வளவு சுலபமாகக் குறைக்க முடியாது. கடன் கொடுப்பு மிகவும் ஆதாயமான இனம். தவிர, வாடிக்கைக்காரர்களையும் தொந்தரவு செய்ய முடியாது. ஆகவே, பாங்குகள் முதலீடுகளையே விற்க வேண்டியிருக்கும். அவை பெரும்பாலும் மினுக்கு ஓர (Gilt-edged) செக்கூரிட்டிகளை விற்கும். இதனால் நெடுங்கால வட்டி ஏறும்.

எதிரிடையாக மைய பாங்கு மலிவுப் பணக் கோட்பாட்டைப் பின்பற்றினால் அது பாங்குகளின் ரொக்கத் தன்மையை அதிகப்படுத்தும். முடிவில் பாங்குகள் தம்முடைய முதலீடுகளை அதிகப்படுத்தும். அவை முதலீடுகளை வாங்கினதும், நெடுங்கால வட்டி வீதங்கள் இறங்கும். ஆகவே பாங்கு வீதம் நீடித்து உயர்ந்தால் பாங்குகளின் நடவடிக்கையும் மக்கள் நடவடிக்கையை உறுதிப்படுத்துவதாக இருக்கும்.

இப்படியாகக் குறுங்கால அங்காடி நிலை நெடுங்கால அங்காடியைப் பாதிப்பதால் இரண்டு அங்காடிகளின் வட்டி வீதங்களும் சமமாக ஆகிவிடும் என்று நினைக்கக்கூடாது. இரண்டுக்கும் உள்ள இடைவெளி இருக்க, அவை ஒரே திசையில் மாறும். எவ்வளவு தூரம் இரண்டும் மாறும் என்பது மக்கள் எதிர்கால வட்டியின் போக்கைப் பற்றிக் கொண்டுள்ள கருத்தைப் பொறுத்தது. நெடுங்கால வட்டி வீதம் அடுத்த ஆண்டில் 6 சதவீதமாக இருக்கும் என்று மக்கள் கருதுவார்களானால், குறுங்கால வட்டி வீதங்கள் எவ்வளவு வீழ்ந்தாலும், நெடுங்கால வட்டிவீதம் இந்த 6 சதவீதத்திற்குக் குறையாது. 3 சதவீதக் கான்சல்கள் (நிரந்தர பாண்டுகள்) சில மாதங்களில் மிகக் குறைந்த விலைக்கு விற்கும் என்று நினைத்தால், மக்கள் தங்களுடைய பணத்தை வட்டிவீதம் எவ்வளவு குறைவாயிருந்தாலும் குறும் தவணை வைப்பாக வைத்திருப்பார்கள்; இப்போதுள்ள (உயர்) விலையில் கான்சலை வாங்கமாட்டார்கள். ஏனென்றால் இன்று குறுங்கால வைப்பில் அற்ப வட்டியே கிடைத்தபோதிலும், பின்னர் மலிவாகக் கான்சல் வாங்குவது மிக்க ஆதாயமானதாக இருக்கும். அதாவது மக்கள் அடுத்த சில ஆண்டுகளில் செக்கூரிட்டி விலைகள் இறங்கப் போகின்றன என்று நம்பினால் குறுங்கால அங்காடியில் ஏராளமாகப் பணம் குவியும். இதனால் செக்கூரிட்டிகளின் விலைகள் இன்றே கூடச் சிறிது குறைய ஆரம்பிக்கும். இதனால் நெடுங்கால வட்டி வீதம் சிறிது ஏற ஆரம்பிக்கும். ஆகவே அதிகாரிகள் மலிவுப் பணக் கொள்கையைப் பின்பற்ற விரும்பினால், அவர்கள் எதிர்கால நெடுங்கால வட்டி வீதம் இன்றைய வீதத்தைவிட மிகக் குறைந்த மட்டத்தில் நிலையாக இருக்கப் போகிறது என்ற நம்பிக்கையை மக்களுக்கு உண்டாக்க வேண்டும்.

ஓர் உதாரணம் தருவோம். இன்னும் ஓர் ஆண்டில் நெடுங்கால வட்டி வீதம் 6 சதவீதமாக இருக்கும் என்று மக்கள் நினைத்தால், எவ்வளவு தூரம் குறுங்கால வட்டி வீதங்களைக் குறைந்தாலும் நெடுங்கால வட்டிவீதம் 6 சதவீதத்திற்குக் குறையாது. 3 சதவீத வருமானமுடைய ஒரு நிரந்தர பாண்டு அங்காடியில் இருப்பதாக வைத்துக்கொள்ளுவோம். அடுத்த ஆண்டில் நெடுங்கால வட்டி 6 சதவீதமாக மாறுமானால் இதன் விலை அப்போது 50 ரூபாயாக விழும். இன்று ஒருவன் 50 ரூபாய்க்கு மேல் கொடுத்து இந்தப் பாண்டை வாங்கினால், அடுத்த ஆண்டில் வட்டி மாறும்போது அவனுக்கு முதல் நஷ்டம் ஏற்படும். ஆகவே அவன் இன்று பாண்டு ஒன்றும் வாங்காது ரொக்கமாக, வட்டி நஷ்டத்தைப் பொருட்படுத்தாமல் வைத்து

இருந்தால், அடுத்த ஆண்டில் இந்தப் பாண்டைக் குறைந்த விலையில் வாங்க முடியும்.

ஒருவன் 600 ரூபாய் முதலீடு செய்ய விரும்புவதாக வைத்துக் கொள்வோம். இன்று பாண்டு விலை 60 ரூபாய் என்று வைத்துக் கொள்வோம். அவன் இந்த 600 ரூபாய்க்கு 10 பாண்டு வாங்கினால் ஓர் ஆண்டில் 30 ரூபாய் வருமானம் பெறுவான். அவன் நஷ்டப்படுவது ஒரு வருட வட்டி, 18 ரூபாய், எச்சம் 12 ரூபாய். ஆனால் அடுத்த ஆண்டில் வட்டி எதிர்பார்த்தபடி 6% ஆனால் முதலீட்டில் பாதி (300) நஷ்டமாகும். இப்படி எல்லாரும் அடுத்த ஆண்டில் வட்டி ஏறுமென்று எதிர் பார்ப்பார்களானால், யாரும் இன்று 60 ரூபாய் விலையில் பாண்டை வாங்க மாட்டார்கள். பாண்டு வைத்திருப்பவர்களும் விற்று ரொக்கமாக்கி வைக்க விரும்புவார்கள். இப்படிப் பாண்டுக்குத் தேவை குறையும்போது, விற்பனையும் அதிகமாகுமானால் உடனேயே வட்டிவிழும். ஆகவே குறுங்கால வட்டி வீதங்கள் மாறினால் அது நெடுங்கால அங்காடியைப் பாதிப்பது, எதிர்கால வீதத்தைப் பற்றி மக்களுடைய எதிர்பார்ப்பைப் பொறுத்தது. குறுங்கால வீத மாறுதல்கள் இந்த எதிர்பார்ப்பை மாற்றினா லொழிய நெடுங்கால வீதத்தில் ஒரு சிறு அளவு மாறுதல் உண்டாக்குவதற்கும், பேரளவில் குறுங்கால வீதங்கள் மாறவேண்டியிருக்கும். மக்கள் எதிர்பார்ப்பின் சக்தி அனு பவத்தில் கண்டறிந்த விஷயம். 1946-47இல் இங்கிலாந்தின் நிதி மந்திரி டால்டன் நெடுங்கால வட்டி வீதத்தை $2\frac{1}{2}$ சதவீதத் துக்குக் குறைக்க முயன்றார். ஆனால் அங்காடி அப்போதுள்ள சூழ்நிலையில் இந்த வீதம் சாத்தியத்துக்கு விரோதமானது, மிகக் குறைவு, இதை நிறுவ முடியாது என்று மக்கள் கருதியதால், அவரது முயற்சி கைகூடவில்லை. எதிர்கால வட்டி ஏறுமென்று அதாவது எதிர்கால பாண்டு விலைகள் குறையுமென்று நினைத்ததால், மக்கள் அரசாங்க செக்யூரிட்டிகளை வாங்க முன் வரவில்லை. மக்கள் எதிர்பார்ப்பின் காரணமாகக் குறையும் போக்குடனிருந்த செக்யூரிட்டிகளின் விலையைக் காப்பதற்கு அரசாங்கம் மிகவும் முயன்றது. ஆனால் இதற்காக ஏராளமாகப் பணத்தை வெளியிட வேண்டி வரும் என்று தெரிந்தது. ஆகவே அதிகாரிகள் இப்படிச் செயற்கையாக செக்யூரிட்டி விலையைத் தாங்குவதை நிறுத்தினார்கள். உடனே விலைகள் வீழ்ந்தன, நெடுங்கால வட்டி வீதம் 3 சதவீதத்திற்கு உயர்ந்தது; இப்படி வேறு நாடுகளிலும் அனுபவம் உண்டு.

ஆகவே, நெடுங்கால வட்டி வீதத்தை மாற்ற எடுக்கும் முயற்சிகள் வெற்றி பெறுவது பொதுமக்களின் மனப்போக்கைப்

பொறுத்தது. ஏராளமாகப் பிரசாரம் செய்து மக்கள் மனத்தை மாற்ற வேண்டும். ஆகவே, பணத்துறைக் கைக்கோள் வட்டி வீதத்தின் சக்தியைப் பொறுத்ததானால், அது மிகவும் பலவீனமான கருவி என்று தெரிகிறது. ஆனால் பலனற்ற தன்று. நெடும் பாண்டுகளின் விலைகள் ஏறும்போது (அதாவது வட்டி வீதம் குறையும்போது) எல்லாவித செக்கூரிட்டிகளும் விலை ஏறுமாதலால் மக்கள் முதலீடு செய்ய முன் வருவார்கள். புது செக்கூரிட்டிகளை வெளியிட முடியும். முதல் தொழில்துறைக்குச் செல்கிறது.

ஒருபோது நாட்டிலுள்ள பல்வகை செக்கூரிட்டிகளின் விலைகளுக்கிடையே ஒன்றுக்கொன்று ஒரு வகைத் தொடர்புண்டு. மக்கள் மனத்தில் இவை சம்பந்தமாக ஒரு தாரதம்மிய மதிப்பு இருக்கும். அதற்கேற்ப தராதர விலைகள் இருக்கும். இந்தத் தாரதம்மியம் ஒரு நிலையிலிருக்க, அரசாங்க பாண்டு போன்ற ஒரு முக்கிய வகையின் விலை (பணத்துறை நடவடிக்கையால் குறுங்கால வட்டி வீதத்தைக் குறைத்ததனால்) ஏறினால் எல்லாவகை செக்கூரிட்டிகளின் விலைகளும் ஏறும். மக்களுடைய தாரதம்மியத்தில் மாறுதல் இல்லாதிருந்தால்தான் ஒன்றின் விலை ஏறும்போது எல்லா வகைகளின் விலையும் தொடர்ந்து ஏறும். இந்த நிபந்தனை, அதாவது தாரதம்மியத்தில் மாறுதல் ஏற்படவில்லை என்பது, முக்கியமான நிபந்தனையாகும். அரசாங்க பாண்டின் விலை ஏறும்போது மக்கள் யாது காரணத்தாலோ தாரதம்மியத்தை மாற்றலாம்.

ஆகவே வட்டி வீதங்கள் குறையுமானால் முதலீடு தூண்டப்படலாம். வட்டி வீத மாறுதல் எவ்வளவு தூரம் முதலீட்டைப் பாதிக்கும் என்பது, ஒரு தொழிலை ஆரம்பிப்பதில் உள்ள மொத்த இலாப நஷ்டத்தில் வட்டி எவ்வளவு முக்கியமானது என்பதைப் பொறுத்தது. ஒரு தொழில் முயல்வோன் தன்னுடைய தொழிலில் மேலும் முதலீடு செய்வது உசிதமா என்பதை முடிவு செய்ய, அநேகத் தொழில் நுட்ப விஷயங்களையும் ஆலோசிக்க வேண்டும். முதலீடு மேலும் செய்வதால் உற்பத்தி எவ்வகையில் பெருகும் என்பதும், புதிய நிலைமுதல் எவ்வளவு காலம் உழைக்கும் என்பதும், புது நிலைமுதலைப் பழைய நிலை முதலோடு எவ்வளவு தூரம் இணைக்கக்கூடும் என்பதும், தொழில் நுட்பப் பிரச்சினைகள் ஆகும். அதிகமாக உற்பத்தியாகப் போகிற பண்டங்களின் விலை என்னவாக இருக்கும் என்பதும், எந்த வட்டி வீதத்தில் முதல் கிடைக்கும் என்பதும், பிறவும்

பொருளாதாரப் பிரச்சினைகள் ஆகும். இவைகளெல்லாம் ஒருபுறமிருக்க, தொழில் பெருக்கம் செய்வதா, அல்லவா என்பது வட்டி வீதத்தையும் பொறுத்தது. வட்டி குறைவாய் இருந்தால் தொழிலைப் பெருக்குவது ஆதாயமாக இருக்கும்.

முதலீடு செய்வதில் இரண்டு வகைகள் உண்டு. ஒன்று நிலை முதற் பொருள்களில் செய்வது. மற்றொன்று பண்ட இருப்பில் செய்வது. வட்டி 5% ஆக இருக்கும்போது ஆள்வது ஆதாயமாக இல்லாதிருந்த ஒரு புதுமுறை அல்லது பொறி, வட்டி 4% ஆக விழுந்தால் ஆதாய மாகலா மாதலால் முதலீடு பெருகும். ஏனெனில், பொறியின் விலை ரூ. 20,000 ஆனால், 5% வீதத்தில் வட்டிச் செலவு ரூ. 100. ஆனால் 4% வீதத்தில் இது ரூ. 80 ஆகக் குறைகிறது. ஆனால் தேய்மானச் செலவையும் பொறி சம்பாதிக்க வேண்டும். முதற் பொருள் குறுகிய ஆயுளுடையதாயின் தேய்மானச் செலவுத் தொகை பெருந் தொகையாக இருக்கும். பத்தாண்டில் இந்தப் பொறி பயனற்றுப்போகுமானால், ஆண்டுத் தேய்மானச் செலவு ரூ. 2,000. வட்டி 5% ஆக இருக்கும்போது மொத்தச் செலவு = வட்டிக்கு ரூ. 100 + தேய்மானம் ரூ. 2,000 = ரூ. 2,100. 4% ஆக வட்டி விழும்போது மொத்தம் = ரூ. 2,080. ஆகவே வட்டி 20% வீழ்ந்தும் மொத்தச் செலவில் குறைவு அற்பமாகவே இருக்கிறது. ஆகவே முதலீட்டை வட்டி வீழ்ச்சி தூண்டும் சக்தியுடையது என்பது ஐயமானது.

ஆனால் நெடிய ஆயுளுடைய முதல் பொருள்களில் முதலீடு தூண்டப்படலாம். ஏனெனில் அவைகளின் ஆண்டுத் தேய்மானத் தொகை சிறு தொகையாக இருக்கும். ஆதலால் வட்டித்தொகை முக்கியமானதாக இருக்கும். உதாரணமாக ஒரு கட்டடம் 20,000ரூபாயில் கட்டுவதாயின், அதன் ஆயுள் நெடியதாகையினால் ஆண்டுத் தேய்மானச் செலவு 100 ரூபாய் தானாகும். ஆகவே மொத்தச் செலவு 5% வட்டி வீதக் காலத்தில் ரூ. 200 (வட்டி ரூ. 100 + தேய்மானம் ரூ. 100); 4% வட்டி வீதக் காலத்தில் ரூ. 180 (வட்டி ரூ. 80 + தேய்மானம் ரூ. 100).

ஆகவே, நெடிய ஆயுளுடைய முதலீடுகள் வட்டி வீழ்ச்சியால் தூண்டப்படும்.

மற்ற வகை முதலீடு—பண்ட இருப்பில் செய்வது—அற்பமாகவே வட்டி மாறுதலால் பாதிக்கப்படும் என்று முன்பே கூறியுள்ளோம்.

பொதுவாக, வட்டிவீதத்தின் சக்தியை நாம் மிகைப்படுத்தக் கூடாது. தொழிலதிபர்களுடைய முதலீட்டு முடிவுகள் எதிர்கால நிலையின்மைச் சூழ்நிலையால் பாதிக்கப்படுகின்றன.

விற்பனை வருவாய் எதிர்பார்த்த வேகத்தில் வளராமல் இருக்கலாம். ஆகவே இப்படிப்பட்ட நிலையற்ற இதர காரணிகளுக்கு முன்னால் வட்டி இரண்டொரு சதவீதம் மாறுவது முக்கியமாக இருக்காது. வட்டி வீதத்தை விட முக்கியமானது தொழில்துறையோர் எதிர்காலத்தைப் பற்றிக் கண்டுள்ள எதிர்பார்ப்புகள் ஆகும். மந்தக் (depression) காலத்தில் எதிர்காலத்தைப் பற்றி அவநம்பிக்கை மிகுந்து இருக்கும்போது வட்டி வீதத்தை எவ்வளவு குறைத்தாலும் முதலீடு தூண்டப்படாது. பூரிப்புக் (boom) காலத்தில் நம்பிக்கை மிகுந்திருக்கும் போது வட்டி ஏறுவது முதலீட்டுக்குத் தடையாக இருக்காது. பொதுத்துறையிலும் கூட இஃது உண்மையாகும்.

வட்டி வீதத்தின் செல்வாக்கு முதலீட்டின் தன்மையால் நிர்ணயிக்கப்படுவதாயின், பணத்துறை நடவடிக்கைகளைக் கொண்டு பொருளாதார நோக்கங்களைச் சாதிப்பது நிச்சயமற்றது என்பது தெரிகிறது. ஆனாலும் வட்டி வீத மாறுதல்களின் சக்தியை வேறு சில சக்திகள் உறுதிப்படுத்துகின்றன. பணத்துறை அதிகாரிகள் வட்டி வீதத்தை மாற்றும்போது, அங்காடிக்குக் கிடைக்கக்கூடிய முதல் கணியமும் (available quantity of capital) மாறும். அதிகாரிகள் பண மலிவுக் கொள்கையைப் பின்பற்றினால், அது பண அளிப்பை அதிகப்படுத்தப்போவதாகக் குறிப்பு. வட்டி உயரப்போகிறதென்று அஞ்சிக் கையில் ரொக்கமாகவே வைத்திருக்க விரும்புகிறவர்களது ரொக்கத் தேவையைப் பணப்பெருக்கம் பூர்த்தி செய்யும். இன்சூரன்சு கம்பெனிகள், கட்டட சொசைட்டிகள், பெரிய தொழிலகங்கள் ஆகியவை வழக்கத்திற்கு மேலாக ரொக்கமாக வைத்திருக்கும். இப்படி அங்காடியில் பணத்தைத் திணித்தே அதிகாரிகள் வட்டி வீதத்தைக் குறைப்பதாக அனுமானம். இப்படி நிதி அகங்களும் தொழில் அகங்களும் ஏராளமாக இருப்பு வைத்திருந்தும் அவைகளை அரசாங்க பாண்டுகளில் இட விரும்பமாட்டார்களாயின் நாளடைவில் வேறு வகையில் பணத்தை ஆள நினைப்பார்கள். அரசாங்க பாண்டுகளை வாங்காமல் விளைவு அதிகமாகத் தரக்கூடிய சில யூக (speculative) பேர வழிகளில் ஆள நினைக்கலாம். கையிலுள்ள ரொக்கத்தில் ஓரளவை இப்படி ஆள்வதற்குத் தயங்க மாட்டார்கள். பண அங்காடியில் முன்னர்ப் பணம் புரட்ட முடியாதவர்கள் இப்போது எளிதாகப் பணம்

பெற முடிகிறது. இப்படி முதல் கிடைப்பைப் பெருக்கியே மலிவுப் பணக் கைக்கோள் முதற் பொருள்களுக்குத் தேவையைத் தூண்டு கிறது. புது இயந்திரங்களுக்கும், பிற முதலீடுகளுக்கும் உள்ள தேவை கச்சாப் பொருளுக்கும் தொழிலாளிக்கும் உள்ள தேவையை அதிகப்படுத்துகிறது. நாட்டில் ஆட்சியின்றி (idle)ச் சாதனங்கள் இருக்குமாயின் முதற் பொருள் உற்பத்தி பெருகும். புதுத் தேவையைப் பூர்த்தி செய்யக் கூடும். சாதனங்களின் கூலிகள் உயர்வதற்கு இடமிருக்காது. பழைய கூலி வீதத்தில் அதிகமான பேர் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படுவார்கள். ஏற்கனவே உள்ள ஆட்கள் அதிகமாக வருமானம் பெறுவார்கள். இப்படி வருமானம் உயர்வது சேமிப்பை அதிகப்படுத்தவும் நுகர்ச்சியை அதிகப்படுத்தவும் ஆளப்படும். நுகர்ச்சிக்கு ஆளப்பட்டால் நுகர்ச்சித் துறையில் நிறுவனங்கள் உற்பத்தியைப் பெருக்க ஆரம்பிக்கும். இதுவும் சாதனங்களுக்குள்ள தேவையை அதிகப்படுத்தும். அதேபோது பொதுத் துறையிலும் பெரும் செலவில் பொதுக் காரியங்கள் செய்யப்படும். இவ்விதமாக முதற் பொருள் உற்பத்தியிலும் நுகர்ச்சிப் பொருள் உற்பத்தியிலும் அரசாங்கத் துறையிலும் பெருக்கம் காணப்படும். வட்டி வீதம் குறைவதும் பணம் எளிதாகக் கிடைப்பதும் ஒருவருக்கு எளிதாகவும் மலிவாகவும் தவணைக் கடன் (Instalment Credit) கிடைக்கும்படிச் செய்கிறது. உறுதி நுகர்ச்சிப் பொருள்கள் பெருகி வரும் இக்காலத்தில் இவ்விதமாக மலிவுப் பணச் சூழ்நிலை பண்டங்களுக்குள்ள தேவையை அதிகப்படுத்துகிறது.

மேற்கண்ட போக்கு வட்டி வீதம் குறைவதனால் ஏற்படும் விளைவு. வட்டி வீதம் ஏறுவதனால் ஏற்படும் விளைவு இதற்கு எதிரிடையாக இருக்கும். வட்டி வீதங்கள் உயரும்போது பணம் முதலீட்டுக்குக் கிடைப்பது குறைகிறது. முதல் பொருள் துறையில் வேலை குறைகிறது. பண வருமானம் குறைகிறது. நுகர்வோர், வருமானக் குறைவைப் பார்த்துத் தம் செலவைக் குறைத்துக் கொள்கிறார்கள். தவணைக் கடன் கொடுப்பது குறைகிறது. நுகர்ச்சிப் பொருள் துறையிலும் உற்பத்தி வேலை குறைகிறது. அரசாங்க வருமானமும் குறைந்து பொதுப்பணி குறையும். இப்படியாக எல்லாத் துறைகளும் பாதிக்கப்படுகின்றன.

இவ்விதமாக, சுற்று முறையில் குறுங்கால வட்டிகளுக்கும் நெடுங்கால வட்டிகளுக்கும் ஏற்படும் தொடர்பு காரணமாகவும் நெடுங்கால வட்டிக்கும் முதல் கிடைப்புக்கும் நிலை முதல்

விரிவுக்கும் உள்ள தொடர்பு காரணமாகவும் பணத்துறை நடவடிக்கையால் அதிகாரிகள் பொருளாதார நிலையைத் திருத்த முயலலாம். முற்காலத்தில் இஃது எளிதாகச் செய்யக் கூடியதாக நினைக்கப்பட்டது. இன்று இப்படி நினைக்கப்படுவதில்லை. இப்படிச் சுற்று முறையாகப் பொருளாதாரத்தை மாற்றுவதைவிட நேரடியான முறைகளால் பொருளாதாரத்தை மாற்றுவதையே பொருளாதார நிபுணர்கள் விரும்புகின்றனர். ஆனால் பணத்துறை நடவடிக்கைகள் அவைகளுக்கு உறுதி செய்வன வாக இருக்கலாம். பணத்துறை நடவடிக்கைகளின் குறைபாடு உடனே விளைவைக் காண முடியாததாகும். ஆனால், அநேக சந்தர்ப்பங்களில் அவைகளின் உதவி அவசியமாக இருக்கலாம்.

## 4. வெளி அங்காடி நடவடிக்கைகள் (Open Market Operations)

முதல் உலக யுத்தத்துக்கு முன் இங்கிலாந்து பாங்கு கடன் கட்டுப்பாடு விஷயத்தில் பாங்கு வீதத்தையே முக்கிய மான கருவியாக ஆண்டது. பல முறை இலண்டன் பண அங்காடி நீர்மை மிக்கிருந்தபோது, வட்டி வீதத்தைச் சக்தி யுடையதாகச் செய்வது கடினமாக இருந்தது. அப்போது அங்காடியிலிருக்கும் எச்ச நீர்மையைக் குறைப்பதற்குத் தகுந்த வழியைப் பாங்கு நினைக்கலாயிற்று. ஒரு வழி அனுபவத்தில் பரிணமித்தது. அதாவது ரொக்கத்துக்குக் கான்சல்களை விற்று, அதேபோது அடுத்த தீர்வு நாளில் (Settlement Day) செலுத்து வதாக அவைகளை வாங்குவது. இம்முறையில் அடுத்த தீர்வு நாள் வரைக்கும் பணம் முடக்கப்படும். பழைய வழி பாங்கு பண அங்காடியில் கடன் வாங்குவது. கழிவகங்கள், உண்டியல் புரோக்கர்கள் முதலியவர்களிடம் அரசாங்க செக்கூரிட்டிகளை ஈடுவைத்து இங்கிலாந்து பாங்கு கடன் வாங்கும். இந்த இரண்டு முறைகளில் எதை ஆண்டாலும் அங்காடியிலிருக்கும் ரொக்கம் குறைந்து வட்டி வீதங்கள் உயர ஆரம்பிக்கும். இந்த இரண்டு முறைகளைத் தவிர வேறு வழிகளும் சிலபோது ஆளப்பட்டன. உதாரணமாக, அரசாங்க செக்கூரிட்டிகளை விற்பது, வணிக பாங்குகளிடம் கடன் வாங்குவது, வைப்புகளைப் பெறுவது ஆகியவை. பாங்கு ஒரு திட்டவட்டமான முறையை வகுக்க வில்லை என்பது அது பல்வகை முறைகளை ஆண்டதிலிருந்து தெரிகிறது. அமெரிக்காவில் 1913-இல் ஃபெடரல் ரிசர்வு முறை தோன்றியபோது, ஃபெடரல் ரிசர்வு பாங்குகள் வெளி அங்காடி நடவடிக்கையை ஆளவேண்டுமென்ற நோக்கத்தோடு பாங்குகள் அங்காடியில் அரசாங்க பாண்டுகளை வாங்கவும் விற்கவும்

அனுமதிக்கப்பட்டன. யுத்த காலத்தின்போது இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் மைய பாங்குகள் யுத்த நிதி சம்பந்தமாக வெளி அங்காடி நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டன. அரசாங்க செக்கூரிட்டிகளின் பேரில் அரசாங்கத்துக்குக் கடன் கொடுத்ததன்றியும், அங்காடியிலும் அரசாங்கத் தாள்களை வாங்கின. யுத்தத்துக்குப் பின் இப்படிப்பட்ட அங்காடி நடவடிக்கை மைய பாங்குகளால் ஆளப்படுவது வழக்க மாயிற்று. முதலில் இது பாங்குவீத முறையை வலுப்படுத்தும் துணைச் சக்தியாக ஆளப்பட்டது; நாளடைவில் முக்கிய கருவி யாகவே ஆயிற்று, இம்முறை முதன்மை பெற்றதற்குக் காரணம் கழிவு வீதத்தை ஆள்வதில் இருந்த இடர்ப்பாடுகளும், வெளி அங்காடி நடவடிக்கையின் எளிமையும், அரசாங்கத்தின் நிதித் தேவை வளர்ச்சியும் ஆகும்.

'வெளி அங்காடி நடவடிக்கை' என்பது மைய பாங்கு அங்காடியில் அரசாங்கத் தாள்கள், பாங்கு ஒப்புதல்கள், அயல் நாட்டுச் செலாவணிகள் ஆகியவற்றை வாங்கவும் விற்கவும் செய்வதைக் குறைக்கும். ஆனால் இங்கிலாந்திலும் அமெரிக்கா விலும் இந்தச் சொற்றொடர் இவ்விதப் பரந்த கருத்தில் ஆளப் படுவதில்லை. அரசாங்கக் குறுங்கால, நெடுங்கால செக்கூரிட்டி களை வாங்குவது அல்லது விற்பதையே குறிக்கும்; ஈடு பெறு வதைக்கூடக் குறிக்காது. இந்த நடவடிக்கையைப் பாங்கு தான் விரும்பியபோது எடுக்கும். ஆனால் மறு கழிவு மூலம் தாள்களை வாங்குவது அங்காடியின் விருப்பத்தைப் பொறுத்ததாகையால் இது வெளி அங்காடி நடவடிக்கையில் அடங்காது. மறு கழிவு மூலம் வாங்கும்போது வட்டி வீதங்கள் மாறுகின்றன. ஆனால் வெளி அங்காடி நடவடிக்கையின்போது அங்காடி விலையில் செக்கூரிட்டிகள் வாங்கப்படுகின்றன.

அடுத்தபடி வெளி அங்காடி நடவடிக்கைகள் எப்படி அங்காடி நிலையைக் கட்டுப்படுத்துகின்றன என்று பார்ப்போம். பாங்கு செக்கூரிட்டிகளை விற்கும்போது பாங்குத் திட்டத்தில் ரொக்க ரிசர்வு குறைவதன் மூலம் பணத்தொகை குறை கிறது. பாங்கு செக்கூரிட்டிகளை வாங்கும்போது பாங்கு களின் ரொக்க ரிசர்வு அதிகப்பட்டுப் பணத்தொகை அதிகரிக் கிறது. இதுவே இந்த நடவடிக்கையின் அடிப்படை நோக்கம். பணத்தொகை மாறும்போது பண வட்டி வீதங்களும் அங்காடி யின் கடன் பேரங்களும் மாறும் என்றும், முடிவில் அது உள் நாட்டு விலைகளையும், செலவுகளையும், உற்பத்தியையும் வியா பாரத்தையும் பாதிக்கும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது.

ஆகவே, இந்த நடவடிக்கைகளும் பணத்தொகையை மாற்றுவது மூலம்தான் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்த முயல்கின்றன. மறுகழிவு முறை மறைமுகமாக வேலை செய்ய வேண்டியிருக்கிறது. குறுங்கால வட்டி வீதங்கள் மாறி அது நெடுங்கால வட்டி வீதங்களைப் பாதித்து, அதன் வழியாக உற்பத்தி, வர்த்தகம், விலைவாசி முதலியன மாற வேண்டியிருக்கின்றன. வெளி அங்காடி நடவடிக்கை நேரடியாகவே வட்டியையும், பணத்தொகையையும், கடன் தொகையையும் தாக்குகிறது. அங்காடியில் செக்கூரிட்டிகளை வாங்குவதும் விற்பதும் பாண்டு விலைகளை நேரடியாக மாற்றுகிறது; முதலீட்டைப் பாதிக்கிறது. ஆகவே மறுகழிவு முறையைவிட இந்த முறை நேரடியானதும் பரந்த விளைவுடையதுமாகும். தவிர, மைய பாங்கிடம் நேரடியாகப் பேரம் செய்ய வர்த்தக பாங்குகள் தயங்கும் நாடுகளில் இந்தவித அங்காடி நடவடிக்கையே சாத்தியமானது.

மைய பாங்கு செக்கூரிட்டிகளை விற்கும்போது மக்கள் அதற்கு ஈடாகத் தம்முடைய பாங்குகளில் வைத்திருக்கும் வைப்பை மைய பாங்குக்கு மாற்றுவார்கள். இதன் விளைவாகச் சம்பந்தப்பட்ட பாங்குகளின், 'மைய பாங்கு வைப்பு' (Deposit at the Central Bank) குறையும். அதனால் அவைகளின் ரொக்க ரிசர்வு குறையும். இதனால் பாங்குகள் தம் கடன் நடவடிக்கையைக் குறைத்துக் கொள்ள வேண்டியிருக்கும். எதிரிடையாக, மைய பாங்கு செக்கூரிட்டிகளை வாங்கும்போது, மைய பாங்கு மக்களுக்குச் செலுத்தும் தொகை, அவர்களின் பாங்குகளின் ரிசர்வை அதிகப்படுத்தும். இவ்விதமாக அங்காடியில் இருக்கும் ரொக்கத்தை—ஆகவே பணத்தொகையை—மாற்றுவதன் மூலம், மைய பாங்கு விலைவாசியைத் தகுந்த நிலையில் நிலைபெறச் செய்யலாம் என்று கருதப்படுகிறது. ஆனால் இப்படிப்பட்ட விளைவுகள் தோன்றுவதற்குச் சில வசதிகள் வேண்டும். முதலாவது, மைய பாங்கின் திறந்த வெளி நடவடிக்கைக்கேற்ப பாங்குகளின் ரிசர்வு நிலை மாறி, புழக்கப் பணத்தொகையும் மாறவேண்டும். இரண்டாவது, வர்த்தக பாங்குகள் தம்முடைய ரொக்க நிலை மாறுவதற்கேற்ப கடன் கொடுப்புகளை மாற்றிக்கொள்ள வேண்டும். மூன்றாவது, ரொக்க ரிசர்வு மாறும்போது அதற்கேற்ப பாங்குப் பணத்துக்குள்ள தேவையும்மாறவேண்டும். இப்படிப்பட்ட தொடர்புகள் சாதாரணமாக எதிர்பார்க்கக் கூடுமாயினும், காணப்படாத காலமும் உண்டு, முதலாவதாக, புழக்கத்தில் இருக்கும் பணத்தொகையும், பாங்குகளின் ரொக்க ரிசர்வும், மைய பாங்கு வாங்கும் அல்லது விற்கும் விகிதத்தில் மாறுவதில்லை. உதாரணமாக, முதல் வெளியோட்டம் (outflow

of capital), நிகர பாதகச் செலுத்து நிலை (net unfavourable balance of payments), அல்லது நோட்டுகளை மக்கள் குவித்து வைத்தல் ஆகியவை ரிசர்வு மாற்றத்தின் விளைவை ரத்துச் செய்யலாம். இச்சக்திகளின் உண்மையையும், அளவையும் உணர்ந்து தகுந்த எதிர் நடவடிக்கை எடுப்பது கடினம். இரண்டாவதாக, தம் ரொக்க ரிசர்வு மாறும் வீதத்திலே வர்த்தக பாங்குகள் தம்முடைய கடன் கொடுப்பை மாற்றாமல் இருக்கலாம். எச்சமான ரொக்க ரிசர்வோ டிருக்கப் பாங்குகள் விரும்பக்கூடும். (இங்கிலாந்தில் மட்டும்தான் பாங்குகள் எச்ச ரிசர்வு இருக்க விடுவதில்லை.) மூன்றாவதாக, பாங்குகள் ரொக்க நிலைக்கேற்பக் கடன் கொடுக்க விரும்பினாலும் தொழிலுலகில் தேவை இல்லாமலிருக்கக்கூடும். அல்லது வரும் தேவை நிராகரிக்க வேண்டிய வகையாக இருக்கக்கூடும். ரொக்க ரிசர்வைக் குறைக்கும்போது கடன் கொடுப்பதைக் குறைக்க முடியாம லிருக்கலாம்; ஏனெனில், வியாபாரிகள் மிகவும் நம்பிக்கையுடன் இருக்கும்போது பாங்குகள் விதிக்கும் எந்த நிபந்தனையும் அவர்களைத் தடுக்காது.

வெளி நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்கு அரசாங்கக் குறுங்கால, நெடுங்கால செக்கூரிட்டிகளில் பேரம் செய்யும் ஒரு பரந்த அங்காடி அவசியம். தவிர, இந்தவித செக்கூரிட்டிகள் பொருளாதாரத்தில் ஒரு முக்கிய பகுதியாக இருக்கவேண்டும், இலண்டனும். நியூயார்க்கும் மட்டும்தான் இந்த வகையில் திருப்தியாக உள்ளன. ஆகவே இங்கிலாந்திலும் அமெரிக்கா விலும் வெளி அங்காடி நடவடிக்கைகள் வெகுவாக ஆளப்படு வதில் ஆச்சரியம் இல்லை. செக்கூரிட்டிகளுக்குப் பரந்த அங்காடி இல்லையானால் மைய பாங்குகள் அவைகளை வாங்கி வைப்பதில் பெரிய நஷ்டத்துக்கு உள்ளாக வேண்டியிருக்கும்.

வெளி அங்காடி நடவடிக்கையில் உள்ள மற்றோர் இடர்ப் பாடு என்னவெனில் மைய பாங்கு செக்கூரிட்டிகளை வேண்டும் போது ஆளவேண்டுமானால் ஏற்கனவே (அவைகளை வாங்கும் வழியாக) பணத்தை வெளியிட்டிருக்க வேண்டும். ஆகவே ஒரு போது மைய பாங்கு செக்கூரிட்டிகளை விற்குமானால் அதன் விளைவு ஏற்கனவே வெளியிட்ட ரொக்கத்தை இழுப்பதாகவே முடியலாம். இப்படி ஏற்கனவே உண்டாக்கப்பட்ட ரொக்கம் போதாமல் நெருக்கடி ஏற்படும் காலத்தில்தான் மைய பாங்கு புது செக்கூரிட்டிகளை வாங்கி அங்காடிக்கு உதவ முடியும். ஏற்கனவே ரொக்கம் அங்காடியில் போதுமான அளவு இருந்தால் மைய பாங்கு செக்கூரிட்டிகளை வாங்குமானால் அனுவசியப் பணப்

பெருக்கத்திற்குக் காரணமாகும். ரொக்க நெருக்கடி காலத்தில் வெளி அங்காடி நடவடிக்கை எடுப்பது மைய பாங்கிடம் மறு கழிவுக்கு வரும் அவசியத்தைக் குறைக்கும்.

வெளி அங்காடி நடவடிக்கை பல லட்சியங்களுக்கு ஆளப் படுகிறது என்று ராட்க்ளிஃப் கமிட்டி கண்டது. பேராசிரியர் சேயர்ஸ் அவைகளைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்திக் கூறுகிறார்:

1. ரொக்க மிதப்பு, நெருக்கடி ஆகியவற்றால் ஏற்படும் நெளிவுகளிலிருந்து கழிவு அங்காடியையும் பாங்கு களையும் காக்க ஆளப்படுகிறது.

2. குறுங்கால முதல் பெயர்ச்சியைக் கட்டுப்படுத்துவதற் காக வட்டியைக் கட்டுபடுத்த கருவூல உண்டியல்களின் வட்டி வீதத்தை நிர்ணயிக்க மைய பாங்கு முயல்கிறது. இதற்கு ஆளப்படும் கருவி 'பாங்கு வீதம்'. பாங்கு வீதத்துக்கும் கருவூல உண்டியல் வீதங்களுக்கும் உள்ள தொடர்பை விரும்பும் வகையில் திருத்துவதற்கு வெளி அங்காடி நடவடிக்கை தேவைப்படுகிறது.

3. பாங்குகளின் நீர்மையை பொருளாதார நிலைக்குத் தக்க அளவில் நிலைநிறுத்த ஆளப்படுகிறது.

4. பாங்கு 'நாட்டுக் கடனை' நிருவகிக்கும் கடப்பாடுடையது. வெளியிடல், மீட்டல், முதிர்வு (maturity) காலத்தை ஒழுங்குபடுத்தல் ஆகியவைகளை அரசாங்கத்தின் பணத் தேவையைப் பூர்த்தி செய்யும் வகையில் நிருவகிப்பதோடு வட்டிப் பளு உயராமல் பார்த்துக் கொள்வதும் கடன் நிருவாகத்தைச் சேர்ந்தது. பாங்கு இவை சம்பந்தமாக வெளி அங்காடி நடவடிக்கை எடுக்க வேண்டியிருக்கிறது.

5. முதலீடு, சேமிப்பு நாட்டங்களை அனுசரித்து நெடுங்கால வட்டி வீதத்தைத் திருத்த ஆளப்படுகிறது.

இந்த லட்சியங்களில் முரண்பா டுண்டாகக் கூடும். அரசாங்கத்துக்குப் பணம் கிடைக்கும்படிச் செய்யும் மைய பாங்கும் பொறுப்பு பாங்குத் திட்டத்தைக் கட்டுப்படுத்தும் பலத்தைக் குறைத்துவிட்டதென்பர். இதில் சிறிது உண்மை

உளது. கடன் நிர்வாகப் பொறுப்புடன் அவ்வப்போது கடன் தரும் பொறுப்பும் சேர்ந்து, இலட்சிய முரண்பாட்டை உண்டாக்கலாம். இதுமட்டுமன்று. பாங்கு தன் பல்வேறு லட்சியங்களுக்கிடையே விரும்பும் தராதர முக்யத்துவத்தையே அரசின் நிதித் துறைக் கைக்கோள் மாற்ற நேரிடலாம்.

கழிவு அங்காடிகளின் நடவடிக்கைகள் முதலிரண்டு லட்சியங்களைப் பொறுத்தனவாகிவிட்டன. கழிவு அங்காடிக்குப் புறம்பான பண அங்காடிகளில், 8% ரொக்க விகிதம் பாங்குக் கடனைக் கட்டுப்பாடு செய்யும் சக்தியை இழந்துவிட்டது. இங்கிலாந்து பாங்கு கருவூல உண்டியல்களை அமிதமாக வெளியிடுவதாலும் (இதைக் கழிவகங்கள் வாங்கிக்கொள்ள எப்போதும் தயார்), அங்காடியில் பண நெருக்கடி உண்டானல் அதைத் தான் விரும்பும் வீதத்தில் விடுவிக்கத் தயாராக இருப்பதாலும், பாங்குகளுக்கு அவை விரும்பும் அளவுக்கு ரொக்கம் கிடைக்கின்றது. இதைப் பெற அவைகளிடம் கருவூல உண்டியல்கள் இருந்தால் போதும். ஆகவே வைப்புகளுக்கேற்ப ரொக்கம் 8% ஆகத் திருந்துகிறதே ஒழிய, ரொக்க விகிதத்துக் கேற்ப வைப்புத் திருந்துகிறது என்ற நிலையில்லை. பாங்குகளைத் தற்போது கட்டுப்படுத்துவது பாங்குகளிடமும் கழிவகங் களிடமும் உள்ள கருவூல உண்டியல் இருப்பேயாகும். உண்டியல்களும் அழைப்புப் பணமும் 22% சதவீதத்துக்குக் குறைந்தால், (28% விகிதத்தை அ னுகும்போது) அவை உண்டியல்களையோ, அழைப்புப் பணத்தையோ குறைத்து 8% விகிதத்தை நிலைபெறச் செய்ய முடியாது. பிற சொத்து களை (முதலீடுகள் கடன்கள் ஆகியவற்றை)க் குறைக்க வேண்டும். ஆகவே கட்டுப்பாடு செய்யும் விகிதம் 28% விகிதமாகும்.

இந் நிலைக்குக் காரணம் மையபாங்கு தான் குறிப்பிட்ட வீதங் களில் கழிவு அங்காடி நிலை பெற்றிருக்க விரும்புவதாகும். தான் கருவூல உண்டியல்களை வெளியிடும்போது உண்டியல் வீதங்கள் எவ்வளவு உயர்ந்தாலும் அது கவலைப்படவில்லையாயின், (கழிவகங்களுக்கு வெளியில்) போதுமான அளவுக்கு விற்க முடியும். ஆனல் இங்கிலாந்து பாங்கு உண்டியல் வீதங்கள் மேலும் கீழும் வெகுவாக மாறுவதை விரும்பவில்லை. குறிப்பிட்ட வீதத்தை விரும்புகிறது. இதன் நோக்கம் அயல் நாட்டினரின் ஸ்டர்லிங் தேவையின்மேல் செல்வாக்கு பெறவும், நாட்டுக் கடன் நிர்வாகச் சம்பந்தமாக நெடுங்கால செக்கூரிடிகளை நிருவகிக்கவும் ஆகும். ரொக்கக்கிடைப்பு அடிப்படையில் நாட்டின் நீர்மையை

கட்டுப்படுத்துவதைவிட, இந்த லட்சியங்களையே முக்கியமாகக் கருதுகிறது. ஆகவே 28% நீர்மை விகிதத்தை வற்புறுத்துகிறது.

தீர்வக பாங்குகளின் நீர்மை சம்பந்தமான மூன்றாவது லட்சியம் நிறைவேற, பாங்கு கருவூல உண்டியல்கள் தவிர, இதரவகை வெளி அங்காடி நடவடிக்கைகளை ஆள்கிறது. கழிவகங்களை இந்த வேலைக்காக ஆளாமல் பங்கு அங்காடியில் தனது 'அரசாங்கத் தரகனை' (Govt. Broker) ஆள்கிறது. இவர் மூலம் நெடுங்கால செக்யூரிடிகளில் செயல்படும்போது மூன்றாம் லட்சிய மன்னியில், கடன் நிருவாகமாகிய நான்காம் லட்சியத்தை யும், நெடுங்கால வட்டி வீதத்தைப்பற்றிய ஐந்தாம் லட்சியத் தையும் கவனிக்கிறது. உண்மையில் கடன் நிருவாகமே முதன்மை யான லட்சியம் எனலாம். இதுவே தொடர்ந்த வேலையாக உள்ளது. பாங்குகளின் நீர்மையும், நெடுங்கால வட்டியின் பொருளாதார விளைவும் உப விளைவுகளாகவே கருதப்படுகின்றன எனலாம். விற்பது அல்லது வாங்குவது நடக்கும்போது இதன் நிகரத் தொகையே நீர்மையைப் பாதிக்கும். ஒரே திசையில் நடவடிக்கை இருந்தாலொழிய வட்டி வீதங்கள் பாதிக்கப்பட மாட்டா.

அரசாங்கக் கடன்களின் காலக் கட்டுக்கோப்பு அவ்வப்போது கடன் பைசல் செய்யும் வேலையையும், அரசாங்கத்தின் தேவை புது வெளியீட்டையும் அவசியமாக்கி, பாங்குக்குக் கடன் நிருவாக வேலையை நிரந்தரமாக்குகிறது. புது வெளியீடு செய்யும் போது ஓரளவே உடனே விற்பனையாகிறது. மீதி இங்கிலாந்து பாங்கிடம் தங்கி, நாளாவட்டத்தில் விற்பனையாகிறது. இப்படியே பாண்டுகள் காலாந்தரமாகும்போது நாளாவட்டத்தில் வாங்கப்படுகிறது. இவ்விருவகை பாண்டுகளும் அரசாங்க செக்யூரிடிகள் என்ற தலைப்பில் வெளியீட்டு இலாகாவில் இருக்கின்றன. அரசாங்கத் தரகன் ஆயுள் சுருங்கி வரும் பாண்டுகளை வாங்கியும், நீடிய ஆயுளுடைய புது பாண்டுகளை விற்றும் வருகிறான். இதன் மூலம் கடன்களின் காலக் கட்டமைப்பு ஒரு சீராக அமையும்படிச் செய்யப்படலாம், ஆகவே மைய பாங்கின் இதர லட்சியங்கள் பாதிக்கப்படாமல் செய்யக் கூடும். ஆனால், வேறு லட்சியங்களின் காரணமாக, சிலபோது வாங்குவதோ விற்பதோ ஏற்றமாக இருக்கலாம். இதன் மூலம் பாங்கு நீர்மையையும் பாதிக்க முயலலாம். நெடுங்காலக் கடன்களை அதிகப்படுத்தினால் (funding) நீர்மை குறையும். வாங்குவதோ விற்பதோ நிகரத்தில் எச்சமாயுள்ளபோது, இதை ஈடுசெய்யக் கருவூல உண்டியல் விற்பனை அல்லது வாங்குவது நடைபெற

வேண்டியிருக்கிறது. இதன் மூலம் நீர்மை பாதிக்கப்படுகிறது. (உதாரணத்தை, சேயர்ஸ் நூலில் காண்க).

5. ரொக்க ரிசர்வு விதியில் (Cash Reserve Requirement) மாறுதல்

சமீப காலத்தில், பாங்குகளுடைய நீர்மையை வேண்டிய படி மாற்றுவதற்கு மைய பாங்குகள் ஒரு புது அதிகாரத்தைப் பெற்று வருகின்றன. வணிக பாங்குகள் தம்மிடம் வைத்திருக்க வேண்டிய குறைந்த பட்ச ரொக்க ரிசர்வின் அளவை மாற்ற உரிமை பெறுகின்றன. முதன் முதல் 1935 இல் அமெரிக்காவில் ரிசர்வு போர்டுக்கு இந்த மாதிரி ரிசர்வை மாற்ற அதிகாரம் தரப்பட்டது. மற்ற வழிகளில் பண அங்காடியைக் கட்டுப்படுத்துவதோடு இதுவும் ஒரு புதுக் கருவியாகக் கருதப்பட்டது. பல தடவைகளில் இந்த முறை அமெரிக்காவில் ஆளப்பட்டு வந்துள்ளது. இந்த முறையே பொன் வெளியிலிருந்து வந்து பணப் பெருக்கப் பயம் ஏற்பட்ட போது, அதைத் தவிர்க்க ஆளப்பட்டது. யுத்தம் போன்ற அசாதாரண காலங்களிலும் ஆளப்பட்டது. அமெரிக்காவைப் பின்பற்றி பல நாடுகளிலும் இந்த அதிகாரம் மைய பாங்குகளுக்குத் தரப்பட்டுள்ளது. இந்தியாவிலும் ரிசர்வு பாங்குக்கு இவ்வித அதிகாரம் இருக்கிறது. வருங்காலத்தில் இந்த முறை இன்னும் அதிகமாக ஆளப்படும் என்று நம்ப இடம் இருக்கிறது. இந்த முறையிலும் சில கெடுதல்கள் உண்டு. பல பாங்குகள் பல அளவில் ரொக்கம் வைத்திருக்கின்றன. ரிசர்வு வீதம் மாறும் போது பல பாங்குகள் பல அளவில் பாதிக்கப்படும். ஆயினும் அசாதாரண காலங்களில் இது ஒரு பலமான கருவி என்பதில் சந்தேகம் இல்லை. தவிர வெளி அங்காடி நடவடிக்கையைப்போல இதுவும் பாங்குகளுடைய ரொக்க நிலையை மாற்றுமாயினும் ரொக்கம் மாறுவதற்கேற்ப பாங்குகள் தம்முடைய கடன் தொகையை மாற்றும் என்று உறுதியாக நினைக்க முடியாது. தவிர, பாங்குக் கடனுக்குத் தேவையும் பாங்கு ரொக்கநிலை மாறுதலுக்கேற்ப மாறும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. ஆயினும், ரிசர்வுத் தேவையை மாற்றுவது ஒரு சக்தி வாய்ந்த கருவியாகையால் இது பாங்குகளுடைய நிலையைப் பாதிக்கக் கூடியது. ஆகவே மைய பாங்கு மிகவும் பொறுப்போடு, எச்சரிக்கையாக, இந்தக் கருவியை ஆள வேண்டியிருக்கிறது. இங்கிலாந்தில் தனி வைப்புகள் (Special Deposits) என்ற முறை 1960 இல் ஆளப்பட்டது. நீர்மை விகிதம் 28% ஒரு குறிப்பிட்ட சத வீதம் பாங்குகள் கூடுதலாக ரொக்கம் வைக்க வேண்டும் என்று

பாங்குவீதப் பிரசுரத்தின்போது வெளியிடப்படும். இவைகளுக்கு வட்டி உண்டு (உண்டியல் போல). இவைகளைத் திருப்பித் தரும் போது, அரசு உண்டியல் விற்க வேண்டி வரும். இக் கூடுதல் வைப்பு அரசாங்கச் செலவுக்குப் பயன்படுகிறது என்பதைக் கவனிக்க. ஆனால் பாங்குகள், இக் கூடுதல் வைப்புக்கேற்ப அரசு பாண்டுகளில் முதலீட்டைக் குறைத்துக் கொள்ளலாமாதலால் பாங்குக் கடன்கள் பாதிக்கப்பட வேண்டியதில்லை. ஆயினும் இதன் பயன் பணத்துறை அதிகாரிகளின் நோக்கத்துக்கு அறிகுறியாயிருப்பது. அநேகமாக அறிவுறுத்தலுக்குச் சமமாகக் கூறலாம்.

## 6. உப ரிசர்வு விதியில் மாறுதல்

சாதாரண பாங்குகள் வைத்திருக்க வேண்டிய குறைந்த பட்ச ரிசர்வைத் தவிர, மற்ற வகை நீர்மையான சொத்துகளின் அளவிலும் ஒரு குறைந்த பட்சத்தை நிர்ணயிக்க மைய பாங்குக்கு அதிகாரம் சில நாடுகளில் தரப்படுவதுண்டு. உதாரணமாக, அரசாங்க செக்கூரிட்டிகள், இதர நீர்மை செக்கூரிட்டிகள் எவ்வளவு பாங்குகள் வைத்திருக்க வேண்டுமென்பதை மைய பாங்கு நிர்ணயிக்கலாம். இந்த செக்கூரிட்டிகள் எளிதில் ரொக்கமாக மாற்றக்கூடியவையாகையால் அவைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் பாங்குக்கு அவசியமாகிறது. இந்தியாவிலும் இவ்விதக் கட்டுப்பாடு அதிகாரம் ரிசர்வு பாங்குக்கு இருக்கிறது.

## 7. கடன் தன்மையில் கட்டுப்பாடு (Qualitative Credit Control)

இதுவரையில் கூறப்பட்டவை அங்காடிக்குக் கிடைக்கும் பணக் கணியத்தைக் கட்டுப்படுத்தி, அங்காடியை மைய பாங்கின் ஆட்சிக்குட்படுத்தும் கருவிகள். அடுத்தபடி எவ்வகைக் கடன், எவ்வளவு தரலாம் என்பதைக் கட்டுப்படுத்தும் கருவிகள் சில உள்ளன. அவைகளைக் குறிப்பிடுவோம்.

### (அ) கடன் பங்கீடு (Rationing of Credit)

18ஆம் நூற்றாண்டின் இறுதியில் இங்கிலாந்து பாங்கு கடன் பங்கீட்டு முறையை ஆள ஆரம்பித்தது. ஒரு குறிப்பிட்ட கழிவகத்துக்கு எந்த அளவுக்கு மறு கழிவு வசதி செய்யப்படும் என்பதை பாங்கு வரையறை செய்தது அல்லது கழிவகங்களின் மனுத் தொகையில் குறிப்பிட்ட தொகைக்கு மேல் ஏற்பதில்லை. இவ்வித முறை ஆளப்படுவதற்குக் காரணம் 5 சதவீதத்துக்கு

மேல் வட்டி வாங்கக்கூடாது என்ற முன்னைய காலச்சட்டம். இதனால் வட்டிவீத மாறுதல் வழியே கட்டுப்பாடு செய்ய முடியாமல் போனது. பங்கீடு போன்ற வேறு முறைகளை ஆண்டு கடன் கட்டுப்பாடு செய்ய வேண்டியிருந்தது. இப்படி ஒவ்வொரு மனுதாரருக்கும் கடன் கொடுக்கும் தொகையைக் குறைத்ததோடு மறு கழிவுக்குத் தகுதியான உண்டியல்களைப் பற்றியும் நிபந்தனைகள் அதிகப்படுத்தப்பட்டன. 1833இல் ஷி அமித வட்டிச் சட்டம் தளர்த்தப்பட்டது. ஆனால், அப்போது பாங்கு வீத மாறுதல் ஒரு கட்டுப்பாட்டுக் கருவியாக ஆளப்படவில்லை; 1944வது ஆண்டுச் சட்டத்திற்குப் பின்புதான் ஆளப்பட்டது. அப்போது தான் கடன் பங்கீடு முறை கைவிடப்பட்டு, பாங்கு வீத மாற்று முறை ஆளப்படலாயிற்று. இறுதிக் கடன் கொடுப்போன் என்கிற நிலையை மேற்கொண்ட பின்பு பாங்கு இவ்விதமாகப் பங்கீடு செய்வது முறையாகக் கருதப்படவில்லை. முதல் யுத்தத்துக்குப் பின் மீண்டும் கடன் பங்கீடு பல நாடுகளில் தோன்றலாயிற்று. இந்த முறை ஒன்றுதான் முதிராத பொருளாதாரச் சமூகங்களில் ஆளக்கூடிய முறை. ஆனால் மற்றக் கட்டுப்பாடுகளைப் போல இதுவும் குறைபாடுகள் பல உடையது. மைய பாங்கு இறுதிக் கடன் தருவோனாக இருப்பது உண்மையானால் இந்த முறை பொருந்தாது; பட்ச பாதத்திற்கு இடம் தரக்கூடியது. பெரிய நெருக்கடியான சந்தர்ப்பங்களில்தான் இந்த முறையை நியாயமானதாகக் கருதக்கூடும்.

### (ஆ) மார்ஜின் தேவை மாறுதல்கள் (Changes in Margin Requirements)

அமெரிக்காவில் பாங்குகள் யூக வாணிகத்திற்குத் தரும் கடனைக் கட்டுப்படுத்தப் புது அதிகாரம் ஃபெடரல் ரிசர்வு போர்டுக்கு 1934 இல் தரப்பட்டது. பங்கு அங்காடியில் பதிவு செய்யப்பட்ட செக்கூரிட்டிகளின் மேல் எந்த அளவுக்குக் கடன் கொடுக்கலாம் என்பதை நிர்ணயிக்க போர்டுக்கு அதிகாரம் தரப்பட்டது. புரோக்கர்களும் தம்முடைய வாடிக்கைக் காரர்களுக்கு எந்த அளவுக்கு செக்கூரிட்டியின் மேல் கடன் கொடுக்கலாம் என்பதையும் போர்டு நிர்ணயிக்கக்கூடும். பல சமயங்களில் இந்த அதிகாரம் போர்டால் ஆளப்பட்டு வந்தது. இந்த அதிகாரத்தின் நோக்கம் பண அங்காடியில் அமிதமான யூக வாணிகம் வளர்வதைத் தடுப்பதாகும். இதனுடைய சிறப்பு, திடீரென்று பலமாகக் கட்டுப்பாட்டை ஆள முடிவது. ஆனால் மைய பாங்கு எச்சரிக்கையோடும் பொறுப்போடும் இந்தக் கருவியை ஆளவேண்டும். இந்தவிதக்

கட்டுப்பாடு பாங்குகளுடைய பொருளாதார அடிப்படையைப் பாதிக்கக்கூடியது. அடிக்கடி யூக வாணிகம் அமித நிலை அடையும் அமெரிக்காவில் இவ்விதக் கட்டுப்பாடு இன்றியமையாததாகக் கருதப்படுகிறது.

(இ) நுகர்வோர் கடன் கட்டுப்பாடு (Regulation of Consumer Credit)

நுகர்வோர் உறுதிப்பொருள் (durable goods) வாங்குவது சம்பந்தமாக அமிதக் கடன் வளர்வதைத் தடுக்க ஃபெடரல் ரிசர்வு போர்டுக்கு 1941இல் அதிகாரம் தரப்பட்டது. யுத்த காலத்தில் கடன் தேவை வளர்ந்த நிலையில் நுகர் பொருள்களின் உற்பத்திக்குக் கடன் செல்வதைத் தடுக்க இந்தவிதக் கட்டுப்பாடு ஏற்பட்டது. இந்தக் கட்டுப்பாட்டின் முக்கிய அம்சம் என்னவெனில் தவணைக் கடன் பேரில் ரேடியோ, குளிர்ப் பெட்டி முதலிய உறுதிப்பொருள்கள் வாங்குவது சம்பந்தமாகச் சில கட்டுப்பாடுகளை ஏற்படுத்துவதாகும். முதல் தவணையாகக் கட்ட வேண்டிய தொகையை (பொருளின் மதிப்பில் இத்தனை சதவீதம் என்று இருப்பதை) உயர்த்துவதும், தவணைகளின் எண்ணிக்கையைச் சுருக்குவதும் ஆளப்படும் முறைகள். இதனால் மக்கள் தவணைக் கடன் மேல் உறுதிப்பொருள்களை வாங்குவது குறையும். தவணைக் கடன் பேரத்தினால் தொழில் துறையில் ஏற்படும் கெடுதல்கள் அநேகம். வியாபாரச் சுழலில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுவதற்கு இதுவும் ஒரு காரணமாக இருக்கக் கூடும். இப்படி நிகழாமல் தடுப்பதற்கு இந்த அதிகாரம் அவசியம். அமெரிக்காவைத் தவிர, இங்கிலாந்து போன்ற பிற நாடுகளிலும் இவ்விதக் கட்டுப்பாடுகள் ஆளப்படலாயின.

8. நேரடி நடவடிக்கை (Direct Action)

மைய பாங்குகள் அவ்வப்போது நேரடியாகச் சில நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வதுண்டு. இந்தத் தலைப்பின் கீழ் அறிவுறுத்தலையும் (Moral Suasion) சேர்த்துக்கொள்ளலாம். ஆனால் நேரடி நடவடிக்கை என்பது குற்றம் செய்த ஒரு நிதி நிறுவனத்தின் சம்பந்தமாக எடுத்துக்கொள்ளும் நடவடிக்கை, அல்லது பாங்குகள் ஒரு சட்டத்தின் கீழ்க் கட்டுப்படும்படி எடுக்கும் நடவடிக்கை. அறிவுறுத்தல் என்பது தன் செல்வாக்கை நம்பி, எப்படி நடக்க வேண்டுமென்று பாங்குகளுக்குத் தெரிவிப்பதாகும்.

நேரடி நடவடிக்கை என்பது மைய பாங்கு குறிப்பிட்ட பாங்கின் நடவடிக்கைகளில் அதிருப்தி கொண்டு உதவி செய்ய மறுக்கும் முறையாகும், அல்லது ஏற்கனவே தன்னிடம் அமிதமாகக் கடன் பட்டிருந்தால் மேலும் கடன் கொடுக்க மறுப்பதாகும். நேரடி நடவடிக்கை சிலபோது வழக்கமான கழிவு வீதத்துக்கு எச்சமான கழிவு வீதத்தை ஆள்வதாக இருக்கலாம்.

அமெரிக்காவில் யூக வாணிகம் அதிகமாகக் காணப்பட்டது. அதை அடக்கக் கழிவு வீதத்தை ஆள்வதைவிட வீத நேரடி நடவடிக்கை முறை பல தடவைகளில் ஆளப்பட்டது. 1933-1935 ஆண்டுகளில் ஏற்பட்ட பாங்குச் சட்டங்களின் கீழ் ரிசர்வு பாங்குகளையும் இதர அங்க பாங்குகளையும் கட்டுப்படுத்துவதற்கு விரிவான அதிகாரம் ஃபெடரல் ரிசர்வு போர்டுக்குத் தரப்பட்டது. ஒவ்வொரு ரிசர்வு பாங்கும் போர்டுக்குத் தன்னுடைய அங்க பாங்குகளின் கடன்கள், முதலீடுகள் ஆகியவற்றின் அளவையும் தன்மையையும் பற்றித் தெரிவிக்க வேண்டும். இந்த விவரங்களைக் கொண்டு போர்டு யாதொரு அங்க பாங்கு அமிதமாக பாங்குக் கடனை யூக வாணிகத்திற்குத் தருகிறதோ அந்த பாங்கு ஃபெடரல் ரிசர்வு திட்டத்திலிருந்து கடன் வசதிகளைப் பெற முடியாமல் செய்யலாம். எந்த அங்க பாங்கும் பங்குகள், பாண்டுகள் ஆகியவற்றின் ஈட்டின்மேல் மேலும் கடன் கொடுப்பதைத் தடுக்கலாம். மீறினால் ரிசர்வு பாங்கின் உதவி மறுக்கப்படும். தவிர ஒவ்வொரு பாங்கின் முதல், உபரி (Surplus) ஆகியவற்றைப் பொறுத்து, ஒரு குறிப்பிட்ட சதவீதத்திற்குமேல் கடன் கொடுக்கக் கூடாது என்று வரையறை செய்யலாம். இவ்வித நேரடி நடவடிக்கை நாட்டின் பல்லாயிரக் கணக்கான பாங்குகள் இருக்கும் சூழ்நிலையில் எளிதாக இல்லை. தவிரவும் சொந்த நிதி வசதி இல்லாமலே அல்லது வேறிடங்களில் ரிசர்வு பெற முடியாமலே இருக்கும் பாங்குகளை மட்டும் இவ்வித நேரடி நடவடிக்கையால் கட்டுப்படுத்த முடியும். வர்த்தக பாங்குகள் ஏராளமான ரொக்கம் வைத்திருந்த நிலையில், அவைகளை இம்முறையில் கட்டுப்படுத்துவது கடினமாக இருந்தது.

ஆகவே நேரடியாக பாங்குகளின் கடன், முதலீடு நடவடிக்கைகளை வரையறை செய்யும் அதிகாரம் மைய பாங்குக்கு அவசியமாகத் தோன்றியது. எல்லா நாடுகளிலும் கடன் அளவையும் தன்மையையும் நிர்ணயிக்கும் அதிகாரம் மைய பாங்குகளுக்குக் கொடுக்கப்பட்டது. இந்தியாவிலும் ரிசர்வு

பாங்குக்கு அதிகாரம் தரப்பட்டது. இங்கிலாந்தில் 1946இல் இங்கிலாந்து பாங்கு விவரங்களைப் பாங்குகளிடமிருந்து பெறவும், கருவூலத்தின் அனுமதி பெற்று, பாங்குகளுக்கு உத்தரவிடவும் அதிகாரம் தரப்பட்டது. யுத்தத்திற்குப் பின் தோன்றிய மைய பாங்குகள் அனைத்துக்கும் இவ்விதமான அதிகாரம் கொடுக்கப் பட்டுள்ளது.

இந்த முறையில் உள்ள சில இடர்ப்பாடுகள் என்னவெனில், மைய பாங்கும் வர்த்தக பாங்குகளும் எது அவசியமான தொழில், எது அவசியமற்ற தொழில், எது நியாயமான பேரம், எது யூக பேரம் என்று திட்டவட்டமாகக் கூறமுடியாமையே. தவிர, கொடுக்கப்பட்ட காரியத்திற்குத் தவிர வேறு வகைகளில் கடன் பயன்படுத்தப்படுவதைத் தடுக்கவும் முடியாது. பாங்குகளின் கடன் கட்டுப்பாடு சம்பந்தமான பொறுப்பு மைய பாங்குக்கும் வர்த்தக பாங்குகளுக்கும் பிரிக்கப்பட்டு, இரண்டும் பலமற்றிருக்கலாம். தவிர, மைய பாங்கின் தலையீடு, பாங்கு களுடைய மனமுவந்த ஒத்துழைப்புக்குத் தடையாக இருக்கலாம்.

## அறிவுறுத்தல் (Moral Suasion)

அறிவுறுத்தல், நேரடி நடவடிக்கையைப் போல பாங்கு களுடைய சுதந்தர உணர்ச்சிக்கு முரண்பட்டதன்று. எந்த விதமான வற்புறுத்தலும் தண்டனையும் இருக்கவில்லை. சிநேக பாவத்தில் நல்லெண்ணத்துடன் எச்சரிக்கை செய்வதாக, ஆலோசனை கூறுவதாகத் தோன்றும். தவிர, நேரடி நடவடிக்கை மைய பாங்கிடம் கடன்பட்ட அல்லது கடன் விரும்பும் நிறுவனங்களை மட்டும் கட்டுப்படுத்தும். ஆனால், அறிவுறுத்தல் கடன் வாங்காதவர்களையும் எல்லாவித நிதி நிறுவனங்களையும் கட்டுப்படுத்தக் கூடும். இப்படிப்பட்ட நிதி நிலையங்கள் இன்று அநேகம் பண அங்காடியில் இருக்கின்ற சூழ்நிலையில் இது முக்கியம். இது ஒரு கனவான்கள் ஒப்பந்தம் (Gentlemen's Agreement) போன்ற சக்தி வாய்ந்தது.

அநேக நாடுகளில் இம் முறை நல்ல பயனை அளித்துள்ள தாகத் தெரிய வருகிறது. அமெரிக்காவிலும் கூட, பாங்குகள் பல்லாயிரக்கணக்காக இருந்தபோதிலும், இந்த முறை பல சமயங்களில் பயன்பட்டதாகக் கூறப்படுகிறது.

இந்த முறை வெளி அங்காடி நடவடிக்கைகள் முடியாத சூழ்நிலையில் ஆளப்படலாம். சட்டப்படி எதையும் நிர்ணயிக்காது

எவ்வகைப் பண நிறுவனங்களையும் உட்படுத்தலாம். செல்வாக்கு சாத்தியத்துக்கேற்ப வற்புறுத்தலாம். எளிதில் மாற்றலாம்; அவ்வப்போது சட்டத்தை நாட வேண்டியதில்லை. சட்டமுறை நடவடிக்கைகளைப் போன்று தாரதம்மியங் கருதாத நடவடிக்கை அவசியமில்லை. ஆகவே இப்போது இம் முறை மிகவும் செயல் படுவதாயுள்ளது. ஆனால், இது வெற்றிகரமாக ஆளப்படுவது மைய பாங்கினுடைய செல்வாக்கையும், மைய பாங்குக்கு உள்ள அதிகாரத்தையும், ஆதரிக்கும் பாங்குகளுடன் உள்ள தொடர்பையும், நாட்டின் பணக் கட்டுக்கோப்பையும் பொறுத்தது.

**மைய பாங்கின் கட்டுப்பாட்டுக் கருவிகளின் ஆற்றல் ஒப்பீடு**

பல கருவிகளைப் பார்த்தோம். இவைகளில் எதை ஆள்வது சிறந்தது என்று ஏதாவது முடிவு கூற முடியுமா என்று பார்க்க, சில அடிப்படைகளை ஆள்வோம். அவை:

(1) நெகிழ்ச்சி (Flexibility)

(2) மக்களின் எதிர்பார்ப்பின் மீது செல்வாக்கு

(3) பண அளிப்பைக் கட்டுப்படுத்தும் ஆற்றல்

(4) வட்டி வீதங்களின் மேல் விளைவு

(5) பாங்குகளின் நடவடிக்கையைக் கட்டுப்படுத்தும் ஆற்றல்

(6) செல்வாக்கு எல்லை (இடவாரியாக)

**(1) நெகிழ்ச்சி :**

வட்டி வீத மாறுதல், ரிசர்வு மாறுதல் ஆகியவற்றைவிட வெளி அங்காடி நடவடிக்கை அதிகம் நெகிழ்ச்சி யுடையது. தொடர்ந்து ஆளலாம், எந்த அளவுக்கும் ஆளலாம். விற்பதும், வாங்குவதும் பல அளவில் கலக்கலாம். தேவைக்கேற்பத் தொகையை மாற்றலாம். அரசாங்க நடவடிக்கைகளுக்கு எதிர் நடவடிக்கைகள் வேண்டும்போது இது வசதியானது. மற்ற இரண்டும் அடிக்கடி ஆள முடியாதன. சிறுகச் சிறுக ஆள முடியாதன. அன்றாட விளைவுகளைச் சமாளிக்கப் பயன்படாதன. திடீரென்று தாக்கவேண்டின் பயன்பட வேண்டியவை. அவ்வப் போது மாற்றப்படின் நிகழ்ச்சிகளின் பிரதிபலிப்பாகத் தோன்றுமே அன்றி, நிகழ்ச்சிகளைத் தவிர்ப்பனவாக அல்லது கட்டுப்படுத்துவனவாகத் தோன்ரு.

(2) வட்டி விகித மாறுதல்கள் ஏகதேசமாக நிகழ்வதால், நிகழும்போது இவை அங்காடியைக் குலுக்குகின்றன. மக்களின் மனேபாவத்தைப் பாதிக்கின்றன. இவ்வித வெளியீட்டு (Announcement) விளைவு வெளி அங்காடி நடவடிக்கைக்கு இல்லை; இது சதா நிகழ்ந்துகொண்டே இருப்பது. தவிர இந்த நடவடிக்கை எந்த நோக்கத்துடன் எடுக்கப்படுகிறது என்பதை யூகிப்பது எளிதன்று. மைய பாங்கு வெளியிடுவதுமில்லை.

(3) மூன்றில் எந்தக் கருவியும் பண அளிப்பைக் கட்டுப் படுத்தப் பூரண ஆற்றல் உடையதன்று. வெளி அங்காடி நடவடிக்கை பாங்குகளின் ரிசர்வை அதனளவுக்கேற்ப பாதிக்கும். எச்ச ரிசர்வு உள்ள சூழ்நிலையிலும் மைய பாங்கிடம் மறு கழிவு செய்யக்கூடிய நிலையிலும் இம்முறைக்குக் கட்டுப்பாடு சக்தி இல்லை.

ரிசர்வு விகித மாறுதல் விஷயத்திலும் இப்படியே. விகிதம் குறைக்கப்பட்டால் எச்சமாகும் ரிசர்வு, பண அளிப்பை அதிகரிக்கலாம்; எச்சம் ஆளப்படாமலும் போகலாம்.

பாங்கு வட்டியில் மாறுதல் செய்யும்போது, பாங்குகளின் பிரதிபலிப்பு எப்படி இருக்குமோ? வட்டியைக் குறைத்தால், பாங்குகள் மறுகழிவு செய்யும் என்ற நிட்சயமில்லை. வட்டி ஏறினல் மறுகழிவு குறையும் என்பதும், குறைந்தால், அதிகப் படும் என்பதும் பொதுப்படை முடிவு. ஆனல், பாங்குகளின் பிரதிபலிப்பு வருவாய் வாய்ப்பு நிலையைப் பொறுத்திருக்கும். பூரிப்புச் சூழ்நிலையில் வட்டி வீதம் உயர்த்தப்படுகிறது. இப்போது விளைவு வீதமும் (Yields) வட்டி வீதங்களும் ஏறுமுக மாயிருக்கும். இந்த நிலையில் பாங்கு வட்டி உயர்வு ஒரு தடையா யிருக்குமா? மந்த காலத்தில் பாங்கு வட்டி வீதம் குறைக் கப்படும். இப்போது விளைவு வீதம் இறங்கும் தன்மையாக இருக்கும். பாங்குகளை கடன் தரத் தூண்டும் சக்தி வட்டி வீத இறக்கத்துக்கு உண்டா?

(4) மைய பாங்கு ரிசர்வு விகிதம், பாங்கு வட்டி வீதம் ஆகிய கருவிகளை ஆளும்போது, செக்யூரிடி அங்காடி மூலம் எந்த நடவடிக்கையும் இல்லை. ஆகவே வட்டிகளுக்கிடையே உள்ள தொடர்பு பாதிக்கப்படுவதில்லை. ஆனல், ரிசர்வு நிலையும் கடன் தேவையும் பாதிக்கப்படுகின்றன. ஆயினும், பாங்குகள் தங்கள் ரிசர்வுகளைத் திருத்த முயன்று பாண்டு அங்காடியில் புகுந்தால்

பாண்டு வட்டி மாறும். ஆனால், இவ் விளைவு பாங்குகளின் நடத்தையால் நிகழ்வது; மைய பாங்கு நடத்தையாலன்று.

ஆனால், வெளி அங்காடி நடவடிக்கை விஷயத்தில், பாங்கு செக்யூரிடியை வாங்குவது அவைகளின் விலையை ஏற்றி, பொதுவாகவே வட்டி வீதங்களைக் குறைக்கிறது. மைய பாங்கு கருவூல உண்டியல்களை வாங்குவதாயின், பொதுவாக வட்டி வீதங்களைக் குறைத்து பாண்டு வீதங்களையும் குறைத்து விடுவதன்றி, பாண்டு விளைவைவிடக் குறைவாயிருக்கும்படி கருவூல உண்டியல் வட்டி வீதம் இறங்கும். கருவூல உண்டியல்கள் விற்கப்படுவதாயின், பொதுவாக வட்டி வீதங்கள் உயரும். பாண்டு விளைவு மற்ற வட்டி வீதங்களுக்கு மேல் இருக்கும். ஆகவே வெளி அங்காடி நடவடிக்கை நேரடியாக வட்டி வீதங்களின் மட்டத்தையன்றி, வீதங்களின் தன்மையையே மாற்றுகிறது.

(5) ரிசர்வு விகிதம் மாற்றப்படுவதாயின், பாங்குகள் கட்டுப்பாட்டுக்குள்ளடங்கியே தீரும். ஆகவே அவைகளின் சொத்து இனங்களைத் திருத்த வேண்டிய நிர்பந்தம் ஏற்படும். வெளி அங்காடி நடவடிக்கையில் இவ்வித நிர்பந்தம் இருக்காது. மைய பாங்கு வாங்குவதும் விற்பதும் செக்யூரிடி உடையவரின் ஒப்புதல் மீதுதான் நடக்க முடியும்; நேரடி வற்புறுத்துதலில்லை. ஆனால், மறைமுகமாக உண்டு. மைய பாங்கு பாங்குகளல்லாத பிறரிடம் வாங்கும்போது, அவர்கள் பெற்ற பணத்தைப் பாங்குகளிடம் வைப்பு செய்கின்றனர். எச்ச ரிசர்வு தோன்றுகிறது. பாங்குகள் கடன் தருகின்றன அல்லது செக்யூரிடிகள் வாங்குகின்றன. வைப்புகள் பெருகுகின்றன. மையபாங்கு விற்கும்போது எதிரிடையான விளைவுகள் தோன்றுகின்றன. மைய பாங்கு பாங்குகளிடமே வாங்குதல் விற்பது செய்தால், அவைகளின் வைப்புகள் பெருக்கமோ சுருக்கமோ பெறும்.

வட்டியை மாற்றல் எல்லாவற்றிலும் குறைந்த வற்புறுத்துலுடையது. வட்டி வீதத்துக்குள்ளாவது பாங்குகளின் இஷ்டத்தைப் பொறுத்தது. மறைமுக விளைவுகளும் குறைவே. மறைமுக விளைவு, வட்டி மாறுதலுக்குட்பட்டு பாங்குகள் ரிசர்வை திருத்தும்போது அவைகளின் வைப்பு நிர்வாக நடத்தையின் விளைவாகப் பிற பாங்குகள் தாக்கப்படுவது.

(6) ரிசர்வு மாற்றம் எல்லா பாங்குகளுக்கும் பொருந்தும். விளைவுகள் நாடு முழுதும் காணப்படும். வட்டி வீத மாறுதலும்

இவ்வகையதே. ஆனால், வட்டி மாறுதலுக்குப் பிரதிபலிப்பு பெரும்பாலும் நகரவாசிகளான பெரிய பாங்குகள் விஷயத்தில் அதிகமாக இருக்கும். வெளியங்காடி நடவடிக்கையின் உடனடி விளைவு குறுகிய வியாபகமுடையது. மைய பாங்குடன் பேரம் செய்யும் பாங்குகள் நகர்ப்புறத்தவை, பண அங்காடிக் கேந்திரத்திலுள்ளவை. ஆகவே அங்கு முதல் விளைவு; ஆயினும் விரைவில் பரவும்.

ஆகவே நாம் ஒப்பிட்ட மூன்று கருவிகளும் ஒரேவித விளைவுடையன அல்ல. வெளியங்காடி நடவடிக்கை மிக்க ஆட்சி நெகிழ்ச்சி உடையது. ஆகவே பெரிதும் ஆளப்படுவது. செக்கூரிடி அங்காடி பலமாயில்லாத நாடுகளில்தான் பிற கருவிகள் பெரிதும் ஆளப்படும்.

# 27. பண அங்காடி

பண அங்காடி என்ற சொல்லுக்கு நேரான பொருள் பணத்தின் அளிப்பும் தேவையும் சந்திக்கும் இடம் என்பதாகும். ஆனால் இதில் இரண்டு பகுதிகள் உள்ளன. ஒரு பகுதி குறுங்காலக் கடன் சம்பந்தமான பாங்குத் திட்டத்தைச் சார்ந்தது. மற்றொன்று நெடுங்காலக் கடன் சம்பந்தமான பங்கங்காடியைச் சார்ந்தது. சாதாரணமாகப் பண அங்காடி என்றால் முன் பகுதியையே குறிப்பதாகக் கொள்வது வழக்கம். பின்னதைக் குறிப்பிட முதலங்காடி (Capital Market) என்ற தொடரை ஆள்வது ஆங்கில வழக்கு.

இவ் வழக்குத்தான் இந்நூலில் ஆளப்படும். பண அங்காடியில் அடங்கியவை என்ன என்பதையும், முதலங்காடியில் அடங்கியவை எவை என்பதையும் அறிய இங்கிலாந்து நாட்டின் அங்காடி அமைப்பை ஆராய்வது நல்லது. இங்கிலாந்தின் பண அங்காடியில் மைய பாங்குக்குட்பட்ட பாங்குத் திட்டமும் கழிவகங்களும் அடங்கும். பண அங்காடியும் முதலங்காடியும் தவிர, அயல் நாட்டுச் செலாவணி அங்காடியும் உள்ளது.

இனி முறையே, இங்கிலாந்து பாங்கு, வணிக (உள்நாட்டு, அயல் நாட்டு) பாங்குகள், கழிவகங்கள் மற்றும் வணிக பாங்கர்கள், ஆகிய ஆங்கிலப் பணத்துறை நிறுவனங்களைப் பற்றி அறிவோம். அயல்நாட்டுப் பாங்குகள் வெளிநாடுகளில் இருக்கும் வாடிக்கைக்காரர்களுக்குப் பணி செய்வன. சில உள்நாட்டில் தலைமையகங்கள் உடையனவாக இருக்கலாம். இவை வாணிபத்துக்குப் பணம் உதவி செய்வன; அயல் செலாவணி அங்காடியில் முக்கியமானவை. அயல்நாட்டவரின் வைப்புகள் உடையனவாதலால், மிகவும் நீர்மையான சொத்தினங்களை வைத்திருக்கும்.

1. இங்கிலாந்து பாங்கினுடைய நடவடிக்கைகளைப் பற்றி விளக்குவதற்கு முன், அதனுடைய அமைப்பைப் பற்றிச் சிறிது தெரிந்துகொள்வோம். 1946 வரையில் இங்கிலாந்து பாங்கு தனியார்களைப் பங்குதாரர்களாக உடைய ஒரு கார்ப்பரேஷனாக இருந்தது. பங்குதாரர்கள் கவர்னர்களையும் டைரக்டர்களையும் நியமித்தனர். பாங்கின் உரிமைகளையும் பொறுப்புகளையும் நாளாவட்டத்தில் அநேக சட்டங்கள் வரையறை செய்யலாயின. அவைகளில் முக்கியமானது 1844ஆம் ஆண்டிலேற்பட்ட சட்டம். இப்போதுள்ள பாங்கினுடைய அமைப்பு 1946ஆம் ஆண்டின் சட்டப்படி தோன்றியது. இதன்படி பாங்கின் மூலதனப் பங்குகள் (Capital Stock) அனைத்தும் கருவூலத்துக்கு உரிமையாக்கப்பட்டன. ஈடாக, உரியவருக்கு அரசாங்கப் பாண்டுகள் தரப்பட்டன. நிர்வாகத்தைப் பற்றியும் புது ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

பாங்கை ஆள்வது டைரக்டர் சபை (Court of Directors). இதில் ஒரு கவர்னர், ஓர் உதவி கவர்னர், 16 டைரக்டர்கள் இருக்கிறார்கள். இவர்கள் அனைவரும் அரசரால் (Crown) நியமிக்கப்படுவார்கள். கவர்னர்களுடைய அலுவல் காலம் 5 ஆண்டுகள். டைரக்டர்களுடைய அலுவல் காலம் 4 ஆண்டுகள். ஆண்டுதோறும் நான்கு பேர் வெளியேறுவார்கள். வெளியேறும் அங்கத்தினர்கள் மீண்டும் நியமிக்கப்படலாம். டைரக்டர்களாக நியமிக்கப்படுவதற்கு ஒரு சில தடைகளே உள்ளன. மந்திரிகளாக இருக்கக்கூடாது. காமன்ஸ் சபை அங்கத்தினர்களாக இருக்கக்கூடாது. அரசாங்க இலாகா ஒன்றில் ஊதியம் பெறுபவர்களாக இருக்கக்கூடாது. மற்றபடி எந்தவிதத் தடையுமில்லை. ஆனால் எந்த டைரக்டரும் ஒரு பெரிய வணிக பாங்கிலும் டைரக்டராக இல்லாமல் பார்த்துக் கொள்ளுவது வழக்கம். வயது வரையறை இல்லையாயினும் 70-க்கு மேல் இருப்பதில்லை. கவர்னரும், டெபுடி கவர்னரும் முழு நேர வேலை செய்ய வேண்டியவர்கள். மேலும் 4 பேர் முழுநேர வேலை அலுவலர்களாக உள்ளனர். அவர்களுக்குச் செயல்படு டைரக்டர்கள் (Executive Directors) என்று பெயர். கோர்ட் ஒவ்வொரு வியாழக்கிழமையும் காலையில் கூடும். ஒவ்வொரு டைரக்டருக்கும் ஓர் ஓட்டு உண்டு. உண்மையில் முடிவுகள் முக்கியமாக அவசர/ரகசிய முடிவுகள். கருவூலக் கமிட்டி (Committee of the Treasury) என்ற எழுவரால் செய்யப்பட்டு, டி சபையால் ஆமோதிக்கப்படுவதே வழக்கமாக இருந்துவருகிறது. இக் கமிட்டியில் கவர்னரும்,

உதவி கவர்னரும், 5 தேர்ந்தெடுத்த டைரக்டர்களும் அங்கத்தினர்கள். இது மிக்க செல்வாக்குடையது.

கருவூலம் அவ்வப்போது கவர்னரைக் கலந்து பொது நலத்துக்கு அவசியமான ஆணை இடலாம். அனுபவத்தில் பாங்கும் கருவூலமும் ஒத்துப் போகின்றன. பாங்கு பிற பாங்குகளிடமிருந்து தகவல் கேட்கலாம். சிபார்சுகள் செய்யலாம். கருவூல அனுமதியின்பேரில் ஆணை இடலாம். கேட்கும் தகவல், சிபார்சு, ஆகியவை தனிப்பட்ட வாடிக்கைக்காரர்களைப் பற்றியதாக இருக்கக்கூடாது. இந்தவகை சட்டபூர்வமான அதிகாரங்கள் பிற நாடுகளில் சாதாரணமாகக் காணப்படாதவை. ஆயினும் பாங்கு தன் அதிகாரத்தை ஆளாது, கலந்து பேசல் மூலம் காரியங்களைச் சாதிக்கிறது.

இந்த இங்கிலாந்து பாங்கை ஒரு மாதிரி மையபாங்காக வைத்துக்கொண்டு இதனுடைய இருப்பு நிலைக் குறிப்பை ஆய்வோம். இக் குறிப்பு இரண்டு தனிப்பட்ட பகுதிகளை உடையது. ஒன்று நோட்டு வெளியீடு சம்பந்தமானது, மற்றது பாங்குத் தொழில் சம்பந்தமானது.

நோட்டு வெளியிடும் தொழில் இலாபத்தை நோக்கிச் செய்யப்படாததாகையினால் தனியாக வைக்கப்படுகிறது. இந்த இரு பகுதிகளிலும் உள்ள விவரங்கள் கீழ் வருமாறு:—

## இங்கிலாந்து பாங்கின் இருப்பு நிலைக் குறிப்பு

(புள்ளிகள் ஓரளவு கற்பனை)

(தேதி)

**வெளியீட்டிலாகா**

| பொறுப்புகள் | £ Millions | சொத்துகள் | £ Millions |
|---|---|---|---|
| வெளியிட்ட நோட்டுகள் : | | அரசாங்கக் கடன் | 11.0 |
| (1) புழக்கத்தில் | 1965.3 | பிற அரசாங்க செக்கூரிட்டிகள் | 1985.0 |
| (2) பாங்கு இலாகவில் | 35.0 | பிற செக்கூரிட்டிகள் | 1.0 |
| | | நாணயம் (பொன் நாணயமல்லாதவை) | 3.0 |
| | | நம்பிக்கை வெளியீடு | 2000.0 |

| | | | |
|---|---|---|---|
| | | பொன் நாணயம், பொன் கட்டி | 0.3 |
| | £ 2000.3 | | £ 2000,3 |

**பாங்கு இலாகா**

| | | | |
|---|---|---|---|
| முதல் | 15.00 | அரசாங்க செக்கூரிட்டிகள் | 254.00 |
| நிலுவை (Rest) | 4 00 | பிற செக்கூரிட்டிகள்: | |
| பொதுத் துறை வைப்புகள் | 11.0 | கழிவும் அட்வான்சும் 23.0 } செக்கூரிட்டிகள் 22.0 } | 45.00 |
| பிற வைப்புகள்: | | | |
| பாங்குகள்: 232.0 } பிற 74.0 } | 306.0 | நோட்டுகள் | 35.00 |
| | | நாணயங்கள் | 2.00 |
| | £ 336.0 | | £ 336.00 |

முதலில் வெளியீட்டு இலாகாவை எடுத்துக்கொள்வோம்.

(1) வெளியிட்ட நோட்டுகள்: இந்த வெளியீட்டுத் தொகை சட்டத்தால் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இதில் நம்பிக்கை வெளியீடு (Fiduciary Issue) அடங்கியுள்ளது. கருவூலம் பாங்கினுடைய கோரிக்கையின் மேல் இந்தத் தொகையைக் கூட்டலாம், குறைக்கலாம். இந்தத் தொகைக்கு மேற்படவேண்டின் தன்னிடமுள்ள பொன்னை அங்காடி விலை வீதத்தில் 'மதிப்பிட்டு அந்த அளவுக்கு நோட்டு வெளியிடலாம். 1939 இல் இருந்து எல்லாப் பொன்னும் மாற்றுச் சமன்செய் கணக்கில் (Exchange Equalisation Account) இருக்கிறது. அற்ப அளவே வெளியீட்டு இலாகா இருக்கிறது. மொத்த நோட்டு வெளியீடு சட்டப்படி அனுமதித்த அளவுக்கு இருக்கும். வெளியிட்ட நோட்டுகளில் பெரும் பகுதி பாங்குகளிடமும் பொது மக்களிடமும் இருக்கும். சிறு பகுதி (35.00) பாங்கு இலாகாவில் இருக்கும். நோட்டுக்குத் தேவை உயருமானால் பயன்படுவதற்காக இது இருக்கிறது, இப்பகுதி இங்குப் பொறுப்பினத்திலும் பாங்கிலாகாவில் சொத்தினத்திலும் வருவதை நோக்குக. பாங்கின் இருப்பு நிலைக் குறிப்பு இரண்டு பகுதிகளாக வெளியிடப்படாதாயின், இது இரண்டிலிருந்தும் விலகி, வெளிச் செல்லா நோட்டுகள் என்ற தலைப்பில் பொறுப்பின் கீழ்க் காணப்படும்.

(2) அரசாங்கக் கடன்; இது அரசாங்கம் நேரடியாகக் கடன் (Direct Loans) வாங்குவதைக் காட்டுகிறது. ஒரு காலத்தில் அரசாங்கத்துக்குக் கடன் கொடுத்ததும் நோட்டு வெளியீடு அனுமதிக்கப்பட்டதை இந்தத் தொகை காட்டுகிறது. 1844-இலிருந்து இத்தொகை மாறவில்லை. (3) அடுத்தது, பிற அரசாங்க செக்கூரிட்டிகள் என்பது, அரசாங்கம் வெளியிட்ட உண்டியல்களையும் பாண்டுகளையும் காட்டுகிறது. (4) அடுத்தது, பிற செக்கூரிட்டிகள் என்பது, டொமினியன் அரசாங்கங்கள் ஆகியவற்றின் பாண்டுகளைக் காட்டுகிறது. (5) கடைசி இனம் பாங்கிடமுள்ள சிறு பொன் இருப்பைக் காட்டுகிறது. நெடுங் காலமாக இங்கிலாந்து பாங்குதான் நாட்டின் பொன் இருப்புக்குக் காவலனாக இருந்தது. 1932இல் மாற்றுச் சமன் செய் கணக்கு (Exchange Equalisation Account) நிறுவப்பட்ட பின், பாங்கு வசமிருந்த பொன்னில் பெரும்பகுதி இக்கணக்குக்கு மாற்றப்பட்டது. 1939இல் முழுதுமே கைமாறியது.

அடுத்தபடி பாங்கு இலாகாப் பகுதியைப் பார்ப்போம். இதில், முதலில் காணப்படுவது மூலதனம் (Capital). இது இங்கிலாந்து பாங்கு 1946இல் நாட்டுரிமையாக ஆக்கப்படுவதற்கு முன் தனியார் வைத்த மூலதனத்தைக் காட்டுகிறது. இப்போது இந்த மூலதனம் கருவூலத்துக்கு உரியது. அடுத்தது மிலுவை (Rest) என்பது. இது அவ்வப்போது ஏற்பட்ட இலாபத்தில் பிரித்துக் கொடுக்காமல் நிறுத்தப்பட்ட தொகை. இதை ஒதுக்கிய முதல் (Reserve Capital) எனலாம். இந்த இரண்டு இனங்களும் பாங்கின் பூர்வ வரலாற்றைக் குறிக்கும் குறிப்புடையனவேயன்றிப் பணத்துறை நிர்வாகத்துக்கு எந்தக் குறிப்பும் உடையன அல்ல. அடுத்த இனம் பொதுத்துறை வைப்பு (Public deposits) எனப்படுவது. பாங்கு அரசாங்கத்துக்கும் பாங்காக இருப்பதால் இது தோன்றுகிறது. இதில் ஒரு பகுதி பொதுத் துறைக் கணக்கு (Public Account), கருவூலம், சேவிங்ஸ் பாங்கு, நாட்டுக் கடன் (National Debts) ஆகியவை சம்பந்தமான இருப்புகளைக் காட்டுகிறது. இந்த இருப்பு அரசாங்கத்தின் வரவு செலவைப் பொறுத்தது. ஒரு பகுதி கருவூலத்தின் தனிக் கணக்குகள் (Treasury Special Accounts). இது அமெரிக்க அரசாங்கம் மார்ஷல் உதவி கொடுத்தபோது ஏற்பட்ட கணக்கு. அடுத்த இனம் பிற வைப்புகள் (Other deposits). இதில் ஒரு பகுதி வர்த்தக பாங்குகள் வைப்பு (Banker's deposits). இதைத் தான் அவைகள் ரொக்கமாகக் கருதுவது. இந்தத் தொகையில் மாறுதல் வர்த்தக பாங்குகளுடைய கடன் கொடுப்பு நடவடிக்கைகளைக் குறிப்பாக உணர்த்தும். மற்றொரு பகுதி பிற

கணக்குகள் (Other Accounts). இது முக்கியமாக வேறு அரசாங்கங்களும் அயல் நாட்டுப் பாங்குகளும் வைத்திருக்கும் இருப்பைக் காட்டுகிறது. ஒரு பகுதி ஒரு காலத்தில் இங்கிலாந்து பாங்கில், அது சாதாரண பாங்காக இருந்தபோது, வாடிக்கைக் காரராக இருந்தவர்கள் இன்றும் கணக்கு வைத்திருப்பதைக் குறிக்கிறது. இப்போது புது வாடிக்கைக்காரர்களைப் பாங்கு ஏற்பதில்லை. இந்தக் கணக்குகளை வகிப்போர் தொகை அற்பம்.

அடுத்தபடி சொத்து இனங்களைப் பார்ப்போம். முதலாவது அரசாங்க செக்கூரிட்டிகள். இது பெரிய இனம். இதில் அடங்குபவை, பாங்கு அரசாங்கத்திடம் நேரடியாக வாங்கிய கருவூல உண்டியல்கள், கருவூலத்துக்கு நேரடியாகக் கொடுத்த வழிவகைக் கடன் ஆகியவை. அடுத்த இனம் இதர செக்கூரிட்டிகள் (Other Securities). இதில் ஒரு பிரிவு கழிவு களும், அட்வான்சுகளும் (Discounts and Advances). மற்றொன்று செக்கூரிட்டிகள். கழிவுகளும் அட்வான்சுகளும் என்பதில் மூன்று பகுதிகள் உள்ளன. இவைகளில் இரண்டு பகுதிகள் சாதாரணப் பாங்காக நடப்பதனுல் தோன்றுவன. இந்த இண்டு இனங்களாவன:

(1) வாடிக்கைக்காரர்களின் உண்டியல்களைக் கழிவு செய்வது.

(2) மிகைப்பற்று அல்லது கடன் மூலம் சொந்த வாடிக்கைக்காரருக்கு உண்டியல்களை ஈடு பெற்றுக் கொடுக்கும் அட்வான்சு.

(3) மூன்ருவது இனம் மேற்கூறிய வகையான தொழிலை, கழிவகங்களுக்காகத் தான் இறுதிக் கடன் கொடுப்போன் (Lender of Last Resort) என்ற முறையில் செய்யும்போது தோன்றுவது.

கழிவகங்களே பாங்கின் வாடிக்கைக்காரர்கள் ஆகையால் மற்ற வாடிக்கைக்காரர்களுக்கும் இவைகளுக்கும் வேறுபாடு உள்ளதைக் காட்டத் தனித்துக் கூறப்படுகிறது.

இரண்டாவது இனமான 'செக்கூரிட்டிகள்' என்பதில் அடங்குவன : பிரிட்டிஷ் அரசாங்கத்தினுடையதல்லாத டொமினியன் அல்லது அயல்நாட்டு உண்டியல்களையும் பாண்டு களையும் பாங்கு தானுகவே வாங்கியவை. இவைகளில்

கழிவகங்களிலிருந்து வாங்கப்பட்ட செக்கூரிட்டிகள் இருக்கும். கழிவகங்கள் இப்படி விற்கும் செக்கூரிட்டி கட்டுகளில் (parcels) கருவூல உண்டியல் அல்லாத சில உண்டியல்களையும் சேர்ப்பது வழக்கம். இதன் நோக்கம் இந்த உண்டியல்களுக்கு ஏற்பு (Acceptance) தந்த நிறுவனங்கள் எவ்விதமான பேரங்களில் ஈடுபடுகின்றன என்பதைத் தணிக்கை செய்வதாகும். தவிர, இந்த இனத்தில் தொழில் வளர்ச்சிக்காக அல்லது புனருத்தாரணத்திற்காக (reconstruction) உதவும் வகையில் பாங்கு வாங்கிய பங்குகளும் (shares) டிபெஞ்சர்களும் அடங்கும். பெரிய கம்பெனிகளில் டிபெஞ்சர்களை வாங்கினாலும் இந்தத் தலைப்பின்கீழ்தான் வரும்.

அடுத்த இனம் நோட்டுகள். நோட்டுகள் என்ற இனம் வெளியீட்டு இலாகாவின் பொறுப்பு என்ற பகுதியில் காணப்படுவது. எதிர்க் குறிப்பாக (cross entry) இங்கே காணப்படுகிறது. இரண்டு இலாக்காக்களும் ஐக்கியமாகி விட்டால் பாங்கு இலாக்காவில் சொத்தின் கீழ் இருக்கும் இந்த இனமும், வெளியீட்டு இலாக்காவில் பொறுப்பின் கீழ் இருக்கும் இந்த இனமும் மறைந்து விடும். இந்த இனம் குறிப்பிடுவது என்னவெனில் பாங்கு வெளியிடக்கூடிய அளவுக்கு நோட்டுகள் செலாவணியில் செல்லவில்லை என்பதாகும். கடைசி இனம் காசுகள் (Coins). இவை இன்று வெள்ளிக் காசுகளே. சிறு செலாவணிக்காக இவை வைக்கப்பட்டிருக்கின்றன.

மேற்கண்ட இனங்களில் மாறுதல் பெரும்பாலும் அவற்றின் வாடிக்கைக்காரர்கள் நடவடிக்கையின் பிரதிபலிப்பு என்று தோன்றினாலும், உண்மையில் பாங்கு தன்னுடைய தொழில் நிபந்தனைகளை மாற்றி இந்த இனங்களின் அளவைப் பாதிக்க முடியும். பாங்கில் உள்ள ரொக்கத்துக்கும் (நோட்டுகளும் காசுகளும்), அதன் மொத்தச் சொத்துகளுக்கும் உள்ள விகிதம் (Proportion) என்று குறிப்பிடப்படும். சாதாரண பாங்குகள் தம் ரொக்க விகிதத்தின் மேல் கண்ணுயிருப்பதுபோல மைய பாங்கும் தன் விகிதத்தின் மேல் கண்ணுயிருக்கும். ஆனால் விகிதம் மாருதிருக்க வேண்டுமென்பது நியதியில்லை.

### பாங்கின் உள்நாட்டு வேலைகள்

உள்நாட்டு வேலைகள் எல்லாம் ஸ்டெர்லிங் பணத்தில் நாட்டினருக்குள் நடக்கும் பேரங்கள் சம்பந்தமானவை. அடிப்படையில் எல்லா பேரங்களும் அரசாங்கத்துக்கும் வணிக பாங்குகளுக்கும் இடையில் நிகழ்வன. இவ்விரு வகையினரும்

இங்கிலாந்து பாங்கின் வாடிக்கைக்காரர்களே. முதலில் அரசாங்கத்துக்குப் பாங்கு செய்யும் பணிகளை விளக்கி, பிறகு பாங்குகளுக்குச் செய்யும் பணிகளை விளக்கி, பின்னர் எல்லா நடவடிக்கைகளின் விளைவும் எப்படிப் பண அங்காடியைப் பாதிக்கிறது என்று பார்ப்போம்.

### 1. அரசாங்கத்தின் பாங்காகச் செய்யும் வேலைகள்

இங்கிலாந்து பாங்கு அரசாங்கத்திற்குப் பாங்கராக (Government's Banker) வேலை செய்கிறது. ஆனால் இது வணிக பாங்குக்கும் அதன் வாடிக்கைக்காரருக்கும் உள்ள தொடர்பைப் போன்றதன்று. அரசாங்கத்தோடு தொடர்புதான் இதன் பணத்துறைத் தலைமைக்கு ஆதிகாலந் தொட்டு அடிப்படை. தன்னை அரசாங்கத்தின் பாங்கென்று நினைத்தே அது பொறுப்புகளை ஏற்றுக் கடமைகளைச் செய்து வருகிறது.

எக்ஸ்செக்கர் (Exchequer) எனப்படும் நிதித்துறையின் தலைமைக் கணக்கு இங்கிலாந்து பாங்கில் வைக்கப்பட்டிருக்கிறது. அநேக உப கணக்குகளும் இருக்கின்றன. இவைகள் எல்லாம் பாங்கினுடைய இருப்பு நிலைக் குறிப்பில் "பொதுத்துறை வைப்புகள்" (Public Deposits) என்ற ஒரே தலைப்பின்கீழ் காட்டப்படுகின்றன. சாதாரண வாடிக்கைக்காரனுக்கு ஒரு வணிக பாங்கு செய்யும் பணிகளையே இங்கிலாந்து பாங்கு அரசாங்கத்துக்குச் செய்கிறது. வரவுகளைப் பெறுவது, செலுத்துகளைச் செய்வது, கணக்கைப் பற்றி ஆலோசனை கூறுவது, வேண்டியபோது பண உதவி செய்வது முதலியவை எல்லாம் சாதாரண பாங்குகள் செய்யும் பணிகளாகும். இவைகளை அரசாங்கத்துக்கு இங்கிலாந்து பாங்கு செய்கிறது.

தவிர, எக்ஸ்செக்கர் கடன் வாங்க வேண்டுமானால் அதையும் பாங்கு செய்கிறது; வாரா வாரம் கருவூல உண்டியல் வெளியீட்டுச் சம்பந்தமான டெண்டர்களைப் பெறுகிறது; அவைகளைத் திறந்து பார்த்துப் பங்கிட்டு வசூல் செய்து எக்ஸ்செக்கர் கணக்கில் வரவு வைக்கிறது. உண்டியல் முதிர்ந்த தேதியில் அவைகளைப் பைசல் செய்கிறது. தவிர, புது அரசாங்க வெளியீடுகளைப் பாங்கு நிருவகிக்கிறது; பாண்டு பைசல் அல்லது மாற்றுதல் (conversion) வேலையைச் செய்கிறது; எந்த நிபந்தனைகளின் மேல் வெளியீடுகளை வெளியிடுவது என்று அரசாங்கத்துக்கு யோசனை கூறுகிறது; முன் அறிக்கை (Prospectus) வெளியிடுகிறது; பாண்டு வாங்க வரும் மனுக்களைப் (application) பெற்று பாண்டுகளைப் பங்கீடு செய்கிறது;

அவசியமாயின் பாண்டுகளுக்கு விற்பனை உத்தரவாதத்தைப் பெற (underwriting) ஏற்பாடு செய்கிறது; நாட்டுரிமை (nationalisation) ஆக்கப்பட்ட தொழில்கள் அரசாங்க உத்தரவாதத்துடன் கடன் வாங்க முயலும்போது அவைகளின் பங்குகளைப் பாங்கு வெளியிடுகிறது; எல்லா அரசாங்க பாண்டுக் கணக்குகளையும் நிருவகிக்கிறது; உரியவர்களுக்குக் குறித்த தேதியில் டிவிடெண்டு கொடுக்கிறது. கடன் ரிஜிஸ்ட்ரார் வேலையே பாங்குக்கு ஒரு பெரிய வேலை.

மைய பாங்காக இப்பாங்கு செய்யும் வேலைகளில் சிறப்பானது, பண அங்காடியை அல்லது அரசாங்க பாண்டு அங்காடியை வழிப்படுத்த, அரசாங்கக் கடன் தாள்களில் (பாண்டுகள் கருவூல உண்டியல்களில்) வெளி அங்காடி நடவடிக்கை (Open market operations) எடுத்துக்கொள்வதாகும். தவிர, பாங்கு அநேமாக ஒவ்வொரு நாளும் பண அங்காடியில் தலையிட்டுக் கருவூல உண்டியல் வாங்கும் அல்லது விற்கும். அரசாங்கத்தின் வரவு செலவில் ஏற்படும் ஏற்றத்தாழ்வுகளால் பண அங்காடி பாதிக்கப்படாமலிருக்க பாங்கு எதிர் நடவடிக்கை எடுக்கிறது. அரசாங்கத்தின் தேவைகள் அல்லது செலுத்துகள் சம்பந்தமாக எக்ஸ்செக்கருக்கும் பாங்குத் திட்டத்துக்கும் இடையில் பெரிய அளவில் ரொக்கம் பெயருமாதலால், இவை அங்காடியில் ரொக்க நெருக்கடியையோ மலிவையோ மாறி மாறி உண்டாக்கி வட்டி வீதத்தை மாற்றிக்கொண்டே இருக்கும். பேரளவில் பண அங்காடியில் கடன் வாங்க வேண்டியிருக்கும். அரசாங்கத்துக்கே இது கெடுதலானது, குறுங்கால வட்டிகள் நாளுக்கு நாள் மாறுதிருப்பது அரசாங்கத்துக்கு நல்லது. ஆகவேதான் பாங்கு, உண்டியல் பேரத்தில் தலையிடவேண்டியிருக்கிறது.

இதற்காகவன்றித் தானாகவேகூட பாங்கு, ஒரு குறிப்பிட்ட வட்டி வீதக் கொள்கையைப் பின்பற்றி, அதைச் செயல்படுத்தத் தலையிடலாம். உதாரணமாகப் பாங்கு வீதத்துக்குமேல் அங்காடி வீதங்களை உயர்த்த விரும்பினால், மேற்கண்டவாறு அரசாங்க நடவடிக்கையின் விளைவுகளைத் தடுக்க உண்டியலை வாங்காமல் விட்டு ரொக்க நெருக்கடியை அதிகப்படுத்தி, வட்டியை ஏறச் செய்யலாம். ஆனால், சாதாரணமாக அனுசரிக்கும் முறை இருப்பிலுள்ள உண்டியல்களை விற்பதன்று. புதிதாக விற்கப்போகும் உண்டியல் தொகையை ஏற்றவாறு மாற்றுவதாகும். அங்காடியிலிருந்து பணத்தை உறிஞ்ச வேண்டுமாயின் டெண்டர் உண்டியல் தொகை அதிகப்

படுத்தப்படும். பணத்தை ஊட்ட வேண்டுமாயின் தொகை குறைக்கப்படும்.

கருவூல உண்டியல்களில் வெளி அங்காடி நடவடிக்கை ஒரு கழிவ்கத்தின் மூலமாகச் செய்யப்படும். அதன் மூலம் உண்டியல் விற்கவோ வாங்கவோ செய்யும். பாங்கு நேரடியாக அங்காடியில் தலையிடுவதில்லை. ஆனால் அங்காடியில் நடைபெறும் உண்டியல் பேரத்தின் பருமன், தன்மை, இடம் ஆகியவற்றைக்கொண்டு பாங்கு நடவடிக்கை நிகழ்வதை யூகிக்கலாம்.

பாங்கு தன் வெளியீட்டிலாகாவிலிருந்து (Issue department) அரசாங்கச் செக்கூரிட்டிகளை விற்கவும், அல்லது வாங்கவும் செய்கிறது; ஆனால் நேரடியாகத் தலையிடுவதில்லை. இந்த நடவடிக்கைகள் ஒரு தரகு நிறுவனத்தின் (firm of stock brokers) மூலம் நிகழ்கின்றன. நிறுவனத்தின் பிரதிநிதி அரசாங்க புரோக்கர் (Government broker) எனப்படுவான். பேரத்தின் பருமனையும் தன்மையையும் கொண்டு பாங்கின் நடவடிக்கையைக் கண்டு கொள்ளலாம். அரசாங்கம் பங்கு மார்க்கெட்டில் வெளியிடும் பங்குகள், வெளியீட்டு நாளிலேயே, முழுவதும் பொதுமக்களால் வாங்கப்படும் என்று அரசாங்கம் எதிர்பார்ப்பதில்லை. பொது மக்கள் வாங்காத தொகை இலாக்காக்களால் (Departments) வாங்கப்படும். இங்கு இலாக்கா என்பது உண்மையில் இங்கிலாந்து பாங்கின் வெளியீட்டு இலாக்கா ஒன்றேயாகும். இதுவே அரசாங்க பாண்டு வெளியீடுகளுக்கு விற்பனை உத்தரவாதியாக (underwriter) இருக்கிறது. வெளியீட்டிலாக்கா வாங்கும் செக்கூரிட்டிகள், பின்னர் மெதுவாக அரசாங்க புரோக்கர் மூலம் அங்காடிக்கு விற்கப்படும். விற்பனையாகாத அரசாங்கச் செக்கூரிட்டிகளை வெளியீட்டிலாக்கா எடுத்துக்கொள்ளும்போது, அந்த அளவுக்கு எக்ஸ்செக்கர் பாங்குக்குப் பட்டிருக்கும் பிறவகைக் கடன்கள் குறையும். வழிவகைக் கடன்களும் (Ways and means advance) வெளியீட்டு இலாக்காவில் இருக்கும் கருவூல உண்டியல்களும் குறையும். பின்னர் வெளியீட்டு இலாக்கா மக்களிடம் பாண்டுகளை விற்கும்போது வசூலாகும் தொகை மீண்டும் எக்ஸ்செக்கருக்குக் கடனாகப் போகும். வெளியீடு விட்டு விட்டு நிகழ்ந்த போதிலும், வெளியீட்டு இலாக்கா தொடர்ந்து பாண்டுகளை விற்பது மக்கள் அரசாங்கத்துக்குக் கொடுக்கத் தயாராக இருக்கும் பணத்தைத் தொடர்ந்து பெற வழி செய்கிறது. தவிர, அரசாங்க செக்கூரிட்டி

அங்காடியில் விலைகளையும், விளைவுகளையும் (yields) அவ்வப் போது நிர்ணயிக்க அதிகாரிகளுக்கு வாய்ப்புண்டாகிறது. எப்படி எனில், வெளியீட்டிலாக்காவில் சமீப வெளியீட்டுச் செக்யூரிட்டிகள் கிடைக்குமென்று அங்காடிக்குத் தெரிந் திருக்கும் வரையில், அதிகாரிகள் அவைகளை எந்த விலைக்கு விற்பார்கள் என்பதைப் பற்றிய யூகம் அங்காடி விலைகளை நிர்ணயிக்கும் ஒரு பெரிய காரணியாக இருக்கும். ஆகவே அதிகாரிகள் எப்போதும் வெளியீட்டு இலாக்காவில் குறைந்த பட்சம் ஓர் இடைக்கால வெளியீடும் ஒரு நெடுங்கால வெளி யீடும் இருக்கும்படி பார்த்துக்கொள்கிறார்கள். இதனால் அங்காடி வட்டிவீதக் கோப்பை அதிகாரிகள் தம் இச்சைப்படி திருத்த முடிகிறது. இவ்விதமாகப் பயன்படும் பொருட்டு வெளியீட்டு இலாக்காவுக்குச் செக்யூரிட்டிகள், வெளியீடுகள் எப்போதும் கிடைக்கும்படி செய்யவே, சமீப கால வெளியீடுகள் செய்யப்பட்டன என்று நினைக்க இடமிருக்கிறது.

ஒருபுறம் புதுச் செக்யூரிட்டிகளை விற்றுக்கொண்டு இருக்கும்போதே, முதிர்ந்து வரும் செக்யூரிட்டிகளை வெளியீட் டிலாக்கா வாங்கிக் கொண்டே இருக்கும். ஆகவே முதிர்வு நாள் வரும்போது நிதி நிறுவனங்களின் கையிலும் பொது மக்களின் கையிலும் இருக்கும் செக்யூரிட்டிகள் புது வெளி யீட்டுக்குக் குறைவாகவே இருக்கும். புதுச் செக்யூரிட்டிகளை வெளியிடுவதும், முதிரும் செக்யூரிட்டிகளை வாங்குவதும் வெளியீட்டிலாக்காவில் பல மாதங்களுக்குப் பரப்பப்படுவதால், திடீரென வெளியிடுவதால் ஏற்படக்கூடிய இடைஞ்சல்களைத் தவிர்க்க முடிகிறது. வெளியீட்டு இலாக்கா [வழிவகைக் கடன் மூலமோ, குழாய் (tap) உண்டியல் வாங்குவது மூலமோ] அரசாங்கத்துக்கு ரொக்கம் கிடைக்கச் செய்வது போல, முதிரும் செக்யூரிட்டிகளை வாங்கும்போது (வழிவகைக் கடன் தருவதும் உண்டியல் வாங்குவதும் நிறுத்தப்பட்டு) அரசாங்கத்தின் ரொக்கம் குறைகிறது. முதிர்வுகளை வாங்கு வதற்கு இது அவசியமாகிறது. ஆகவே, கருவூலத்தில் ஒரு புறம் ரொக்க வரவும், மற்றொருபுறம் சுவறலும் காணப் படுகின்றன. இவ்விருவித நடவடிக்கைகளின் நிகர விளைவே முக்கியமானது. பொதுமக்களுக்கு செக்யூரிட்டி விற்பனை அவர்களிடமிருந்து வாங்குவதற்கு மேல் இருக்குமானால், வேறு வழிகளில் நிரப்ப முடியாத எக்ஸ்செக்கர் பற்றுக்குறையை இவ்விதத்தில் நிரப்பலாம். இப்படிப் பற்றுக்குறை சமாளிக் கப்படுவது பாங்குத் திட்டத்தின் நீர்மையைப் பாதிக்காத வழியாகும். கருவூல உண்டியல் வழியாக அரசாங்கம்

நிதி பெறுவது பாங்குத் திட்டத்தின் நீர்மையில் மாறுத லுண்டாக்குமாதலால் சமீபகாலத்தில் இடைக்கால நெடுங்கால செக்கூரிட்டிகள் மூலமாக நிதி பெறுவது அதிகமாகிக்கொண்டு வருகிறது.

ஒரு தனி நபர் தன்னுடைய பாங்கிடம் தன் நிதியாட்சி சம்பந்தமாக யோசனை கேட்பதுபோல அரசாங்கமும் தன்னுடைய பாங்கினிடத்திலிருந்து யோசனையை எதிர்பார்க்கிறது. எல்லாப் பண விவகாரங்கள் பற்றியும் அரசாங்க இலாக்காக்கள் எல்லா வற்றுக்கும் ஆலோசனை கூறுவது மைய பாங்கினுடைய கடமை என்பதில் ஐயம் இல்லை.

**2. பாங்கர்களுக்குப் பாங்கராகச் (Bankers' bank) செய்யும் வேலை**

இலண்டன் தீர்வக பாங்குகள் தம்முடைய ரொக்கத்தில் ஒரு பகுதியை இங்கிலாந்து பாங்கினிடத்தில் வைப்புச் செய்கின்றன என்று முன்னர்க் கூறினோம். இவை இங்கிலாந்து பாங்கின் இருப்பு நிலைக் குறிப்பில் (balance sheet) 'பாங்க ருடைய வைப்புகள்' (Bankers' deposit) என்ற தலைப்புடன் காணப்படும். இந்த வைப்புகளைத் தீர்வகத்தில் பாக்கியைப் பைசல் செய்யவும், அரசாங்கத்துக்குச் செலுத்தவும், வேண்டிய போது நோட்டுகளையும் காசுகளையும் மைய பாங்கில் வாங்குவதற்கும் பாங்குகள் ஆள்கின்றன. இங்கிலாந்து பாங்கு காசுகளை அரசினர் நாணயச்சாலை (Royal Mint) யிலிருந்து பெற்று ஈடாக எக்ஸ்செக்கரின் கணக்கில் வரவு எழுதுகிறது. பழைய காசுகளை அச்சகத்துக்குத் திருப்பும்போது எக்ஸ்செக்கர் கணக்கில் பற்று எழுதுகிறது. நோட்டுகளைப் பாங்கே அச்சடிக்கிறது. அதனுடைய நோட்டுகள் இங்கிலாந்தில் சட்டபூர்வச் செல்லுபடியுள்ளன. 1844ஆம் ஆண்டு பாங்கு சாசனச் சட்டப்படி (Bank Charter Act of 1844) நோட்டு வெளியீட்டுக் கணக்கும், பாங்குத் தொழில் கணக்கும் தனித் தனியாக இருக்கவேண்டியிருக்கின்றன. இதனாற்றான் இங்கிலாந்து பாங்கின் இருப்புநிலைக் குறிப்பில் இரண்டு பகுதிகள் காணப்படுகின்றன. இந்தப் பிரிவினை கணக்களவானதே ஒழிய, பாங்கு அமைப்பில் பிரிவினை ஒன்றுமில்லை. முன்னர் நோட்டு வெளியீட்டுக்கும் பொன் இருப்புக்கும் இருந்த பிணைப்பை இப் பிரிவினை உணர்த்தியது. இன்று பொன் பாங்கின் ஆட்சியிலில்லை. ஆகவே, இன்று வெளியீட்டிலாக்காவுக்குத் தனிக் குறிப்பவசியமில்லை. ஆயினும் பாங்குப் பகுதிக்குரிய இலாபத்தை நிர்ணயிக்க உதவுவதால் இன்றும் இப்பிரிவினை இருந்து வருகிறது. வெளியிட்ட நோட்டுகளுக்கு எதிராக

பாங்கு இன்று ஓர் அடையாளப் பொன் தொகையை (token amount of gold) யும், பழைய ஏட்டளவான சிறு அரசாங்கக் கடன் தொகையையும், பேரளவான கருவூல உண்டியல்களையும், வேறு விற்கக்கூடிய அரசாங்க செக்கூரிட்டிகளையும் வெளியீட்டு இலாக்கா வைத்துள்ளது. நோட்டு வெளியீட்டை அதிகப் படுத்துவது சம்பந்தமான அதிகாரம் 1954ஆவது ஆண்டுச் செலாவணி பாங்கு நோட்டுச் சட்டப்படி (Currency and Bank Notes Act of 1954) வரையறை செய்யப்பட்டுள்ளது. அதன்படி பாங்கு விரும்பினால் கருவூல அனுமதியுடன் நோட்டு வெளியீட்டை ஏற்றவோ குறைக்கவோ முடிகிறது. ஆனால் பின்னர்ப் பாராளுமன்றத்துக்குக் கருவூலக் குறிப்பு (Treasury Minute) மூலம் தெரிவிக்க வேண்டும். சட்டத்தில் குறிப்பிடப்பட்ட 1575 மில்லியனுக்கு மேற்பட்டு வெளியீடு இருக்குமானால், இரண்டு ஆண்டுக்கு ஒரு முறை கருவூலம் எச்சப்பாட்டை அனுமதித்துச் சட்டச் சார்பான உத்தரவு (Statutory Order) தர வேண்டியிருக்கிறது. இந்த உத்தரவைப் பாராளுமன்றத்தில் எதிர்க்கலாம், விவாதிக்கலாம். இந்தக் கட்டுப்பாடு பொன் காப்பிருந்த முற்காலக் கட்டுப்பாட்டின் எச்சம் ஆகும். அக்காலத்தில் அதிகாரிகள் நம்பக வெளியீட்டை (Fiduciary Issue) அளவிறந்து செய்வார்கள் என்ற பயத்தினால் பாராளுமன்றத்தினுடைய மேற்பார்வை அவசியமாகக் கருதப் பட்டது. ஆனால் பாங்கு நோட்டு வெளியீடு ஒன்றே நாட்டின் பணத் தொகையை நிர்ணயிப்பதாகச் சொல்ல முடியாத இன்றைய நிலையில், மக்களுடைய செலாவணி வசதிக்கு ஏற்ப நோட்டு வெளியீடு உற்பத்தி செய்யும் வழக்கம் ஏற்பட்டுள்ள நிலையில், இக் கட்டுப்பாட்டு அவசியமில்லை. குறி நாணயங்களை வெளியிடுவதில் எந்தத் தத்துவம் இதுவரை ஆளப்பட்டு வருகிறதோ அதே தத்துவத்தை இன்று நோட்டுகளுக்கும் ஆளலாம்.

நீர்வக பாங்குகளின் கைக்கோள்களையும் நடவடிக்கை களையும் பாங்கு சோதனை செய்வதோ மேற்பார்வை செய்வதோ இல்லை. ஆனால் 1946ஆம் வருஷத்திய இங்கிலாந்து பாங்குச் சட்டம் (Bank of England Act of 1946) சில அதிகாரங்களைப் பாங்குக்குக் கொடுத்திருக்கிறது. பாங்குகளிடமிருந்து விவரங்களைக் கேட்கவும், அவைகளுக்குச் செயல் முறைகளைச் சிபார்சு செய்யவும், (கருவூலத்தின் அனுமதியின் பேரில்) அவைகளைப் பின்பற்றும்படி உத்தரவுகள் (Directions) செய்யவும் அதிகாரம் தரப்பட்டுள்ளது. இந்த அதிகாரம் இதுவரையில் ஆளப்படவில்லை. இந்தச் சட்டம் செயல்முறைக்கு

வருவதற்கு முன்னேயே, வேண்டுமானால் ஒரு தீர்வக பாங்கைத் தன்னிச்சைப்படி நடக்கச் செய்ய வழியிருந்தது. தன்னிடத்தில் கணக்கு வைக்க மறுப்பதன் மூலம் ஒரு பாங்கை வழிக்கு வரச் செய்ய முடியும். ஆனால் இப்படிச் சமீப காலத்தில் செய்ய நேர்ந்ததில்லை. பாங்குகளின் மேல் இங்கிலாந்து பாங்குக்குள்ள செல்வாக்கைப்பற்றி இன்று யாருக்கும் ஐயப்பாடிருக்கக் காரண மில்லை. பாங்குகள் தொடர்ந்து இங்கிலாந்து பாங்கிடம் தொடர்பு வைத்துக் கொண்டிருக்கின்றன; கவர்னர் சொல்வன வற்றைச் சிரத்தையுடன் கேட்டுக் கொள்கின்றன; அவர் குறிப்பாகச் சொன்னாலும் புறக்கணிப்பதில்லை.

பாங்குகளின் ரொக்க வீதத்தைப் பற்றியும் ரொக்கச் சொத்துகளின் வீதத்தைப்பற்றியும் இருந்துவரும் வழக்கத்தை உறுதிப்படுத்த, பாங்கு தன்னுடைய செல்வாக்கை உபயோகித்து வந்துள்ளது. இவ்விகிதங்கள் ஆதியில் அனுபவத்தை ஒட்டிய புத்திசாலித்தனத்தினால் தோன்றியவை. 1946-ன் முடிவில் தீர்வு பாங்குகள் இங்கிலாந்து பாங்கினுடன் கலந்து தமக்குள் ஒரு முடிவுக்கு வந்தன. இனிமேல் ரொக்க வீதம் 8 சத வீதத்துக்குக் குறைவாக என்றும் வைப்பதில்லை என்பதே இம் முடிவு. இதனால் சன்னல் சோடனை (Window Dressing) எனப்பட்ட பழைய பழக்கம் நின்றது. இதுவரை பாங்குகள் தாங்கள் வாரந்தோறும் இருப்பு நிலைக் குறிப்பை வெளியிடும் போது மட்டும் அங்காடியில் வேறு பாங்கிடம் கைமாற்றுக் கடன் வாங்கி வழக்கமான வீதாசாரம் இருப்பதுபோல சோடிப்பது வழக்கம். இதைத்தான் சன்னல் சோடனை என்பது. இது இப்போது நின்றது. இங்கிலாந்து பாங்கும் 8 சதவீதத்துக்குக் குறைய இடந்தராது.

பாங்குகள் ரொக்கச் சொத்து விகிதத்தையும் (Liquid Asset Ratio) காப்பாற்றுவது அவசியம். ஏனென்றால், ரொக்கம் வேண்டும்போது சொத்துகளை விற்றுத்தான் பெற வேண்டும். இந்த விகிதம் 30 சதவீதத்துக்குக் குறையக் கூடாது என்பது நெடுங்கால வழக்கம். பாங்குகள் எண்ணிக்கையில் அதிகமாகவும் உருவில் சிறியனவாகவும் இருந்தபோது இவ்வளவு உயர்ந்த சதவீதம் அவசியமாயிருந்தது. இன்று பாங்குகள் ஐக்கியமாகிப் பருத்துள்ள நிலையில் இத்தனை சதவீதம் அவசியமா என்பது ஐயப்பாடானது. இன்று 30 சதவீதம் இன்றியமையாததல்ல வானாலும் இதற்குக் குறைந்தால் பாங்குகள் தம் நிலை திருப்தியாக இல்லை என்று நினைக்கின்றன. இங்கிலாந்து

பாங்கும் இந்த விகிதத்துக்குக் குறைவாக இருக்குமானல் சம்பந்தப்பட்ட பாங்கைக் கண்டிக்கும்.

அரசாங்கத்துக்கும் தீர்வக பாங்குகளுக்கும் இடையில் வசதியாக இங்கிலாந்து பாங்கு இருந்து வந்திருக்கிறது. எக்ஸ்செக்கர் நிர்வாகியான சான்சலர் (Chancellor) அட்வான்சு களைக் குறைக்க வேண்டுமென்று கருதினல் அவர் கருத்து இங்கிலாந்து பாங்கின் கவர்னர் மூலம் பாங்குகளுக்குத் தெரிவிக்கப்படும். இப்படியே தம்முடைய கருத்துகளையும் கவர்னர்மூலம் பாங்குகள் அரசாங்கத்துக்குத் தெரிவிக்கின்றன. அரிதாகச் சான்சலரும் பாங்குகளுடன், கவர்னர் முன்னிலையில் நேரடியான ஆலோசனைகள் நடத்தியதுண்டு.

இங்கிலாந்து பாங்கு தீர்வக பாங்குகளுடன் நடைமுறை விஷயங்களைப் பற்றியும் கைக்கோள் (Policy) விஷயங்களைப் பற்றியும் தொடர்ந்து கலப்பதுண்டு. அடிக்கடி கூட்டங்கள் நிகழ்வதுண்டு. இந்தத் தொடர்பினலும் தங்களுக்குள்ள பரஸ்பர நம்பிக்கையினலும்தான் தீர்வக பாங்குகளிடம் பாங்குக்குச் செல்வாக்கு இருக்கிறது. இந்த முறையின் ஒரு விளைவு என்னவெனில் தீர்வக பாங்குகளைக் கருவூலம் நேரடியாகச் சந்திப்பதில்லை. இதனல் ஒரு குறையும் இருப்ப தாகவும் தெரியவில்லை. வேண்டும்போது நேரடிக் கூட்டமும் நடக்கலாம்.

### 3. பாங்கும் கழிவகங்களும்

இங்கிலாந்து பாங்கு கழிவகங்களுக்கும் பாங்கராக இருக்கிறது. மற்றத் தீர்வக பாங்குகளைப் போலக் கழிவகங்களும் இங்கிலாந்து பாங்கில் வைப்பு வைத்திருக்கின்றன. ஆனல் அவைகளைப் போலன்றி, இங்கிலாந்து பாங்கிடமிருந்து கழிவகங்கள் நேரே கடன் வாங்க முடியும். இங்கிலாந்தின் பணத் திட்டத்தில் கழிவகங்களுக்கு முக்கியமான தனிப்பட்ட நிலைமை உண்டு என்று முன்னமேயே கூறினேம். இந்தக் கழிவகங் களுக்குத்தான் இங்கிலாந்து பாங்கு இறுதிநிலைக் கடனீவோனக (Lender of Last Resort) இருக்கிறது. இங்கிலாந்து பாங்கினுடைய ரொக்க உதவி வேண்டும்போது கிடைக்காதாயின் கழிவகங்கள் சில சமயத்தில் தம் பொறுப்புகளை நிறைவேற்ற முடியாமல் தத்தளிக்க நேரிடும். ஒவ்வொரு கழிவகமும் பாங்கின் கழிவு அலுவலகத்தில் (Discount Office) ஒரு பற்றுக் கணக்கு (Loan Account) வைத்திருக்கிறது. வேண்டும்போது உண்டியல்களை

மறு கழிவு செய்தாவது, அல்லது வேறு தகுந்த செக்கூரிட்டிகளை ஈடு வைத்தாவது பாங்கிடம் கடன் பெறக் கூடும் என்ற நம்பிக்கை கழிவகங்களுக்குண்டு. எந்த நிபந்தனையின் மேல் உதவி செய்வதென்று முடிவு செய்வது மைய பாங்கு. ஆனால், கடன் இல்லை என்று மட்டும் சொல்லாது. எவ்வகையில் அங்காடிக்கு ரொக்கம் கிடைக்கச் செய்வதென்பதும் பாங்கின் விருப்பம். முன் குறிப்பிட்டபடி வேண்டுமானால் இங்கிலாந்து பாங்கு தன்னுடைய தனித் தரகன் மூலம் உண்டியல்களை வாங்கி (இது திறந்த பின் வாயில் முறை எனப்படும்) அங்காடியில் ரொக்கத்தைப் புகுத்தலாம். இம்முறையில் ரொக்கம் கிடைக்கச் செய்வதன் சிறப்பென்னவெனில் அங்காடி வட்டி வீதங்கள் மாற வேண்டிய அவசியம் இருக்காது. ஆனால், இவ்விதமாக ரொக்கத்தைப் புகுத்த பாங்கு விரும்பாதபோது, கழிவகங்கள் அலுவலகத்தில் (Discount Office) நேரடியாக ரொக்கம் பெறலாம். இரண்டு வழிகளிலும் பாங்குகளின் இருப்பு நிலைக் குறிப்பின் மீது விளைவு ஒன்றே (சேயர்சு நூலைப் பார்க்க). இப்படி ரொக்கம் கிடைக்கும் என்ற உறுதி பண அங்காடியின் செயல்பாட்டிற்கு அவசியம். இப்படிக் கழிவகங்கள் மூலம் வேண்டியபோது ரொக்கம் கிடைக்கும் என்று தெரியுமாதலால்தான் தீர்வக பாங்குகள் 8 சதவீத ரொக்கத்தோடு தம் நீர்மையைக் காப்பாற்றிக் கொள்ளமுடிகிறது. முன்னர்க் கழிவகங்களுக்குப் பாங்குகள் குறுங்காலக் கடன் கொடுக்கின்றன என்றும், ரொக்கம் வேண்டும் போது அவைகளைப் பாங்குகள் அழைக்கும் என்றும், கழிவகங்கள் மைய பாங்குக்குச் சென்று ரொக்கத்தைப் பெற்றுத் தரும் என்றும் கூறியுள்ளோம். கழிவகங்களின் சங்கத்தில் அங்கத்தினராக இல்லாத கழிவகங்கள் பாங்கின் பிரதம காஷியரிடம் (Chief Cashier) கடன் கேட்கலாம். ஆனால் பாங்கு மறுதளிக்கலாம். இவை சம்பந்தமாக இறுதிநிலைக் கடனீவோன் பொறுப்பு பாங்குக்கில்லை.

எந்த நிபந்தனைகளுடன் இறுதிநிலை உதவி அளிப்பது என்பது இங்கிலாந்து பாங்கின் விருப்பம். வட்டி வீதத்தையும் கடன் காலத்தையும் அதுவே குறிப்பிடுகிறது. அதன் வட்டி வீதங்கள் தண்டனை வீதங்களாக (penalty rates) இருக்கும். அதாவது, அங்காடி வீதங்களைவிட அதிகமாயிருக்கும். எந்த வகை உண்டியல்கள் மறு கழிவுக்குரியவை, எந்தவிதமான பாண்டுகள் கடனுக்கு அடகாக இருக்கத் தக்கவை என்பதையும் இங்கிலாந்து பாங்கு வரையறை செய்கிறது. பணத்துறை அதிகாரிகள் விரும்பினால் ரொக்க நெருக்கடியை உண்டாக்கிக் கழிவகங்களை இங்கிலாந்து பாங்கிடம் கடன் வாங்கும்படி

செய்யக்கூடும். இது கழிவகங்களுக்குத் தெரிந்த விஷயம். அவ்வப்போதைய அங்காடி (மார்க்கெட்) வட்டி வீதங்கள், கழிவகங்களிடமிருந்து பாங்கு வசூலிக்கும் வட்டி வீதத்தையும், எதிர்கால வட்டிப் போக்கைப்பற்றிய அங்காடிக் கருத்தையும், பாங்கு வீதத்தில் எதிர்காலத்தில் பாங்கிடம் எவ்வளவு கடன் வாங்க வேண்டியிருக்கும் என்பதைப் பற்றிய கருத்தையும் பொறுத்திருக்கும்.

கடன்மேலும் அல்லது மறு கழிவு மேலும் பாங்கு வசூலிக்கும் வட்டிக்குப் பாங்கு வீதம் (Bank Rate) என்று பெயர். இது கழிவகங்களின் உண்டியல்களை மறு கழிவு செய்யவும் அல்லது செக்கூரிட்டிகளின் மேல் கடன் கொடுக்கவும் ஆகும் குறைந்தபட்ச வட்டியாகும். இந்த வீதம் பாங்கினுடைய டைரக்டர் சபையால் ஒவ்வொரு வியாழக்கிழமை காலையிலும் வெளியிடப்படும்.

1946ஆம் ஆண்டு இங்கிலாந்து பாங்குச் சட்டத்தின் 4ஆவது பிரிவு, பாங்கு வீதம் சம்பந்தமாக பாங்குக்கு ஆணையிடக் கருவூலத்துக்கு அதிகாரம் தருகிறது. ஆனால், இந்த அதிகாரம் இதுவரையில் ஆளப்படவில்லை. ஆயினும், பாங்கு வீதம் மாற்றப் படும்போதெல்லாம் கருவூலமும் பாங்கும் கலந்தே முடிவு செய்கின்றன.

அங்காடியில் பெறக்கூடிய நாட் கடனைவிட, பாங்கிடம் வாங்கும் கடனுக்கு நிபந்தனைகள் கடுமையானவை யாகையால், கழிவகங்கள் கூடியமட்டும் பாங்கிடம் கடன் வாங்குவதைக் குறைத்துக்கொள்ளும். பாங்கில் வாங்கும் கடன் பொதுவாக ஏழு நாள் தவணைக் கடன்களாக இருக்கும். இந்தக் கடன் பாங்கு வீதத்தில் வாங்கப்படுகிறது. கழிவகங்கள் அங்காடியில் வாங்கும் நாட் கடன் மீது தர வேண்டிய வட்டி, பாங்கு வீதத்துக்கு ஒன்று முதல் $1\frac{3}{4}$ சதவீதம் வரை குறைவாய் இருக்கும். ஆகவே பாங்கு வீதம் தண்டனை வீதம் எனப் படுகிறது.

பாங்கு வீதம் எப்படி அங்காடி வீதங்களைக் கட்டுப் படுத்தும் சக்தி பெறுகிறது என்று பார்ப்போம். பாங்கு வீதம் மாறாதிருக்க, அங்காடிக் குறுங்கால வட்டி வீதங்களை ஒரு திசையில் திருப்பவேண்டுமானால், முதலில் பாதிக்கப் படும் வீதம் கருவூல உண்டியல் வீதமாகும். உதாரண மாக, குறுங்கால வீதங்களை உயர்த்த வேண்டுமானால்,

அங்காடியில் பணம் தொடர்ந்து அரிதாகும்படி செய்யப்பட வேண்டும். இதனால் கழிவகங்கள் இங்கிலாந்து பாங்கிடம் அடிக்கடி நிறையக் கடன் வாங்க வேண்டிய கட்டாயம் ஏற்படும். இது கருவூல உண்டியல்களையும் குறுங்கால பாண்டுகளையும் வாங்குவதற்குப் படும் கடன்களின் பேரில் கழிவகங்கள் கொடுக்கவேண்டிய வட்டியை உயர்த்தும். இதனால் அவைகளின் இலாபம் பாதிக்கப்படும். ஆகவே, கழிவகங்கள் தம் கருவூலக் கழிவு வீதத்தையும் உயர்த்தும். இதனால் அங்காடியில் ஏற்படும் பணமுடை காரணமாகக் கழிவகங்கள் தாங்கள் வணிக பாங்குகளிடமிருந்து வாங்கும் கடனுக்கு மேலும் உயர்ந்த வட்டி கொடுக்க வேண்டிய நிலை ஏற்படும். இவை வாங்கும் கடனில் ஏறத்தாழப் பாதிக்குத் தீர்வக பாங்குகளிடமிருந்து பெறப்படுகிறது. ஆனால், தீர்வக பாங்குகள், வாடிக்கையாகக் கழிவகங்களுக்குக் கொடுக்கும் பணத்தின் மேல் வசூலித்த வட்டி வீதத்தை, கருவூல உண்டியல் கழிவு வீதம் மாறும் போதெல்லாம் மாற்றுவதில்லை. அது பாங்கு வீதம் மாறும்போதுதான் மாற்றப்படும்.

இங்கிலாந்து பாங்குக்குக் கழிவகங்களின் கொள்கைகளை அல்லது நடவடிக்கைகளைத் தணிக்கை செய்ய அல்லது மேற்பார்வை செய்ய அதிகாரம் கிடையாது. ஆனால், பண அங்காடி நடவடிக்கை மூலம் நெருங்கிய அன்றாடத் தொடர்பு ஏற்படுகிறது. ஒவ்வொரு வாரமும் பாங்கின் கவர்னர் அல்லது உதவி கவர்னர், லண்டன் கழிவக மார்க்கெட் சங்கத்தின் சேர்மன், உதவி சேர்மன் ஆகியோருடன் கூடிப் பேசுவது வழக்கம். தவிர ஒவ்வொரு கழிவகமும் பாங்குக்கு மாதந் தோறும் ஒரு மாத அறிக்கையை (Monthly Statement) அனுப்புகிறது. இது கழிவகத்தின் நிதி ஆட்சியை விளக்கும். அதோடு, அரசாங்க செக்கூரிட்டிகளில் நடத்திய பேரங்களை விளக்கும் ஓர் அறிக்கையை மூன்று மாதத்துக்கொருமுறை அனுப்பும். ஆகவே, கழிவு அங்காடி என்ன செய்து கொண்டிருக்கிறது என்பதும், ஒவ்வொரு கழிவகமும் எந்த நிலையில் இருக்கிறதென்பதும் பாங்குக்கு விவரமாகத் தெரியும். ஒரு வகையில் கழிவகங்களின் நடவடிக்கையைப் பொதுப்பட பாங்கு மேற்பார்வை செய்கிறதெனலாம். பாங்கு மறு கழிவு வசதியை மறுதளிக்கக் கூடுமாகையினால் பாங்குக்குக் கட்டுப் பட்டே கழிவகங்கள் தொழில் செய்ய வேண்டியிருக்கின்றன. பாங்கு இப்படிப் பொதுப்பட மேற்பார்வை செய்தபோதிலும் கழிவக அங்காடியின் சிறப்புகளை அது அறியும். வேறு எந்தப் பண அங்காடி அங்கமும் செய்யமுடியாத ஒரு பணியை

ஒழுங்காகவும், திறமையாகவும், கழிவகங்கள் செய்து, அரசாங்க நிதித் தேவைகளைப் பூர்த்தி செய்து, பண்டுகளுக்கும் நிதி மையமாக லண்டன் நகரத்தை நிலை நிறுத்துகின்றன என்பதைப் பாங்கு உணர்ந்தேயுள்ளது. ஆகவே பாங்கு அவைகளைத் தன் குழந்தைகளைப் போலப் பாவித்துத் தம் சிறப்பான பணியை ஆற்றி வர உதவி செய்கிறது.

### 4. பாங்கும் ஏற்பகங்களும் (Accepting houses)

அடுத்தபடி பாங்குக்கும் ஏற்பகங்களுக்கும் உள்ள தொடர்பைப் பார்ப்போம். ஏற்பகங்கள் லண்டன் தீர்வக பாங்குகளின் வாடிக்கைக்காரர்கள். ஏற்பகங்களின் இருப்பு நிலைக் குறிப்பில் காணும் 'ரொக்கம்' இந்தப் பாங்குகளிடத்தில் வைத்திருக்கும் இருப்புகளே ஆகும். ஆனால், பழைய தொடர்பு காரணமாக, ஏற்பகங்கள் இங்கிலாந்து பாங்கினிடமும் கணக்கு வைத்திருக்கின்றன. ஏற்பகங்கள் செய்யும் பணி உண்டியல்களை ஏற்பதாகும். அவை ஏற்பதால் தான் கழிவக அங்காடியில் வியாபாரிகள் நிதியைப் பெற முடிகிறது. ஏற்பகம் ஏற்ற ஓர் உண்டியல் இங்கிலாந்து பாங்கில் மறு கழிவு செய்வதற்குத் தகுதியுடையது. ஆகவே ஒவ்வோர் ஏற்பகமும் தன் செல்வ நிலையைப்பற்றி இங்கிலாந்து பாங்குக்கு நம்பிக்கை ஏற்படும்படி நடக்க வேண்டியிருக்கிறது. தன் மூலதன ரொக்க சக்திக்கு மிஞ்சித் தொழில் செய்வதில்லை என்று பாங்குக்கு நம்பிக்கை உண்டாக்க வேண்டும். அங்காடியில் ஏற்பக உண்டியல்களை வாங்கிப் பார்த்து, பாங்கு ஏற்பகத்தின் நிலையை அறிய முயல்கிறது. இங்கிலாந்து பாங்கின் கவர்னர் மூலம் சான்சலருடைய கருத்து அவைகளுக்குத் தெரிவிக்கப் படுகிறது.

### பாங்கின் சாதாரண பாங்கு வேலை

இங்கிலாந்து பாங்கு சொற்ப அளவுக்குச் சாதாரண பாங்கு வேலையும் செய்கிறது. சில வர்த்தக நிறுவனங்களுக்கு மட்டும் முற்காலப் பழக்கத்தினால் பாங்கில் இன்றும் கணக்கு வைக்கப்பட்டிருக்கின்றது. ஆனால் இந்த நூற்றாண்டில் இவ்விதத் தொழில் சுருங்கிக்கொண்டே வந்துள்ளது. புதிதாகத் திறக்கப்படும் கணக்குகள் தர்ம காரியம் அல்லது பொதுநலம் சம்பந்தமுடைய கணக்குகளே யாகும். இங்கிலாந்து பாங்கின் அலுவலர்களுக்குமட்டும் நபர் கணக்கு (Personal Account) உண்டு. இது சாதாரண பாங்கு முறைகளை 'அவர்கள்

அறிந்து கொள்ள வாய்ப்புத் தருகிறது. இந்தக் கணக்குகள் பாங்கின் இருப்பு நிலைக் குறிப்பில் 'கடலுக்கப்பாலுள்ள மைய பாங்குகளின்' (Overseas Central Banks) கணக்குகளோடு சேர்த்துக் காட்டப்படுகிறது. ஆனால் இதைத் தனியே காட்டுவது நல்லது என்பது பலருடைய கருத்து.

**ஆள் நியமன ஆலோசனை**

பாங்கு மற்றொரு பணியையும் சமீப காலத்தில் செய்து வருகிறது. நிதித்துறையில் பணியாற்றுபவர்களின் திறமைகள் பாங்குக்குத் தெரியுமாதலால், யாருக்காவது அலுவலர் வேண்டும்போது, பாங்கை ஆலோசனை கேட்பதுண்டு. பாங்கு இவ்வித யோசனையை இப்போது கூறிவருகிறது.

1946-ல் பாங்கு நாட்டுடைமையாக்கப்பட்ட பின், மிகவும் குறைந்த விவரங்களையுடைய சுருக்கமான ஆண்டு அறிக்கையை (Annual Report) வெளியிட்டு வருகிறது. இதில் காணப்படும் விவரம் போதாதென்று குறை கூறப்படுகிறது. 1844 ஆவது ஆண்டுச் சட்டத்தில் இருந்து வாராந்தர பாங்கு ரிட்டர்ன் (Return) ஒன்றும் வெளியிடப்படுகிறது. இந்த வாராந்தர இருப்புநிலைக் குறிப்பு வெளியீட்டிலாக்கா, பாங்கிலாக்கா ஆகிய இரண்டின் பொறுப்பு சொத்துகளைப் பிரித்துக் காட்டுகிறது. வெளியீட்டு இலாகா பகுதி நோட்டு வெளியீடு எப்படி 1844 ஆவது ஆண்டுச் சட்டப்படி நடைபெறுகிறது என்பதைக் காட்டும். பாங்கு இலாகா பகுதி சாதாரண வணிக பாங்கு முறையில் இங்கிலாந்து பாங்கின் நடைமுறையைக் காட்டும். நாட்டின் வெளியீட்டு பாங்கு என்ற காரணத்தினாலும், அரசாங்கத்தின் பாங்கு என்ற காரணத்தினாலும் வாராந்தர இருப்புநிலைக் குறிப்பு அவசியமெனக் கருதப்பட்டது.

1844 ஆவது ஆண்டுச் சட்டத்தின் கருத்து நிறைவேற இவ்விதமாக இரு கூறான இருப்புநிலைக் குறிப்பு அவசியமாக இருக்கலாம். ஆனால், இப்போது நிலை மாறிவிட்டது. பொன் ரிசர்வுக்கும் நோட்டுக்கும் தொடர்பு அறுபட்டு நெடுநாளாகி விட்டது. பாங்குக்கும் அரசாங்கத்துக்கும் உள்ள தொடர்பு இப்போது பாங்கர், வாடிக்கைக்காரர் என்ற தொடர்பளவில் இல்லை. ஆகவே, பழைய முறையில் குறிப்பு வெளியிட இப்போது அவசியமில்லை. 1931-ல் மாக்மில்லன் கமிட்டி இம்முறையைக் கைவிடும்படி கூறியும் இன்னும் இருந்து வருகிறது. பாங்கு ரிட்டர்ன் இப்போது பழைய முறையில் இருந்து வருவதற்குக் காரணம், பாங்கு தன் விருப்பப்படி

ஆளக்கூடிய வருமானத்தைக் கணிக்க வசதியாக இருப்பது. இந்தப் பயனைத் தவிர, பணத்துறை சம்பந்தமாக இந்தக் குறிப்புக்கு யாதொரு சிறப்பும் இல்லை.

**நாட்டுக்கு வெளியிலுள்ள பணிகள்**

இனி அயல்நாட்டுத் தொடர்பு சம்பந்தமான பாங்குப் பணிகளைப் பார்ப்போம்.

ஐக்கிய ராஜ்யத்துக்கும் (United Kingdom) புற உலகுக்கு மிடையில் நிகழும் பேரங்கள் சம்பந்தமாக பாங்குக்கு 5 பணிகள் உள்ளன :

(1) மாற்றுச் சமன்செய் கணக்கை (Exchange Equalisation Account) நிருவகிப்பது.

(2) அயல்நாட்டு மாற்றுக் கட்டுப்பாடு (Foreign Exchange Control) நிர்வாகம்.

(3) மற்ற ஸ்டெர்லிங் வட்டார (Sterling Area) பணத் துறை அதிகாரிகளோடு தொடர்பும் பேரங்களும்.

(4) ஸ்டெர்லிங் வட்டாரத்துக்குப் புறம்பான நாடுகளின் மைய பாங்குகளோடு தொடர்பும் பேரங்களும்.

(5) சில பன்னாட்டு நிதி நிறுவனங்களின் காரியங்களில் ஈடுபாடு.

**(1) மாற்றுச் சமன்செய் கணக்கு (Exchange Equalisation Account)**

மாற்றுச் சமன்செய் கணக்கு 1932ஆம் வருஷத்திய நிதிச் சட்டத்தின் கீழ் (Finance Act of 1932) நிறுவப்பட்டது; கருவூலத்தின் அதிகாரத்துக்குட்பட்டது. நோக்கம் ஸ்டெர்லிங் குடைய மாற்று மதிப்பு அன்றாடத் தேவை அளிப்பு மாறுதல் காரணமாகச் சலனமடையாமல் செய்வதாகும். இதற்காக இக் கணக்கு பொன்னையும் அயல்நாட்டுச் செலாவணிகளையும் வாங்கும் அல்லது விற்கும். 1946ஆம் ஆண்டு நிதிச் சட்டம் (Finance Act of 1946) நாட்டின் நலத்துக்காக வெளிச் செலுத்து வசதிகளைச் (means of payments abroad) காப்பதும் ஆள்வதும் ஒரு நோக்கமாகக் கூறிற்று. இக் கணக்கு நாட்டினுடைய பொன்னுக்கும் அயல்நாட்டுச் செலாவணிக்கும் காவலனாக இருக்கிறது. கருவூலத் தொகுப்பு நிதியிலிருந்து (Consolidated Fund) ஸ்டெர்லிங் உருவில் இக் கணக்குக்குக் மூலதனம் (Capital)

தரப்பட்டது. நடைமுறை இருப்பு (working balance) போக, மீதி இருக்கும் ஸ்டெர்லிங் சொத்து அனைத்தும் கருவூல உண்டியல்களில் (குழாய் மூலம்) முதலீடு செய்யப்படுகிறது. அதாவது உண்மையில் ஸ்டெர்லிங் மீண்டும் எக்ஸ்செக்கருக்குக் கடன் கொடுக்கப்படுகிறது. பொன் வாங்கவோ, அயல்நாட்டுச் செலாவணி வாங்கவோ வேண்டும்போது மீண்டும் எக்ஸ்செக்கரிடமிருந்து வாங்கிக்கொள்கிறது. பொன்னையோ அயல்நாட்டுச் செலாவணியையோ விற்றால் கிடைக்கும். ஸ்டெர்லிங்கை எக்ஸ்செக்கருக்குக் (ரெவின்யூ இலாகாவுக்குக்) கடனாகக் கொடுக்கிறது. ஆகவே, இந்தக் கணக்கின் பேரங்கள் எக்ஸ்செக்கரின் நிதி நிலையைப் பாதிக்கிறது.

இந்தக் கணக்கைக் கருவூலத்தின் சார்பில் இங்கிலாந்து பாங்கு நிருவகிக்கிறது. பாங்கின் வேலை அரசாங்கத்தின் மாற்று வீதக் கைக்கோளைப் (Exchange Rate Policy) பொறுத்தது. பன்னாட்டுப் பணத்துறை நிதியின் (International Monetary Fund) அங்க நாடாக யு.கே. இருக்கவேண்டுமானால், நிதிக்குத் தெரிவித்துள்ள மாற்று வீதத்திலிருந்து 1 சதவீதத்துக்குமேல் ஏறாமலும் இறங்காமலும் பார்த்துக்கொள்ள வேண்டும். நிதிக்கு அறிவிக்கப்பட்ட மாற்று வீதம் £ 1 = 2.80 டாலராக இருந்தால் நிகழ் வீதம் (Spot Rate) 2.78 வீதத்துக்குக் கீழ் விழாமலும், 2.82 வீதத்துக்கு மேல் ஏறாமலும் பார்த்துக்கொள்ள வேண்டும். இதற்காக மாற்றுச் சமன்செய் கணக்கு அவ்வப்போது அயல் நாட்டுச் செலாவணியை வாங்கவும் விற்கவும் வேண்டும். வீதம் 2·8-க்குமேல் ஏறினால் மாற்றுச் சமன்செய் கணக்கு ஸ்டெர்லிங்கை விற்க முன்வரவேண்டும். குறைந்தால் ஸ்டெர்லிங்கை வாங்க முன்வரவேண்டும். இந்த இரண்டு எல்லைகளுக்குள் இருக்கும்படி இங்கிலாந்து பாங்கு நடவடிக்கைகளை எடுத்துக்கொள்கிறது மாறுதல்கள் இந்த எல்லைகளுக்குள்ளே இருக்கும்படி பார்த்துக்கொள்வது பாங்கின் கடமை.

இந்தக் கணக்கை நிருவகிப்பதன் மூலம் பாங்கு அயல்நாட்டு மாற்று அங்காடிகளில் தலையிடுகிறது. அரசாங்கம் அனுமதிக்காத வீதத்தில் வெளியில் நடக்கும் மாற்றுகளைச் சீர் செய்வது தன் கடமையல்லவாயினும் பாங்கு தலையிடுவதுண்டு. ஏனெனில் இவ் வீதங்கள் வெளி நாடுகளில் ஸ்டெர்லிங்கிலுள்ள நம்பிக்கையைப் பாதிக்கின்றன. எதிர் நோக்கிய மாற்றுவீத (Forward Exchange Rate) நெளிவுகளையும் குறிப்பிட்ட எல்லைகளுக்குள் இருக்கும்படி செய்ய பாங்கு எதிர்நோக்கிய பேரத்தில் ஈடுபடுவதுண்டு.

**மாற்றுக் கட்டுப்பாடு (Exchange Control)**

அடுத்தபடி, பாங்கின் மாற்றுக் கட்டுப்பாடு வேலைகளைப் பார்ப்போம். 1947ஆம் ஆண்டின் சட்டம் ஒன்று, குடிகள் வெளிநாட்டினருக்குச் செலுத்துவது அல்லது அவர்களுக்கு வரும் அயல்நாட்டுச் செலாவணிகளைச் செலவிடுவது சம்பந்தமாகக் கட்டுப்பாடுகள் செய்யப் பரந்த அதிகாரத்தைக் கருவூலத்துக்குக் கொடுத்தது. இந்தக் கட்டுப்பாட்டை இங்கிலாந்து பாங்கு தான் நிருவகிக்கிறது. இந்தச் சட்டத்தின் கீழ், அனுமதிக்கப் பட்ட பாங்குகள் மட்டும்தான் அயல்நாட்டுச் செலாவணியில் பேரம் செய்யலாம். சட்டம் அனுமதித்த பேரங்களில் ஈடுபடச் சாதாரணப் பாங்குகளுக்கு ஓரளவு உரிமையை இங்கிலாந்து பாங்கு தந்துளது. ஆனால், இவை எவ்வளவு அயல்நாட்டுச் செலாவணியைக் கையில் வைத்திருக்கலாம் என்பதையும் கட்டுப்படுத்துகிறது.

**ஸ்டெர்லிங் வட்டார நடவடிக்கைகள் (Sterling Area Operations)**

மூன்றாவதாக, 'ஸ்டெர்லிங் வட்டார' பேரத்தில் பாங்குக் குள்ள பணிகளைக் கவனிப்போம். இங்கிலாந்து வாசிகள் செய்யும் எல்லா அயல்நாட்டுப் பேரங்களுமே மாற்றுச் சமன்செய் கணக்கிலோ, மாற்றுக் கட்டுப்பாட்டிலோ அகப்படுவதில்லை. ஏனெனில், ஸ்டெர்லிங்கைத் தம் பணத்துக்கு அடிப்படையாக வைத்திருக்கும் நாடுகளுடன் ஏற்படும் சில பேரங்கள் ஸ்டெர்லிங் வட்டார பேரங்கள் என்ற வகையைச் சேர்ந்தவை யாகையால், அவை தனி வகையானவை. இந்த ஸ்டெர்லிங் வட்டார பேரங்கள் இங்கிலாந்தின் நீர்மையைப் (Liquidity) பாதிக்கக்கூடும். ஸ்டெர்லிங் வட்டார பேரங்கள் காரணமாக இங்கிலாந்து பாங்குகளில் வைப்பும், கருவூல உண்டியல் போன்ற இங்கிலாந்து அரசாங்க செக்யூரிட்டிகளும் அயல்நாட்டினர் கைக்கு மாறும். ஆகவே, இங்கிலாந்து பாங்குக்கும் ஸ்டெர்லிங் வட்டார மைய பாங்குகளுக்கும் நெருங்கிய பிணைப்பு ஏற்படுகிறது. ஸ்டெர்லிங் வட்டார நாடுகள், வட்டாரத்துக்குப் புறம்பான நாடுகளோடு ஏற்படும் பாக்கிகளைப் பைசல் செய்வதற்கு வேண்டிய பொன்னையும் அயல்நாட்டுச் செலாவணிகளையும் இங்கிலாந்து பாங்கிடம் வாங்கும். இங்கிலாந்து பாங்கும் அவைகளிடமிருந்து வாங்கும். ஸ்டெர்லிங் வட்டார மைய பாங்குகள் இங்கிலாந்தில் வைத்திருக்கும் ஸ்டெர்லிங் தொகையைக் கருவூல உண்டியல், செக்யூரிட்டிகள் ஆகியவைகளில் முதலீடு செய்கின்றன. காமன்வெல்த் அரசாங்க பாண்டுகளை இலண்டன் பண

அங்காடியில் வெளியிடுவது (issue) சம்பந்தமாகவும் இங்கிலாந்து பாங்கு யோசனை கூறுகிறது. ஸ்டெர்லிங் வட்டார நாடுகளுக்கும், வட்டாரத்துக்குப் புறம்பான நாடுகளுக்கும் இடையில் நிகழும் பேரங்களின் மாற்றுக் கட்டுப்பாடு சம்பந்தமாக, இங்கிலாந்து பாங்குக்கும் ஸ்டெர்லிங் வட்டார மைய பாங்குகளுக்கும் அன்றாடம் தொடர்பு இருந்தபடி இருக்கிறது. ஸ்டெர்லிங் வட்டாரத்தில் எந்தப் பிரச்சினையிலும் ஒருமைப்பாடு வேண்டும் என்பதற்காக இவ்விதத் தொடர்புகள் அவசியமாகின்றன.

**அயல்நாட்டுப் பாங்குகளுடன் தொடர்பு**

நான்காவது, இங்கிலாந்து பாங்கு, வட்டாரத்துக்கு வெளியிலுள்ள அமெரிக்க, கனடா, ஐரோப்பிய மைய பாங்கு களுடனும் நெருங்கிய தொடர்புடையது. மற்ற மைய பாங்கு களுக்கு இங்கிலாந்து பாங்கு பலவிதப் பணிகளைச் செய்வதனால் இத்தொடர்பு ஏற்படுகிறது. உதாரணமாக, அவைகளின் ஸ்டெர்லிங் தொகையை இது நிருவகிக்கிறது.

**பன்னாட்டு நிதி நிறுவனங்களுடன் தொடர்பு**

இங்கிலாந்து பாங்கு பன்னாட்டு நிதி நிறுவனங்களோடு (International financial institutions) நெருங்கிய தொடர் புடையது. இந்நிறுவனங்கள் பெரும்பாலும் பல அரசாங்கங் களின் ஒப்பந்தத்தாலுண்டானவை. இவைகளில் இங்கிலாந்தின் பிரதிநிதியாக இருப்பவர் நிதி மந்திரி (Chancellor) அல்லது வேறு மந்திரி. இங்கிலாந்து பாங்கு, கருவூலத்தோடியைந்து இந்த நிறுவனங்களின் அமைப்பிலும் விவகாரங்களிலும் பங்கெடுத்துக் கொள்கிறது. சர்வதேசப் பணத்துறை நிதி (I. M. F.), சர்வதேச பாங்கு (I. B. R. D.), ஐரோப்பியப் பொருளாதார ஒத்துழைப்பு நிறுவனம் (O.E.E.C.) ஆகியவற்றில் பாங்கு முக்கியமான இடத்தைப் பெற்றிருக்கிறது. பன்னாட்டுத் தீர்வக பாங்கிலும் (Bank for International Settlements) இங்கிலாந்து பாங்கு அங்கம் வகிக்கிறது. இது ஐரோப்பியப் பாங்குகளின் குறுங்கால அயல்நாட்டுச் செலாவணித் தேவையை நிறைவேற்ற ஏற்பட்ட நிறுவனம். இது O. E. E. Cக்கு ஏஜெண்டாக ஐரோப்பியச் செலுத்து யூனியனை (European Payments Union) நிருவகிக்கிறது.

மேற்கண்ட புறத் தொடர்புகள் ஆங்கில அரசாங்கத்தின் புறப் பொருளாதாரக் கைக்கோளுடன் (external economic policy) பல வகைகளில் தொடர்புடையன. ஆகவே. பாங்குக்கும்

அரசாங்கத்தின் அயல்நாட்டுத் தொடர்புடைய அங்கங்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்க வேண்டியது அவசியமாகிறது.

**இங்கிலாந்து பாங்கு எப்படிப் பொருளாதாரத்தை வழிப்படுத்துகிறது (How the Bank of England influences the the economy)**

பாங்கு, பொதுத்துறைக்கும் தனியார் துறைக்கும் இடையி லிருந்து கொண்டு பண அங்காடியில் நடவடிக்கைகளை எடுக்கிறது. இங்கிலாந்து பாங்கில் தமக்குள்ள வைப்பு மூலமே இவ்விரு துறையினரும் ஒருவர்க்கொருவர் செலுத்த முடியுமாத லால், பாங்கு இருவருடனும் தொடர்பு உடையதாகிறது. இந்த விதமாகத் தனியார் துறையில் ரொக்க இருப்புக் குறையலாம். இப்படிக்கின்றி, இங்கிலாந்து பாங்கே செக்கூரிட்டிகளை விற்பது மூலம் இந்தவித விளைவை உண்டாக்கக்கூடும். இந்த விதமாகச் செய்து பாங்கு தான் விரும்பும் வட்டி வீதத்தை (Bank Rate செயல்முறைக்குக் கொண்டு வந்து மற்ற அங்காடி வீதங்களை) நிர்ணயிக்கிறது. தவிர, நாட்டுக் கடனை (National Debt) நிர்வாகம் செய்யும் வழியாகவும் நீர்மைச் சொத்துகளின் வியாபகத்தை மாற்றி வட்டி வீதங்களையும் தனியார் தொகுதியின் நீர்மையையும் மாற்றக்கூடும். இவ்விதமாக நாட்டின் நீர்மையைப் பாதிக்கும் சக்திக்கு அடிப்படையானவை நான்கு: (1) பாங்கின் கடனே (debt) நாட்டிற்கு ரொக்கம் (cash) ஆக இருப்பது. (2) பாங்கே அரசாங்கத்தின் இறுதி நிலைக் கடனீவோனாக இருப்பது. (3) பாங்கே பாங்குத் திட்டத்தின் இறுதிநிலைக் கடனீவோனாக இருப்பது. (4) பாங்கே நாட்டுக் கடனை நிர்வகிப்பது.

இங்கு நாட்டுக் கடன் (national debt) என்ற சொல் பொதுத்துறையின் கடன் பொறுப்புகள் (பொதுத் துறையிலேயே அடங்கிய பொறுப்புப் போக) அனைத்தையும் குறிப்பிடுவதாகக் கொள்ள வேண்டும். ஆகவே, நாட்டுக் கடனில் ரொக்கம் (cash) முழுவதும் அடங்கும். ரொக்கம் என்பது பாங்குகளுக்குரிய இங்கிலாந்து பாங்கில் வைப்பும், பாங்குகளின் கையிலுள்ள நோட்டுகளும் காசுகளும், மக்களிடம் புழங்கும் நோட்டுகளும் காசுகளும் ஆகும். ரொக்கமென்பது உண்மையில் ஒருவகை வட்டியில்லா அரசாங்கக் கடன். இதைக் கொண்டு மக்கள் தங்கள் பொறுப்புகளைத் தீர்க்கின்றனர். இங்கிலாந்து பாங்கு நோட்டுக்குக் காப்பாக வைத்திருக்கும் செக்கூரிட்டிகள், கருவூல உண்டியல்கள் ஆகியவை நாட்டுக் கடனில் சேரா. வேண்டுமானால் நாம் நிகர நாட்டுக் கடன் என்ற தொடரை ஆளலாம்.

நாட்டின் கடனை நாம் நான்கு வகைகளாகப் பிரிக்கலாம். அவையாவன : 1. ரொக்கம். 2. கருவூல உண்டியல்கள். 3. குறுங்கால பாண்டுகள். 4. நெடுங்கால பாண்டுகள். இங்கிலாந்து பாங்கு நாட்டுக் கடன் நிருவாகியாக இந்த நான்கு இனங்களின் வியாபகத்தை மாற்றுவதன் மூலம் நாட்டின் ரொக்கத் தன்மையைப் பாதிக்கிறது. உதாரணமாக, பாங்கு கருவூல உண்டியல்களை வாங்கி, ஈடாகக் குறுங்காலப் பாண்டு களை விற்குமானால், இது மொத்தக் கடனை மாற்றாவிடினும் தனியார் துறையில் உள்ள கடனை, அண்மை முதிர்வுடைய சொத்துகளைக் குறைத்து, ரொக்கத் தன்மையைக் குறைக்கிறது. இப்படியே பாங்கு குறுங்காலப் பாண்டுகளை வாங்கி நெடுங்கால பாண்டுகளை விற்றால் தனியார் துறை மேலும் ரொக்கத் தன்மையை இழக்கும். பாங்கு குறுங்காலப் பாண்டுகளை அல்லது உண்டியல்களை விற்று நெடுங்காலப் பாண்டுகளை வாங்கினால் முதிர்வுக் காலம் குறைக்கப்படுகிறது. இதனால் தனியார் துறை முன்னைவிட அதிக ரொக்கத்தன்மை அடையும்.

ரொக்கம் தவிர்த்த இதர மூன்று வகைக் கடன்களிலும் அநேக உப வகுப்புகள் உள்ளன. ஆகையால், ஒவ்வொரு வகுப்பிலும் ஒன்றுக்கொன்று மாற்றுவதனால் ரொக்கத்தன்மை பாதிக்கப்படலாம். ஆனால், மேற்கண்ட நான்கு இனங்களே பாங்குத் திட்டத்தில் நெடுங்காலமாகக் கருதப்பட்ட முக்கிய இனங்கள். முதல் மூன்றினங்கள் பாங்குத் திட்டத்துக்கு முக்கியமான நீர்மைச் சொத்துகள் என்று முன்னர்க் கூறினோம். அவைகளின் முக்கியத்துவம் 8% ரொக்கவிதியாலும் 28% நீர்மை விதியாலும் வற்புறுத்தப்படுகிறது. இந்த விதிகளுள்ள வரையிலும் பாங்கின் செலவாக்குக்குக் குறைவில்லை. இம் மூவினங்களின் கிடைப்பை மாற்றி நாட்டின் நீர்மையை மாற்ற முடியும்.

முன்னே பாங்கு தனியார் துறைக்கும் பொதுத்துறைக்கும் இடையில் இருந்து அங்காடியில் நடவடிக்கை எடுக்கிறது என்று கூறியது இப்படி நாட்டுக் கடன் வகைகளுக்குள் மாறுதல் உண்டாக்குவதைக் குறித்தேயாகும். எப்படிப் பாங்கு இவை களுக்குள் மாறுதலை உண்டாக்குகிறதெனில், அவைகளின் மேல் கிடைக்கும் வட்டி வருவாயை மாற்றுவதன் மூலமேயாகும். ஆனால், எவ்வளவு தூரம் பாங்கு வட்டி வீதங்களை மாற்ற முடியும் என்பது வேறு விஷயம்.

# 28. இலண்டன் தீர்வுசெய் பாங்குகள்

(London Clearing Banks)

இங்கிலாந்து, வேல்ஸ் இராச்சியங்களில் பாங்குத் தொழில் பெரும்பாலும் இலண்டன் தீர்வகத்தில் (London Clearing House) அங்கம் வகிக்கும் 11 முக்கிய பாங்குகளின் கையிலிருக்கிறது. இந்த 11இல் பார்க்ளேஸ், இலாயிட்ஸ், மிட்லந்து, நேஷனல் புரோவின்சியல், வெஸ்ட்மின்ஸ்டர் ஆகிய ஐந்தும் "பெரிய ஐந்து" (Big Five) எனப்படும். நாடு முழுவதும் அவைகளுக்குக் கிளைகள் இருக்கின்றன.

**தீர்வுசெய் பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்பில் இனங்கள்**

| பொறுப்புகள் | £ மிலியன் | சொத்துகள் | £ மிலியன் |
|---|---|---|---|
| நடப்புக் கணக்கு | — | கையிருப்பு ரொக்கம் | — |
| வைப்புக் கணக்கு | — | இங்கிலாந்து பாங்கில் இருப்பு | — |
| பிற கணக்கு | — | அழைப்பு நோட்டீஸ் பணம் | — |
| முதல் | — | உண்டியல் கழிவு | — |
| ரிசர்வு | — | கருவூல உண்டியல்கள் | — |
| | | பிற உண்டியல்கள் | |
| | | **மொத்த நீர்மைச் சொத்துகள்** | — |
| | | பிற பாங்குகளிடம் இருப்பு நடப்பிலுள்ளன | — |
| | | முதலீடுகள் (வாங்கிய விலை) | — |
| | | செக்கூரிடிகள் | — |
| | | பிற முதலீடுகள் | — |
| | | அட்வான்சு | — |
| | | இணைந்த கம்பெனிகளில் முதலீடு | — |
| | | இருப்பிடம். | — |

பொறுப்புப் பகுதி (Liability side) செல்வாதாரம் (resources) வந்த வழிகளைக் காட்டுகிறது. சொத்துப் பகுதி அது ஆளப்பட்ட வழிகளைக் காட்டுகிறது. முதலில் செல்வாதாரம் வரும் வழிகளைப் பார்ப்போம். இந்தப் பாங்குகளின் முதன்மை யான வேலை, வைப்புகளைப் (deposits) பெறுவதும், தேவை வைப்பாயின் உடையோர் வேண்டும்போது ரொக்கம் தருவதும் பிறருக்கு மாற்றுவதும், தவணை வைப்பாயின் குறித்த முதிர்வுத் தேதியில் தருவதும் ஆகும். வைப்புகள் பெரும்பாலும் நடப்புக் கணக்குகளில் (Current Account) இருக்கும்.

இந்த நடப்புக் கணக்கு வைப்புகளோடு 7 நாள் நோட்டீசு கொடுத்தே எடுக்கக்கூடிய தவணை வைப்புகளை (Fixed Deposits or Deposit Account Deposits) யும் பாங்குகள் பெறுகின்றன. இவ்வகை வைப்புகளுக்கு வட்டி உண்டு. இவ் வட்டி சாதாரணமாகப் பாங்கு வீதத்துக்கு (Bank Rate) இரண்டு சதவீதம் குறைவாகவே இருக்கும். பாங்குகள் தரும் வட்டி, வேறு வழிகளில் சம்பாதிக்கக்கூடியவருமானத்தை விடக் குறை வாகஇருந்தாலும், பாங்கு வைப்புகள் நீர்மையும் வசதியும் அதிகமுடையன வாகையால், மக்கள் பாங்கில் பணத்தை வைக்க விரும்புகிறார்கள். தவணை வைப்புகள் செக்குகளுக்கு உட்பட்டவை அல்லவாயினும், எப்பொழுதாவது வைப்புக் கணக்கில் இருந்து நடப்புக் கணக்குக்கு மாற்ற விரும்பினால் பாங்குகள் மறுப்பதில்லை. (ஆனால், வைப்பாளிகள் கடந்த காலத்துக்குரிய வட்டியை இழக்க நேரிடும்). ஆகவே, வைப்பாளிகள் இந்தப் பணத்தையும் ரொக்கமாகவே கருத முடிகிறது. ஆகவே, பொருளாதார நடவடிக்கை எடுக்கும்போது வைப்புக் கணக்கில் உள்ள தொகையையும் நாம் ரொக்கப் பண மாகக்கருத வேண்டியதாகிறது. வைப்பு கணக்குக்கும் நடப்புக் கணக்குக்கும் வேறுபாடு அமெரிக்காவில் முக்கியம். அங்கு நோட்டீசுக் காலம் அதிகம். வைப்புக் காலங்களும் வட்டி வீதங்களும் பலவகையானவை. இங்கிலாந்தில் ஏழு நாள் நோட்டீசு தான் விதி. அதுவும் வற்புறுத்தப்படுவதில்லை. வைப்புக்காகப் போட்டியிருந்தாலும் இங்கிலாந்திலுள்ள தீர்வக பாங்குகள் சிலவே யாதலால் அவை தமக்குள் கலந்து, நல ஒருமைப்பாட்டுடன் நடந்து கொள்கின்றன. அவைகளுக்குள் வட்டி வீதத்தைப் பற்றியும், நோட்டீசைப் பற்றியும் கட்டுப்பாடு இருந்து வருகின்றது. சிறு கணக்குகள் சில இருந்தபோதிலும் நெடுங்காலமாகப் பெரிய பாங்குகள் சிறு சேமிப்புகளைக் கோருவதில்லை. சமீப காலத்தில் இதைக் கொள்கையாகப் கூடப் பின்பற்றி வருவதால் சிறு சேமிப்புகள் சேமிப்பு

பாங்குகளுக்கும், கட்டடச் சங்கங்களுக்கும் செல்கின்றன. இப் போக்கு அரசாங்கத்தின் பணத்துறை நடவடிக்கைகளின் சக்தியைப் பாதிக்கக்கூடிய ஒன்று. வைப்புகளைக் கோரும் வட்டாரத்தைச் சுருக்கி விட்டதனால் கடன் கொடுக்கும் எல்லையையும் சுருக்கி விட்டதாகிறது.

தீர்வக பாங்குகள் வைப்புக்கு வட்டி மூலம் போட்டியிடாத காரணம், வேறு வகைகளில் அவைகள் வாடிக்கைக்காரரைக் கவர முடிவதாகும். வாடிக்கைக்காரர்களை முக்கியமாகக் கவர்வது, பாங்கினுடைய பலவிதப் பணிகளே. தனக் காபந்து வசதி, முதலீடு ஆலோசனை வசதி, அவசரக் கடன் வசதி, செக்கு வசதி முதலியவை காரணமாக மக்கள் பாங்குகளை நாடுகின்றனர். தவிர, பாங்கிருப்பு (Bank Balance) மற்றெதையும் விட நீர்மை யுடையது. இவ்வகைக் கவர்ச்சிகளே வாடிக்கை காரர்களைப் பிணிக்கப் போதுமானவை.

அடுத்தபடி சொத்துகளின் தன்மையைப் பார்ப்போம். பாங்கில் வாடிக்கைக்காரருக்குரிய இருப்புகள் பாங்குகளி னுடைய பொறுப்புகள். பாங்குகளின் பொறுப்புகளான வைப்பு, மூலதனம், ரிசர்வு ஆகியவைகளுக் கெதிராகப் பாங்குகளிடம் சொத்துகள் (assets) உள்ளன.

பாங்குகளின் சொத்துகளில் சிறப்பானவை வரவு உரிமைகள் (claims) ஆகும். இவ்வரவுகள் தனியாரிடமிருந்தும் அரசாங்கத் திடமிருந்தும் பெறவேண்டியதாகவிருக்கும். தனியார் துறையி லிருந்து வர வேண்டிய வரவினங்களில் ஒரு சிறு பகுதி கழிவு செய்த உண்டியல்கள் (Discounted Bills). மற்றவை கடன்கள், அட்வான்சுகள் (Advances). கடன்களில் ஒரு சிறு பகுதியே நிலைக் கடன்கள் (Fixed Loans); பெரும்பாலும் மிகைப்பற்று (Overdraft) வகையாகவே காணப்படுகிறது. இவையே பாங்குகளுக்குப் பெரும்பாலும் வருமானத்தைத் தருவன. அவசரத்தில் மிகைப்பற்று வசதி கிடைக்குமென்பதே பாங்கு களிடம் வாடிக்கைக்காரர்களுக்குள்ள கவர்ச்சி. பணத்துறை நிருவாக முறையில் பார்த்தாலும் அட்வான்சுகள் முக்கியம். ஏனென்றால், கம்பெனிகளும் தனிப்பட்டோரும் இவ்வகையில் கடன் பெறுவதே எளிதானதாகவும் வசதியானதாகவும் இருப்பதாகக் கருதி ஆள்வதனால், இவ்வசதியைக் கட்டுப் படுத்தினால் நாட்டின் செலாவணி நிலையைக் கட்டுப்படுத்த முடியும். ஆகவே இந்தவிதக் கடன்களின் தன்மையையும், நிபந்தனைகளையும் கவனிக்க வேண்டியிருக்கிறது. பொதுவாக

அதிகப் பற்றுக்கு உறுதியான எல்லை ஒன்றும் வரையறுக்கா விட்டாலும், பாங்குகள் தன்னிறைவேற்றமுள்ள (self liquidating) குறுங்காலக்கடன்களே கொடுக்க விரும்புகின்றன. இதற்குக் காரணங்கள் பல. நீண்ட காலக் கடன்களைத் திடீரென ரொக்கமாக மாற்ற முடியாது. தன்னிறைவுள்ள கடன் கொடுப்பதானுல், பாங்கின் அதிகாரிகள் ஐயப்பாடான பேர்வழிகளுக்குக் கடன் தர முடியாது. வழக்கமாக ஆங்கில பாங்குகள், நடைமுறை முதலும் (working capital), தற்காலிக நிலைமுதலும் தான் கொடுத்து வந்துள்ளன. பண்ட உற்பத்தி அல்லது வியாபார சம்பந்தமான மெய்ப்பொருள் பேரங்களுக்கு மட்டும் (real transactions)' பாங்குகள் உதவி செய்ய முன் வருகின்றன. இதுவும் பொருளாதாரத் துறை நடவடிக்கைக்கு உறுதி செய்வது.

அட்வான்சின்மேல் வாடிக்கைக்காரர்கள் தர வேண்டிய வட்டி, பொதுவாகப் பாங்கு வீதத்துக்கு மேல் இத்தனை சதவீதம் என்றும், குறைந்தபட்சம் இவ்வளவு என்றும் நிர்ணயிக்கப்படும். பொதுவாகக் காணப்படும் வீதம் பாங்கு வீதத்துக்குமேல் ஒரு சதவீதம்; ஆனுல் மொத்த வீதம் 5%க்குக் குறையாது. மிக்க தகுதி வாய்ந்த கடனுளிகள் பாங்கு வீதத்துக்கு மேல் ½ சதவீதமே கொடுக்கிறுர்கள். நாட்டுரிமை யாக்கப்பட்ட தொழில்கள். (nationalised industries) அரசாங்க உத்தரவாதத்துடன், பாங்குவீதம் அல்லது ஒரு குறைந்தபட்ச வீதத்தில் தருகின்றன.

பாங்குகள் தம்முடைய மொத்த வைப்புகளுக்கு எதிராக 28 சதவீதம் நீர்மையான சொத்துகள் (liquid assets) வைத்திருக்கின்றன. நீர்மைச் சொத்துகள் எனப்படுபவை: ரொக்கம் (cash), அழைப்புப் பணம் (Call Money), (இவை இரண்டும் 8%) கழிவு செய்த உண்டியல்கள் (Bill Discounted) ஆகியவை. மீதிச் சொத்துகள், வைப்புகளில் 70%-க்கும் மூலதனத்துக்கும் எதிரீடாக இருக்கும். வைப்புகளுக்கெதிராகச் சொத்துகளில் 60 சதவீதம் கடனுக இருக்கலாம் என்று கருதுகின்றனர். ஆனுல் சமீப காலத்தில், இது மைய பாங்கின் விருப்பத்துக்கேற்ப மாறிக் கொண்டிருக்கிறது. அண்மைக் காலத்தில் இடைக்காலக் கடன்கள் (Medium Term Credit) என்ற ஒன்று தோன்றியுள்ளது. இப்படி அநேக முறைகளில் பழைய கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டுள்ளன.

மற்ருெரு முக்கியமான சொத்தினம் முதலீடுகள் (Investments). நீர்மைச் சொத்துகளின் விகிதம் மாருதிருக்க,

முதலீட்டின் விகிதம் எவ்வளவு கடன் கொடுக்கப்படுகிற தென்பதைப் பொறுத்தது. கடன் கொடுப்பது அதிகப்பட்டால் முதலீடு குறையும். கடன் தருவது குறைந்தால் முதலீடு உயரும். பாங்குகளிடமுள்ள நீர்மைச் சொத்துகளின் தொகை பொது மக்களின் பணத் தேவையைப் பொறுத்தது. பொதுவாக நீர்மைச் சொத்துகள் வைப்பில் 28 சதவீதத்துக்குக் குறையா. ஆனால் மார்ச் மாதத்தில் அரசாங்கம் கருவூல உண்டியல் மூலம் பண அங்காடியில் கடன் வாங்குவது குறையும் போது, பாங்குகளுக்குக் கிடைக்கும் நீர்மைச் சொத்துகள் குறையும். ஆகவே சராசரி விகிதம் 28%-க்குக் குறையா திருக்க வேண்டுமாயின், மற்ற மாதங்களில் விகிதம் 28%-க்கு மேலாகவே இருக்க வேண்டும்.

வாடிக்கைக்காரர்களின் கடன் தேவையை அட்வான்சு நிறை வேற்றும். நீர்மைச் சொத்துகள் 28%-க்கு மேல் இருப்பதாகக் கண்டால் பாங்குகள் முதலீடுகளை அதிகப்படுத்தும். 28 சத விதத்துக்குக் குறைவாக இருக்கக் கண்டால், முதலீடுகளைக் குறைக்கும். ஆகவே நீர்மை விகிதம் ஒரு நிலையாயிருக்க, கடன் தந்தது போகமீதி முதலீட்டுக்குச் செல்லும். ஆகவே, முதலீடு களின் தொகை எச்ச இனம் (residual item) ஆகும்.

முதலீடுகள் பணத்துறைக் கட்டுப்பாட்டுக்கு முக்கிய மானதா அன்று என்பது (கடன் கொடுத்து எஞ்சிய) மீதி வைப்பைப் பாங்குகள் எப்படி முதலீட்டில் ஆள்கின்றன என்பதைப் பொறுத்தது. ஒரு சிறு அளவு காமன்வெல்த், காலனி, முனிசிபல் பாண்டுகளில் செல்கிறது. இவைகளின் தொகை அதிகம் மாறுவதில்லை. ஆகவே பெரும்பாலும் யு. கே. அரசாங்கத்தின் செக்கூரிட்டிகளில் அல்லது யு. கே. அரசாங்க உத்தரவாதமுடைய செக்கூரிட்டிகளில் முதலீடு செய்யப்படும். பாங்குகள் வைத்திருக்கும் முலலீடுகளின் முதிர்வுக் காலம் முக்கியமானது. அநேகமாகப் பெரும்பகுதி 10 ஆண்டுக்குள் (1951-க்குப் பின், பாங்குகள் வைத்திருந்த செக்கூரிட்டிகளில் பாதி 5 ஆண்டுகளுக்குட்பட்டும், பாதி 5 ஆண்டுகளுக்கு மேற் பட்டும்) முதிர்வனவாயிருந்தன. பாங்குகள் அண்மை முதிர் வுடைய பாண்டுகளை விரும்புவதற்குக் காரணம் வட்டி மாறுதலால் ஏற்படக்கூடிய முதல் நஷ்டம் (capital loss) ஒன்றும் இருக்காது அல்லது அற்பமாக இருக்கும் என்பதே ஆகும். சில பாண்டுகள் ஆண்டுதோறும் முதிர்ந்து வந்து ரொக்கமாகிக் கொண்டிருக்கும். வேண்டுமானால் கடன் தரலாம் அல்லது புதுப்பித்துக் கொண்டேயிருக்கலாம். எதிர்பாராத

கடன் தேவைகளைச் சமாளிப்பதற்குப் பாங்குகள் இவ்வித முதலீட்டையே நம்புகின்றன.

இங்கிலாந்து பாங்குகளின் பழக்க விகிதங்கள்: (1) மொத்த வைப்பில் 8% இங்கிலாந்து பாங்கிலும் கையிலும் ரொக்கம் (2) 6%—9%, கழிவு அங்காடிக்கு (அரசாங்கத் தாள்கள் ஈட்டின் மேல்) அழைப்புப் பணம் அல்லது குறுங்கால நோட்டீசுக் கடன் (Money at Call or Short Notice), (3) மீதி உண்டியல்கள். இதில் ஒரு சிறு பகுதி வர்த்தக உண்டியல்கள் (Commercial Bills); மற்றவை கருவூல உண்டியல்கள் (Treasury Bills). இவ்வினங்களுக்கிடையே விகிதாசாரம் பாங்குகளுக்குப் பாங்கு, நாளுக்கு நாள், பண அங்காடியைப் பற்றிய நோக்கத்திற்கேற்ப மாறும். நீர்மைச் சொத்துகளில் பெரும் பகுதி பொதுத்துறைக் கடன் சம்பந்தமானது எனலாம். ஒரு சிறு பகுதியே வர்த்தக உண்டியல் மூலம் தனியார் துறைக்குச் செல்கிறது.

**கழிவு அகங்கள் (Discount Houses)**

இலண்டன் நகரத்தில் பன்னிரண்டு பெரிய கழிவகங்களும், பத்துக்கு மேற்பட்ட சிறு கழிவகங்களும் இருக்கின்றன. பெரிய 12 அகங்களும் சேர்ந்து இலண்டன் கழிவு அங்காடிச் சங்கம் (London Discount Market Association) என்ற ஒன்றை ஏற்படுத்தியுள்ளன. இந்தக் கழிவகங்களுக்கு நிதி (சொந்த முதலைத் தவிர) இங்கிலாந்து பாங்கு, தீர்வக பாங்குகள், பிற யு.கே. பாங்குகள், அயல் நாட்டுப் பாங்குகள், ஏனையோர் ஆகியவைகளிடமிருந்து வருகின்றது. அவைகளுடைய சொத்துகளை ரொக்கம், யு.கே. கருவூல உண்டியல்கள், வர்த்தக உண்டியல்கள், அரசாங்கச் செக்கூரிட்டிகள், பிற என்று பிரிக்கலாம்.

கழிவகங்களின் நடவடிக்கைகள் பணத்துறை நடவடிக்கை சம்பந்தமாக மிக முக்கியமானவை. ஏனெனில், இங்கிலாந்து பாங்கு இறுதிநிலைக் கடனீவோனாகப் '(Lender of Last Resort) பணியாற்றுவது இவைகளின் மூலமாகவேயாகும். மக்களுக்கும் பாங்குத் திட்டத்துக்கும் ரொக்கம் வேண்டும்போது அதைக் கிடைக்கும்படி செய்ய, இந்தக் கழிவகங்களையே இங்கிலாந்து பாங்கு (Bank of England) ஆள்கிறது.

இந்தப் பன்னிரண்டு கழிவகங்களும் பொதுக் கம்பெனிகள் (Public Companies); இலாபத்துக்கு வேலை செய்வன. குறைந்த வட்டிக்குக் கடன் வாங்கி ஏறிய வட்டிக்குக் கடன் கொடுப்ப

திலிருந்தும், கமிஷன் பெறுவதிலிருந்தும் வருமானம் பெறுகின்றன. குறுங்காலத்துக்குக் கடன் வாங்கி, சற்று நெடுங்காலத்துக்குக் கடன் கொடுக்கின்றன. ஆகவே அங்காடி வட்டி வீதங்களில் அடிக்கடி மாறுதல் ஏற்படினும், அவைகளுடைய மூலதன நிலை (capital position) பலமாக இருப்பதால் இந்த மாறுதல்களைச் சமாளிக்க முடிகிறது. அவை இங்கிலாந்து பாங்கில் சிறப்புரிமைகள் (privileges) பெறுவது அவைகளின் மூலதன பலத்தைப் பொறுத்தது.

கழிவகங்கள் அரசாங்கத்தின் கருவூல உண்டியல்களையும் குறுங்கால பாண்டுகளையும் வாங்குவதன் மூலம் அரசாங்கத்துக்குக் கடன் கொடுப்போர் இனத்தில் சேர்கின்றன. வர்த்தக உண்டியல்களை வாங்குவதன் மூலம் தனியார் துறைக்குக் கடன் கொடுக்கின்றன. இவை கடன் வாங்கும் பணத்தில் ஏறத்தாழப் பாதிக்கு இலண்டன் தீர்வக பாங்குகளிடமிருந்தும், ஒரு சிறிது வாடிக்கைக்காரர்களிடமிருந்தும் வருகிறது. இவை உண்டியல்களை வாங்கி, உடனே பாங்குகளுக்கும் மற்றவர்களுக்கும் விற்பதன் மூலம் இலாபத்தை அடைகின்றன; பாங்கு அல்லாத வாடிக்கைக்காரர்கள் தரப்பிலும் உண்டியல்களை வாங்கித் தந்து கமிஷன் பெறுகின்றன. சிலபோது குறுங்கால பாண்டுகளை வாங்கி விற்பதன் மூலமும் இலாபம் அடையலாம்.

இவை வர்த்தக உண்டியலில் தற்காலத்தில் செய்யும் பேரம் மிகவும் அற்பம். தற்காலத்தில் பற்று (draft) முறை வேரூன்றி விட்டதால், உண்டியல் ஆட்சி குறைந்து விட்டது. ஆயினும் சில வர்த்தகத் துறைகளில், முக்கியமாக இறக்குமதி வியாபாரத்தில், வர்த்தக உண்டியல் இன்னும் ஆளப்பட்டு வருகிறது. பாங்குக் கடன் கட்டுப்பாடு செய்யப் படுங் காலத்தில் வர்த்தகர்கள் இவை மூலமே பணம் பெறுவர். ஆகவே, இவை வர்த்தகத்தில் முக்கியத்தை இழந்துவிடவில்லை. ஆயினும், கழிவகங்கள் தமக்கு ஆதரவாக இருக்கும் பாங்குகளுக்கெதிராகப் போட்டியிட்டு, டிராஃப்ட் முறையை அழியச் செய்து, வர்த்தக உலகில் பழைய முதன்மையை அடைய விரும்பவில்லை. ஆனால், கருவூல உண்டியல் பேரத்தில் கழிவகங்கள் தலை எடுத்துவிட்டன. தாம் கருவூல உண்டியலைப் பெரும் அளவுக்கு வாங்குவதால், தம்மை அரசாங்கத்துக்கு இன்றியமையாதவை என்று நினைக்கின்றன. இவ்விரண்டைப் பற்றியும் ஆயுமுன் அரசாங்கம் கருவூல உண்டியல்களை வெளியிடும் முறையை இங்கு அறிந்துகொள்வது நல்லது.

கருவூல உண்டியல்கள் என்பவை குறுங்காலக் கொணராள் செக்கூரிட்டிகள் (Short term bearer Securities); 91 நாட்களில் முதிர்வன. சிலபோது 63 நாட்களில் முதிர்வனவும் காணப் படலாம். ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் அடுத்த வாரம் விற்கப்போகிற உண்டியல்களுக்கு டெண்டர் (tender) அழைக் கப்படுகிறது. இந்த உண்டியல்களை வாங்குவதால் கிடைக்கும் நிகர விளைவு (effective yield) முகமதிப்புக்கும் டெண்டருக்கும் உள்ள வித்தியாசமாகும். 100 பவுண்டு முகமதிப்புள்ள உண்டியலுக்கு £ 99—10 என்று டெண்டர் செய்து உண்டியல் வாங்கப்பட்டால், 10sh. மூன்று மாதத்து விளைவு. அதாவது மீட்சி மதிப்புக்கும், விற்கும் விலைக்கும் உள்ள வேறுபாடே விளைவு. இப்படி டெண்டர் மூலம் விற்பவைகளை அங்காடிக் கருவூல உண்டியல் (Market Treasury Bills) என்பார்கள். வேறொரு வகை உண்டியல், குழாய்க் கருவூல உண்டியல்கள் (Tap Treasury Bills) என்பவை. விரும்பும்போது குழாயைத் திறந்து நீரைப் பெறுவதுபோல, விரும்பும்போது அரசாங்க இலாக்காக்கள் உண்டியல்களைப் பெற இவை மைய பாங்கில் தயாராக இருக்கும். சிலபோது குழாய் உண்டியல்களும் அங்காடிக்கு வருவது உண்டு. ஆனால், சாதாரணமாக மிகவும் அற்பத் தொகையாகவே இருக்கும். பாங்குகளின் நீர்மை விகிதத்தைக் (liquidity ratio) கணிக்கும்போது, கருவூல உண்டியல் இருப்பையும் சேர்த்துக் கொள்ளலாமாகையால், அங்காடி உண்டியல்கள் தனிச் சிறப்புடையன. வேறு எந்த அரசாங்கத்தாளும் (Government paper) எவ்வளவு குறுங் காலத்தில் முதிரக் கூடியதாயினும், கருவூல உண்டியலைப் போல நீர்மை உடையதாகக் கருதப்படுவதில்லை.

இலண்டன் தீர்வக பாங்குகள் உண்டியல்களுக்கு டெண்டர் செய்வதில்லை என்கிற ஒரு வழக்கு இருந்து வருகிறது. கழிவகங்களின் வழியாகவே பாங்குகள் தம் உண்டியல் தேவை களைப் பூர்த்தி செய்து கொள்கின்றன. கருவூல உண்டியல் களுக்கு டெண்டர் செய்பவர்கள் யாரெனில் இங்கிலாந்தில் பணம் வைத்திருக்கும் அயல்நாட்டு உரிமையாளர்களும், சில உள்நாட்டுக் கடன் அளிப்பு நிதியங்களும், உள்நாட்டுக் கழிவகங் களும், தீர்வகத்தில் அங்கம் வகிக்காத சில பாங்குகளும் ஆகும். இரண்டாவது உலக யுத்தத்தின் ஆரம்பத்திலிருந்தே, கழிவு அங்காடிச் சங்கத்தில் அங்கம் வகிக்கும் கழிவகங்கள், அரசாங்கம் வெளியிடும் அவ்வளவு உண்டியல்களையும் வாங்குவதாகத் தமக்குள் ஒப்பந்தம் செய்து கொண்டுள்ளன. ஆகவே, வெளியிடும் உண்டியல்கள் அனைத்தும் விற்பனையாகிவிடும்

என்ற நம்பிக்கை அதிகாரிகளுக்குண்டு. எந்தக் கழிவு வீதத்தில் விற்பனை ஆகும் என்பது மட்டுமே தெரியாது. கழிவு வீதமானது அங்காடித் தேவை, மற்றவர்களின் போட்டி ஆகியவற்றைப் பொறுத்தது. ஆனால் கழிவக அங்காடி தவருது வாரா வாரம் எல்லா உண்டியல்களையும் வாங்க வேண்டுமானால் இங்கிலாந்து பாங்கிடமிருந்து கடன் வாங்கும் பரம்பரை உரிமையில் குறையொன்றும் ஏற்படக் கூடாது. தாம் உண்டியலை வாங்குவது அரசாங்கத்தின் நிதிக்கு முக்கியம் என்று கழிவகங்கள் நினைப்பதாகக் கூறினோம். இப்படி நினைப்பதற்குக் காரணம் அரசாங்கம் நேரடியாக இங்கிலாந்து பாங்கினிடம், வழி வகைக் கடன் (Ways and Means Advances) வாங்குவதற்கு விரும்பாததே ஆகும்.

அரசாங்கம் வெளியிடும் உண்டியல்கள் அனைத்தையும் வாங்கிக்கொள்ள வேண்டும் என்கிற வழக்கைத் தமக்குள் உண்டியலைப் பங்கீடு போட்டுக்கொள்வது மூலம், பாங்குகள் நிறைவேற்ற முடியும். ஒவ்வொரு பாங்கும் இவ்வார டெண்டர் வீதம் முன் வார டெண்டரைவிட மோசமாக இருக்காது என்று எதிர்பார்த்தே இப்படிக் கட்டுப்படுகின்றன. உண்மையில் 12 அகங்களும் ஒற்றுமையாய் ஒரே விலைக்குத்தான் டெண்டர் செய்கின்றன. இந்த ஒப்பந்தத்தைச் சுயநலத்துக்காகக் கழிவகங்கள் உபயோகப்படுத்திக்கொள்ளலாம் என்று நாம் நினைக்கக்கூடும். உண்மையில் கழிவகங்கள் அதிக இலாபகரமாக உண்டியல்களை வாங்கினாலும் அதிக இலாபம் இருக்கும்படி தீர்வக பாங்குகள் விடுவதில்லை. கழிவகங்களிடம் தாம் வாங்கும் வட்டி வீதத்தை மாற்றி, இந்த ஆதாயத்தைப் பறித்துக்கொள்கின்றன. இப்படிப் போட்டிக் கிடமில்லாமல் செய்து, ஒப்பந்த மூலம் உண்டியல்களை வாங்குவது, கழிவு அங்காடியில் ஓரளவுக்கு நெகிழ்ச்சியின்மையை உண்டாக்குகிறது. ஒரு தனிக் கழிவகம் எவ்வளவு அக்கரையாக உண்டியல் பேரத்தில் ஈடுபட்டிருந்தபோதிலும் அதற்குக் கிடைப்பது வார வெளியீட்டில் ஒரு பகுதியே. உண்டியல் அனைத்தையும் வாங்க வேண்டும் என்கிற பொறுப்பு கழிவகங்களிடமிருந்து எடுபட்டால் இந்த மாதிரி ஒப்பந்த டெண்டருக்கு இடமிருக்காது. வெளியாரும் உண்டியலை வாங்குவது வளரும். ஆனால் இப்படிச் செய்தால் அங்காடியில் உண்டியல் கழிவு வீதத்தில் நிலை பேறிருக்காது; குறுங்காலவீதங்களின் மேல் அதிகாரிகளுக் கிருக்கும் பிடிப்புக் குறைந்து விடும். இவ்வகைக் காரணத்தால் தான் உண்டியல் அனைத்தையும் கழிவகங்கள் வாங்கவேண்டுவது அவசியமாகிறது. கழிவகங்கள் வாங்காவிட்டால் அரசாங்கம்

சிரமப்படும் என்பதாலன்று வெளியிடும் உண்டியலனைத்தையும் வாங்க வேண்டுவது.

அங்காடி வீதங்களை நிர்ணயிக்கும் பொறுப்பு தமக்கிருப்ப தாகக் கழிவகங்கள் நினைக்கின்றன என்று முன்னர்க் கூறினோம். ஆனால் கழிவகங்கள் டெண்டர் போடும்போது இங்கிலாந்து பாங்கு வீதம் (Bank Rate) வருகிற 13 வாரங்களில் எப்படி இருக்கும் என்பதைப் பற்றி ஆலோசித்தே தங்கள் கழிவு வீதத்தை நிர்ணயிக்கின்றன. இது சரியான முறையே. அங்காடி வீத நிர்ணயப் பொறுப்பு முடிவில் மைய பாங்குடைய தாகையால், அதன் வீதத்தையே கழிவகங்களும் மற்றவைகளும் பின்பற்றுகின்றன.

ஆகவே கழிவகங்களின் சிறப்பு என்னவெனில், அரசாங்கத்துக்குப் பண உதவி செய்வது, அல்லது அங்காடி வட்டி வீதத்தை நிர்ணயிப்பது என்பதன்று; கருவூலத்துக்கு மிகவும் வசதியான ஒருவகைக் கருவிகளுக்கு (instruments) நல்லதொரு திறமை வாய்ந்த அங்காடியாக அமைந்திருப்பதே யாகும்.

சமீபத்தில் கழிவகங்கள் குறுங்கால பாண்டுகள் பேரத்திலும் ஈடுபட்டு வருகின்றன. இது ஒரு புதுப்பணி. மூன்றும் பத்தில் வர்த்தக உண்டியல்கள் கிடைப்புக் குறைந்து தீர்வகங்கள் வருமான வழியின்றி இருந்த காலத்தில், கழிவகங்கள் இவைகளை வாங்கிப் பேரம் செய்யலாயின; நான்காம் பத்தில் மலிவுப் பணச் (Cheap Money) சூழ்நிலையில் குறுங்கால பாண்டுகளை வாங்கி நல்ல இலாபம் கண்டன.

குறுங்கால பாண்டுகளைப் பற்றிய அங்காடியில் கழிவங்கள் முக்கியமானவை என்பதில் ஐயம் இல்லை. இந்த பாண்டுகளை எளிதில் மாற்றுவதற்கு இங்கிலாந்து பாங்கு வசதி செய்திருக் கிறது. இந்தப் பாண்டுகளின் ஆயுள் 5 ஆண்டுகளுக்குமேல் இருப்பதில்லை. இங்கிலாந்து பாங்கு இவைகளைத் தகுதியான தாள்களில் (eligible papers) ஒன்றாக ஏற்கிறது. இப்படிப் பெரிய வியாபாரிகள் தலையிடுவதனால் இந்த பாண்டுகளினுடைய அங்காடி ஏற்புத்தன்மை (marketabiliy) அதிகப்படுகிறது. மற்ற நிதிகளும் பின்பற்றி இவ்வித பாண்டுகளைவாங்க முன்வருகின்றன. இவை விரும்பப்படுவதற்குக் காரணம், சுலபமாக ரொக்கமாக ஆக்கிக் கொள்ளலாம் என்பது மட்டுமன்று. முதலை இலாப கரமாக ஒன்றுக்கொன்று மாற்றுவதற்கு இதுவும் ஒரு புதுக் கருவியாகிவிட்டது.

இந்தக் குறுங்கால பாண்டுகள், பாங்குகளின் நீர்மைச் சக்தியை மாற்றிவிட்டன. கழிவகங்களின் மற்றத் தாள்களைப் போல, இந்தப் பாண்டுகளையும் இங்கிலாந்து பாங்கு கழிவகங்களிடமிருந்து ஈடாக ஏற்றுக் கொள்கிறதினால் பாங்குகளும் இவைகளை ஏற்கத் தயாராக இருக்கின்றன. கழிவகங்கள் பாங்குகளிடம் பட்ட கடனைத் திருப்பிக் கொடுப்பதற்கு மைய பாங்கின் ஏற்பு உதவி செய்கிறது. ஆனால். பாங்குகள் 28% நீர்மையைக் கணக்கிடும்போது தம்மிடம் உள்ள குறுங்கால பாண்டுகளைக் கணக்கில் சேர்ப்பதில்லை. ஆகவே, 28% நீர்மை விகிதத்தைக் காக்க வேண்டியபோது, குறுங்கால பாண்டுகளையே பாங்குகள் கழிவகங்களுக்கு விற்கும். இவைகளை வாங்குவதற்குக் கழிவகங்கள் பாங்குகளிடமிருந்து மேலும் அழைப்புக் கடன் பெறும். இப்படித் தம்மிடமுள்ள பாண்டுகளைக் கழிவகங்களுக்கு விற்கக்கூடிய வசதி உண்டானதால் பாங்குகளின் நீர்மைச் சக்தி அதிகப்பட்டு விட்டது. பண அதிகாரிகளின் கட்டுப்பாட்டுச் சக்தி குறைந்துவிட்டது.

இதுவரையிலும் நாம் கழிவகங்களைக் கடன் கொடுப்பவைகளாக ஆராய்ந்தோம். கழிவகங்கள் கடனாளியாக இருப்பதும் முக்கியம். அவைகளின் சொந்த முதல் தவிர, மற்றுமுள்ள செல்வாதாரம் முழுதும் கடன் வாங்கியதே. அவை பெற்ற கடனே பாங்குகளின் இருப்பு நிலைக் குறிப்பில் 'அழைப்புப் பணம்' (call money) என்று காட்டப்படுகிறது. அழைப்புப் பணம் நீர்மைக் கணக்கில் அகப்படுவது. கழிவகங்கள் வாங்கும் கடனில் பாதி தீர்வக பாங்குகளிடமிருந்து பெறப்படுகிறது என்றும், மற்றப் பாதி இதர வகை வர்த்தக பாங்கு வெளி நிறுவனங்களிடமிருந்து வாங்கப்படுகிறது என்றும் முன்னர்க் கூறினேம். இதர வகை பாங்குகள் ரொக்க விகிதக் கட்டுப் பாட்டுக்கு உட்பட்டவை அல்ல. அவைகளின் ரொக்க நிலை நாளுக்கு நாள் மாறும். ஆகவே 24 மணி நேரத்தில் அழைக்கக் கூடிய துறைகளில் கடன் கொடுக்கும் வாய்ப்பு அவைகளுக்கு இலாபகரமானது. இந்த வசதிக்காகவே அநேக அயல்நாட்டுப் பாங்குகள் இலண்டனுக்கு வந்தன. இவை கழிவகங்களுக்குத் தங்கள் மீதிப் பணத்தைக் கடன்கொடுத்துச் சிறிது வட்டி சம்பாதிக்கின்றன. இலண்டன் மாநகரம் உலகத்தில் ஒரு நிதி மையமாக இருப்பது நல்லதானால், அங்கு இவ்வயல் நாட்டுப் பணத்தின் வரவையும் போக்கையும் சமாளிக்க (கழிவகங்கள் போன்ற) ஒரு தனித் தொகுதி இருப்பது நல்லதேயாகும்.

**கழிவு அங்காடியின் பரிணமம் (Evolution of the Discount Market)**

மேலே சமீப காலத்தில் தான் கழிவகங்கள் குறுங்காலப் பத்திர பேரத்தில் ஈடுபட ஆரம்பித்தன என்று கூறினோம். காலத்துக்குக் காலம் நிதித்துறையில் ஏற்பட்ட மாறுதல்கள் இந்த அங்காடிக்கு முடிவு கட்டுவது போல இருந்தன. ஆனால், ஒவ்வொரு தரமும் இந்த அங்காடி புதுப் புதுப் பணிகளை மேற்கொண்டு தன் வாழ்நாளை நீடித்துக்கொண்டு வந்துள்ளது.

இந்த அங்காடியின் வரலாறு பொற்கொல்லர் பணலேவா தேவி செய்த காலத்துக்கும், மாற்று உண்டியல் (Bill of Exchange) வழியாகப் பணம் அனுப்ப ஆரம்பித்த காலத்துக்கும் நம்மை ஈர்த்துச் செல்கிறது. நாம் அவ்வளவு பழைய காலத்துக்குச் செல்லாமல் சமீப நிகழ்ச்சியான தொழிற் புரட்சிக்குப்பின் (Industrial Revolution) இவ்வங்காடியின் பல்வேறு நிலைகளைப் பார்ப்போம். மானிங் டேசி (Manning Dacey) என்பவர் ஆறு நிலைகளைக் குறிப்பிடுகிறார்.

முதல் நிலை, 19ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் கண்ட நிலை. அக்காலத்தில் போக்குவரவுச் சாதனங்கள் அற்பம். சிறு வட்டார பாங்குகள் (Local Banks) இருந்தன. அந்தக் காலத்தில் லண்டன் புரோக்கர்களுடைய முக்கியமான பணி, கைத்தொழில் பிரதேசங்களிலிருந்து (industral areas) எழுந்த உண்டியல்களை வாங்கி, பயிர்த் தொழில் பிரதேச பாங்குகளுக்கு விற்று, கைத்தொழில் பிரதேசங்களுக்குப் பணம் கிடைக்கச் செய்வதாகும். பயிர்ப் பிரதேசங்கள் தான் அக்காலத்தில் செல்வத்தோடு சேமிப்புச் சக்தியுடன் இருந்தன. ஆகவே அப்போது இந்த அங்காடி, சேமிப்பு செய்த குடியானவனையும் கடன் வாங்கும் தொழில் துறையோனையும் இணைக்கும் மையமாக இருந்தது. பயிர்த்தொழில் பிரதேச பாங்குகளும் தம்மிடம் குவிந்து வந்த குடியானவர் வைப்புகளை இலாபகரமாகப் பயன்படுத்த முடிந்தது.

இரண்டாவது நிலை, 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் காணப்பட்டது. இது கிளை பாங்கு முறை தோன்றியதால் மேற்கண்ட பணிகள் அழிந்த நிலை. இங்கிலையில் பயிர்த்தொழில் பிரதேசத்திலிருந்து கைத்தொழில் பிரதேசத்துக்குச் சேமிப்பு மேலும் மேலும் பாங்குகள் வழியாகவே நேரடியாகச் செல்லலாயிற்று. மாற்று உண்டியலே உள்நாட்டு வியாபாரம் சம்பந்தமாக முக்கியமான கருவியாக இருந்தாலும், பெரிய பாங்குகள் பயிர்த்தொழில் பிரதேசத்திலிருந்து பெற்ற

வைப்புகளை நேரடியாகக் கைத்தொழில் பகுதிகளில் கடன் கொடுக்கலாயின. ஆனால் இதற்குள் இலண்டன் அங்காடியானது பாங்குகளுக்குச் சில முக்கியப் பணிகளைச் செய்ய ஆரம்பித்து விட்டது. பாங்குகள் விரும்பும் கால முதிர்வுடைய உண்டியல் களைத் தேர்ந்து அவைகளுக்கு விற்பதோடு, அவைகளின் தற்காலிக எச்சப் பணத்தை 'அழைப்புக் கடன்' மூலம் ஏற்றுச் சிறிது வட்டி வருவாயும் உண்டாகச் செய்தது. உண்டியல் வாங்குவதை விட அழைப்புக் கடன் பாங்குகளுக்குச் சிறந்த சொத்தாகும். ஏனெனில், உண்டியல் வாங்கினால் வட்டிவீத மாறுதலாலும் முதிர்வுக் காலத்தில் மீட்புத் தவறுவதாலும் ஆபத்து உண்டாகலாம். கழிவுநிறுவனங்களுக்குக் கொடுக்கும் கடன் இவ்வகை ஆபத்துடையது அன்று. அழைப்புக் கடனுக்கு ஒரு தவணை கிடையாது; கேட்டபோது திருப்பிக் கொடுக்க வேண்டிய கடப்பாடுடையது. தவிர, மறைமுகமாய்க் கழிவகங்களின் மூலமாக இங்கிலாந்து பாங்கிடமிருந்து ரொக்கம் பெறலாம். அழைப்புக் கடன் பிரிட்டிஷ் பாங்கு அமைப்பின் ஓர் அடிப்படை அம்சம். இதிலிருந்து பல அம்சங்கள் தோன்றின. அநேகமாக மற்ற எல்லா நாடுகளிலும் வர்த்தக பாங்குகள் நேரடியாக மைய பாங்கில் உண்டியல்களை மறுகழிவு செய்கின்றன அல்லது நேரடியாக மைய பாங்கில் கடன் பெறுகின்றன. ஆனால் இங்கிலாந்தில் பாங்கு வளர்ச்சி முறையே வேறு. இங்கு அழைப்புக் கடன் முறை தோன்றியதன் காரணமாக இவ்வித நேரான தொடர்பு இல்லை. நேரடித் தொடர்பு இல்லாததால் பாங்குகளுக்கு எவ்வித இடையூறும் தோன்றவில்லை. மறு கழிவு செய்யக்கூடிய உண்டியல்களைப் போலவே அழைப்புப் பணமும் பாங்குகளுக்கு இரண்டாம் நிலை ரிசர்வாகப் பயன்பட்டது. உண்மையில் மறைமுகத் தொடர்பு இங்கிலாந்து பாங்கின் பணத்துறைக் கட்டுப்பாட்டுச் சக்தியை அதிகரித்துவிட்டது. மைய பாங்கிலிருந்து நேரடியாகக் கடன் அல்லது மறு கழிவு பெறும் முறையின்கீழ், ஒரு பாங்கு எச்ச ரிசர்வுடன் இருக்கக்கூடும்; மற்றொரு பாங்கு மைய பாங்கினிட மிருந்து கடன் வாங்கிக் கொண்டிருக்கக்கூடும். ஆகவே, மைய பாங்கு பணக் கட்டுப்பாடு செய்யும்போது ஒருபுறம் பணம் ஈர்க்கப்படும்; மற்றொருபுறம் பணம் வழங்கப்படும். இங்கி லாந்தில் பாங்குகள் எச்சமான ரொக்கத்தை உடனே கழிவகங் களுக்குக் கொடுப்பதால், எச்ச ரிசர்வால் மைய பாங்கின் கட்டு முறைக்கு இடர்ப்பாடொன்றும் ஏற்பட வழியில்லை. ரொக்கம் தேவையானால் கழிவகங்களையே கேட்க வேண்டும். அவை மைய பாங்கிடம் போக வேண்டும். போனால், அதன் நிபந்தனை களுக்குட்பட்டே பெற வேண்டியிருக்கும்.

மூன்றாவது நிலை, 19 ஆம் நூற்றாண்டின் கடைசியிலிருந்த நிலை. அப்போது உள்நாட்டு வர்த்தகத்தில் மாற்று உண்டியல் (Bill of Exchange) ஆளப்படுவது குறைய ஆரம்பித்தது. இதற்கு அநேக காரணங்கள் இருந்தன. 1. அநேக வர்த்தகர்கள் தங்களுடைய பெயரேடு உண்டியல்கள் அங்காடியில் கை மாறுவதை விரும்பவில்லை. 2. உண்டியல் வழியாகப் பணம் பெறுவதைவிட, பாங்கு மிகைப்பற்று முறையாகப் (Overdraft System) பெறுவது சிறந்ததாக வியாபாரிகளுக்குத் தோன்றியது. ஏனென்றால், உண்டியல்கள் குறிப்பிட்ட தேதியில் முதிரும் போது அவைகளை மீட்பதில் தடை ஏற்பட்டால் வர்த்தகரின் நாணயம் குலைந்துவிடும். ஆனால் இப்படி உள்நாட்டில் உண்டியலாட்சி குறைந்தபோது அயல்நாட்டு வாணிகத்தில் ஆட்சி வளர ஆரம்பித்தது. ஏற்பகங்களின் (Acceptance Houses) தோற்றமும் பவுண்டின் நிலையான மதிப்பும் ஸ்டெர்லிங் நாணயத்தில் வரையப் பட்ட உண்டியல்களை அயல் நாடுகளின் வியாபாரங்களில் பரவச் செய்தன. இப்படி அயல்நாட்டு வியாபாரிகள் ஸ்டெர்லிங் உண்டியல் மூலம் இலண்டன் கடன் வசதிகளை ஆண்டது இங்கிலாந்துக்கு யாதொரு சிரமத்தையும் உண்டாக்கவில்லை. லண்டன் பல நாடுகளுக்கும் சிறந்த மையமாகத் தலையெடுத்து விட்டதால், எல்லா நாடுகளும் தம் சிறு கால நிதிகளை இங்கிலாந்துக்கு அனுப்பி முதலீடு செய்வது வழக்கமாயிற்று. இந்த நிதிகள் ஓரளவு கழிவகங்களுக்கு வைப்பாக வந்து அயல்நாட்டு உண்டியல் வர்த்தகத்தில் ஈடுபட்டன. ஆகவே, கழிவங்காடி அயல்நாட்டுக் குறுங்காலப் பணத்தை அயல்நாட்டு வர்த்தக உண்டியல்களாக மாற்றும் இடையாளாக ஆயிற்று. இவ்விதமாகக் கழிவங்காடி பிரிட்டனின் நிதித்துறையில் கேந்திர நிலையை அடைந்தது எப்படி என்பதை விளக்குவோம். அப்போது நடைமுறையிலிருந்த பொன் திட்டத்தின் கீழ், இங்கிலாந்து பாங்கு (Bank of England) ரிசர்வை இழந்தால் அது பாங்கு வீதத்தை உயர்த்தும். உடனே எல்லா வட்டி வீதங்களும் உயரும். கழிவகங்களும் தம் உண்டியல் கழிவு வீதங்களை உயர்த்துமாகையினால், அயல்நாட்டினர் இங்கிலாந்துக்குப் பணத்துக்கு வர மாட்டார்கள். கழிவு வீதங்கள் உயர்ந்ததும் இலண்டனில் கடன் வாங்குவது கவர்ச்சியாக இருக்காது. ஆகவே, பணம் வெளியேறுவது குறையும். அதே போது பழைய ஸ்டெர்லிங் உண்டியல் முதிர்ந்து கொண்டே வரும். கடன் வாங்கின அயல் நாட்டினர் முதிர்ந்து வரும் உண்டியல் பொறுப்புகளை நிறைவேற்றப் பணம் அனுப்பவேண்டி வரும். அதே போது வட்டியால் கவரப்பட்டு மற்றவர்களும் தம் இருப்புகளை இலண்டனுக்கு அனுப்புவார்கள். இதனால் மைய பாங்கிலிருந்து பொன் வெளி

யேறுவது தடைபடும். இவ்வித விளைவு கழிவு அங்காடி நடவடிக்கையால் உண்டாவது.

நான்காவது நிலை, 1918 முதற்கொண்டு செப்டம்பர் 1931-ல் ஸ்டெர்லிங்குடைய மதிப்பைக் குறைப்பு (devaluation) செய்தது வரைக்கும். பொன் திட்டம் 1925-ல் மீட்கப்பட்ட பின்னர்க் கழிவகங்கள் எப்போதும் போல உண்டியல் பேரத்தில் ஈடுபட்டிருந்தன. பன்னாட்டு வாணிகம் பழைய தன்மையை அடைந்தது. நியூயார்க், பாரிஸ் நகரங்களில் போட்டியிருந்தும் இலண்டன் தன் தலைமை நிலையை இழக்கவில்லை. ஆகவே, முதல் யுத்தத்துக்கு முன் செய்து வந்த பணிகளையே யுத்தத்துக்குப் பின்னும் கழிவங்காடி செய்து வந்தது. ஆயினும், சில புதுப் பணிகள் தோன்றிவிட்டன. லண்டன் பண அங்காடியில் யுத்த காலத்தில் ஒரு முக்கிய மாறுதல் ஏற்பட்டது. முதன் முதலாக அரசாங்கத் தாள்கள் (Government Papers) வர்த்தக உண்டியலை விடப் பேரளவில் அங்காடிக்கு வந்தன. இவைகளில் முக்கிய மானவை கருவூல உண்டியல்கள். யுத்தத்துக்கு முன் இதன் வெளியீடு £ 30 மில்லியனுக்கு மேற்படவில்லை; 1921-ல் 1200 மில்லியன் பவுண்டு அளவுக்கு வளர்ந்தது. முதலில் கருவூல உண்டியல் பேரம் இலாபகரமாக இருந்தது. ஆகவே, முதலிடு பவர்கள் எல்லாம் இதை நாடினர். வர்த்தக உண்டியலுக்குப் பதிலாகக் கருவூல உண்டியலை அங்காடி ஆண்டது. ஆனால் இப் புதுப்பணி கழிவங்காடியின் தொழில் நுட்பச் சிறப்பைக் குறைத்தது. ஏனென்றால், கழிவங்காடிகளின் உச்ச நிலையில் கழிவு புரோக்கர்கள் வியாபாரிகளின் நாணயத்தை மதிப்பிட்டு முறைப்படுத்துவதில் நிபுணராக இருந்தனர். ஆனால் கருவூல உண்டியல் வந்ததும் இவ்விதத் திறமைக்கு இடமில்லை. எந்தத் தேதி முதிர்வுடைய உண்டியல்களை வாங்குவது என்பதை மட்டும் நிர்ணயிக்கத் திறமை வேண்டியிருந்தது. தவிர, கருவூல உண்டியல்கள் தோன்றியபின், அழைப்புக் கடன் கொடுப்பதை விட நேரடியாகத் தாமே உண்டியல்களை வாங்குவது சிறந்ததாகப் பாங்குகள் நினைக்கலாயின. ஏனென்றால், எவ்வளவு பலமான கழிவகமாயினும் அதற்குக் கொடுக்கும் கடன் அரசாங்கத்துக்குக் கொடுக்கும் கடனைப் போல உறுதியானதாகாது.

யுத்த கால வருமானப் பற்றுக்குறை (deficit) கருவூல உண்டியல் வளர்ச்சிக்குக் காரணமாக இருந்தது போலவே, குறுங்கால அரசாங்கப் பத்திரங்கள் பேரளவில் வெளிவரவும் காரணமாக இருந்தது. பழையவை முதிர முதிரப் புதியன வெளி வந்து கொண்டேயிருந்தன. ஆகவே, பண அங்காடி

இவைகளைக் குறுங்கால முதலீட்டுக்கு வசதியானவைகளாக ஏற்றது. தரகு இலாபம் (jobbing profit) சம்பாதிக்கவும் இவை வாய்ப்பளித்தன. ஆயினும், துவக்கத்தில் இவைகளில் பேரம் அற்பமாகவே இருந்தது. ஏனெனில், வட்டி வீதம் ஏறினால் அவைகளின் மதிப்பு (உண்டியலை நோக்க) அதிகம் குறையக்கூடும் என்கின்ற பயம் இருந்தது. தவிர, இவைகளை இங்கிலாந்து பாங்கிடம் விற்கவோ ஈடு வைக்கவோ முடியா திருந்தது.

ஐந்தாவது நிலை, ஜூன் 1932-லிருந்து மலிவுப் பணக் கொள்கை (cheap money policy) நடைமுறையில் இருந்த காலம். பாங்கு வீதம் 2 சதவீதத்துக்குக் குறைக்கப்பட்டு அற்ப மாறுதலோடு சுமார் 19 ஆண்டுகளுக்கு நிலைத்தது. இந்த மலிவுப் பணக் காலம் கழிவகங்களின் அமைப்பில் முக்கியமான மாறுதல்களை உண்டாக்கியது. கழிவகம் இப்போது பெரும்பாலும் பாண்டுகளில் ஈடுபடலாயிற்று. இந்த மாறுதலுக்குக் காரணங்கள் (1) வட்டி வீதம் குறைந்து குறுங்காலப் பத்திரங்களின் மதிப்பு ஏறினதும், (2) தரகு இலாபம் (Jobbing Profits) நிறையக் கிடைத்ததும், ஆகும் இதை நோக்க உண்டியல் பேரம் இலாபகரமாக இல்லை. ஏனெனில், உண்டியல்களின் கிடைப்பு அருகிவிட்டது. இதற்குக் காரணங்கள்: (1) பன்னாட்டு வர்த்தகத்தில் ஏற்பட்ட மந்தம், (2) அதிகாரிகள் ஒரு குறிப்பிட்ட அளவுக்கு மேல் கருவூல உண்டியல்களை வெளியிட விரும்பாமை, (3) அயல் நாட்டினர் உண்டியல்களுக்குப் போட்டியிட்டது, (4) அதே சமயத்தில் தீர்வக பாங்குகளின் தேவை மலிவுப் பணக் கொள்கையால் அதிகரித்தது, ஆகியவை. இவ்வகைக் காரணங்களால் உண்டிய லுக்கேற்பட்ட போட்டியின் விளைவாய்க் கழிவு வீதம் கழிவகங்கள் கடன் வாங்கும் வீதத்துக்கு இணையானது. இந் நிலையில் கழிவு அங்காடியின் (discount market) ஆயுட் காலம் முடிந்துவிட்டது போலத் தோன்றியது. பாங்குகளும், அங்காடி யும் அப்போது அநேக நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டன. அவைகளில் சில வருமாறு :

1. தீர்வக பாங்குகள் உண்டியல் ஈட்டின் பேரில் கொடுக்கும் அழைப்புக் கடன்களுக்கு வட்டியைக் குறைத்தன; ஆனால் பத்திர ஈட்டின் பேரில் கொடுக்கும் கடனுக்கு வட்டி வீதத்தைக் குறைக்கவில்லை.

2. உண்டியல் கழிவு வீதத்துக்குக் குறைவான வீதத்தில் உண்டியல்களை வாங்குவதில்லை என்றும் டெண்டர் செய்வதில்லை

என்றும் பாங்குகள் ஒப்புக்கொண்டன. இப்படிச் சிறு அளவு இலாபமேனும் கிடைக்குமென்பது உறுதியானதால் கழிவகங்கள் உண்டியல்களை வாங்க முன்வந்தன. சில கழிவகங்கள் தம் சக்திக்கு மிச்சமாகவே உண்டியல்களை வாங்க முன்வந்தன. சில கழிவகங்கள் உண்டியல்களைத் தாங்கள் வைத்திருக்க எண்ணாத போதிலும் டெண்டர் செய்தன. இதைத் தடுக்க கீழ்க்கண்ட நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டது.

3. கழிவகங்கள் ஓர் ஒப்பந்தக் குழுவை (Syndicate) நிறுவின. எல்லோரும் குறிப்பிட்ட ஒரே வீதத்தில் டெண்டர் செய்வதாகவும், தத்தம் நிதி நிலைமையைப் பொறுத்து டெண்டரைப் பங்கிட்டுக் கொள்வதாகவும் முடிவு செய்யப் பட்டது. சாதாரணமாக இந்தக் குழு அரசாங்கம் விற்க முன்வந்த உண்டியல் அனைத்தையும் வாங்க முன்வரும். இது டெண்டரில் போட்டியே இல்லாமல் செய்ததாயினும் அரசாங்கம் இதற்கு உடந்தையாக இருந்தது.

4. உண்டியல்களுக்குப் போட்டியிடுவதில்லை யென்றும், கழிவகங்களின் மூலமாகவே தம் தேவையைப் பெற்றுக் கொள்வதாகவும், உண்டியல் வெளி வந்த அதே வாரத்தில் உண்டியல்களை வாங்குவது இல்லை என்றும் பாங்குகள் ஒப்புக் கொண்டன.

1935-ஆம் ஆண்டின் மத்தியப் பகுதிக்குள் இவ்வித நடவடிக்கைகளால் பாங்கிடம் கடன் வாங்கும் வட்டி வீதத்துக்கு மேல் டெண்டர் வீதங்கள் இருக்கும் நிலை ஏற்பட்டது. ஆயினும், உண்டியல் பேரங்கள் அற்பமான இலாபத்தையே கொடுத்தன. ஆகவே, வருமானத்தைப் பெருக்க, கழிவு அங்காடி மேலும் மேலும் பாண்டுகளை வாங்க முற்பட்டது. அரசாங்க பாண்டு களின் விலை ஏறிக் கொண்டே இருந்ததும், பாண்டு ஈட்டின் பேரில் கொடுக்கும் அழைப்புக் கடன்களுக்கு வட்டி வீதத்தை பாங்குகள் குறைத்ததும், பாண்டு பேரத்தில் ஈடுபடுவதை உறுதி செய்தன. அதேபோது கழிவகங்களைத் தொகுத்து எண்ணிக்கையைக் குறைக்க இங்கிலாந்து பாங்கு முயன்று வந்தது. 1938-க்குள் பழைய 24 அகங்கள் 18 ஆகக் குறைக் கப்பட்டன.

ஆறும் நிலையாக இரண்டாம் யுத்த காலத்தைக் குறிப் பிடலாம். யுத்தம் ஆரம்பித்த உடனேயே மைய பாங்கு நெடுங் கால வழக்கத்தைக் கைவிட்டு, கழிவகங்கள் வழியாகவன்றி

நேரடியாகவே பாங்குகளுடன் உண்டியல் பேரம் ஆரம்பித்தது. பொதுத்துறை நடவடிக்கையால் பாங்குகளுக்குப் பணமுடை உண்டாகாமலிருக்க, அவைகளுக்கு எளிதில் பணம் கிடைக்க, இப்படிச் செய்யப்பட்டது. இதுவும் தவிர, 1940 ஜூனில் கருவூல உண்டியல்களுக்குப் பதிலாகக் கருவூல வைப்பு இரசீதுகள் (Treasury Deposit Receipts) வெளி வந்தன. இவைகளை 6 மாதக் கருவூல உண்டியல்கள் எனலாம். இவைகளை அதிகாரிகள் நேரடியாகப் பாங்குகளுக்குக் கொடுத்தனர். இவை பிறருக்கு மாற்றும் உரிமையுடையன அல்ல. தவிரவும், இதேபோது பாங்குகளுக்கும் கழிவு அங்காடிக்கும் கிடைக்கும் கருவூல உண்டியல்களின் அளிப்பும் குறைந்தது. ஏனெனில், அயல் நாடுகள் இங்கிலாந்தில் குவிந்த ஸ்டெர்லிங் இருப்புகளை உண்டியல் வாங்க ஆண்டன. பிறகு உள்நாட்டுத் தேவையைப் பூர்த்தி செய்யக் குழாய் வழியாக உண்டியல்கள் வெளியிடப் பட்டன. இப்படியாக யுத்த கால அரசாங்க நடவடிக்கைகள் கழிவகங்களின் பூர்வப் பணிகளுக்கு முடிவு கட்டுவது போலத் தோன்றின. ஆனால் யுத்தம் முடிந்ததும், புனர் நிர்மாண வேலைக்காகக் குறுங்காலப் பத்திரங்களைத் தொழிலகங்கள் விற்றபோது, அவைகளைக் கழிவகங்கள் வாங்கலாயின. இவ்விதமாக இவைகளுக்கு ஒரு புதிய பணி தோன்றலாயிற்று.

**கழிவகங்களின் எதிர் காலம்:**

வணிக உண்டியல்கள் அருகியும் கருவூல உண்டியல்களின் விளைவு அற்பமாயும் இருந்த பெருமந்த காலத்தில் கழிவகங்கள் அரசாங்கக் குறுங்காலப் பத்திரங்களை நாடின. நெடுங்காலப் பாண்டுகள், முதிரும் தருவாயில் குறுங்காலப் பாண்டுகளாகின்றன. இங்கிலையில் இவை நீர்மை மிக்கவை களாகின்றன வாதலால் நிதிநிலையங்கள் இவைகளை விரும்புகின்றன. இவை களிலிருந்து பெறும் விளைவு கழிவகங்கள் கடன் வாங்கும் வீதங்களைவிட ஏற்றமாயிருக்கிறது. வெளியில் கடன் வாங்கி கழிவகங்கள் இப் பாண்டுகளை வாங்கின. இதிலிருந்த ஒரு ஆபத்து, விற்க வேண்டி வந்தால், உண்டியல்களை விற்பதில் ஏற்படும் இழப்பைவிட, பாண்டுகள் விற்பதில் இழப்பு அதிகம்; ஆகவே கடன் வாங்கி இப்பேரம் செய்வது ஆபத்துடையதாகத் தோன்றியது. ஆகவே இங்கிலாந்து பாங்கு கழிவகங்களைப் பலமுடையனவாக்க விரும்பி பலவற்றை ஐக்யமாகும்படி செய்தது; மூலதனத்தை அதிகப்படுத்தச் செய்தது. பாங்குகளும் நிதிகளும் தற்போது தாராளமாக பாண்டுகளின்மீது கழிவகங் களுக்குக் கடன் தருகின்றன. இங்கிலாந்து பாங்கும்

இப்பாண்டுகளை தக்க ஈடாக ஏற்றுக் கொள்கிறது. ஆனால் இவ்வகை மேலிடத்து ஆதரவுக்கு எல்லை வகுப்பன பாண்டு வாங்குவதில் ஈடுபடும் தொகையும், கடன் பெற்று வாங்கி வைக்கும் பாண்டுகளின் முதிர்வுக் காலமும் ஆகும். ஈடுபடும் தொகை மூலதனத்தைப் போல எட்டு மடங்கு வரைக்குப் போகலாம்; பெரும்பாலும் மிகக் குறுங்காலப் பாண்டுகளாக இருக்க வேண்டும் என்பது வழக்காருக உள்ளது. கடன் வாங்கி வைக்கும் பாண்டுகளின் எஞ்சிய ஆயுள் 5 வருஷங்களுக்கு மேற் படக்கூடா என்பதும் வழக்காறு. உண்மையில் பாதிக்கு மேல் இரண்டு ஆண்டுகளுக்குள் முதிர்வனவா யுள்ளன.

இவ்விதப் பணியினால் நாட்டுக்கு என்ன நன்மை? மீட்சிக் காலம் அண்மி வரும்போது முதலீட்டு அங்காடிகளில் பாண்டுகளுக்குத் தேவை குறைகிறது. இப்படி முதிர்ந்து வரும் பாண்டுகளை ஏற்கக்கூடிய நிறுவனம் அரசாங்கத்துக்குத் தேவைப்படுகிறது. மலிந்து போகாமல் இம் முதிர்வு நெருங்கிய பாண்டுகளை கழிவகங்கள் எடுத்துக் கொள்கின்றன. சிலபோது அரசாங்கம் வெளியிடும் பாண்டுகளே குறுங்காலப்பாண்டுகளாக இருக்கலாம்; இவைகளை ஏற்போர் வேண்டும். இதனால் குறைந்த வட்டிகளில் பாண்டுகளை வெளியிட முடிகிறது.

1957 வரையிலும் வட்டி வீதங்கள் நிலையாயிருந்த காலத்தில் கழிவகங்கள் பாண்டு பேரத்தில் ஆதாயமுடன் இருந்தன. பின்னர் வட்டி வீதங்கள் ஏறுவதும் திடீரென்று மாறுவதும் நிகழ்ந்தபோது நஷ்டம் ஏற்பட்டது. ஆகவே பாண்டுவாங்குவதில், விற்பதில் தயக்கம் தோன்றலாயிற்று. இங்கிலையில் கழிவகங்கள் பாண்டுகளின் அன்றாட பேரத்தில் தரகர்களாக, பாண்டுவிலை நிலைபேற்றில் உதவியாக இருக்கின்றனர் என்று கூறுவதற்கில்லை. இவ் வேலையை அரசாங்கத் தரகன் செய்ய வேண்டி வருகிறது.

குறுங்காலப் பாண்டுஅங்காடி யிலிருந்தே கழிவகங்கள் விலகிவிட்டால் என்ன நேரிடும்? பாங்குகள் — விரும்பா விட்டாலும் — தலையிட வேண்டிவரும். இவை தவறினால், மைய பாங்கு தலையிட வேண்டும். கழிவகங்கள் கருவூல உண்டியல் களைக் கைவிட்டால் என்ன நேரும்? இப்போது கழிவகங்களின் இடையீடு பாங்குகளுக்கு வசதியாக இருக்கிறது. அழைப்புக் கடனை மீட்டு நீர்மையைக் காக்க முடிகிறது. வேண்டிய முதிர் வுடைய உண்டியல்களைப் பெறலாம்; பாங்குகளிடையே பாக்கியை எளிதில் அன்றாடம் தீர்த்துக் கொள்ளலாம். அரசாங்க

நடவடிக்கைகளின் காரணமாக நிகழும் ரிசர்வு விகிதத் தாக்கு தல்களைச் சமாளிக்கலாம்.

ஆனால், பாங்குகளிடையே ஏற்படும் பாக்கிகளைச் சரிசெய்ய அமெரிக்காவில் காணும் முறையை ஆளலாம். அங்கு ரிசர்வு குறைவு காணும் அங்கப் (member) பாங்குகள் எச்ச ரிசர்வுடைய பாங்குகளிடமிருந்து தற்காலிகக் கடனாக ரிசர்வைப் பெறு கின்றன. அரசாங்க நடவடிக்கைகளின் விளைவை நேரடியாக மைய பாங்கின் உதவியைக் கொண்டு சமாளிக்கலாம்.

தற்போது கழிவகங்கள் இன்றியமையாதன என்று கூற இடமில்லையாயினும் அவை பல வசதிகளைத் தருகின்றன. லண்டன் பண அங்காடியில் அநேக 'வெளி' பாங்குகள் (அயல் நாட்டு, உள்நாட்டு பாங்குகள்) உள்ளன. இவை வெளி உலக பாங்குகளுடன் தொடர்புடையன. பன்னாட்டுப் பண பேரங்கள் கட்டுப்பாடுகளிலிருந்து விடுபட்டபோது, லண்டன் பணமாற்று வியாபாரிகளிடையே பணப் பெயர்ச்சி அதிகரித்தது. கழிவகங்கள் கருவூல உண்டியல்களுக்கு ஒரு உயிர்ப்புள்ள அங்காடியை செயற்படுத்துவது மூலம் இப் பெயர்ச்சிகளுக்கு வசதி செய்கின்றன. பெரிய பாங்குகள் அவைகளின் பணிகளை மேற்கொள்ளக் கூடுமாயினும், தற்போதுள்ள போட்டிச் சூழ்நிலை இல்லாமல் போகும். லண்டனின் கேந்திர நிலைக்குக் குந்தகம் ஏற்படலாம்.

தவிர இன்னும் ஓரளவு வணிக உண்டியல்கள் சம்பந்தமான வேலையைக் கழிவகங்கள் செய்கின்றன. இவ்வுண்டியல்களைத் தரப்படுத்திப் பாங்குகளுக்கு விற்கின்றன. கழிவகங்கள் இல்லையேல் இவ் வேலையை அதிகச் செலவுடன் பாங்குகளே தனித்தனிச் செய்து கொள்ள வேண்டி வரும். இவ் வேலை அவைகளின் தொழிலுக்கு நேரான தொடர்புடையது அன்று.

உள்நாட்டுப் பணத்துறைக் கட்டுக்கோப்பின் மையத்தி லிருந்து பணி ஆற்றுவதுடன், லண்டன் பன்னாட்டுப் பண மைய மாயிருப்பதிலும் கழிவகங்கள் பங்குடையன. அயல்நாட்டுப் பாங்குகள் தம் நிதிகளை நீர்மையுடன் லண்டனில் வைத்திருக்க உதவுவதும், லண்டனில் கிளையில்லாத அயல்நாட்டுப் பாங்கு களுக்குப் பணி செய்து தரகு சம்பாதிப்பதும் கழிவகங்கள் செய்யும் வேலை. அயல்நாட்டுப் பாங்குகள் தங்கள் நிதியங்களை வருவாயுடன் லண்டனில் வைத்திருக்க கழிவகங்கள் உண்டியல்களைத் தருவது மூலம் உதவுகின்றன. அயல்நாட்டுப்

பாங்குகள் கழிவகங்களிடம் அமைப்புப் பணம் வைத்திருக்கின்றன. பாங்குகள் இப் பணிகளை எல்லாம் செய்யக் கூடுமாயினும், கழிவகங்கள் போன்ற சில நிறுவனங்களின் நெகிழ்ச்சி பயனுடையதாக இருக்கிறது.

**கருவூல உண்டியல்கள்** (Treasury Bills)

1876-இல் பேஜட் (Bagehot) என்ற பொருளாதார நிபுணரை அரசாங்கம் எப்படிக் குறுங்காலக் கடனைப் பெறலாம் என்று யோசனை கேட்டது. அதற்கு முன் எக்ஸ்செக்கர் உண்டியல்கள் (Exchequer Bills) அரசாங்கத்தால் விற்கப்பட்டு வந்தன. அவைகளைவிடத் திருப்திகரமான ஓர் உண்டியல் வெளியிடுவதைப் பற்றி ஆலோசனை கேட்டபோது, கருவூல உண்டியல்களை வெளியிட்டுப் பெறலாம் என்று பேஜட் யோசனை கூறினார். இந்த உண்டியல் வர்த்தக உண்டியலுக்கு ஏறக் குறைய ஒப்பான தன்மையை உடையதாகையால் தனி பாங்குகள் குறுங்கால முதலீடு செய்வதற்கு வசதியாக இருக்கும் என்றார். ஆரம்பத்தில் பட்செட் பற்றுக்குறையைச் சமாளிக்கக் கருவூல உண்டியல்கள் தற்காலிகமாக ஆளப்பட்டன. இப்படித் தோன்றிய கருவூல உண்டியல் இரண்டாம் யுத்தம் துவங்கும் வரை குறுங்காலக் கடன் வாங்குவதற்குச் சிறந்த கருவியாக இருந்து வந்தது.

கருவூல உண்டியல்கள் இருவகையில் வெளியிடப்படு கின்றன: (1) டெண்டர் உண்டியல்கள் (Tender Bills). (2) குழாய் உண்டியல்கள் (Tap Bills). இந்த இரண்டு பெயர் களும் உண்டியல் எந்த முறையில் வெளியிடப்படுகின்றது என்பதைக் காட்டுகின்றன. டெண்டர் உண்டியல்கள் எனப்படுபவை பொதுமக்களுக்கு டெண்டரின் மேல் விற்கப் படுபவை. குழாய் உண்டியல் இடைவிடாது அரசாங்க இலாக்காக்களுக்கு விற்கப்படுபவை. 1939 முதல் யுத்த காலம் வரை குழாய் உண்டியல்கள் அரசாங்க இலாக்காக்களுக்கும் ஏஜெண்டுகளுக்கும் மட்டும் விற்கப்பட்டன. இலாக்காக்களில் பணம் எச்சமாக இருக்கும்போது, எச்சத்தை அவை இவ்வழியில் முதலீடு செய்யும். டெண்டர் உண்டியல்கள் அரசாங்கத்தின் கடன் வகையில் சேரும். ஆனால் குழாய் உண்டியல்கள் பெயர் அளவில் மட்டும் தான் கடன். இலாக்காக்களுக்குள் இருந்த எச்சப் பணத்தைக் கருவூலத்துக்கு மாற்றுவது உண்மையில் கடனாகாது. ஏனெனில், எந்த இலாக்காவில் இருந்தாலும் பணம் அரசாங்கத்தினுடையதே. நிதி விவகாரங்களுக்காக அரசாங்கம் எக்ஸ்செக்கர் என்றும், இலாக்காக்கள் என்றும் இரண்டு பகுதி

களாகப் பிரிக்கப்பட்டு, ஒன்றுக்கொன்று கடன் கொடுத்துக் கொள்கின்றன. இலாக்காக்கள் எக்ஸ்செக்கருக்குக் கடன் தரும்போது, இக் கடன் 'வழிவகை அட்வான்சு' (Ways and Means Advances) என்ற தலைப்பின் கீழ் எழுதப்படலாம்; அல்லது குழாய் உண்டியல் விற்பனையின் கீழ் எழுதப்படலாம். இருவகையிலும் கடன் நாட்டின் கடனாகும். சாதாரணமாக அரசாங்க இலாக்காக்களுக்குச் செல்லும் பணம் அனைத்தும் நாட்டின் கடனைத் தீர்க்கப் பயன்படுத்தப்படுகிறது என்று நாம் நினைக்கலாம். இது உண்மையே. ஆனால், கணக்குப்படி பணத்தைத் தந்த இலாக்காக்காளுக்குக் கருவூலம் கடன்பட்டதாகிறது. ஆகவே, கடனுக்குரிய ஆள் மாறுகிறதே ஒழியக் கடன் தொகை மாறுவதில்லை. ஆனால், குழாய் உண்டியல்களுக்கும் டெண்டர் உண்டியல்களுக்கும் உள்ள வேறுபாடு முக்கியம்.

குழாய் உண்டியல்கள் எனப்படுபவை அரசாங்க இலாக்காக்களுக்கு வேண்டியபோது கிடைக்கும். இதனாற்றான் குழாய் உண்டியல் எனப்படுகின்றன. ஆனால், பொது மக்களும் கழிவகங்களும் புதுக் கருவூல உண்டியல்களை விரும்பினால் டெண்டர் மூலமாகத்தான் வாங்க முடியும். அநேக ஆண்டுகளாக 3 மாதத்தில் முதிர்வுடைய உண்டியல்களே வெளியிடப்பட்டு வருகின்றன. அவை £ 5,000 அல்லது £ 10,000 இனங்களில்தான் வெளியிடப்படுகின்றன. ஆனால், டெண்டர்கள் குறைந்தபட்சம் £ 50,000-க்கு இருக்க வேண்டும். டெண்டர் செய்பவர்கள் £ 100 மதிப்புடைய ஓர் உண்டியலுக்கு இத்தனை பவுண்டுகள் கொடுக்கத் தயார் என்று டெண்டர் செய்வார்கள். £100 பவுண்டு உண்டியலுக்கு 99 பவுண்டு கொடுக்கத் தயாராயிருந்தால் கழிவு ஆண்டுக்கு 1 சதவீதமாகிறது. கழிவகச் சிண்டிகேட்டு வாங்கத் தயாராக இருக்கும் விலை வீதத்தில், அவைகளுக்கு ஒரு பகுதியும், மற்றவை வெளியார் டெண்டர்களுக்கும் ஒதுக்கப்படும். எந்தக் கழிவு வீதத்தில் உண்டியல்களுக்கு டெண்டர் செய்வது என்பதை நிர்ணயிக்கும்போது கழிவங்காடி கருதுவன :

(1) உண்டியல்களின் முதிர்வுத் தேதி. முதிர்வு நாளில் ரொக்கம் தேவையா, அல்லவா என்று ஆலோசிக்கப்படும். 1947-க்கு முன் டிசம்பர் 31, ஜூலை 30ஆந் தேதிகளில் முதிரும் உண்டியல்கள் பெரிதும் விரும்பப்பட்டன. ஏனெனில், இந்தத் தேதிகளில்தான் எல்லாப் பாங்குகளும் தமது ஆண்டு அல்லது அரை ஆண்டு அறிக்கைகளை (Statements) வெளியிடும். இந்தத் தேதிகளில் வழக்கமான குறைந்தபட்ச 10% ரொக்க விகிதத்தை அறிக்கைகளில் காட்டவேண்டும். மற்றத் தேதிகளில் ரொக்க

நிலையைச் செம்மையானதாகக் காட்ட 'சன்னல் சோடனை' (Window Dressing) செய்வது வழக்கம். ஆனால், 1947ஆம் ஆண்டிலிருந்து பாங்குகள் சோடனைப் பழக்கத்தைக் கைவிட்டு, ஆண்டு முழுவதும் எந்நாளும் 8 சதவீத ரொக்கத்தை வைத்திருக்க முடிவு செய்தன. ஆகவே, உண்டியல் முதிர்வுத் தேதி இப்போது அவ்வளவு முக்கியம் அன்று.

(2) வரப்போகிற வாரத்தில் பாங்குகளுக்கு உண்டியல் தேவைப்படுமா? பாங்குகள் தமக்குத் தாராளமாக அழைப்புக் கடன் கொடுக்குமா? பாங்குகள் கழிவு அங்காடியில் ஏற்கனவே உள்ள உண்டியல்களை வாங்க முன் வந்தால்தான் கழிவகங்களுக்குப் புது உண்டியல்களை வாங்கப் பணம் இருக்கும். அடுத்த வாரத்தில் கருவூல உண்டியல்களின் வெளியீட்டுத் தொகை, முதிரும் தொகைக்கு அதிகமாக இருக்குமா குறைவாக இருக்குமா? முதிர்வு அதிகமானால் அரசாங்கத்தினிடமிருந்து அங்காடிக்குப் பணம் வரும். இன்றேல் அரசாங்கத்துக்குப் பணம் செல்லும்.

(3) வெளியார் போட்டி. வெளியார் போட்டியிட்டால் கழிவகங்கள் மலிவாக உண்டியல்களை வாங்க முடியாது.

அடுத்தபடி, குயாய் வெளியீட்டுக்கும் டெண்டர் வெளியீட்டுக்கும் உள்ள தொடர்பைப் பார்ப்போம். இதை அறிவதற்கு அரசாங்க நிதி நிர்வாக முறைகளை ஓரளவு தெரிந்துகொள்ள வேண்டும். மைய அரசாங்கத்தின் மொத்தச் செலுத்துகள் (Payments) அதன் நடப்பு வருவாய்க்கு (Current Revenue) எச்சமாக இருந்தாலொழிய, நாட்டின் கடன் மொத்தத் தொகை ஏறாது என்பதை நாமறிவோம். இப்படியே வருவாயைவிடச் செலவு குறைவாயிருந்தாலொழியக் கடன் தொகை குறையாது. ஒருபோது கருவூலம் பற்றாக்குறை (deficit) நிலையில் இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். இதை மூன்று இடங்களிலிருந்து கடன் வாங்கிச் சமாளிக்கலாம்.

(1) இங்கிலாந்து பாங்கிடமிருந்து கடன் வாங்கலாம். வழிவகை அட்வான்சு (Ways and Means Advance) என்ற வகையில் அரசாங்கத்துக்குப் பாங்கு கடன் கொடுக்கலாம்; அல்லது குழாய் வழியாக அல்லது டெண்டர் உண்டியல்களை வாங்கலாம். இப்படி அரசாங்கம் கடன் வாங்கிச் செலவு செய்வதன் விளைவாகப் பாங்குகளின் ரொக்கம் உயர்கிறது. அதனால் பாங்கு வைப்புக்களும் பன்மடங்கு பெருகுகின்றன. ஆகவே, இப்படிக் கடன்

வாங்குவது தற்காலிகத் தேவைகளுக்கு மட்டுமாக இருக்கும். வருவாய் வந்ததும் அல்லது வேறு வகைகளில் கடன் பெற்றதும் இந்த அட்வான்சைக் கருவூலம் பைசல் செய்யும். எதிர்கால வருவாயையும் செலுத்துகளையும் சரியாக மதிப்பிடுவது கருவூலத்தின் ஒரு முக்கிய வேலையாததால், தற்காலிகக் கடன் அவசியமில்லாதபடி கருவூலம் நடந்துகொள்ள வேண்டும்.

(2) வர்த்தக பாங்குகளிடமிருந்து கடன் வாங்கலாம். இதை நேராக அல்லது கழிவு அங்காடி வழியாகச் செய்யலாம். எப்படியானாலும் அரசாங்கம் கடன் வாங்குவது அங்காடியில் பண வாட்டத்தை உண்டாக்கும். ஏனெனில், பணம் அரசாங்கத்தின் மைய பாங்குக் கணக்கில் போய்ச் சேர்வதால் பாங்குகளின் ரொக்க வீதம் குறைகிறது. பாங்குகள் உண்டியல்களைப் பெற்று ரொக்கத்தை இழக்கின்றன. இவ் வகையில் அரசாங்கம் கடன் வாங்குவது இங்கிலாந்து பாங்கிடமிருந்து தான். கடன் வாங்கியது காரணமாகப் பாங்குகளிடம் சேரும் ரொக்கத்தை வடிப்பதற்கு இது நல்ல வழி.

(3) அரசாங்கம் பொது மக்களிடமிருந்து கடன் வாங்கலாம். பொது மக்கள் என்பது இங்கு பாங்குகள், கழிவகங்கள் போக மீதி நிதி நிலையங்கள் எல்லாவற்றையும். இங்கிலாந்து பாங்கு, வர்த்தக பாங்கு ஆகியவைகளிடமிருந்து கடன் பெறுவதற்கும், பொது மக்களிடமிருந்து கடன் பெறுவதற்கும் உள்ள முக்கிய வேற்றுமை, பொது மக்களிடமிருந்து கடன் வாங்குவது பாங்கு வைப்புகளைக் குறைக்கக் கூடியது. பொதுமக்கள் அரசாங்கச் செக்கூரிட்டிகளை வாங்கிக்கொண்டு பதிலாக ரொக்கத்தை இழக்கிறார்கள்.

இப்படி மூன்று இடங்களிலிருந்து கடன் வாங்குவதோடு, அரசாங்கம் தன் இலாக்காக்களிடமிருந்தே கடன் வாங்கலாம். இலாக்காக்கள் கருவூல உண்டியல்களில் முதலீடு செய்யுமானால் அது குழாய் வெளியீட்டை அதிகப்படுத்தும், ஆனால், கருவூலத்திற்கு நிதித் தேவை இல்லாதபோதும் இலாக்காக்கள் குழாய் உண்டியலை வாங்கக்கூடும். அப்போது கருவூலம், வந்த ரொக்கத்தை அரசாங்கம் பாங்குகளிமிடருந்தும் பொது மக்களிடமிருந்தும் வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கப் பயன்படுத்துகிறது. அதாவது அரசாங்கம் அங்காடி உண்டியல்களை (அதாவது, பாங்குகளிடமும் கழிவு அங்காடியிடமும் உள்ள உண்டியல்களை) வாங்கும். அப்போது குழாய் உண்டியல் வெளியீடு அதிகமான அளவுக்கு, டெண்டர் வெளியீடு குறையும்

என்பது வெளிப்படை. டெண்டர் வெளியீடு குழாய் வெளியீடாக மாறுகிறது.

இதன் விளைவாக, பாங்குகளின் உண்டியல் சொத்து குறைகிறது. ஆனால், இப்படி ஏற்படும் சொத்துச் சுருக்கத்துக்கு நேராக அவைகளின் பொறுப்பிலும் சுருக்கம் ஏற்படுகிறது. மக்கள் வைப்புகள் குறையும். ஏனெனில், இலாகாக்கள் எச்ச வரவு பெற்றன என்றால், மக்களிடமிருந்தே (பாங்கு வைப்புக் குறைவது மூலம்) பெற்றிருக்க வேண்டும். மக்கள் நீர்மையிழப்பதால் செக்கூரிட்டிகளின் விலை இறங்கும். இந்த நீர்மைக் குறைவைத் தடுக்க வேண்டுமானால், இலாக்காக்களின் எச்ச ரொக்கத்தைக் கொண்டு அரசாங்க நெடுங்காலக் கடன் தாள்களை வாங்கலாம். ஆனால், இது முடியாமல் இருக்கலாம் ஏனெனில், நெடுங்காலக் கடன் ஒன்றும் அப்போது முதிர்ந்து வராமலிருக்கலாம். இந்த நிலையில் செக்கூரிட்டி விலைகள் விழாமல் தடுப்பதற்கு வழி, இலாக்காக்கள் தம்முடைய எச்ச ரொக்கத்தைக் குழாய் உண்டியல்களில் முதலிடு செய்யாது, நெடுங்காலக் கடன்களை மக்களிடமிருந்து வாங்குவதாகும். இப்படிச் செய்தால் இலாக்காக்களுக்குச் சேர வேண்டிய தொகையைப் பொதுமக்கள் ரொக்கமாகத் தராது செக்கூரிட்டியாகத் தந்தது போலாகும். இம்முறையை ஆண்டால் பாங்குத் திட்டத்துக்கு யாதொரு பாதிப்பும் இருக்காது.

இலாக்காக்கள் இப்படி நெடுங்காலச் செக்கூரிட்டிகளை வாங்குவது அரசாங்க செக்கூரிட்டி அங்காடியை வழிப்படுத்த ஒரு நல்ல கருவியாகும். நெடுங்காலத்துக்கு இலாக்காக்களின் எச்சப் பணம் குழாய் உண்டியல்களில் வைக்கப்பட்டு, செக்கூரிட்டி அங்காடியை வழிப்படுத்த அவசியம் வந்தபோது, திடீரென்று செக்கூரிட்டிகளாக மாற்றினால், செக்கூரிட்டிகளின் விலைகளையும், விளைவுகளையும் (yields) எளிதில் நிர்ணயிக்கலாம். இலாக்கா நிதிகள் பல கோடி பவுண்டு அளவில் இருப்பதால், ஒரே சமயத்தில் ஆளக் கூடியதாகையால், மிகச் சக்தி வாய்ந்த கருவியாக இருக்கும்.

செக்கூரிட்டி விலைகளை வழிப்படுத்துவதற்கு எப்படி இலாக்கா நிதிகள் பயன்படும் என்பதை விளக்குவோம். ஓர் இலாக்காவில் குழாய் உண்டியல் இருப்பதாக வைத்துக் கொள்வோம். இவைகளைப் பணமாக்க அது கருவூலத்துக்கு அனுப்புகிறது. கருவூலம் வேண்டிய ரொக்கத்தை மைய

பாங்கிடமிருந்து வழிவகைக் கடனுகப் பெறுகிறது. மைய பாங்கு இலாக்காவின் கணக்கில் வரவு எழுதுகிறது. அது பொதுத்துறை வைப்புகள் (Public Deposits) என்பதன் கீழ்க்காணப்படும். இப்படித் தாம் பெற்ற ரொக்கத்தை இலாக்காக்கள் பொதுமக்களிடமிருந்து செக்கூரிட்டிகளை வாங்குவதற்குப் பயன்படுத்தும். பொதுமக்களுக்கு இங்கிலாந்து பாங்கின் மேல் டிராஃப்ட் (draft) தரப்படும். அவர்கள் தாம் பெற்றதை வர்த்தக பாங்கில் வைப்பார்கள். இதனுல் பாங்கர் வைப்புகள் ((Bankers' Deposit) உயரும். இதனுல் பாங்குகளின் ரொக்க வீதம் (Cash ratio) வழக்கமான அளவுக்கு மேற்படும். ஆனுல் பிறகு பாங்குகள் கருவூல உண்டியல்களை வாங்கும்போது ரொக்கம் வெளியேறும். உண்டியல்களை விற்ற அரசாங்கம், பெற்ற தொகையைக் கொண்டு தான் வாங்கிய வழிவகைக் கடனைத் தீர்க்கும். இப்படிப்பட்ட நடவடிக்கைகளின் முடிவாக பொதுமக்கள் தம்மிடமிருந்த நெடுங்காலச் செக்கூரிட்டிகளைக் குறைத்துக் கொண்டு அதே அளவுக்குப் பாங்கு வைப்புக்களை அதிகப்படுத்திக் கொண்டிருப்பார்கள். மக்களிடம் ரொக்கத் தன்மை அதிகமாகிறது. வட்டி வீதங்கள் விழ ஆரம்பிக்கின்றன. மக்களிடம் ரொக்கத்தன்மை அதிகமாவது இலாக்காக்களின் ரொக்கத்தன்மை குறைவதன் நேர் விளைவாகும். இப்போது இலாக்காக்கள் குழாய் உண்டியல்களை வைத்திராமல் நெடுங் காலச் செக்கூரிட்டிகளை வைத்திருக்கும். மலிவுப் பணக் கொள்கையைக் கடைப்பிடிக்க இம்முறையை ஆளலாம்.

**உண்டியல்களும் உண்டியல் அங்காடியும் (Bills and Bill Market)**

இப்போது பாங்குகளும் கழிவகங்களும் வர்த்தக உண்டியல் சம்பந்தமாக எடுக்கும் நடவடிக்கைகளைப் பார்ப்போம். முதல் யுத்தத்துக்கு முன் மாற்று உண்டியல்கள் (Bills of Exchange) குறுங்காலக் கடன் கருவியாகப் பணத்துறையில் முக்கியத்துவமுடையதாக இருந்தன. உண்டியல்களே கழிவகங்களின் முக்கிய வியாபாரப் பண்டம். மாற்று உண்டியல்கள் வர்த்தக பாங்குகளின் சொத்துக்களில் முக்கியமான ஒருவகை. முதல் யுத்தத்துக்குப் பிறகு தான் கருவூல உண்டியல்கள் தோன்றி அதனுடைய முக்கியத்தைக் குறைத்தன. ஆயினும், உண்டியல் பேரத்தினுடைய முக்கிய அம்சங்களை நாம் புரிந்து கொள்ள வேண்டும். இதை அறிந்தால்தான் ஏற்பகங்களின் (Acceptance Houses), கழிவகங்களின் (Discount Houses) சிறப்புப் பணிகளைப் புரிந்துகொள்ள முடியும்.

உண்டியல் என்பது ஒரு வியாபாரி தனக்குச் செலுத்தக் கடமைப் பட்டுள்ள மற்றொரு வியாபாரிக்கு விடும் உத்தரவு. உண்டியலுக்குச் சட்டப்படி சில அம்சங்கள் உள்ளன. உத்தரவு நிபந்தனையற்றிருக்க வேண்டும்; எழுத்து மூலமாய் இருக்க வேண்டும். அதில் எழுதுவோன் (Drawer) கையெழுத்திருக்கும்; எழுதப்பட்டவன் (Drawee) பெயர் குறிப்பிடப்பட்டிருக்கும். குறிப்பிட்ட அல்லது நிர்ணயிக்கக் கூடிய காலத்தில் குறிப்பிட்ட தொகையை,குறிப்பிட்ட ஆளுக்கோ அல்லது அவர்உத்தர விட்டவருக்கோ அல்லது கொண்டுவருபவருக்கோ (Bearer) கொடுக்கும்படி வரையப்பட்டிருக்கும். யாருக்கு எழுதப் பட்டுள்ளதோ (Drawee) அவர் அந்த உண்டியலின் முகத்தில் கையெழுத்திட்டு (ஏற்பு (Acceptance) செய்து) உண்டியல் எழுதினவருக்கு அனுப்புவார். ஏற்பதாவது உண்டியல் பைசல் பொறுப்பைஒப்புக்கொள்வது. உண்டியல்படி செலுத்துவதற்குத் தவணை உண்டானபடியால் பொறுப்பேற்றவர் பணம் தயாரிக்க அவகாசம் இருக்கிறது. சாதரணமாக, உண்டியல் தவணை 90 நாட்கள். ஏற்புப் பெற்ற உண்டியலைப் பெற்ற வியாபாரி உடனே அதை யாருக்காவது விற்றுப் பணம் பெறக் கூடும். மூன்று மாதத்துக்கு முதலிடத் தயாராக இருப்பவர்கள் உண்டியலை வாங்க முன் வருவார்கள். உண்டியலைக் கைக்குக் கை மாற்றலாம். சூதின்றி உண்டியலைப் பெற்ற எவருக்கும் உண்டியல் தொகையை வசூலிக்கும் உரிமையுண்டு. ஆகையினல் உண்டியலையே ஒருவர்க் கொருவர் பைசல் செய்யச் செலாவணி யாக ஆளலாம். இந்தச் செலாவணித் தன்மை (Negotiability) உண்டியலுக்குள்ளமையால் தான் பாங்குகள் உண்டியலில் முதலிடத் தயங்குவதில்லை. ஆகவே, 'ஏற்பு' செலாவணிப் பெருக்கத்துக்கு வழி செய்கிறது. ஏற்புச் செய்பவன் மதிக்கப் படுபவனுயின்அவன் ஏற்ற உண்டியல்செலாவணியாவது எளிது. யாருடைய நாணயம் பாங்குத் துறையினருக்கு நன்கு தெரிந் துள்ளதோ அவர்களுடைய ஏற்புதான் உண்டியலுக்குச் செலாவணித் தன்மையைத் தரமுடியும். ஏனெனில், அவைகளைத் தான் பாங்குகள் வாங்க ஒப்பும். உண்டியல்களை நிதி நிலையங்களிடம் செலாவணி செய்து ரொக்கமாக்குவதைத்தான் கழிவு செய்தல் (discounting) என்பது. உண்டியலை வாங்கு பவர்கள் 3 மாதம் கழித்தே உண்டியல் தொகையை வசூலிக்க முடியுமாதலால், உண்டியல் தொகையில் 3 மாத வட்டியைக் கழித்துக் கொண்டு மீதியைத் தான் கொடுப்பார்கள். ஓர் உண்டியலின் மேல் கழிவு வீதம், அதற்குச் சம்பந்தப்பட்ட ஆசாமிகளின் அங்காடி மதிப்பைப் பொறுத்தது.

ஓர் உண்டியல் ஒரு சிறு வியாபாரியின் மேல் எழுதப்பட்டிருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அவன் சிறு வியாபாரியாகையினுல் அந்த உண்டியலை அதிகக் கழிவு செய்தே விற்க முடியும். உதாரணமாக, 8 சதவீதம் அல்லது 10 சதவீதம் கழிவு செய்யப்படலாம். ஓர் உயர்ந்த நேர்மையுடைய வியாபாரி 4 சதவீதக் கழிவுடன் விற்கக்கூடும். ஆகவே, சிறு வியாபாரி கழிவு வீதத்தைக் குறைக்க வேண்டுமானுல், ஒரு பெரிய வியாபாரியினிடத்தில் தனக்குப் பதிலாக உண்டியலை 'ஏற்பு' செய்யும்படி கேட்டுக் கொள்ளலாம். இப்படித் தனக்குப் பதிலாகப் பொறுப்பை ஏற்பதற்காகத் தரகும் கொடுக்கலாம். இப்படித்தான் ஏற்பகங்கள் (Acceptance Houses) தோன்றின. ஆதியில் வியாபார நிறுவனங்களில் (Merchant firms) சில, நல்ல செல்வாக்குடையனவாய்ச் சிறு வியாபாரிகளுக்குப் பதிலாக 'ஏற்பு' செய்தன. இதனுல் மிகக் குறைந்த கழிவு வீதத்தில் பாங்குகளிடம் உண்டியல்களை விற்க முடிந்தது. 'ஏற்பு'க் கமிஷன் நிறைய வந்தது. பின்னர் இவை இந்தத் துறையில் தனிப்பணியாற்றும் ஏற்பகங்களாகப் பரிணமித்தன. இந்த ஏற்புக் கமிஷன், பொறுப்பேற்பினு லுண்டாகக் கூடிய ஆபத்தைக் கருதி நிர்ணயிக்கப்படும். ஆனுல், அநேக ஏற்பகங்கள் தம்முள் போட்டியிடுவதால் ஏற்புத் தரகு மிதமாகவே இருக்கும். ஆகவே, நேராக உண்டியல்களை விற்பதைவிட ஏற்பகங்கள் மூலம் விற்பது வியாபாரிகளுக்கு ஆதாயமானதாக இருக்கும்.

**ஏற்பகங்கள் (Acceptance Houses)**

இங்கிலாந்தில் தற்போது 17 வர்த்தக பாங்கர்கள் ஏற்புத் தொழிலைத் தம் சிறப்புத் தொழிலாகப் பின்பற்றி வருகிறுர்கள். இவர்களுடைய நிறுவனங்கள் ஏற்பகங்கள் எனப்படும். இவை பெரும்பாலும் சில புகழ்பெற்ற குடும்பங்களின் சொந்தக் (private) கம்பெனிகள். இந்தப் புகழ் தான் ஏற்புத் தொழிலில் அவைகளுக்கு முன்னேற்றம் தந்தது. பாங்குகளால் அல்லது ஏற்பகங்களால் ஏற்புப் பெறும் உண்டியல்களை இங்கிலாந்து பாங்கு, ஈடாகத் தகுந்த தாளாக (eligible paper) மதிக்கிறது. அதாவது, அது முதல் தர ரொக்கத் தன்மை உடையதாய், கருவூல உண்டியல்களுக்கும் குறுங்காலப் பாண்டுகளுக்கும் சமமாகிறது. இப்படி உயர்ந்த அளவு ரொக்கத் தன்மையும் நிச்சயமான முதிர்வும் உடையதால் இந்த வகை உண்டியல் மிகக் குறைந்த கழிவு வீதத்தைப் பெறுகிறது. ஓர் ஏற்பகத்தின் 'ஏற்பு' உண்டியலை பாங்கிலோ, கழிவகத்திலோ விற்கக்கூடும் என்ற உறுதியைத் தருகிறது. இந்த உறுதியைக் காப்பாற்ற வேண்டுமானுல் இங்கிலாந்து பாங்கு ஏற்பகத்தை

மதிக்க வேண்டும்: இம்மதிப்பைப் பெறத் தன்னிடத்தில் போதிய முதலும் ரொக்கத் தன்மையும் உள்ளதெனத் தீர்வகம் இங்கிலாந்து பாங்கை நம்பச் செய்ய வேண்டும்.

அடுத்தபடியாக, ஏற்பகங்களின் பொறுப்பு, சொத்து ஆகியவற்றின் தன்மையைப் பார்ப்போம். ஏற்பகங்களின் பொறுப்புக்களில் முக்கியமானவை:

1. நடப்பு வைப்பும் தவணை வைப்பும்

2. ஏற்புப் பொறுப்புகள் (Acceptances)

சொத்துகளின் கீழ் முக்கியமானவை : 1. ரொக்கம் (Cash). 2. இங்கிலாந்தில் பாங்குகளிடம் இருப்பு. 3. இலண்டன் பண அங்காடியில் இருக்கும் பணம் (Money in London market). 4 ஸ்தல ஸ்தாபனங்களுக்குக் குறுங்காலக் கடன். 5. கழிவு செய்த கருவூல உண்டியல்கள். 6. பிற உண்டியல்கள். 7. அரசாங்க செக்கூரிட்டிகள். 8. இதர ஸ்டெர்லிங் செக்கூரிட்டிகள். 9. அட்வான்சுகள். புழக்கத்தில் இருக்கும் உண்டியல்களில் 20, 25 சதவீதத்துக்கு மேல் இவ்வேற்பகங்களின் 'ஏற்பு' பெற்றவை. ஏற்புகளின் மொத்தத் தொகை இரண்டு வகையில் முக்கியம்: 1. பண்டங்களை வாங்குவோர்க்குப் பணம் கிடைக்க வழி செய்கிறது. 2. பாங்குகளுக்கு ரொக்கத் தன்மையுடைய சொத்துகளைக் கிடைக்கச் செய்கிறது.

ஏற்புகளின் தொகையை நிர்ணயிப்பன :— ஏற்பகங்களின் சக்தியைப் பற்றிய இங்கிலாந்து பாங்கின் வரையறை. 2. அந்தச் சக்தியை ஆள விருப்பம். 3. அதிகாரிகளின் வரையறை. 4. ஏற்புக் கமிஷன். 5. ஏற்பு வசதிக்குத் தேவை.

1. ஏற்பகங்களின் தொழில் இங்கிலாந்து பாங்கினுடைய ஆதரவைப் பொறுத்தது. அது அவர்களுடைய ஏற்புடைய உண்டியல்களைத் தகுதியற்றவை (ineligible) என்று புறக்கணித்தால், ஏற்பகங்களுக்கு வேலையில்லை. இங்கிலாந்து பாங்கே இவ்வகங்களுடைய மூலதனம், ரொக்கத் தன்மை, தொழில் திறமை ஆகியவற்றைக் கொண்டு மதிப்பீடு செய்கிறது. வைப்புகள் திடீரென்று வெளியேறினால் நெருக்கடியைச் சமாளிக்கும் திறமை முக்கியம். ஆகவே, உண்மையில் ஏற்பகங்கள் உயர்ந்த அளவில் ரொக்கத் தன்மை உடையன, இங்கிலாந்து பாங்கோடு கலந்து எவ்வளவு ரொக்கம் இருக்க

வேண்டுமென்பது முடிவு செய்யப்பட்டிருக்கும். அது ஒவ்வோர் ஏற்பகத்தின் முதல் நிலையைப் பொறுத்தே நிர்ணயிக்கிறது. இவ்விதமாக இங்கிலாந்து பாங்கு செய்யும் கட்டுப்பாடு இந்த நிறுவனங்கள் அங்காடியில் செம்மையாக வேலை செய்ய வழி செய்கிறது.

2. ஏற்பகங்கள், ரொக்கத்தன்மை எவ்வளவு வேண்டும் என்பதை நிர்ணயிக்கும்போது, பணத்துறை அதிகாரிகளின் நடவடிக்கைகளைக் கருதுகின்றனவா என்று பார்த்தால் அவசியமில்லை என்று தோன்றுகிறது. ஏனெனில், ஏற்பகங்கள் தங்கள் சக்தியின் உச்ச அளவுக்கு 'ஏற்பு' செய்வதில்லை. பாங்கு வீதம் (Bank rate) மாறும்போதெல்லாம் தம் 'ஏற்பு'ப் பொறுப்பின் அளவை மாற்றுவதாகத் தெரியவில்லை. உலகப் பொருளாதார, அரசியல் சூழ்நிலை காரணமாகக்கூட ஏற்பகங்கள் தங்கள் வசதியைக் கட்டுப்படுத்துவதில்லை. தனித்தனி நாடுகள், தொழில்கள், சம்பந்தமாகத் தம் வசதியைக் கூட்டிக் குறைக்கலாம். பொதுவாகத் தானே வேண்டுமென்று 'ஏற்பு' அளவைக் கூட்டவோ குறைக்கவோ செய்வதில்லை. அங்காடித் தேவைக்கேற்ப-ஏற்கத் தயாராக இருக்கின்றன.

3. கருவூலத் தலைவர் (Chancellor of the Exchequer) இங்கிலாந்து பாங்கின் கவர்னர் வழியாக, இவைகளுக்கு யாதேனும் அறிவுறுத்தும்போது அதற்கேற்ப ஏற்புகளைக் கட்டுப்படுத்த இவை சித்தமாயிருக்கின்றன. ஆனால், இவ்வித அறிவுரை இவைகளினுடைய எல்லா நடவடிக்கைகளையும் கட்டுப்படுத்தும் வகையில் இருந்ததில்லை.

4. ஏற்பு வழியாகக் கடன் பெறுவதில் வியாபாரிகளுக்குச் சில செலவுகளுண்டு. அவை கழிவு (Discount), ஏற்புக் கமிஷன் (Acceptance commission), உண்டியல் ஸ்டாம்பு என்பன. ஏற்புக் கமிஷன் ஏற்பகத்தால் நிர்ணயிக்கப்படுகிறது. ஏற்பகங்களுக்கு இடையே கமிஷனைப் பற்றி ஒப்பந்தம் ஒன்றும் இல்லை. எல்லாம் போட்டியிடுகின்றன. ஆயினும், நாணயமானவர் என்ற புகழுடைய வாடிக்கைக்காரர்கள் விஷயத்தில் யாவரிடமும் கமிஷன் ஏறக்குறைய ஒரே விதமாக இருக்கும். இவர்கள் கொடுக்க வேண்டியது $1\frac{1}{4}$ அல்லது $1\frac{1}{2}$ சதவீதத்துக்கு மேல் இருக்காது. மற்றவர்கள் கொடுக்க வேண்டிய கமிஷன் சில போது 3 சதவீதமாகக் கூட இருக்கும். இந்த வீதங்களோடு கழிவுச் செலவைக் கூட்டிப் பார்த்தால், மிகைப்பற்று (Overdraft) வீதத்தைவிடச் சிலபோது அதிகமாயும் சிலபோது குறைந்த

தாயும் காணப்படுகிறது. ஏற்றத் தாழ்வைப் பொறுத்து ஏற்பு வழியாகவா, மிகைப்பற்று வழியாகவா, எந்த வழியில் வியாபாரிகள் பணம் பெறுகிறார்கள் என்பதை யூகிக்கலாம். போட்டியினால் கமிஷன் வீதங்கள் மாறுவதைத் தவிர, தங்கள் கமிஷன் காரணமாக ஏற்பு வசதிக்குத் தேவை அதிக நெகிழ்ச்சி யுடையதன்று என்று ஏற்பகங்கள் கூறுகின்றன. ஆனால், செலவு வீதம் (ஏற்புக் கமிஷன் உயர்வதாலோ, கழிவு வீதம் உயர்வதாலோ) ஏறினால், ஏற்பகங்களை நாடாது வியாபாரிகள் பாங்கிடம் மிகைப்பற்று பெறலாம். இலண்டனுக்கு ஏற்புக்கு வரவேண்டிய பேரம் வேறு நாடுகளுக்கு மாறலாம்.

5. ஏற்புத் தேவையை நிர்ணயிக்கும் மற்றொரு காரணி உலக வியாபாரத்தின் நிலையாகும். இங்கிலாந்தின் அயல் நாட்டு வாணிகம் அளவில் மாறுவதற்கேற்பக் கழிவகங்களின் தொழிலும் மாறுகிறதென்றும், ஆனால் மொத்த உண்டியல் களில் இவைகளின் விகிதாசாரம் மாறுவதில்லை என்றும் தெரிகிறது.

ஏற்பகங்கள் 'ஏற்பு' தவிர வேறுசில தொழில்களும் செய்கின்றன. அநேக ஏற்பகங்கள் வெளியீட்டு அகங்களாக (Issue Houses) இருக்கின்றன. சில அகங்கள் உலோக அங்காடி யிலும் (bullion market), அயல் நாட்டு மாற்று அங்காடியிலும் (foreign exehange market), வர்த்தகத்திலும் (merchanting) ஈடுபட்டிருக்கின்றன. இந்த வேலைகள் அவ்வத்துறையில் முக்கியமானவையாயினும் பணத்துறை நிர்வாகத்துக்கு அவ்வளவு முக்கியமானவை அல்ல. ஆனால், ஏற்பகங்கள் செய்யும் சாதாரண பாங்குத் தொழிலைச் சற்றுக் கவனிக்க வேண்டும். ஏற்பகங்கள் செய்யும் ஏற்புத் தொழிலுக்கும் வெளியீட்டுத் தொழிலுக்கும் இது தொடர்புடையது. ஏற்பகங்களின் வைப்புகளில் ஒரு முக்கியமான பகுதி பாங்குகளிடமிருந்தும் அயல் நாட்டுக் கம்பெனிகளிடமிருந்தும் வருகின்றது. இந்த அளவுக்கு இவை இதர பாங்குகளைப் போலத் தீர்வுசெய் பாங்குகளின் செயல்முறை விதிகளைப் பின்பற்றுகின்றன. சாதாரண பாங்கு வேலையில் இவைகளின் பங்கு அற்ப அளவே ஆயினும் முக்கியமானது. ஏற்பகங்களில் இதர தொழில்களைச் சார்ந்து வைப்புகள் வருகின்றன. முக்கியமாக வெளியீட்டுத் தொழில் (issue business) சம்பந்தமாக வைப்புகள் வருகின்றன. இவை மிகவும் பிறழ்ச்சி (volatility) உடையன. ஆகவே, இவைகளுக்கு எதிராக மிக்க ரொக்கத் தன்மை வாய்ந்த சொத்துகளை வைத்திருக்க வேண்டியிருக்கிறது.

சமீப காலத்தில், ஏற்பகங்கள் ஒரு புதுத்துறையில் அதிகமாக ஈடுபட்டு வருகின்றன. வர்த்தக பாங்குகளைப்போல, இன்சூரன்சுக் கம்பெனிகளைப் போல, இவை பல நிதிகளுக்கு டிரஸ்டியாக இருக்கின்றன; அதோடு அநேக பென்ஷன் நிதிகளுக்கு (endowment) முதலீடு ஆலோசகர்களாக இருக்கின்றன. இப்படிப்பட்ட முதலீடு ஆலோசனைப் பணி (investment advisory service) மற்ற நிதி நிறுவனங்களை விட அதிக அளவு இவைகளால் தான் செய்யப்பட்டு வருகிறது. ஆகவே செக்கூரிட்டி அங்காடியில் இவைகளுடைய செல்வாக்கு முக்கியமானது.

**கடலுக்கு அப்பாலுள்ள பாங்குகளும், அயல்நாட்டுப் பாங்குகளும் (Overseas and foreign banks)**

தீர்வுசெய் பாங்குகளையும் ஏற்பகங்களையும் மற்ற வர்த்தக பாங்கர்களையும் தவிர, இலண்டனில் வேறு 75 பாங்குகள் உள்ளன. இவைகளுக்குள் வேறுபாடுகள் இருந்தபோதிலும் இவைகளைப் பொதுவாக, "கடலுக்கப்பாலுள்ள பாங்குகள், அயல்நாட்டுப் பாங்குகள்" என்று குறிப்பிடலாம். இவைகளில் சில வேறு நாடுகளில் தொழில் அகங்களை (offices) உடைய பிரிட்டிஷ் பாங்குகள். வேறு சில பிறநாடுகளில் தலைமை அகமிருக்க, இங்கிலாந்தில் கிளைகளாயுள்ளன. காமன்வெல்த் நாடுகளில் தலையகம் உடையவைகளைக் கடலுக்கு அப்பாலுள்ள பாங்குகள் (British overseas bank) என்பர். காமன்வெல்த் நாடுகளுக்கு வெளியிலே தலைமை அலுவலகம் இருக்கும் பாங்குகளை 'அயல்நாட்டுப் பாங்குகள்' (Foreign banks) என்பர். இந்த இருவகைப் பாங்குகளும் கப்பல் வர்த்தகத்தில் ஈடுபட்டவை. இவை (1) மாற்று வியாபாரிகளாக (Exchange dealers) வேலை செய்கின்றன, (2) இங்கிலாந்துக்கும் மற்ற நாடுகளுக்குமிடையே நடக்கும் வியாபாரத்துக்குக் கடனுதவி செய்கின்றன. இந்த உதவியில் உண்டியல் ஏற்பும் ஒன்று. இவைகளின் ஏற்பு பெற்ற உண்டியல்கள் இலண்டன் கழிவக அங்காடியில் விற்கப்படுகின்றன, (3) இவை இதர தொழில்களிலிருந்து பெறும் நிதியை இலண்டனில் முதலீடு செய்கின்றன. சில தம் அயல் நாட்டுத் தொடர்பின் அனுபவத்தால் வெளிநாடுகள் பற்றிய பொருளாதாரத் தகவல்களைத் (economic information) தருகின்றன, அயல்நாட்டு வாணிகத்திலும் (international trade), நாடுகளுக்குள் பணம் அனுப்புவதிலும் (remittance) இவைகளுக்குள்ள அனுபவம் மிகச் சிறந்தது, இவைகளின் பொறுப்புகள் முக்கியமாக வைப்பு

களும் ஏற்புகளும் தான். சொத்துகள் மற்ற பாங்குகளின் இனங்களைப் போலவேயுள்ளன. ஆனால், அயல்நாட்டுப் பாங்குகளாயினமையால் நிகர பொறுப்பு அயல் நாட்டாருக்கு சேர வேண்டியதாக இருக்கிறது.

இவைகளின் சொத்தில் பெரும் பகுதி இங்கிலாந்து அரசாங்கத்துக்குக் கடனாகும். ஆகவே, இங்கிலாந்து அரசாங்கம் இந்தப் பாங்குகளின் வழியாகக் குடிகளல்லாதவர்களிடமிருந்து (Non-residents) கடன் பெறுவதாகத் தெரிகிறது. இந்தப் பாங்குகள் வேலை செய்யும் நாடுகளில் வியாபாரிகளுக்கு இவை அளிக்கும் வசதிகளே இங்கிலாந்துக்கு நிதியைக் கவர்வதற்குக் காரணமாயுள்ளன. இலண்டனுக்கு வரும் நிதியின் அளவு வர்த்தகத்தின் போக்கைப் (flow of trade) பொறுத்தது. இந்த வர்த்தகப் போக்கு பேரளவில் நெளிவுடையது. பருவகால மாறுதல்கள் நிறைய உண்டு. ஆகவே, இவை தம்முடைய இலண்டன் நிதியில் பெரும் பகுதியை அதிக நீர்மையுடையதாக வைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது. ஆகவே, இலண்டனில் பெரும் பகுதி அழைப்புக் கடனாகவும் குறுங்கால நோட்டீசுக் கடனவும் கொடுக்கப்படுகிறது. தவிர, உண்டியல்களிலும் அரசாங்கப் பாண்டுகளிலும் முதலீடு செய்யப்படுகின்றது.

## ஆங்கில முதலங்காடி (The English Capital Market)

தொழில்களுக்கு முதல் இங்குத்தான் பெறப்படுகிறது. அரசாங்கமும் இவ்வங்காடி மூலமே கடன் வாங்குகிறது. இந்த அங்காடிக்கும் இதுவரை படித்த பண அங்காடிக்கும் உள்ள வேறுபாடுகளைப் பார்ப்போம். முக்கியமான வேறுபாடு கடன் காலம் (period of loan), கடன் வாங்கும் காரணம் (purpose of loan), ஆகியவற்றைப் பற்றியது. பண அங்காடியில் கடன் சில நாட்களுக்கே, அதிகப்படி மூன்று மாதங்களுக்கே வாங்கப்படுவதும் கொடுக்கப்படுவதும். ஆனால், முதலங்காடியில் இருபது ஆண்டுகள் அல்லது மேலும் ஆயுளுடைய கடன்கள் வாங்கப்படலாம், கொடுக்கப்படலாம். கம்பெனிகளின் டிபஞ்சர்கள் கம்பெனி விரும்பிய ஒரு தேதியில் மீட்கப்படுவதாக இருக்கும். இவை நீண்டகாலக் கடன்கள். பங்குகள் (shares) நிரந்தரக் கடன்கள் என்றே கூறவேண்டும். அரசாங்கக் கடன்கள் பெரும்பாலும் 20-30 ஆண்டுகளுக்குமேல் மீட்கப்படுவனவாக இருக்கும். ஆனால், சில—கான்சல்கள்—சாதாரணப் பங்குகளைப்போல நிரந்தரக் கடன்கள். இவ்விதமாக இந்த அங்காடி, தொழில்களுக்கும் அரசாங்கத்துக்கும் நெடுங்காலக் கடன் தருகிறதெனலாம்.

இந்த அங்காடியில் கடன் தருபவர்கள் யார்? முதலீடு செய்ய விரும்புபவர்கள் அனைவருமே யாவர். இங்கிலாந்து பாங்கு, வணிக பாங்குகள், முதலீடு டிரஸ்டுகள், இன்சூரன்சு கம்பெனிகள், கட்டடச் சங்கங்கள் ஆகியன (தனி நபர்களும், கம்பெனிகளும் கூட) கடன் கொடுப்பவர்கள். வெளியீட்டகங்களும் இந்த அங்காடியில் பணி செய்கின்றன. இவைகளைப் பற்றிப் பின்னர்ப் படிப்போம்.

பெரிய மந்தத்தின்போது (1929-35) இங்கிலாந்து பாங்கு வணிக பாங்குகளுடன் சேர்ந்து, தொழில்களுக்கு நிதி உதவி செய்யலாயிற்று. Bankers Industrial Development Company, The Securities Management Trust ஆகியவற்றை நிறுவியது. 1945 இல் The industrial and Commercial Finance Corporation என்பதும், The Financial Corporation for Industry என்பதும் அதனுதவியால் நிறுவப்பட்டன. இப்படிச் சமீபத்தில் இங்கிலாந்து பாங்கு நிதி உதவவும் முன்வந்துள்ளது.

பிறர் தம் சேமிப்பிலிருந்து கம்பெனி டிபஞ்சர்கள், பங்குகள் அரசாங்கப் பாண்டுகள் ஆகியவற்றை வாங்குகின்றனர். இன்சூரன்சு கம்பெனிகள், டிரஸ்டுகள், கட்டடச் சங்கங்கள் போன்றவை மக்களின் சேமிப்பு தங்களிடம் வருவதைப் பங்கு அங்காடியில் முதலீடு செய்ய ஆள்கின்றன. இங்கிலாந்து பாங்குகள் பெரும்பாலும் நெடுங்காலக் கடன் கொடுப்பதில்லை; சிறு அளவுக்குப் பங்குகள் வாங்குவதுண்டு. தவிர, (The Industrial and Commercial Finance Corporation) என்பதும் கடன் கொடுக்கிறது.

ஸ்டாக் எக்ஸ்சேஞ்சு (Stock Exchange) என்பது பங்கு (share) பேரம் செய்யும் அங்காடி. இது பங்கு கைமாறுவதற்கு வசதி செய்கிறது. இதில் தரகர்கள் முதலீடு செய்பவர்களுக்குப் பிரதிநிதிகளாகப் பேரங்களைச் செய்கின்றனர். இங்குத் தான் யூக பேரங்கள் செய்வது அதிகம்.

இனி, பங்குகள் முதன் முதலில் எப்படி அங்காடிக்கு வருகின்றன என்று பார்ப்போம்.

**புதிய வெளியீடு அங்காடி (The New Issue Market)**

முதலீடு (investment) பங்கு வெளியீட்டு அகங்களின் (Issue house) நடவடிக்கையைப் பொறுத்தது. இவை நீண்ட கால முதலை விரும்புபவர்களுக்கும் கொடுப்போர்களுக்கும்

இடையில் நின்று இருவரையும் பிணைத்துப் பணியாற்றுகிறது. பங்கு வெளியீட்டு அகங்கள் வேறு தொழில்களில், உதாரணமாக ஏற்பகங்களாக, முதலீடு பாங்குகளாக (Investment banks), முதலீடு டிரஸ்டுகளின் நிர்வாகிகளாக (Manager of investment trust) இருக்கலாம். நாம் இங்கு இவை பண அங்காடி சம்பந்தமாகச் செய்யும் வேலைகளை மட்டும் பார்ப்போம். வெளியீட்டு அகங்கள், தங்கள் வாடிக்கைக்காரர்களின் நிதித் தேவையைப் பூர்த்தி செய்ய முடியுமா என்பதை முதலில் யோசிக்கின்றன. தம்மிடம் பொருள் வசதி நிறைய இருந்தபோதிலும் தாமே வெளியீட்டில் ஒரு சிறு பகுதிக்கு மேல் முதலிடுவதில்லை. அவர்களுடைய முக்கியப் பணி, பங்கு வெளியீடுகளுக்கு ஆதரவு அளிப்பதும் (sponsoring), உத்தரவாதம் (Underwriting) செய்வதும் ஆகும். ஒரு வெளியீட்டகத்தின் ஆதரவும் உத்தரவாதமும் தொழில்கள் முதல் பெறுவதை எளிதாக்குகின்றன. (தொழில் முயல்வோன் வெளியீட்டகத்தை நம்பி வெளியீட்டுக்கு முன்னுலேயே தன்னுடைய திட்டத்தைத் துவக்கி இருக்கக் கூடும்). இவைகளின் பணிகள் வெளியீட்டோடு நின்று விடுவதில்லை. அவை வேறு பணிகளையும் வாடிக்கைக்காரர்களுக்குச் செய்கின்றன. வாடிக்கைக்காரர்களுக்குள் ஐக்கியம் (Amalgamation), புனர் அமைப்பு (Reorganisation), ரிசர்வை முதலாக்கல் (Capitalisation of reserves) முதலிய காரியங்களிலும் ஆலோசகர்களாக இருக்கின்றன. எப்படிப் புது முதலைப் பெறுவது, எப்போது பண அங்காடியை நாடுவது என்பவைகளையும் கூறுகின்றன. அவர்கள் வாடிக்கைக்காரர்களுடைய தொழில்களின் தன்மையை, பொருளாதாரச் சூழ்நிலையை நன்கு ஆய்ந்தறிந்திருக்க வேண்டியிருக்கிறது. புது வெளியீடுகள் சம்பந்தமாக உள்ள சட்ட திட்டங்களையும் பழக்க வழக்கங்களையும் அறிந்திருக்க வேண்டியிருக்கிறது. நீண்ட காலமாக நிலைத்துள்ள ஒரு வெளியீட்டகம், ஒரு வெளியீட்டுக்கு ஆதரவு அளிப்பதாயிருந்தால் முதலீடு செய்பவர்கள் நம்பிக்கையுடன் முதலீடு செய்ய முன் வருவார்கள். ஏனென்றால், வெளியீடு சம்பந்தமான எல்லா விஷயங்களையும் வெளியீட்டகம் நன்கு அறிந்திருக்கும் என்று நினைக்கிறார்கள்.

வெளியீட்டு முறையைப் பார்ப்போம். முதலில் வாடிக்கைக்காரர்களோடு கலந்து வெளியீடு வகைகளை (Form of issue) ஆராய்ந்து முடிவு செய்ய வேண்டும். பின்னர் வெளியீட்டுத் தரகர் (broker) வரவழைக்கப்படுவார்கள். வெளியீட்டின் வகை அங்காடியின் உள்ளத்தை அறிந்து முடிவு செய்ய

வேண்டிய ஒன்று. இதை ஆலோசிப்பார்கள். அதேபோது வெளியீட்டகம் சில பெரிய இன்சூரன்சு கம்பெனிகளை அழைத்து அவற்றின் உள்ளத்தை ஆழ்ந்து பார்க்கும். முடிவில் வெளியீட்டகங்கள்தான் வெளியீட்டை உத்தரவாதத்துடன் ஏற்க வேண்டியிருக்கும். உத்தரவாத ஒப்பந்தம் (Underwriting contract) எழுதப்படும்போது இன்சூரன்சு கம்பெனிகளுடன் உப உத்தரவாத (Sub-underwriting) ஒப்பந்தம் செய்ய ஏற்பாடு செய்யப்படலாம். பொதுமக்கள் வாங்குவது குறைவுபட்டால் உப உத்தரவாதிகள், தாம் மீதி வெளியீட்டை எடுத்துக் கொள்வதாக ஒப்புக் கொள்கிருர்கள். ஆனல், வெளியீட்டு அகம்தான் கம்பெனிக்கு முக்கிய உத்தரவாதியாக இருக்கும். வாக்குத் தந்த தொகையைக் கண்டுபிடிப்பது அதனுடைய பொறுப்பு. உப உத்தரவாதியும் தவறினல், அதுவே ஈடு செய்ய வேண்டியிருக்கும். அநேகமாக வெளியீட்டகங்கள் தங்கள் கையிலேயே வெளியீட்டில் ஒரு பகுதியை வைத்துக் கொள்வது வழக்கம்.

வெளியீடுகள் இருவிதமாகச் செய்யப்படுவதுண்டு:

1. வெளியீட்டக மூலம் விற்பனை கூறுதல் (Offcr for saie)

2. கம்பெனி நேரே விற்பனையை வெளியிடுதல்.

இரண்டுக்கும் முன் அறிக்கை (Prospectus) ஒன்று அவசியம். ஆனல், இரண்டு முறைகளிலும் செலவு அதிகம். சிறு வெளியீடு இச்செலவைத் தாங்க முடியாது. விளம்பரமே முக்கியச் செலவு. செலவு குறைவாக வெளியீடு செய்ய வேண்டின், ஏற்கனவே கம்பெனியில் உள்ள பங்குதாரர்களுக்குச் சுற்றறிக்கை (Circular) மூலம் வெளியீடு செய்யலாம். சாதாரணப் பங்குகளை (ordinary shares) ஏற்கனவே அவர்கள் வைத்திருக்கும் விகிதத்தில் பிரித்து ரொக்கத்துக்கு விற்கலாம். மாரு வட்டிகளை உடைய செக்கூரிட்டிகளை வெளியிட வேண்டுமாயின் வெளியீட்டுத் தொகை பெரியதாகவும், பங்கு தாரர்களின் எண்ணிக்கைப் பெரியதாகவும் இருப்பதால், முன்னறிக்கை (Prospectus) மூலமாக வெளியிட வேண்டியது அவசியமாகலாம். வேறு வகை வெளியீடுகளைத் தனிப்பட்ட முறையிலே பங்கு அங்காடியில் பதிவு செய்யாமலேயும் விற்கலாம். சிறு நிறுவனங்கள் இப்படித் தனி முறையில் பங்குகளை விற்பது பல வகைகளில் நலமானது. முன்னறிக்கைச் செலவு இல்லை. உப உத்தரவாதச் செலவு இல்லை. ஆனல்,

இப்படி வெளியிடும் செக்கூரிட்டிகள் பங்கு அங்காடியில் முக்கிய இடம் பெற மாட்டா. ஆகையால் போட்டியிருக்காது. இவை தனியார் கம்பெனிகளுடையனவாயின் அங்காடியில் இவைகளுக்கு இடமே இல்லை. இன்சூரன்சு கம்பெனி முதலிய நிதியங்களுக்குத்தான் கொடுக்க வேண்டி வரும்.

வெளியீட்டுக்கு அநேக கட்டுப்பாடுகள் உண்டு. முதல் வெளியீட்டுக் குழுவின் (Capital Issue Committee) ஆலோசனையின் மேல் கருவூல அதிகாரிகள் கட்டுப்பாடுகள் ஏற்படுத்தி இருக்கின்றார்கள். தவிர, எப்போது வெளியிடுவது என்பதைப் பற்றியும் கட்டுப்பாடு உண்டு. இங்கிலாந்து பாங்கினுடைய அனுமதியின் மேல் தான் ஒரு மில்லியன் பவுண்டுக்கு மேல் மதிப்புள்ள வெளியீடுகள் அனுமதிக்கப்படும். சில பெரிய தொழில் அகங்கள் நெடுநாள் காத்திருக்க வேண்டி வரலாம்.

வெளியீட்டு வேலையே காலம் பிடிக்கும் வேலை. ஆகவே, பண அங்காடி நிலைமை மாறினால் சிக்கலை உண்டாக்கலாம். உதாரணமாக, பாங்கு வீதம் மாறினால் சிக்கல் ஏற்படலாம். ஆனால், இவ்வித மாறுதல்களை முன் கூட்டியே வெளியீட்டகங்கள் எதிர்பார்த்துத் தக்க நடவடிக்கை எடுத்திருக்கும். வெளியீடு என்ன விலையில் இருக்க வேண்டுமென்பது வெளியீடு செய்வதற்குச் சற்று முன்பு தான் தீர்மானிக்கப்படும். ஆகவே, எதிர்பாராத விதமாக பாங்கு வீதம் மாறினாலொழிய, வெளியீட்டகம் திட்டப்படி வெளியீட்டைச் செய்யும். வீதம் மாறியதனால் விலையை மாற்ற வேண்டியிருக்கலாம். பாங்கு வீதம் அதிகமாக ஏறினால் வாங்குவோர்க்கு அதிர்ச்சி ஏற்படும். இது இரண்டொரு வாரத்துக்கு வெளியீட்டைத் தள்ளிப் போடச் செய்யும்.

யுத்தத்துக்குப் பின் வெளியிட்ட வெளியீடுகளில் 60 சதவீதத்துக்கு வெளியீட்டகங்கள் காரணமாயிருந்தன. மற்றவை வெளியீட்டுத் தரகர்களால் (Issuing Brokers) செய்யப்பட்டன. இன்று வெளியீட்டகங்களின் வாடிக்கைக்காரர்கள், அநேகமாக எல்லாம், பிரிட்டிஷ் பொதுக் கம்பெனிகளும் (Public companles), ஸ்தலஸ்தாபனங்களுமே (Local authorities). 40 ஆண்டுகளுக்கு முன் வெளியீட்டகங்கள் பெரும்பாலும் அயல்நாட்டாருக்காக— முக்கியமாக அயல்நாட்டு அரசாங்கங்களுக்காகவும், பொது நிறுவனங்களுக்காகவும் — வெளியிட்டன. 1930க்குப் பின் அயல் நாட்டு வெளியீடு வேலை குறைய ஆரம்பித்தது. உள்நாட்டுத் தொழில் அகங்கள் முக்கிய வாடிக்கைக்காரர்களாக ஆயின.

அதேபோது பழைய வெளியீட்டு அகங்கள் தம்முடைய அயல் நாட்டுத் தொடர்பை விட்டுவிடவில்லை. ஏற்புத்தொழில், பாங்குத் தொழில் காரணமாகத் தொடர்பைக் காத்து வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் புதிய வெளியீட்டங்களுக்கு வெளியீடு தவிர வேறு தொழில் இல்லாததால், அவைகளுக்கு இப்படிப்பட்ட அயல்நாட்டுத் தொடர்பு இருக்கவில்லை. சமீப காலத்தில் மொத்த வெளியீட்டில் 15 சதவீதத்துக்கு மேல் அயல் நாட்டாருக்காக வெளியிடப்படவில்லை.

பொதுக் கம்பெனிகள் நெடுங்கால முதலைப் பெறுவதற்குப் புது வெளியீட்டு அங்காடி சக்தி வாய்ந்த முக்கியக் கருவியா யுள்ளது. வெளியீட்டு அங்காடி மூலம் தனியார் துறையால் பெறப்பட்ட புது மூலதனம் அற்பமென வெளியீட்டகங்கள் கருதுகின்றன. இது சரியன்று. மூன்றிலொரு வெளியீடு சமீபகாலத்தில் அகங்கள் மூலமே நடந்திருக்கின்றன. தனியார் துறையில் (Private sector) சொந்தச் சேமிப்பு முக்கியமான முதலீட்டு வழி என்பதுண்மை. ஆனால், வெளியீட்டகங்களின் வேலை இதனால் அற்பமாகவில்லை.

தொழில்கள் நாட்டுரிமை ஆக்கப்பட்டதனால் சமீபகாலத்தில் பிரித்தானியத் தொழில்கள் வெளியீட்டு அங்காடியை எதிர் பார்ப்பது ஓரளவு குறைந்து விட்டது. யுத்தத்துக்கு முன் வெளியீட்டு அங்காடியை முக்கியமாக நாடிய தொழில்கள் நாட்டுரிமை யாக்கப்பட்டு விட்டன. இப்போது அவை கருவூலத்திடமிருந்து மலிவாக முதலைப் பெறுகின்றன. கருவூலம் பின்னர் அங்காடியில் முதலைத் திரட்டுகிறது. ஆனால் வெளியிடும் முறை, முதல் வரும் துறை ஆகியவை வேறு. தனியார் துறையில் விடப்பட்ட தொழில்கள் முதலங்காடியை (Capital market) நம்புவதைவிடச் சொந்த இலாபத்தையே முதலுக்கு நம்பி யுள்ளன. தம் தேவைகளைப் பெரிய கம்பெனிகள் பூர்த்தி செய்ய முடிந்ததேயொழியச் சிறு கம்பெனிகளால் முடியவில்லை. இவைகளுடைய கஷ்டத்தை மாக்மில்லன் கமிட்டி ஒரு பெரிய குறையாகக் கூறியது. சிறு நிறுவனங்கள், நடுத்தர நிறுவனங்கள் விரும்பும் தொகை சிறியதாயிருந்ததால் அவை மிக்க செலவுடைய வெளியீட்டு அங்காடியை நாடுவதற்கு முடியவில்லை இந்தக் குறையை நீக்குவதற்குப் பல முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. முக்கியமான ஒன்று, வழக்கமாக முதலீடு செய்யும் நிறுவனங்களிடையே, தனிப்பட்ட முறையில் இச்சிறு வெளியீடுகளை விற்பது. இது வெளியீட்டகங்கள் வழியே தான் நடைபெறும். இம்முறையில் செலவு குறைவாக இருந்தாலும்,

பங்கு அங்காடியில் இவைகளை விற்க முடியாதாகையால் வாங்குவோருக்கு அதிக ஆதாயம் வரும்படி வெளியிட வேண்டியிருக்கிறது. ராட்கிளிஃப் கமிட்டியின்முன் சாட்சியம் தந்தவர்கள் சிறு வெளியீடுகள் செய்வது முன்னைவிடக் கடினமாகி வருவதாகக் கூறினார்கள். இதற்குக் காரணம் வழக்கமாக முதலீடு செய்யும் நிறுவனங்கள் கூட அங்காடியில் விற்கக்கூடிய செக்கூரிட்டிகளையே விரும்புவதும், ஒரு சிறு அளவுக்கு மேல் எந்த ஒரு வெளியீட்டிலும் சாதாரணப் பங்குகளாக வைத்திருக்க விரும்பாததும் எனப்பட்டது. பெரிய கம்பெனிகள் சிறு தொகைகளை வைத்திருப்பதைத் தொந்தரவாக நினைக்கின்றன. இதைப்பற்றி நிச்சயமாகக் கூற முடியவில்லை. இதற்குக் காரணம் முன்னைவிட அதிகமாகக் கடன் வாங்குவோர் அங்காடிக்கு வருவதால் சிறு வெளியீடுகளை அங்காடி ஏற்பது கடினமாக இருக்கலாம். சிறு நிறுவனங்கள் பெரும்பாலும் தனியார் கம்பெனியாக (Private company) இருப்பது ஒரு தடையாக இருக்கலாம். இப்படிப்பட்ட கம்பெனிகள் தம் நீண்டகால முதலைச் சொந்த ஒதுக்கீட்டிலிருந்து தான் பெற வேண்டியிருக்கும். சமீப காலத்தில் வரி வீதங்கள் உயர்ந்ததனால் ஒதுக்கிடுவது கடினமாக இருக்கலாம். தவிர, தற்காலத்தில் முதலீட்டில் ஈடுபடும் தனவந்தர்களும் இல்லை.

ஆனால், சமீபகாலத்தில் இந்தச் சிறு நிறுவனங்களுக்கு உதவி செய்ய அநேக தனி நிதிகள் ஏற்படுத்தப்பட்டு உள்ளன.

**இன்சூரன்சு கம்பெனிகள்** (Insurance Companies)

இக்கம்பெனிகள் சுமார் 440 உள்ளன. உள்நாட்டுத் தொழில் இவைகளில் 100 கம்பெனிகளின் கையில் இருக்கின்றது. சில கம்பெனிகள் வெளிநாட்டில் முக்கிய மானவைகளாக இருக்கின்றன. இந்தக் கம்பெனிகளின் வேலைகளை இரண்டு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

1. **ஆயுள் இன்சூரன்சு** (Life Insurance).
2. **பொது இன்சூரன்சு** (General Insurance).

பின்னதில் நெருப்பு, தற்செயல் விபத்து (accident), கடல் விபத்து இன்சூரன்சு வகைகள் அடங்கும். ஆயுள் இன்சூரன்சுப் பாலிசிகள் நெடுங்கால ஒப்பந்தத்துக்குட்பட்டவையாதலால், அவைகளின் கட்டணத்தைக் கம்பெனிகள் நீண்டகால முதலீட்டில் ஆள முடிகிறது. ஆனால், பொது இன்சூரன்சுப் பணம் குறுங்கால ஒப்பந்தப் பணம், இதை முதலீடு செய்யமுடியாது.

இவைகளுக்கு ஆண்டுதோறும் பணம் குவிந்து கொண்டே வருகிறது. இவை ஆண்டுதோறும் முதலீடு செய்ய வேண்டியிருக்கிறது. செக்கூரிட்டிகள் முதிர்ந்தபோது மீண்டும் முதலீடு செய்ய வேண்டியிருக்கின்றது. சில இன்சூரன்சு கம்பெனிகள் தாம் நிர்வகிக்கும் டிரஸ்டுகளுக்குரிய பெரும் தொகைகளை வைத்திருக்கின்றன. இன்சூரன்சு கம்பெனிகளின் பொறுப்புகள் இன்சூரன்சு செய்தவர்களுக்குரிய சொத்துகளாகும். அவர்கள் தம் பாலிசியை அடகு வைத்துப் பாங்கிலோ, வேறிடத்திலோ கடன் வாங்கலாம், அல்லது பாலிசியையும் முடிவு செய்து விடலாம். கம்பெனிகளே அவர்களுக்குப் பாலிசி மேல் கடன் கொடுக்க முன் வருவதுண்டு. ஆனால் கம்பெனிகள் பெரும்பாலும் வேறு அடமானத்தின் மேல், உதாரணமாக வீட்டின் மேல் கடன் கொடுப்பது வழக்கம். இப்படியாக வேறு வழியில் பணம் கிட்டாதபோது பல மில்லியன் மக்கள் இன்சூரன்சு கம்பெனிகளை நாடுவதாகத் தெரிகிறது. ஆயுள் இன்சூரன்சு கம்பெனிகளின் பணம் எவ்வகையில் ஆளப்பட்டது என்று பார்த்தால் 14·4 சதவீதம் அடமானத்திலும், 27·8% அரசாங்கச் செக்கூரிட்டியிலும், 14·6% டிபஞ்சரிலும், 17·3% சாதாரணப் பங்குகளிலும் ஆளப்பட்டது. பொது இன்சூரன்சு 37% அரசாங்கச் செக்கூரிட்டியிலும், 6·3% அடமானத்திலும், 12·5% டிபஞ்சரிலும், 19·5% சாதாரணப் பங்குகளிலும் ஆளப்பட்டது. இரண்டும் ஏறக்குறைய ஒற்றுமையாக உள்ளது ஆச்சரியமாயுள்ளது. பொது இன்சூரன்சு பணம் திடீரென்று தேவைப்படுமாகையால், அதுவும் ஆயுள் இன்சூரன்சுசை போல நிதியை ஆள்வது ஆச்சரியமாக இருக்கின்றது. ஆனால், பொது இன்சூரன்சு கம்பெனிகள் தம்முடைய முதலீடுகளைச் சீக்கிரம் முதல் நஷ்டமில்லாது விற்கக்கூடிய வகையில் செய்கின்றன. இவைகளுக்குச் சீக்கிரம் முதிர வேண்டுமென்கிற நோக்கம் இல்லை. சீக்கிரத்தில் விற்கக்கூடியதே முக்கியம். ஆயுள் இன்சூரன்சு கம்பெனி நிதிகள் தங்கள் பொறுப்பு முதிர்வுக்கு ஏற்ப செக்கூரிட்டிகள் முதிரும்படி முதலீடு செய்கின்றன. ஆகவே, நெடுங்காலப் பத்திரங்களில் முதலீடு செய்ய வேண்டும். ஆனால், பாலிசிகள் பெரும்பாலும் இலாபப் பாலிசிகள் (With Profit Policy) ஆகையால், ஆதாயமாக முதலீடு செய்ய வேண்டியிருக்கிறது. போட்டிக்கிடையில் தொழிலைப் பெருக்க வேண்டுமாயின், கம்பெனிகள் இலாபகரமான சாதாரணப் பங்குகளில் முதலீடு செய்ய வேண்டியிருக்கிறது. ஆனால், பாண்டுகளில் முதலீடு செய்வது எவ்வளவு என்பதை நிர்ணயிக்கும்போது முதிர இருக்கிற பொறுப்புக்கேற்ற ஆயுளை

உடைய பாண்டுகளை வாங்குவார்கள். எதிர்காலப் பாண்டு விலையைப் பற்றிய கருத்து ஒரு முக்கிய நிர்ணய காரணியாக இருக்கும். நீண்டகாலப் பாண்டுகள் வாங்குவதனால் முதிர்வு வரையில் கடன் வைத்திருக்கும் என்று நினைக்கக் கூடாது. நீண்டகாலப் பாண்டு முதிர்வுக்கு அண்மையாகும்போது மாற்றிக் கொள்வதும் வழக்கம். ஆகவே, பாண்டு அங்காடியில் இன்சூரன்சு கம்பெனிகள் முக்கியமானவை. நிற்க, சமீப காலத்தில் இன்சூரன்சு கம்பெனிகள் புது வெளியீட்டுக்கு உத்தரவாதம் செய்யத் தலைப்பட்டுள்ளன. தனி முறையில் வெளியீடு தம்மிடம் வைக்கப்பட்டபோதும் (private placing) இவை பேரளவுக்கு வாங்குகின்றன. ஆனால், நோக்கம் முதலீடேயொழியத் தொழில் நிர்வாகமன்று. இக் கம்பெனிகள் நிலம் அல்லது வீடு, பெரிய ஆபீசுக் கட்டடங்கள் அடமானத் தொழிலில் மிகவும் ஈடுபட்டுள்ளன.

இன்சூரன்சு கம்பெனிகள் எப்படித் தம்முடைய நிதிகளை ஆள வேண்டுமென்பதைப் பற்றிப் பணத்துறை அதிகாரிகளால் எவ்வித விதியும் உத்தரவும் இடப்படவில்லை. ஆனால் அவைகளுடைய கடன் அளிப்பு நடவடிக்கைகள் முதல் வெளியீட்டுக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டு வந்திருக்கின்றன.

### பென்சன் நிதிகள் (Pension Funds)

பொதுத்துறைக் கார்ப்பரேஷன்களும், வர்த்தகத்துறைக் (Commercial) கம்பெனிகளும், கைத்தொழில் கம்பெனிகளும் இந்த நூற்றாண்டில் தங்கள் தொழிலாளிகளின் பென்ஷன் நிதிகளை நிர்வகித்து முதலீடு செய்கின்றன. இந்நிதிகள் இந்நூற்றாண்டில் தான் முக்கியமாயின. பென்ஷன் பணம் எதிர்கால வரவே ஒழியத் தற்போது உரியவருக்கு அது ரொக்கமாகக் கிடைக்காது. இன்சூரன்சு பாலிசியைப் போல ஈடு வைத்து ரொக்கம் பெற்றுச் செலவு செய்ய முடியாது. ஆனால் இந்நிதியை நிர்வகிப்பவர்கள் தற்போது முதலீடு செய்யவேண்டியிருப்பதால் அங்காடி ரொக்க நிலை பாதிக்கப்படலாம். இந்நூற்றாண்டின் முதல் முப்பதாண்டுகளுக்கு இம்முதலீடு, டிரஸ்டு செக்கூரிட்டிகளில் தான் செய்ய வேண்டுமென்ற நிபந்தனை இருந்தது. பணத்தின் மதிப்பு மாறாதிருந்த நிலையில் ஆண்டுதோறும் பென்ஷன் பொறுப்பு எவ்வளவு இருக்குமென்று உறுதியாய் முன் கூட்டியே கணக்கிட முடியுமாதலால் இந்த நிபந்தனை எவ்வித இடையூற்றையும் உண்டாக்கவில்லை. ஆனால், பண வீக்கம் காரணமாக எல்லோரையும் போலவே பென்ஷனுக்

குரியோரும் பென்ஷனை உயர்த்த வேண்டுமென்று வற்புறுத்தும் சூழ்நிலையில் மிக்க விளைவுடைய (high yielding) நெடுங்கால முதலீடுகள் செய்வது அவசியமாயிற்று. ஆகவே, சென்ற முப்ப தாண்டுகளில் படிப்படியாக மேற்கண்ட கட்டுப்பாடு தகர்ந்தது. பண வீக்கத்தோடு, தொடர்ந்து விளைவு மிகுந்து வரும் சாதாரணப் பங்குகளில் முதலீடு செய்யும் வழக்கம் பரவலா யிற்று. பென்ஷன் நிதிகளுக்கு வருமான வரி விலக்குண்டென் பதும் இப்பழக்கத்தை உறுதி செய்தது. ஆனால், பாண்டுகளை விற்றுப் பங்குகளில் ஈடு பெருகவில்லை. புதுப்பணம் தான் பெரும் பாலும் பங்குகளுக்குச் செல்கிறது. பாண்டு வாங்குவது ஏறும் வேகத்தை விடப் பங்கு வாங்குவது ஏறி, முதலீட்டில் பங்குகளின் விகிதாசாரம் அதிகமாகிக் கொண்டு வருகிறது. இந்த நிதிகள் குறுங்கால முதலீடுகளின் விளைவுகளைக் கவனிப்ப தில்லை. கூடிய மட்டும் நெடுங்கால முதலீடுகளே விரும்பப் படுகின்றன. ஆகவே பாங்கு வைப்பு, உண்டியல் முதலிய வற்றில் அற்பத்தொகையே இருக்கும். ஓரளவு நிலச் சொத்தும் (real property) இருக்கிறது.

### முதலீடு டிரஸ்டுகள் (Investment Trusts)

யு.கே. (U. K.) வில் சுமார் 400 முதலீடு டிரஸ்டுகள் இருக்கின்றன. பங்குதாரர்களின் பணத்தைத் தொகுத்துப் பல கம்பெனிகளின் பங்குகளில் முதலீடு செய்வது இவைகளின் வேலை. அனுபவசாலிகளால் நிர்வகிக்கப்படுவதாலும், சராசரி பலவகைப் பங்குகளில் முதலீடு செய்யப்படுவதாலும், சராசரி ஆதாயம் உயர்ந்து வருகிறது. சென்ற இருபதாண்டுகளில் இவை வேகமாக வளர்ந்துள்ளன. இவைகளின் சொத்துகளில் காணும் வளர்ச்சி பெரும்பாலும் முதல் மதிப்பேற்றத்தால் (Capital appreciation) உண்டானது. இவை புது வெளியீடு (New issue) செய்தபோது பெரும்பாலும் இன்சூரன்சு கம்பெனிகளில் வாங்கப்பட்டன. யுத்தத்துக்கு முன் முதலீடு பெரும்பாலும் மாருத வட்டியுடைய (fixed interest) வகையிலி ருந்தன. பணவீக்கம் வந்தபின், முதல் நஷ்டத்துக்கு அஞ்சி, சாதாரணப் பங்குகளுக்கு மாற ஆரம்பித்தன. 1949-1957-க் கிடையில் பங்குகள் 62%வீதத்திலிருந்து 89%ஆக உயர்ந்தன. மற்ெருரு முக்கியமான மாறுதல் டாலர் பங்குகளில் முதலீடு வளர்ந்து வருவதாகும். இதற்குக் காரணம் அமெரிக்காவில் உயர்ந்த விளைவுகள் கிடைப்பதாகும்.,

டிரஸ்டுகள் தாம் வாங்கிய செக்யூரிட்டிகளை விற்பதில்லை. இந்த அளவுக்குச் செக்யூரிட்டி அங்காடியின் சலனங்கள்

குறைக்கப்படுகின்றன. விலைகள் வீழ்ந்து, அங்காடி பலவீனமாயுள்ளபோது டிரஸ்டுகளின் தலையீடு அங்காடியைப் பலப்படுத்தலாம். ஆனால், அவைகளின் நடவடிக்கை தம் நெடுங்கால நலத்தைப் பொறுத்தே தீர்மானமாகும்.

சாதாரணமாக எளிதில் பங்கு அங்காடியில் விற்கக்கூடிய செக்கூரிட்டிகளில் முதலீடு செய்யப்படுகின்றன. அங்காடியில் பங்குகளை அடிக்கடி மாற்றும் நோக்கமில்லை யாதலால், பங்கு அங்காடியில் பேரம் செய்வதற்கு உரிமையற்ற பங்குகளிலும் முதலீடு செய்வதுண்டு. சிறு கம்பெனிகளில் கூடப் பெரும் தொகுதியாகப் பங்குகள் எடுத்துக் கொள்வதுண்டு. சில டிரஸ்டுகள் ஒன்று சேர்ந்து சிறு நிறுவனங்களில் முதலீடு செய்து உரிமையாளராக இருக்கின்றன. இதனால் அவைகளின் நிர்வாகத்திலும் இடம்பெறுகின்றன. சிலபோது பங்கு அங்காடிச் செலாவணியுடைய செக்கூரிட்டிகளுக்கு வெளியீட்டின்போது உத்தரவாதம் (Underwriting) செய்வதுண்டு.

பணத்துறை நடவடிக்கை சம்பந்தமாக இந்த டிரஸ்டுகளின் முக்கியத்துவம், விடுதலையான ரொக்கத்தைச் சேகரித்து நெடுங்கால முதலீட்டுக்கு வழங்குவதாகும். பணத்துறை நடவடிக்கைகள் இவைகளின் முதலீடு வகைகளை மாற்றும்படி தூண்டலாம். ஆனால். இவைகளின் கடன் வகைகள் தற்காலிகமாகவன்றிப் பணத்துறைக் காரணிகளால் நிர்ணயிக்கபட்டதாகத் தெரியவில்லை. வட்டி வீதங்கள் ஏறியது, டிபெஞ்சர் முதலிய நிலை வட்டி செக்கூரிட்டி மூலம் கடன் வாங்குவதைக் குறைத்துள்ளது. இன்சூரன்சு கம்பெனிகள் டிரஸ்டுகளின் சாதாரணப் பங்குகளில் முதலீடு செய்ய முன் வந்ததும் டிரஸ்டுகள் பங்குகள் மூலம் முதலைச் சேகரிக்கத் தூண்டியது. பணத்துறை நடவடிக்கைகளை விடப் பண வீக்கமே அவைகளின் முதலீட்டு வகைகளை அதிகமாக நிர்ணயிக்கலாயிற்று.

பணவீக்கம் கட்டுப்படுத்தப்பட்டாலன்றி, அமெரிக்கச் செக்கூரிட்டிகளின் விலைவு குன்றினாலன்றி, முதலீட்டு முறையில் அதிகம் மாறுதல் ஏற்படக் காரணமில்லை.

### யூனிட் டிரஸ்டுகள் (Unit Trusts)

முதலீடு டிரஸ்டுகளைப் போல இவைகளும் ஒரே சமயத்தில் பல செக்கூரிட்டிகளை வாங்கித் தருவதன் மூலம் முதலீட்டு ஆபத்தைக் குறைக்கின்றன. யூனிட் டிரஸ்டு பலவகைப் பங்குகளை

வாங்கிப் பங்கு அலகுகளாகப் பிரிக்கிறது. ஓர் அலகு பலவகைச் செக்கூரிட்டிகளின் கதம்பமாகும். டிரஸ்ட் பங்குதாரர்கள் வாங்குவது அலகுகளே (Units) யாகும். டிரஸ்டுகள் அனுபவ முடைய மானேஜர்களால் நிர்வகிக்கப்படுகின்றன. யூனிட்டுகளை வாங்குவது அல்லது விற்பது மூலம் யூனிட்டுகளுக்கு அங்காடிச் செலாவணி ஏற்படச் செய்வது அவர்களுடைய பொறுப்பு. யூனிட்டுகளின் விலை, சம்பந்தப்பட்ட செக்கூரிட்டிகளது அங்காடி மதிப்பைப் பொறுத்திருக்கும். டிரஸ்டில் இருக்கும் செக்கூரிட்டிகளை மாற்றுவதற்கு மானேஜர்களுக்குச் சிறிது உரிமை உண்டு. ஆனால். ஒரு குறிப்பிட்ட வகைச் செக்கூரிட்டிகள் சம்பந்தமாக மட்டும்தான் இந்த உரிமை தரப்படுவது வழக்கம்.

இந்த வகையான டிரஸ்டுகள் 1930க்குப் பின்தான் தோன்றின. ஆனால், சில முதலீடு டிரஸ்டுகளாகப் பின்னர் மாறின. முதலீடு டிரஸ்டுகளில் உள்ள நிதியை விட இவைகளின் நிதி குறைந்தது. அமெரிக்காவை நோக்க இங்கிலாந்தில் இவைகளின் வளர்ச்சி நிதானமாகவே இருந்திருக்கிறது. இதற்குக் காரணம் அரசாங்க ஆதரவுக் குறைவும், விளம்பரம், பிரசாரம் சம்பந்தமான செலவுக்குள்ள அரசாங்க வரையறையும் என்று நினைக்கப்படுகிறது.

முதலீடு செய்ய விரும்புவோருக்கு யூனிட்டு டிரஸ்டுகளின் சிறப்பென்னவெனில் முதலீடு பல்வகையாக இருப்பதும் யூனிட்டுகளுக்கு நல்ல அங்காடிச் செலாவணியிருப்பதுமாகும். முதலீட்டு டிரஸ்டுகளில் பங்குகளை வாங்கவோ விற்கவோ செய்வதை விட, இவைகளின் அலகுகளை எளிதில் வாங்கலாம் விற்காலம். அலகு சிறு மதிப்புடையதாதலால், சிறு வருமான முடையவர்கள் கூட முதலீடு செய்ய முடிகிறது. யூனிட்டுகளை வாங்குபவர்கள் பெரும்பாலும் விற்பதில்லை. ஆயினும், விரும்பினால் எளிதில் அங்காடி விலையில் மானேஜரிடம் விற்க முடியும். இப்போது யூனிட்டுகளை வாங்கியுள்ளோர்களின் எண்ணிக்கை குறைவாக இருந்தபோதிலும், அமெரிக்க அனுபவத்தைப் பார்த்தால் யூனிட் முறை வளரக் கூடுமென்று எதிர்பார்க்கலாம். வளர்வதற்குப் பல தூண்டுகோல்கள் உள்ளன. உதாரணமாக, கடனை யூனிட்டுகளை வாங்கித் தவணையாகச் செலுத்தலாம். யூனிட்டுகளுக்குத் தேவை வளர்வதற்கேற்ப, புதுச் செக்கூரிட்டிகளை வாங்கிப் புது யூனிட் சர்ட்டிபிகேட்டுகளை விற்கலாம். பணவீக்கக் காலத்தில் சிறு சேமிப்புடையோர் நிலை வட்டி வகைகளில் முதலீடு செய்வதை விட யூனிட்டுகளை வாங்கி நல்ல ஆதாயம் பெறலாம்.

**கட்டடக் கழகங்கள் (Building Societies)**

இவை இரண்டு நூற்றாண்டுகளாக இருந்து வருவன. இன்று இவை நாட்டில் ஒரு முக்கியமான நிதி ஆட்சித் துறையாகும். தனியார் வீடு கட்டும் பணத்தில் பெரும் பங்கு இவைகளிடமிருந்து வருகிறதாம். இந்தக் கழகங்கள் எல்லாம் கம்பெனி அமைப்புடையவையாயினும், இவைகளின் பங்குகளுக்கும், தொழில்துறைக் கம்பெனிப் பங்குகளுக்கும் வேறுபாடு இருக்கிறது. இவைகளின் பங்குகள் உண்மையில் ஒரு வைப்பு ஆகும். வேண்டும்போது எடுத்துக் கொள்ளலாம். இந்தப் பங்குகளுக்கு வட்டி உண்டு. பங்குகள் எளிதில் ரொக்கமாக ஆகக் கூடியவை. இரண்டொரு மாத நோட்டீசு அவசியமானாலும், உண்மையில் அதற்கு முன்னே பெறக்கூடும். சிறு தொகைகளாயின் தேவைப்பட்டதும் பெறலாம். பெரிய வைப்பாளிகள், பங்குதாரர்கள், நோட்டீசு இல்லாமலே மீட்டுக் கொள்ள ஒப்பந்தம் செய்வதுண்டு. இவை பங்கு மூலமன்றி வைப்பு மூலமும் நிதி பெறுகின்றன. சமீப ஆண்டுகளில் வைப்புகளின் தொகை மாறாது இருந்து வந்திருக்கிறது. பங்குகளின் தொகை ஏறி வந்திருக்கிறது. 1960இல் 90% பங்குகள். இதற்குக் காரணம் பங்குகளுக்கும் வைப்புகளுக்கும் மீட்சியிலும் வட்டியிலும் இருந்த வேறுபாடு குறைந்து விட்டதாகும்.

வைப்புகளும் பங்குகளும் பல திறப்பட்ட மக்களிடமிருந்து வருகின்றன. ஆனால் சிறுபான்மையோர் பெரும் பகுதிக்கு உரியவர்களாக இருக்கிறார்கள். ஆகவே அநேகர் சிறு உரிமையாளர்கள் என்று தெரிகிறது. ஆனால் இந்தக் கழகங்கள் சிறு பங்குதாரர்களை விரும்புகிறது. பெரிய முதலாளிகளின் பணம் நிலைத்துத் தங்குவதில்லையாம்.

கழகம் பங்குதாரருக்குத் தரும் வட்டியின் மேல் வருமான வரியை முன் கூட்டியே செலுத்தி விடுவதால், வரிப்பொறுப்பில்லா வருமானம் கிடைக்கிறது. தவிர, மக்களின் சேமிப்பை நாடும் பல நிலையங்களோடு போட்டியிடக் கூடியதாக வட்டி இருக்க வேண்டியிருக்கிறது.

கழகங்கள் வீடு உடையோருக்குக் கடன் கொடுக்கின்றன. ஆண்டு தோறும் தவணை தவறாமல் செலுத்தக் கூடியவர்களுடைய வீட்டுச் சொத்தின் மேல் அடமானம் பெற்றுக் கொண்டு கடன் தருகிறது. ஆனால் எந்த விதமான ஈடு

பெறுவது என்பதைப் பற்றிச் சட்டம் வரையறை செய்துள்ளது. முதல் அடமானத்தின் மேல்தான் கடன் கொடுக்கலாம்.

எதிர்பாராத ரொக்கத் தேவையைச் சமாளிக்கக் கழகங்கள் டிரஸ்டி (Trustee) செக்கூரிட்டிகளையும், சிறிது ரொக்கத்தையும் வைத்திருக்கின்றன.

கழகங்கள் மாருத வட்டி வீதத்தை விரும்புகின்றன. நீண்ட காலத்துக்குக் கடன் கொடுப்பதாலும், கடன் வாங்குவோர் ஏறும் வட்டியைத் தவிர்க்க முதிர்வுத் தேதிக்குள் திருப்பிக் கொடுக்கக் கூடுமாதலாலும் வட்டி வீதம் மாருதிருக்கிறது. இதனல் கழகங்கள் பங்கின் மேலும் வைப்பின் மேலும் கொடுக்கும் வட்டி வீதங்கள் பாங்கு வீதம் (Bank Rate) மாறும் போது மாறுவதில்லை. பாங்கு வீதம் அங்காடி வீதங்களைப் பாதித்து இவைகளில் ஏற்படும் மாறுதல் தம் நிதி நிலையைத் தாக்கினலன்றி மாறுவதில்லை. ஆகவே இவைகளின் வட்டிகள் பின் தங்கியே மாறுகின்றன. வட்டிப் போட்டியின் காரணமாக நிதி நிலை பாதிக்கப்படுமானல், பாங்கு வீடுகளின் மேல் கடன் கொடுப்பது குறையும். புதிதாக வீடுகட்டுவோர்கள் எச்சரிக்கை செய்யப்படுவார்கள். அடமானக் கடன் ஒப்பந்தபடி வட்டி ஏறினல் பழைய கடன்காரர்களும் அதிக வட்டி கொடுக்க வேண்டும். (வட்டி வீதங்கள் வீழ்ந்தால் கழகங்கள் ஒப்பந்த வட்டியையும் குறைக்க விரும்பும். இன்றேல், போட்டியின் கீழ்த் தொழிலை இழக்க நேரிடும்). வட்டி வீதம் ஏறும்போது திருப்பித் தருவதை நீடிப்பதும், குறையும்போது துரிதப் படுத்துவதும் உண்டு. இந்தக் கழகங்கள் சேர்ந்து ஒரு சங்கத்தை நிறுவியுள்ளன. 1957லிருந்து இங்கிலாந்து பாங்குக்கும் இவைகளுக்கும் நெருங்கிய தொடர்பு மாதாந்தரக் கூட்டத்தின் மூலம் இருந்து வருகிறது.

**முடிவு**

இதுவரை நாம் பண அங்காடியில் முக்கியமான நிதி நிறுவனங்களைப் பற்றிப் படித்தோம். இவை எல்லாம் ஒன்றுக்கொன்று நிதி தேடுவதிலும் அளிப்பதிலும் போட்டி யிடுவன. அரசாங்கத்தின் நடவடிக்கைகள் இவைகளின் நடவடிக்கைகளைப் பாதிக்கக் கூடும், குறுங்காலப் பண வசதி பெரும்பாலும் பாங்குகளிடம் இருந்து தோன்றுகிறது என்றும், நெடுங்காலப் பண வசதி இன்சூரன்சுக் கம்பெனிகள், பென்ஷன் நிதி நிலையங்கள், கட்டடக் கழகங்கள் ஆகியவற்றிலிருந்து தோன்றுகிறது என்றும் கூறலாம். ஆயினும் இந்தப் பாகுபாடு

பொதுப்படையான பாகுபாடே யன்றித் திட்டவட்டமானதன்று. பாங்குகள் கூட நெடுங்காலச் செக்கூரிட்டிகளை வாங்குவது உண்டு. சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு எல்லா நிதி நிலையங்களும் முதலீடு வகையை மாற்றக் கூடும். கடன் வாங்குவோரும் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு குறுங்காலக் கடனோ நெடுங்காலக் கடனோ வாங்குவார்கள். நெடுங்காலக் கடனை விட பாங்குக் கடன் எளிதில் கிடைக்குமானால் மிகைப் பற்று மூலம் தேவையைப் பூர்த்தி செய்துகொள்ளலாம். பாங்குக் கடன் பெறுவது கடினமானால் அங்காடியில் நெடுங்காலக் கடன் பெற முயலலாம். தொடர்ந்து பண வசதி முடையாக இருக்குமானால், தமது மொத்தப் பொறுப்புக்களின் தன்மையையே அடிப் படையில் ஆராய வேண்டியிருக்கும். வெளியில் கடன் வாங்க வரும்போதுதான் அரசாங்கத்தின் பணத்துறை நடவடிக் கைகள் இவர்களைப் பாதிக்கும். சொந்த இலாபத்தில் இருந்து முதலீடு செய்ய முடியுமானால் அரசாங்க நடவடிக்கை பாதிக்காது. ஆனாலும் அரசாங்க நடவடிக்கையின் காரணமாகத் தொழில் துறையில் ஏற்படும் எதிர்காலத்தைப் பற்றிய கருத்து இவர் களையும் பாதிக்கலாம். யுத்தத்துக்குப்பின் சமீப காலத்தில் அநேக நிறுவனங்கள் தம் தேவைகளைச் சொந்தமாகவே பூர்த்தி செய்துகொண்டு வரும் நிலையில், பாங்குப் பணம் முக்கியமான முதல் துறையாக இல்லை. ஆகவே கைத்தொழில் துறையிலும் வர்த்தகத் துறையிலும் பாங்குத் திட்டத்தின் செல்வாக்குக் குறைந்து வருவதாகத் தெரிகிறது.

# 29. பண அங்காடியும் வட்டி நிர்ணயமும்

மற்ற அங்காடிகளில் காண்பது போலப் பண அங்காடியிலும் தேவையும் அளிப்பும்தான் பணத்தின் விலையை நிர்ணயிக் கின்றன. எப்படி என்று பார்ப்போம். பண உருவிலேதான் நம் சமூகத்தில் வருமானம் வருவதும் செலவு செய்வதும் நடைபெறு கின்றன. பணம் மக்களின் சொத்து வகைகளில் ஒரு முக்கிய வகையாகும். ஒவ்வொரு மனிதனும் பண வருமானம் பெற்றதும் இருவகை முடிவுகள் செய்யவேண்டியிருக்கிறது. ஒன்று வருமானத்தில் எவ்வளவு நுகர்ச்சிக்குப் பயன் படுத்துவது, எவ்வளவு சேமிப்பது என்பது. மற்றொன்று சேமிப்பை எந்த உருவில் வைப்பது என்பது. ஒருவன் தன் வருமான மீதியைச் சட்ட பூர்வமாக பாங்கு வைப்பாக, உண்டியலாக, பாண்டு களாக, தொழிற்பங்குகளாகப் பல உருவங்களில் வைத்திருக்கக் கூடும். அவ்வப்போது ஓர் இனத்திலிருந்து மற்றோர் இனமாக மாற்றக்கூடும். இப்படி மாற்றுவதற்கு வசதி செய்வதே பண அங்காடியாகும். மாற்ற விரும்புவதற்குக் காரணம் ஆதாய நாட்டமாகும். அவ்வப்போது எந்த உருவில் வைத்திருந்தால் வருவாய் அதிகமாகும் என்று தோன்றுகிறதோ அதை அங்காடியில் வாங்க ஒருவன் முற்படுவான்.

எவ்வகையில் சொத்தை வைத்திருப்ப தானாலும், ஒவ்வொன் றிலும் ஆதாயமும் செலவும் இருக்கும். நிகர ஆதாயத்தை அறிய மொத்த வருவாயிலிருந்து செலவைக் கழிக்க வேண்டும். பொருள் உருவில் சொத்தை வைத்திருந்தால் இது சம்பந்தமாகச் சில செலவுகளுண்டு. தேய்வு, பராமரிப்பு, பாதுகாப்பு, இன்சூரன்சு, இட வாடகை முதலிய செலவுகளுண்டு. வருவாயிலிருந்து இவ்வகைச் செலவுகளைக் கழித்து நிகர வருமானத்தை அறிய வேண்டும். இப்படி ஒவ்வொரு வகைச் சொத்திலும் பெறக்கூடிய

நிகர ஆதாயத்தை அவ்வப்போது கணித்துச் சேமிப்பு ஆளப் படும். பொதுவாக மூன்று வகைகளில் சொத்துகளில் வருவாயுள்ளதாகக் கருதலாம். (1) விளைவு (Yield), (2) வசதி (Convenience), (3) உறுதிப்பாடு (Certainty). எவ்வகைச் சொத்திலும் ஓரளவு விளைவு இருக்கும். பாண்டுகள், பங்குகள் தரும் விளைவு அவைகளாற்பெறும் பண வருவாயாகும். எந்திர மாயின் அதன் உற்பத்தியே விளைவு. பொருளாயின் அதன் மதிப்புயர்வால் கிடைக்கும் கூடுதல் விலையே விளைவாகும்.

அநேகமாக சொத்துகள் 'வசதி' வருவாயையும் தருகின்றன. எதிர்காலத்தில் பயன்படக்கூடிய பொருள்களாகச் சொத்தை வைத்திருப்பதில் வசதி உண்டு. இதுவே வருவாய். உதாரணமாக, வியாபாரிகள் பண்ட இருப்பு வைப்பதும், உற்பத்தி செய்வோன் கச்சாப் பொருள்களை வைத்திருப்பதும் வசதிக்காகவே. இவ்வசதியே ஒரு வருவாய். எல்லாவற்றினும் அதிக வசதி ஆனது பணம். பணத்தால் வேண்டியதை வேண்டும் போது பெறலாமாகையால் பணம் மிக்க வசதி வாய்ந்தது. இவ்வகையில் மற்ற எந்த வகைச் சொத்தும் பணச் சொத்துக்குச் சமமாகாது. வேறு வகைச் சொத்துகளை மாற்றக் கால தாமதமும் செலவும் படிக்கும். பணத்தை நினைத்ததும் ஆளலாம்.

வசதியைப் போலவே உறுதிப்பாடும் முக்கியம். அநேகமாக இரண்டும் ஒருங்கு காணப்படும். பாங்குகள் ரொக்கம் வைத்திருப்பதும், வியாபாரி பண்டங்களை இருப்பு வைப்பதும் உறுதியை நாடியேயாகும். இவ்வித உறுதிப்பாடு பணமாக வைத்திருப்பதில் அதிகம். ஏனெனில், நமக்கு நாளைக்கு என்ன தேவைப்படும் என்பது நிச்சயமில்லையாதால், முன்கூட்டி வாங்கி வைக்க முடியாத நிலையில் இருக்கிறோம். பணிகள் விஷயத்தில் முன்கூட்டி வாங்கி வைக்கவே முடியாது. பணமாகச் சொத்தை வைத்திருப்பின் எது வேண்டுமானாலும் வாங்கிக்கொள்ளலாம் என்ற உறுதிப்பாடு இருக்கும்.

இவ்வாறு உறுதி, வசதி, காரணமாகப் பணத்துக்குள்ள சிறப்பை நீர்மை (Liquidity) என்று குறிப்பிடுவது வழக்கம்; சொத்துகள் எல்லாவற்றிலும் பணம் அதிக நீர்மையுடையது. ஆகையால் அதிகம் விரும்பப்படுவது. வருமான மீதியைக் கொண்டு எந்தச் சொத்தை வாங்குவது என்பதை நிர்ணயிக்கப் புகும்போது, இம் மூன்று அம்சங்களும் கருதப்படும். சொத்துகள் பலவும் இம் மூன்று அம்சங்களிலும் வேறுபடும்.

உதாரணமாக எந்திரம், பாண்டுகள், பங்குகள் ஆகியவற்றில் விளைவு அம்சம் முக்கியம். விளைவு (Yield) வட்டியாகவோ இலாபப் பங்கீடாகவோ (Dividend), முதல் மதிப்புயர்வாகவோ (Capital Appreciation) தோன்றலாம். பண்ட இருப்பு, பணம் ஆகியவற்றில் விளைவு முக்கியமன்று; வசதியும் உறுதிப்பாடும் முக்கியம்.

அவ்வப்போது ஒருவன் மூன்று அம்சங்களையும் கருதி, உச்ச வருவாய் வரும் வகையில் சொத்துகளைத் தேடுவான். ஒன்றுக் கொன்றை மாற்றி, முடிவில் உசிதமான ஒரு கலப்பை எய்தியதும் ஒரு சமநிலை எய்துவான். இப்படி ஒவ்வொருவரும் மெய்வார்கள். உதாரணமாக டாட்டா பங்குகளை வைத்திருப் பவர்கள், டன்லப் பங்குகளை வாங்க விரும்புவதாக வைத்துக் கொள்வோம். அங்காடியில் சமநிலை இருக்காது. டாட்டா பங்குகளின் விலை இறங்க ஆரம்பிக்கும். டன்லப் பங்கின் விலை ஏற ஆரம்பிக்கும். முடிவில் விலையேற்றத்தால் டன்லப் பங்குடை யவர்கள் அவைகளை விற்கத் தூண்டப்படுவார்கள். விலை மலிந்து விட்டதால் சிலர் டாட்டா பங்குகளை வாங்க முன்வரு வார்கள். முடிவில் எல்லோருடைய விருப்பமும் நிறைவேறிச் சமநிலை உண்டாகும். சிலர் ஏறும் பங்குகளை விற்கவும், மலியும் பங்குகளை வாங்கவும் ஏன் முன்வருகின்றனர்? ஒரு பங்கின் விலை விழுவது அதன் வருவாய் வீதத்தை உயர்த்துகிறதாகையால் அதை வாங்குவது கவர்ச்சிகரமாகிறது. இந்த விதமாகத்தான் எல்லாச் சொத்துக்களிடையேயும் மாற்று நடைபெறுகிறது. செல்வந்தர்களுக்கு மாற்றுவதற்கு அநேக வாய்ப்புகள் உள்ளன. ஆனால் முக்கியமான மாற்றுதல் செக்யூரிட்டிகளுக்கும் பணத் துக்கும் இடையில் நடப்பதாகும். இவை இரண்டுக்கும் இடையில் நிகழும் தேர்வுதான் வட்டி நிர்ணயத்துக்கு மிகமுக்கிய மானது. எப்படி என்று பார்ப்போம்.

வட்டி என்பது கடன் பட்டோர் ஆண்டுதோறும் கடன் மேல் தரவேண்டிய வீதாச்சாரமாகும். வட்டி தருவதற்குக் காரணம் கடன் தொகையை ஆதாயமான காரியங்களில் ஈடுபடுத்தலாம் என்பதாகும். ஆதாயம், தொகையை ஆக்க வேலையின் பயன் படுத்துவதால் உண்டாகிறது. முதலின் ஆக்க சக்தியே வட்டியின் அடிப்படை. நெடுங்காலத்தில் வட்டி மட்டம் இந்த ஆக்க சக்தியையும் முதல் கிடப்பையும் பொறுத்தே இருக்கும். ஆனால் ஒரு நேரத்தில் வட்டியை நிர்ணயிப்பது மேற்கூறிய சொத்துமாற்றுகும். வட்டி தரும் செக்யூரிட்டிகளுக்கு உதாரண மாகப் பாண்டை எடுத்துக் கொண்டால், மக்கள் அவ்வப்போது

பண உருவில் எவ்வளவு, பாண்டில் எவ்வளவு வைத்திருப்பது என்று முடிவு செய்யவேண்டி வரும். பணமாக வைத்திருத்பவர்களில் சிலர் பாண்டாக வைக்க விரும்பினுல், பாண்டுக்குப் தேவை உயர்ந்து, பாண்டுகளின் விலே ஏறும். வட்டி குறையும். ஒரு பாண்டினுல் ஆண்டுக்கு 5 ரூபாய் (வட்டி) வருமான முண்டாயின், அதன் விலே ரூ. 100-விருந்து ரூ. 200-க்கு உயரும் போது வருமான வீதம் (வட்டி வீதம்) $2\frac{1}{2}\%$ ஆகிறது. ஏனெனில், முன்னர் 100 ரூபாய்க்கு 5 ரூபாய் வட்டி இருந்தது; இப்போது 100-க்கு $2\frac{1}{2}$ தான் வருகிறது. ஆகவே பாண்டின் விலே ஏறுவது வட்டி வீழ்ச்சிக்கிணையாகும். ஆகவே பணம் வைத்திருப்போன் பாண்டை விரும்பினுல் வட்டி விழும் என்பது தெரிகிறது. இதற்கெதிராக, பாண்டின் விலே விழுந்தால் வட்டி ஏறும் என்பதாகிறது.

இப்படிப் பாண்டின் விலே ஏறுவதன் விளேவாக மக்களின் பாண்டு விருப்பம் குறையும், ஏனெனில், வட்டி வீழ்ச்சி வருமானத்தைக் குறைக்கிறது. தவிர பாண்டின் விலே ஏறுவது எதிர்கால பாண்டு விலேயைப் பற்றிச் சித்திக்கச் செய்யும். சிலர் இன்னும் விலே ஏறும் என்றும் எதிர் பார்க்கலாம். ஆனுல், விலே ஏறிக் கொண்டே போகுமானுல் ஒரு நிலேயில் உச்சம் தாண்டி விட்டதாகவும், அடுத்தபடி வீழ்ச்சி இன்றியமையாதது என்றும் நினேக்கலாம். பாண்டை வாங்கவோ வைத்திருக்கவோ தயங்கும் நிலேவரலாம். 100 ரூபாய்க்கு வாங்கிய பாண்டு ரூ. 90-க்கு விழும் என்று எதிர்பார்த்தால், பாண்டில் கிடைக்கும் வட்டி வருவாய் 5 ரூபாய்; ஆனுல் முதல் நஷ்டம் 10 ரூபாய். ஆக நிகர நஷ்டம் ஒரு ஆண்டில் 5 ரூபாய் ஆகிறது. ஆகவே, 100 ரூபாய் விலேயிலேயே பாண்டை விற்றுவிடத் தோன்றும். பாண்டாகச் சொத்தை வைத்திருப்பதைவிடப் பணமாக வைத்திருப்பது நஷ்டத்தைக் குறைக்கும். பணமாக வைத்திருப்பதால் வட்டி வருவாயை இழந்தாலும் முதல் நஷ்டமில்லாமலாவது பார்த்துக்கொள்ளலாம். பணத்துக்கு வசதி, உறுதி என்ற பண்புகள் உண்டாகையானுல் இவைகளே ஒரு வகை வருவாயாகும். எதிர்காலத்தில் வட்டி ஏறும் (பாண்டு விலே குறையும்) என்று எதிர் பார்ப்பவன் ரொக்கமாக வைத்திருக்க விரும்புவான். இதை நீர்மை விருப்பம் (Liquidity Preference) என்பர். இந்த வகையில் எதிர்காலத்தை நோக்கி ஏற்படும் நீர்மை நோக்கம், யூக வாணிக நோக்கம் (Speculative Motive) எனப்படும். இந்த நோக்கத்துடன் பாண்டுகளுக்கும். பணத்துக்கும் இடையில் நிகழும் இவ்வித மாற்றுக்களே ஒரு நேரத்தில் வட்டியை நிர்ணயிக்கும் காரணிகளில் மிக

முக்கியமானது எனலாம். ஒரு நேர வட்டி (அதாவது பாண்டு விலை) அந்நேரத்தில் எல்லோருடைய பாண்டு நாட்டத்தையும் பண நாட்டத்தையும் பூர்த்தி செய்யும் அளவில் சமநிலை அடையும். குறைந்த வட்டி வீதங்கள் (ஏற்றமான பாண்டு விலைகள்) காணப்படும்போது பெரும்பாலும் எல்லாரும் யூக வாணிக நோக்கத்தோடு பணத்தை நாடுவர். சிலரே பாண்டை வைத்திருப்பர். ஏனெனில், பாண்டு விலை விழக்கூடும் என்று எல்லாரும் எதிர்பார்ப்பார்கள். ஏறிய வட்டி வீதங்கள் (குறைந்த பாண்டு விலைகள்) காணப்படும்போது அநேகமாக எல்லாரும் பாண்டுகளை வைத்திருக்க விரும்புவர்; பணத்தை வைத்திருக்க விரும்பமாட்டார்கள். ஏனெனில் பாண்டு விலைகள் ஏறும் என்று அநேகமாக எல்லாரும் எதிர்பார்ப்பார்கள். ஆகவே, ஏற்றமான வட்டி வீதங்களில் பணம் விரும்பப் படாது; குறைந்த வட்டிகளில் பாண்டு விரும்பப்படாது. ஆனால் அங்காடியில் ஒரு நேரத்தில் குறிப்பிட்ட அளவு பணமும் பாண்டுகளும் இருக்கின்றன. இவை யாராலேனும் பற்றப்பட வேண்டுமானால் இரண்டையும் பற்றும்படி செய்வதான ஒரு வட்டி வீதம் இருக்கும். இது பணத்தைச் சிறப்பாக விரும்புவோரும் பாண்டைச் சிறப்பாக விரும்பு வோரும் பேரம் செய்வதன் மூலம் நிர்ணயமாகிவிடும். நிர்ணயமாகும் வீதம் பாண்டுகளின் தொகையையும் யூக வாணிகத்துக்குக் கிடைக்கும் பணத் தொகையையும் பொறுத்தது. நாட்டின் பணத்தொகை பணத்துறை அதிகாரி களால் நிர்ணயிக்கப்படுவது. பணத்தொகை அதிகமாயிருந்தால் யூக வாணிகத்துக்கும் பணம் அதிகமாகக் கிடைக்கும். ஆனால் பணம் யூக வாணிகத்துக்காக மட்டும் வைத்திருக்கப்படுவதன்று. வேறு நோக்கங்களுக்காகவும் பணம் தேவைப்படுகிறது. அன்றாடச் செலவுகளுக்காகவும் சிறிது தேவைப்படுகிறது. இதைப் பணத்துக்குள்ள பேர நோக்கம் (Transactions Motive) என்பர். தவிர, எதிர்பாராத செலவுக்காகவும் சிறிது பணம் தேவைப்படுகிறது. இதை எச்சரிக்கை நோக்கம் (Precautionary Motive) என்பர். இந்த இரண்டுவகைத் தேவைகளும் வருமான நிலையைப் பொறுத்தன. வருமானம் உயர்ந்தால், இத்தேவைகள் உயரும். நாட்டின் பணத்தொகை மாறாதிருக்க, வருமானம் உயர்ந்து இத்தேவைகள் உயர்ந்தால் இத்தேவை களுக்குப் போனது போக மீதிப் பணமே யூக வாணிகத் தேவைக்குக் கிடைக்கும். ஆகவே, யூக வாணிகப் பண இருப்புக் குறையும். பாண்டுகளின் தொகை மாறாதிருக்க, யூக வாணிகத்துக்குள்ள பணத்தொகைக் குறைவு, பாண்டுகளின்

விலை வீழ்ச்சியை உண்டாக்கும். பாண்டு விலை விழ ஆரம்பித்ததும் வட்டி ஏற ஆரம்பிக்கும் என்பது வெளிப்படை.

வருமானம் மாறுதிருக்க, பணத்தொகையோ பாண்டுகளின் தொகையோ அதிகப்பட்டால் வட்டி வீதம் பாதிக்கப்படும். பணத்துறை அதிகாரிகள் பாண்டுகளை வாங்குவதன் மூலம் பணத்தொகை அதிகமானுல், மக்களிடமுள்ள பாண்டுத் தொகை குறையும், பணத்தொகை அதிகப்படும். அப்போது பாண்டுகளின் விலை ஏறி, வட்டி குறைந்து, மக்களிடம் (நிறையப் பணமும், குறைவாகப் பாண்டுகளுமான) ஒரு புதுச் சமநிலை தோன்றும்.

இப்படியே பாண்டுகளுக்கும் பங்குகளுக்கும் (Shares) இடையில் மாற்றல் நிகழக்கூடும். மாற்றும் காரணம், முன் கூறியபடி வருவாய் வேறுபாடு. இரண்டு வகைச் சொத்துகளும் விளைவு (Yield) தருவன, இரண்டுக்கும் பராமரிப்புச் செலவு (Carrying Cost) இல்லை. ஆகவே இரண்டின் விலைகளும் ஒரே திசையில் மாறக்கூடும். ஒன்றின் விலை ஏறினுல் (இறங்கினுல்) மற்றொன்றின் விலையும் ஏறும் (இறங்கும்). ஆனுல், பாண்டுகளுக்கும் பங்குகளுக்கும் வேறுபாடுண்டு. பாண்டுகள் குறிப்பிட்ட மாறுத (வட்டி) வருவாயுடையன. பங்குகளின் (இலாபப் பங்கீடு) வருவாயோ தொழில் நிலைக்கேற்ப மாறக் கூடியது. தொழில் பூரிப்புக்காலத்தில் பங்கு விலைகள் ஏறும். பாண்டு விலை அவ்வளவு ஏறக் காரணமில்லை. உண்மையில் தொழில் பூரிப்பு மிதமிஞ்சிப் போகும் என்று தோன்றினுல், பணத்துறை அதிகாரிகள் வட்டியை ஏற்றலாம். அதனுல் பாண்டு விலைகள் குறையலாம். ஆகவே இரண்டும் முரண்பட்ட திசையில் விலை மாறக்கூடும். தவிர, பணவீக்கம் நிகழும்போது பாண்டுகளின் உண்மை விளைவு (real yield) குறையும். அதே போது பங்குகளின் பணவருவாய் உயர்வதனுல் விளைவு மாறுதிருக்கும். ஆகவே, மக்கள் பாண்டுகளை விற்றுப் பங்குகளை வாங்க முற்படுவர். இதனுலும் பாண்டு விலைகள் தாழ்ந்தும் பங்கு விலைகள் ஏறியும் காணப்படலாம்.

அடுத்தபடி, பாண்டுகளுக்கும் உண்டியல்களுக்கும் (bills) இடையில் மாற்று நிகழ்வதைப் பார்ப்போம். இரண்டுக்கும் உள்ள வேறுபாடு என்னவெனில், ஒன்று குறுங்காலத்தில் முதிர்வது, மற்றொன்று நெடுங்காலத்தில் முதிர்வது. ஆகவே உண்டியல்களின் விலை அவைகளின் குறுகிய வாழ்நாளுக்குள் பெரும்பாலும் மாறுது என்று எதிர்பார்க்கலாம். பாண்டின்

விலை அதன் நெடிய வாழ்நாளில் மாறும் என்று எதிர்பார்க்கலாம். ஆகவே உண்டியலில் இட்ட முதல் பாண்டிலிட்ட முதலைவிட நிலையானது, இதனால் உண்டியலின் நீர்மைத் தன்மை அதிகம். இக்காரணத்தால் நீர்மை விரும்புவோர் உண்டியலையே அதிகம் விரும்புவர். ஆயினும் பாண்டின் வட்டி வருவாய் உயர்ந்தால் சிலர் உண்டியலை மாற்றிப் பாண்டு வாங்க முற்படுவது இயற்கை. அதிக வருமானம் பெறுவதோடு எதிர் காலத்தில் பாண்டின் விலை விழுந்தால் வருமானம் உயரவும் கூடும், இதனால் உண்டியல் வட்டியும் பாண்டு வட்டியைப் பின்பற்றி ஏறும்.

பண அங்காடியில் இவ்விதமாகப் பல்வேறு வீதத்தில் வட்டி வருவாயுடைய சொத்துகளுக்கிடையே மாற்று நடந்து கொண்டே இருக்கும். பணம் ஒரு கோடியிலும் நெடுங்காலப் பாண்டுகள் ஒரு கோடியிலுமாக இடைப்பட்ட நிலையில் உண்டியல் முதலிய இடைக்கால முதிர்வுச் சொத்துகள் இருக்கும். இவைகளிலே வருவாய் இல்லாதது பணம். பண வருவாய் மிக்குள்ளது நெடுங்காலப் பாண்டு. இவைகளுக்குள் வட்டி வருவாயில் வேற்றுமையில்லை எனில் கடனீவோர் எல்லாரும், உண்டியல் போன்ற குறுங்கால முதிர்வுடைய சொத்தையே விரும்புவது இயற்கை. ஆனால், கடன் வாங்குவோர் அனைவரும் பாண்டு போன்ற நெடுங்காலச் செக்கூரிட்டிகளையே வெளியிட விரும்புவர். ஏனெனில், அவர்களின் வட்டிப் பொறுப்பு இவ்வளவென்பது நெடுங் காலத்துக்கு உறுதியாக இருக்கும். ஆகவே குறுங்காலத்துக்குக் கடனீவோரின் எண்ணிக்கை அதிகமாயும் வாங்குவோர் எண்ணிக்கை குறைவாயும், நெடுங்காலத்துக்குக் கடன் வேண்டுவோர் எண்ணிக்கை அதிகமாயும் கொடுப்போர் எண்ணிக்கைக் குறைவாயும் இருக்கும். ஆகவே, குறுங்கால வட்டியை விட நெடுங்கால வட்டி ஏற்றமாக இருக்கும். இவ் வட்டி வேறுபாடு இரண்டு அங்காடிகளிலும் தேவை அளிப்புச் சம நிலையை உண்டாக்குகிறது. சில கடனீவோர் நெடுங்காலக் கடன் தர முற்படுவர், அதாவது பாண்டுகளை வாங்க முற்படுவர். கடன் வேண்டுவோரும் சிறிது குறுங்காலச் செக்கூரிட்டிகளை வெளியிட முன்வருவர். ஆனால் சிலபோது குறுங்கால வீதம் நெடுங்கால வீதத்துக்கு எச்சமாக இருப்பதுண்டு. ஆனால் இது தற்காலிக நிகழ்ச்சி. குறுங்கால வட்டி வீதம் அதிகப் பிறழ்ச்சியுடையதாகையால் தற்காலிகச் சூழ்நிலையால் இப்படி நேரலாம். ஆனால், பொதுவாகக் குறுங்கால வட்டி குறைவாகவே இருக்கும்.

இந்த விதமான வட்டி வேறுபாடு நிதி நிலையங்கள் ஆதாயத்துடன் வேலை செய்ய வாய்ப்பளிக்கிறது. இவை கடன் வாங்கி வட்டிக்கு விடுகின்றன. உதாரணம், கட்டடச் சங்கங்கள் குறுங்காலத்துக்குக் கடன் வாங்கி நெடுங் காலத்துக்குக் கடன் தருவது. இந்த வீத வேறுபாட்டினால் இலாபம் தோன்றுவதால்தான், இப்படிக் குறுங்காலப் பணத்தை நெடுங்காலப் பணமாக்குவதன் மூலம் குறுங்கால முதலின் எச்சமான அளிப்பைக் கொண்டு நெடுங்காலக் கடனுக்குள்ள எச்சத் தேவையைப் பூர்த்தி செய்யப்பட்டு, இரு கால வட்டி வீதங்களுக்கும் நெருக்கம் உண்டாகிறது.

இவ்வகையான வேலையைச் செய்வதில் பாங்குகளே முதன்மையானவை. அவை குறுங்காலத் தவணையில் வைப்புகளைப் பெற்று, முதிரக் காலம் பிடிக்கும் வழிகளில் (பாண்டுகள், கடன்கள் ஆகிய வழிகளில்) ஆள்கின்றன, இப்படிப்பட்ட பாங்குகளும், பிற நிதி நிலையங்களும் பண அங்காடியின் அங்கத்தினர்கள்,

# 30. அமெரிக்க பாங்குத் திட்டம்

## (The American Banking System)

பிரித்தானியப் பாங்குத்திட்டத்துக்கும் அமெரிக்க பாங்குத் திட்டத்துக்கும் அநேக வேறுபாடுகள் காணப்படுகின்றன வாயினும், அடிப்படையில் ஒற்றுமை அதிக மென்றே கூறவேண்டும். அமெரிக்கப் பாங்கு, தொகுதி முறையுடன் பணி செய்கிறதாயினும் மைய பாங்கின் நடவடிக்கையில் இங்கிலாந்து பாங்கை ஒத்திருக்கிறது' நாம் கீழே வேறுபாடுகளுக்கு மிகை மதிப்புத் தரவேண்டாம். நாளுக்கு நாள் வேறுபாடுகள் குறையு மென்றும் எதிர்பார்க்கலாம்.

திட்டம் என்ற சொல் ஒழுங்குமுறையான அமைப்பையும் செயலையும் குறிப்பதாயின் அமெரிக்காவில் 'பாங்குத் திட்டம்' இருக்கிறதென்பதை மறுக்கமுடியாது. மையப் பண அங்காடி நியூயார்க்கில் உள்ளது. மைய பாங்கும் பிற பாங்குகளும் நிதி நிறுவனங்களும் இணைந்துள்ளன. மைய பாங்கின் அதிகாரம் நாடு முழுவதும் செல்கிறது.

ஆனால், அமெரிக்கத் திட்டம் ஆங்கிலேயத்திட்டத்தை விடச் சிக்கலானது. நாட்டின் பரப்பும் அரசியல் அமைப்பும் பழைய வரலாறும் இதற்குக் காரணங்களாகும். எண்ணிக்கையில் அமெரிக்கப் பாங்குகள் 1966-ல் 13,770க்கு மேற்பட்டிருந்தன. இவைகளின் கிளைகள்16,648. முன்பு பெரும்பாலான தனி, கிளை யற்ற பாங்குகள். இவைகளை யூனிட் பாங்குகள் என்பர். இதற்குக் காரணம் வரலாற்றில் தான் காண வேண்டும். சட்டம் கிளைகள் நிறுவுவதற்கு அநேக இராச்சியங்களில் தடை செய்தது. இவ்விதச் சட்டத்திற்குக் காரணம் ஒன்று, அமெரிக்கர்கள் பண மூட்டைகளின் ஆதிக்கம் வலுக்குமோ என்று கொண்டிருந்த பயமேயாகும். பதினாறு இராச்சியங்களில் கிளைகள் அனுமதிக்கப்

பட்டிருக்கின்றன. பிறவற்றில் பொதுவாசு அனுமதியில்லை. எந்தப் பாங்கும் இராச்சியத்துக்கு வெளியில் கிளையை நிறுவக் கூடாது. அமெரிக்காவின் இரண்டாம் பெரிய நகரான சிகாகோ (Chicago) விலும் எப்பாங்கும் ஒரு கிளைக்குமேல் வைத்திருக்கக் கூடாதென்பது சட்டம். சராசரி எட்டுப் பாங்குகளில் ஏழு பாங்குகளுக்குக் கிளையில்லை. கிளையுடைய பாங்குகளுக்கும் இரண்டு மூன்று கிளைகள் பார்ப்பதுகூட அரிது. இவையும் பெரும்பாலும் ஒரே ஊரில் இருக்கும். இருநூறு பாங்குகள் ஐந்து கிளைகளுக்கு மேல் உடையவையாகும். மூன்றுதான் நூறு கிளைகளுக்குமேல் உடையனவாம். காலிபோர்னியா இராச்சியமே கிளைகள் மிக்க இராச்சியம்.

எண்ணிக்கை பெரிதாக இருப்பதால் பாங்குகளுக்குள் போட்டி அதிகம் என்று நினைக்கக்கூடாது. நாட்டிலுள்ள நகரங்கள் ஆயிரக்கணக்கில் இருப்பதால் பாங்குத் தொகை பெரியதாக இருக்கிறது. அநேக நகரங்களில் ஒரு பாங்குக்கு மேலில்லை. நியூயார்க்கு இராச்சியத்தில் பாங்குகள் தம் நகரத்துக்கு வெளியில் கிளைகள் நிறுவக்கூடாது; வெளிநாடுகளில் நிறுவு வதற்குத் தடையில்லை.

ஆயினும், சமீபகாலத்தில் ஐக்கியங்களின் வழியாக, கிளைகள் அனுமதிக்கப்பட்ட இராச்சியங்களில் கிளைபாங்கு முறை பரவலாயிற்று. 1950-66-க்கு இடையில் கிளையுடைய பாங்கு களின் எண் 1291 இலிருந்து 3319 ஆக ஆயிற்று. கிளைகள் 4721இலிருந்து 16,648 ஆக ஆயின. இன்னும் எண்ணிக்கையில் கிளையற்ற (யூனிட்) பாங்குகளே அதிகம். தவிர, பாங்குத் தொகுதிகள் (groups) தவிர தொடர்கள் (chains) அமெரிக் காவில் காணப்படுகின்றன. இவை ஒரே நபர் உரிமை யில், ஆட்சியிலிருப்பதால் கிளை பாங்கு முறைக்கொப்பாக நடக்கின்றன. இவ்விதப் போக்குகளால் அமெரிக்காவைச் சிறு பாங்குகளுடைய நாடு என்று நினைப்பது தவறுகிறது. ஆனாலும், இங்கிலாந்தில் காண்பது போன்று 'ஐந்து பெரிய பாங்குகள்' ஆதிக்கம் பெற்றிருக்கவில்லை.

இப்படிப்பட்ட பாங்குத் திட்ட அமைப்பினால் அமெரிக் காவில் பாங்குகளைக் கட்டுப்படுத்துவதோ, அவைகளே கருத் தொருமித்து நடப்பதோ கடினம். இங்கிலாந்தில் வெகு எளி தாகப் பாங்குகளின் கருத்தை அறிந்து கொள்ளலாம். ஒரு விஷயத்தைப் பரப்பலாம். ஒருமைப்பாடு உண்டாக்கலாம். அமெரிக்காவில் இது கடினம். பரந்த நாடு; மண்டல

வேறுபாடுகள் உள. ஆகவே பாங்குகளின் மனப்பாங்கு வேறு படக்கூடும். ஆகவே, நியூயார்க் பாங்குகளின் கருத்தையே ஏற்பது நியாயமற்றதாக இருக்கும்.

இப்படிப்பட்ட அமைப்பில் பாங்குகளுக்குள் செக்குகளைத் தீர்வு செய்ய ஒரு தனி முறை தோன்றியதில் வியப்பில்லை, அறுபது ரிசர்வு நகரங்களிலும் உள்ள பாங்குகளின் மற்ற நகர பாங்குகள் இருப்பு (balances) வைத்திருப்பது வழக்கம். இந்த ரிசர்வு நகர பாங்குகள் மைய ரிசர்வு நகரங்களான நியூயார்க், சிகாகோ நகரங்களிலுள்ள பாங்குகளிடம் இருப்பு வைக்கும். இவை கரஸ்பாண்டெண்டு பாங்குகள் (Correspondent Banks) எனப்படும். இவை, மற்றப் பாங்குகளின் தனத்தை முதலீடு செய்கின்றன; கடன் தரவும் செய்கின்றன.

கிளை பாங்கு முறை சிறப்புடையதென்பதற்கு ஆதாரமாக இங்கிலாந்து பாங்குகளின் நிலைபேற்றைக் கூறலாம். பெரிய மந்தத்தின்போதும் இங்கிலாந்தில் ஒரு பாங்குகூட முறிய வில்லை. ஆனால், அமெரிக்காவில் ஆயிரக்கணக்கில் பாங்குகள் முறிந்தன. 1920இல் 20,209 பாங்குகள் இருந்தன, 1921-66 இடையில் நிறுவல் 7744, முறிவு 13,255, ஐக்யம் 10,579, நிகரக் குறைப்பு 1,554, 1966இல் இருந்தவை 13,770. சிறு பாங்குகளும் சிறு நகரத்துப் பாங்குகளும் அநேகம் முறிந்தன. இந்த முறிவுகளின் விளைவாகத்தான் Federal Deposit Insurance Corporation நிறுவப்பட்டது. எல்லாப் பாங்குகளும் $ 5000 அளவுக்கு (பின்னர் $ 15,000) ஒவ்வொரு வைப்பாளிக்கும் இன்சூரன்சு செய்ய விதிக்கப்பட்டது. இவ்வகையில் வைப்புக்களில் 96 சதவீதம் இன்சூர் செய்யப்பட்டது. இதற்குப் பின் முறிவுகள் அரிதாகி விட்டன.

அடுத்தபடி, அமெரிக்கப் பாங்குகளின் தொழில்முறையை ஆராய்வோம். அமெரிக்காவில் நாட்டுப் பாங்குகள் என்றும், இராச்சிய பாங்குகள் என்றும் இருவகை வணிக பாங்குகள் உள்ளன. பெடரல் சட்டத்தின் கீழ் நிறுவியவை நேஷனல் (நாட்டுப்) பாங்குகள். இராச்சிய சட்டத்தின் கீழ் நிறுவியவை நிலைகளில் பாங்குகள் சிலவேதான் பெடரல் ரிசர்வுத் திட்டத்தில் அங்கம் வகிக்கின்றன. நேஷனல் பாங்குகள் கட்டாயமாக அங்கம் வகிப்பவை.

**டிஸம்பர் 1967**

| | |
|---|---|
| மொத்த வணிக பாங்குகள் | 13,729 |
| அங்கமாகாத ராஜ்ய பாங்குகள் | 7206 |

| | |
|---|---|
| அங்கமானவை | 6073 |
| அங்க பாங்கு சதவீதம் | 44·3 |
| ,, வைப்பில் பங்கு % | 82·5 |
| 6073இல் { நாட்டுப் பாங்குகள் | 4780 |
| இராஜ்ய பாங்குகள் | 1239 |

## பாங்குகளின் இருப்புநிலைக் குறிப்பில் காணும் இனங்கள்

### சொத்துகள்

1. நோட்டும் காசும்
2. பெடரல் ரிசர்வு பாங்குகள் (Member Banks) ரிசர்வு
3. பிற பாங்குகளிடம் இருப்புகள் (Balances)
4. வசூல் நிலையில் உள்ள ரொக்கம்
5. U. S. அரசாங்கப் பொறுப்புகள் (Obligations)
6. இராச்சியங்கள், பிரிவுகள் (Subdivisions) பொறுப்புக்கள்
7. பிற பாண்டுகள், நோட்டுகள், டிபஞ்சர்கள்
8. பெடரல் ரிசர்வு பாங்குப் பங்கு (Stocks)
9. பிற கம்பெனிப் பங்குகள் (Corporate Stocks)
10. கடன்கள், கழிவுகள்
11. ஏற்புகள் (Acceptances) காரணமாக வாடிக்கைக் காரர் பொறுப்பு
12. பாங்கு இடம் (Premises)
13. தட்டு முட்டுச் சாமான்கள் (Furnitures & Fixtures)
14. பிற நிலச் சொத்துக்கள் (Real Estate)
15. Investments and Other Assets indirectly representing Bank Premises or Other Real Estate
16. பிற சொத்துகள்

மொத்தம்

**பொறுப்புகள்**

1. தனியார் தேவை வைப்பு (Demand Deposits)
2. கால வைப்பு (Time Deposits)
3. U. S. அரசாங்க வைப்பும், தபாலக சேமிப்பு வைப்பும் (Postal Savings)
4. இராச்சியங்கள், பிரிவுகள் வைப்பு
5. பிற பாங்குகளின் இருப்புக்கள் (Balances)
6. உத்தரவாதச் செக்குகள், அலுவலர் செக்குகள். கடன் கடிதங்கள் முதலியன, யாத்திரிகர் செக்கு
7. செலுத்தவேண்டிய உண்டியல்கள் முதலியன
8. ஏற்புகள் (Aceceptances)
9. பிற பொறுப்புக்கள்

முதல் கணக்குக்கள் (Capital Accounts) :

10. முதலும் டிபஞ்சரும்
11. எச்சம் (Surplus)
12. பிரிக்காத இலாபம்
13. ரிசர்வுகள்

மொத்தம்

**இணைவிளக்கம்**

சொத்தில் முதல் மூன்றும் முதனிலை ரிசர்வுகள் (Primary Reserves) எனப்படும். இவை உடனே ஆளக் கூடிய ரொக்கம். 'நோட்டு, காசு' என்பவை Vault Cash எனப்படும். இதில் அரசாங்கத்தின் பணமும், பெடரல் ரிசர்வு நோட்டும், வெள்ளி நாணயங்களும், சில்லரை நாணயங்களும் அடங்கும். மற்ற இரண்டும் பிற பாங்குகளிடமிருந்து வரவேண்டிய தேவை வைப்புகள். வேண்டும்போது ரொக்கமாக்கிக் கொள்ளலாம். பெடரல் ரிசர்வு திட்டத்தின் அங்கமாயுள்ள ஒவ்வொரு பாங்கும் இந்த (Primary) ரிசர்வைத் தன் வைப்பின் ஒரு குறிப்பிட்ட விகிதத்துக்கு வைத்திருக்க வேண்டும். தன்னிடம் வைத்திருக்கலாம் அல்லது தன் ஜில்லாவிலுள்ள பெடரல் ரிசர்வு பாங்கிடம் வைத்திருக்கலாம், குறிப்பிட்ட விகிதம் இல்லையானால், குறைபாட்டின் மேல் அபராதம் (penalty) செலுத்த வேண்டி வரும். தவிர, அநேக பாங்குகள் கரஸ்பாண்டெண்டு பாங்குகளிடம் இருப்பு வைத்திருக்கும். இது வெளியூரில் செலுத்துவதற்குப்

பயன்படும். அங்க பாங்காக இல்லாத இராச்சிய பாங்குகள் (State Banks) இவ்வகை இருப்பை முதனிலை ரிசர்வில் சேர்த்துக் கொள்ளலாம்.

வசூலில் இருக்கும் ரொக்கம் என்பது வெளிப்படை. இதை முற்றும் ரொக்கமாகக் கருதக் கூடாது. ஏனெனில், இதற்கெதிராகப் பிற பாங்குகள் தம்மிடமிருந்து வசூல் செய்ய வேண்டிய பாக்கி இருக்கலாம். ஒன்றுக்கொன்று இணை செய்தால் நிகர வரவோ கொடுப்பலோ நிச்சயமில்லை.

5-லிருந்து 7 வரை உபரிசர்வுகள் (Secondary rcserves) எனப்படும். முதனிலை ரிசர்வுகள் போதாதபோது இவை பயன் படும். இவ்வை அதிக வருமானமுள்ளவை யாதலின் குறை வாகவே வைக்கப்படும். 8, 9 இனங்கள் அற்பமானவை.

'கடன்களும் கழிவுகளும்' ஒரு முக்கிய இனம் ; வருமானம் தரும் இனங்கள். பொதுவாகக் கழிவு முறையே விரும்பப்படும். மிகைப்பற்று (Overdraft) இதில் அடங்கும்.

'ஏற்புகள்' (Banker's Acceptances)—இது எதிர்ப் பதிவு—இருபுறத்திலும் வருவது—பொதுவாகச் சமமாக இருக்கும். குறிப்பில் வேறுபாடு காணப்படின் காரணம் சில வாடிக்கைக் காரர்கள் ஏற்புகள் முதிராமுன் செலுத்தப்பட்டிருக்க வேண்டும். 'பாங்கு இடம்' வெளிப்படையான இனம். நிலச் சொத்து (real estates) கடன் பாக்கிக்கு வந்திருக்கும் ; விரைவில் விற்கப்படும். அடுத்த இனம் பாங்குள்ள இடத்துக்குரிமை யுடைய கார்ப்பரேஷன்களில் எடுத்த பங்குத் தொகை.

'பிற சொத்துக்கள்' வரவேண்டிய வட்டி, சொத்துரிமைகள் ஆகியவற்றைக் குறிக்கும்.

### பொறுப்புகள்

'வைப்புகள்' பாங்கின் முக்கியமான பொறுப்பு. பொதுத் துறை வைப்புகள் தனியே குறிப்பிடப்படும். காரணம் இவ் வைப்புகளுக்குப் பாங்கிகள் ஈடுகாட்ட வேண்டுமென்று சட்டம் இருக்கிறது. தேவை வைப்பென்பது தேவைப்பட்ட போது, முப்பது நாளில், அல்லது (நோட்டீசு கொடுத்தால்) அதற்குள் தரவேண்டியது. தவணை வைப்பு முப்பது நாட்க ளுக்கு மேற்பட்ட தவணையில் தரவேண்டியது. 'பிற பாங்கு வைப்புகள்' அநேகமாகக் கரஸ்பாண்டெண்டு முறையில் வந்

திருக்கும். உத்தரவாதச் செக்குகள் என்பது செக்கின் பாங்கு பொறுப்பேற்றுக் கொள்வதாக ஒப்புதல் எழுதிய செக்குகள். 'ஆபீசர் செக்கு' தன் அலுவலர் பாங்கின் செலவுக்காக எழுதியது. யாத்திரிகர் செக்கு என்பது வெளிப்படை. இவை தேவை வைப்புக்களுக் கொப்பானவை.

**செலுத்த வேண்டிய உண்டியல்களும் மறு கழிவுகளும்**

முதனிலை ரிசர்வைச் சரிப்படுத்தப் பாங்கு கடன் வாங்க வேண்டி வரலாம். செக்கூரிட்டிகளை விற்பதைவிட இது நஷ்டக் குறைவானது. இப்படித் தோன்றுவது 'செலுத்த வேண்டிய உண்டியல். ஃபெடரல் ரிசர்வு பாங்குகளிடமிருந்தும், புரோநோட்டுக் கொடுத்தோ அல்லது வாடிக்கைக்காரன் நோட்டைத் தன் புறக்குறிப்புடன் தந்தோ, கரஸ்பாண்டெண்டு பாங்குகளிடமிருந்தும் கடன் பெற்றால் அது 'மறு கழிவு'.

பிற பொறுப்புகளில், வெளியிட்ட இலாபப் பங்கீடு தரப் படாத நிலையில் இருக்கும் பாக்கியும், வரி பாக்கியும், வரவேண் டிய கழிவு வட்டியும், பிறவும் அடங்கும்.

முதல் கணக்கு:- பாங்குகள் பொதுவாகச் சாதாரணப் பங்குகள் மூலமே மூலதனம் சேகரிக்கும். டிபஞ்சர் அற்பம். பாங்குப் பங்கு முகவிலைக்கு (par value) மேல் விற்றால் வரும் மிகுதி, எச்சம் (surplus). பிரிக்காத, பிரிக்கவிரும்பாத இலாபங்கள் அடுத்த இனத்தில் வரும். டிவிடெண்டு கொடுத் ததும் இத்தொகை குறையும். Reserve என்பது எதிர்பாராத தேவைகளுக்காக (contingencies) வைக்கப்படுவது. எதிர்பாராத நஷ்டத்தை இது சமாளிக்கும். இதனால், இலாபப் பங்கீடு பாதிக்கப்படாமல் இருக்கும்.

இனி ஆங்கிலப் பாங்குகளுடன் ஒப்பிட்டுப் பார்ப்போம். இருப்பு நிலைக் குறிப்பின் அமைப்பில் பேரளவு ஒற்றுமை இருப்பது காண்க. ஆனாலும், சில முக்கிய வேறுபாடுகள் நடைமுறையில் காணப்படுகின்றன. ஆதியில் அமெரிக்க பாங்குகள் ஆங்கில பாங்குகள் ஈடுபடாத பல முறைகளில் ஈடு பட்டிருந்தன. இன்றும் ஓரளவுக்கு இது உண்மை. ஆனால் பொதுவாக 1933-க்குப்பின் பாங்குகளுக்கு இயல்பான பணி களிலே ஈடுபடுவது அதிகமாகிக் கொண்டு வருகிறது.

அமெரிக்கப் பாங்குகளின் முக்கியப் பணி வைப்புகளைப் பெறுவதும் குறுங்காலக் கடன் தருவதும்தான். ஆனால் சில

வேறுபாடுகள் காணப்படுகின்றன. செக் ஆட்சி இங்கிலாந்தை விட அமெரிக்காவில் பரவியுள்ளதால், தேவை வைப்பு அதிகம். தவணை வைப்புகளும் முக்கியமாயினும், சேமிப்பு வைப்புக்கள் அமெரிக்காவில்இங்கிலாந்தைவிட அதிகம் பாங்குகளுக்கிடையே வைப்புகள் (Inter—bank deposits) தொன்று தொட்டு அமெரிக்காவில் முக்கியமான அம்சமாக இருந்து வந்துள்ளன. இது கரஸ்பாண்டெண்டு முறையின் விளைவாகும். ஃபெடரல் பாங்குகள் நிறுவப்பட்டபின் இம்முறைக்கு அவசியம் குறைந்த போதிலும், இன்றும் இவ்வகை வைப்புகள் மொத்தத்தில் 8% ஆக இருக்கின்றன வெளியூர் அனுப்பும் (remittance) வேலை அமெரிக்காவில் அதிகமாகையினல், தீர்வு (clearing) ஏற்பாடுகள் பலமாக உள்ளன. இவ்வழியே பாங்குகளுக்கு ஏராளமான வருமானம் கிடைக்கிறது. ஆனல் வாடிக்கைக்காரர்கள் செலவுக் கஞ்சுகிறார்கள் என்பது சில இடங்களில் செக் ஆட்சி குறைவாக இருப்பதிலிருந்து தெரிகிறது. கால வைப்புகளின் மேல் வட்டி காலத்தைப் பொறுத்தது. இங்கிலாந்தில் காணும் 7 நாள் தவணை கிடையாது. தவணை வைப்புகள் மொத்தத்தில் ⅔ பங்காக உள்ளன, வைப்புகள் இன்சூர் செய்யப்பட்டுள்ளன.

அடுத்தபடி, கடன் கொடுப்பு விஷயத்தில் உள்ள அமெரிக்க பழக்கங்களைப் பார்ப்போம். இங்கிலாந்தில் 8% ரொக்கம் வழக்கம், சட்டமில்லை. அமெரிக்காவில் சட்டம் விதிக்கும் வீதத்தில் ரொக்கம் வைக்கப்படவேண்டும். அதிகாரிகள் வீதத்தை மாற்றலாம். பாங்கு ரிசர்வு நகரத்திலிருந்தால் விகிதம் குறைவு; பிற இடங்களில் அதிகம். 1958-இல் விகிதம் சுமார் 21% ஆக இருந்தது. இங்கிலாந்தில் காணப்படும் அழைப்புப் பணம் (Money-at-call) அமெரிக்காவில் காணப்படவில்லை. ஆயினும் கழிவகங்கள் இல்லையாதலின் இலாபத்தையும் அழைப்புக் கடனையும் சேர்ந்து இங்கிலாந்தில் 16% தான் ஆகிறது. அமெரிக்காவில் விகிதம் அதிகமாக இருக்கக் காரணம், பாங்குகளின் (சராசரி) சிறு உருவம். இங்கிலாந்தில் காண்பது போல ஒரு சிறு பகுதியே கையில் வைக்கப்படுகிறது. மீதி மைய பாங்கில் இருக்கிறது.

கடன்கள் பெரும்பாலும் இங்கிலாந்தில் காண்பதுபோல, குறுங்காலக் கடன்கள் (Short-term Loans). இங்கிலாந்தில் காணப்படும் Bills Discounted இனத்துக்கு நேரான அமெரிக்க இனங்கள் (1) அரசாங்க உண்டியல்கள் (கழிவு செய்தன) (2) வணிக உண்டியல்கள் (Documentary Bills). அயல் நாட்டு வர்த்தகத்தில் பாங்கு உண்டியல்கள் (Bank bills) அமெரிக்காவில்

முக்கியம். உண்டியல் விஷயத்தில் இரு நாடுகளுக்கும் வேறுபாடு ஒன்றுமில்லை. ஆனால் அமெரிக்காவில் ஒரு தனி வகைக் கடன் கருவி ஆளப்படுகிறது. இது வணிகத் தாள் (Commercial Paper) எனப்படுகிறது. இது ஒரு புரோ நோட்டுக்குச் சமானம். தொழில் துறையினர் கடன் பெறும்போது இது ஆளப்படுகிறது இந்தத் தாளைக் கழிவு செய்து பெற்றபின் முதிர்வு வரையிலும் பாங்கு தானே அதை வைத்திருப்பது வழக்கம். ஆனால் வேண்டுமானால் ஒரு ஃபெடரல் ரிசர்வு பாங்கில் மறு கழிவு செய்து கொள்ளலாம். ஆனால் பாங்கு உண்டியல்களும் புரோ நோட்டுகளும் மொத்தப் பாங்குச் சொத்துகளில் ½%க்கு மேலில்லை. இங்கிலாந்தில் வர்த்தக உண்டியல்கள் 1% ஆக இருக்கின்றன. இங்கிலாந்தில் வியாபாரிக்கு உதவி பெரும்பாலும் 'மிகைப்பற்று' (overdraft) மூலம் கிடைக்கிறது. அமெரிக்காவில் உதவி எல்லாம் அநேகமாக புரோ நோட்டு எழுதிப்பெற்ற கடன்களாக (loans) உள்ளது. இங்கிலாந்தைவிட இடைக்காலக் கடன்கள் (Medium-term Loans), அடைமானக் கடன்கள் (Mortgage Loans), நுகர்வோர் கடன்கள் (Consumer Credit) மிகுதியாகக் காணப்படுகின்றன. சமீபகாலத்தில் பாங்குக் கடனுக்குத் தேவை (இங்கிலாந்தின் அனுபவத்தைப் போல) குறையக் காணப்பட்டது. தொழிற் பங்கு மூலம் முதல் பெறுவது பரவியது. ரொக்க பேரம் பரவியது. ஆகவே பாங்குக் கடன் தேவை குறைந்தது. ஆனால் அதேபோது பாங்குகளின் கடன் சக்தி உயர்ந்தது. இங்கிலேயில் பாங்குகள் கடன் கொடுக்கும் விதிகளைத் தளர்த்தலாயின. காலக்கடனும் (Term Loans), நுகர்வோர் கடனும் (Consumer Credit) தோன்றின. காலக்கடன் என்பது பத்தாண்டுக் கால வரைறையில் தரப்படுவது. தவணையில் செலுத்தப்பட வேண்டிய நிபந்தனை உண்டு. பங்கு அங்காடியில் பணம் தேடுவது முடியாத நிறுவனங்கள் இப்படிக் கடன் பெறுகின்றன. வரப்போகிற இலாபத்தை முதலீடு செய்வதாகத் தீர்மானித்த கம்பெனிகள் தவணையில் இலாபத்திலிருந்து செலுத்த முடியுமாதலால் அவைகளும் இதனை ஆள்கின்றன. பெருங்கடன் தொகையாயின் பல பாங்குகள் சேர்ந்து சிண்டிகேட்டாய்த் தருவது உண்டு. காலக்கடன்கள் பாங்குகள் விரும்பும் வகை என்பதற்கு ஆதாரம் வட்டி வீதம் குறுங்காலக் கடனைவிட ¼, ½%க்கு மேல் அதிகப்படுவதில்லை. நுகர்வோர் கடன் இங்கிலாந்தைவிட அமெரிக்காவில் மிக அதிகம். இவ்வகைக் கடன்களில் பாதி பிரத்தியேகமான நிதிக் கம்பெனி (Special Finance Companies), விற்பனைக் சம்பெனி (Sales Organisations) முதலியவைகளுக்கும் தரப்படுகின்றன. ஆயினும், நேராக நுகர்வோருக்குக் கடன் தருவது அதிகம். ஆனால், வட்டி வீதங்கள் ஏற்ற

மானவை. வராத கடன் தொகை அற்பமாகவும் இருக்கிறது. இவ்வகைக் வசதியே வாடிக்கைக்காரர்களைப் பிடிக்கத் தூண்டிலாகக் கருதப்படுகிறது. ஃபெடரல் ரிசர்வு அதிகாரிகள் இவ்வகைக் கடன்களுக்குக் கட்டுப்பாடுகள் செய்வதுண்டு.

நிலம், மனை முதலிய (real estates) இனங்களின்மேல் கடன் கொடுப்பதும் அமெரிக்காவில் அதிகம். நேரடியாகவும் சொத்தின் மேலும் கடன் கொடுக்கும் நிதியங்களுக்கும் இவ்வகைக்கடன்கள் தரப்படுகின்றன. இங்கிலாந்தில் பாங்குகள் இவ்வகைக் கடன்களை நினைப்பதில்லை. இவ்வகைக் கடன் அமெரிக்க பாங்குகளின் நிலைபேறு குறைவுக்கு ஒரு காரணமாக இருக்கக்கூடும்.

பங்கு அங்காடிக்குக் (Stock Market) கடன் தருவது அமெரிக்காவில் முன்னர் முக்கியமாக இருந்தது. பின்னர் இது கட்டுப்படுத்தப்பட்டது. ஆயினும் நியூயார்க்கில் இன்னும் குறிப்பிடத்தக்க அளவு காணப்படுகிறது.

இங்கிலாந்து பாங்குகளைப் போல அமெரிக்கப் பாங்குகள் துணையீடுகளை (collateral security) அவ்வளவு வற்புறுத்துவதில்லை. வட்டிவீதங்கள் இங்கிலாந்தில் காண்பதை விடப் பல பட்டனவாக உள்ளன. காரணம் அமெரிக்க பாங்குகள் இங்கிலாந்து பாங்குகளைவிடத் துணிகரமாகத் தொழில் செய்கின்றன.

பல்லாயிரக்கணக்கில் பல சூழ்நிலைகளில் வேலை செய்யும் அமெரிக்க பாங்குகளைப்பற்றி மேலே பொதுப்படக் கூறிய கூற்றுகள் அவைகளுக்குள் காணப்படும் பெரிய வேறுபாடுகளை மறைக்கின்றன என்பதை நாம் நினைவிற் கொள்ளவேண்டும்.

நியூயார்க் பண அங்காடி இலண்டனைப்போல மையமாக இருக்கிறது. அதனுடைய தன்மை மாறிக்கொண்டே இருக்கிறது. இலண்டனை நோக்க அது இளையது. ஆகவே, அதன் முதிர்வு நிலை இங்கிலாந்து அங்காடியை ஒத்திருக்கும் என்று எதிர்பார்க்கலாம்.

இங்கிலாந்தைப்போல இப்போது ஒரு சிறிய தொகுதி தலைமை நிலையை அடைந்துள்ளது. ஐந்து பெரிய பாங்குகளும் பத்துப் பிற நிதியங்களும் முக்கியமாக உள்ளன. முன்பெல்லாம் பங்கு அங்காடிக்குக் கடன் கொடுப்பது முக்கியமான தொழிலாக இருந்தது. இப்போது இது குறைந்துவிட்டது. வணிகத் தாள் (Commercial Paper), பாங்கு ஏற்புகள் (Bank Acceptances)

இன்றும் பெரிதும் ஆளப்படுகின்றன. வணிகத் தாளுக்கு நேராகக் இங்கிலாந்தில் ஒன்றைக் கூற வேண்டுமாயின் Inland Billஐத்தான் கூற வேண்டும். பாங்கு உண்டியல்கள் இங்கிலாந்திலும் உண்டு. அமெரிக்க அங்காடியில் இன்று முக்கியமானவைகள் கருவூல உண்டியல்கள், குறுங்கால அரசாங்கத் தாள்கள், ஃபெடரல் நிதிகள் (Federal Funds), வர்த்தகக் குறுங்காலக் கடன்கள் ஆகியவையே. அரசாங்கத் தாள்கள் சம்பந்தமாக முற்கூறிய சிறுதொகுதி இங்கிலாந்தில் காணப்படுவது போலவே இயங்குகின்றது. எப்போது வேண்டுமானாலும் வாங்கவும் விற்கவும் தயார். பாங்கரல்லாத பிற வியாபாரிகள் (Mon-bank dealers) பெரிய பாங்குகளிடம் கடன் வாங்கிக் கையில் நிறையத் தாள்களை வைத்திருக்கின்றனர். அமெரிக்கக் கருவூல உண்டியல்களும் வாராவாரம் வெளியிடப்படுகின்றன. இங்கிலாந்தில் போலன்றி ஓரே நாள்தான் அவை விற்பனைக்குக் கிடைக்கும். இங்கிலாந்தில் கழிவகங்கள் சிண்டிகேட்டாக டெண்டர் செய்கின்றன. அமெரிக்காவில் பாங்குகளும் பிறவும் நேராகப் போட்டியிடுகின்றன. சிண்டிகேட்டாகவும் டெண்டர் செய்ய அனுமதிக்கப்படுகின்றன. நியூயார்க் வியாபாரிகள் பேரளவில் வாங்கிப் பிறகு விற்கின்றனர். அமெரிக்க பாங்குகள் உண்டியல்களை வாங்கும், பின் விற்கும். இங்கிலாந்தில் வாங்கியதைப் பாங்குகள் விற்பது வழக்கமில்லை.

பாங்குகள் தம் கையில் ரொக்கம் எச்சமாகவோ குறைவாகவோ இருப்பின், ஃபெடரல் நிதிகளை(Federal Funds)வாங்குகின்றன அல்லது விற்கின்றன. ஃபெடரல் நிதிகள் என்பது ரிசர்வு பாங்குகளில் இருப்பு. இதை ரிசர்வு குறைபாடுள்ள பாங்குகள் ரிசர்வு எச்சமுடைய பாங்குகளிடமிருந்து கடன் பெற்றுத் தம் நிலையைத் திருத்திக் கொள்வதுண்டு. இதனால் பெடரல் ரிசர்வு பாங்கிடம் கடன் வாங்க வேண்டிய அவசியம் தவிர்க்கப்படுகிறது. இந்த நிதிகள் வழக்கமாக ஒருநாள் கடனுக்கே வாங்கப்படுகின்றன, பாங்கரல்லாதவர்களும் ரிசர்வு பாங்குக்கு உண்டியல்களை விற்ற போது நிதி இருப்புப் பெறுவார்கள், இவர்களும் கடன் கொடுப்பதுண்டு. ஃபெடரல் நிதி பேரம் பெரும் போட்டியில் நடைபெறுகிறது. இந்நிதிகளுக்குக் கொடுக்கும் வட்டி ரிசர்வு பாங்கில் நேரடியாக மறுகழிவு வட்டிக்கு மேலிருக்க முடியாது என்பதை யூகிக்கலாம்.

அங்காடியில் தீர்வக நிதிகள் (Clearing House Funds) என்பனவும் கிடைக்கின்றன. நியூயார்க் பாங்குகளின் மேல் வரையப்பட்ட செக்குகள் தீர்வக வழியாகப் போக ஒரு நாளாவது ஆகும்.

இதற்கிடையில் இச் செக்குகள் ஃபெடரல் நிதியைப் பெற உதவுகின்றன. ஆகவே, இவைகளிலும் பேரம் நடக்கிறது.

செக்யூரிட்டிகளை வாங்க விரும்பும் வியாபாரிகள் இந்த இரண்டு வகை நிதிகளையும் பெற முயல்கின்றனர்கள். இவ்விதப் ஃபெடரல் நிதி பேரம் ரொக்கக் குறைகளைத் (shortage of cash) தவிர்க்கப் பேருதவியாக இருக்கிறது.

**கடன் பணக் கட்டுப்பாடு (Control of Credit)**

அமெரிக்க பாங்குத் திட்டத்தைக் கட்டுப்படுத்தும் அதிகாரம் பல ஃபெடரல் சட்டங்களாலும் இராச்சியச் சட்டங்களாலும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. முன்னர் இருவகைப் பாங்குகள் உள்ளன என்றோம். ஃபெடரல் சட்டத்தின் கீழ் நிறுவப்பட்டுள்ள நேஷனல் பாங்குகள்; இராச்சியச் சட்டத்தின் கீழ் நிறுவப்பட்டுள்ள ஸ்டேட் பாங்குகள். இராச்சியச் சட்டங்களுக்குள் வேறுபாடு மிக இருக்கிறது. இவ்விதச் சட்டக் கட்டுப்பாடுகள் இங்கிலாந்தில் இல்லை. தனி பாங்கு முறையுடைய நாட்டில் இவ்விதக் கட்டுப்பாடு அவசியமாகவே தோன்றுகிறது. ஆனால் ஃபெடரல் ரிசர்வு கட்டுப்பாடுதான் முக்கியமானது. எல்லா நேஷனல் பாங்குகளும் பெடரல் ரிசர்வுத் திட்டத்தில் கட்டாயம்அங்கம் வகிக்க வேண்டும். வைப்புகளில் 85%-க்குரிய பாங்குகள் திட்டத்தில் அங்கம் வகிக்கிறபடியால் திட்ட அதிகாரிகளின் செல்வாக்குப் போதுமான அளவுக்கு இருக்கிறது.

ஒரு மைய பாங்குக்கு வேண்டிய கட்டுப்பாட்டுக் கருவிகள் ஃபெடரல் ரிசர்வுத் திட்டத்துக்கு உள்ளன. முதலில் நாம் திட்டத்தின் அமைப்பை விளக்கிப் பின்பு அது எப்படிக் கட்டுப்பாடு செய்கிறதென்று பார்ப்போம்.

**ஃபெடரல் ரிசர்வுத் திட்டம்**

1811-லும், 1836-லும் ஒரு நேஷனல் பாங்கு நிறுவ முயற்சிகள் நடந்தன. ஆனால் 1893-இல் நிகழ்ந்த பீதி (panic)யின் போது அமெரிக்க பாங்குத் திட்டத்தின் குறைபாடுகள் தெளிவாயின. அது முதற் கொண்டு பாங்குத் துறைச் சீர் திருத்தம் மிகவும் விவாதிக்கப்பட்டது. ஆனால் முதல் முயற்சிகள் நாணயத் துறைச் சீர்திருத்தத்திலேதான் நடந்தன. 1908ஆம் ஆண்டின் பீதியின்போது பாங்குகளின் நடவடிக்கைகள் நிறுத்தப்பட்டன. அநேகம் முறிந்தன. நோட்டுகளுக்குப் பொன் தருவது நிறுத்தப்பட்டது. இந்த நிகழ்ச்சிகள் மறுபடியும் சீர்திருத்தத்தில் கவனத்தை இழுத்தன. 1912-ல் மைய

பாங்கொன்றை அமைக்க ஒரு மசோதா காங்கிரசுக்குக் கொண்டு வரப்பட்டது. ஆட்சியிலிருந்த கட்சி மாறியதனால் இது எதிர்க்கப்பட்டபோதிலும், பிரச்சினையில் கவனம் ஊன்றியது. டிசம்பர் 1913-ல் பெடரல் ரிசர்வு சட்டம் செயல் முறைக்கு வந்தது. பல தடவைகளில் மாறுதல் செய்யப்பட்டது. இப்போதுள்ள நிலையே இங்கு வருணிக்கப்படுகிறது. பண சக்தி குவிவுக்குப் (concentration of money power) பயந்து காங்கிரஸ் பல சுயேச்சையான பாங்குகளின் தொகுதியான ஒரு திட்டத்தை வகுத்தது. நாடு 12 பகுதிகளாகப் (Districts) பிரிக்கப்பட்டு, ஒவ்வொன்றிலும் ஒரு பெடரல் ரிசர்வு பாங்கு நிறுவப்பட்டது.

ஃபெடரல் ரிசர்வுத் திட்டத்தின் அதிகாரங்கள் ஐந்து அதிகார இனங்களின் கையிலிருக்கிறது.

(1) கவனர்கள் போர்டு (Board of Governors)

(2) ஃபெடரல் வெளி அங்காடிக் கமிட்டி (The Federal Open Market Committee)

(3) ஃபெடரல் ஆலோசகக் கவுன்சில் (The Federal Advisory Council)

(4) ஃபெடரல் ரிசர்வு பாங்குகளும் கிளைகளும்

(5) அங்க பாங்குகள் (Member Banks)

ஃபெடரல் ரிசர்வுத் திட்டம் என்று சொல்லும்போது அங்க பாங்குகளையும் சேர்க்கிறோம். ஆனால், மைய பாங்கு என்ற பொருளில் பார்க்கும்போது அங்க பாங்குகளை விட்டுவிட வேண்டியிருக்கிறது.

(1) திட்டத்தின் தலைமையாக விளங்குவது கவர்னர்கள் போர்டு. முக்கியமான நடவடிக்கைகளை அது தூண்டுகிறது அல்லது அதன் அனுமதியில் அவை எடுக்கப்படுகின்றன. திட்டத்தின் மேற்பார்வைக்கு அதுவே பொறுப்புடையது. அதன் அனுமதியின்றி ஃபெடரல் ரிசர்வு பாங்குகள் முக்கியமான காரியம் எதையும் செய்யமுடியாது. அதன் அங்கத்தினர் எழுவர்; பிரெசிடெண்டால் செனட்டின் ஆலோசனையாலும் ஒப்புதலாலும் நியமிக்கப்படுகின்றனர். உத்தியோக காலம் 14 வருடங்கள். ஆனால் இரண்டாண்டுக்கொரு கவர்னரின் காலம் முடிவாகி, புதுவர் நியமிக்கப்படுகிறார். ஒரு சேர்மனையும், உப சேர்மனையும் பிரசிடெண்டு நியமிக்கிறார். உத்தியோக காலம் நான்கு

ஆண்டுகள். ஒரு ஃபெடரல் ரிசர்வு ஜில்லாவுக்கு ஓர் ஆளைத் தான் நியமிக்கலாம். போர்டு சுயேச்சையான அரசாங்க சபை. பாங்குகளுக்கு நேரடியாக எந்த அதிகாரமும் அதன் மேல் இல்லை. போர்டு ஜில்லாக்களின் எல்லையைத் திருத்தலாம். நகரங்களை County Districts, Reserve Cities, Central Reserve Cities என்று வகுக்கலாம், தீர்வக ஏற்பாடுகள் செய்யலாம். 12 ரிசர்வு பாங்குகளிடமும் தன் செலவுக்கு 6 மாதத்துக்கொரு முறை நிதி வசூல் செய்யலாம்.

(2) வெளியங்காடிக் கமிட்டி, செக்கூரிட்டிகள் எவ்வளவு எப்போது வாங்குவதென்பதை நிர்ணயிக்கிறது. ரிசர்வு பாங்குகளுக்குத் தாமே வெளியங்காடி நடவடிக்கை எடுக்க அதிகாரம் கிடையாது. இதில் ஏழு கவர்னர்களும், ரிசர்வு பாங்குகளின் ஐந்து பிரதிநிதிகளும் அங்கத்தினர்கள். பிரதி நிதிகளைத் தேர்ந்தெடுப்பதற்கு ஒவ்வொரு ரிசர்வு பாங்கு டைரக்டருக்கும் ஓர் ஓட்டுண்டு. ரிசர்வு பாங்குகளின் பிரசி டெண்டுகள், உப பிரசிடெண்டுகள் ஆகியவர்களே தேர்தலுக்கு உரியவர்கள். சேர்மனைக் கமிட்டியே தேர்ந்து கொள்கிறது.

(3) ஆலோசகக் கவுன்சில் 12 பேருடையது. இவர்கள் ரிசர்வு பாங்குகளின் டைரக்டர் போர்டுகளால் ஆண்டுதோறும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். ஜில்லாவின் பிரமுகர்கள் தேர்ந் தெடுக்கப்படுகின்றனர். ஆண்டில் 4 முறையாவது கூடி கவர்னர் போர்டுக்கு இது ஆலோசனை கூறுகிறது. இதன் சிபார்சுகள் போர்டைக் கட்டுப்படுத்தமாட்டா.

### (4) ஃபெடரல் ரிசர்வு பாங்குகள்

இவை 12 கிளைகள் உடையன. ஒவ்வொரு ஃபெடரல் ரிசர்வு ஜில்லாவிலும் ஒரு முக்கியமான நகரில் ஒரு பாங்கு நிறுவப்பட் டுள்ளது. ரிசர்வு பாங்குகளின் முதல், பங்குடைய அங்க பாங்கு களால் வழங்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பாங்கும் தன் முதல் கணக்குத் தொகையில் 6% க்குச் சமமாக பங்கு வாங்க வேண்டும். அங்கத்தினரைப் பொறுத்து 12 பாங்குகளின் முதல்களும் அளவில் வேறுபடுகின்றன. இந்தப் பாங்குகளின் மேல் 6% டிவிடெண்டு வரை செலுத்தச் சட்டம் அனுமதிக்கிறது. மீதி வருமானத்தை ஆள்வது பற்றியும் விதிகள் உள்ளன. 1947-லிருந்து செலவும் டிவிடெண்டும் போக மீதியில் 9-ஐக் கருவூலத்துக்குச் செலுத்த வேண்டும் என்ற விதி தோன்றியது. 1959-ல் செலவும் டிவிடெண்டும்; போனபின் எச்சத்தை முதலுக்கு இரு

மடங்காகும் வரை ஒதுக்கி மீதி இருந்ததால் அதைக் கருவூலத்துக்குச் செலுத்துமாறு விதி உண்டாயிற்று.

ஒவ்வொரு ரிசர்வு பாங்கின் நிர்வாகமும் ஒரு டைரக்டர்கள் போர்டின் கையில் இருக்கிறது. இவர்களில் ஒரு பகுதியைக் கவர்னர்களும் மற்றப் பகுதியை அங்க பாங்குகளும் தேர்ந் தெடுக்கின்றனர். உத்தியோக காலம் மூன்றுண்டுகள். நிர்வாகத் தலைவர் பிரசிடெண்டு. அவர் பதவிக் காலம் 5 ஆண்டுகள்.

இப்போது 24 கிளைகள் இருக்கின்றன. தலைமை அலுவலகம் தன்னிடத்தில் நிறுவப்படவில்லை என்ற குறையை நீக்கச் சில நகரங்களில் இவை நிறுவப்பட்டன. ஒவ்வொரு கிளைக்கும் ஒரு டைரக்டர் போர்டுண்டு. தலைமை பாங்குபோர்டால் நியமிக்கப் படுகின்றது.

ரிசர்வு பாங்குகள் வாராந்தர ஸ்டேட்மெண்டு ஒன்று போர்டுக்கு அனுப்ப வேண்டும். கவர்னர் போர்டு நியமிக்கும் அதிகாரிகள் அவைகளின் கணக்குகளைச் சோதிப்பார்கள்.

(5) அங்க பாங்குகளான (நேஷனல் பாங்குகள் தவிர) இராச்சிய பாங்குகள் சில தகுதிகள் உடையனவாக இருத்தல் வேண்டும். அங்கம் பெற்றதும் கவர்னர் போர்டு அதிகாரத்துக் குட்பட்டதாகிறது. வைப்புகளில் 82%க்குரிய பாங்குகள் அங்க பாங்குகளாயிருந்தமை திட்டத்தின் செல்வாக்குக்கு உறுதி செய்தது. அங்க பாங்காவதால் நன்மைகளுண்டு. செல வில்லாமல் தீர்வக வசதி, வசூல் வசதி, காசு நோட்டுப்பெற வசதி, கடன் அட்வான்சு வசதி, ஆலோசனை வசதி, பொருள் காப்பு வசதி, விவர வசதி ஆகியவை கிடைக்கின்றன. செல்வாக்கும் உயர்கிறது.

அடுத்தபடி, ஃபெடரல் ரிசர்வுத் திட்டம் எப்படி நாட்டின் பண அளிப்பைக் கட்டுப்படுத்துகிறதென்று பார்ப்போம். திட்டம்தான் ரொக்கத்தின் மூலம். புழக்கத்திலிருக்கும் செலாவணி (currency)யில் $\frac{7}{8}$ பங்கு ஃபெடரல் ரிசர்வு நோட்டுகளே யாகும். மீதி சிற்றின நோட்டுகளும், காசுகளும், சில பழைய நோட்டினங்களும், (முதல் பாகத்தைப் பார்க்க). இவைகளின் வெளியீடு இங்கிலாந்தில் நடப்பது போலவேதான். ரிசர்வு பாங்குகளில் வைத்திருக்கும் இருப்பைப் பணமாக மாற்ற அங்க பாங்குகளுக் குரிமையுண்டு. ஆனல், பாங்குகளின் ரொக்க ரிசர்வு கணிக்கும் முறை இங்கிலாந்திலிருந்து வேறுபடுகிறது. ரிசர்வு பாங்கில் வைப்பொன்றையே சட்டம் ரிசர்வாக ஏற்கிறது.

கையிலுள்ள ரொக்கத்தை அங்கீகரிப்பதில்லை. ரிசர்வு விகிதம் கவர்னர் போர்டால் நியமிக்கப்படுகிறது. வைப்புக்கு எதிரான ரிசர்வுநகர பாங்கா அன்ரு என்பதைப் பொறுத்து வேறுபட்ட விகிதங்கள் நியமிக்கப்பட்டுள்ளன. அங்கம் வகிக்காத பாங்கு களுக்கு இராச்சிய பாங்குகள் விகிதத்தை நியமிக்கின்றன. ஃபெடரல்ரிசர்வுத் திட்டம் பாங்குகளின் ரொக்க நிலையைத் தன் நடவடிக்கையால் நிர்ணயிக்க முடியும். எவ்வளவு தூரம் பாங்கு கள் கட்டுப்படும் என்பது அவை எவ்வளவு தூரம் சட்ட விகிதத்தில் மட்டும் (எஞ்சாமல் குறையாமல்) ரொக்க ரிசர்வு வைத்திருக்கும் பழக்க முடையன என்பதைப் பொறுத்தது. இங்கிலாந்து பாங்குகள் வழக்கமான விகிதத்தில் மட்டும் வைப்ப தால் அவை எளிதில் மைய பாங்கு நடவடிக்கையால் பாதிக்கப் படுகின்றன. நியமித்த விகிதத்தை மட்டும்தான் பாங்குகள் வைத்திருக்க வேண்டுமாயின், ஃபெடரல் ரிசர்வு பாங்குகள் இறுதிக்கடனீவோன் பணியை மேற்கொள்ள வேண்டும். வேண்டியபோது ரொக்கம் கிடைக்குமென்ற உறுதி இருப்பின் பாங்குகள் விகிதத்துக்கு மட்டும் ரொக்கம் வைத்திருப்பார்கள். வருமான நஷ்டத்துடன் எச்சம் நிசர்வு வைத்திருக்க மாட்டார்கள். ஃபெடரல் ரிசர்வுத் திட்டம் இந்த மாதிரி இறுதிக் கடனீவோனாக இருந்து வருகிறது. பாங்குகள் அதனிடம் மறு கழிவு செய்யலாம் அல்லது கடன் வாங்கலாம். (கடனுக்கு அரசாங்கத் தாள் ஈடு வேண்டும்). கழிவு வீதம் பிரசுரிக்கப் படுகிறது. அமெரிக்க பாங்குகள் நேரடியாகக் கடன் வாங்கலாம், கழிவு செய்யலாம். கழிவகங்கள் அமெரிக்காவில் இல்லை. இந்த வசதிக்காகவே 12 ரிசர்வு பாங்குகள் நாட்டில் பரவி இருப்பது பெரிய வசதியாகவும் அவசியமாகவும் இருக்கிறது. ஆனால் ரிசர்வு அதிகாரிகள் பாங்கின் நடவடிக்கை களை ஆராய்ந்துதான் உதவிக்கு வருவார்கள். இங்கிலாந்தில் இவ்வித வழக்கம் இல்லை. நேரடியாக உதவி செய்வதால் இவ்வித எச்சரிக்கை அமெரிக்காவில் அவசியமாகிறது. கழிவு வீதங்கள் ரிசர்வு பாங்குகளிடையே வேறுபடலாம். ஆனால், கவர்னர் போர்டு அனுமதியின் பேரில்தான் ஒவ்வொரு பாங்கின் விகிதமும் நிர்ணயிக்கப் படவேண்டும்.

அடுத்தபடி, வெளியங்காடி நடவடிக்கையை எடுத்துக் கொண்டால், இங்கிலாந்தைவிட அமெரிக்காவில் இது முக்கியமாக இருக்கிறது. வெளியங்காடிக் கமிட்டிதான் நடவடிக்கையை நிர்ணயிக்கிறது. நியூயார்க் ரிசர்வு பாங்கில் செக்கூரிட்டி இலாக்கா இதைச்செயல்படுத்துகிறது. உண்டியல் பேரமே பெரும் பான்மை; ஓரளவு பாங்கு ஏற்புகள். சிலபோது நெடுங்காலப்

பாண்டுகள். நடவடிக்கையின் விளைவுகள் இங்கிலாந்தில் காண்பது போலவேதான். செக்கூரிடிகளை வாங்கினால் பணப் பெருக்கமும் விற்றால் பணச் சுருக்கமும் ஏற்படுகின்றன. மற்றொரு கட்டுபாடு முறை, ரிசர்வு விகிதத்தை மாற்றுவது. இது விதி விலக்கான நெருக்கடிகளில்தான் ஆளப்படும்.

ஒரு முக்கிய வேறுபாடு அமெரிக்காவுக்கும், இங்கிலாந்துக்கும். அமெரிக்க பெடரல் ரிசர்வுத் திட்டம் பாங்குகளைக் கட்டுப்படுத்துவது மட்டும்தான் தன் பொறுப்பென்றும் கருவூலக் காரியங்களுக்கு உதவுவது தன் கடமையன்றென்றும் கருதுகிறது. ஆகவே, குறுங்கால அரசாங்கப் பொறுப்புகளை மட்டும்தான் அது வாங்கவோ விற்கவோ தயாராக இருக்கிறது. அரசாங்கச் செக்கூரிட்டியின் வெளியீடு, மீட்சி ஆகியவை தன் பொறுப்பாக நினைப்பதில்லை. இது எவ்வளவு தூரம் சரியான கொள்கை என்பது நாளடைவில்தான் தெரியும்.

ஆனால், பொதுவில் காலம் செல்லச்செல்ல அமெரிக்க முறையும் இங்கிலாந்து முறையும் ஒன்றுக்கொன்று நெருங்கி வருகின்றன என்று சொல்லலாம்.

கடைசியாகப் பெடரல் ரிசர்வு பாங்குகளின் தொகுத்த இருப்பு நிலைக் குறிப்பு ஒன்றைப் பார்ப்போம்.

## இருப்பு நிலைக் குறிப்பு

### 27—12—1967 (மில்லியன் டாலர்களில்)

#### சொத்துகள்

| | |
|---|---|
| Gold certificates | 11,932 |
| Cash | 354 |
| Discount and Advances | 341 |
| Acceptances | 153 |
| U. S. Govt Securities | 49,205 |
| Cash items in process of collection | 8,484 |
| Other Assets | 1,928 |
| | 72,397 |

## பொறுப்புகள்

| | | |
|---|---|---|
| F. R. Note | | 41,992 |
| Deposits | Member Bank | 21,459 |
| | U. S. Tresurey | 352 |
| | Foreign | 131 |
| | Others | 428 |
| | Total Deposits | 22,370 |
| Deferred availability—Cash items | | 6,379 |
| Other liabilities | | 308 |
| Capital accouuts | | 1,348 |
| | Total | 72,397 |

# 31. இந்திய பாங்குத் திட்டம்

## (The Indian Banking System)

இந்தியாவிலுள்ள பாங்குத் திட்டத்தைப் பற்றிப் பொதுப் பட வருணிப்பது முடியாது. 'திட்டம்' என்ற பெயர் பொருந்துமாவென்பதும் ஓரளவு ஐயப்பாடானது. ஏனெனில், அதில் இரண்டு பகுதிகள் உள்ளன. ஒன்று பழைய இந்திய முறைகளை ஆளும் சுதேசி நிறுவனங்கள். மற்றொன்று மேனாட்டு முறைகளை ஆளும் வணிக பாங்குகள். இரண்டுக்கும் உள்ள தொடர்பு மிகவும் மென்மையானது; உறுதியற்றது. தற்காலக் கருத்தில் பாங்கு முறைகள் பரவவில்லை என்பதற்கு ஆதாரமாகச் செக் ஆட்சியின் அற்பத்தைக் குறிப்பிடலாம். இந்தியாவிலேயே தோன்றிய கடன் கருவிகள் இருந்தபோதிலும், அவை பொது மக்களால் ஆளப்படவில்லை. ஆகவே, பாங்குப் பணம் நாட்டின் செலாவணியை நிர்ணயிக்கும் நிலை இந்தியாவில் இன்னும் வரவில்லை. காசும் செலாவணியும்தான் பொதுவாக ஆளப்படும் கருவிகள். கிராமத்தில் பேரம் பெரிதும் பண இடையீடின்றிப் பண்டமாற்று முறையில் நடைபெறுகிறது. ஆயினும், நவீன முறைகள் பரவி வருகின்றன என்பதற்குச் சமீபகாலப் போக்குச் சான்றாக இருக்கின்றது.

முதலில் மேனாட்டு முறை பாங்குகளை வருணித்துப் பின்பு இந்திய முறை நிறுவனங்களை வருணிப்போம். பிறகு மைய பாங்கு எப்படி இவைகளை ஆள்கிறதென்று பார்ப்போம்.

### அ. நாணய மாற்று பாங்குகள்

வணிக பாங்குகளை மாற்று பாங்குகள் (Exchange Banks) என்றும், இந்தியக் கூட்டுப் பங்கு பாங்குகள் (Joint Stock Banks) என்றும் பிரித்து வருணிக்க வேண்டியிருக்கிறது. மாற்று பாங்குகள் என்பவை முதலில் நம் நாட்டில் நிறுவப்பட்ட

மேனாட்டு முறை பாங்குகள். இவை தன்மையில் ஒருமைப்பாடு உடையன. தலை அகம் மேனாடுகளில் உள்ளவை. இவை இந்தியாவில் வேரூன்றக் காரணம் முன்பு இருந்த இராசதானிப் பாங்குகள் (Presidency Banks) அயல் நாட்டுச் செலவாணித் தொழிலில் ஈடுபடக்கூடாது என்றிருந்த தடையேயாகும். தவிர, இந்தியாவில் இறக்குமதி ஏற்றுமதி வியாபாரத்தில் மேனாட்டார் ஈடுபட்டிருந்தனராதலால் அவர்கள் இவைகளுக்கு உறுதுணையாக இருந்தனர். மேனாட்டு அனுபவ நிர்வாகிகளின் திறமை அவைகளை மிகவும் நம்பகமானவையாகக் கருதச் செய்தன. நெருக்கடிகளில் அவைகளின் நிலைபேறு, அவைகளின் திறமைக்குச் சான்றாக இருந்தது. 15 பாங்குகள் சுமார் 1000 கிளைகளுடன் உள்ளன. இவைகளில் 5 முக்கியமானவை; லாயிட்சு, நேஷனல் சார்டர்டு, மெர்கன்டைல், நேஷனல்—சிடி.

இவைகளின் தனிப்பட்ட துறை, அயல் நாட்டு வியாபாரத்துக்குப் பண உதவி செய்வது. இன்னும் இத் துறையில் இவை முதன்மை பெற்றிருக்கின்றன. ஓரளவு உள் நாட்டு வர்த்தகத்திலும் ஈடுபட்டுள்ளனவென்றால் அது அயல்நாட்டு வியாபாரத்துக்கு உதவும் வகையில் தான் ஏற்பட்டது. அவை எப்படி அயல்நாட்டு வாணிகத்துக்கு உதவுகின்றன என்று பார்ப்போம். (1) ஏற்றுமதி செய்யுமுன் இந்திய ஏற்றுமதி வியாபாரி இறக்குமதி செய்யும் ஆங்கிலேயனை ஒரு இலண்டன் பாங்கு மூலம் 'மறுப்பில்லாக் கடன்' (Irrevocable Credit) ஏற்பாடு செய்து தெரிவிக்கச் சொல்வான். அப்படியே ஆங்கிலேய வியாபாரி ஏற்பாடு செய்து, இங்கிலாந்து பாங்கின் இந்தியக் கிளைக்குத் தெரிவிக்கும்படி செய்து விடுவான். அது ஏற்றுமதிக்காரனுக்கு இந்த ஏற்பாட்டை அறிவிக்கும். (2) உடனே இந்தியன் 90 நாள் தவணை உண்டியலைத்( Bill) தயார்செய்து, ஆங்கிலேயனுக்கு அனுப்பவேண்டிய கப்பலேற்றும் ரசீது (Bill of Lading), இன்சூரன்சு பாலிசி ஆகியவற்றுடன் மேலே குறிப்பிட்ட மாற்று பாங்குக் கிளையிடம் கொண்டு போய்க் கழிவு செய்து ரொக்கம் பெறுவான்.

(3) உண்டியலை வாங்கிய மாற்று பாங்கின் கிளை மறுப்பில்லாக் கடன் தந்த லண்டன் பாங்குக்கு அனுப்பும். அது இறக்குமதிக்காரனின் ஏற்பைப் பெறும்; பின்பு லண்டன் அங்காடியில் கழிவு செய்யும். உண்டியல்கள் ஸ்டர்லிங்கில் வரையப்படுமாதலால் அங்கு நிலவும் குறைந்த வட்டி வீதத்தில் கழிவு செய்யப்படும். மாற்று பாங்குகள் உண்டியலை முதிர்வுவரை வைத்திருப்பது வழக்கமில்லை. இப்படியாக, இந்தியாவின் ஏற்றுமதிக்கு இங்கிலாந்து பண அங்காடியின் பணம் ஆளப்பட்டது.

(4) உண்டியலை ஏற்றதும் அநேகமாக கப்பலேற்றுமதி ரசீதுகள் (Bill of Lading) ஆங்கிலேயனுக்குக் கொடுக்கப்படும். இதனால் அவன் உடனே ஏற்றுமதிப் பொருளைப் பெற முடியும். இதை D/A (Document-On- Acceptance) முறை என்பர்.

இந்தியாவுக்கு இறக்குமதியில் இரு வேறு முறைகள் ஆளப்பட்டன.

(1) இறக்குமதி செய்பவன் ஐரோப்பியனுயின், லண்டனில் அவனுக்கு ஏஜன்சி இருப்பின், அவன் அதன் மூலம் அகத்தாள் (House Paper) எனப்பட்ட உண்டியலை வரைந்து, இந்தியாவிலுள்ள மாற்றுப் பாங்கின் இலண்டன் அலுவலகத்தில் கொடுத்து அதை ஏற்பு செய்யச் செய்வான். ஏற்ற உண்டியல் இங்கிலாந்திலுள்ள ஏற்றுமதிக்காரனுக்குக் கொடுக்கப்படும், அவன் உடனே அதை எளிதில் கழிவு செய்து ரொக்கமாக்கிக் கொள்வான். உண்டியல் முதிர்ந்த தேதியில் ஏற்புச் செய்த மாற்றுப் பாங்கு அதைப் பைசல் செய்துவிடும். அது தன் இந்தியக் கிளையின் மூலம் இறக்குமதி செய்த இந்தியனிடம் ரூபாயில் வசூல் செய்துவிடும். ஆனால் கொடுக்க வேண்டிய வட்டி இந்திய அங்காடி வீதம், இலண்டனில் கழிவு செய்த வீதமன்று.

(2) மற்றொரு முறையில், இங்கிலாந்தில் ஏற்றுமதி செய்பவன் 60 நாள் தவணை உண்டியலைத் தயார் செய்து, அதை மாற்றுப் பாங்கில் கழிவு செய்து கொள்வான். பாங்கு ஏற்றுமதி ரசீதுகளுடன் தன் இந்தியக் கிளை அகத்துக்கு அனுப்பும். இந்தியன் நம்பகச் சீட்டு (Trust Receipt) எழுதிக் கொடுத்து, செலுத்தும் நாள் வரை வட்டி கொடுப்பதாக ஏற்றுக்கொண்டு, ரசீதுகளைப் பெற்று பண்டத்தைப் பெறுவான். சிலபோது காட்சி உண்டியல் (Sight bills) வரையப்படுவதுண்டு.

மாற்று பாங்குகள் உள்நாட்டு வர்த்தகத்திலும் பங்கு கொள்கின்றன. சில முக்கியமான நகரங்களில் உள்ள கிளைகளின் மூலம் பண்டங்கள் துறைமுகத்துக்கு நகரவோ, துறைமுகத்திலிருந்து உள்நாட்டுக்கு நகரவோ நிதி உதவி செய்கின்றன. டெல்லி வியாபாரி இறக்குமதி செய்வானுனால், ஆங்கிலேய ஏற்றுமதி வியாபாரி உண்டியல் எழுதி அதை டெல்லியில் உள்ள மாற்றுப் பாங்கின் கிளைக்கு அனுப்புவான். இந்தியன் பாங்குக்குக் கடன் ரசீது கொடுத்து உண்டியலைப் பெற்றுச் சரக்கைப் பெறுவான். கிளை பாங்கு இலண்டன் அகத்துக்குத் தொகையை அனுப்பிவிடும். ஆனால், இங்கே

சாமான் துறைமுகத்திலோ டெல்லி கிடங்கிலோ அடக்கம் செய்யப்படும். விற்க விற்கக் கடன் அடையும். சாதாரண மாய் 85% மதிப்பு வரைதான் பாங்கு கடன் தரும்.

டெல்லி வியாபாரி ஏற்றுமதி செய்வதாயின், இறக்குமதி செய்யும் ஆங்கிலேயன் இலண்டனில் ஒரு பாங்கில் 'கடன்' ஏற்பாடு செய்து தெரிவித்தபின் அவன்மேல் உண்டியல் எழுதி அப்பாங்கின் டெல்லிக் கிளையில் கழிவு செய்து கொள்வான். பொருள் மதிப்பில் 75% வரைதான் பாங்கு கொடுப்பது வழக்கம். ஏற்றுமதிப் பொருள் துறைமுகத்தில் (பாங்கின் உரிமையில்) கப்பலேற்றும் வரை இருக்கும். ஏற்றுமதி ரசீது பாங்கு பேரில் தான் வரையப்படும். ஏற்றியானதும் பாங்கு உண்டியலை வாங்கிக்கொண்டு மீதி 25%ஐக் கொடுக்கும். பிறகு உண்டியலும், ரசீதுகளும் லண்டனுக்கு அனுப்பப்படும். இறக்குமதி செய்வோனிடம் வசூலுக்குச் செல்லும். கடன் ஏற்பாடு 75%க்குத் தான் இருப்பின், ஆங்கிலேயன் பொருளைப் பெற்றுச் சோதித்து ஏற்ற பின்புதான் மீதி 25% இந்தியனுக்கு அனுப்பப்படும்.

இனி இந்த மாற்றுப் பாங்குகளின் தொழிலைப் பார்ப்போம். வைப்புகளை நிறையப் பெறுகின்றன. இவைகளுடைய ரொக்க இருப்பு விகிதம் குறைந்தபட்சமாகவே இருக்கிறது. வேண்டுமானால் தலையகத்திலிருந்து உதவி பெறலாம். முதலீடுகள் பெரும்பாலும் அரசாங்க அல்லது டிரஸ்டி செக்கூரிட்டிகளில்தான். ஐரோப்பியக் கம்பெனிகளின் பங்குகளை வாங்குவதுண்டு. கடன் (Advance) தொழிலும் நிறையச் செய்கின்றன, மாற்றுத் தொழிலுக்கு உடந்தையான கைத்தொழிலுக்கும் வியாபாரிக்கும் உதவுகின்றன. அட்வான்சில் பாதக்குமேல் வணிகத் துறைக்கும் (Commerce) விவசாயத் துறையில் வணிக மகசூல் (Commercial Crops) களுக்கும் செல்கிறது. இவை நாட்டுரிமையாக்கப்படவில்லை.

## ஆ. இந்திய பாங்குகள்

### (1) இந்திய அரசு பாங்கு (State Bank of India)

அடுத்தபடி, இந்தியக் கூட்டுப் பங்கு பாங்குகளைப் பார்ப்போம். இவைகளின் வரலாற்றில் புக இங்கு இடமில்லை. இந் நூற்றுண்டின் துவக்கத்தில் 9 தானிருந்தன, சுதேசி இயக்கமும், இரு யுத்தங்களும், பொருளாதார முன்னேற்றங்களும் இவைகளைப் பரவச் செய்தன.

| | எண் | வைப்பு (கோடி) |
|---|---|---|
| 1920 | 20 | 160 |
| 1940 | 661 | 280 |
| 1950 | 430 | 880 |
| 1960 | 345 | 1800 |
| 1970 | 85 | 5925 |
| 1972 | 83 | 8530 |

(எண் குறைவது ஐக்கியத்தால்)

இவைகளில் 5 இலட்சம் முதலும் ரிசர்வும் உடையவை, ஷெடியூல் பாங்காக மதிக்கப்பட ரிசர்வு பாங்குக்கு மனுச் செய்யலாம். ஏற்கப்பட்டவை ஷெடியூல்டு பாங்குகள் என்றும், பிற அல்லாதவை என்றும் குறிப்பிடப்படுகின்றன. இவைகளுக்குச் சில வசதிகளை ரிசர்வு பாங்கு அளிக்கிறது. (Section 42/6). 1969 முடிவில் 73 பாங்குகள் ஷெடியூல்டு. இதில் நாட்டுரிமையானவை 14, அயல்நாட்டின 15, நாட்டுரிமையானவற்றில் முன்னைய இந்திய இம்பீரியல் பாங்கு (தற்போதைய இந்திய ஸ்டேட் பாங்கு) எல்லாவற்றிலும் முக்கியமானது. இம்பீரியல் பாங்கு 1921-இல் முன்னைய இராசதானிப் பாங்குகளை (Presidency Banks) ஐக்கியப்படுத்தி நிறுவப்பட்டது. அது அரசாங்க பாங்காகவும் காசு பெட்டிகள் வைப்பிடமாகவும் பணி செய்தது ஆகவே, ஒரு மைய பாங்கைப்போலக் கருதப்பட்டது. பிற பாங்குகள் அதனிடம் தொடர்பு கொண்டன. ரிசர்வு பாங்குக்கு ஏஜண்டாகப் பணி செய்தது. அரசாங்கத் தொடர்பும் ஐரோப்பிய நிர்வாகமும் அதற்குச் செல்வாக்கைத் தந்தன. நாளடைவில்தான் சிறுகச் சிறுக இந்தியர் அலுவலராக நியமிக்கப்படலாயினர். சுயேச்சைக்குப் பின் நாட்டுரிமையாக்க வற்புறுத்தலின் பேரிலும், முடிவில் கிராமியக் கடன் விசாரணைக் (Rural Credit Survey) கமிட்டியின் சிபார்சின் பேரிலும் 1955-இல் நாட்டுரிமையாக்கப்பட்டது, சில பெரிய சுதேச இராச்சிய பாங்குகளும் இதில் ஐக்கியமாயின. நிர்வாகம் ஒரு மைய போர்டு (Central Board) கையிலிருக்கிறது. மூலதனத்தில் 55% ரிசர்வு பாங்கு செலுத்தியுள்ளது. ரிசர்வு பாங்கு யோசனையின் பேரில் தலைமை நிர்வாகம் அரசாங்கத்தால் நியமிக்கப்படுகின்றது. முன்னைய இம்பீரியல் பாங்கு செய்த வேலைகளை செய்வதுடன், 400 கிளைகளைத் திறக்க வேண்டிய பொறுப்பும் தரப்பட்டது. ஆனால், நூற்றுக்கணக்கில் மேன்மேலும் திறக்கப்பட்டுவிட்டன. 31—8—71-ல் 3519 கிளைகள் இருந்தன. கிராமந்தர பாங்கு முன்னேற்றத்துக்குப் பல திட்டங்களைச் செயல்படுத்தி வருகிறது. ரிசர்வு பாங்கு கூட்டுறவுப் பாங்குகளுக்குப் பேரளவில் அட்வான்சு செய்கிறது. நில அடமான பாங்கு டிபஞ்

சர்களைப் பேரளவில் வாங்குகிறது; கடனும் தருகிறது. கிடங்குத் திட்டம் (Warehousing Scheme) பாங்கின் உதவியைப் பெறுகிறது. சிறு தொழில்களுக்கு நிதி உதவி சம்பந்தமான சோதனைத் திட்டம் ஒன்றை 1956 முதல் நடத்துகிறது. அரசு நிதி கார்ப்பரேஷன் (State Finance Corporation) நிறுவ ஏஜண்டாகப் பணி செய்கிறது. சிறு தொழிலுக்கான கடன் கியாரண்டி திட்டம் (Credit Guarantee Scheme) ஒன்றை 1960-ல் நடைமுறைக்குக் கொண்டு வந்தது. தொழில்துறை அட்வான்சு ஏறிக்கொண்டே போகிறது (25%).

இந்தப் பாங்கின் வைப்பகள் வளர்ந்துகொண்டே வந்திருக்கின்றன. முதல் ரிசர்வுக்கும் வைப்புக்கும் விகிதம் மிகக்குறைவு. வைப்புகளில் தேவை வைப்பே பெரும்பான்மையும். சொத்துக்கள் விஷயத்தில் இப் பாங்கு எப்போதுமே நல்ல அமைப்புடையது. ரொக்க வீதம் அதிகம். பாங்கு மிகவும் நீர்மையுடையது. கழிவுக்கு ஏராளமான உண்டியல்கள் வருகின்றன. முதலீடுகள் பெரும்பாலும் அரசாங்கச் செக்யூரிட்டிகளில்தான். இம்பீரியல் பாங்காக இருந்தபோது வட்டிவீதம் அங்காடிக்கு வழிகாட்டியாகக் கருதப்பட்டது. இவ்வீதம் பாங்கு வீதம் (Bank Rate) என்றேகூடப் பேசப்பட்டது. ரிசர்வு பாங்கு நிறுவப்பட்டபின் இவ்வாறு பேச முடியாவிட்டாலும் அது முக்கியமாகவே இருந்து வந்தது. சில பாங்குகளைப் போலன்றி இது தேவை வைப்புக்கு வட்டி தருவதில்லை. முன்பெல்லாம் தவணை வைப்புக்கு வீதமும் குறைவாகவே இருந்தது. சமீபத்தில்தான் மற்ற பாங்குகளுக்கொப்பாயிற்று இந்தப் பாங்கு முதல்தர உண்டியல்களைக் கழிவு செய்யும் வீதம் உண்டி வீதம் (Hundi Rate) எனப்படும். இது அங்காடி வீதத்திலிருந்தும் (ஷராப்புகள் வீதத்திலிருந்தும்) ரிசர்வு பாங்கு வீதத்திலிருந்தும் வேறுபடும். சமீபத்தில் ஸ்டேட் பாங்கு உண்டித் தொழிலிலிருந்து விலகிவிட்டது. உள்நாட்டுப் பண லேவாதேவிக்காரர்கள் மூலமாக உதவி செய்ய வேண்டிய அவசியம் இல்லை. நேரடியாகச் செய்யலாம்.

## (2) இந்தியக் கூட்டுப் பங்குப் பாங்குகள்

அடுத்தபடி, இந்தியக் கூட்டுப் பங்கு பாங்குகளைப் பற்றிச் சில அறிந்துகொள்வோம். இவைகளில் ஷெட்யூலைச் சேர்ந்தவை சேராதவை என்ற இருவகையுண்டு. இவைகளைப் பற்றிய பொதுவான சில அம்சங்களை முதலில் குறிப்பிடவேண்டும். முதலில் இவைகளின் பருமன் (Size) பற்றிப் பார்த்தால், இவை மிகச் சிறிய உருவிலிருந்து மிகப் பெரிய உரு வரையிலும் பரவிக்

கிடக்கக் காண்கிறோம். 1970-ல் இவைகளில் மிகப் பெரியன 14 நாட்டுரிமையாயின. பாங்குத் துறையில் 6/7 பங்கு இவ்வாருன து ஸ்டேட் பாங்கைச் சேர்த்தால் வைப்பில் 83% இவைகளில் அடங்கும். 1939-45-க் கிடையில் வைப்புகள் ரூ 260 கோடியி லிருந்து ரூ 1020 கோடி ஆயின. போருக்குப் பின்னும் வளர்ந்தது. பின்பு திட்டக் காலம் ஊக்கியது.

**கூட்டுப் பாங்குகளின் வளர்ச்சி**

கோடி ரூ

| | வைப்பு | பாங்குக் கடன் |
|---|---|---|
| 1940-51 | 820 | 580 |
| 1960-61 | 1945 | 1320 |
| 1970-71 | 5906 | 4684 |
| 1972-73 | 8516 | 6008 |

**18—7—69-ல் கூட்டுப் பாங்குகளின் நிலை**

| | கிளைகள் | வைப்பு (கோடி) | பாங்குக் கடன் (கோடி) |
|---|---|---|---|
| (1) ஸ்டேட் பாங்கு தொகுதி | 2465 | ரூ. 1248.4 | ரூ 1129.5 |
| (2) 14 நாட்டுரிமை பாங்குகள் | 4169 | 2626·2 | 1853.5 |
| (3) பிற இந்திய ஷெடியூல் ,, | 1338 | 299·1 | 197.2 |
| (4) அயல்நாட்டுப் பாங்குகள் | 128 | 482.2 | 391.2 |
| (5) எல்லாம் சேர்ந்து | 8100 | 4655·9 | 3551.2 |

அடுத்தபடி, இந்திய பாங்குகளின் தொழில் முறைகளைப் பற்றி ஆராய்வதற்கு எல்லா ஷெடியூல்டு பாங்குகளையும் பற்றிய சில 1972-73 விவரங்கள் கீழே தரப்படுகின்றன.

Liabilities (கோடி ரூபாய்கள்)

| Demand Liabilities | 1961-62 Last Friday | 1972-73 |
|---|---|---|
| 1. Inter-Bank | 53.48 | 239.1 |
| 2. Others | 785.62 | 3804.45 |
| 3. Borrowing from other Banks | 19 03 | 72.75 |
| 4. Others | 57.17 | 42.35 |

Time Liabilities

| | | |
|---|---|---|
| 5. Inter-Bank deposits | 14.81 | 215.96 |
| 6. Others | 1131.25 | 4946.92 |
| 7. Banks | 13.28 | 15.05 |
| 8. Others | 13 74 | 47.40 |
| மொத்த வைப்புகள் (2+6) | 1916.87 | 8751.37 |

| | | |
|---|---|---|
| Borrowing from RBI | 21.68 | 511.63 |
| ,, from SBI and/or notified Bank | 15.33 | 107.02 |

Assets

| | | | | |
|---|---|---|---|---|
| Cash in hand & R. B. I. | 140.43(7.3%) | | 500.84(5.7) | |
| Balances with other Banks in current a/c | 16.45 | | 113.69 | |
| Money at call or short notice | 44.90 | | 140.15 | |
| Investments in Govt. securities | 585.01(30.0%) | | 2241.01(25.6) | |
| Advances (Loans, cash credit & O D) | 1092.96 | 1287.27 66% | 5169.77 | (6269 34) (71.6%) |
| Due from Banks | 8.70 | | 509 03 | |
| Bills (inland) | 139.94 | | 842.54 | |
| ,, (foreign) | 45.67 | | 257.03 | |

(N.B.—Percentages are in relation to total liabilities.)

பாங்குகளின் சொத்தினங்களை முதலில் பார்ப்போம். இந்திய பாங்குகளின் ரொக்க விகிதம் மேனாடுகளில் காணப் படுவதைவிட ஏற்றமாகவே உள்ளது. சட்டப்படி தவணை வைப்புக்கு 2%-ம், தேவை வைப்புக்கு 5%-ம் ரிசர்வு பாங்கில் வைத்திருக்க வேண்டும். (இவைகளை உயர்த்த ரிசர்வு பாங்குக்கு அதிகாரம் உண்டு) 1962-இல் இருவகை பொறுப்புகளுக்கும், எதிராக 3% நிறுவப்பட்டது. 15% வரை ரிசர்வு பாங்கு நிர்ணயிக்கலாம். கூடுதல் ரிசர்வுடன் வைக்கும்படி ஆணையிடலாம். பாங்குகள் மொத்தம் நீர்மையினங்கள் 20% வைத்திருக்க வேண்டும் என்றிருந்தது, 1962-இல் 25% ஆக்கப்பட்டது. ஆனால் பாங்குகள் இதற்கு மேலேயே வைத்திருக்கின்றன.

ஆனால், ரொக்க விகிதம் 1948-49 இலிருந்து குறைந்துகொண்டே வந்திருக்கிறது. 1950-51-இல் 11.2%; 1956-57-இல் 8.0%; 1960-61-இல் 7.7% (of aggregate liabilities). 1972-73-இல் 5.7% of deposits.

அடுத்து, முதலீடுகளைப் பார்ப்போம். இந்திய பாங்குகளின் முதலீடுகள் பெரும்பாலும் அரசாங்கச் செக்யூரிட்டிகளில் செல்கின்றன என்பது பொதுவாக உண்மை. இந்த அம்சம் சமீபத்தில் மேனாடுகளிலும் காணப்படுவதால், இதில் இழுக்கொன்றுமில்லை. தொழில்களில் பங்கெடுப்பது பாங்குகளுக்குக் கூடாததாகையினால், இங்கிலாந்திலும் இதே போக்குத்தான் காணப்படுகிறது. அரசாங்கத்தின் நிதித் துறை அலுவல்கள் இந்த நிலைமையை எல்லா நாடுகளிலும் உண்டாக்குகிறது. யுத்த கால விளைவானது நிலைத்து விட்டது.

கடன்களும் அட்வான்சுகளும்தான். பாங்குகளின் முக்கிய வருமான வழிகள். உண்டியல் கழிவு முறையை விடக் கடன் மிகைப்பற்று (O.D.), ரொக்கக் கடன் (Cash Credit) முறைகளே மிகவும் ஆளப்படுவன. உண்டியல் கழிவு முறை வளர்ந்து வருகிறது. ஷெடியூல்டு பாங்குகள் சம்பந்தமான கீழ்வரும் புள்ளி விவரங்களைப் பார்க்க ;—

கோடி ரூபாய்கள்

| | கழிவு செய்த உள்நாடு உண்டியல்கள் | கழிவு செய்த வெளிநாடு உண்டியல்கள் | மொத்தம் பாங்குக் கடன் Loans, Advances and Bills |
|---|---|---|---|
| 1948-49 | 16.44 | — | 424.85 |
| 1950-51 | 11.87 | — | 458.90 |
| 1951-52 | 22.81 | — | 523.59 |
| 1955-56 | 74.70 | 43.48 | 632.46 |
| 1960-61 | 116.21 | 47.15 | 1160.19 |
| 1972-73 | 842.54 | 257.03 | 6269.34 |

அட்வான்சுகளில் பெரும்பகுதி இந்திய பாங்குகள் தந்தன. சிறுபான்மை மாற்றுப் பாங்குகள். ஷெடியூல்டு பாங்குகளின் அட்வான்சும் உண்டியல் கழிவுகளும் பாங்குக் கடன் (Bank Credit) போக்கைக் காட்டுவதால் முக்கியம்.

30-6-72-இல் நிலுவைக் கடன்.

| | | | |
|---|---|---|---|
| கைத்தொழில் | 3053.0 | கோடி | 57.6% |
| விவசாயம் | 360.00 | | 6.8 |
| உள்நாட்டு வணிகம் | 924.00 | | 17.4 |
| பிறமுன் கவனிப்பு | 93.00 | | 1.8 |
| துறைகள் | 870.00 | | 16.4 |
| | 5300.00 | | 100.00 |

1951-இல் வியாபாரத் தொழிலும் வாணிபமும் 64%; கைத் தொழில் 34%. 1971-இல் வியாபாரத் தொழிலும் வாணிபமும் 30%; கைத்தொழில் 70% அட்வான்சுகளில் பெரும் பகுதி ஈடுடையன (Secured). ஈடில்லாதவைகளில் கால் பகுதி புரோ நோட்டின் மேல் தரப்படுகிறது. வர்த்தகப் பொருள்கள் (Merchandise)ஈட்டின் பேரிலும், டாக்குமெண்ட்டரி உண்டியல் பேரிலும் தரப்படுவன நீர்மையான கடன்கள். இவை பாதிக் கடன்களுக்குக் கணக்காகின்றன. பருத்தி, சணல், சர்க்கரை முதலியவைகளே முக்கியமாக உதவிபெறும் கைத்தொழில்கள், ஷெடியூலில் சேராத பாங்குகள் பெரும்பாலும் நுகர்ச்சிக்குக் கடன் தருபவை. தனியார் சொந்தக் கடனும், பொன், வெள்ளி நகை பேரில் கடனும் முக்கியம்.

**அட்வான்சு முறைகள்**

(1) (Loan) – இது ஈட்டின்மேல் தரப்படுவது. நடப்புக் கணக்கில் எழுதப்பட்டு, தவணையில் தீர்க்கப்படுகிறது. வேண்டியபோது திருப்பித் தரவேண்டிய நிபந்தனை உடையதாயினும், உண்மையில் காலம் வரையறை செய்யப்படும்.

(2) மிகைப்பற்று (Overdraft), குறிப்பிட்ட அளவுக்குள் பற்றுக் கொள்ள ஒப்பந்தம் செய்யப்படுகிறது. பற்றின் அளவுக்கே வட்டி தரவேண்டும். அநேகமாக மனிதனின் நாணயமே ஈடு; சிலபோது செக்கூரிட்டி ஈடுகள் தரப் படுவதுண்டு.

(3) ரொக்கப் பற்று (Cash Credit). இது இருப்பு வைக்கத் தரப்படும் கடன். கேட்டபோது கொடுக்க வேண்டுமென்று நிபந்தனையாயினும், பழக்கத்தில் 6 மாதம் அல்லது ஓர் ஆண்டு தவணை தருவதுண்டு. 2-க்கும் 3-க்கும் வேறுபாடு, பின்னதுக்குப் பண்ட அடகு வைக்கப்படுவதேயாகும். சிலபோது, கூட்டுப்

புரோநோட்டுக்கள் எழுதி வாங்குவதுண்டு. இப்படி மார்வாரி வியாபாரிகள் வாங்குவது வழக்கம். சில குறுகிய தவணையுடையன, கேட்டபோது தர வேண்டியவையாயினும் காலம் ஒன்று ஒப்பந்தமாகியிருக்கும். இம்முறையின் நன்மை பாங்குக்கு அவசியமாயின், விரும்பியபோது வசூல் செய்ய உரிமை இருப்பதும், கடன் வாங்குவோருக்கு எல்லை வகுத்து அதற்குட்பட்டுக் கடன் தருவதும் ஆகும். தரகர்கள் இடையிடுவது வழக்கம். கல்கத்தாவில் இன்னொரு வகை ஆட்சியிலிருக்கிறது. குறிப்பிட்டவருக்குச் சணல் டெலிவரி செய்ய மானேஜிங் ஏஜெண்ட் கொடுத்த உத்தரவைப் பாங்கில் வைத்துக் கடன் வாங்குவதுண்டு. பணம் தேவையான மில் ஒன்று இப்படி ஓர் உத்தரவைச் சோடித்துக் கடன் வாங்குவதுமுண்டு. ஆனால் சிலவகைக் கடன்கள் குறிப்பிட்ட தேதியில் மாதாமாதம் பைசலாக வேண்டும். இம்முறை மறைந்து வருவதாகத் தெரிகிறது. 'தேவை உண்டியல்கள்' (Demand Hundis) எனப் படுபவை ஆட்சியில் உள்ளன. இவை D D எனவும் படும். இவை பெயரளவிலும் உருவிலும் உண்டியல்களேயன்றி உண்மையில் அட்வான்சுகளே. அடிக்கடி இவை ஒரு நிறுவனத்தின் கிளையான வேறோர் அகத்தின் பேரிலே எழுதப் படுவதுண்டு. நாட்டுப் பாங்கர் (Banker) மேலும் எழுதுவதுண்டு. இவை உள்நாட்டு வியாபாரத்தில் பணம் புரட்டுவன. எழுதினவர் ஒரு செக் கொடுத்த மாதிரியே அதன் சக்தி. பாங்குகள் பெரும்பாலும் இவைகளை விரும்புவதில்லை. ஆனால் வசூல் செய்ய ஏற்பதுண்டு. நல்ல வாடிக்கைக்காரர்களாயின் வசூல் வரைக்கும் (வட்டிக்காகக்) கழிவு செய்வதுண்டு, குறிப்பிட்ட தேதியில் பணம் வராவிட்டாலும், வட்டிக்கு விடப் பட்டதாகக் கொள்ளப்படும். இந்த உண்டியல்கள் உள்நாட்டிலிருந்து துறைமுகத்துக்குப் பண்டம் அனுப்பப்படும்போது எழுதப்படும். ஆனால் இவைகளுடன் எந்த டாக்குமெண்டுகளும் இருக்காது. ஏனெனில், ஆட்கள் நன்கு தெரிந்தவர்களாக இருப்பார்கள். இல்லாதபோதுதான் இரயில்வே இரசீது போன்ற டாக்குமெண்டுகள் கேட்கப்படும். "உள்நாட்டுக் கடன் கடிதம்" ஏற்பாட்டின் கீழ் உள்நாட்டுப் பண்டத்தை வாங்கி இரயிலில் ஏற்றிக் கப்பலில் ஏற்றுகிற வரைக்கும் பணம் புரட்டுவதற்காக இரயில்வே இரசீதுடன் உள்நாட்டு உண்டியல்கள் வரைவதும் உண்டு.

உண்மையான உண்டியல் முறை உள்நாட்டு வாணிகத்துக்காகவும், அல்லது அயல்நாட்டு வாணிகத்துக்காகவும் ஆளப்படுகிறது. இந்த உண்டி (Hundi) ஆங்கிலத்தில் பாரத்தில் எழுதப்

பட்டுக் குறிப்பிட்ட முதிர்வுடையன. கருணை நாட்கள் இல்லாதவை Khara Hundies எனப்படும். ஒரு சிறு வியாபாரி புரோக்கர் மூலமாக ஏற்பாடு செய்தபின், ஒரு முல்தானி பாங்கர் மேல் எழுதுவான். வட்டி 9—12%க்கு மேல் இருக்கும். முல்தானி அதைப் புறக்குறிப்பு (endorse) செய்து ஒரு புரோக்கர் வழியாக ஷெடியூல்டு பாங்கில் கழவு செய்வான். பாங்குகள் முல்தானிக்கு ஒரு கழிவு எல்லை நிர்ணயிக்கும். முல்தானி, வியாபாரியின் தகுதிக்குச் சான்முக, காரண்டியாகப் பயன்படு கின்முன். சிலபோது உண்டியல், பண வசதிக்காகவே வரையப் பட்டிருக்கலாம். முல்தானிகள் இத் தொழில் நாணயத்துக்குப் பேரெடுத்துள்ளார்கள்.

அயல்நாடு உண்டியல் கழிவு சமீபத்தில்தான் இந்திய பாங்குகளால் அதிகம் செய்யப்பட்டு வருகிறது. இதில் வாய்ப்புத் தரவில்லை என்பதுதான் அந்நிய மாற்றுப் பாங்குகளின் மேலிருந்த குறை. ஆயினும், அற்ப அளவுதான் இந்திய பாங்குகள் கையிலிருக்கிறது. செயல்முறை முன்னர் மாற்றுப் பாங்குகள் சம்பந்தமாகக் கூறிய மாதிரியே. இந்திய பாங்குகள் அயல் நாடுகளில் கிளைகள் நிறுவி வருகின்றன.

## இ. இந்திய நாட்டுக் கடனீவோர் (Indigenous Lenders)

மேலே நாம் படித்த பாங்குகள் நகரப் புறத்துக்கே பணி செய்தன. ஆனல், கிராமங்களிலும் சிறு நகரங்களிலும் பெரு நகரங்களிலும் அநேக இந்திய நாட்டு முறைப் பணப் பேரக் காரர்கள் ஆங்காங்குக் காணப்படுகின்றனர். இந்தியாவில் உள் நாட்டு வியாபாரத்தில் 90%ம், நுகர்ச்சிக் கடன் வசதியில் பெரும் பகுதியும், விவசாயக் கடன் வசதி முழுவதும் அவர் களிடத்தில் இருந்து வந்த காலமுண்டு. இவர்களை இரண்டு வகையாக, இந்திய நாட்டுப் பாங்கர்கள் (Indigenous Bankers) பண லேவாதேவிக்காரர்கள் (Money Lenders) என்று பிரிக்கலாம். இருவருக்குமுள்ள முக்கிய வேறுபாடு, பாங்கர்கள் வைப்புப் பெற்றும் நிதி தேடுகிருர்கள். பண லேவாதேவிக் காரர்கள் தம் சொந்தப் பணத்தைக் கொண்டு தொழில் நடத்து கிருர்கள். வேண்டுமானல் தம் போன்ருரிடம் கடன் வாங்கிக் கொள்வார்கள். சிலபோது நாட்டுப் பாங்கரிடமும் போவதுண்டு

நாட்டுப் பாங்கர் தொழில் சில தனி வகுப்புகளின் தலைமுறைத் தொழிலாக இருக்கிறது. வடக்கே முல்தானிகளும், மார்வாரிகளும், தெற்கே செட்டிமார்களும், கல்லிடைக்குறிச்சிப்

பிராமணர்களும் இதில் பெயர் பெற்றவர்கள். இவர்கள் இருப்பு நிலைக் குறிப்பு வெளியிடுவதில்லை. நவீன முறைகளை ஆளத் தயாராக இல்லை. தலைமுறை தலைமுறையாக லேவாதேவித் தொழிலில் ஊறியவர்கள். நாட்டுப் பாங்கர்களின் தொழில், வைப்புக்கள் பெறுவதும், Cash Credit தருவதும், உண்டி பேரமும், வியாபாரமும், கமிஷன் வேலையும், பொருள் காபந் தாளராவதும் இன்னமும் பிறவும். பாஸ் புக் தருவதுண்டு. செக்கு முறை உண்டு. ஆனால் செலாவணி உள்ளூரோடு இருக்கும். செட்டிமார்கள் பெரும்பாலும் விவசாயிகளுக்குக் கடன் கொடுப்பார்கள். பிறர் பெரிதும் சிறு வியாபாரிகளையே நாடுபவர்கள். சிறு வியாபாரிகளுக்கு நவீன பாங்குகளின் பணிகளைச் செய்வதுண்டு. வைப்புப் பெறுவதும், நடப்பக் கணக்கு ஒன்று வைப்பதும், உத்தரவுப்படி செலுத்துகள் செய்வதும் காணப்படுகின்றன. செக்கு ஆள்வது அரிதாகக் காணப்படுவது. ஆனால், உண்டியலைக் கழிவு செய்வதும், வசூல் செய்வதும், டிராஃப்ட் உண்டியல் தருவதும் உண்டு. வாடிக் கைக்காரன் விருப்பப்படி பணத்தைப் பாதுகாப்பது, அடகு வைத்த பொருள்களை வேண்டும்போது இரவோ பகலோ எடுக்க அனுமதிப்பது, நவீன பாங்குகள் மூடியுள்ள நேரங்களிலும் தாம் பணிக்குத் தயாராக இருப்பது ஆகிய அம்சங்கள் இவர்களைப் பெரிய நிறுவனங்களும் நாடச் செய்கின்றன.

கடன் தரும் முறைகள் பல : (1) புரோ நோட்டின் மேல் தருவது. (2) கணக்கில் கையொப்பம் வாங்கிக் கொண்டு தருவது. (3) பாண்டின் மேல் தருவது. (4) பணம் பெற்றதற்கு இரசீது பெற்றுத் தருவது. (5) சொத்து ஈட்டின்மேல் தருவது. (6) உண்டியல் கழிவு செய்வது. வட்டி வீதங்கள் கடன் வகையைப் பொறுத்தன. குடியானவர்களுக்கு வட்டி வீதம் 25%—100% வரை இருக்கக்கூடும், பொருள் வகையில் கொடுத்து வாங்கும்போது மாமூலான வீதங்கள் இவ்வாறிருக்கின்றன. ரொக்கக் கடன்களின் மேல் வீதம் ஈட்டைப் பொறுத்திருக்கும். இதுவும் 12-50% வரைக்கும் போகக்கூடும். வாராக் கடன் ஆபத்து அதிகமிருப்பதால், வட்டி ஏற்றமாக இருக்கிறதென்பது ஒரு விளக்கம். ஆபத்துக்கு ஒரு மதிப்புக் கொடுத்தாலும் வட்டி வீதங்கள் மிக அதிகமே.

தம்முடைய சொந்த முதல் போதாதபோது, கூட்டுப் பாங்குகளிடம் கடன் பெறுவதுண்டு. அவை எவருக்குத்தான் கடன் வசதி செய்வதென ஒரு பட்டியல் வைத்திருக்கும். பெரும்பாலும் தக்க உண்டியல்களைக் கழிவு செய்வது மூலமே

பாங்குகள் கடன் தருகின்றன. இவர்களை நவீன நிதியங்களோடு இணைப்பது பற்றிய பிரச்சினையைப் பின்னர் ஆராய்வோம்.

பண லேவாதேவிக்காரர்கள் (Money Lenders) பெரும்பாலும் விவசாயிகளுக்குக் கடன் தருபவர்கள். இவர்கள் ஈடு ஒன்றும் தர முடியாதவர்கள். நம்பிக்கை பேரில், அல்லது நகை பேரில் கடன் தர வேண்டியிருக்கிறது. காலம் முடிவடைந்ததும் கடன் மீட்கப்படும். நவீன பாங்குகள் இவர்களுக்குப் பணம் தர மாட்டா. இவர்களில் சிலர் கடன் தருவதையே தம் தொழிலாக உடையவர்கள். சிலர் லேவாதேவியை உப தொழிலாக உடையவர்கள். கையிலுள்ள மிகுதிப் பணத்தைக் கடன் தருபவர்கள். உதாரணமாக, வக்கீல்கள், விதவைகள், விவசாயிகள், வியாபாரிகள். இவர்களின் தொழில் முறை நாமறிந்த தாகையால், இங்கு வருணிக்க வேண்டிய அசிவயமில்லை. இவர்கள் கொடும் வட்டி வாங்கியதாலும், தகாத முறைகளை ஆண்டதாலும், அரசாங்கம் தலையிட்டு அனேக சட்டங்கள் செய்து கட்டுப்பாடு செய்துள்ளது. இவைகளின் விளைவாய்ப் பணலேவாதேவியைத் தம் தொழிலாக்கிக் கொண்டிருந்த வகுப்பு மறைந்து விட்டதென்றே கூறலாம். மற்ற வகையினர் கையில் இத்தொழில் இப்போது இருந்து வருகிறது. கூட்டுறவு 4-5%க்குத் தான் குடியானவன் தேவைகளைப் பூர்த்தி செய்வதால், பண லேவாதேவி மறைவது கூட்டுறவின் முன்னேற்றத்தைப் பொறுத்துள்ளது.

தமிழ்நாட்டில் இருக்கும் நிதிகளும் (Nidhis), சீட்டுப்பண்டு வகைகளும், வங்காளத்தியக் கடனகங்களும் (Loan Societies) கடன் கொடுத்து வாங்குகின்றன. நிதிகள் கம்பெனிச் சட்டத்தின் கீழ் நிறுவப்பட்டு, முதல் சேர்த்து, வைப்புகளைப் பெற்று, அங்கத்தினருக்குக் கடன் தருகின்றன. வட்டி வீதம் சாதாரணமாக உள்ளது. இவைகளின் நன்மை: சீட்டுகள் (அல்லது குறிகள்) பல்லாயிரக்கணக்கில் தமிழ் நாட்டில் நடைபெறுகின்றன. குறிப்பிட்ட தவணையில், ஒவ்வோர் அங்கத்தினனும் ஒரு தலைவனிடம் செலுத்துவான்.. அவ்வப்போது குறிப்பிட்ட தொகை ஏலத்தில் விடப்படும். அதிக வட்டி கொடுக்க ஒப்புபவனுக்குத் தொகை தரப்படும். வட்டியை எல்லோரும் பிரித்துக் கொள்வர். வங்காளக் கடன் சங்கங்கள் வைப்புகளைப் பெற்று, ஜாமீன்தாரருக்கும் குடியானவருக்கும் ஈட்டின்மேல் கடன் தருவன. வட்டி நியாயமாகவே இருக்கும். இவை மக்கள் ஒத்துழைப்பால் நடப்பதால் ஒரு வகையில் இதனைச் சுதேசக் கூட்டுறவு முறை எனலாம்.

**ஈ. கூட்டுறவு பாங்குகள்**

கூட்டுறவுக் கடன் தற்போது கிராமத்தில் முக்கியமாகிக் கொண்டு வருகிறது. ஆனால், கோர்வாலாக் கமிட்டி குடியானவர் தேவையில் 3.1% தான் கூட்டுறவால் கிடைத்தது என்று கண்டு, கூட்டுறவுக் கடன் ஏற்பாடு சம்பந்தமாக அனேக மாறுதல்களைச் சிபார்சு செய்தது. கூட்டுறவு அமைப்பதன் அடிப்படையில் கிராமக் கடன் சங்கங்களும், இடையில் கூட்டுறவு மைய பாங்குகளும், உச்சியில் மாகாணக் கூட்டுறவு பாங்குகளும் (Provincial Co-operative Banks) இருக்கின்றன. இவைகளைத் தவிர. நெடுங்காலக் கடனுக்காக சில அடமான பாங்குகள் (Land Mortgage Banks) உள்ளன. மாகாணப் பாங்குகள் மைய பாங்குகளுக்கு உதவும் பொறுப்புடையன. மற்றபடி இவை நவீன பாங்குகள் செய்யும் பணிகள் அனைத்தையும் செய்து வருகின்றன. இவை வழியாகத்தான், ரிசர்வு பாங்கின் உதவி கிராமாந்தரங்களுக்குச் செல்கிறது. வட்டி வீதம் மாகாணத்துக்கு மாகாணம் சூழ்நிலைக்கேற்ப வேறுபடுகிறது. சுமாராகக் குறைவு என்று கூறலாம். மைய பாங்குகள் கூட நவீன பாங்கு முறையை ஆள்கின்றன. ஆனால், அவைகளின் முதல் வேலை கிராமக் கடன் சங்கங்களுக்கு உதவுவதும், சில மாகாணங்களில் மேற்பார்வை செய்வதும். வட்டி வீதம் மாகாணப் பாங்கு வீதத்தை விடச் சிறிது ஏற்றமாக இருக்கும். ரிசர்வு பாங்கு கூட்டுறவு பாங்குகளுக்கு அனேக வகைகளில் உதவி உதவி செய்கிறது. இது பற்றிப் பின்னர்க் காண்போம்.

**இந்தியப் பண அங்காடி**

நாம் இதுவரை மேனாட்டு முறையைப் பின்பற்றும் பணத்துறை நிறுவனங்களையும், இந்திய நாட்டு முறையைப் பின்பற்றும் நிறுவனங்களையும் தனித்தனியாக வருணித்தோம். இனி இவ்விரு வேறுவகையான பகுதிகள் உடைய பண அங்காடி எப்படி இயங்கி வருகிறதென்பதைப் பார்க்க வேண்டும். இரண்டும் (மேற்கூறிய பலவகைகளில்) வேறுபடுவது காரணமாக இந்தியப் பண அங்காடியை இரு கூறுடையதாக்கி ஒன்றை மைய அங்காடி (Central Market), மற்றொன்றை இந்திய நாட்டுக் கடைவீதி அங்காடி (Bazaar Market) என்று பிரித்துப் பேசுவதுண்டு. ஆகவே, நாம் இந்த இரண்டுவகை அங்காடிகளும் எப்படி இயங்குகின்றனவென்றும், இவை இரண்டுக்கும் என்ன தொடர்புள்ளது என்றும், மைய பாங்கான ரிசர்வு பாங்கு இரண்டுகளிடமும் எவ்விதத் தொடர்புடையதென்றும் பார்க்கவேண்டும்.

மையப் பண அங்காடியை எடுத்துக் கொண்டால், முக்கியமான கேந்திர ஸ்தானங்கள் கல்கத்தாவும் பம்பாயுமே ஆகும். சென்னை, அவைகளை நோக்க, நாட்டுப்புற அங்காடி என்றே சொல்ல வேண்டும். முதலிரண்டு நகரங்களும் மைய அங்காடியின் களனுக் இருப்பதற்குக் காரணம் பண அங்காடி வாணிகத்தையும் தொழிலையும் நிதி நிறுவன வியாபகத்தையும் பொறுத்தது என்பது ஆகும். கல்கத்தாவும், பம்பாயும் முதிர்ந்த பங்கு அங்காடி உடையன. பம்பாயில் பொன் வெள்ளி அங்காடியும் பருத்தி அங்காடியும் முக்கியமானவை. கல்கத் தாவில் சணல் அங்காடி முக்கியம். சென்னை அங்காடியில், மேற்கண்ட நகரங்களில் காண்பது போன்ற பண அங்காடியின் உயிர் காணப்படவில்லை. வட்டி வீதங்கள் அவைகளில் காண்பது போல் போட்டிச் சூழ்நிலையில் நிர்ணயமாவதில்லை. தவிர, மற்ற இரண்டையும் நோக்க, ஏற்றமாகவே இருக்கின்றன, பாங்கு களுக்குள் கடன் (Inter—Bank Lending) தரகர் மூலம் ஏற்பாடாவ தில்லை. நேரடியாகவே ஏற்பாடாகிறது, பங்கங்காடியும் முதிர்ந்து பரந்ததாக இல்லை. பம்பாய், கல்கத்தா வியாபாரி களின் ஏஜெண்டுகள் மூலம் பெரும்பாலும் பெரிய வியாபாரம் நடைபெறுகிறது. பேரத்தின் அளவும் வகைபாடு பெற்றுக் காணப்படவில்லை.

முதலில் மைய அங்காடியின் இயக்கத்தைப் பார்ப்போம். பண அங்காடி என்பது கடன் வாங்குபவர்களும் கொடுப்ப வர்களும் சந்திக்கும் இடம் எனலாம். இந்திய அங்காடி, மேனாட்டு அமைப்புகள் (உதாரணமாகக் கழிவகங்கள்) இல்லாமையால் முதிர்ச்சியடையாத ஒன்று என்பது தவறு என்றும், ஏனெனில் ஒவ்வொரு தேசத்தின் சூழ்நிலைக்கேற்ப அங்காடியின் அங்கமும் அமைப்பும் இருக்குமென்றும் கூறினர் ஆசிரியர் வில்சன் (T. S. G. Wilson). ஒரு பண அங்காடி நன்கு இணைப்புற்று (integrated) இருக்குமானால், அதுவே போதும் என்பது அவர் கருத்து. இது யாரும் ஒப்புக்கொள்ளக் கூடியது. இந்தப்படி பார்க்கும்போதும் இந்திய அங்காடி முழுதும் இணைப் புறவில்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது. இதற்குச் சான்று இன்னும் மைய அங்காடியும் நாட்டு அங்காடிகளும் இணைப்புறாமைதான்.

இனி மைய அங்காடியில் பண அளிப்பும் தேவையும் செய்பவர்கள் யார் என்று முதலில் பார்ப்போம். அங்காடியில் முதன்மையானவை வணிக பாங்குகள். இவை வேண்டும் போது அங்காடியில் கடன் வாங்கும். மிச்சமிருந்தபோது கடன்

தரும். அவ்வப்போது ஒவ்வொரு பாங்கின் நிலைமையும் மாறிக் கொண்டே இருக்குமாதலால், அங்காடியில் பேரம் அவசியமாகும். அடுத்தபடி, கம்பெனிகள் அங்காடியில் தற்காலிகமாக எச்சமான பணத்தைக் கடன் தர முன் வரும், முனிசிபாலிட்டிகள், அரசாங்கத் தொழிலகங்கள் கூட இப்படிச் செய்வதுண்டு. அடுத்து இன்சூரன்சுக் கம்பெனிகளையும் தொழிலகங்களையும் கூறலாம். ஆனால் முன்னைய இம்பீரியல் பாங்கு இந்தவாறு அங்காடியில் கடன் கொடுக்கவோ வாங்கவோ செய்வதில்லை. அது, பாங்கு களுக்குப் பாங்கைப்போல இருந்து வந்திருக்கிறது. முடிவாக ரிசர்வு பாங்கும் கடை நிலை அளிப்பிடமாக உள்ளது.

பணத்துக்குத் தேவைகளில், தினசரியாகப் பாங்குகளுக்குள் கடன் தேவையை (Inter - Bank Loans) முதலில் கூறலாம். பங்கங்காடியில் போட்டி செய்யக் குறுங்காலக் கடன் (14 நாட்கள்) வாங்குவோரும் உயர் உலோக அங்காடியில் (Bullion Market) போட்டி செய்ய மாதத் தவணைக்குக் கடன் வாங்குவோரும், கருவூல உண்டியல் மேல் கடன் வாங்கும் அரசாங்கமும் முக்கியமானவர்கள்.

முதலில் அழைப்புப் பணம் (Call Money) அல்லது அழைப்புக் கடன் (Call Loan) என்பது பற்றிப் பார்ப்போம். அன்றாடம் காலையில் பாங்குகள் ரொக்க நிலையைப் பற்றிப் பார்த்துக் கொண்டு, அன்று எவ்வளவு பணம் தேவைப்படும் என்பதை மதிப்பிட்டு, தாம் தீர்வகத்தில் எவ்வளவு நிகரமாகக் கொடுக்க வேண்டியிருக்கும் அல்லது பெறக்கூடும் என்பதை மதிப்பிட்டு, எச்சமிருந்தால் கடன் தரவும், இன்றேல் கடன் வாங்கவும் ஏற்பாடுகள் செய்யும். சுமார் ஒரு மணிக்குத் தீர்வக நிலை தெரிந்த உடனே, அழைப்புக் கடன் நடவடிக்கை ஆரம்பமாகும். கடன் கொடுப்பதோ வாங்குவதோ ஒரே நாளுக்குத்தான். இவ்வகைக் கடனைத்தான் அழைப்புக் கடன் (Call Loan) என்பது. பாங்குக் கிடைக் கடன் (Inter-Bank Loan) என்பதும் இதுவே. பெரும்பாலும் பாங்குகளே கடன் வாங்குபவைகள். சிலபோது வேறு வகையினர் கடன் கொடுக்கக்கூடும். 1941-48க்கு இடையில் வட்டி வீதம் சுமார் $4\frac{1}{2}\%$ ஆக இருந்தது. நெளிவும் அநேகமாக இல்லை. 1%க்கு மேல் வட்டி வீதம் அநேகமாய் ஏறுவதில்லை. ஆனால், 1949-க்குப்பின் பண முடை காரணமாக வட்டி வீதம் ஏறிக்கொண்டே போய், 1973-ல் 7% வரைக்கும் உயர்ந்தது. முக்கியமாக, இவ்வகைக் கடன்களை வாங்குவது மாற்றுப் பாங்குகளே (Exchange Banks) ஆகும்.

இவைகளது முதலீடுகள் நீர்மை மிக்கவை. இவை ஏராளமாக உண்டியல் வைத்திருப்பது வழக்கம். ஆகவே, குறைந்த ரொக்க வீதத்தைக் கொண்டே இவை தொழில் செய்கின்றன. ஆகவே அடிக்கடி முதிர்வு குறைவானால் பணத்தேவை ஏற்படுவதுண்டு. கடன் வாங்குவது வழக்கம். தவிர வியாபார மும்முர மாதங்களிலும் தேவை ஏற்படும். இந்திய பாங்குகள் சாதாரணமாக நிறைய ரொக்கம் வைத்திருப்பது வழக்க மாகையினால், கடன் வாங்க வேண்டிய அவசியமிருக்காது. அவைகளால் கடன் கொடுக்க முடியும். ஆனால் சமீப காலத்தில் பண நெருக்கடி முற்றிய நிலையில் அவைகளும் கடன் வாங்க ஆரம்பித்துள்ளன. சன்னல் சோடனைக்காக வாங்குவதும் உண்டு. இந்தக் கடன்களைப் பாங்குகள் புரோக்கர் மூலம்தான் ஏற்பாடு செய்வது வழக்கம். மாற்றுப் பாங்குகள் மட்டுமே ஈடுகாட்டாமல் வாங்க முடியும்; பிற ஈடு காட்ட வேண்டி வரலாம். அரசாங்கத் தாள்கள் ஈடு காட்டப்படலாம்.

அழைப்புக் கடன் சம்பந்தமாக ஓர் உப அங்காடியும் (Sub-market) சமீபத்தில் தோன்றியுள்ளது. புதிதாக 1943-க்குப்பின் தோன்றிய பாங்குகள் பழைய பாங்குகளிடம் கடன் வசதி பெற முடியாமல் தமக்குள்ளேயே ஏற்பாடு செய்து கொள்ளும் வகையில் இது தோன்றியுள்ளது. ஆனால், பழைய இனங் களிடமிருந்து கடன் பெறத் தயங்குவதில்லை. அநேக இந்திய பாங்குகள் இந்தத் தூய அங்காடியில்தான் காணப்படுகின்றன. வட்டி ஏற்றமாகவே இருக்கும்.

இவ்வகைக் கடன்கள் இருப்பு நிலைக் குறிப்பில் சொத்துப் பக்கத்தில் Money at call or short notice என்ற தலைப்பின் கீழ் வருகின்றன. இந்தத் தலைப்பில் காணப்படும் தொகையில் பெரும் பகுதி இவ்வகையானதே. குறுகிய தவணை (Short Notice) கடன்கள் (7 நாட்கள் மேறுடுகளில்) இந்தியாவில் அதிகமில்லை. இங்கிலாந்தில் பாங்குகள் தத்தமக்குள் (Inter-Bank) கடன் பழக்கம் கிடையாது.

அழைப்புக் கடன் அங்காடியில்தான் காலப் பணமும் (Term Money), அகப் பணமும் (House Money) வருகின்றன. பாங்குகள் பொதுத்துறை நிறுவனங்களிலிருந்தும் தொழிலகங் களிலிருந்தும், லைவப்பைப் பெறும்போது இவ்வகையாகப் பேசப்படும். வட்டி ஏற்றமாக இருக்கும். புரோக்கர்கள் ஏற்பாடு செய்வர்.

அடுத்தபடி, உண்டியல் அங்காடியைப் பார்ப்போம். எல்லாப் பாங்குகளும் கழிவுத் தொழில் செய்கின்றன. வாங்கின உண்டியல்களை முதிர்வு வரையில் வைத்திருக்கும், அல்லது (ஏற்றுமதி உண்டியல்பேரங்களை) மாற்றுப் பாங்கிடம் மறுகழிவு செய்யும். ஸ்டேட் பாங்கும் ரிசர்வு பாங்கும் மறுகழிவு செய்யும் வசதி தருகின்றன. ஆனால், இது இறுதிக் கடனீவோன் நிலையில் ஆளப்படுகிறது. ஆனால் மறுகழிவு செய்வது கேவலமாகக் கருதப்பட்டு, அரசாங்கத் தாளின் ஈடு மேல் கடன் வாங்குவது வழக்கம். ஆனால், நிலைமை மாறி வருகிறது. நேரடித் தொடர்பு ஏற்பட்டுவிட்டதால் இலண்டனைப் போலக் கழிவகங்களை நிறுவ அவசியமில்லை. ரொக்கக் கடன் OD முறைகள் உள்ளபடியினால் உண்டியல் வழியாகப் பாங்குகளிடம் பணம் பெற வேண்டிய அவசியமில்லாதிருக்கிறது. இதனால் தான் இந்தியாவில் உண்டியலங்காடி வளரவில்லை. தவிர, ரிசர்வு பாங்கு ஏற்கும் உண்டியல் வகைகளும் விஸ்தரிக்கப்பட வேண்டியிருக்கிறதென்கிறார் வில்சன்.

கருவூல உண்டியல்கள் மூன்று மாதத் தவணையுடன் அரசாங்கத்தால் விற்கப்படுவன. பாங்குகள் பண மிடுவதற்குத் தக்கவை; நீர்மையானவை. வாராந்தர வெளியீடு ரிசர்வு பாங்கு மூலம் செய்யப்படுகிறது. வெளியிடும் முறை இங்கிலாந்து போலத்தான். அடுத்த செவ்வாய்க்கிழமையன்று டெண்டர் கொடுத்து ஏற்கப்பட்டோர் வெள்ளிக்கிழமை செலுத்தவேண்டும். அநேகமாக, பெரிய பாங்குகளே டெண்டரில் கலந்துகொள்கின்றன. இராச்சிய அரசாங்கங்கள் உண்டியல் பெறவிரும்பினால் குழாய் உண்டியல் கிடைக்கும். அரசாங்கம் விற்க விரும்பும் உண்டியல்களில் ஒரு பகுதியே வெளியே டெண்டருக்கு விடப்படுகிறது. மீதி ரிசர்வு பாங்குக்கு விற்கப்பட்டு அதன் மூலம் பிறகு இராச்சிய அரசாங்கங்களுக்குக் கிடைக்கிறது. மொத்த அரசாங்கப் பொறுப்பான உண்டியல்களில் பெரும்பகுதி ரிசர்வு பாங்கில் நோட்டுக்குப் பின் காப்பாக இருக்கிறது. (அரசாங்கம் 1948-லிருந்து 1952 வரை அடிக்கடி கருவூல வைப்பு ரசீதுகளும் (Treasury Deposit Receipt) பாங்குகளுக்கு விற்பதுண்டு. இவை குழாய் வழியாகத்தான் வெளிவரும். இங்கிலாந்தில் இவைகளைப் பாங்குகள் வாங்குவது கட்டாயம். இந்தியாவில் அப்படி இல்லையாதலால், இம்முறை வேரூன்றவில்லை.

அடுத்தபடி உண்டி (Hundi)களைக் குறிப்பிட்ட வரம்புக்குட்பட்டு ஷராப்புகளுக்காகப் பாங்குகள் கழிவு செய்வதைக் கூற வேண்டும். வியாபாரிகளின் உண்டியல்களை ஷராப்புகள்

கழிவு செய்து பின் பாங்குகளுக்கு விற்கும்போது தாம் புறக் குறிப்புச் செய்து விற்பார்கள். இவ்வழியாகத்தான் இந்திய பாங்கர்கள் அங்காடிக்கும் மைய பாங்கு அங்காடிக்கும் தொடர்பு. ஆனால் இது நிலையற்றதென்பது அவர்களுக்கு பாங்குகளின் உதவி நிச்சயமில்லை என்பதிலிருந்து தெரிகிறது. இதனால்தான் இந்தியப் பண அங்காடி இணைப்புப் பெறவில்லை என்று கூறவேண்டி யிருக்கிறது.

அடுத்தபடி, பங்கங்காடியில் பேரம் செய்வோருக்குப் பாங்குகள் கடன் தருவதைக் கூறவேண்டும். செக்கூரிட்டிகளை ஈடு வைத்தால் அதன் மதிப்பில் ஒரு பகுதி கடன் தருவது வழக்கம்.

இந்திய அங்காடியில் பலவகைக் கடன் கொடுப்போரையும் வாங்குவோரையும் இணைப்பது புரோக்கர்கள் என்பதை நோக்கினால், இவர்கள் பண அங்காடியின் இணைப்புக்கு முக்கிய தொடர்புகளாக உள்ளனர் என்பது தெரிகிறது. தரகர்கள் பலவிதம். சிலர் நாணயமாற்றுத் தரகர்கள்; வேறு சிலர் நிதித் தரகர். இரண்டையும் ஒருவரே செய்வதுமுண்டு. அகப்பணம் (house money), அழைப்புக் கடன், பாங்கில் மறுகழிவு, நாணய மாற்று, பொன், வெள்ளிக்கட்டி பேரங்கள் முதலியன இவர்கள் மூலமாகவே நடைபெறுகின்றன.

அடுத்தபடி, பஸார் அங்காடி (இந்திய உண்டியல் அங்காடி)யைப் பார்ப்போம். இதில் மார்வாரிகள், முல்தானிகள், குஜராத்திகள் முதன்மையானவர்கள். இவர்கள் பெரும் பாலும் சொந்த முதலுடனும், வேண்டியபோது பாங்குகளிடம் கடன்பெற்றும் பேரம் செய்பவர்கள். சொந்த முதலை நம்புவ தாலும் இவர்களுடைய தொழில் ஆபத்துமிக்கதாலும் இவர்களை மைய அங்காடியில் இணைப்பது கடினமாக இருக்கிறது. இந்த அங்காடியில் ஆளப்படுவன :

(1) Muddati Hundies (Usance Bills): 90 நாள் வரை முதிர்வுடையன. அநேகமாக டாக்குமெண்ட்டின்றி விற்கப் படுவன : இல்லாதபோது பண உண்டியலாகும் (Finance Bill). ஆள் நம்பிக்கையின்மேல் கடன் தரப்பட்டாலும் இது ஆபத்தாகக் கருதப்படுவதில்லை. ஆனால் கடன் யோசிக்காமல் தருவதில்லை. யூக பேரத்துக்குத் தருவதில்லை. (2) Darshani Hundi (Sight Bills)—இந்திய பாங்குகள் இவைகளை வசூல் செய்ய ஏற்றுக் கொள்கின்றன, இவை இரு காரணங்களுக்கு வரையப்படலாம்;

(a) சரக்கை ஓரிடமிருந்து மற்றோரிடத்திலிருப்பவருக்கு விற்கும்போது.

(b) பணத்தை ஓரிடமிருந்து மற்றோரிடம் அனுப்பும் போது. ஓர் ஊரிலுள்ள ஒரு வியாபார நிறுவனத்தின் கிளை அலுவலகம் மற்றோர் ஊரிலுள்ள கிளை அகத்துக்கு வரைந்து கழிவு செய்து கொள்ளலாம். இந்திய பாங்கர் இக் கழிவு செய்து வசூல் செய்து கொள்வான். பணம் அனுப்பும்போது அனுப்புபவனே கூலியைச் செலுத்தி விடுவதுமுண்டு.

**வட்டி வீத வேறுபாடுகள்**

இந்தியப் பண அங்காடி இணைப்பின்றியிருக்கிறதென்பதற்குச் சான்றாக அதில் பல வட்டி வீதங்கள் காணப்படுவது குறிப்பிடப் படுகிறது. பஸார் வீதங்கள் பல பிரதேசங்களிலுல் ஒரே வகைக் கடனுக்கும் வேறுபடக் காண்கிறோம். மைய அங்காடியிலும் பல வீதங்களிடையேயும் ஒரு நிலையான தொடர்பு காணப்படுவ தில்லை. வைப்பின்மீது வீதங்கள் இடத்துக்கிடம் வேறுபடு கின்றன; பாங்குக்குப் பாங்கு வேறுபடுகின்றன. கடன் வீதங் களும் இன்னும் அதிகமான வேறுபாடுடையன. கல்கத்தா பஸார் வீதங்களும் அட்வான்சு வீதங்களும் பம்பாய் வீதத்தைவிட அதிகமாக இருக்கின்றன. ஆனால் குறுங்கால வட்டி சிலபோது இதற்கு நேர் முரணாகக் காரணப்படுகின்றது. காரணம் என்ன? T. S. G. வில்சன் இதை ஆராய்ந்து விளக்கியுள்ளார்.

அழைப்பு வீதம், வைப்பு வீதம் கல்கத்தாவில் குறைவாகத் தோன்றுகின்றன. இது உண்மை நிலையைக் காட்டவில்லை. அங்கு அழைப்பு வீதம் மாற்றுப் பாங்கு அசோஸியேஷனால் சாதாரண மாகக் குறைவாக நிர்ணயிக்கப்படுகிறது. இதை ரிசர்வு பாங்கு செய்திநூல் (Bulletin) வெளியிடுகிறது. இந்த வீதத்தில் அங்காடியில் வேண்டிய அளவு பணம் கிடைக்காது. மேலே தரவேண்டியிருக்கும். இப்படிப் பார்த்தால் பம்பாய் விதத்துக்கு ஒப்பாகிவிடும். செய்திநூலில் வெளியிட்டுள்ள பம்பாய் வீதம் மாற்று பாங்குகள், மற்ற எளிய பாங்குகள் சேர்ந்த சராசரி யாகும். சில சமயம் பம்பாய், கல்கத்தாவில் கடன் வாங்குவ துண்டு. தற்போது வைப்பு வீதங்கள் பாங்குகளுக்குள் ஒப்பந்தத்தின் கீழ் நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றனவாதலால் வேறுபாடு காண்பதற்கில்லை. வெளியிடப்பட்ட கல்கத்தா வீதம் குறைவாயிருக்கக் காரணம், கல்கத்தாவில் தொழிலகங்களின் பணங்கள் கிடைப்பதெனலாமோ வெனின் பம்பாய்க்கும் இது

பொருந்தும். பம்பாயில் அங்காடி ஒன்ருக இணைவுற்றுப் போட்டியில் எல்லாப் பணத்துக்கும் தேவை ஏற்படுகிறதென்று ஒரு விளக்கம் கூறலாம். தவிர, இந்திய நாட்டுப் பாங்கர்கள் நிறைந்துள்ள பம்பாயில் பணம் அவர்களுக்குச் செல்வதால், மைய அங்காடியில் வரட்சி ஏற்பட்டு வீதம் உயரலாம். கல்கத்தாவில் நேர்முரணுன நிலையில் பற்ருக்குறையால் பஸார் வீதம் ஏறுகிறது. அட்வாசு வீதம் பம்பாயில் குறைவாக இருக்கிறது. பம்பாயில் பாங்குகளின் தலை அகங்கள் இருப்பதால் ரிசர்வு அங்கிருக்கிறது. அளிப்பு அதிகம். ரிசர்வு பாங்கு வெளி அங்காடி நடவடிக்கை அங்கு நடைபெறுகிறது. ஆகையால், செக்கூரிட்டிகளை உடனே விற்கலாம்.

கல்கத்தாவில் சிறிய பாங்குகள் அதிகம். அவை வைப்புக்கு அதிக வட்டி தருகின்றன. கல்கத்தாவில் பல்வேறு தொழில் களின் தேவைகள் நெருக்குகின்றன. கல்கத்தா ஏற்றுமதி இடமாதலால் பண்டம் இறக்குமதி செய்யும் பம்பாயை விட நீண்டகாலம் முடக்கி வைக்கப்படுவது இன்றியமையாததா கிறது என்பர் சிலர். ஆனல், உண்டியல்கள் லண்டனில் கழிவு செய்யப்படுவதால் பணம் உடனே கிடைக்கும். இவ்வாதம் சரியன்று. பம்பாய் வியாபாரியைவிடக் கல்கத்தா வியாபாரி அதிக யூக பேரம் செய்யத் தயாராக இருக்கிருன் என்றும் ஆகவே ஏற்ற வட்டி தருகிருன் என்றும் கூறுகின்றனர்.

ஆகவே வீத வேறுபாடுகள் விளக்க முடியாதன அன்று. ஆயினும் பணப் பெயர்ச்சி அங்காடிகளுக்குள் குறைவென் பதை ஒப்புக்கொள்ளலாம்; இதற்கும் தக்க காரணம் உண்டு. ஆனல், வேற்றுமை அதிகம் இருப்பதாகத் தெரியவில்லை. பஸார் வீதம்தான் மைய அங்காடி வீதத்துடன் இணைப்புப் பெறவில்லை. அதுதான் இந்தியப் பண அங்காடியைக் குறை யுடையதாகச் செய்கிறது.

**பாங்குகள் நாட்டுரிமையாதல்**

வணிக பாங்கு வளர்ச்சி இந்தியாவில் போதுமான அளவில் இல்லை என்பது நெடுநாளைய குறை. காங்கிரஸ் கட்சியின் 10 விஷயப் பொருளாதாரத் திட்டம் பாங்குகளை நாட்டுரிமை ஆக்கலை ஒன்ருகக் கொண்டது. 1968இல் இருந்து பாங்குகளின் சமூகநலக் கட்டுப்பாடு (Social Control of Banks) இருந்து வந்தது. இக் கொள்கை பாங்குச் சட்டத்தை திருத்துவதுமூலம் அமுலுக்கு வந்தது. இதன்படி நிர்வாக சபையில் விவசாயம்

கிராமப் பொருளாதாரம், சிறு தொழில் ஆகியவற்றில் பழக்க முள்ளவர்கள் 51% இருக்க வேண்டியதாயிற்று. டைரக்டர்கள் தொழில்களில் சொந்த ஈடுபாடுடையவர்களாக இருக்கக்கூடாது. சேர்மன் ஒரு கைதேர்ந்த பாங்கராக இருப்பார். அயல்நாட்டுப் பாங்குகள் ஆலோசனை சபைகளை நிறுவவேண்டும். இந்திய ஆடிட்டர்கள் கணக்கைச் சோதிக்க வேண்டும், டைரக்டர் களுக்குக் கடன் நிறுத்தப்பட்டது. அவசியமானால் அரசாங்கம் எந்த பாங்கையும் நாட்டுரிமை ஆக்கலாம். பாங்குத் தொழிலில் சில இளர்ச்சி நடவடிக்கைகள் சட்ட விரோத மாக்கப்பட்டன.

ஒரு நாட்டு கடன் கவுன்சில் (National Credit Council) நிறுவப்பட்டது. ரிசர்வு பாங்கு கவர்னர் உப சேர்மன்; நிதிமந்திரி சேர்மன். இதன் முக்ய வேலை பல துறைகளின் கடன் தேவையை நிர்ணயிப்பதும், உதவி முறைமையை நிர்ணயிப் பதும், வணிக, கூட்டுறவு பாங்குகள், தனி நிறுவனங்கள் ஆகியவற்றின் நடவடிக்கைகளை ஒருங்குபடுத்தலும்.

இந்தச் சமூகக் கட்டுப்பாட்டு திட்டத்தின்படி பாங்குகள் திருத்திக்கொள்ள முயன்றன, விவசாயம், சிறுதொழில் தேவைகளைப் பூரணமாக நிறைவேற்றின.

ஒரு பாங்குக் கமிஷனும் நியமிக்கப்பட்டது. இப்படி இருந்த நிலையில் திடீரெனப் பாங்கு நாட்டுரிமைப் பிரகடனம் செய்யப் பட்டது. (19, ஜூலை, 1969). 50 கோடியும் மேலுமான வைப் புடைய பாங்குகள் 14 நாட்டுரிமையாயின. 9-8-69ல் பாராளு மன்ற சட்டம் நிறைவேறியது. சுப்ரீம் கோர்ட்டின் சட்டம் செல்லாது என்ற தீர்ப்பைக் கடக்க, மார்ச்சு 1970இல் மீண்டும் ஒரு புதுச் சட்டம் செய்யப்பட்டது. இப் பதினான்கு பாங்குகள் பற்றிய விவரங்கள் :

| | | | | |
|---|---|---|---|---|
| செலுத்திய முதல் | — | 28.50 | | கோடி |
| ரிசர்வு | — | 66 | | ,, |
| வைப்பு | — | 2626 | | ,, |
| அட்வான்சு | — | 1743 | | ,, |
| வருமானம் | — | 194 (ஆண்டுக்கு) | | ,, |
| செலவு | — | 187 | ,, | ,, |
| லாபம் | — | 6.6 | ,, | ,, |
| கிளைகள் | — | 4168 | ,, | ,, |

பதினைந்து அயல்நாட்டுப் பாங்குகளும் சேர்க்கப்படவில்லை. நாட்டுரிமைக்குப் பின்பு, பொதுத் துறையில் 83% வைப்பும் 80% கிளைகளும் சேர்ந்துவிட்டன.

நாட்டுரிமை ஆக்கியதற்குக் கூறப்பட்ட காரணங்கள் :—

1. பாங்குச் சொந்தம் குவிந்திருப்பது நாட்டின் பொருளாதாரச் சக்தி சிலரிடம் குவிந்திருப்பதாகும்.

2. தொழிலுலக சாம்ராஜ்யங்கள், சர்வாதீனங்களும் தோன்ற இதனால் வசதி உண்டாகிறது.

3. பாங்குகள் போதிய அளவு கிளைகள் நிறுவவில்லை: சேமிப்பு திரட்டப்படவில்லை. சில மாநிலங்கள் சுரண்டப்பட்டு வேறு சில நலம் பெற்றன.

4. டைரக்டர்கள் சொந்த நலனுக்கு வசதிகளைப் பயன் படுத்திக் கொண்டனர்.

5. சிறு தொழில் நிறுவனங்கள் தலை எடுக்க முடியவில்லை.

6. விவசாயம் புறக்கணிக்கப்பட்டது.

7. பணம் தவறான ஆட்சிக்குச் சென்றது.

8. ஐந்தாண்டு திட்ட லட்சியங்கள் நிறைவேற பாங்குகள் உதவவில்லை.

மேற்கண்ட காரணங்கள் புதியன அல்ல. பொருளாதார சக்தி குவிவுக்கு பாங்குகள் மட்டும் பொறுப்பாளிகள் அல்ல. சில துறைகள் புறக்கணிக்கப்பட்டது உண்மை; ஆனால் பல தடைகளும் உள்ளன; தெளிவான அரசாங்க வழிகாட்டலும் இல்லை. ஆயினும் இத்திடீர் நடவடிக்கைக்கு காரணம் காங்கிரஸ் கட்சியின் பிளவிற்குப்பின் ஏதாவது புரட்சிகரமாக ஒன்று செய்துகாட்ட காங்கிரஸ் துடித்ததேயாகும் என்பது பொது மக்கள் கருத்து. ஆனால், நடவடிக்கையை மதிப்பிடும்போது இவ்வரசியல் சூழ்நிலையை ஒருபுறம் ஒதுக்கி மதிப்பீடு செய்ய வேண்டும். இம் முறையில் வரவேற்கலாம்:

நாட்டுரிமையானபின் என்ன சாதனை என்று பார்க்க வேண்டும். பாங்குகள் ஒரு பிணைப்பும் பலமும் பெற்றுவிட்டன. கைக்கோள்கள் ஒருங்கிணைந்தன, அரசு லட்சியம் நிறைவேற வசதி ஏற்பட்டது. கிளை வளர்ச்சி வேகமாக நிறைவேறி வருகிறது. புறக்கணிக்கப்பட்ட துறைகள் முற்பட்ட வசதி பெறுகின்றன. இரண்டு ஆண்டுகளில் 40% கிளைகள் உயர்ந்தன. சிறப்பாகக் கிராமங்களில் வழிகாட்டி பாங்குத்திட்டம் (Lead Bank Scheme) அமுலுக்கு வந்துள்ளது. வைப்புகள் ஆண்டுக்கு 17% உயர்ந்தன.

ஆனால் குறைபாடுகளும் உள்ளன. அபரிமிதக் கடன் வளர்ச்சியோ என்ற ஐயம் தோன்றியுள்ளது. சில பழைய குறைபாடுகள் புத்துருவில் காணப்படுகின்றன. அதிகார தோரணை, அரசாங்கத் தொழில்களுக்கு பிரத்யேகக் கவனிப்பு, அரசியல் செல்வாக்கு, தொழில் சங்கச் செல்வாக்கு, விவசாயக் கடன் நஷ்டம் ஆகியன அதிகரித்துவிட்டன. பணி உணர்ச்சி அற்ற தொழிலாளர் போக்கு பொதுமக்களை நாட்டுரிமை யாக்கியது சரியா என்று நினைக்கத் தூண்டுகிறது.

### கடன் உத்தரவாளி கார்ப்பரேஷன் (Credit Guarantee Corporation)

இது 1-4-71ல் நிறுவப்பட்டது. புறக்கணிக்கப்பட்டிருந்த துறைகளில் தனியார் கடன்களில் ஏற்படும் இழப்பு ஆபத்தைச் சமாளிக்க உதவுவது. மூலதனம் 10 கோடி அனுமதி; 2 கோடி செலுத்தப்பட்டது; பங்காளிகள் ரிசர்வு பாங்கு, ஸ்டேட் பாங்கு தொகுதி, ஷெடியூல்டு பாங்குகள் இழப்பில் 75% வரைக்கும் இது ஏற்கிறது.

### வைப்பு இன்சூரன்சு கார்ப்பரேஷன் (Deposit Insurance Corporation)

ஜனவரி 1962ல் நிறுவப்பட்டது. சிறு வைப்பாளிகளைக் காப்பது நோக்கம், காப்புப் பெறும் தொகை முதலில் (1968) ரூ. 5,000 மாயிருந்தது. பின் (1970) ரூ. 10,000 ஆனது. பிரிமியம் (கட்டணம்) நூறு ரூபாய்க்கு 5 காசு. அரசாங்க வைப்புகள், பாங்குகளின் வைப்புகள் விலக்கப்பட்டன. 1971 கூட்டுறவு பாங்குகளும் இதில் சேர்க்கப்பட்டன.

### பாங்குக் கமிஷன்

1969இல் R. G. சரையா தலைமையில் நியமிக்கப்பட்டு அறிக்கை பிப்ரவரி 1972ல் வெளிவந்தது. நிதி நிறுவனங்கள் அனைத்தையும்பற்றி அறிந்து, கட்டுக்கோப்புச் சீர்திருத்தங்களுக் கான பல சிபார்சுகள் செய்துள்ளது. இரண்டு மூன்று அகில இந்திய பாங்குகள், ஆறு, ஏழு மண்டல பாங்குகள் சிபார்சு செய்யப்பட்டிருக்கின்றன, இதைப் பலர் விரும்பவில்லை. 50,000 கிளைகள் வேண்டும். உள்ள பாங்குகள் இதைச் சாதிக்க மாட்டா; ஆகவே தனி கிராம பாங்குகள் (Rural Banks) நிறுவப்பட வேண்டும் என்பது ஒரு பரிந்துரை. கூட்டுறவு கடன் சொசைடிகள் பலப்படுத்தப்பட வேண்டும். பாங்கல்லாத நிதி நிலையங்கள் சரியான கட்டுப்பாட்டுக்குள்ளாக வேண்டும். நாட்டுப்

பாங்கர்களை (Indigenous Bankers) நவீன பாங்குத் திட்டத்தில் இணைக்க அநேகப் பரிந்துரைகள் உள்ளன. பாங்குப் பணியாட்கள் சம்பந்தமாகப் பல புதுமுறைகள் கூறப்பட்டுள்ளன. நடைமுறை நிர்வாகம் பற்றியும் அநேகப் பரிந்துரைகள் காணப்படுகின்றன. சட்டம் திருத்தப்பட வேண்டிய திசையும் காட்டப்பட்டுள்ளது.

**வழிகாட்டிப் பாங்குத் திட்டம் (Lead Bank Scheme)**

1969 இறுதியில் ரிசர்வு பாங்கு, D. R. காட்கில் உடைய ஓர் ஆலோசனையின் அடிப்படையில், 336 மாவட்டங்களுக்கு இத் திட்டத்தை வகுத்தது. பிரதம பாங்குகளுக்கு மாவட்டங்கள் பகிர்ந்து தரப்பட்டன. அங்கே இப் பாங்குகள் சர்வே செய்து கடன் தேவைகளை நிர்ணயித்து கிளை நிறுவி, உதவி அளிக்க ஏற்பாடு செய்து, கண்காணிக்க வேண்டும்; வட்டாரத்தின் முன்னேற்றம் அப் பாங்கின் பொறுப்பு.

**நாட்டுரிமையான பின் முன்னேற்றம்**

| | ஏப்ரல் 75 | ஜூன் 1969. |
|---|---|---|
| முற்பட்டுதவி பெற வேண்டிய துறைகளுக்கு உதவி — (மொத்த அட்வான்சில் 33%) | 2,836 கோடி | 762 கோடி (21.1%) |
| விவசாயக்கடன் | 767 கோடி (8·9%) | 188 கோடி (5·2%) |
| வைப்பு | 12,352 கோடி | 4,646 கோடி |

# 32. இந்திய ரிசர்வு பாங்கு

## (The Reserve Bank of India)

நெடுநாளைய முயற்சியின் பயனாய் 1935 ஏப்ரல் மாதத்தில் இந்திய ரிசர்வு பாங்கு தோன்றியது. இதற்கு முன் 1921 இல் மாகாண பாங்குகளின் (Presidency Banks) தொகுப்பினால் தோன்றிய இந்திய இம்பீரியல் பாங்கு (The Imperial Bank of India) மைய பாங்குகள் செய்யும் சில பணிகளைச் செய்து வந்தது. ரிசர்வு பாங்கு ஆதியில் பங்குதாரர் (shareholders) பாங்காக ஐந்து கோடி ரூபாய் மூலதனத்துடன் நிறுவப்பட்டது. ஆயினும், அது நாட்டின் பொதுப்பணிச்சார்புடைய நிறுவனமாதலால் பங்கு உரிமை, இலாப வீதம் சம்பந்தமாகச் சில கட்டுப்பாடுகள் செய்யப்பட்டன. கவர்னரையும், இரண்டு உதவி கவர்னர்களையும் நியமிக்கும் உரிமை அரசாங்கத்திற்குத் தரப்பட்டது. மைய போர்டு (Central Board) கடமையை நிறைவேற்றத் தவறினால், நீக்கவும் அரசாங்கத்துக்கு உரிமை தரப்பட்டது.

நாளடைவில் அரசாங்கத்துக்கும் பாங்குக்கும் இருக்க வேண்டிய நெருங்கிய தொடர்பைக்கருதி, பாங்கை அரசாங்க உரிமையாக்க அடிக்கடி கோரிக்கைகள் தோன்றின. சுயாட்சிக்குப்பின் மேனாடுகளின் போக்கைப் பின்பற்றி 1948 இல் அரசாங்கத்துக்குரிமையாக்கச் சட்டம் செய்யப்பட்டது. மூலதன பங்குகளை (share capital), ஈடு கொடுத்து, அரசாங்கம் வாங்கிக் கொண்டது. 1949 ஜனவரி முதல் தேதி முதல் அரசாங்கப் பாங்காக வேலை துவங்கியது. பாங்கின் கவர்னருடன் ஆலோசித்தபின், அரசாங்கம் பாங்குக்கு நாட்டின் நலத்துக்கவசியமான எந்தவித ஆணையும் (directions) விதிக்கலாம் என்ற ஒரு கட்டுப்பாடன்றி வேறு எவ்விதத் தலையீடுமின்றி வேலை செய்ய விடப்பட்டது. ஆனால், டைரக்டர்களையும் கவர்னர்களையும் உதவி கவர்னர்களையும் அரசாங்கமே நியமிக்க உரிமை பெற்றது.

பாங்கின் காரியங்களைப் பொதுவாக மேற்பார்வை (General Superintendence) செய்து ஆணையிடுவது டைரக்டர்களின் மைய போர்டு (Central Board of Directors). இதில் இருபது பேருள்ளனர். இதில் கவர்னர் ஒருவரும் நான்கு உப கவர்னர் களும் அடங்குவர். நால்வர் பிரதேச போர்டுகளால் (Local Boards) நியமிக்கப்பட்டவர்கள். மூன்று மாதத்துக்கு ஒரு முறை யாவது இவர்கள் கூடவேண்டும். ஆண்டில் ஆறு முறை யாவதுகூட வேண்டும். ஆனால் நடைமுறையில் போர்டு தன் பணிகள் சிலவற்றை ஒரு கமிட்டியிடம் ஒப்படைத்துள்ளது. இது வாரந்தோறும் கூடுகிறது. நான்கு பிரதேசங்களிலும் போர்டுகளுள்ளன. இவைகளின் தலைமை நிலையம் (head quarters) பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை ஆகியவை. ஒவ்வொரு பிரதேச போர்டிலும் ஐவர் அங்கத்தினர்; மைய அரசாங்கத்தால் நியமிக்கப்படுபவர்கள். இவர்களின் பணி தம்மிடம் மையபாங்கு ஆலோசனைக்கனுப்பும் விஷயங்களின்மேல் யோசனை கூறுவதும், தம்மிடம் விடப்பட்ட சில காரியங்களைக் கவனிப்பதும் ஆகும். இவை மூன்று மாதத்திற்கொரு முறை யாவது கூடும்.

கவர்னரே மைய போர்டின் சேர்மன், மற்றும் அதன் முதன் மைச் செயலாளி (Chief Executive). மையபோர்டின் விதிகளுக் குட்பட்டு இவர் மைய போர்டுக்குள்ள எல்லா அதிகாரங்களையும் செலுத்தக் கூடியவர். தம் பல்வேறு பணிகளிலும் உதவி கவர்னர்கள் உதவி செய்கின்றனர். ஒருவர் நோட்டு வெளியீடு, மாற்றுக் கட்டுப்பாடு (Exchange Control), வெளி அங்காடி நடவடிக்கை (Open Market Operatoins), பொதுத்துறை கணக்குகள் (Public Accounts), பொதுத்துறைக் கடன் (Public Debt). பொது நிர்வாகம் ஆகியவற்றுக்குப் பொறுப்புள்ளவ ராவார். மற்றொருவர் பாங்குத்துறை நடவடிக்கைகளுக்குப் (Banking Operations) பொறுப்புள்ளவர். மூன்றாமவர் கிராமியக் கடன் (Rural Debt), பாங்கு முறை வளர்ச்சி (Banking Development), தொழில் நிதியம் (Iudustrial Finance) ஆகியவற்றுக்குப் பொறுப்புள்ளவர். இப்பாகுபாடு நிரந்தரமானதன்று. செய்தித் திரட்சி (intelligence), ஆராய்ச்சி, ஆலோசனை சம்பந்தமான வேலைகள் பாங்கின் பிரதம ஆலோசகரின் பொறுப்பு.

**பாங்குக்கும் அரசாங்கத்துக்கும் உள்ள அதிகாரத் தொடர்பு**

• இப்போது ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றும் பொறுப்பைப் பாரளுமன்றம் அரசாங்கத்துக்குக் கொடுத்

துள்ளது. இந்த நோக்க நிறைவேற்றத்திற்கு இடர்ப்பாடின்றிப் பாங்கு தனக்கு விதித்துள்ள கடமைகளைச் செய்ய வேண்டியிருக்கிறது. ரிசர்வு பாங்குச் சட்டத்தில் முகவுரையில் (preamble) பாங்கின் பொறுப்பு குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதாவது, பொதுவாக நாட்டின் நலத்துக்காகச் செலாவணி, பாங்கு மற்றும் கடன் திட்டத்தை (Currency and Credit System) நடத்துவதும், இந்தியாவில் பணத்துறை நிலைபேற்றைப் பெறுவதற்காக நோட்டுகள் வெளியீட்டையும் ரிசர்வு இருப்பையும் ஒழுங்கு படுத்துவதும் ஆகும். (To regulate the issue of bank notes and the keeping of reserves with a view to securing monetary stability in India and generally to operate the currency and credit system of the country to its advantage). பணத்துறையில் அரசாங்கத்துக்கும் பாங்குக்கும் இடையில் எல்லையை எந்தச் சட்டமும் வகுக்கவில்லை. பணத்துறைக் கைக்கோளை (Policy) நிர்ணயிப்பதும் நிறைவேற்றுவதும் பாங்கின் பொறுப்பாகும். கட்டுப்பாடு நடவடிக்கைகளைத் தன்னிச்சைப்படியே பாங்கு எடுக்குமாயினும் பாங்கு வட்டிவீதத்தை மாற்றுவது சம்பந்தமாக அரசாங்கத்தோடு கலந்தே முடிவு செய்யும். அரசாங்கம் கால உண்டியல்களின் மேல் வரியை மாற்றும்போது பாங்கை அனுசரித்தே முடிவு செய்வது வழக்கமாயுள்ளது. வெளி அங்காடி நடவடிக்கைகளைப் பாங்கு எடுக்கும்போது அது அரசாங்கத்தின் கடன் கைக்கோள்களையும், திட்டத்தையும் அனுசரித்தே நடக்கும். அரசாங்கமும் இவை சம்பந்தமாக நடவடிக்கை எடுக்கும்போது பாங்கைக் கலந்தே முடிவு செய்யும். பண அங்காடியுடன் நெருங்கிய தொடர்பு பாங்குக்குண்டாகையினால் அதை அனுசரிப்பது முறையாகும் என்பது அரசாங்கத்தின் கருத்து. உண்மையில் இவை சம்பந்தமாக அரசாங்கக் கடனின் அளவு, வகை, நிபந்தனைகள் சம்பந்தமாகப் பாங்கு கூறும் ஆலோசனையைப் பெரும்பாலும் அரசாங்கம் ஏற்பது வழக்கம். அரசாங்கக் கடன் நிருவாகப் பொறுப்பும் சட்டப்படி பாங்குடையதாகும்.

நாட்டின் செலாவணி (Currency) அளிப்பை நிர்ணயிப்பது பாங்காயினும் பாராளுமன்றம் பட்ஜெட்டை நிர்ணயிப்பதன் மூலம் அரசாங்கம் மைய பாங்கிடமிருந்து வாங்கக் கூடிய கடன் தொகையையும் நிர்ணயிப்பதாகிறது. திட்டநிதி சம்பந்தமாகவும் பற்றுக்குறை நிதி (deficit finance) சம்பந்தமாகவும் அரசாங்கம் பாங்கை ஆலோசனை கேட்டே முடிவு செய்யும். அயல் நாட்டு மாற்றுக் கட்டுப்பாடு (Foreign Exchange Control) சம்பந்தமான

கைக்கோளைப் பாங்குடன் கலந்தே அரசாங்கம் முடிவு செய்கிறது.

ரிசர்வு பாங்கு எவ்வளவு தூரம் சுயேச்சை உடையது என்ற வினவுக்கு திட்டவட்டமான பதில் கூயமுடியாது. ஆதியில் பாங்கு தனியார் மூலதனப் பாங்காக இருந்தபோது, முழுச் சுயேச்சை இருந்ததாக நினைக்கலாம். ஆயினும் கவர்னரும், உதவி கவர்னர்களும், சில டைரக்டர்களும் அரசாங்கத்தால் நியமிக்கப்படக்கூடும், நீக்கப்படக்கூடும். அரசாங்க உரிமையான பின்பு மூலதனம் அரசாங்கத்தினுடைய தானது. எல்லா டைரக்டர்களையும் அரசாங்கம் நியமிக்கக்கூடும், நீக்கக்கூடும். ஆனல் ஆணையிடக்கூடும் என்ற ஓர் அதிகாரத்தை மேற்கொண்டதைத் தவிர வேறு எந்தவித அதிகார மாறுதலும் செய்யப்படவில்லை. ஆகவே தேசிய மயமாக்கப்பட்ட பின்பும் பாங்கின் சுயேச்சைக்கு யாதோர் இடையூறும் உண்டாக்கப்படவில்லை. ஆனல் தலையீட்டுக் குறைப்பாட்டுக்களைச் சிலர் எழுப்பித்தான் வருகிருர்கள். சுதந்தரத்துக்கு முன் தனியார் மூலதனப் பாங்காக இருந்தபோது பாங்கு தேசிய முன்னேற்ற நோக்கத்துடன் நடந்துகொண்டது. பின்னர் அரசாங்கப் பாங்கானது அதன் செல்வாக்குக்கு உறுதி செய்வதாயிற்று. நாட்டின் நலத்துக்காகப் பாங்கு மேற்கொள்ளும் வேலையில் அரசாங்கத்துடன் முரண்பாடுண்டாக வழியில்லை.

பாங்குக்கும் அரசாங்கத்துக்கும் தொடர்பு, மைய போர்டில் அரசாங்கத்தாம் நியமிக்கப்பட்டு அமரும் நிதித்துறை (Finance Miniatry) அதிகாரியால் ஏற்படுகிறது. நிதித்துறையில் பொருளாதார விவகாரங்கக் கவனிக்கும் செக்ரட்ரியே பெரும்பாலும் நியமிக்ப்பெபடுவார். அவர் மூலமாக அரசாங்கத்துக்கும், பாங்குக்கும் ஒன்றுக்கொன்று கருத்துத் தெரிவிக்கப்படும். ஆனல் உண்மையில் தொடர்பு இடைவிடாது அதிகாரிகளுக்கிடையில் இருந்து கொண்டேயிருக்கும். பணத்துறை, பாங்கித்துறைப் போக்குகளைப் பற்றிப் பாங்கு அரசாங்கத்துக்குத் தெரிவித்துக் கொண்டேயிருக்கும். அசராங்கமும் அவ்வப்போது நிதித்துறை சம்பந்தமாயும் பொதுவாகப் பொருளாதார நிலை சம்பந்தமாயும் பாங்குடன் கலந்தாலோசிப்பதுண்டு. ஐந்தாண்டுத் திட்டத் தயாரிப்பிலும் சில பாங்கு அதிகாரிகள் கலந்துகொள்வதுண்டு. இராச்சிய அரசாங்கங்களுடனும், முக்கியமாகப் பொதுத்துறைகடன் சம்பந்தமாயும் கூட்டுறவு சம்பந்தமாயும் ஆலோசனை நடப்பதுண்டு.

**செலாவணிக் கட்டுப்பாடு**

நாட்டுச் செலாவணி (currency) வெளியீடு ரிசர்வு பாங்கின் தனி உரிமைக்குட்பட்டது. இதன் வழியே அது மக்களிடம் இருக்கும் பணத் தொகையை நிர்ணயிக்க முயல்கிறது. பாங்குகள் வைப்புப் பணத்தை உற்பத்தி செய்வது அவர்களின் ரொக்க ரிசர்வைப் பொறுத்தது. இந்த ரொக்கத்துக்குத் தோற்றுவாய் ரிசர்வு பாங்கேயாகும். சாதாரணமாக மைய பாங்குகளுக்குள்ள கட்டுப்பாட்டுக் கருவிகள் ரிசர்வு பாங்கிடமுமுண்டு. தவிரவும், பாங்குக் கம்பெனிகளின் சட்டத்தின் கீழும் தேர்வுக் கட்டுப்பாடுகள் (Selective Control) செய்ய அதிகாரம் இருக்கிறது.

ரிசர்வு பாங்குச் சட்டத்தில் பாங்கின் நோட்டு வெளியீட்டு அதிகாரத்திற்கு வரையறைகள் காணப்படுகின்றன. பாங்கின் விவகாரங்கள் இரண்டு பகுதிகளாக நடைபெறுகின்றன. ஒன்று வெளியீட்டிலாகா; மற்றது பாங்கு இலாகா. நோட்டு வெளியீடு சம்பந்தமான பொறுப்பு, சொத்து விவரங்கள் வெளியீட்டிலாகா கணக்கில் காணப்படும். நோட்டுப் பொறுப்புக்கு எதிரான சொத்துக்கள் இந்த இலாகாவிலுள்ளன. ஆனால் உண்மையில் 'வெளியிடுவது' என்பது பாங்கு இலாகா மூலமாகத்தான் நிகழ்கிறது. பாங்கின் கணக்கு ஆண்டு ஜூலை முதல் தேதி முதல் அடுத்த ஜூன் 30-ஆந் தேதி வரைக்கும். பாங்கு தன் வாராந்தர வெள்ளிக் கிழமை நிலைக்குறிப்பில் (Weekly Statements) வெளியீட்டிலாக்காவையும் பாங்கு இலாக்காவையும் பிரித்துக் காட்டுகிறது.

An Account pursuant to R.B.I. Act. 1934 for the week ended 17 November 1972

(in lakhs of rupees)

Issue Department

| Liabilities | | Assets | |
|---|---|---|---|
| Notes in Circulation | 47,49,20 | A. Gold Coin & Bullion held in India and held outside India | 182,53 |
| Notes held in Banking Department | 36,50 | Foreign securities | 191,65 |

| | | | |
|---|---|---|---|
| | | Total of A | 374,15 |
| | | B. Rupee Coins | 22,24 |
| | | Govt. of India rupee securities | 4,389,31 |
| Total Notes issued | 4,785,70 | Total assets | 4,785,70 |

## Banking Department

| Liabilities | | Assets | | | |
|---|---|---|---|---|---|
| Paid up Capital | 5,00 | Notes | 3650 | | |
| Reserve Fund | 150,00 | Rupeee Coin | 4 | | |
| National Agricultural | | Subsidiary Coiu | 3 | | |
| Credit (Long term Operations) Fund | 20,200 | Bills puschased and distributed | | | 3657 |
| National Agricultural | | a. Internal | | | 114,53 |
| Credit (Stabilisation) | | b. External 33963 | | | 339,63 |
| Fund | 45,00 | c. Govt. bills | | | 340,77 |
| National Agricultural | | | | | |
| Credit (Loan of term | | Balances held abroad | | | 151,07 |
| Operation) Fund | 175,00 | Loans and Advances to Govt. | | | 3513 |
| Deposits:— | | | | | |
| (a) Govt. | | Other loans and Advances | | | 236,34 |
| 1. Central Govt. | 52,31 | | | | |
| 2. Other Govt. | 13,82 | Investments | | | 388,22 |
| (b) Banks | 295,39 | Other assets | | | 41,07 |
| (c) Others | 88,89 | | | | |
| Bills Payable, | 72,24 | Loan, advance, Investments | | | |
| Other liabilities | 340,07 | from special Funds | | | 217,46 |
| Total Liabilities | 1,446,73 | Total Assets | | | 1,446,73 |

## வெளியீட்டிலாக்கா

### புழக்கத்திலிருக்கும் நோட்டுக்கள் (Notes in Circulation)

சட்டத்தின் 22-வது பிரிவின்படி பாங்குக்கு நோட்டு வெளியிடும் தனி உரிமை உண்டு. 1935, ஏப்ரல் 1-ஆம் தேதியன்று புழக்கத்திலிருந்த அரசாங்க நோட்டுக்கள் அனைத்துக்கும் பாங்கு பொறுப்பேற்றுக் கொண்டது. ஆகவே, புழக்கத்திலிருக்கும் நோட்டுக்கள் என்ற தொகையையும், பாங்கு அத்தேதி முதல் வெளியிட்ட தொகையையும் தொகுத்து அதிலிருந்து பாங்கு இலாக்காவில் கையிலிருக்கும் தொகையைக் கழித்தால் மீதித் தொகை புழக்கத் தொகையாகும். ஆகவே, இவ்வினம் ரிசர்வு பாங்குக்கு வெளியில் பொதுமக்களிடமும், பாங்குகளிடமும், கருவூலங்களிடமும் உள்ள தொகையைக் குறிக்கும். இந்திய யூனியனுக்கு வெளியில் புழங்கி வரும் தொகையும் இதிலடங்குகிறது.

### பாங்கிலாக்காவில் வைத்திருக்கும் நோட்டுகள் (Notes held in the Banking Department)

இது பாங்கிலாகாவுக்கு 'ரொக்கமாக'க் கருதப்படும் தொகையில் அடங்குகிறது; இந்த இலாக்காவின் அன்றாடத் தேவைகளுக்காக வைத்திருக்கப் படுகிறது. 33(1) பிரிவு வெளியீட்டிலாக்காவின் சொத்துகள் பொன் நாணயம், பொற் கட்டி, அயல்நாட்டுச் செக்கூரிட்டிகள், ரூபாய் நாணயம், ரூபாய் செக்கூரிட்டிகள் ஆக இருக்க வேண்டும் என்று கூறுகிறது. பிரிவுகள் 33(2)-ம் 33(4)-ம் சேர்ந்து பொன் நாணயமும் கட்டியும் 115 கோடி ரூபாய் மதிப்புக்குக் குறையாமல் இருக்க வேண்டும் என்று கூறுகின்றன.

அயல் நாட்டுச் செக்கூரிட்டிகள் என்பது பன்னாட்டுப் பண நிதி (I.M.F.)யில் அங்கம் வகிக்கும் நாடுகளின் செலாவணியில் செலுத்துதலுடைய செக்கூரிட்டிகளாகும். இந்த வகையில் அயல்நாட்டின் மைய பாங்கில் வைப்பும், அயல் நாட்டில் செலுத்துடைய முதல் தர உண்டியல்களும், ஐந்தாண்டுகளுக்குள் முதிரும் அயல் நாட்டுக் கடன் செக்ரிகூடிட்களும் அடங்கும். 1956 அக்டோபர் 6-ஆம் தேதிக்கு முன் இந்தச் செக்கூரிட்டிகளும், பொன்களும், கட்டிகளும் சேர்ந்து வெளியீட்டிலாக்காவின் சொத்துக்களில் 40%-க்குக் குறையாமலிருக்க வேண்டியிருந்தது. ஆனால், அத் தேதியில் இது மொத்தச் சொத்தில் 400 கோடி ரூபாய் மதிப்புக்குக் குறையா

மல் அயல்நாட்டுச் செக்கூரிட்டிகள் இருக்க வேண்டுமென்று மாற்றப்பட்டது. மீண்டும் 1957இல் பொன் காசுகள், கட்டி, அயல்நாட்டுச் செக்கூரிட்டிகள் எல்லாம் சேர்ந்து 200கோடி ரூபாய்க்குக் குறையாமலும் இதில் பொன் மதிப்பு 115 கோடிக் குக் குறையாமலும் இருக்க வேண்டுமென்று மாற்றப்பட்டது. இப்போதுள்ள நிலை என்னவெனில், அரசாங்கத்தின் அனுமதி யிருக்குமானால், பாங்கு அயல்நாட்டுச் செக்கூரிட்டிகள் யாதும் வைத்திருக்க வேண்டிய கட்டாயமில்லை. ஆனால், 115 கோடி ரூபாய் மதிப்புள்ள பொன் இனங்கள் வைத்திருக்க வேண்டும்.

### ரூபாய் காசு (Rupee Coin)

இது வெளியீடு இலாக்கா அலுவலகங்களிலும், பாங்கின் இலாகாக்களிலும், தனி ஏஜெண்டுகளிடமும் வைத்திருக்கும் முழு ரூபாய் நாணயங்களைக் குறிக்கிறது. 1940 ஜூலை யிலிருந்து அரசாங்கம் 1940 முதல் வெளியிட்ட ஒரு ரூபாய் நோட்டுக்களும் அடங்குகின்றன. வெளியீட்டிலாக்காவில் காசுகள் இருப்பதன் நோக்கம் மக்கள் விரும்பினால் நோட்டை ரூபாயாக மாற்றிக் கொள்ள வசதி செய்வ தாகும். இந்திய அரசாங்க ரூபாய் செக்கூரிட்டிகள் (Government of India rupee securities) எனப்படுவன பொதுத்துலைக் கடனுக்காக அரசாங்கம் வெளியில் கருவூல உண்டியல் களையும், பிற செக்கூரிட்டிகளையும், பாங்கு வாங்குவதற்குத் தகுதியான இந்திய மாற்றுண்டியல்களையும், புரோ நோட்டு களையும் குறிக்கிறது.

### பாங்கு இலாக்கா (Banking Department)

#### பொறுப்புகள்

நோட்டு வெளியிடுவது தவிர, மற்ற எல்லா மைய பாங்கு வேலைகளையும் இந்த இலாக்கா செய்கிறது. பாங்கின் செலுத்திய மூலதனம் சட்டப்படி 5 கோடி ரூபாய். 46வது பிரிவின்படி 5 கோடி ரூபாய் ரிசர்வு நிதியும் இருக்க வேண் டியதாயிற்று. ஆனால், அக்டோபர் 1956இல் வெளியீட் டிலாக்காவிலிருந்த பொன்னை மறுமதிப்பு (re-value) செய்த போது ஏற்பட்ட 77·74 கோடி ரூபாய் இலாபத்திலிருந்து 75 கோடி ரிசர்வு நிதிக்கு மாற்றப்பட்டது. ஆகவே, 30ஜூன் 1957-லிருந்து ரிசர்வு 80 கோடி ரூபாயாக இருந்தது வந்தது. மீண்டும், இது 1972 பிப்ரவரி முதல் புது மதிப்பின்படி 150 கோடியாயிற்று.

தேசிய விவசாயக் கடன் (நெடுங்கால நடவடிக்கை) நிதியும் (The National Agricultural Credit Long Term Operations Fund), தேசிய விவசாயக் கடன் (நிலை பேறு செய்தல்) நிதி (Stabilisation Fund) யும், 46A, 46B பிரிவு களின்படி 1956இல் நிறுவப்பட்டன.

**வைப்புகள்**

(1) **மைய அரசாங்க, இதர அரசாங்க வைப்புகள்** (Deposits of Central Government and other Governments) : 21-வது பிரிவின் கீழ் தன் ரொக்க இருப்பு (Cash Balances) களை எல்லாம் அரசாங்கள் வட்டியின்றி ரிசர்வு பாங்கில் வைத்திருக்க வேண்டும். மாநில (State) அரசாங்கங் களின் ரொக்க இருப்பையும் வட்டியின்றி வைத்திருக்க அனுமதி தரப்படுகிறது.

(2) **பாங்குகளின் வைப்பு :** 42 (1) வது பிரிவின்படி ஷெடியூல்டு பாங்குகள் சட்டப்படி வைக்கவேண்டிய வைப்பும், பிற அனுமதி பெற்ற பாங்குகளின் வைப்பும், மாநிலக் கூட்டுறவு பாங்குகளுன் வைப்பும் இதிலடங்கும். சாதாரணமாக பாங்குகள் சட்ட வீதத்துக்கு மேலேயே வைத்திருக்கக் காண்கிறோம்.

(3) **பிற வைப்புகள் :** அரசாங்கச் சார்புடைய (Quasi-government) பிற நிறுவனங்கள், தொழில் நிதிக் கார்ப்ப ரேஷன் (Industrial Finance Corporation) போன்றவை களின் இருப்பும், வசூலிலிருக்கும் செக்குகளும், அயல் நாட்டு மைய பாங்குகளும், அரசாங்கங்களும், பன்னாட்டுப் பண நிதியும் (I. M. F ), புனரமைப்புக்கும் அபிவிருத்திக்குமான பன்னாட்டுப் பாங்கின் (I.B.R.D.) இருப்புகளும் இதிலடங்கும்.

**பிற பொறுப்புகள் :** பாங்கின் கிளைகளுக்கிடையில் பெயர்ச்சி யிலிருக்கும் தொகைகளும் பாங்கின் வருமானக் கணக்கினங்களும் (Income Accounts) அரசாங்கத்துக்கு மாற்றப்படும் வரையிலும் செலுத்த வேண்டிய உண்டியல்களும் (இவை பாங்கின் கிளைகள் ஏஜெண்டுகள் ஆகியோர் பாங்குக்கு விடுக்கும் ட்ராஃப்ட்டு களாகும்) இதிலடங்கும்.

**சொத்துகள்**

**முதல் மூன்று இனங்கள் :** நோட்டுகள், ரூபாய்க் காசுகள், துணைக் காசுகள் (Subsidiary Coins) சேர்ந்தது பாங்கின் ரொக்கம். இங்கு 'நோட்டுகள்' என்று குறிப்பிடுவது

வெளியீட்டிலாகாவில் 'பாங்கிலாக்காவில் இருப்பு' என்று குறிப்பிட்டதேயாகும்.

**உண்டியல் வாங்கியது, கழிவு செய்தது** (Bills Purchased and Discounted): இது கருவூல உண்டியல்களையும், வர்த்தக உண்டியல்களையும் மறுகழிவு செய்த தொகை. இப்போது இந்த இனத்தில் கருவூல உண்டியல்கள் மட்டுமே காணப்படுகின்றன. தொகையும் சிறியது.

**வெளி நாட்டிருப்பு** (Balance held abroad): முக்கியமாக ரொக்கம். பெரும்பாலும் இங்கிலாந்து பாங்கில் இருப்பும் குறுங்காலச் செக்கூரிட்டிகளும். இப்போது அயல்நாட்டுப் பாங்குகளில் இருப்பும், அயல்நாட்டு அரசாங்க செக்கூரிட்டிகளும்.

**அரசாங்கத்துக்குக் கடன்களும் அட்வான்சுகளும்** (Loans and Advances):

குறுங்காலத்துக்கு வழிவகைக் கடனுகை (Ways and Means Advances) மைய அரசாங்கத்துக்கும் மாநில அரசாங்கங்களுக்கும் தரும் தொகையும், தேசிய விவசாயக் கடன் (நெடுந்தவணை) நிதியிலிருந்து மாநிலங்களுக்குத் தரும் வசதியும், மாநில அரசாங்கங்களுக்குத் தற்காலிகமாகத் தரும் அதிகப் பற்றுத் (Overdraft) தொகையும் இதிலடங்கும்.

**பிற கடன்களும் அட்வான்சுகளும்:** 17-வது பிரிவின்கீழ் பாங்குகளுக்கும் தொழில் கார்ப்பரேஷன்களுக்கும் பாங்கு தரும் கடன் வகைகள் இதிலடங்கும்.

**முதலீடுகள்** (Investments): மைய அரசாங்கத்தின் செக்கூரிட்டிகளும், மாநில அரசாங்கங்களின் செக்கூரிட்டிகளும், அனுமதிக்கப்பட்ட (ஸ்டேட் பாங்கு, மாநிலக் கூட்டுறவு பாங்கு, மாநிலத் தொழில் நிதிக் கார்ப்பரேஷன், நில அடமான பாங்கு) ஆகியவற்றின் செக்கூரிட்டிகளில் முதலீடுகளும்.

**பிற சொத்துகள்:** இருப்பிடம் (premises), மரச்சாமான்கள், பொருத்தினங்கள் (fittings), அலுவலக எழுது பொருள்கள் (stationary), வசூலிலுள்ள இனங்கள் முதலியன இதிலடங்கும்.

நாம் இதுவரை பல இனங்களின் தன்மையை ஆய்ந்தோம். இவை சம்பந்தமான பல வாரத்திய அறிக்கைகளைக் கொண்டு பாங்கின் போக்கை அறியலாம்.

## ரிசர்வு பாங்கின் பண நிர்வாகப் பணி

### நோட்டு வெளியீடு

33-வது பிரிவு நோட்டு வெளியீட்டுக்குப் பின்னணியாக இருக்க வேண்டிய சொத்துகளை விளக்குகிறது. சொத்துகள் பொற்காசு, பொற்கட்டி, அயல் நாட்டு செக்யூரிடிகள், ரூபாய்க் காசு, ரூபாய் செக்யூரிடிகள், பாங்கு வாங்கத் தகுதியுள்ள மாற்றுண்டியல்கள், புரோநோட்டுகள் (இவை உண்மையில் இல்லை) என்பனவாக இருக்க வேண்டும். இவைகளின் தொகை வெளியீட்டிலாகாவின் மொத்தப் பொறுப்புக்குச் சமமாக இருக்க வேண்டும். பூர்வச் சட்டம் (40%) விகிதாசார முறையை வகுத்திருந்தது. 1956இல் குறிப்பிட்ட குறைந்த பட்ச முறை வந்தது. பொற்காசு, பொற்கட்டி 115 கோடி மதிப்பும் அயல் நாட்டுச் செக்யூரிடி 400 கோடி மதிப்பும் நிர்ணயிக்கப்பட்டன. பொன்னை, 1949இல் ரூபாயின் மதிப்பிறக்கம் காரணமாக, 2·88 கிரெயின்= 1 ரூபாய் என்று புனர் மதிப்பிடப்பட்டு எச்சம் ரிசர்வுக்குச் சென்றது. 1957இல் சட்டம் திருத்தப்பட்டு பொன் நாணயம், பொற்கட்டி, அயல் நாட்டுச் செக்யூரிடி ஆகியவை 200 கோடி, இதில் பொன் மதிப்பு குறைந்தபட்சம் 115 கோடி என்று நிர்ணயிக்கப்பட்டது. அவசியமானால் அயல் நாட்டுச் செக்யூரிடியில்லாமலும் இருக்கலாம். ஜூன் 1966ல் செய்த 36·5% மதிப்பிறக்கம் காரணமாக 1-2-69இல் மீண்டும் பொன் புது மதிப்பீடு செய்யப்பட்டது. முன் 0·186621 கிராம் பொன் ஒரு ரூபாயின் மதிப்பு. இப்போது 0·118489 கிராம் ஆனது.

### செலாவணிப் பெட்டகங்கள்

அரசாங்கம், பாங்குகள், பொது மக்கள் ஆகியோர் தேவைகளுக்கு ஏற்பச் செலாவணி போதுமான அளவு இருக்கும்படி ரிசர்வு பாங்கு பார்த்துக்கொள்ள வேண்டும். நோட்டு வெளியிடுவதோடு வெளியீட்டிலாக்கா நோட்டுகளுக்குக் காசும், காசுக்கு நோட்டுமாக மாற்றித் தருகிறது. இந்தப் பணிகளை நிறைவேற்றச் சில ஏற்பாடுகள் உள்ளன. பாங்குக்குப் பத்து அலுவலகங்கள் உள்ளன. அவை பெங்களூர், பம்பாய், கல்கத்தா, கான்பூர், சென்னை, நாகபுரி, புதுடெல்லி, ஹைதராபாத், பாட்னா ஆகிய இடங்களிலுள்ளன. தவிர, தன்னுடைய ஏஜண்டுகளான இந்திய ஸ்டேட் பாங்கு, ஹைதராபாத் ஸ்டேட் பாங்கு, மைசூர் பாங்கு ஆகியவற்றின் கிளைகளிலும், அரசாங்கக் கருவூலங்களிலும் உப கருவூலங்களிலும் (Sub-treasuries) செலாவணிப் பெட்டகம் (Currency)

Chests) வைத்திருக்கின்றது. 1969 செப்டம்பரில் இப்படி 1968 பெட்டகங்கள் நாட்டிலிருந்தன. மேலும் தேவைப்பட்டால் மைய அரசாங்கத்தின் அனுமதி பெற்றுப் புது இடங்களில் பெட்டகங்கள் வைக்கலாம். மக்களின் சில்லரைக் காசுத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காக அரசாங்கத்தின் சில்லரைக் காசு டிப்போக்களைப் பாங்கு நிர்வாகம் செய்கிறது. செலாவணிப் பெட்டகங்கள் என்பவை புது நோட்டுக்களும், திரும்பச் செலா வணியில் விடத்தக்க பழைய நோட்டுக்களும், ரூபாய்க் காசுகளும் வைத்திருக்கும் ஒரு பெட்டி. ஒவ்வொரு கருவூலத்திற்கும் அல்லது பாங்குக் கிளைக்கும் ஒரு பெட்டக முண்டு. அன்றாட பேரங்களில் எச்ச வரவாயின் எச்சம் இதில் வைக்கப்படும். பற்றுக் குறையாயின் எடுக்கப்படும். இதனால் பணத்தை இடத்துக் கிடம் அனுப்பிக் கொண்டேயிருக்க வேண்டிய அவசியமில்லை. நோட்டை ரொக்கமாகவும் காசை நோட்டாகவும் மாற்ற வசதி உண்டாகிறது. மக்களும் பாங்குகளும் வெளி யூருக்குப் பணம் அனுப்புவதற்கும் வசதி செய்கிறது.

இப்படிப் பெட்டகங்களில் தங்கும் நோட்டுகள் புழக்கத்தி லிருக்கும் நோட்டுக்கள் என்ற தலைப்பில் சேரா என்பது வெளிப்படை. ஆனால் பெட்டகத்திலுள்ள ரூபாய்க் காசுகளும் நோட்டுகளும் வெளியீட்டிலாக்காவின் சொத்தில் கணக்காகும். ஆகவே பெட்டகத்தில் நோட்டை வைக்கும்போது நோட்டுப் புழக்கம் குறைகிறது. ஆனால் ரூபாய்க் காசை வைத்தால் பாங்கின் சொத்து உயர்ந்து, வெளியில் புழக்கத்திலிருக்கும் நோட்டுகளுக்கு எதிராக வைத்திருக்கும் ரிசர்வு அதிகமாகிறது, பெட்டகத்திலிருந்து நோட்டை எடுத்தால் புழக்கத்திலிருக்கும் நோட்டுக்களின் தொகை உயர்கிறது. ரூபாய்க் காசுகள் எடுக்கப் பட்டால் ரிசர்வு குறைகிறது.

இந்தியாவில் பணப் புழக்கத்தில் ஒரு பருவவாரி வேறுபாடு (Seasonal variation) காணப்படுகிறது. மாசூல் காலமாகிய அக்டோபரிலிருந்து ஏப்ரல் வரை தீவிரச் செலாவணிக்காலம் இந்தப் பருவத்தில் செலாவணித் தேவை அதிகரிக்கிறது. மற்றப் போது செலாவணி மந்தமாக இருக்கிறது. இந்த வேறுபாடு சமீப ஆண்டுகளில் மங்கிக்கொண்டே வருகிறது. காரணம் திட்டங்களின் கீழ்ப் பயிர்த் தொழிலுடன் வேறு தொழில்களும் பெருகிச் செலாவணி ஆட்சி பெருகியதாகும்.

இவ்வகைச் செலாவணி வேறுபாடுகள் எப்படி பாங்குத் திட்டத்தைப் பாதிக்கின்றன என்று பார்ப்போம். தீவிர

விவசாயப் பருவத்தில் பாங்குகளிடமிருந்து ஏராளமாகப் பணம் வெளி ஏறுகிறது. வியாபாரிகளும் தொழிலதிபர்களும் தம் பாங்கு வைப்பைக் காலி செய்கிறார்கள், அல்லது கடனைப் பெறு கிறார்கள். இந்தத் தேவைகளைப் பூர்த்தி செய்ய பாங்கர்கள் தங்கள் ரொக்கத்தை ஆள்கிறார்கள் அல்லது ரிசர்வு பாங்கில் கடனுகவோ முதலீடுகளை விற்றோ ரொக்கம் பெறுகிறார்கள் அல்லது அங்காடியில் விற்றுப் பெறுகிறார்கள். இவர்கள் நடவடிக்கை காரணமாகவும் அரசாங்க அலுவலகங்களின் நடவடிக்கை காரணமாகவும் ரொக்கம் வெளியேறி, ரிசர்வு பாங்கின் பாங்கு இலாக்காவில் இருக்கும் ரொக்க இருப்பு குறைந்த பட்ச அளவுக்கும் குறைய வாரம்பிக்கும். இதைச் சரிப்படுத்த, பாங்கிலாக்கா வெளியீட்டு இலாக்காவுக்குத் தகுதியான சொத்துக்களை (ஸ்டர்லிங் அல்லது ரூபாய் செக்கூரிட்டிகளை) மாற்றி ஈடாக ரொக்கம் பெறும். அரசாங்க அலுவலகங்கள் மக்களுக்குப் பட்டுவாடா செய்வதாலும், ரிசர்வு பாங்கில் அரசாங்கத்தின் இருப்புக் குறையும். பாங்கிலாக்காவின் ரொக்கமும் குறையும். அரசாங்கத்தின் இருப்புப் பற்றாதாயின், அரசாங்கம் பாங்கிடம் வழிவகைக் கடன் (Ways and Means Advances) வாங்கும் அல்லது கருவூல உண்டியல்கள் விற்கும்.

மந்த காலத்தில் எதிரிடையான நிகழ்ச்சிகள் தோன்றும். கிராம மக்கள் பண்டங்களை வாங்குவதன் மூலம் ரொக்கம் நகரங்களை நோக்கி மீளும். பாங்குகளின் ரொக்க இருப்பு மிகை நிலை அடையும். எச்சம் கடன் திருப்பிக் கொடுப்பது காரணமாக அல்லது செக்கூரிட்டிகள் வாங்குவது மூலமாக, அல்லது ரிசர்வு வைப்பை அதிகப்படுத்தும் நோக்கமாக ரிசர்வு பாங்குக்குப் போகலாம். எதுவாயினும் விளைவு பாங்கி லாக்காவில் இருக்கும் ரொக்கம் அதிகப்படுவது. தேவைக்கு எச்சமான ரொக்கத்தைக் பாங்கிலாக்கா வெளியீட்டிலாக்கா வுக்கு மாற்றிவிடும். ஈடாகச் சில சொத்துக்களைப் பெறும். நோட்டு என்ற சொத்துக்குப் பதிலாக வேறு வகைச் சொத்துகள் இருக்கும். வெளியீட்டுலாகாவில் நோட்டு வெளியீடு காரணமாக இருந்த பொறுப்புக் குறையும்; சொத்தும் குறையும். அரசின் ரொக்கம் எச்சமாக இருந்தால் அது அரசாங்க வைப்புத் தொகையை அதிகப்படுத்தும். இந்த அளவுக்குப் பாங்கிலாக்காவின் ரொக்கமும் அதிகப்படும். இந்த உபரி வைப்பைக் கொண்டு அரசாங்கம் பாங்குக்கு தர வேண்டிய வழிவகைக் கடனைக் குறைத்துக் கொள்ளும், அல்லது முன்னர் வெளியிட்டிருந்த கருவூல உண்டியல்களை மீட்கும்.

கடன் பணத்தைக் கட்டுப்படுத்த ரிசர்வு பாங்குச் சட்டமும் பாங்குக் கம்பெனிச் சட்டமும் அநேக அதிகாரங்களை ரிசர்வு பாங்குக்குக் கொடுத்திருக்கின்றன. பாங்கு வீதத்தை மாற்றல், வெளி அங்காடி நடவடிக்கை, ரிசர்வு விகிதத்தை மாற்றல், பொறுக்குக் கட்டுப்பாடு (Selective control), அறிவுறுத்தல், ஆகிய முறைகளை ஆள பாங்குக்கு அதிகாரம் இருக்கிறது. முதல் மூன்றும் தொடர்புடைய நடவடிக்கைகள். இவை அனைத்தும் பாங்குகளின் ரிசர்வைப் பாதிப்பன. முதல் கருவி மறைமுகமாகவும், பின்னிரண்டும் நேரடியாகவும் ரிசர்வைத் தாக்கும். பாங்குவீத மாறுதல் (கழிவு வீதமாகையால்) பாங்குகளுக்கு ரிசர்வு பெறுவதை நஷ்ட காரியமாக்கிக் கட்டுப்பாடு செய்கிறது.

**மறு கழிவுக்குரிய தாள்கள்**

பிரிவு 49 இல் பாங்கு வீத (Bankrate) இலக்கணம் காணப் படுகிறது. அதன்படி இது வணிகத் தாள்களை (சட்டத்துக்ுட் பட்டு) கழிவு செய்யும் (வாங்கும்) வீதம்.

ரிசர்வு பாங்குச் சட்டத்தில் 17 வது பிரிவில் மறுகழிவு செய்வது பற்றிய விதிகள் காணப்படுகின்றன. அதில் எந்தெந்தத் தாள்களை ரிசர்வு பாங்கு மறுகழிவு செய்யலாம் என்று காணப் படுகிறது. இவைகளைத்தான் தகுதி விதிகள் (eligibility rules) என்பர். தகுதியுடைய தாள்கள் (eligible paper) கீழ்வருவன :

17 (2) (a) (1) உண்மையில் வணிகம் சம்பந்தமான உண்டியல்கள், புரோ நோட்டுகள்.

இவை இந்தியாவில் எழுதப்பட்டு இந்தியா விலேயே செலுத்தப் படுவனவாகவும்,

இரண்டு அல்லது மேற்பட்ட நம்பிக்கை யான கையொப்ப முடையனவாகி,

இதில் ஒன்று ஷெடியூல் பாங்கு அல்லது ஸ்டேட் கோவாப்பரேடிவ் பாங்குடையன வாகவும் இருத்தல் வேண்டும்,

ஏற்றுமதி சம்பந்தமாயின் 180 நாட்களில் முதிர்வனவாகவும், பிறவாயின் 90 நாட் களில் முதிர்வனவாயும் இருக்கவேண்டும்.

17 (2) (b) : ஷெ நிபந்தனைகளுடன் கூடிய விவசாய நடவடிக்கை, மாகூல் விற்பனை சம்பந்த மானவை, 15 மாதங்களில் முதிரவேண்டும்.

17 (2) (c) : இந்தியாவில் எழுதப்பட்டு, இந்தியாவிலேயே செலுத்தப் படுவனவாகவும், ஷெடியூல் பாங்கு கையொப்ப முள்ளனவாகவும், அரசாங்க செக்கூரிட்டிகளை வைத்திருப்பது அல்லது வியாபாரம் செய்வது சம்பந்தமாகவும், 90 நாளில் முதிர்வனவாயும் உள்ள உண்டியல், புரோநோட்டுகள்,

17 (3) (b) : சர்வதேசப் பணநிதியின் அங்கமான அயல் நாட்டில் எழுதப்பட்ட வாணிக, கருவூல உண்டியல்கள், ஏற்றுமதி சம்பந்தமாயின் 180 நாட்களிலும், பிற 90 நாட்களிலும் முதிரவேண்டும்.

இப்படி மறுகழிவுக்கு வருவன அன்றி, பாங்குக்கடன் பண நிர்வாகக் காரணத்துக்காக அவசிய மேற்படின் மேற்கண்ட விதிகளை அனுசரிக்காது நேரடியாக உண்டியல்களையும் புரோ நோட்டுகளையும் வாங்கலாம் (செக்ஷன்-18).

அடுத்தபடி, கடன் (advance) சம்பந்தமான விதிகள் யாவை எனப் பார்ப்போம்.

**பணம் வாங்கத் தக்க ஈடுகள்**

கீழ்க்கண்ட ஈடுகளின் மேல் 90 நாட்களுக்கு மேல் நீடிக்காத கடன் ஷெடியூல் பாங்குகளுக்கும், இராச்சியக் கூட்டுறவு பாங்குகளுக்கும், நிதிக் கார்ப்பரேஷன்களுக்கும் தரலாம் :

17 (4) (a) டிரஸ்டிகள் முதலிட அனுமதிக்கப்பட்ட பங்குகள், நிதிகள், செக்கூரிட்டிகள் (நகராச் சொத்துகள் தவிர).

17 (4) (b) பொன், வெள்ளி, அவைகளுக் குரிமை தரும் டாக்குமெண்டுகள்.

17 (4) (c) அரசாங்க உத்திரவாதமுள்ள அல்லது ரிசர்வு பாங்கு மறுகழிவுக்குரிய மாற்று உண்டியல்கள், புரோநோட்டுகள்.

17 (4) (d) ஷெட்யூல் அல்லது இராச்சியக் கூட்டுறவு பாங்குகள் தம்மிடம் வந்த, உண்மையான வாணிகவர்த்தகவிற்பனை சம்பந்தமான உரிமை தரும் டாக்குமெண்டுகள், ஈடான பாங்குப் புரோநோட்டுகள்.

தவிர, ஏற்றுமதி சம்பந்தமான உண்டியல் இருந்தால், அதன் அடிப்படையில் புரோநோட்டின்பேரில் பணம் பெறலாம் 17 (3A).

தவிர, கடன் பண நிர்வாகக் காரணத்துக்காக நேரடியாகப் பாங்கு போதுமானதெனக் கருதும் ஈட்டின் மேல் கடன் தரலாம் (18 (1) 3).

இப்படிப் பாங்குகளின் மூலமாகவும், நேர்முகமாகவும் மறுகழிவு செய்யவும் கடன் தரவும் அனுமதித்ததன் நோக்கம் ரிசர்வு பாங்கு கேவலம் ஒரு கட்டுப்பாடு அதிகாரியாக மட்டுமில்லாது பொருளாதார நலத்தைக் கருதி வசதி செய்யும் நிலையமாகவும் இருக்க வேண்டுமென்பதே யாகும். நடைமுறையில் கடன்கள் 17 செக்ஷன் கீழ்; பெரும்பாலும் அரசாங்கச் செக்கூரிடி, வியாபாரிகள் புரோநோட்டின் அடிப்படையில் எழும் பாங்குப் புரோநோட்டுகள், ஏற்றுமதி அடிப்படையில் வரைந்த புரோநோட்டுகள் ஆகியன ஈடு பெற்றுக் கடன் தரப்படுகிறது. கிடங்குவசதி இல்லாததினால் 17 (4) d வகை அற்பம்.

அடுத்தபடி எவ்வளவுதூரம் இந்தக் கடன் வசதிகள் பயன்படுத்தப்பட்டன வென்பதைப் பார்ப்போம்.

ரிசர்வு பாங்கு நிறுவி நெடுங்காலத்துக்குப் பின்னும் அதன் வசதிகள் பயன்படுத்தப்படவில்லை என்பதை அவை காட்டுகின்றன. 1948-49 வரையில் கடன் வாங்குவது அற்பமாக இருந்திருக்கிறது. மறுகழிவுத் தொகைகள் நெடுக அற்பமாகவே இருந்தன. 1949ல்தான் அட்வான்சு 636 லட்சம், கழிவு 213 லட்சம். 1951-52க்கு மேல்தான் இரு தொகைகளும் குறிப்பிடத்தக்கன வாயுள்ளன. இதனால் தெரியக் கிடப்பது, ரிசர்வு பாங்கின் வட்டி வீதம் சக்தியுள்ள ஒரு பணக்கட்டுப்பாட்டுக் கருவியாக இருக்கவில்லை என்பதே. பாங்கு வீதம் நவம்பர் 1935இல் $3\frac{1}{2}$% லிருந்து 3% ஆகக் குறைக்கப்பட்டது. நவம்பர் 1951இல் மீண்டும் $3\frac{1}{2}$% யாக உயர்ந்தது. மே 1957இல் 4% ஆனது. ஆகவே, பாங்கு வீதம் இந்தியாவில் அடிக்கடி மாற்றப்படவில்லை. ஆயினும், ஏன் வசதிகள் 1952க்கு முன் ஆளப்படவில்லை?

பாங்குகள் ரிசர்வு பாங்கிடம் செல்லாதது அறியாமையாலோ அசந்தையாலோ அன்று. உண்மைக் காரணங்கள் வேறு. முதலாவதாக யுத்தத்துக்குப் பின் பாங்குகளிடம் ஏராளமாக நீர்மைச் சொத்து இருந்தது. கையில் நிறைய ரொக்கம் இருந்ததோடு நிறைய அரசாங்கச் செக்கூரிட்டிகள் இருந்ததால் அவைகளை விற்று வேண்டிய ரொக்கத்தை ரிசர்வு பாங்கிடம்

அல்லது இம்பீரியல் பாங்கிடம் பெற முடிந்தது. விதிவிலக்கான சூழ்நிலைகளில்தான் கடன் வாங்க வேண்டியிருந்தது. ஆயினும் 1952க்குப் பின் மேன்மேலும் ரிசர்வு பாங்கின் உதவியை நாடலாயின. காரணங்கள் உண்டு. ஒன்று, ரிசர்வு பாங்கு 1951லிருந்து பாங்கு வீதத்தை உயர்த்தியபோது இனிப் பொதுவாகச் செக்கூரிட்டிகளைத்தான் வாங்கப் போவதில்லை என்றும், அவைகளின்மேல் பாங்கு வீதத்தில் கடன் மட்டும் தரப்போவதாகவும் கூறியது. உண்டியல் அங்காடியை வளர்க்க ரிசர்வு பாங்கு அநேக தூண்டுதல்கள் தந்தது.

இரண்டாம் காரணம், இம்பீரியல் பாங்கின் செல்வாக்கும் நடவடிக்கையும் ஆகும். ரிசர்வு பாங்கு 1935இல் வட்டியை 3½க்கு உயர்த்தியபோது இம்பீரியல் பாங்கு தன் அழைப்புக் கடன் வீதத்தை 3% ஆக்கிப் பாங்குகளைக் கவர்ந்தன. இப்படியாக மற்றொரு முறையும் நடந்தது. ரிசர்வு பாங்கு மைய பாங்காகையினால் அழைப்புக் கடன் அங்காடியில் புக முடியாது. நேரடிக் கழிவு முறையையும் ஆளமுடியாதிருந்தது. ஏனெனில், அதன் வீதம் தண்டனை வீதம்.

மூன்றாவது, இந்தியப் பண அங்காடி பிளவுபட்டதாக உள்ள நிலையில் அதன் செல்வாக்குக்கு அப்பாற்பட்டு இந்திய முறை பாங்குகள் இருந்தன. 1937 ஆகஸ்டில் சுதேச பாங்கர்களைப் பிணைக்கக் கருதி ரிசர்வு பாங்கு வெளியிட்ட திட்டத்தை அவைகள் புறக்கணித்தன. பாங்கின் நிபந்தனைகள் அவைகளுக்குப் பிடிக்கவில்லை. 1938இல் குறைத்த வீதத்தில் மறுகழிவு செய்வதாகக் கூறியதும் பயன்படவில்லை. விவசாய உண்டியல்களைப் பண லேவா தேவிக்காரர்கள் ஒரு ஷெடியூல்டு பாங்கு மூலம் மறுகழிவு செய்துகொள்ளலாம். ஆனால், குறைந்த வீதத்தின் நன்மை விவசாயிக்குச் செல்ல வேண்டுமெனப்பட்டது. இதை லேவா தேவிக்காரர்கள் விரும்பவில்லை. இப்படியாக உண்டியல் பேரம் பேரளவில் ரிசர்வு பாங்குக்கு வெளியில் நடைபெற்றது.

நான்காவது, தகுதியுடைய உண்டியல்களின் அருமையைக் கூறலாம். மேனாட்டு முறையை நினைத்து ரிசர்வு பாங்குக்கு மறுகழிவு அதிகாரம் தரப்பட்டது. ஆனால், இந்தியாவில் உண்டியல் கழிவு முறை வேரூன்றவில்லை. சட்டம் வகுத்த அளவுக்குத் தகுதிகளையுடைய உண்டியல்கள் கிடைப்பதில்லை. தவிர, தொழில் துறையோர் பணம் வேண்டுமானால் மிகைப்பற்று (overdraft), ரொக்கக் கடன் (cash credit) முறையையே ஆண்டனர். இம்பீரியல் பாங்கு இம்முறையிலேயே உதவி

செய்தது. அதன் கழிவு முறைக்கடன், வைப்புகளில் 5% கூட இல்லை. மற்ற ஷெடியூல்டு பாங்குகளில்கூட 7%க்கு மேல் இல்லை. பாங்குகள் அரசாங்கத் தாள்களில் முதலீடு செய்வதையே விரும்பின. கருவூல உண்டியல்களையுங்கூட ரிசர்வு பாங்கில் கழிவு செய்வதில்லை. செய்வது பலவீனமாகப் பண அங்காடியில் கருதப்படும் என்று அஞ்சின. இறக்குமதி அயல்நாட்டு உண்டியல்கள் பெரும்பாலும் ஸ்டெர்லிங்கில் எழுதப்படுவதால் இந்திய அங்காடிக்குப் பயன்படுவதில்லை. மத்தியக் கிழக்கு (Middle East) நாடுகளின் உண்டியல்கள் தாம் கிடைக்கின்றன. ஏற்றுமதி உண்டியல்களும் (ஏற்பகங்கள் இந்தியாவி லில்லாத நிலையில்) வெளிநாட்டில் செலுத்துப் பொறுப்புடைய வையாக இருக்கின்றன; இந்தியாவில் கழிவு செய்ய முடிவதில்லை. முன்ஒப்புதல் கடன்வசதி (confirmed credit) யின்கீழ் வரையப்படும் ஏற்றுமதி உண்டியல்களை இந்தியாவிலுள்ள மாற்றுப் பாங்குகள் (Exchange Banks) வெளிநாட்டுப் பாங்கின் ஆளாக்க் கழிவு செய்கின்றன, ஆகவே அவைகளுக்கு அனுப்பித் தம் பணத்தை மீட்டுக் கொள்கின்றன. இறக்குமதி உண்டியல்கள் பெரும்பாலும் D/P (ரொக்கம் கட்டினால்தான் டாக்குமெண்டு பெறும் உரிமை தரும்) வகையைச் சேர்ந்தன. உள்நாட்டு வியாபாரத்தில் வர்த்தகர்களே ஒருவருக்கொருவர் கடன் கொடுத்துக் கொள் கின்றனராதலால் உண்டியலுக்கு வாய்ப்பில்லை. உண்டிகள் (hundis) இக்கடனுக்காகவோ, பணவசதிக்காகவோ வரையப் பட்டவையாக இருக்கலாம். நாட்டு மொழியில் எழுதும்போது சட்டப்படி இருக்கவேண்டிய அம்சங்கள் இல்லாது போகலாம். கால உண்டியல்களின் மேல் விழும் ஸ்டாம்புத் தீர்வை (stamp duty) கூட ஒரு தடையாக இருக்கும். சில உண்டியல் வகைகள் கடின நிபந்தனை (உதாரணமாக ஷாஜோக் உண்டி— பெறவேண்டியவன் உரிமையை விசாரித்துச் செலுத்த வேண்டி யவை; ஜெக்காமி உண்டி — பொருளுக்கு எழுதியவன் பொறுப்பாளியாகுபவை) உடைமையால் செலாவணியைக் குறைக்கின்றன. அநேக உண்டியல்களின் கையொப்பதாரர் களின் நிலையை அறிவது கடினமாக இருக்கும். முல்தானி களின் உண்டிகளே ஓரளவு நல்ல செலாவணியுடையவை. இவை பெரும்பாலும் பணவசதி (accomodation) உண்டிகள்.

**உண்டிய லங்காடித் திட்டம் :**

இவ்விதக் காரணங்களால் ரிசர்வு பாங்கிடம் பாங்குகளின் அன்றாடத் தொடர்பு நெருக்கமில்லாது போகவே, அங்காடி

நிலையை ரிசர்வு பாங்கு நேரடியாக உணர்வதற்கு வாய்ப்பில்லாமல் போய்விட்டது. மேனாடுகளில் மறு கழிவே அங்காடியின் நாடி. இதை உணர்ந்தே மைய பாங்கு நடவடிக்கை எடுக்கும் இந்தியாவிலும் இவ்வித நிலையை உண்டாக்க பாங்கு முயன்றது. நவம்பர் 1951இல் வட்டியை 3½% ஆக உயர்த்தியபோது, நேரடியாக அரசாங்கத் தாள்களை வாங்குவதை நிறுத்தியது. இது உண்டியல்களைக் கழிவு செய்ய வேண்டிய அவசியத்தைப் பாங்குகளுக்கு உண்டாக்குமென்று கருதப்பட்டது.

ஜனவரி 1952இல் ஓர் உண்டியலங்காடித் திட்டம் (bill market scheme) வெளியிடப்பட்டது. ஷெட்டியூல்டு பாங்குகளின் வாடிக்கைக்காரர்கள் தந்த தவணை உண்டியலையும் புரோ நோட்டுக்களையும் ஈடுகாட்டி அந்தப் பாங்குகள் புதுப் புரோ நோட்டுக்கள் எழுதிக்கொடுத்தால், ரிசர்வு பாங்கு கடன் தர ஒப்புக்கொண்டது. பாங்குகள் கடன், மிகைப்பற்று, ரொக்கக் கடன் ஆகிய வழிகளில் உதவி செய்வதுதான் வழக்கமாக இருந்தபடியால் பாங்குகள் அவைகளைத் தவணைப் புரோ நோட்டுக்களாக மாற்றி ரிசர்வு பாங்கில் ஈடுவைத்துக் கடன் பெற இவ்வசதி செய்யப்பட்டது. ஊக்க மளிப்பதற்காகப் பாங்கு வீதத்துக்கு ½% குறைவான வட்டி வாங்கவும், கால உண்டியலாக மாற்றுவதற்குப் பிடிக்கும் ஸ்டாம்புத் தீர்வையில் பாதியைத் தர தானேவும் ஒப்பியது. ஆனால், ஒருபோது குறைந்த பட்சம் 25 இலட்சம் கடன் தேவைப்படவேண்டும்.

இத்திட்டம் முதலில் 10 கோடிக்குக் குறையாத வைப்புடைய பாங்குகளுக்கு மட்டுமே என வரையறை இருந்தது. பெரிய பாங்குகளே நன்மை பெறுகின்றன என்ற குறையை நீக்க ஜூன் 1952இல் 5 கோடி வைப்புடைய பாங்குகளும், ஜூலை 1954இல் எல்லா லைசென்சுடைய பாங்குகளும் ஷெடியூல்டு பாங்குகளும் இத் திட்டத்தின் கீழ் கொண்டுவரப்பட்டன. குறைந்த பட்சத் தொகையும் 10 லட்சமாக்கப்பட்டது. ஃபெப்ருவரி 1957இல் 5 லட்சமாக்கப்பட்டது. தனி உண்டியல் மதிப்பு 50,000 ரூபாய்க்குக் குறைக்கப்பட்டது.

1958இல் ஏற்றுமதி உண்டியல்கள் இத்திட்டத்தின் கீழ் வந்தன. 1959இல் ஜனவரியில் ஸ்டாம்பு தீர்வையில் முக்கால் பங்கை ரிசர்வு பாங்கு ஏற்றது. குறைந்த பட்சக் கடன் ரூ. 2 லட்சமும் உண்டியல் மதிப்பு ரூ. 20,000 மும் ஆக நிர்ணயிக்கப்பட்டன. அக்டோபரில் தனி உண்டியல் மதிப்பு ரூ 10,000 ஆனது. குறைந்த பட்ச அட்வான்சு ஒரு லட்சம் ஆனது.

ஆயினும் திட்டம் வெகுவாகப் பயன்படுத்தப்படவில்லை. முக்கிய காரணம் ஏற்றுமதி செய்வோர் உண்டியல் அடிப்படையில் புரோநோட்டு எழுதித் தரவிரும்பமில்லை. ஆகவே 19o2இல் பாங்குகள் தம்மிடம் ஏற்றுமதி உண்டியல்கள் இருக்கும் என்று எழுதிக் கொடுத்த புரோநோட்டின் மீது ரிசர்வு பாங்கு கடன் கொடுக்க அனுமதிக்கப்பட்டது. இதனால் ரிசர்வு பாங்கு 1963 மார்ச்சு மாதத்தில் (Export Bills Credit Scheme) ஒன்றைத் துவங்கியது. இது விரைவில் செல்வாக்கடைந்தது. திட்டத்தின் வெற்றியை அறிய புள்ளிகளைப் பாருங்கள்.

## ரிசர்வு பாங்கிடமிருந்து ஷெடியூல்டு பாங்குகளின் கடன் பற்று (லட்சம் ரூ.)

| | Sce. 17 (14) a | 17 (4)c | மொத்தம் |
|---|---|---|---|
| 1951 | 7,659 | — | 7,659 |
| 1955 | 19,994 | 22,544 | 42,638 |
| 1960 | 87,594 | 19,414 | 1,07,082 |
| (17(2) a, 17 (4)b, 17(8), 18(1) பிரிவுகளின் கீழ் ஒன்றுமில்லை.) | | | |
| 1966–7 | 64,108 | 7,318 | 1,10,009 |

1960இல் காணும் தொகையை அடைவதற்குக் காரணமாயிருந்தவை பலவற்றுள் இந்த உண்டியல் அங்காடித் திட்டமும் ஒன்று. 1955இல் 17 (4)c யின் கீழ் பற்று 17(4)a ஐ விட ஏற்றமாயிருந்ததுக்குக் காரணம் இத் திட்டம் எனலாம். முன்பு பருவ காலத்தில் மட்டும் கடன் வாங்குவது வழக்கம். இப்போது பொருளாதாரத் திட்டத்தின் காரணமாக ஆண்டு முழுவதும் பரவலாக வாங்கப்படுகிறது. ஆயினும் பருவத் தன்மை மறையவில்லை. ரிசர்வு பாங்கு ரிசர்வுத் தேவையை உயர்த்தியதும் கடன் அதிகரிப்புக்கு ஒரு காரணம் எனலாம்.

சட்டத்தில் காணும் சில வசதிகள் ஆளப்படாமலிருப்பதை நோக்குக. காரணம் நிபந்தனைகள் அவ்வளவு கண்டிப்பானவை. திட்டம் முன்னேற்றம் காட்டிய போதிலும் இயல்பான உண்டியல் அங்காடி தோன்றவில்லை. பிரதேச வாரியாக உண்டியல்களின் தன்மை வேறுபட்டது. ரொக்கக் கடன் (Cash Gredit) ஆட்சி ஒரு தடை. பாங்குகள் உண்டியல்களை அழைப்பு அங்காடியில் விற்றன. விடுதலைப் பணத்தை அழைப்பங்காடியிலிருந்து பெயர்த்து உண்டியல் அங்காடியில் ஆளும்படிச் செய்யவேண்டி ரிசர்வு பாங்கு 1970இல் ஒரு புதுத் திட்டம் கொண்டு வந்தது.

நல்ல ஆசாமிகளுக்கிடையே விற்பனையில் தோன்றும் உண்டியல் களைச் செலாவணியில் புகுத்துவது நோக்கம். முதிர்வுக் காலம் தக்கபோது 120 நாட்களாக இருக்கும். அனுமதிபெற்ற ஷெட் யூல்டு பாங்குகள் ஏற்ற உண்டியல்களுக்கு புணர் நிதி (refinance) ரிசர்வு பாங்கு தரும். முதிர்வு இன்னும் 70 நாட்களுக்கு மேற் படாதபோது புனர்நிதி தரப்படும். (ஏற்றுமதி உண்டியல்கள் விஷயத்தில் 180 நாட்கள்). துவக்கத்தில் இத்திட்டம் நான்கு மாநகரங்களுடன் நிறுத்திக் கொள்ளப்பட்டது. 1952 திட்டம் பண நெருக்கடியைப் போக்க ஏற்பட்டது. இத்திட்டம் விடுதலைப் பணத்தைப் பண அங்காடியில் புழங்கச் செய்ய ஏற்பட்டது.

### பாங்கு வட்டி

துவக்கத்தில் ரிசர்வு பாங்கு ஒரே வீதத்தில் (பாங்கு வீதம்) கடன் தந்தது. (அரசாங்கங்களுக்கு மட்டில் கைமாற்றுப் பணம் 1½% குறைவு.) பின்னர் விவசாயத்துக்குச் சிறு சலுகை தந்தது. பின்னர் சில முன்முறைப்பாடு (priority) பகுதிகளுக்கு (உதார ணம், ஏற்றுமதி)ச்சலுகை. இப்போது அதனதன் நீர்மை விகிதத் துக்கேற்பப் பாங்குகளிடையே வட்டி வேறுபாடு செய்யப்படு கிறது.

பாங்கு வீதம் செல்வாக்குடையதாக வேண்டின் பாங்குகள் பேரளவுக்கு மைய பாங்கை நாடவேண்டும். இந்திய பாங்குகள் நெடுநாள் நெருங்கவில்லை. 1938-9இல் 2 லட்சம்; 1947-8இல் 21 லட்சம்தான், காரணங்கள் பல: (1) வழக்கமான தயக்கம் (2) எளிதில் அங்காடியில் பணம் கிடைத்தமை (3) அரசு பாண்டுகள் ஏராளமா யிருந்தமையால் உண்டியல் கழிவு செய்ய வேண்டிய அவசிய மில்லாமல் இவைகளைப் பாங்குகள் விற்றன. சிலபோது இவைகளின் பேரில் ரிசர்வு பாங்கில் கடன் வாங்கினு லும் தொகை அற்பம்.

1951இல் பாங்கு வீதம் உயர்த்தப்பட்டபோது, இனிப் பாங்கு களின் பருவகாலத் தேவைக் காரணமாகவும்கூட பாண்டுகளை வாங்கப்போவதில்லை என்றும், தகுதியுள்ள செக்கூரிட்டிகள்மீது அட்வான்ஸ் தரப்படும் என்றும் வெளியிட்டது. ஆகவே பாங்கு கள் இம்முறையில கடன்பெறவேண்டியது அவசியமாகிவிட்டது. உண்டியல் அங்காடித் திட்டமும் உதவியது. பாங்கு வீதமாறு தல்கள்: 1931—நவம்பர் 1951—3%, 1951—3½%, மே 1957—4%, ஜனவரி 63—4½%, செப். 64—5%, பிப்ரவரி 65—6%, மார்ச் 68-5%, ஜனவரி 71—6%, மே 73—7%, ஜூலை 74—9%. பாங்கு வீதத்தின் முக்கியத்துவம் அது பிற அங்காடி வீதங்களுக்கு வழிகாட்டியா

யிருப்பது. 1951 முதல் இவ்விணைப்பு இருந்து வந்துள்ளது. ஆனால் சேமிப்பு முதலீடுகள் உரிய அளவுக்குத் தூண்டப்படாத நிலையில் ரிசர்வு பாங்கானது கடன், வைப்பு வீதங்களையும் நிர்ணயிக்கலாயிற்று.

### வெளி அங்காடி நடவடிக்கை (Open Market Operation)

இந்தியாவில் மறுகழிவு நடவடிக்கை சக்தி வாய்ந்ததாக இல்லையாதலால் வெளியங்காடி நடவடிக்கை முக்கியத்துவம் உடையதாக இருக்கிறது. இது எவ்வளவு தூரம் சக்தி வாய்ந்தது என்று பார்க்கவேண்டும்.

ரிசர்வு பாங்கு எந்தச் சொத்துகளில் பேரம் செய்யலா மென்று சட்டத்தில் காணப்பட்டிருக்கிறது. இரண்டு வழிகளில் ரிசர்வு பாங்கு நடவடிக்கை எடுக்கலாம். (1) வணிக உண்டியல் கள், புரோநோட்டுகள், கருவூல உண்டியல்கள், அரசாங்க செக்யூரிட்டிகள் ஆகியவைகளை வாங்கலும் விற்றலும். இதற்கு அதிகாரம் பிரிவு 17(2), 17(3), 17(8)களில் இருக்கிறது. (2) பொன் நாணயம், பொன்கட்டி, அயல்நாட்டுச் செலாவணி, அயல்நாட்டு அரசாங்கச் செக்யூரிட்டி ஆகியவற்றை வாங்கலும், விற்றலும் இதற் கதிகாரம் பிரிவு 17(12), 17(12a)களில் உள்ளது. முதல் வகைச் சொத்துகளைப் பார்க்கும்போது இவை பெரும் பான்மை குறுங்காலச் செக்யூரிட்டிகளாகஇருக்கின்றன, இதனால் ரிசர்வு பாங்கின் நீர்மை காக்கப்படுகிறது. ஆனால் பணப்பெருக்கம் செய்ய, இவ்வகைச் சொத்துகள் அங்காடியில் கிடைக்கவேண் டும். பணத்தைக் குறைக்க ரிசர்வு பாங்கில் இவ்வகைச் சொத் துகள் இருக்கவேண்டும். இரண்டாம் வகைக்கும் இந்தக் குறை பாடு பொருந்தும். தவிர அயல்நாட்டுச் செலாவணி கிடைக்கும் நேரமும் அளவும் பாங்கின் கையில் இல்லை; இவை வாணிபத்தைப் பொறுத்தன. இப்போது மாற்றுக் கட்டுப்பாடு (exchange control) நடைமுறையில் இருப்பதால் ரிசர்வு பாங்கு எல்லா அயல்நாட்டுச் செலாவணிகளையும் பெறவே செய்கிறது. விற்பது அரசாங்கத்தின் தேவையைப் பொறுத்தது. தவிர வணிக பாங்கு களுக்கு விநியோகம் செய்ய அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ள அள வுக்கு அயல்நாட்டுச் செலாவணி வெளியங்காடி நடவடிக்கையில் முக்கியமாகாது. ஆகவே, உண்மையில் ரிசர்வு பாங்கின் வெளி யங்காடி நடவடிக்கை பெரும்பாலும் அரசாங்க செக்யூரிட்டி களில் தான் இருந்து வருகிறது. உண்டியலங்காடி முதிர்ச்சி யில்லாததனால் உண்டியலில் கூட நடவடிக்கை அதிகமாக இல்லை.

ஆனால் ரிசர்வு பாங்கு பணத்தைக் குறைக்க விரும்பின் வேண்டிய பொருள் வசதி இருக்கிறது. அதன் பணப் பெருக்கச் சக்தி அதனுடைய பாங்கு இலாக்காவின் கையிலுள்ள பாங்குகள் வைப்பையும், அரசாங்க வைப்பையும், நோட்டு வெளியீட்டிலாக்காவின் நோட்டு வெளியீட்டுச் சக்தியையும் பொறுத்தது. இவ் விதச் சக்தி ரிசர்வு பாங்குக்குப் போதுமான அளவு இருக்கிறது. ஆனால் ரிசர்வு பாங்கின் நடவடிக்கைகள் பண அங்காடி நிலையை மட்டும் கருதி எடுக்கப்படுவதில்லை; அரசாங்கத்தின் பொதுத் துறை கடன் நிர்வாகத்தின் தேவைகளையும் கருதி எடுக்கப்படுகின்றன. அரசாங்கத்துக்குப் பாங்கராக இருப்பதனால் அது கடன் வாங்குவதற்கு அல்லது கடனை மாற்றுவதற்கு வேண்டிய சூழ்நிலையை உண்டாக்கக் கடமைப்பட்டுள்ளது. ஆனால் அரசாங்கமும், தன் கடன் பாபத்து நடவடிக்கைகளைப் பண அங்காடி நிலையை அனுசரித்தே எடுக்கிறதென்பதையும் கூறவேண்டும். அவசியமான போது பாங்கு தலையிட்டு பாண்டுகளின் மதிப்பைக் காக்கிறது. அவ்வப்போது விலைகளை ஏற்றிப் பிரகடனம் செய்கிறது. இது மக்களிடம் பாண்டுகளின் பால் நம்பிக்கை ஏற்படச் செய்கிறது. சில போது ஒரு உண்டியலை விற்று மற்றொன்றை வாங்குவதும் (switch) உண்டு. இது புரோக்கர்கள் மூலம் நடைபெறும்.

வெளியங்காடி நடவடிக்கையைப் பணக் கட்டுப்பாட்டுக் கருவியாக ஆள வேண்டுமானால் (1) அரசாங்க செக்கூரிட்டிகளுக்கு ஒரு பரந்த உயிருள்ள அங்காடி வேண்டும். (2) பாங்குகள் ஒரு குறிப்பிட்ட விகிதத்துக்கு மேலோ குறைந்தோ ரொக்க ரிசர்வு வைத்திருக்கக்கூடாது. (3) வேறு வழியில் மைய பாங்குப் பணம் பாங்குத் திட்டத்துக்குக் கிடைக்கக் கூடாது. உதாரணமாக, மறு கழிவு மூலம், கடன் வாங்குவது மூலம் ரொக்கம் பெற முடியாமலிருக்க வேண்டும். மூன்று நிபந்தனைகளும் ஒரேபோது அவசியமாகக் காணப்பட வேண்டியதில்லை. (1) பூர்த்தியானால் பிற அவசியமில்லை. (2) பூர்த்தியாகாவிட்டாலும் கேடில்லை. (3) பூர்த்தியானால் சிறு அளவு விற்பனையும் பாங்குகளைப் பாதிக்கவல்லது. மூன்றும் பூர்த்தியானால் உத்தமம். இந்தியாவில் முதலிரண்டும் பூர்த்தியாகவில்லை. அங்காடி குறுகியது. ஆகவே பேரளவில் ரிசர்வு பாங்கு விற்கவோ வாங்கவோ செய்தால் ஒரு நெருக்கடி ஏற்பட்டு விடும்.

ரிசர்வு பாங்கு இவ்வெளி அங்காடி முறையைப் பணக்கட்டுப் பட்டுக்கு ஆள முடியாத நிலையில், பொறுக்குக் கடன் கட்டுப்பாடு

போன்ற முறைகளைப் பெரிதும் ஆள வேண்டியிருக்கிறது. ஆள முடியாமைக்குக் காரணம் பற்றுக்குறை நிதிமுறை (deficit financing) பாண்டுகள் மேலும் மேலும் விற்க வேண்டிய நிலையிருந்து வந்ததாகும். பாங்கு தன் அறிக்கைகளில் வெளி அங்காடி பேர நடவடிக்கை விவரங்களைப் பூரணமாக பிரசுரிப்பதில்லை. சேகரித்த புள்ளிகளிலிருந்து புலப்படுவது ஆண்டுதோறும் விற்பனையே அதிகமாகக் காணப்படுகிறது.

**மாறும் ரிசர்வு விகிதங்கள்**

முன்பு 42 (1) பிரிவின் கீழ்ப் பாங்குகளின் ரிசர்வு தினமும் தேவை வைப்புக்கு 5% என்றும் தவணை வைப்புக்கு 2% என்றும் இருந்தது. 1956 ஆண்டுச் சட்டத்திருத்தம் 2% ஐ 8% வரைக்கும் 5% ஐ 20% வரைக்கும் மாற்ற ரிசர்வு பாங்குக்கு அதிகாரம் தந்தது. தவிர இவ்வீதம் வாரச் சாரசரி வைப்புக்கே கணிக்கப் பட்டது. 1962இல் வைப்புவகை வேறுபாடின்றிப் பொதுவாக 3% விதிக்கப்பட்டது. 3% to 15% வரை மாற்ற அதிகாரம் வழங்கப் பட்டது. இந்த அதிகாரம் 1960இல் முதன் முதல் ஆளப்பட்டது.

இந்த ரிசர்வு வீத மாறுதல்களைச் சாமளிக்கப் பாங்குகள் பாண்டுகளை விற்கும் பழக்கம் தோன்றியது. இதுவரை பிரிவு 24 இன் கீழ் மொத்த வைப்புப் பொறுப்புக்கு எதிராக 20% நீர்மை சொத்துக்கள் (ரொக்கம், பொன், வில்லங்க மில்லாத அனு மதித்த செக்கூரிட்டிகள்) இருக்கவேண்டும் என்றிருந்ததால் ரிசர்வு மற்றப்பட்டபோது, பாண்டுகள் விற்கப்பட்டன. ஆகவே 1962இல் நீர்மை விகிதம் 25% ஆக்கப்பட்டது. (42வது பிரிவு அன்னியில்)

ரிசர்வு விகிதத்தை உயர்த்தியபோது பாங்குகள் பாண்டுகள் மூலம் ரிசர்வு பாங்கிடம் கடன் பெற்று, ரிசர்வு பொறுப்பை நிறைவேற்றத் தலைப்பட்டன. இதைத் தடுக்க வேண்டின் பாங்கு வீதத்தை உயர்த்தவேண்டும். இப்படிச் செய்ய விரும்பவில்லை. ஆகவே 1960-64 இடையில் படிப்படி வட்டிவீதமுறை (slab rate System) நிறுவப்பட்டது. பாங்கு ஒவ்வொன்றுக்கும் ஒரு ஒதுக்கு (quota), தந்து, எச்சக் கடன் பற்றின்மேல் இந்த படிப்படி வீதம் வாங்கப்பட்டது. இதுவும் போதுமான அளவுக்குத் தடையாக இருக்கவில்லை. உயர்வீத வட்டி, வாடிக்கைக்காரர் தலையில் விழுந்தது, ஆகவே 1964 செப்டம்பரில் வழுக்கு வீதமுறை (Sliding Scale) நிர்ணயிக்கப்பட்டது. ஒரு நிகர நீர்மை விகிதம் (net liquidity ratio) நிர்ணயிக்கப்பட்டது. (28%). நீர்மை இதற்குக் குறைந்தால் ½% ஏறும். பின்னர் நீர்மை விகிதம் 32%

ஆக்கப்பட்டு, வட்டி ஏறுவது 1% ஆனது. ரிசர்வு வீத மாற்றலின் ஒரு வகையே நீர்மை விகித மாற்றல் என்பதை நோக்குக.

## அறிவுறுத்தல் (Moral Suasion)

ரிசர்வு பாங்கு இம்முறையை அடிக்கடி ஆள்வதுண்டு. அவ்வப்போது பொதுப்படவோ, தனிவகைக் கடன் பற்றியோ ரிசர்வு பாங்கு கடிதங்கள் அனுப்புகிறது. நேர்முகக் கூட்டப் பேச்சும் உண்டு. சௌசன்யமான உறவு ஏற்பட்டுள்ளது. 15 பெரிய பாங்குகளே முக்கியாதலால் அவைகளுடன் தொடர்பு போதுமானதாக உள்ளது.

பாங்குக் கம்பெனிச் சட்டம் பாங்குகளைக் கட்டுப்படுத்த அநேக அதிகாரங்களைக் கொடுத்திருக்கிறது.

## முடிவுரை

ரிசர்வு பாங்கின் நடவடிக்கை எப்படி இருக்க வேண்டுமென்பதை நிர்ணயித்துக் கூறுவது முடியாது. சில முரண்பட்ட அம்சங்கள் ஒரேபோது பொருளாதாரத்தில் அதன் கவனத்தைக் கவர்வதாகக் காணக்கூடும். பண வீக்க அழுத்த நிலையைச் சமாளிக்க வேண்டியிருக்கலாம். அதே போது உற்பத்தியைப் பெருக்கப் பணப்பெருக்கம் அவசியமாயிருக்கலாம். ஆனால் அனாவசியமான காரியங்களுக்குப் பணம் செல்லக்கூடாது. இந்த நிலையில் என்ன செய்வது? ரிசர்வு பாங்குக்கு ஒரு மைய பாங்குக்கு வேண்டிய எல்லா ஆயுதங்களும் இருக்கின்றன. இந்த முறையில் பிற மைய பாங்குகளைவிட அதன் நிலைமை சிறப்பாயுள்ளது.

பாங்கு வீத மாறுதல் வழியாக அதிகாரத்தைப் பயன்படச் செலுத்துவது முடியாத நிலை இந்தியாவில் காணப்படுகிறது. வர்த்தக உண்டியல்கள் இல்லாத சூழ்நிலையில் பாங்கு வீதம் ஒரு கழிவு வீதமாகப் பயன் அளிக்க முடியாதிருக்கிறது. பாங்கு வீதம் கடன் வட்டி வீதமாகவே படன்படக் கூடியதாக உள்ளது. பாங்கு வீதத்தின் பயனைப் பற்றிய பரம்பரைக்கொள்கை அது குறுங்காலப் பணத்தின் பெயர்ச்சியையும், குறுங்கால, நெடுங்கால வட்டிகளின் மட்டத்தையும் நிர்ணயிக்கிறது என்பதும், இவ் வழியாகப் பண்ட இருப்பு வைப்பும், முதலீடும் நிர்ணயிக்கப்படுகின்றன என்பதுமாகும். தவிர, அது அங்காடிக்கு எச்சரிக்கை செய்யும் அறிகுறியாகவும் பயன்படுகிறதென்பர். இந்தியாவில் பாங்கு வீதம் இவ்விதமாகப் பயன்படும் நிலையை

இன்னும் அடையவில்லை. குறுங்கால இயக்கங்களை (movements) அது நிர்ணயிப்பதில்லை. முதலீட்டையும் பாதிக்கவல்லதன்று; ஏனெனில் பெரும்பாலும் முதலீடு இப்போது திட்டத்தின் கீழ்ப் பொதுத் துறையில் செய்யப்படுகிறது. தனியார் துறையின் முதலீடும் அதிகம் பாதிக்கப்படுவதாகத் தெரியவில்லை. தவிர, இத் துறையின் முதலீட்டை முதல் வெளியீட்டுக் கட்டுப்பாடும் (capital issues control), தொழில் துவங்கல் சம்பந்தமான கட்டுப்பாடும் வரையறை செய்கின்றன. பாங்கு வீதம் சிறப்பாகச் சக்தியுள்ள துறை பண்ட இருப்பு (stock) வைப்பது சம்பந்த மானது என்று தெரிகிறது என்று H.V.R. ஐயங்கார் கூறினர். ஆனால் இத் துறையிலும் சக்தி தொழில் துறையோரின் எதிர் காலத்தைப் பற்றிய கருத்தைப் பற்றியது. எனினும் பாங்கு வீதம் யாதொரு பயனும் அற்றது என்று கூற முடியுமா? இந்தியப் பொருளாதாரத்தில் பண ஆட்சிப் பரவப் பரவ, நவீன முறை பண அங்காடி பரவப் பரவ, பணத்தின் அளிப்பிலும் தேவையிலும் மாறுதல்கள் ஏற்படும். இது வட்டி வீதத்தின் சக்தியை அதிகப் படுத்தும். ஆகவே பாங்கு வீதக் கருவியைக் கைவிடவும் முடியாது; சில மேனுடுகளைப்போல் அதை நாம் அடிக்கடி ஆளவும் முடியாது.

சமீபக் காலத்தில் பாங்கு வீதம் ஒரு புறம் ஒதுக்கி வைக்கப் பட்டு, விகிதம் மாற்றும் முறையை ஆளத் துவங்கியுள்ளோம். காரணம் உற்பத்தி பெருகியும் பண்ட விலைகள் விரைவாக ஏறியதாகும். பங்கு அங்காடியில் யூக வாணிபம் தோன்றியது. பணப் பெருக்கத்தால்தான் விலை ஏறி இருக்கவேண்டுமென்ற கருத்தில் இந் நடவடிக்கை எடுக்கப்பட்டது. இந்த நடவடிக்கை ஓரளவுக்கு வெற்றியாகவே தோன்றியது. பாங்குகளின் அமிழ் நீர்மை குறைக்கப்பட்டது. அவைகளின் செக்கூரிட்டி இருப்புக் குறைந்தது. ஆனால் பாங்குப் பணத்தின் அளிப்புக் குறைய வில்லை; இதற்குக் காரணம் பாங்குகள் ரிசர்வு பாங்கிடம் கடந்த ஆண்டுகளிலேயே ஏராளமாகக் கடன் வாங்கிவிட்டிருந்தன.

இந்தச் சூழ்நிலையில்தான் முன்னர்க் கூறிய கோட்டா முறையும் படிப்படி ஏறும் வட்டி வீதங்களும் நடைமுறைக்கு வந்தன.

வெளியங்காடி நடவடிக்கை எடுக்க ரிசர்வு பாங்குக்கு அதிகாரம் இருக்கிறது. எவ்வளவு வேண்டுமானும் எந்த முதிர்வுடைய செக்கூரிட்டிகளையும் வாங்கலாம். செக்கூரிட்டியின் கணியமும் வகையும் இரண்டாம் யுத்த காலத்திலும் திட்டக் காலத்திலும் பெருத்துவிட்டன. பாங்கு போன்ற நிதி நிலையங்

களிடமும் செக்கூரிட்டிகள் போதுமான அளவு பரவி யிருக்கின்றன. ரிசர்வு பாங்கின் வெளியங்காடி நடவடிக்கை அவ்வப்போது சூழ்நிலைக்கேற்ப வெவ்வேறு நோக்கத்துடன் ஆளப்பட்டது. பொதுவாக அது கடன் கட்டுப்பாட்டுக் கருவியாக மட்டும் ஆளப்படவில்லை எனலாம். பருவக்காலப் பணநிலை அதன் ஆட்சியை நிர்ணயித்தது. நவம்பர்-ஏப்ரல் நெருக்கடியில் பாங்கு களுக்கு உதவவும், மே-அக்டோபர் சாதாரணமாதங்களில் பாங்கு களின் பணத்தை முதலீடு செய்ய வசதி செய்யவும் ஆளப்பட்டது. பணக் கட்டுப்பாடு நோக்கமாயின் பிற கருவி களும் பொறுக்குக் கட்டுப்பாடும் (selective control) ஆளப் பட்டன. வெளியங்காடி நடவடிக்கை பெரும்பாலும் அரசாங் கத்தின் கடன் நிர்வாகத்துக்கு உதவும் வகையிலேதான் எடுக்கப் பட்டது. ஆனால் பணத்துறைக் குறிக்கோளுக்கு முரண்பட்ட வழியில் ஆளப்படவில்லை. இந் நடவடிக்கை மூலம் செக்கூரிட்டி விலைகள் பெரும்பாலும் வெற்றிகரமாகக் காக்கப்பட்டன என்று கூறலாம். திட்டங்களின் செல்வாக்கில் பொருளாதாரத்தில் பருவக்காலஅம்சம் குறையும் நிலைவரும். அப்போது வெளியங்காடி நடவடிக்கை கட்டுப்பாடு நோக்குடன் ஆளப்படுமென்று எதிர் பார்க்கலாம். இப்போது கடன் வெளியீடு தேவை குறைவாயுள்ள மே–ஆகஸ்டு மாதங்களில் செய்யப்படுகிறது. ரிசர்வு பாங்கு பெரும் பகுதியை எடுத்துக்கொண்டு பின்னர் வழங்க வேண்டி யிருக்கிறது. பருவக் கால அம்சம் மறைந்ததும் அராாங்கக் கடனை நீடித்த காலத்தில் வெளியிடலாம். அப்போது அரசாங்கத் தேவைக்கு பணத்துறைக் கட்டுபாடு தேவைக்கும் இரண்டுக்கும் பொருந்துமாறு அங்காடி நடவடிக்கை எடுக்கலாம்.

பொறுக்குக் கட்டுப்பாடுகள் இரண்டாம் திட்டக்காலத் தில் அடிக்கடி ஆளப்பட்டு வந்திருக்கின்றன. விவரத்தை முன்னர்ப் பார்த்தோம். இவ்வகைக் கட்டுப்பாட்டின் நோக்கம் பாங்குக் கடனால் பண வீக்கம் எத்துறையிலும் தலைதூக்கா திருக்கச் செய்வதாகும்; மேனாடுகளில் காண்பது போல நுகர்ச்சி உறுதிப் பொருள்களுக்குள்ள தேவையை (பண வீக்கத் துக்குக் காரணமாகாமல் இருக்க)க் கட்டுப்படுத்துவதன்று. இங்குக் கட்டுப்பாடு உற்பத்தியையும் பெயர்ச்சியையும் தாக்காது யூக பேரத்துக்காக இருப்புக் குவிப்பதைத் தடுப்பதாகும். இதற்கேற்ற முறையில் கட்டுப்பாடுகள் அமைக்கப்பட்டன. கடன் கட்டுப்பாடு மூலம் விலைகளை நிலைகொளச் (stabilise) செய்யும் முயற்சிக்கு உடந்தையாகப் பொறுக்குக் கட்டுப்பாடு ஆளப்பட்டது. மும்முரப் பருவத்தில் (busy seasons) பண்டத் தின்மேல் அமிதமாகப் பாங்குக் கடன் பெறுதலைத் தடுக்கவும்,

மந்தப் பருவத்தில் (slack season) விரைவில் பாங்குக் கடன் சுருங்கச் செய்யவும் கட்டுப்பாடு ஆளப்பட்டது. விலைவாசியின் மட்டம் தேவை அளிப்புக்களின் அடிப்படையில் நிர்ணயிக்கப்படு மாதலால், கட்டுப்பாடு மூலம், விலை ஏற்றத்தை முழுதும் தடுக்க முடியாது. குடியானவர்கள் தானியங்களை அங்காடிக்குக் கொண்டு வருவது குறைந்து வருவதாகத் தெரிகிறது. ஆகவே பாங்குக் கட்டுப்பாட்டின் சக்தி குறைகிறது. ஆனால் கட்டுப்பாடு மற்றப்படி இன்னும் ஏறி இருக்கும் விலையை ஓரளவு கட்டுப் படுத்த உதவி செய்தது எனலாம். பாங்குகள் ஒத்துழைத்தன என்பது பாங்குத் திட்டத்தின் பொறுப்புணர்ந்த பண்பைக் காட்டுகிறது. பொறுக்குக் கட்டுப்பாடு மற்றப் பணச் சுருக்க நடவடிக்கைகளுடன் இணைந்து எடுக்கப்பட்டால் பலன் அளிக் கின்றது என்பது அனுபவம்.

பொருளாதார முன்னேற்றத்தில் பின் தங்கிய நாடுகளில் மைய பாங்குகள் வேலை கடினமானது. ஒருபுறம் வளர்ச்சிக் குப் பணமுடையின்றி உதவ வேண்டும்; மற்றொருபுறம் நெடுநாளாக வேரூன்றியுள்ள பணவீக்கச் சக்திகளைத் தடுத்து விலை மட்டத்தைக் காக்க வேண்டும்.

**பவண சதித் திட்டம் (Credit Planning)**

இதுவரை ரிசர்வு பாங்கின் பல்வேறு அதிகாரங்களைப் பார்த்தோம். திட்டத்தின் வளர்ச்சியை நாடும் நாட்டில் மைய பாங்கு பண வசதியை ஒழுங்கான வழிகளில் செலுத்த வேண்டிய பொறுப்புடையது. பொறுக்குக் (selective) கடன், தடைகளை உண்டாக்குமே ஒழிய எல்லாத் துறைகளுக்கும் பணம் கிடைக்கும்படிச் செய்யாது. சமீப காலத்தில் கடன் விநியோகத்தில் பாங்குகளிடையே அநேக குறைபாடுகள் காணப்பட்டன. பெரும் தொழில்களும் புள்ளிகளுமே பெரிதும் பயனடைந்தனர். சமூகக் கட்டுப்பாடு (Social Control), நாட் டுரிமை முதலியன இதைச் சீர் செய்யும் நோக்கமுடையனவே.

1968இல் பாங்குச் சட்டம் திருத்தம் பெற்றது. பாங்கு களின் டைரக்டர் சபைகள் திருத்தி அமைக்கப்பட்டன, ரிசர்வு பாங்குக்கு பல அதிகாரங்கள் தரப்பட்டன.

முதன்மைப்பாடு முறை (Priority System) யும் விரும்பிய துறைகளுக்குப் பணம் செல்வதற்காக பட்ஜெட் போன்ற ஒரு ஏற்பாடும் வேண்டியிருந்தன. இவைகளைத் தீர்மானிப்பதற்காகத் தேசியக் கடன் கவுன்சில் (National Credit Council) சிறுவப்

பட்டது (பிப்ரவரி 1968). நிதி மந்திரி, இதன் சேர்மன்; ரிசர்வு பாங்கு கவர்னர், உப சேர்மன்.

சமூகக் கட்டுப்பாடு முறை போதாதென்று தோன்றியது. பழைய ஆட்களே டைரக்டர்களாகி இன்றும் பழைய வழியி லேயே போக முடிந்தது. இதனால் நாட்டுரிமை வந்தது (ஜுலை 1969).

முதன்மைப்பாடு பகுதிகளுக்குத் தாராளமாக உதவி செய்யத் தூண்டி ரிசர்வு பாங்கு பாங்குகளுக்குச் சலுகைகள் தந்தது. உதாரணமாக ஏற்றுமதி விஷயத்திலும் உண்டியல் அங்காடித் திட்டம் விஸ்தரிக்கப்பட்டது. ஏற்றுமதி செய் பவர்கள் இதற்கு வேண்டிய கால உண்டியலைத் தயாரிக்கத் தயங்கியதால், பாங்குகளின் வாக்குமூலத்தின் அடிப்படையில் புரோ நோட்டின் பேரில் ரிசர்வு பாங்கு பாங்குகளுக்குக் கடன் தர (சட்டங்களைத் திருத்தி) அனுமதி அளிக்கப்பட்டது. இதன் விளைவாக 1963இல் ஏற்றுமதி உண்டியல் கடன் திட்டம் (Export Bills Credit Scheme) வந்தது. இது ஷை முறையில் பாங்குகளுக்குக் கடன் வசதி செய்தது.

சமூகக் கட்டுப்பாட்டின்கீழ். விவசாயத்துக்கும் சிறுதொழில் களுக்கும் அட்வான்சு தருவதிலும் சலுகைகள் தோன்றின. பிப்ரவரி 1970 வரை புனர் நிதி (Refinance) குறைந்த வட்டியில் வழங்கப்பட்டது.

**பாங்கல்லா நிறுவனங்கள்**

1963இல் ஒரு சட்டத் திருத்தத்தினால் பாங்கல்லா நிறுவனங் கள் மக்களின் வைப்புகளை நாடி அறிக்கை விடுவதைத் தடுக் கவும், அவைகளிடமிருந்து வேண்டிய விவரங்களை அழைக்கவும், அவைகளைச் சோதிக்கவும் அதிகாரம் தரப்பட்டது.

ஆகவே பழைய முறையால் பணக்கட்டுப்பாடு செய்வதுடன் பல்வேறு வழிகளில் ரிசர்வு பாங்கின் அதிகாரமும் பணியும் பரந்து கிடக்கிறது.

**டிபாசிட் இன்சூரன்சு :**

1962 ஜனவரியில் துவங்கியது. ஒரு டிபாசிட் இன்சூரன்சு கார்ப்பரேஷன் நிறுவப்பட்டது. இது முழுதும் ரிசர்வு பாங்குக்கு உரிமையான உப நிறுவனம். எல்லா பாங்குகளும் ரிசர்வு பாங்கிடம் இன்சூரன்சுக்கு ரிஜிஸ்தர் செய்யக்கோரப்படுகின்றன.

முதலில் ஒரு நபரின் வைப்பில் ரூ. 1500-க்கு மட்டும் காப்பளிக்கப்பட்டது. 1—1—1968 இல் காப்பு ரூ. 5,000 ஆகவும், 1—4—70 இல் 10,000 ஆகவும் உயர்த்தப்பட்டது. அரசாங்க வைப்புகள் இத்திட்டத்துக் குட்படமாட்டா. கட்டணம் 100 ரூபாய்க்கு 5 காசு. ஜனவரி 1969 வரை 11 பாங்குகள் சம்பந்தமாக 56·85 லட்சம் கொடுக்கப்பட்டுள்ளது. (35·72 லட்சம் சம்பந்தப்பட்ட பாங்குகளிடமிருந்து திரும்பிவிட்டது). டிசம்பர் 1968 இல் கூட்டுறவு பாங்குகளுக்கும் இவ் வசதி விஸ்தரிக்கப்பட்டது.

**கிராமக் கடன்** (Rural Credit) :

இந்தத் துறையில் ரிசர்வு பாங்கின் பணிகள் மிகப் பரவி விட்டன. இங்குச் சுருக்கமாக முக்கியமானவற்றையே சுட்டிக் காட்ட முடியும். பாங்கின் சட்டத்தில் 54 பிரிவில் ஒரு விவசாயக் கடன் இலாகா நிறுவ ஆணையிடப்பட்டது. பிரிவு 17 விவசாயத் துறைக்கும் பணவசதி செய்யும் முறையை வகுத்தது. இந்த இலாக்கா பாங்குடனேயே பிறந்தது. இரண்டு ஆய்வு அறிக்கைகளின் பயனாக, கூட்டுறவுத் துறையை ஆண்டே விவசாயத் துறைக்கு உதவுவது சிறந்தது என்பது முடிவாயிற்று. 1951 வரை எந்த முன்னேற்றமும் இல்லை. அவ்வாண்டில் ஒரு கிராம நிதி மாநாடு நடந்தது. பின்னர் (1954) கிராம கடன் ஆய்வு கமிட்டி அறிக்கை வந்தது. அதுவும் கூட்டுறவை வற்புறுத்தி ரிசர்வு பாங்கும் அரசாங்கமும் அதை எவ்வாறு பலப்படுத்த வேண்டும் என்றும், எவ்விதக் கடன் கைக்கோளை ஆள வேண்டும் என்றும் வகுத்தது. அதன் ஒரு முக்கிய சிபார்சான இணைந்த கடன் (Integrated Credit) முறையை அமுலுக்குக் கொண்டு வருவது ரிசர்வு பாங்கின் கடமையாக்கப்பட்டது. வேண்டிய பண உதவி செய்வதும், கூட்டுறவு அமைப்பைத் திருத்துவதும் பாங்கின் பணியானது. 1955 இல் சட்டம் திருத்தப்பட்டு இரண்டு நிதிகள் நிறுவப்பட்டன. (1) தேசிய விவசாயக் கடன் (நெடுங்கால காரியங்கள்) நிதியும் (2) தேசிய விவசாயக் கடன் (நிலைபேறு) நிதியும், நிறுவப்பட்டன. முன்னையது நெடுங்காலக் கடன் தருவதற்கு வசதியாக மாநில-அரசாங்கங்களுக்கு நிதி உதவுவதற்கும், பின்னையது அசம்பாவிதக் கடன் நஷ்டத்தைச் சமாளிக்க கடன் உதவி செய்வதற்கும் நிறுவப்பட்டது.

பாங்கு நில அடைமானப் பாங்குகளின் டிபஞ்சர்களையும் ஓரளவுக்கு வாங்கியது. 1963 இல் விவசாயப் புனர் நிதிப் கார்ப்பரேஷன் (Agricultural Refinance Corporation) நிறுவப்

பட்டது. சாதாரண வழிகளில் பணம் புரட்ட முடியாத விவசாயத் திட்டங்களுக்கு இது உதவியது. சிறு தொழில், குடிசைத் தொழில் விஷயத்திலும் உதவுவதற்காக 1953இன் ஒரு சட்டத் திருத்தத்தின்படி 17(2) பிரிவு உண்டாகி, மாநில கூட்டுறவு பாங்குகள், மாநில நிதி கார்ப்பரேஷன்கள் மூலமாக இத் தொழில்களுக்கு பாங்கில் உதவி கிடைக்கலாயிற்று.

1966இல் இதுவரை கிராமக் கடன் விஷயத்தில் ஏற்பட்ட சாதனைகளை மதிப்பிட ஒரு கமிட்டி நிறுவப்பட்டது. அது 1969 இல் ஒரு அறிக்கையை வெளியிடப்பட்டது. இது அநேக சிபார்சுகள், முக்கியமாகக் கூட்டுறவுத் துறையில் ரிசர்வு பாங்கு மேலும் செய்யக்கூடிய உதவிகள் பற்றிச் செய்தது.

கடன் வசதிகளை விசாலப்படுத்தியதோடு, கூட்டுறவுக் கடன் இயக்கத்தையே புனர் நிர்மாணம் செய்யவேண்டி வந்தது. மாநிலக் கூட்டுறவு வங்கிகளை நிறுவுவதோ உள்ளவைகளை ஒழுங்கு படுத்துவதோ முதல் வேலை. பலவித துவக்க சொசைடிகளைத் தலைதூக்கச் செய்வது மறுவேலை. நடைமுறையிலும் சீர்திருத்தங்கள் துவங்கின. மாசூல் கடன் திட்டம் (Crod Loan System) துவங்கியது. பல்வேறு காரியங்களுக்குக் கடன் உதவி செய்வதற்கான தகுதிகளைப் பாங்கு நிர்ணயம் செய்தது. கணக்குத் தணிக்கைக்குப் பொது விதிகள் நிர்ணயமாயின.

கூட்டுறவுக் கடன் இயக்கத்தின் நடுப்படியிலுள்ள மைய பாங்குகள் (Central Banks) பல மாநிலங்களில் பலவீனமாயிருந்தன; பாங்குதவியைப் பயன்படுத்தவில்லை. இதனால் துவக்க சொசைடிகள் கேடுறுமல், வாணிக பாங்குகள் நேரடியாக இவைகளுக்கு உதவ ஏற்பாடு செய்யப்பட்டது.

1951-ல் நிலையான விவசாயக் கடன் ஆலோசனைக் குழு ஒன்று (Standing Adivsory Committee on Agricultural Credit) நிறுவப்பட்டது. விவசாயக் கடன் சர்வே கமிட்டியின் சிபார்சின் பேரில் இது திருத்தம் பெற்று, புதுப் பெயர் (Standing Advisory Committee on Rural and Corporative Credit) தரப் பெற்றது. ஷை கடன் கமிட்டி ஒரு விவசாயக் கடன் போர்டு நியமிக்க வேண்டுமென சிபாரிசு செய்திருந்தது. இந்த ஆலோசனைக் கமிட்டியே 1970இல் போர்டாக புது உருப் பெற்றது. கவர்னர் இதன் சேர்மென். கூட்டுறவு பாங்குகளுக்கு ரிசர்வு பாங்கு தரும் கடன் வசதிகளும் பிறவும் பலப்பல. (Ref. Functions and Working of Reserve Bank of India, 1970. பக்கம் 104-141).

**தொழில் நிதி (Industrial Finance)**

பரந்த முதலங்காடி இல்லாத நம் நாட்டில் மைய பாங்கு தொழில் துறைக்குப் பணவசதி செய்யவும் வேண்டியிருந்தது. தொழில் நிதி கார்ப்பரேஷன்கள் (Industrial Finance Coporation)மைய நிலையமாய் ஒன்றும், பிற மாநிலங்களிலும் நிறுவப் பட்டன. வணிக பாங்குகளுடன் சேர்ந்து 1958-ல் தொழிலுக்குப் புனர்நிதி கார்ப்ட்ரேஷன் (Refinance Corporation for Industry) நிவறுப்பட்டது. இது அங்கத்திய பாங்குகளுக்கு உதவி செய்து, அவைகளை நடுகாலக்கடன் உதவி தொழில்களுக்குச் செய்யத் தூண்டும். சிறு தொழில்துறைக்குக் கடன் உதவி பரவுவதற்காக, கடன் உத்திரவாதத்திட்டம் (Credit Guarantee Scheme) 1960-ல் துவங்கியது.

தொழில் கடன், முதலீடு கார்ப்பரேஷன் (Industrial Credit and Investment Corporation) (1955) நிறுவுவதிலும், மாநில தொழில் வளர்ச்சிக் கார்ப்பரேஷன் (Industrial Development Corporation) நிறுவவும் ரிசர்வு பாங்கு உதவியது. தவிர, பல நிதி நிறுவனங்களின் பணிகளை ஒருங்கிணைக்கவும், அவைகளால் சாத்தியமாகாத உதவியைத் தரவும், ஒரு புது நிறுவனம், இந்திய தொழில் வளர்ச்சி பாங்கு (Industrial Development Bank of India), 1664-ல் நிறுவப்பட்டது இது ஒரு கேந்திர (apex) நிறுவனம். புனர் நிதிக் கார்ப்பரேஷன் (Refinance Corporation for Industry) இந்த IDBI-க்கு மாற்றப்பட்டது.

மைய நிதிக் கார்ப்பரேஷன், மாநிலக் கார்ப்பரேஷகள் ஆகியவற்றின் பணி விவரங்களை இங்கு விவரிக்க இடமில்லை.

(பார்க்க: The Functions and Working of the Reserve Bank of India பக்கம் 144-160.)

**வணிக பாங்குகளும் தொழில் நிதியமும் (Bank and Industrial Finance)**

பாங்கர்களின் உலகில் பரம்பரைக் கருத்து தொழிலுக்கு நிலை முதல் தருவது வணிக பாங்குகளுக்கு ஆபத்து என்பது. 1954-ல் ஒரு கமிட்டி (Shroff Committee) பாங்குகளை மறைமுகமாக இவ் வேலையில் இறங்குமாறு கேட்டுக்கொண்டது. பாங்குகள் குறுங்காலக் கடன்களை நீடிப்பதுமூலம் ஓரளவு இவ் வேலையைச் செய்து வந்தனவாயினும், முன்கூறிய புணர் நிதி கார்ப்பரேஷன் தோன்றும்வரை, உதவி அற்பமாகவே இருந்தது. சிறுதொழில்கள் மிகவும் கஷ்டப்பட்டன. 1959-ல் ஹைதராபாத்தில் நடந்த ஒரு நான் கருத்தரங்கின் பயனாக, 1960-ல், ரிசர்வு பாங்கின் ஆலோ

சனையின்பேரில், கடன் உத்திரவாதத் திட்டம் (Credit Guarantee Scheme) துவங்கியது. இது பாங்குகள் தரும் கடன்களுக்கு உத்திரவாதம் அளிக்கும். ரிசர்வ் பாங்குக்கு இந்த அரசாங்கத் திட்டத்தை நிர்வகிக்கும் வேலை விடப்பட்டது. வணிக பாங்குகள், மாநில நிதி கார்ப்பரேஷன்கள், மாநிலக் கூட்டுறவு பாங்குகள் இந்த உத்தரவாதம் பெறும். உத்திரவாதம் உற்பத்திக் கடன்களுக்கும ட்டுமே, வியாபாரக் கடன்களுக்கன்று. உத்திர வாத எல்லை, நஷ்டத்தில் 75%.

## இந்திய யூனிட் டிரஸ்ட் (1964) மற்றும் L. I. C.

சிறு முதலீடு செய்வோருக்கு உதவ ரிசர்வ் பாங்கு உதவியுடன் நிறுவப்பட்டது. இதுபற்றி இங்கு விவரிக்க வேண்டிய அவசியமில்லை; தன்மையை அறிவோம் பக்கம் 207. தொழில் நிதிக்கு ஒரு முக்கியமான ஊன்றுகோல் L. I. C. என்பதையும் நினைவில் கொள்ளவேண்டும்.

## நாணய மாற்று நிர்வாகமும் கட்டுப்பாடும்

ஒரு மைய பாங்கின் கடமைகளில் முக்கியமான ஒன்று நாட்டு நாணயத்தின் அயல் நாட்டு மதிப்பைக் காப்பது. ஆகவே அயல் நாட்டு நாணய ரிசர்வு முழுதும் அதன் ஆட்சியில் விடப்படுகிறது. பன்னாட்டு நிதி நிறுவனத்துக்கு (I.M.F.)த் தெரிவித்த மாற்று வீதத்தை (exchange rate) நிலைநிறுத்துவது மைய பாங்கின் கடமை. இந்த வேலைக்கு கையிலுள்ள அயல்நாட்டு நாணய நிதி போதாதபோது, I.M.F.-லிருந்து கடன் பெறலாம். இதுவும் போதாதபோது மாற்றுக் கட்டுப்பாடு (exchange control) அவசியமாகும். இந்திய ரிசர்வு பாங்கு இந்த விஷயங்களைக் கவனித்துக்கொள்கிறது. பாங்கு (Foreign Exchange regulation Act 1947)ஐ நிர்வாகம்செய்கிறது பாங்கு அங்காடியில் தலையிட்டுத் தனக்காகவோ அரசுக்காகவோ அயல் செலவாணியைவாங்கலாம், விற்கலாம் (பிரிவு 40). ஆனால் வீதமும் நிபந்தனைகளும் அரசாங்கத்தால் நிர்ணமாகும்.

# 33. பணமும் அயல்நாட்டுச் செலுத்தும்

இதுவரை நாம், ஒவ்வொரு நாடும் தனித்து இயங்குவதாகக் கருதுவதுபோலப் பேசி வந்தோம். தனித்து இயங்கும் ஒரு நாட்டின் பொருளாதார முறையை "மூடிய பொருளாதாரம்" (closed eoonomy) என்பர். இதன் பொருள், இவ்வகை நாடு பொருளாதார விஷயத்தில் வெளிநாட்டோடு தொடர்பு கொள்ளவில்லை என்பதாம். திறந்த பொருளாதார (open economy) த்தின் ஆய்வுச் சிக்கல்களை ஒரு சேரச் சமாளிக்க முயல்வதைவிட உள் நாட்டுப் பிரச்சினைகளை முதலில் ஆராய்ந்து, பின்னர் அயல் நாட்டோடு கொள்ளும் தொடர்புகளால் ஏற்படும் பிரச்சினைகளை ஆராய்வது நல்லது. திறந்த பொருளாதாரமாயின் அதன் உள்நாட்டுப் பிரச்சினைகளை ஆராயும்போது அயல் நாட்டுப் பிரச்சினைகளையும் ஒரு நாடு எண்ணியே முடிவு செய்ய வேண்டியிருக்கும் என்பது உண்மை. இப்படியே அயல்நாட்டுத் தொடர்பால் ஏற்படும் பிரச்சினைகளை ஆராயும்போது உள்நாட்டுப் பிரச்சினைகளோடு அவைகள் தொடர்பற்றன என்ற முறையில் ஆராய முடியாது. உண்மையில் அயல்நாட்டுப் பிரச்சினைகளும் உள்நாட்டுப் பிரச்சினைகளும் ஒன்றையொன்று பாதித்துச் சார்புடன் இயங்கும் தன்மையுடையன.

அயல்நாட்டுத் தொடர்பு உண்டு என்று வைத்துக்கொண்டு பணப் பிரச்சினைகளை ஆராயும்போது, முதலில் புலப்படுவது, ஒரு நாட்டு மக்கள் உள்நாட்டுப் பேரங்களைத் தம் நாட்டுப் பணத்தால் செய்துகொள்வது போல அயல்நாட்டுப் பேரங்களைச் செய்ய முடியாமலிருப்பதாகும். இதனால் அயல்நாட்டுக்குச் செலுத்து (payments) அவசியம் ஆகும் போதெல்லாம் ஒரு நாட்டின் செலாவணி மற்றொரு நாட்டுச் செலாவணியாக மாற்றப்பட வேண்டியிருக்கிறது. அயல்நாட்டுடன் பேரம் நடக்கும்போது ஒரு நாட்டவன் கொடுக்க வேண்டிய நிலையில் இருக்கிறான். அந்தக் கொடுப்பல் நிலையைத் தீர்ப்பதற்குத் தன் பணத்தை அயல்

நாட்டுப் பணமாக மாற்ற வேண்டி இருக்கிறது. மாற்றும்போது பண மாற்று விகிதம் (exchange rate) என்பது ஒன்று தோன்றுகிறது. செலுத்து, கடன் பெற்றோன் பணத்தில் இருக்கவேண்டுமென்றாலும் சரி, கடன் கொடுத்தோன் பணத்தில் இருக்க வேண்டுமென்றாலும் சரி, இரு வகையிலும் ஒரு நிலையில் பண மாற்று அவசிய மாகிறது. இப்படி ஒரு பணத்தை மற்றொரு பணமாக மாற்றும்நிலை ஏற்படும் போதெல்லாம் அநேகப் பிரச்சினைகளைத் தோன்றுகின்றன. இந்தப்பிரச்சினைகளைத்தான் அயல் நாட்டுச் செலுத்துப் பிரச்சினைகள் (problems of international payments) என்று கூறுகிறோம். நாம் இங்கு இந்தப் பிரச்சினைகளை இயல் முறையில் ஆராயப் போகிறோம். ஆனால் இவ்வாராய்ச்சி இத்துறையில் நிகழும் தொழில் நுட்ப முறைகளை அடிப்படையாகக் கொண்டு நிகழவேண்டியிருக்கிறது.

**செலாவணிமாற்று**

பணம் மாற்று வேலை பல சிக்கல்களை உடையது. இவைகளில் முக்கியமானவை இரண்டு. ஒன்று, செலாவணிப் பெயர்ச்சி (currency transfer). மற்றொன்று, மாற்றும் வீத நியமனம் (exchange rate determination). செலாவணிப் பெயர்ச்சிப் பிரச்சினைத் தீர்வு முழு உரு (full bodied) நாணயத்தால் செலுத்தும்போது எளிதாகிறது. பொற்காசு உருவத்தில் கடனைக் செலுத்துகிறான். பொற் காசுகள் இயற்கையாகவே சுய மதிப்பு உடையவை யாகையால் கடன் கொடுத்தோன் திருப்தி அடைகிறான். கடனாளி நாட்டின் பணம், உருவில் வேறு வகையாயிருந்தால் கடனாளியின் காசை இந்த வேறு காசாக அச்சடிக்கப்பட வேண்டிய வேலை தவிர வேறு இடையூறில்லை. இதை அரசாங்க நாணய அச்சகம் செய்து தரும்.

**அயல் செலாவணித் தேவை, அளிப்பு — காரணிகள்**

நாடுகளுக்குள் நடக்கும் பேரங்களில் பொதுவாக மூன்று வகை: (1) பண்ட ஏற்றுமதி, இறக்குமதி (2) புலனாகா (invisible) பேரங்கள் (3) முதல் ஏற்றுமதி, இறக்குமதி (exports and imports of capital).

இந்த மூன்று வகைப் பேரங்கள் நாட்டின் பொருளாதாரத்தைப் பாதிக்கும் முறையை ஆராய்வதற்கு நாம் முதலில் அயல்நாட்டு வாணிபச் செலுத்து நிலை (international balance of payments) என்ற கணக்கு முறையைப் புரிந்துகொள்ள வேண்டும். ஒரு நாட்டின் செலுத்து நிலை குறிப்பு ஒரு பட்டியல். இது ஒரு குறிப்பிட்ட காலக்கூறில் (நேரத்தில் அல்ல) இரு நாடு

களுக்குள் நடக்கும் எல்லாவித பேரங்களின் பண மதிப்பைக் காட்டும். இந்தச் செலுத்து நிலைக் குறிப்பு ஒரு காலப் பகுதியில் (period of time) நிகழும் பேரங்களைக் குறிப்பது என்பதை வற்புறுத்த வேண்டியிருக்கிறது. அது ஒரு குறிப்பிட்ட காலத்தில் (point of time) உள்ள நிலையைக் காட்டுவதில்லை. ஒரு நேரத்திய நிலையைக்காட்ட வேறு ஒருவகைக் கணக்குத் தயாரிக்க வேண்டும். ஒரு நாட்டின் அயல் நாட்டுச் சார்புடைய பொருளாதார நிலையைக் (international economie position) காட்ட வேண்டுமானால் அதற்கு ஏற்றது அயல்நாட்டுக் கடன் நிலைப் பட்டியலாகும் (balance of international indebtedness). இது ஒரு குறிப்பிட்ட தேதியில் அந்த நாட்டு மக்கள் அயல்நாட்டு மக்களிடம் இருந்து பெற வேண்டிய உரிமையையும் (claims), இவர்களிடமிருந்து அயல் நாட்டினருக்குரிய உரிமையையும் காட்டும் குறிப்பாகும். வரவேண்டிய உரிமை, தரவேண்டிய உரிமையை விட எச்சமாய் இருந்தால், அப்போது நாடு கடனீவோன் (international creditor) நிலையிலிருக்கும். குறைவாக இருந்தால் கடனாளி (international debter) நிலையிலிருக்கும். கடன் நிலைப் பட்டியல் கடந்த காலத்தில் நாட்டின் முதல் நிலையில் (capital position) ஏற்பட்ட மாறுதல்களின் நிகர விளைவைக் காட்டுவதாகும். ஆனால் செலுத்து நிலைக் குறிப்பு ஒரு குறிப்பிட்ட கால வரையறைக்குள் ஒரு ஆண்டில் அயல் நாட்டோடு நடக்கும் பேரத்தின் தொகைகளைக் காட்டுவதாகும்.

**செலுத்துநிலைக் குறிப்பில் இனங்கள் (items)**

ஒரு நாட்டை எடுத்துக்கொண்டு அதன் செலுத்து நிலைக் குறிப்பை வரைவதானால் அந்நாட்டிலிருந்து பிற நாடுகளுக்கு அது அனுப்பும் இனங்களையும் பிற நாடுகளிலிருந்து அது பெறும் இனங்களையும் குறிக்க வேண்டும்.

இந்தியாவின் செலுத்துக் கணக்கை எப்படி எழுதுவது என்பதைப் பார்ப்போம். ஒரு பேரம், (உதாரணமாக இறக்குமதி) இந்தியா கொடுக்க வேண்டிய நிலையை உண்டாக்கினால், அது பற்றுப் பக்கத்தில் (debit) எழுதப்படும். இப்படிப் பற்றுப் எழுதும்போது தொகை கொடுக்கப்பட்டு விட்டதாகப் பொருளன்று. கொடுக்கப்படுவது பின்னர் நிகழலாம். இங்குப் பேரம் நிகழ்ந்த மாத்திரத்தில் பற்றுப் பக்கத்தில் எழுதப் படுகிறது. அயல்நாட்டுக்கு உரிமை தோன்றிய உடனேயே அது பற்றுக் கணக்குகளில் ஏறி விடுகிறது. பிறருக்குப் பண உரிமை தரும் பேரம் நமக்குப் பற்றாக இருக்கும். நாம் பற்றில் எழுத வேண்டிய இனங்களை வகைப்படுத்தலாம்.

**பற்றினங்கள்**

(அ) முதன் முதலாகப் பண்ட இறக்குமதி (commodity imports). இதுவே செலுத்துக் குறிப்பில் பெருந்தொகையான பற்ருக இருக்கும்.

(ஆ) இரண்டாவது இனம், பணி இறக்குமதி (service imports). நம் நாட்டினர் அயல்நாட்டினரிடமிருந்து பணிகளைப் பெற்றுக்கொண்டால் அது காரணமாகக் கொடுக்க வேண்டியது. இந்தியன் ஒருவன் அமெரிக்காவுக்குச் சென்றதாக வைத்துக் கொள்வோம். போகும் போது அமெரிக்கக் கப்பலில் பிரயாணம் செய்தால் அப் (புலனுகாப்) பணிக்குக் கொடுக்க வேண்டிய கட்டணத் தொகை இந்தியாவின் பற்ருகும். அவன் அமெரிக்காவில் அமெரிக்கரிடமிருந்து பெறும் பணிகள் அனைத்துக்கும் கொடுக்க வேண்டிய தொகையும் பற்ருகும். இந்த மாதிரிப் பணி இனத்தில் சேர்பவை பல. நமக்கு அயல் நாட்டின் கப்பல் கம்பெனிகளின் பணிகள், இன்சூரன்சுக் கம்பெனிகள், பாங்குகள், தரகர்கள் முதலானோர் செய்யும் பணிகள் அனைத்தும் இந்தியாவின் பற்ருகும். அயல் நாட்டினர் முதலுக்காக நாம் வட்டியாகவும் டிவிடெண்டு ஆகவும் கொடுக்க வேண்டிய தொகையும் பற்று இனத்தில் சேரும், ஏனெனில் அயல் நாட்டினர் முதல் நமக்குப் பணி செய்கிறது.

(இ) மூன்ருவது, முதலினங்கள் (capital items). நாம் அயல்நாட்டுப் பாண்டுகளையும், பத்திரங்களையும் வாங்கிஞல், பத்திரங்களை வாங்கும் தருணத்தில், பற்ருக எழுத வேண்டியிருக்கிறது. ஆனுல் பிறகு ஒரு நாள் அவர்கள் கடனைத் திருப்பிக் கொடுக்கும்போது, அன்று தொகை நமக்கு வரவாக எழுதப்படும்.

அடுத்தபடி, சில தனிவகை பேரங்கள் உள்ளன. இவை பற்றுக்குக் காரணமாகா. இந்தியர் அயல் நாடுகளில் நேரடியாக முதலீடு செய்யலாம். அதாவது அயல் நாட்டிலுள்ள அயல் நாட்டாரது கம்பெனிகளில் நம் நாட்டவர் பத்திரங்கள் வாங்கலாம். நம் நாட்டுக் கம்பெனிகளின் கிளைகள் அயல் நாட்டிலிருக்கலாம். இவை நேரடி முதலீடுகளாகும். அயல் நாட்டில் பதிவு செய்யப்பட்ட நிறுவனங்களின் பத்திரங்களை வாங்கும்போது அது இறக்குமதியாகக் கருதப்பட்டு நம் நாட்டு வாணிபச் செலுத்து நிலைக் குறிப்பில் முதலினத்தின் கீழ்ப் பற்று எழுதப்படும். ஆனுல் நம் நாட்டுக் கம்பெனியின் கிளைக்கு நேரடியாக நாம் முதற் பொருளை அனுப்பி வைக்கும்போது

இவ்விதமான பற்று எழுத முடியுமா? உதாரணமாக, ஓர் இந்தியக் கம்பெனி ஒரு கிளை உற்பத்திச் சாலையை நிறுவுவதற்கு வேண்டிய சாதனங்களும் பிறவும் அயல் நாட்டுக்கு அனுப்புவதாக வைத்துக்கொள்வோம். அவற்றை ஏற்றுமதி செய்யும்போது மற்றப் பொருள் ஏற்றுமதிகளின் கணக்கில் சேர்க்கப் பட்டிருக்கும். இதற்கெதிராக, அயல் நாட்டில் இருந்து எந்த விதப் பங்குகளும் இறக்குமதி செய்யப்படுவதில்லையாகையால், அயல் நாட்டினருக்கும் நம் மேல் யாதொரு உரிமை (claim)யும் தோன்றுது. ஆயினும் செலுத்து இருப்பு நிலைக் குறிப்பில் எல்லா பேரங்களும் இடம் பெற வேண்டுமாகையால், அயல் நாட்டுக் கிளை ஸ்தாபனத்தையும் அயல் நாட்டு ஸ்தாபனமாக மதித்து அதனிடமிருந்து செக்கூரிட்டிகள் வாங்கினதுபோல் நினைத்துக் கொண்டு நம் நாட்டின் கணக்கில் பற்று எழுத வேண்டும்.

(ஈ) நான்காவது, ஒருதிறச் செலுத்தாக (unilateral transfer) உள்ள இனும்கள் (gift), மான்யங்கள் (grants), பண அனுப்புதல்கள் (remittances), அரசாங்க நஷ்ட ஈடுகள் (indemnities) போன்றவைகள் ஒரு தனி இனத்தைச் சேர்ந்தவை. இவை எல்லாமும் அயல் நாட்டினருக்கு அனுப்பப்படும் தறுவாயில் அவர்களுக்கு உரிமையாகிவிடுவதால், நம் நாட்டின் கணக்கில் பற்று எழுத வேண்டும். இப்படி எழுது வதற்குக் காரணம் என்னவெனில், அயல் நாட்டினருக்கு இவை பண உரிமையைத் தருகின்றன. அயல் நாட்டி னரின் நன்மதிப்பை இறக்குமதி செய்வதுபோலப் பாவிக்க வேண்டும். ஆனல் எப்படி எழுதுவதில்லை.

(உ) கடைசியாகப் பொன் இறக்குமதி. பொன் ஒரு வியாபாரப் பண்டமாக இறக்குமதி செய்யப்படலாம், அல்லது நமக்குச் சேரவேண்டிய வணிகப் பாக்கியைத் தீர்க்க நம் நாட்டுக்கு வரலாம். காரணம் எதுவாயினும் இதுவும் ஒரு பற்று எழுதுவதற்குக் காரணமாகும்.

**வரவினங்கள்**

அடுத்தபடி, வரவு வரைவுகள் (credit entries) எவை என்று பார்ப்போம். மேலே பற்று எழுத வேண்டிய பேரங்களுக்கு நேர் எதிரான பேரங்கள் நிகழும்போது வரவு எழுத வேண்டும். செலுத்து நிலைக் குறிப்பு குறிப்பிடும் காலத்தில் எவ்வெந்தப் பேரங்கள் ஒரு நாட்டின் மக்களுக்கு அயல் நாட்டிலிருந்து செலுத்து உரிமையை உண்டாக்கு

கின்றனவோ அவை அந் நாட்டின்கணக்கில் வரவு எழுதக் காரண மாகும். இப்படிப் பார்த்தால் ஒரு நாட்டின் செலுத்துக் கணக்கில் பற்று எழுதும்போது, இதற்கு இணையாகமற்றொரு நாட்டின் கணக்கில் வரவு வரைவு அவசியமாகும் என்று தெரிகிறது. இந்தியாவின் இறக்குமதி இந்தியாவுக்குப் பற்று. இந்த இறக்குமதி மற்றொரு நாட்டுக்கு ஏற்றுமதியாதலால் அதற்கு வரவு. இப்படியே இந்தியாவில் ஏற்றுமதி இந்தியாவின் வரவு; இறக்குமதி செய்யும் அயல்நாட்டுக்குப் பற்று. மேலே பலவித பேரங்கள் 'பற்று' உண்டாக்குமெனப் பார்த்தோம். எதிரிடையாக, பொருள் ஏற்றுமதி, பணி ஏற்றுமதி, செக்கூரிட்டி (முதல்) ஏற்றுமதி, பிற நாடுகள் தரும் இனாம் போன்றவை, பொன் ஏற்றுமதி ஆகிய எல்லாம் இந்தியாவின் கணக்கில் வரவு எழுதக் காரணமாகும்.

## செலுத்துநிலைக் குறிப்பின் கட்டமைப்பு (The Structure of the Balance of Payments)

மேலே நாம் அயல் நாட்டோடு நிகழ்த்தும் பேரங்களைப் பற்றாகவும் வரவாகவும் பிரித்துத் தனித்தனியாக விளக்கினோம். இனி இரண்டும் சேர்ந்த பட்டியலான செலுத்து நிலைக் குறிப்பின் அமைப்பை விளக்குவோம்.

**செலுத்து நிலைக் குறிப்பின் முக்கியமான பகுதிகள் :—**

(1) நடப்புக் கணக்கு (current account)

(2) முதல் கணக்கு (capital account)

(3) ஒருதிறச் செலுத்துக் கணக்கு (unilateral transfer)

(4) பொன் கணக்கு (gold account) என்பன.

முதலிரண்டுக்கும் வேறுபாடு யாதெனில், நடப்புக் கணக்கு, பண்டம், பணி ஆகியவைகளின் சம்பந்தமானது. முதல் கணக்கு கடன் சொத்துரிமை ஆகியவை சம்பந்தமானது.

(1) நடப்புக் கணக்கின் (Current account) முக்கியத்துவம் என்னவெனில் அதன் வரவுப் பகுதி, அயல் நாட்டிலிருந்து பெறும் வருமானத்தைக் காட்டுகிறது. பற்றுப் பகுதி, அயல் நாட்டுப் பண்டங்களுக்காகவும் பணிகளுக்காகவும் நாம்செய்யும் செலவைக் காட்டுகிறது. ஆகவே இது ஒரு வகையில் ஒரு நாட்டின் நடப்பு வரவு செலவுக் கணக்காகும்.

(2) முதல் கணக்கு (Capital Account) இப்படி நடப்பு வரவு செலவைக் காட்டாமல், பின்பு வரவேண்டிய உரிமை, கடன் ஆகியவை (deferred claims and debts) சம்பந்தமான சான்றுகளில் (evidences) நிகழும் பேரங்களைக் காட்டுகிறது. இச்சான்றுகளில் தொழில் பத்திரங்களும், பாண்டுகளும், பிறவகைச் செக்யூரிட்டிகளும், செலாவணிகளும் (currencies), பாங்கு வைப்புக்களும் அடங்கும். இந்த முதல் கணக்குப் பெரும்பாலும் இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்படும். ஒன்று நீண்டகால முதற் (long term capital) பகுதி. மற்றொன்று, குறுங்கால முதற் (short term capital) பகுதி. இவை இரண்டுக்கும் வேறுபாடு செய்யும் வரையறை, ஓர் ஆண்டுக்கு உட்பட்டது குறுங்காலம், மேற்பட்டது நெடுங்காலம். செலாவணி, பாங்கு வைப்பு, ஏற்புகள், குறுங்கால அரசாங்க வெளியீடுகள் போன்றவை குறுங்கால இனத்தைச் சேர்ந்தவை. புதிய வெளியீடுகள் அயல் நாட்டில் விற்கப்பட்டால், அல்லது அயல் நாட்டில் முதலீடு நேரடியாகச் செய்யப்பட்டால் இவை நெடுங்கால முதற் பேரங்களில் அடங்கும்.

(3) மூன்றாவது தொகுதி பிரதி பலன் (quid pro quo) இல்லாத ஒருதிறச் செலுத்துகளாகும். இதில் முன் கூறியபடி இனாம்கள், நஷ்ட ஈடுகள், பண அனுப்புதல்கள் அடங்கும்.

(4) கடைசியாக அயல்நாட்டுப் பேரத்தில் மிகவும் முக்கியமான வகை, பொன். பொன் ஏற்றுமதி செய்தால் அது வரவு பக்கமும், இறக்குமதி செய்தால் பற்றுப் பக்கமும் வரையப்படும். இந்த விஷயத்தில் மற்ற ஏற்றுமதிகளுக்கும் இறக்குமதிகளுக்கும் இதற்கும் வேறுபாடில்லை. தென் ஆப்பிரிக்கா போன்ற நாடுகள் பொன் ஏற்றுமதி செய்யும்போது அது பண்டமாகவே கருதப்படும். ஆனால் பிற நாடுகளில் பொன் ஏற்றுமதி இறக்குமதி ஒரு பணத்துறைச் சார்புடைய பெயர்ச்சியாகவே இருக்கும். அதாவது பிற நாட்டுப் பாக்கியைத் தீர்க்க அனுப்பும் ஏற்றுமதியாகும். ஆகையினால் இது முக்கியத்துவம் வாய்ந்தது.

இந்தக் கட்டமைப்பிலிருந்து இரண்டு விஷயங்களை அறிகிறோம். ஒன்று வரவும் செலவும் சமமாக இருக்கின்றன. மேலே குறிப்பிட்ட நான்கு தொகுதிகளுள் ஒவ்வொன்றையும் தனித் தனியாக எடுத்துக்கொண்டால், பற்று வரவுகளுக்கிடையில் சமப்பாடு இல்லாமல் இருக்கலாம். ஆனால் இந்த நான்கு தொகுதிகளும் சேர்ந்த மொத்தத்தை எடுத்துக் கொண்டு

பார்த்தால் இருபுறமும் சமமாக இருக்கும். ஒரு பகுதிக் கணக்கின் பற்றுக்குறையை (deficit) மற்றொன்றின் எச்சத்தால் (surplus) ஈடுகட்டிவிடலாம். முதல் மூன்றும் சரிக்கட்டவில்லை யானாலும், பாக்கிக்குப் பொன் வெளியேறுமாகையால் முடிவில் இருபுறமும் சமமாகும். இதனால்தான் செலுத்து நிலைக் குறிப்பு எப்போதும் சமப்பாடுடையது (The balance of Payment always balances) என்பர். கீழே உள்ள உதாரணத்தைப் பார்க்க:

| வரவு | | செலுத்து | |
|---|---|---|---|
| பண்ட ஏற்றுமதி | ரூ. 80 கோடி | பண்ட இறக்குமதி | ரூ. 100 கோடி |
| பொன் ஏற்றுமதி | ரூ. 20 ,, | | |
| மொத்தம் | ரூ. 100 கோடி | மொத்தம் | ரூ. 100 கோடி |

பண்ட ஏற்றுமதி இறக்குமதியில் பற்றுக்குறை 20 கோடி. இதைப் பொன் ஏற்றுமதி 20 கோடி ஈடு செய்வதால் செலுத்து நிலைக்குறிப்புச் சமமாகிறது. இந்த அம்சத்தின் அடிப்படையில் தான் சிலர் ஏற்றுமதி, இறக்குமதிக்குச் செலுத்துகிறது (export pay for imports) என்பர்.

இருபுறச் சமப்பாட்டை வேறொரு வழியிலும் விளக்கலாம் ஒரு மனிதன் தன் நடப்பு வரவுக்கு மேல் செலவு செய்ய முடியாது. மேற்பட்டுச் செலவு செய்வதாயின் தன்னுடைய பண இருப்பைக் குறைத்துக் கொள்ள வேண்டிவரும், அல்லது கடன் வாங்க வேண்டி வரும், அல்லது இனாம் பெறவேண்டும். நாட்டுக்கும் இது பொருந்தும். ஒரு நாடு தன் செலவுக்குமேல் வரவு பெற வேண்டுமாயின் தனது இருப்பை அதிகப் படுத்த வேண்டும். சொத்துக்களை வாங்கவேண்டும். அல்லது கடன் தரவேண்டும். அல்லது இனாம் தரவேண்டும்.

இப்படிச் செலுத்து நிலைக் குறிப்பில் சமப்பாடு எப்போதும் காணப்படும் என்பது உண்மையானால் நம் ஒரு நாட்டின் செலுத்து நிலையில் எச்சப்பாடு அல்லது பற்றுக் குறை உள்ள தென்று பேசுவதன் பொருள் என்ன? ஒரு நாட்டின் செலுத்து நிலையில் சமநிலைக்கோடு (disequilibrium) உள்ளதென்று இரு சூழ்நிலைகளில் பேசலாம்.

1. நாம் கருதுவது கடந்த காலத்தின் செலுத்து நிலையாக இருந்தால், சமப்பாடு காணப்படும் எதிர்காலத்தைப் பற்றியதாக இருந்தால் சமப்பாடு இராது நாம் செலுத்த வேண்டுமென்று

கருதும் தொகைக்கு ஈடாக நமக்கு வரவேண்டிய தொகை இல்லாத போது பற்றுக்குறை, சமநிலைக்கேடு ஏற்பட்டதாகப் பேசலாம்.

இப்படி எதிர்நோக்கிய நிலையில் காணப்படும் சமநிலைக்கேடு எப்படி முடிவில் சமமாகிவிடுகிறதென்பது நாம் ஆராயப்போகிற விஷயங்களுள் ஒன்றாகும்.

2. முன்னர்க் கூறியபடி சில இனங்களை, தொகுதிகளை மட்டும் எடுத்துக்கொண்டு அவைகளுக்கு ஈடாக வரவுகள் இல்லை என்று காணும்போது, சமக் கேடு உள்ளதாகத் தோன்றும். இப்படிச் சில இனங்களை, தொகுதிகளை மட்டும் கருதும் வகைக்கு உதாரணம் பண்டங்களை மட்டும் எடுத்துக்கொண்டு பற்றுவரவுக் கணக்கிடுவது. பண்ட ஏற்றுமதி மதிப்பையும் இறக்குமதி மதிப்பையும் ஒப்பிடும் கணக்கு, 'கண்கூடான வர்த்தக இருப்பு நிலை' (balance of visible trade) என்பர். குறிப்புக் கீழ்க்கண்ட மாதிரி இருக்கலாம்:

| வரவு | ரு. கோடி | செலுத்து | ரு. கோடி |
|---|---|---|---|
| கண்கூடான ஏற்றுமதி (visible exports) | 60 | கண்கூடான இறக்குமதி | 100 |
| கண்கூடான வர்த்தகக் கணக்கில் பற்றுக் குறை | 40 | | |
| மொத்தம் | 100 | மொத்தம் | 100 |

இப்படிப் பண்டக் கணக்கை மட்டும் பார்ப்பதன் சிறப்பு அது கண்கூடான இனங்கள் சம்பந்தமானதாகையால் புள்ளிகளை எளிதில் சேகரிக்கலாம். ஆனால் கூடுமானால், கட்புலனாகா வர்த்தகத்தையும் (invisible trade) சேர்த்தே கணக்கிடுவது பயனுடையது. கட்புலனாகா இனங்களாவன: கடன் மேல் வட்டி, கப்பல் கூலி, பாங்குக் கமிஷன், நாடு சுற்றுவோர் செலவு ஆகியவை. இவைகளை ஒரு நாடு மற்றொரு நாட்டுக்கு விற்கும் போது பண்டங்கள் ஏற்றுமதி செய்வதற்குச் சமம். ஆகவே நாம் கட்புலனாகா பேரங்களையும் சேர்த்து ஒரு கணக்குத் தயாரிக்கலாம். இதை வர்த்தக இருப்புநிலைக் குறிப்பு (balance of trade) என்பார்கள். இந்தக் கணக்குக் கீழ்க்கண்டவாறு இருக்கும்:

| வரவு | ரூ. கோடி | செலுத்து | ரூ. கோடி |
| --- | --- | --- | --- |
| கண்கூடான ஏற்றுமதி | 60 | கண்கூடான இறக்குமதி | 80 |
| கட்புலனுகா ஏற்றுமதி | 40 | கட்புலனுகா இறக்குமதி | 10 |
| | | வர்த்தக இருப்புநிலை எச்சப்பாடு (balance of trade surplus) | 10 |
| மொத்தம் | 100 | மொத்தம் | 100 |

இந்தக் கணக்கில், கண்கூடான வர்த்தகக் கணக்கில் பற்றுக் குறை இருக்கிறதாயினும், மொத்த வர்த்தகக் கணக்கில் சமப்பாடு கண்கிறோம். கட்புலனுகா எச்சம் காண்க. இவ்வெச்சப் பாடு அயல் நாட்டுக்குக் கடனுகக் கொடுக்கப்பட்டிருக்கும் முதல் இனத்தில் சேரும்.

பிற நாட்டுக்குக் கடன் கொடுப்பதும் அவர்களிடமிருந்து கடன் பெறுவதும், பிற நாட்டுக்குச் செலுத்த வேண்டிய கடனைத் திருப்பிக் கொடுப்பதும் அவர்கள் திருப்பிக் கொடுப்பதும், பிற நாட்டினிடமிருந்து சொத்துகளை வாங்கலும் அவர்கள் நம் சொத்தை வாங்கலும் ஆகியவை எல்லாம் சேர்ந்தது 'முதல் பேரங்கள்' (capital transactions) எனப்படும். வர்த்தகக் கணக்கிலுள்ள எச்சப்பாடு (surplus) இம் முதற் கணக்கில் உள்ள பற்றுக்குறையை (deficit) ஈடு செய்யும். அதாவது ஒரு நாடு தான் வாங்குவதைவிட விற்பது அதிக மானுல் எச்சம் பிறநாட்டுக்குக் கடன் கொடுப்பதாகவோ, ஏற்கெனவே பட்ட கடனைத் திருப்பிச் செலுத்துவதாகவோ, அயல்நாட்டில் சொத்துகளை வாங்குவதாகவோ இருக்கும். எதிரிடையாக, ஒரு நாடு விற்பதைவிட அதிகமாக அயல் நாட்டில் இருந்து வாங்குவதனுல் வர்த்தகக் கணக்கில் பற்றுக்குறை இருந்தால், அந்நாடு அயல்நாட்டிடமிருந்து கடன் வாங்க வேண்டும். அல்லது கொடுத்த கடனைத் திருப்பிப் பெற்றுக் கொண்டிருக்க வேண்டும், அல்லது அவர்களுக்குச் சொத்துகளை விற்றுக் இருக்கவேண்டும். முதல் இனங்களைச் சேர்க்காத கணக்கை 'நடப்புக் கணக்கு' (current account) என்பதுண்டு. இதில் நாம் எச்சப்பாடு 10 கோடி காணப்படுவதாக வைத்துக்கொண்டோம் என்பதை நினைவிற் கொள்க. அது எப்படி முதற் கணக்குக்குச் செல்கிற தென்பதைக் கீழ்வரும் முழுக் கணக்குக் காட்டுகிறது:

## வர்த்தகக் கணக்கு (Trade Account)

| வரவு | ரூ. கோடி | செலுத்து | ரூ. கோடி |
|---|---|---|---|
| கண்கூடான ஏற்றுமதி | 60 | கண்கூடான இறக்குமதி | 80 |
| கட்புலனுகா ஏற்றுமதி | 40 | கட்புலனுகா இறக்குமதி | 10 |
| | | எச்சப்பாடு | 10 |
| மொத்தம் | 100 | மொத்தம் | 100 |

## முதல் கணக்கு (Capital Accounts)

| வரவு | ரூ. கோடி | செலுத்து | ரூ. கோடி |
|---|---|---|---|
| முதல் வரவுகள் (அயல் நாட்டில் கடன் வாங்குதல், கடன் திருப்பிப் பெறுதல், சொத்துகள் விற்றல்) | 10 | முதல் செலுத்து (கடன்கொடுத்தல், கடன் திருப்பிக் கொடுத்தல், சொத்து வாங்குதல்) | 20 |
| முதல் கணக்குக் குறை | 10 | | |
| மொத்தம் | 20 | மொத்தம் | 20 |

மேலே நாம் வர்த்தகக் கணக்கை நடப்புக் கணக்கு (current account) என்றும், மற்றதை முதற் கணக்கு (capital account) என்றும் குறிப்பிட்டோம். வர்த்தகக் கணக்குக்கும் முதற் கணக்குக்கும் வேறுபாடு முக்கியம். நடப்புக் கணக்குப் பேரங்கள் வருமானத்தைப் பாதிப்பன. பண்டங்களும் பணிகளும் பிறருக்கு விற்கப்படும்போது வருமானம் உற்பத்தியாகிறது. அயல் நாட்டிலிருந்து வாங்கும்போது நம் நிகழ்கால வருமானம் செலவு செய்யப்படுகிறது. நடப்புக் கணக்கின் வரவு நம் நாட்டு வருமானத்தைப் பெருக்குவதாகும். நடப்புக் கணக்குச் செலுத்துவது வருமானத்தைக் குறைப்பதாகும். இதற்கெதிரிடையாக, முதல் பேரங்கள் நம் நாட்டின் வருமானத்தை நேரடியாகப் பாதிப்பதில்லை; வருமானத்தில் இருந்தும் செய்யப்படுவதில்லை.

அடுத்தபடி, நாம் கணக்கில் சேர்க்கவேண்டிய மற்றோர் இனம், எதிர்ப்பயனிலா பேரங்கள் (unrequited transactions). இவைகளில் சில வரவுகள் வருமானமாகக் கருதக்கூடியன,

(ஒருவனுக்குத் தொடர்ந்து அயல் நாட்டிலிருந்து இனமாகப் பணம் வருமானால் அவன் அதை வருமானமாகக் கருதக்கூடும்.) பிற வரவுகள், சொத்துகளை (assets) ஒரு நாட்டிலிருந்து மற்றொன்றுக்குப் பெயர்க்கும் (transfer) தன்மையானவைகளாக இருக்கும். ஆனால், ஒரு நாடு ஒன்றைச் சொத்தாக நினைக்கும்போது மற்றது அதை வருமானமாகக் கருதக்கூடும். இவ்விதக் குழப்பங்கள் இருந்தபோதிலும் பொதுவாக எதிர்ப்பயனில்லா வருமானங்கள் எல்லாவற்றையும் முதலினத்தின் கீழ் அடக்குவது வழக்கம். இதைவிட, தனிப்பகுதியாகக் காட்டுவது நல்லதென்று தோன்றுகிறது.

ஒரு நாடு பற்றுக்குறைச் சிக்கலில் இருக்கிறதென்பதன் பொருள் இப்போதுள்ள நிலைமையே நீடிக்குமானால், நாடு தன்னுடைய ரிசர்வு (பொன், அயல் நாட்டுச் செலாவணி, கடன் வசதி) முழுவதையும் வாணிபத்தில் இழக்க நேரிடும் என்பதாகும். ஒரு நாடு தன்னுடைய ரிசர்வு முழுவதையும் இழக்கும் நிலையில் இருக்குமானால் அந்த நாடு செலுத்துநிலைச் சிக்கலில் (difficulties) இருப்பதாகக் கூறலாம். எந்த பேரங்கள் அதனுடைய ரிசர்வை மாற்றக்கூடுமோ அவைகளை மட்டும் தனித்துப் பார்த்தால், அந்த நாடு சிக்கலில் இருக்கிறதா என்று தெரியும். இதற்காகத்தான் பொன் பெயர்ச்சியையும், அயல் நாட்டுச் செலாவணிப் பெயர்ச்சியையும், குறுங்காலப் பொறுப்புகளில் மாறுதல்களையும், தனித்துப் பார்ப்பது வழக்கம். பொன்னும் அயல்நாட்டுச் செலாவணியும் எளிதில் காலியாகக் கூடியவை. குறுங்காலக் கடன் பேற்றுக்கும் எளிதில் ஓர் எல்லை தோன்றிவிடும். ஆகவே குறுங்கால முதல், அயல்நாட்டுச் செலாவணி, பொன் ஆகியவற்றின் பெயர்ச்சிகளைக் கருதி ஒரு நாட்டின் செலுத்துநிலையை மதிப்பிடுவது முறையாகும். ஒருபோது ஒரு நாட்டின் கணக்குக் கீழ்க்கண்டவாறு இருக்கலாம்.

| வரவு | ரூ. கோடி | செலுத்து | ரூ. கோடி |
|---|---|---|---|
| கண்கூடான ஏற்றுமதி | 60 | கண்கூடான இறக்குமதி | 80 |
| கட்புலனாகா ஏற்றுமதி | 40 | கட்புலனாகா இறக்குதி | 10 |
| நெடுங்கால முதல் வரவு (கடன் வாங்கியது) | 5 | நெடுங்கால முதல் செலுத்து (கடன் தந்தது) | 20 |
| செலுத்துக் கணக்குப் பற்றுக்குறை | 5 | | |
| மொத்தம் | 110 | மொத்தம் | 110 |

இக்கணக்கில் காணும் பற்றுக்குறை கீழ்க்கண்டவாறு ஈடு செய்யப்படலாம் :

| வரவு | ரூ. கோடி | செலுத்து | ரூ. கோடி |
|---|---|---|---|
| பொன் ஏற்றுமதி | 2 | செலுத்துக் கணக்குப் | |
| குறுங்காலக் கடன் | 3 | பற்றுக்குறை | 5 |
| மொத்தம் | 5 | மொத்தம் | 5 |

இவ்வீடுசெய் முதலின ஏற்றுமதிகள் பற்றுக்குறையை, சமநிலைக் கேட்டைக் காட்டுகின்றன.

# 34. அயல்நாட்டுக்குச் செலுத்தும் முறைகள்

நாடுகளுக்கிடையே நிகழும் பலவிதப் பொருளாதார பேரங்களும் செலுத்துநிலைக் குறிப்பில் இடம் பெறுகின்றன. அவைகளில் முக்கியமானவை பண்டங்களும், பணிகளும், முதலும் பொன்னும் ஆகும். இவை எல்லாவற்றுக்கும் ஈடாகப் பொருளாகவோ பணமாகவோ செலுத்தவேண்டி வரும். பொருளுக்குப் பொருள் பண்டமாற்ருகச் செலுத்த முடியுமாயினும், கடனைப் பொருளாகவும் பணிகளாகவும் தீர்க்க முடியுமாயினும், எல்லாம் பண மதிப்பின் அடிப்படையிலேயே நிகழ்கின்றன. ஏற்றுமதி செய்பவன் பணச் செலுத்தை எதிர் பார்க்கிருன். வெளிநாட்டில் கடன் வாங்குபவனும் பண உருவில் கடன் பெற நினைக்கிருன். உள்நாட்டில் நடக்கும் பேரங்களுக்கும் இக்கூற்றுகள் பொருந்துமாயினும் ஒரு முக்கிய வேறுபாடு உண்டு. உள்நாட்டில் பேரத்தின் அடிப்படையில் ஒரே பணம் ஆளப்படுகிறது. ஆனல் வெளிநாட்டுப் பேரத்தில் ஒவ்வொரு நாட்டிலும் பணம் வேறுபடுகிறது. ஆகவே இரண்டு நாடுகளுக்குள் எப்படிச் செலுத்து நடைபெறும் என்கிற கேள்வி எழுகிறது.

**மாற்றுக் கருவிகள் (Instruments of Exchange)**

நாடுகளுக்கிடையே பணச் செலுத்துக்கு ஆளப்படுவது பொதுவாக அயல்நாட்டு மாற்று (Foreign Exchange) எனப்படும். இந்த மாற்றைச் செய்வன சில கருவிகள். இவைகளின் மூலமாகவே செலாவணி பேரம் நடக்கிறது. அயல்நாட்டுச் செலாவணியை வாங்குபவர்கள், இறக்குமதி

செய்பவர்கள், வெளிநாட்டுக்குப் பணத்தை அனுப்ப விரும்புபவர்கள், அயல்நாட்டிலிருந்து செக்யூரிட்டிகள் வாங்க விரும்புபவர்கள், அயல்நாட்டுச் செலாவணியை விற்பவர்கள்; அயல்நாட்டுக்கு ஏற்றுமதி செய்பவர்கள், அயல்நாட்டவருக்குக் கடன் சான்றுகளை விற்றவர்கள், அல்லது அயல்நாட்டிடமிருந்து இனும் பெற்றவர்கள். சிலபோது தனி மக்களன்றிப் பணத் துறை அதிகாரிகளும் அயல்நாட்டுச் செலாவணி அங்காடியில் விற்கவும் வாங்கவும் நேரலாம். ஆனால், நாம் தனியார்களே பேரம் செய்வதாக வைத்துக்கொள்வோம். வாங்குவோருக்கும் விற்போருக்கும் இடையில் அயல்நாட்டுச் செலாவணித் தரகர்களாக அயல்நாட்டு மாற்று வியாபாரிகள் (foreign exchange dealers) உள்ளனர். இவர்களே கருவிகளை விற்பவர்கள்.

இனி அயல்நாட்டுச் செலுத்துக்கு ஆளப்படும் முக்கியமான கருவிகளை விளக்குவோம் :

### (1) வாணிபப் பண உண்டியல்கள்

உண்டியல் என்பது குறிப்பிட்ட தொகையைக் குறிப்பிட்ட ஆளுக்கு அல்லது அவன் உத்தரவு பெற்றவனுக்குக் கொடு என்ற ஒருவகை உத்தரவாகும். (இங்கிலாந்தில் உண்டியல் எனப்படுவது அமெரிக்காவில் வாணிப டிராஃப்டு எனப்படுகிறது.) ஏற்றுமதி செய்பவன் அயல்நாட்டில் இறக்குமதி செய்பவனுக்கு இந்த உத்தரவிடுவான். இந்த உத்தரவு, வசதியைப் பொறுத்து, எந்த நாணயத்திலும் எழுதப்படலாம். நாம் ஸ்டெர்லிங்கில் எழுதப்படுவதாக வைத்துக்கொள்வோம். இந்த உண்டியல் (1) 'கண்டவுடன் செலுத்த' வேண்டிய (payable on sight) நிபந்தனையுடையதாக இருக்கலாம், அல்லது (2) காலத் தவணையில் செலுத்துவதாக (time draft) இருக்கலாம். ஏற்றுமதி செய்பவன் பம்பாயிலிருந்து மான்செஸ்டருக்குப் பருத்தி அனுப்புவதாக வைத்துக்கொள்ளுவோம். அவன் ஏற்றுமதி சம்பந்தமான பல ஆவணங்களுடன் (invoice, insurance certificates, bill of lading, consular invoice ஆகியவை) உண்டியலை இறக்குமதி செய்பவனுக்கு அனுப்புவான். ஏற்றுமதி செய்பவன் இறக்குமதி செய்பவனுடைய நிலைமையில் நம்பிக்கையற்றவனாயின், உண்டியலை இங்கிலாந்தில் ஓர் ஏஜண்டுக்கு அனுப்பி, அதை இறக்குமதி செய்வோனுக்குப் பிரசன்னம் (present) செய்யும்படி சொல்லுவான். இறக்குமதி செய்பவன் ஆவணங்களைப் பெற்று, அவை ஒப்பந்தப்படி இருக்கின்றனவா என்று பார்த்து,

உண்டியல் மேல் 'ஏற்றேன்' (accepted) என்று எழுதிக் கையொப்பமிட்டு, ஷி ஏஜன்டு மூலம் ஏற்றுமதி செய்வோனுக்கு அனுப்புவான். இப்படி ஏற்பெழுதியதும் உண்டியலோடு இணைக் கப்பட்ட ஆவணங்கள் இறக்குமதி செய்பவனால் உடனே பெறப் படலாம், அல்லது பெறக்கூடாததாகலாம். இது உண்டியலின் வகையைப் பொறுத்தது. உண்டியலில் இரண்டுவகை உண்டு. ஒன்று 'ஏற்பின்மேல் ஆவணங்கள்' (Documents on Acceptance = D/A) என்பது; மற்றொன்று 'செலுத்தின் மேல் ஆவணங்கள்' (Documents on Payment = D/P) என்பது. D/A உண்டியலாக இருந்தால் இறக்குமதி செய்பவன் ஏற்பு எழுதினவுடன் ஆவணங்களை பெற்றுக்கொள்ள உரிமை உடையவனாகிறான். அதனால் உடனே பருத்தியை நேரே துறைமுகத்திலிருந்து பெற உரிமை பெறுகிறான். ஆனால் ஏற்றுமதி செய்பவனுக்கு இவனிடத்தில் பழக்கமில்லையாயின், D/P உண்டியல் வகையை எழுதியிருப்பான். இப்படியானால் இறக்குமதி செய்பவன் பருத்தியை அடைய வேண்டுமானால் பணத்தைச் செலுத்திய பிறகே ஆவணங்களைப் பெறமுடியும். அவன் ஒரு பாங்கின் உதவியை நாடி அதன் மூலம் உரிமை பெற வேண்டியிருக்கும். இறக்குமதி செய்பவன் நிலை யாதாயினும், ஏற்றுமதி செய்பவனுக்கு உண்டியலில் கண்ட தொகை 90 நாட் களில் வர வேண்டியதாகிறது. உடனே தனக்குப் பணம் தேவை யானால் உண்டியலை அவன் ஒரு பாங்குக்கு விற்கலாம். பாங்கு வாங்கும்போது, 3 மாதம் சென்றுதான் உண்டியல் முதிர்ந்து அதை ஏற்றவன் வழியாகப் பணம் கிடைக்குமாதலால், காத் திருக்க வேண்டிய மூன்று மாத வட்டியை இந்த உண்டியல் தொகையிலிருந்து கழித்து மீதியையே தரும். இதைத் தான் பாங்குக் கழிவு செய்தல் (discounting) என்பது. இங்கு எழுகிற முக்கிய வினா, ஆங்கிலேயன் பவுனில் செலுத்திய தொகை இந்திய ஏற்றுமதி வியாபாரிக்கு எப்படி ரூபாயாக மாறி வருகிறது என்பது. இரு நாட்டிலும் தொடர்புடைய (அல்லது கிளையுடைய) ஒரு மாற்றுப் பாங்கு (Exchange Bank) ஒரு பணத்தை மற்றொரு பணமாக மாற்றித் தரும்.

**(2) வாணிபக் கடன் கடிதங்கள் (Commercial Letters of Credit)**

மேற்கண்ட உண்டியல் முறையில் ஓர் ஆபத்து இருக்கிறது. அதாவது குறிப்பிட்ட முதிர்வு தேதியில் இறக்குமதி செய்பவன் உண்டியல் தொகையைச் செலுத்த மறுக்கலாம் அல்லது சக்தி யற்றுப் போகலாம். ஏற்றுமதி செய்பவன் D/P உண்டியலாக

எழுதினாலும் போதுமான பாதுகாப்பாக இருக்காது. ஆகவே, இறக்குமதி செய்பவனுக்குப் பதிலாக ஒரு பாங்கே பொறுப்பை ஏற்றுக்கொள்ளலாம். இப் பாங்கு, வணிகக் கடன் கடிதம் (commercial letter of credit) ஒன்றை இறக்குமதி செய்வோனுக்குத் தருகிறது. இறக்குமதி செய்யும் வியாபாரியின் பேரில் எழுதப்படும் உண்டியலைத் தானே ஏற்க ஒப்புவதாக அந்தப் பாங்கு இதில் எழுதும். இங்கிலாந்தில் பருத்தி இறக்குமதி செய்பவன் அங்கு ஒரு பாங்கிடம் சென்று இவ்விதமான ஒரு கடிதத்தைப் பெற்று ஏற்றுமதி செய்யும் இந்தியனுக்கு அனுப்பலாம். இந்த விதமான கடிதமுடைய உண்டியலின் முக்கியம் என்னவெனில், பாங்கு ஏற்புடைய உண்டியல்கள் (bank acceptances) ஒரு சிறப்பு வகையாகக் கருதப்படுவதாகும். பாங்கு ஏற்புடைய உண்டியலை ஏற்றுமதி வியாபாரி எளிதில் குறைந்த கழிவு விகிதத்தில் விற்க முடியும், அல்லது பயமின்றித் தவணை நாள் வரைக்கும் வைத்திருக்கலாம்.

### (3) பாங்குப் பண உத்தரவு (Bank Drafts)

அயல்நாட்டுச் செலுத்துக் காரியத்திலும் ஏன் செக்குகளை ஆளக்கூடாது? கூடாமைக்குக் காரணம் அயல்நாட்டார் செக்கை ஏற்கத் தயங்குவதும், தீர்வு (clearing) முடிய நெடு நாளாவதும்தான். ஆயினும் பாங்குகள் செக்குக்கு ஒப்பான ஒரு கருவியை உண்டாக்கியுள்ளன. இவைகளுக்குப் பாங்கு டிராஃப்டுகள் என்று பெயர். பாங்கு டிராஃப்டு என்பது ஒரு நாட்டின் பாங்கு அயல்நாட்டின் பாங்கொன்றுக்கு, அல்லது தன் கிளை பாங்குக்கு விடுக்கும் ஓர் உத்தரவாகும். இது குறிப்பிட்ட தொகையைக் குறிப்பிட்ட நபருக்குக் கொடு என்று கூறும். ஆகவே பாங்கு டிராஃப்டுகளும் செக்குகளுக் கொப்பானவை. வேறுபாடு, இது ஒரு பாங்கு மற்றொரு பாங்குக்கு அனுப்பும் உத்தரவு. இந்தியன் ஒருவன் இங்கிலாந்தில் ஒரு புத்தகக் கடைக்கு ஒரு தொகை அனுப்ப வேண்டியதாக வைத்துக் கொள்வோம். இவன் ஒரு பாங்குக்குச் சென்று ஒரு ஸ்டெர்லிங் டிராஃப்டை அந்தப் புத்தகக் கம்பெனிக்குச் செலுத்துடையதாக வாங்கலாம். அந்த டிராஃப்டு லண்டன் பாங்கு ஒன்றின் மேல் எழுதப்பட்டிருக்கும். உண்டியலுக்கும் இதற்கும் உள்ள வேறுபாடு, டிராஃப்ட் எழுதுவது இறக்குமதி செய்பவனிடமும், உண்டியல் ஏற்றுமதி செய்பவனிடமும் தோன்றுகின்றன என்பதாகும்.

**(4) தந்தி வழிச் செலுத்து** (Cable or Telegraphic Transfer)

டிராஃப்டு அனுப்புவதிலுள்ள கால தாமதத்தைக் குறைக்க விரும்பினால் தந்தி மூலம் உத்தரவை அனுப்பலாம். அயல் நாட்டில் நாம் பிரயாணம் செய்யும்போது பணமுடை ஏற்பட்டால் சிலமணி நேரத்தில் நம் நாட்டிலிருந்து இம் முறையில் பணம் பெறலாம்.

**(5) பிற கருவிகள்** (Other instruments)

பிரயாணச் செக்கு (traveller's cheques), கடன் கடிதங்கள் (letters of credit), அஞ்சல் பண உத்தரவு (money order) ஆகிய முறைகளும் உள்ளன.

# 35. பணமாற்று அங்காடி

## (Foreign Exchange Market)

மேலே மாற்றுக் கருவிகளை வாங்குவது, விற்பது மூலம் அயல்நாட்டிலிருந்து வரவைப் பெறுவதும் அயல்நாட்டுக்குச் செலுத்துவதும் நிகழ்கிறதென்றோம். ஆனால் மாற்று வியாபாரிகளுக்கு எங்கிருந்து அயல்நாட்டுச் செலாவணி கிடைக்கிறது, அவர்கள் பெறும் செலாவணிகளை எப்படிப் பயன்படுத்துகிறார்கள் என்பதை விளக்கவில்லை. ஒரு தனி மாற்று வியாபாரி தன் பேரத்துக்குப் போதிய அளவு அயல்நாட்டுச் செலாவணியை வைத்திருப்பான்; அதற்கு மேல் வைத்திருக்க விரும்பமாட்டான். எச்சத்தை விற்பதும், பற்றுதபோது வாங்குவதும் செய்து ஒரு சமநிலையில் இருப்பான். அங்காடி முழுதும் சேர்ந்து எவ்வாறு சமநிலை அடைகிறது? இதை நாம் அறிய வேண்டும்.

முதலில் நாம் ஒரு 'வரவு' என்ன விளைவுடையதென்று பார்ப்போம். அயல்நாட்டிலிருந்து வரவு உண்டானால் அது இரண்டு வித விளைவுகளில் ஒன்றை உடையதாகலாம். ஒன்று, ஏற்றுமதி செய்பவனுக்கு அயல்நாட்டில் 'வைப்பு' (deposit) உயரலாம்; அல்லது இறக்குமதி செய்பவன் ஏற்றுமதி செய்த நாட்டில் வைத்திருந்த வைப்புக் குறையலாம். ஓர் உதாரணத்தை வைத்துப் பேசுவோம். ஏற்றுமதியால் இந்தியாவின் அயல்நாட்டுப் பேரக் கணக்கில் 1000 ரூபாய்க்கு வரவு(credit) வருவதாக வைத்துக் கொள்வோம். இதற்கு எதிரான பற்று (debit) இருக்கும், அயல்நாட்டில் இந்தியாவுக்குரிய வைப்பு ஏறலாம், அல்லது இந்தியாவில் அயல்நாட்டானுக்குரிய வைப்புக் குறையலாம். அடுத்தபடி, இந்தியா 1000 ரூபாய் செலுத்துச் (payment) செய்வதாக வைத்துக்கொள்வோம். அயல்நாட்டில் இந்தியாவுக்குரிய பண வைப்புக் குறையலாம்,

அல்லது அயல்நாட்டினர் நம் நாட்டில் வைத்திருக்கும் இருப்பு உயரலாம்.

(A) ஒருபோது வரவும் செலுத்தும் நடப்புக் கணக்கில் (current a/c) சமமாக இருக்கிறதாயின் என்ன நிகழ்ந்திருக்க வேண்டும்?

நம் ஏற்றுமதியால் (1) நம் அயல்நாட்டிருப்பு உயர்ந்திருக்கும், அல்லது (2) அயல்நாட்டார் நம் நாட்டில் வைத்திருந்த இருப்புக் குறைந்திருக்கும். நம் இறக்குமதியால் (3) அயல் நாட்டார் நம் நாட்டில் வைத்திருந்த இருப்பு உயரும், அல்லது (4) அயல்நாட்டில் நம் இருப்புக் குறைந்திருக்கும். முடிவில் மொத்தத்தில் நடப்புக் கணக்குக் காரணமாகத் தோன்றும் செலாவணி பேரங்கள் ஒன்றுக்கொன்று ஈடாகும். ஓர் உதாரணம் தருவோம். இந்தியாவின் நடப்பு ஏற்றுமதியால் வரவு 1000 இலட்ச ரூபாய் என்றும், இறக்குமதியால் செலுத்து 1000 இலட்ச ரூபாய் என்றும் வைத்துக்கொள்வோம். இந்தியாவின் வரவு 1000 இலட்சம் எப்படிப் பெறப்பட்டிருக்கும்? 2ஆவது நடவடிக்கை நிகழ்ந்திருக்கும், அதாவது அயல்நாட்டினர் இந்தியாவில் தமக்குரிய இருப்பிலிருந்து 750 இலட்ச ரூபாயைக் கொடுத்திருக்கலாம். அயலாரின் இந்திய இருப்பு – 750 இலட்ச ரூபாய். அதோடு 1-வதும் நிகழ்ந்திருக்கும். அதாவது மீதி 250 இலட்ச ரூபாய்க்கு இங்கிலாந்தில் இந்தியாவின் இருப்பு உயர்ந்திருக்கும். (இந்தியாவின் அயல்நாட்டிருப்பு +250 இலட்சம் ரூபாய்.) இனி, இறக்குமதியால் (3) அல்லது (4) நிகழ்ந்திருக்கும். நாம் 750 இலட்சம் ரூபாயை இங்கிலாந்தில் இருக்கும் இருப்பிலிருந்து செலுத்தி இருப்போம். (அயலாரின் இந்திய வைப்பு + 750 இலட்சம் ரூபாய்). மீதி 250 இலட்ச ரூபாயை அயல்நாட்டார் இந்திய வைப்பை உயர்த்த ஆண்டிருப்பார்கள். (நம் அயல் நாட்டிருப்பு — 250 இலட்ச ரூபாய்) இந்த நடவடிக்கைகளைக் கீழ்க்கண்டவாறு காட்டலாம் :

| | அயலாரின் இந்திய இருப்பு | இந்தியரின் அயல்நாட்டிருப்பு |
|---|---|---|
| இந்தியாவுக்கு அயல்நாட்டிலிருந்து வரவு | — 750 | + 250 |
| இந்தியா அயல்நாட்டிற்குச் செலுத்து | + 750 | — 250 |

நாம் அயல்நாட்டில் கூடுதலாகப் பெறுவதிலிருந்து அயல் நாட்டினர்தம் நம் நாட்டு வைப்பிலிருந்து இழப்பதைக் கழி.

அயலார் நம் நாட்டில் கூடுதலாகப் பெறுவதிலிருந்து நாம் நமது அயல்நாட்டு வைப்பிலிருந்து இழப்பதைக் கழி. இரண்டும் சம நிலையாக இருக்கும். வேறு வகைகளில் நிகழ்கால வரவு செலுத்துகளைச் சரிக்கட்டினாலும் இவ்விதச் சமத்துவம் இன்றி யமையாதது. மொத்த நடப்புச் செலவும் நடப்பு வரவும் சமமா யிருந்தால், அயல்நாட்டுச் செலாவணிக்கு மொத்தத் தேவைத் தொகையும் அளிப்புத் தொகையும் சமமாயிருக்கும், நாடு களுக்கிடையே செலுத்துப் பிரச்சினை இருக்காது.

(B) அப்படிக்கின்றி நடப்புச் செலுத்துக் கணக்கில் பற்றுக் குறை (deficit) இருந்தால் எப்படிப் பைசலாகும்?

முக்கியமான வழிகள் :

(1) அயல்நாட்டுப் பாங்குகளில் வைத்துள்ள இருப்பைக் குறைத்துக் கொள்ளலாம், அல்லது நம் நாட்டில் உள்ள அவர்களது இருப்பை அதிகப்படுத்திக் கொள்ளலாம்.

(2) அயல்நாட்டிலிருந்து கடன் வாங்கலாம்.

(3) பொன்னை ஏற்றுமதி செய்யலாம்.

(4) அயல் நாட்டிலிருந்து கொடை (gift), அல்லது மான்யம் (grant) பெறலாம்.

இந்த நான்கு வகைகளும் நம் நாட்டின் செலுத்துநிலைக் கணக்கில் வரவு வைக்க வேண்டிய இனங்கள். ஒன்றும் இரண்டும் முதலின உள்ளோட்டம் (capital inflow). மூன்றாவது பொன் வெளியோட்டம் (gold outflow). நான்காவது ஒருதிறச் செலுத்து. முன்னர், நடப்புக் கணக்கில் ஏற்படும் பற்றுக்குறை, வேறு கணக்கில் ஏற்படும் எச்சப்பாட்டால் எவ்வாறு ஈடுசெய்யப் படும் என்று கண்டோம். இது இன்றியமையாத தொடர்பு. ஏனெனில் யாதானும் ஒரு செலுத்து வசதியின்றி ஒரு நாடு அயல்நாட்டு வாணிகம் நடத்த முடியாது. நடப்புச் செலுத்து கள் நடப்பு வரவுகளை விட எச்சமாக இருந்தால் எவ்வழியாக வாயினும் அது ஈடு செய்யப்படும். எப்படியாவது என்பது முடிவில் அயல்நாட்டில் 'கடன்' பெறுவது என்று பொருள் படலாம்.

ஒரு நாட்டின் செலுத்து அதன் செலுத்து வசதிக்கு மிஞ்ச முடியாது என்று கூறுவதற்கு அடிப்படை, மொத்தப் பற்றும்

வரவும் சமமாய் இருக்க வேண்டிய இன்றியமையாமையே. இந்த விதியிலிருந்து பெறப்படும் முடிவுகள் பல. ஒரு நாடு பொன்னையோ, அயல்நாட்டில் இருப்பையோ, சொத்தையோ, அல்லது கடனையோ, இனும் வரவையோ, ஆள வழியில்லையானால் (exchange rate) மாறிச் சமநிலை உண்டாகும். பற்றுக்குறையால் நாட்டின் பணத்தின் மதிப்புக் குறைந்து, அயல்நாட்டுப் பணத்திற்குத் தரவேண்டிய நம் நாட்டுப் பண வீதம் ஏறி, அளிப்பானது தேவைக்கிடாகும்.

இன்றேல் நெடுங்கால முதல் நம் நாட்டுக்கு வந்து ஈடு செய்ய வேண்டும். ஒரு நாட்டில் நீண்ட கால முதல் (long term capital) வந்து கொண்டே இருந்தால், அதன் இறக்குமதி ஏற்றுமதியை விட ஏற்றமாயிருக்க வேண்டும். நடப்புக் கணக்கில் பற்றுக் குறை இருந்தேயாக வேண்டும்.

இந்த எச்ச இறக்குமதியை வேறு வழியில் பெறுவதற்கும், நெடுங்கால முதல் உள்ளோட்டத்தால் பெறுவதற்கும் வேறுபாடு உண்டு. நெடுங்கால முதல் உள்ளோட்டமானால் அது நாட்டின் உற்பத்தித் திறனைப் பெருக்கிப் பின்னர்க் கடனைத் திருப்பிக் கொடுக்கும் சக்தியை உண்டாக்குகிறது. அப்போது நடப்புக் கணக்கில் வரவு இனங்கள் தோன்றும். ஆனால் வேறு வகைகளில் நிகர இறக்குமதி எச்சப்பாடு ஈடு செய்யப்பட்டால் அவையெல்லாம் தற்காலிக முறைகளேயாகும். பொன்னால், அயல் நாட்டு இருப்பால், அல்லது வேறு சொத்துகளால் தொடர்ந்து இறக்குமதி எச்சப்பாட்டுக்குச் (import surplus) செலுத்தப்படின் முடிவில் இந்த விதமான செலுத்து வசதிகள் எல்லாம் காலியாகி விடும். குறுங்கால முதல் உள்ளோட்டம் (short term capital inflow) தற்காலிகமாகத்தான் அயல்நாட்டுச் செலாவணியைத் தருகிறது. ஏனெனில் அது திடீரென்று வெளியேறலாம். கொடைகளும் மானியங்களும் நிச்சயமற்ற செலாவணி வரவுகள். நம் நாட்டினர் வெளிநாட்டில் குடியேறியிருந்து பணம் அனுப்பினால் அது ஒருவேளை நம்பக்கூடியதாயிருக்கலாம்.

ஆயினும் பொன்னும் குறுங்கால முதல் இயக்கங்களும் ஒரு முக்கியமான பணியைச் செய்கின்றன. நடப்புக் கணக்கில் ஏற்படும் தற்காலிகப் பற்றுக்குறையை நெடுங்கால முதல் இயக்கங்கள் ஈடு செய்ய முடியாதபோது, இவை உதவுகின்றன. ஒரு சிறு காலத்தில் காணப்படும் பற்றுக்குறையை ஈடு செய்யும் அளவுக்கு நெடுங்கால முதலியக்கம் நேருமென்று எதிர்பார்க்க முடியாது. சாதாரணமாகச் சில ஆண்டுகளில் எச்சப்பாடும்

வேறுண்டுகளில் பற்றுக்குறையும் இருக்குமானால் எச்சப்பாடு களைக் கொண்டு பற்றுக்குறைகளைப் பைசல் செய்யலாம். ஆனால் தொடர்ந்து நடப்புக் கணக்கில் பற்றுக்குறையோ எச்சமோ இருக்க, அதற்கேற்ப நெடுங்கால முதல் இயக்கமில்லையானால், இது நாட்டுச் செலுத்து நிலையில் அடிப்படைச் சமநிலைக் கேடு (disequilibrium) உள்ளதைக் காட்டும். தொடர்ந்து எச்சமோ குறையோ நடப்புக் கணக்கில் இருக்குமானால் அடிப்படையில் அந்நாடு சரியான செலுத்துநிலையில் இல்லையென்று தெரிகிறது. பற்றுக்குறை தொடர்ந்திருந்தால் நாடு சக்திக்கு மிஞ்சி வாழ்கிறது என்று பொருள். தொடர்ந்து எச்சமிருந்தால் அதுவும் நல்ல தன்று; நாட்டில் அது ஒரு பூரிப்புக்குக் (boom) காரணமாகும். பிறநாட்டில் மந்தத்துக்குக் காரணமாகலாம்.

சிலபோது நடப்புக் கணக்கில் இருக்கும் பற்று அல்லது எச்சம் ஒருமுகப் பெயர்ச்சியால் ஈடு செய்யப்படலாம். உதாரணமாக, ஒரு யுத்த நஷ்டஈடு (indemnity) கொடுக்கும் நாடு முடிவில் நடப்புக் கணக்கில் எச்சப்பாட்டைத் தோற்றுவது மூலமாகத்தான் செலுத்த முடியும். வேறு முறைகள் தற்காலிக மானவைகளேயாகும். அதைப் பெறும் நாடும் நடப்புக் கணக்கில் பற்றுக்குறையுடன் இருப்பது இன்றியமையாதது. இப்படிப் பெறும் நாட்டைச் சமநிலைக் கேடுடையதாக நினைக்கக் கூடாது. இப்படியே, தனியார் அனுப்பும் இனம் (grants) பணத்தைப் பெறும் நாடும் இறக்குமதி எச்சப்பாடுடைமையாவது, இன்றி யமையாதது. இதைச் சமநிலைக் கேடாக நினைக்கக்கூடாது. நாடுகள் ஒன்றுக்கொன்று மானியங்கள், நன்கொடைகள் தரும்போது பெறும் நாடு, எச்சமான இறக்குமதி பெறுவது இன்றியமையாதது. ஐரோப்பிய நாடுகள் இறக்குமதிக்குச் செலுத்த முடியாத நிலையில் அமெரிக்கர் இரண்டாம் உலக யுத்தத்துக்குப் பின் அனுப்பிய பொருள்கள் இவ்வகையைச் சேர்ந்தன. அமெரிக்கா உதவி செய்ய வேண்டியதற்குக் காரணம் ஐரோப்பாவின் செலுத்துநிலையில் தொடர்ந்து பற்றுக் குறை சமநிலைக்கேடு இருந்ததேயாகும்.

**பன்முகச் சமநிலை (Multilateral Equilibrium)**

ஒரு நாடு சமநிலையில் இருப்பதாகக் கூற, அது ஒவ்வொரு நாட்டோடும் தனித்தனியாக வாணிபத்தில் நடப்புக் கணக்கில் சமப்பாடு உடையதாக இருக்க வேண்டுமென்று நினைக்கக்கூடாது. நாடுகளுக்கிடையே நாணயமாற்றுத் தடையின்றி நடைபெறு மாயின் இது அவசியமில்லை. பிரான்சில் நடப்பு ஏற்றுமதி

(இங்கிலாந்துக்கு இறக்குமதி) எச்சமாய் இருந்தால், பிரெஞ்சுக் காரர்கள் இங்கிலாந்தில் ஸ்டெர்லிங் இருப்பை வளர்த்திருப் பார்கள். பிரான்சு நாடு ஜெர்மனியில் இருந்து எச்சமாக இறக்குமதி செய்திருக்கலாம். ஜெர்மனி இங்கிலாந்துடன் பற்றுக்குறை உடையதாக இருக்கலாம். பிரான்சு ஸ்டெர்லிங் இருப்பிலிருந்து ஜெர்மனிக்குச் செலுத்தலாம். அல்லது ஜெர்மனி வேறுநாட்டுடன் பற்றுக்குறையுடையதாயின் அது ஸ்டெர்லிங்கை வேறு பணமாக மாற்றிக் கொடுக்கலாம். இரு நாணயங்களும் தடையின்றி வேறொரு செலாவணியாக மாறும் உரிமையுடைய தானல் ஒரு நாட்டின் நிகர ஏற்றுமதி வருவாயைக் கொண்டு அதற்கு வேண்டிய இறக்குமதி எந்த நாட்டிலிருந்து வந்தாலும் செலுத்தித் தீர்க்கலாம். இரு நாடுகளைத் தனிச் சோடியாக எடுத்துக்கொண்டு சமநிலை இல்லை என்று முடிவு செய்வது தவறு.

**மாற்று வீதம்**

அடுத்தபடி, பண மாற்று வீதப் பிரச்சினையை விளக்குவோம். நாணய மாற்றுவீதம் என்பது ஒரு குறிப்பிட்ட செலாவணிக்குப் பதிலாக மற்றொரு நாட்டுச் செலாவணியில் கிடைக்கும் அலகுகள்.

நாணய மாற்று வீதத்தை இரண்டு விதமாகக் கூறலாம். இங்கிலாந்தில் மக்கள் மாற்று வீதத்தைக் குறிப்பிடும்போது ஒரு ஸ்டெர்லிங்குக்கு எவ்வளவு அயல்நாட்டுப் பணம் கிடைக்கும் என்று குறிப்பிடுகிறார்கள். ஆங்கிலேயர் பணமாற்று வீதத்தைப் பற்றிப் பேசும்போது ஒரு பவுண்டுக்கு எத்தனை அயல்நாட்டுப் பணம் கிடைக்கும் என்று பேசுகிறார்கள். ஆனல் மற்ற நாடுகளில் ஓர் அயல்நாட்டுப் பணத்தைப் பெற எத்தனை அலகுகள் தம் நாட்டுப் பணத்தில் கொடுக்க வேண்டுமென்று கூறுவது வழக்கம். பின்னதே அங்காடி விலை கூறுமுறைக்கு ஒத்ததாகும். இந்தியன் ஒருவன் டாலரை வாங்குவதாக வைத்துக்கொண்டால் அவன் நாணய மாற்று வீதத்தை விசாரிக்கும்போது ஒரு டாலர் என்ன (ரூபாய்) விலை என்று கேட்பான். அதற்கு விடையாக 8 ரூபாய் அல்லது 8½ ரூபாய் என்று கூற வேண்டியிருக்கும். வாங்கும் பொருளின் விலையைக் கொடுக்கும் பொருளின் (பணத்தின்) வீதத்தில் குறிப் பிடுவதே இயற்கை. இதுவே அமெரிக்க முறை. ஆனல் இங்கிலாந்தில் முறை இதற்கு நேர்மாறு. காரணம் அவர்கள் தம் பணத்தின் மதிப்பின் மேல் கவனத்தைச் செலுத்துகிறார்கள். பவுண்டுக்குப் பதில் அயல் பணம் ஒவ்வொன்றிலும் எவ்வளவு கிடைக்குமென்று கருதுகின்றனர். நாணயமாற்றுச் சம்பந்தமாக,

ஒவ்வொரு நாட்டாரும் இந்த முறையில் பேசுவதும் இயற்கையே. நாம் இந்நூலில் அமெரிக்க முறையையே பின்பற்றுவோம்.

பிரிட்டிஷ் தலைகீழ் முறை குழப்பத்தை உண்டாக்கக்கூடும். இலண்டனில் பேசுவோர் "மாற்று வீதம் குறைந்தது" என்றால், அது அயல் நாட்டுப் பணத்தின் மதிப்பு ஏறிப் பவுண் டொன்றுக்குக் குறைந்த அளவு அயல் நாட்டுப் பணம் பெறக் கூடியதாகப் பொருள். ஆனால் மற்ற நாணயமாற்று அங்காடி களில் "மாற்று வீதம் குறைந்தது" என்றால் அயல்நாட்டுப் பணத்துக்கு முன்னைவிடக் குறைவாக உள்நாட்டுப் பணம் கொடுக்க வேண்டுமென்பதாகும். நாம் நூல்களைப் படிக்கும் போது எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

இந்தப் பணமாற்று, வீதங்கள் ஏறவும் இறங்கவும் காணலாம். இப்படி ஏறி இறங்குவது நாடுகளுக்கிடையே நிகழும் செலுத்துகள் சம்பந்தமாகப் பிரச்சினைகளைத் தோற்று விக்கின்றன. மாற்று வீதத்தை ஒருபோது நிர்ணயிக்கும் காரணிகள் எவை, மாற்று வீதம் அடிக்கடி மாறுவதற்குக் காரணிகள் எவை என்று நாம் ஆராய வேண்டும். இவைகளை ஆராய்வதற்கு முன்னால் எவ்வெவ் வகையில் மாற்று வீதங்கள் நிர்ணயமாகும் என்பதைப் பற்றி ஒரு வகைப் பாகுபாடு செய்து கொள்வோம்.

### மாற்று வீத நிர்ணய வகைகள்

பணமாற்று வீதம் என்பது இரண்டு நாணயங்களுக்கிடையே உள்ள விலை. ஒரு நாணயத்திற்கு ஈடாக மற்றொரு நாண யத்திற்குக் கொடுக்க வேண்டிய விலை. ஆகவே அளிப்பு, தேவை ஆகிய இரண்டு சக்திகளால் விலை நிர்ணயமாவதாக வேண்டும், ஒரு பண்டத்தின் விலை மாறுதல் அதன் அளிப்பு, தேவை மாறுதலையும், நெகிழ்ச்சியையும் பொறுத்தது போல, ஒரு பணத்தின் மாற்று வீதமும் அதன் அளிப்பையும் தேவையையும் பொறுத்தது.

தேவை, அளிப்பு என்ற சொற்களின் ஆற்றலை உணர வேண்டும். இந்தியன் ஒருவன் தன் ரூபாயை டாலராக மாற்ற விரும்புவதாக வைத்துக் கொள்வோம். அப்போது அவன் செயல் ஒருபுறம் ரூபாய் அளிப்பாகவும், மற்றொருபுறம் டாலருக்குத் தேவையாகவும் இருக்கிறது. டாலர் வைத் திருப்பவன் ரூபாயாக மாற்ற விரும்பினால் அது ஒருபுறம் டாலரை அளிப்பதாகவும், மற்றொருபுறம் ரூபாய்க்குத் தேவை

யாகவும் இருக்கிறது. ஆகவே டாலர் தேவை என்பது ரூபாய் அளிப்புக்கு நேர். டாலர் அளிப்பு என்பது ரூபாய்த் தேவைக்கு நேர். நாம் மாற்று அங்காடியில் ஏதாவது ஒரு நாணயத்தின் மாற்றைப் பற்றிப் பேசும்போது இதை மறக்கக்கூடாது. உதாரணமாக, டாலருக்குள்ள மாற்று மதிப்பு அதன் தேவை, அளிப்புப் பலத்தால் நிர்ணயிக்கப்படுகிறது என்று சொல்லும் போது, அதன் பின்புறத்தில் ரூபாய் அளிப்பும் தேவையும் இருக்கின்றன என்பதை மறக்கக்கூடாது.

ஒருபோது ஒரு பணத்துக்குள்ள தேவைத் தொகையும் அதற்குள்ள அளிப்புத் தொகையும் சமமாக இருக்குமென்று எதிர்பார்ப்பதற் கிடமில்லை. இந்தியன் ரூபாயை அளித்து டாலரை விரும்பும்போது, அமெரிக்காவில் இதற்கேற்ப டாலர் அளிக்கப்படும் என்று நினைப்பதற்கில்லை. ஆகவே பண அங்காடி யில் ஒரு பணத்திற்குள்ள தேவைக்கும் அளிப்புக்கும் பொருத்த மின்மை காணப்படலாம். ஆயினும் முடிவில் யாதோ ஒரு வீதத்தில் ஒன்றுக்கொன்று மாற்றப்படுகிறது. ஒரு பண்டத்தின் அளிப்பு அதிகமாயிருந்து தேவை அதற்குக் குறைவாயிருந்தால் அளிப்போர் அப்பொருளின் விலையைக் குறைக்க வேண்டி வரும். அதுபோல ரூபாய் அளிப்பு அதிகமான நிலையில் அதன் விலையைக் குறைக்க வேண்டிவரும், அதாவது ஒரு டாலருக்கு முன்னைவிட அதிகமான ரூபாய் கொடுக்க வேண்டி வரும். இது ரூபாயின் மாற்று மதிப்புக் குறைவதாகும். ரூபாய்க்கும் டாலருக்கும் உள்ள மாற்று வீதம் எட்டு ரூபாய்க்கு ஒரு டாலர் என்று வைத்துக்கொள்வோம். ஒரு மாதத்தின் முதல் தேதியில் திடீரென அதிகமான டாலரை வாங்க இந்தியர் விரும்புவதாக வைத்துக் கொள்வோம். அதே போது அமெரிக்காவில் இருப்ப வர்கள் இந்திய ரூபாயை விரும்பி டாலர் அளிக்க முன்வரவில்லை என்று வைத்துக்கொள்வோம். ஆகவே டாலர் அளிப்பு ஒரு நிலையில் இருக்க, அதற்குள்ள தேவை அதிகமாகிறது. டாலர் தேவை அதிகரிப்பு என்பதை ரூபாய் அளிப்பு அதிகரிப்பு என்று கூறலாம். ஆகவே டாலரின் மதிப்பு (ரூபாய் விலையில்) ஏறுகிறது. அதாவது ஒரு டாலருக்கு $8\frac{1}{2}$ ரூபாய் கொடுக்க வேண்டி வரலாம். இப்படி டாலர் மதிப்பு ஏறிய நிலையில், இதுவரை டாலர் அளிக்க விரும்பாதவர்கள் இப்போது அளிக்க முன் வரலாம். அதேபோது டாலர் விரும்பியவர்கள் விலை ஏறி விட்டதால் தம் டாலர் தேவையைக் குறைத்துக் கொள்ளலாம். அதாவது ரூபாய் அளிப்புக் குறையும். ஆகவே டாலர் அளிப்பு ஏறுகிறது. ரூபாய் அளிப்பு குறைகிறது. இப்படித் தேவையும் அளிப்பும் மாறுவதால் முடிவில் யாதோ ஒரு வீதத்தில் டாலருக்

குள்ள அளிப்பும் தேவையும் சமமாகும். ஆனால் இந்தப்படி நிர்ணயிக்கப்படும்போது நாடுகளின் நலம் பாதிக்கப்படலாம். மேலே உதாரணத்தில், மாற்று வீதம் டாலருக்கு நலமாக மாறுகிறது. இப்படிக்கன்றி ரூபாய்க்குள்ள தேவை (ரூபாய் அளிப்பைவிட) அதிகமாயிருந்தால் மாற்று வீதம் ரூபாய்க்குச் சாதகமாக மாறும்.

இது இரண்டு நாணயங்கள் மாறும்போது காணப்படும் தொடர்பு. ஆனால் அங்காடிகளில் ஒருபோது அநேக நாணயங்கள் ஒன்றுக்கொன்று மாற்றப்படும் நிலைமை காணப்படுகிறது. நாணய மாற்றுக்குத் தடைகள் ஒன்றும் இல்லாதிருந்தால் பல நாணயங்கள் ஒன்றுக்கொன்று தாராளமாக மாற்றப்படும். இந்த நிலைமையில் பல நாணயங்களுக்கும் இடையில் ஒரு நிச்சயமான மாற்று வீதமிருக்கும். அமெரிக்காவில் இருந்து இந்தியாவின் இறக்குமதி அதிகமாகிவிட்டால் உடனே நாம் டாலருக்கு அதிக ரூபாய் கொடுக்க வேண்டி வரும் என்று நினைக்கலாம். அமெரிக்கனுக்கு நாம் கொடுக்க வேண்டிய வீதம் நமக்கும் அமெரிக்காவுக்குமுள்ள டாலர் அளிப்பு, தேவையை மட்டும் பொறுத்ததன்று. நாம் முன்னைவிட அதிகம் டாலர் கொடுக்க வேண்டிய அவசியம் இல்லாமலிருக்கலாம். எப்படியெனில் நாம் அமெரிக்கனுக்குச் செலுத்தவேண்டிய டாலரை ஒரு பிரஞ்சுக்காரனிடம் இருந்து பெற்றுச் செலுத்த முடியும். இந்தியாவுக்கும் பிரான்சுக்குமுள்ள வீதத்தில் ரூபாயைப் பிராங்காக மாற்றிப் பின் பிராங்கை டாலராக மாற்றி ஈடு செய்யலாம். இந்த மாதிரிச் செய்ய முடிவதற்கு இரு நிபந்தனைகள் உள. அதாவது நாணயங்கள் ஒன்றுக்கொன்று மாற்ற முடிய வேண்டும். இரண்டு நாணயங்களுக்கு இடையிலுள்ள வீதம் மாறும் நிலைமை ஏற்படும் போது, மாற்ற நாணயங்களுக்கும் இவ்விரு நாணயங்களுக்குமுள்ள வீதம் மாறாதிருக்க வேண்டும். இதை வரம்பிலாச் செலாவணி மாற்று (unlimited currency convertibility) என்பர். இந்தச் சூழ்நிலையில் எல்லா நாணயங்களுக்குமிடையிலும் ஒரு பொருத்தமான விகிதாசாரம் இருக்கும். பம்பாயிலும் நியூயார்க்கிலும் பணமாற்று அங்காடிகள் உள்ளன. இந்த அங்காடிகளில் இரண்டு நாணயங்களுக்கும் பேரம் நடக்கின்றன. இரண்டு இடத்திலும் மாற்று வீதம் ரூபாய்க்கும் டாலருக்கும் ஒன்றாக இருக்கவேண்டியது தவிர்க்க முடியாதது. இந்தியாவில் ஒரு ரூபாய்க்கு ஐம்பது சென்ட்டும் நியூயார்க்கில் 40 சென்ட்டுமாக இருந்தால், ஓர் அமெரிக்கன் 40 சென்ட்டு கொடுத்து ஒரு ரூபாயை நியூயார்க் மாற்று அங்காடியில் பெற்று, அந்த ஒரு ரூபாயை பம்பாய் அங்காடியில் 50 சென்ட்டாக மாற்றி

10 சென்ட் இலாபம் பெற்று, மீண்டும் மீண்டும் இம்முறையில் ஈடுபடுவான். இப்படி அமெரிக்கர் பலரும் சென்ட்டைக் கொடுத்து ரூபாயாக மாற்றும்போது ரூபாயின் மதிப்பு நியூயார்க்கில் 50 சென்ட் நோக்கி ஏறும். பம்பாயில் டாலருக்குள்ள தேவை ஏறும். நியூயார்க்கில் ரூபாய் மதிப்பு ஏறுவதாலும் பம்பாயில் ரூபாய் மதிப்பு இறங்குவதாலும் இரண்டு அங்காடியிலுள்ள வீத வேறுபாடு குறைந்து போய்விடும். இவ்விதமான பேரத்தை சமன் செய் நடத்தை (arbitrage) என்பார்கள்.

**ஆர்பிட்ரேஜ்**

ஒரு நாட்டின் முக்கியமான நகரங்களில் ஆர்பிட்ரேஜ் செய்பவர்கள் பலர் இருக்கின்றார்கள். அவர்கள் நாடுகளுக்கிடையே உள்ள பணமாற்று வீதத்தில் ஒரு சிறு முரண்பாடு காணப்பட்ட போதிலும் உடனே மேற்கண்ட முறையில் பணம் மாற்றும் வேலையில் ஈடுபட்டு அதன் வழியாக இலாபத்தைச் சம்பாதிக்கிறார்கள்.

ஆர்பிட்ரேஜ் என்பது இரண்டு செலாவணிகளுக்கிடையில் மட்டும் நிகழ்வதாகக் கருதக் கூடாது. இரண்டுக்கு மேற்பட்ட செலாவணிகளுக்கிடையேயும் வீத வேறுபாடு தோன்றும்போது இது நிகழலாம். உதாரணமாக, டாலருக்கும் ரூபாய்க்கும் இடையில் பணம் மாற்று வீதம் ஒரு டாலருக்கு ஐந்து ரூபாய் ஆகவும், ஒரு பவுனுக்கு 20 ரூபாய் ஆகவும் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அப்போது £ 1=$ 4. அதாவது குறுக்கு வீதங்கள் (cross rate) £ 1 =Rs. 20 = $ 4 ஆக இருக்கும். இந்த வீதாசாரத்தில் மாற்று நடந்தால் மூன்று பணங்களுக்கும் இடையில் ஒரு சம நிலை காணப்படும். எந்த இரண்டு நாணயங்களுக்கு மிடையிலுள்ள குறுக்கு வீதத்துக்கு முரண்பாடு இல்லா திருக்கும்.

இந்த நிலையில் திடீரென்று ஒரு குறுக்கு வீதத்தில் மாறுதல் ஏற்படுவதாக வைத்துக் கொள்ளுவோம். உதாரணமாக, திடீரென்று இந்தியாவிலிருந்து முன்னைவிட அதிக அளவில் அமெரிக்காவுக்குப் பணம் செலுத்த வேண்டியிருப்பதாகி ரூபாய் அளிப்பு அதிகரிக்கிறது என்போம். இந்த நிலையில் ரூபாயின் மாற்று மதிப்பு விழக்கூடும். மற்ற இரண்டு குறுக்கு வீதங்களில் யாதொரு மாறுதலுக்கும் காரணமில்லை. ரூபாயின் மதிப்பு ஒரு டாலர் ஐந்து ரூபாய் என்பதில் இருந்து 5·05 ரூபாயாக மாறுவதாக வைத்துக்கொள்வோம். உடனே

ஆர்பிட்ரேஜ் செய்பவர்கள் இந்தக் குறுக்கு வீத முரண்பாட்டைப் பயன்படுத்தி இலாபம் சம்பாதிக்க முயல்வார்கள். எப்படி யெனில் இங்கிலாந்தில் பத்துப் பவுனைக் கொடுத்து 40 டாலர் பெற்று, அந்த 40 டாலரை இந்தியாவுக்கு 202 ரூபாய்க்கு விற்று, 200 ரூபாயை 10 பவுனாக மாற்றி, இரண்டு ரூபாய் இலாபம் பெறுவர். மறுபடியும் இந்த 10 பவுனை 40 டாலராக மாற்றி அதை மீண்டும் 202 ரூபாயாக மாற்றி, இரண்டு ரூபாய் இலாபம் அடைவார்கள். இப்படி ரூபாய்-டாலர் மாற்று வீதம் சமநிலை வீதத்திலிருந்து விலகி இருக்கும் வரையில் இலாபகரமான பண மாற்றுச் செய்ய இடம் உண்டு.

ஆனால் இது எவ்வளவு காலம் நடக்கும்? இங்கிலாந்தில் பவுனை ரூபாயாக மாற்ற முயலும்போது செலாவணி மாற்றங் காடியில் பவுனின் அளிப்பு ஏறி ரூபாய்த் தேவை அதிகரிக்கும். டாலரின் தேவை அதிகரிப்பால் அதன் மதிப்பு ஏறலாம். ஒரு பவுனுக்குக் கிடைக்கக்கூடிய டாலர் நான்காக இல்லாமல் சற்றுக் குறையலாம். ஆகவே மீண்டும் ஒரு டாலருக்கு ஐந்து ரூபாயாகிப் பழையபடி குறுக்கு வீதங்களில் சமநிலை ஏற்படும். ஆர்பிட்ரேஜ் செய்பவர்கள் ஒரு பணம் மலிவாக உள்ள அங்காடியில் வாங்கி, மதிப்பு ஏறியுள்ள மற்றோர் அங்காடியில் விற்று இலாபம் சம்பாதிப்பார்கள். இப்படிச் செய்யும்போது மதிப்புக் குறைவா யிருந்த பணத்தின் மதிப்பு ஏறி, மதிப்பு ஏறிய பணத்தின் மதிப்பு (அளிப்பு மிகுவதால்) குறைந்து மறுபடியும் குறுக்கு வீதங்களுக்கிடையில் சமநிலை ஏற்படுகிறது.

அமெரிக்காவிலிருந்து இந்தியர்கள் அதிகமாக இறக்குமதி செய்வதன் விளைவாய் இந்திய அங்காடியில் டாலருக்குத் தேவை ஏற்படுவதோடு, மற்றப் பணங்களுக்கும் தேவை அதிகரிப்பு ஏற்படுகிறது. ஏனெனில் டாலரை மறைமுகமாக வேறு அங்காடியில் பெற முயற்சி செய்யும் போது இந்த விளைவு உண்டாகிறது. இப்படி டாலர் வியாபாரத்தில் ஏற்படும் மாறுதல் டாலர் ரூபாய் வீதத்தில் மட்டும் மாறுதல்களை உண்டாக் காது. மற்ற மாற்று வீதங்களையும் பாதிக்கிறது. இம்மாதிரி ஆர்பிட்ரேஜ் செம்மையாக நடைபெறக்கூடிய நிலையில் எல்லாச் செலாவணி விகிதாசாரங்களும் ஒன்றுக்கொன்று பொருத்தம் பெறுகின்றன. இந்த நிலையில் மாற்று வீதங்களில் மாறுதல் ஏற்பட்டால் குறிப்பிட்ட இரண்டு நாடுகளின் செலுத்து இருப்பு நிலையில் மட்டும் பாதகம் ஏற்படாது. எல்லா நாடு களுக்குமுள்ள தொடர்பிலும் மாறுதல் ஏற்படும். இப்படிப் பணமாற்று அங்காடியில் தேவை அளிப்பு மாறுதல்கள் ஒரு

நாட்டின் வியாபாரத்தை மட்டும் பொறுத்ததல்ல என்பது தெரிகிறது.

இதனால் ஒருபோது உள்ள மாற்று வீதத்தின் அளவை நிர்ணயிப்பன எவை என்று நிச்சயமாகக் கூற முடியாமல் இருக்கலாம். ஒரு நாட்டிலுள்ள ஒரு தனவந்தன் வேறு நாட்டுக்குப் பேரளவில் முதலைக்கடத்த முயலுகையில் அப்போது அதன் மாற்று வீதம் பாதிக்கப்படும். உதாரணமாக, ஓர் இந்தியன் இங்கிலாந்துக்கு முதலைக் கடத்த விரும்புவதாக வைத்துக் கொள்வோம். அவன் வாங்க விரும்புவது பவுன்; கொடுப்பது ரூபாய்கள். இவன் இப்படிச் செய்யும்போது, மற்ற நாணயங்களுக்கிடையே உள்ள வீதத்தை மாற்றும் நிகழ்ச்சி ஒன்றும் நடவாமல் இருக்கலாம். ஆயினும் மேற்கண்ட ஆர்பிட் ரேஜ் மற்ற மாற்று வீதங்களையும் பாதிக்கும். முடிவில் நாம் காண்பது பவுன் மதிப்புச் சிறிது உயர்ந்து அதன் விளைவாக ரூபாய் மதிப்புச் சிறிது இறங்கியும் இருப்பதாகும். இந்த மாறுதல் மூலமாகத்தான் இந்தியன் முதலைக் கடத்த முடிகிறது.

**வீத நெளிவுகளுக்குக் காப்பு : எதிர் நோக்கிய மாற்றுப் பேரம் (Forward Exchange)**

அடுத்தபடி மாற்று அங்காடியில் நிகழும் மற்றொரு வகை பேரத்தைப் பற்றிக் குறிப்பிடுவோம். மாற்று அங்காடியில் வீதங்கள் அடிக்கடி மாறும் நிலைமை காணப்பட்டால் நாடுகளுக் கிடையே பேரங்கள் ஆபத்துக்குள்ளாகும். கொடுக்கவேண்டிய தொகை திடீரென மாறும். ஒரு பொருளை ஏற்றுமதி செய்யும் போது உரியவன் அயல்நாட்டுப் பணத்தில் ஒரு குறிப்பிட்ட தொகை தனக்குக் கிடைக்குமென்றும் அதைத் தன் நாட்டுப் பணமாக மாற்றும்போது தனக்கு ஒரு குறிப்பிட்ட தொகை இலாபமாகக் கிடைக்கும் என்றும் கணக்கிட்டு ஏற்றுமதி செய் வான். அவனுக்கு உரிய தொகை மூன்று மாதம் சென்று கிடைப் பதாக இருந்தால் அவனுக்கு நாணயமாற்று வீதத்தில் மாறுதல் ஏற்படாது என்ற நம்பிக்கை இருக்க வேண்டும். அதில் மாறுதல் ஏற்படுவதானால் அதையும் கருத்தில் கொண்டு ஏற்றவாறு நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். வியாபாரத்தில் கிடைக்கும் இலாபம் மிகவும் சிறியதாக இருந்து, மாற்று வீதத் தில் திடீரென்று மாறுதல் ஏற்பட்டால், அவனுக்குத் தன் நாட்டுப் பணத்தில் கிடைக்கும் தொகைக் குறைந்து நஷ்டம் ஏற்படலாம்.

ஒரு செம்மையான, நன்கு வளர்ந்துள்ள, பணமாற்று அங்காடியில் இந்த விதமான எதிர்பாராத நஷ்டங்களைத் தவிர்க்க

ஒரு முறை தோன்றியுள்ளது. வியாபாரிகள் இருவிதமாகப் பண மாற்று அங்காடியில் பேரம் செய்வதுண்டு. ஒரு வகை, உடனடி பேரங்கள் (spot transactions) என்பது. இவ்வித பேரத்தில் உடனுக்குடனே செலாவணி கொடுக்கப்படுகிறது, மற்றவனுல் வாங்கப்படுகிறது. மற்ருெரு வகை, எதிர் நோக்கும் பேரங்கள் (forward transactions) என்பது. இதில் இன்றே நிர்ணயித்த வீதத்தில் 1,2,3 மாதத்தில் விற்பதாக (வாங்குவ தாக)ப் பேரம் நடைபெறும். வீதம் இன்றைய வீதமாக இருக் காது. உதாரணமாக, இன்றைய உடனடி வீதம் (spot rate) மூன்று டாலருக்கு ஒரு பவுன் என்று இருந்தால், எதிர்பார்ப்புக் கேற்றபடி, ஒரு மாதத் தவணையில் எதிர்கால வீதம் 2·98/3·02 என்று இருக்கும். இரண்டு மாதத் தவணையாயின் 3·0]41·99 என்றும், 3 மாதத் தவணையாயின் 3·06/2·94 என்றும் இருக்கும். இந்த வீதங்கள் குறிப்பிடப்படும்போது உடனடி வீதத் (spot rate) தின் மேல் இத்தனை சென்ட் வட்டம் அல்லது கழிவு என்று பேசப்படும். உடனடி வீதம் 3 டாலராக இருக்கும்போது மூன்று மாத வீதம் 3·06 இருப்பின் மூன்று மாத எதிர் நோக்கு டாலர்கள் 6 சென்ட் கழிவுடனிருக்கின்றன எனப்படும்.

ஓர் ஏற்றுமதி வியாபாரி இங்கிலாந்தில் மூன்று மாதத்தவணை யில் டாலரைப் பெறவேண்டியுள்ளது என்று வைத்துக்கொள்ளு வோம். இந்த மூன்று மாதத்தில் டாலர் வீதம் மாறலாமாதலால் ஆபத்தைத் தவிர்க்க அவன் தனக்கு வரவேண்டிய டாலரை இன்றே எதிர்நோக்கி விற்கலாம். இவ்விதமாகத் தனக்கு அந் நாளில் எந்த வீதத்தில் டாலர் கிடைக்குமென்பதை அவன் இன்றே தீர்மானித்து விடுகிருன், மூன்று மாதம் சென்று அன்றைய தேதியில் எந்த வீதத்தில் பவுன் மாற்றப்படும் என்ப தைப் பற்றி அவனுக்குக் கவலே இல்லே. இதற்கெதிரிடையாக இங்கிலாந்து வியாபாரி ஒருவன் அமெரிக்காவில் இருந்து இறக்கு மதி செய்வதாக வைத்துக்கொள்ளுவோம். அவன் மூன்று மாதத் தவணையில் டாலராகச் செலுத்த வேண்டி இருக்கும். அந்தத் தேதியில் டாலர் விலே ஏறுமோ என்ற பயமிருந்தால் இந்த ஆபத்தைத் தவிர்க்க இன்றே அவன் மூன்று மாதத் தவணைக்கு வரும் டாலரை வாங்கிவிடலாம்.

முன்னேக்கிய பண மாற்று அங்காடி இப்படி வியாபாரி களுடைய ஆபத்தைக் குறைக்கிறது. ஆனல் இந்த அங்காடியை வேறு வழியில் பயன்படுத்துவோரும் உளர். சிலர் எதிர் காலத்தில் மாற்று வீதங்கள் எப்படியிருக்கும் என்பதைப் பற்றிச் சில யூகங்கள் செய்து, அந்த யூகங்கள்

எதிர்பார்த்தபடி மெய்யாவதிலிருந்து இலாபம் பெற முயலு வார்கள். இவர்களைப் பண மாற்று யூக வணிகர் (foreign exchange speculators) என்பர். யூக வணிகன் எதிர் காலத்தில் மாற்று வீதம், இலாபம் கொடுக்கக் கூடிய முறை யில் மாறுமென்று நினைத்தால் அவன் இன்றே இன்றைய வீதத்தில் வாங்கவோ விற்கவோ ஒப்பந்தம் செய்து கொள்வான். எதிர் நோக்கி வாங்குபவனாயின், குறிப்பிட்ட தேதியில் வாங்க ஒப்புக்கொண்டு, அப்போது உள்ள நடப்பு விலையில் விற்பான். எதிர்நோக்கி விற்பவனாயின் குறிப்பிட்ட தேதியில் விற்க ஒப்பி அன்றைய நடப்பு விலையில் வாங்கி ஒப்பந்தத்தை நிறைவேற்றுவான். எதிர் நோக்கிய தேதியில் நடப்பு வீதம் ஒப்பந்த வீதத்தைவிடக் குறைவாயின் ஒப்பந்தம் செய்துகொண்டவன் இலாபமடைவான். இராக்கியானால் நஷ்ட மடைவான். வாங்க ஒப்பந்தம் செய்தவன், எதிர் நோக்கிய தேதியில் ஏற்றமாயின் இலாபமடைவான்; குறைவாயின் நஷ்ட மடைவான்.

மற்றொரு வகை வியாபாரமும் இந்த அங்காடியில் நிகழ்வ துண்டு. இதை வட்டி ஆதாய நோக்கோடு நாடுகளுக்கிடையே பணம் கடத்துவோர்கள் செய்வார்கள். இவர்கள் உடனடி வீதத்தில் ஒரு செலாவணியை வாங்கி (buy spot), உடனே எதிர் நோக்கிய விற்பனை (forward sales) செய்வார்கள். உடனே வாங்குவதால் அயல்நாட்டுப் பணம் கிடைக்கிறது. எதிர்நோக்கிய நாள் வரும் வரைக்கும் அது அயல் நாட்டில் வட்டி சம்பாதிக்கும். இப்படிச் செய்வது ஆதாயமா என்பது நாடுகளுக்குள்ளே உள்ள வட்டி வேறுபாட்டைப் பொறுத்தது. ஆனால் வட்டி வேறுபாடு மட்டுமன்றி, எதிர் நோக்கி விற்கும்போது ஏற்படும் இலாப நஷ்டத்தையும் அனுசரிக்க வேண்டும். இந்த வித நடவடிக்கை யூக வாணிபத்துக்கு ஒப்பானதன்று. ஏனென்றால் இன்றே இலாப நஷ்டங்கள் கணிக்கப்படுவனவாக உள்ளன.

# 36. பண மாற்று அங்காடியில் தேவையும் அளிப்பும்

பண மாற்று அங்காடியும் பண்டமாற்று அங்காடிகளைப் போல விலை நிர்ணயிக்கும் அங்காடியாகும். முக்கியமான வேறுபாடு என்னவெனில் இந்த அங்காடியில் விற்க வருவன பண்டங்கள் அல்ல, பணம். இந்த அங்காடியில் தேவை அளிப்பு ஆகிய இரண்டும் பணமே. பண்ட அங்காடியில் ஒரு பண்டத்தின் தேவையைப்பற்றிப் பேசும்போது அதன் விலை இறங்கினால், வாங்குவது அதிகப்படும்; விலை ஏறினால் வாங்குவது குறையும், அதாவது தேவைக்கோடு வலப்புறமாகச் சரியும் என்றோம். இந்தப்பண மாற்று அங்காடியிலும் இதே விதிதான் காணப் படுகிறது. அயல்நாட்டுப் பணத்துக்கு முன்னைவிட ஏற்றமான விலையை (தம் நாட்டுப் பணத்தை)க் கொடுத்து வாங்க வேண்டியிருந்தால் அயல்நாட்டுப் பணம் வாங்குவது ஏறிய விலையில் குறைந்தும் குறைந்த விலையில் ஏறியும் காணப்படும் ஓர் அயல் நாட்டுச் செலாவணியைக் கொண்டு அந்நாட்டுப் பொருள்களை வாங்கப் போவதால், அந்நாட்டுப் பணம் நமக்கு மலிவாக கிடைக்கும்போது நாம் அதன் பொருள்களை அதிகமாகப் பெற முடியும். ஆகவே, அயல்நாட்டுப் பணத்துக்கு நாம் குறைந்த ரூபாய் விலை கொடுக்க வேண்டியிருந்தால் அயல் நாட்டுப் பொருள்களை இறக்குமதி செய்வது மலிவாக இருக்கும். ஆகவே அயல்நாட்டு மாற்றுவீதம் நமக்குச் சாதகமாயிருந்தால் இறக்குமதி உயரும்; அயல்நாட்டுச் செலாவணி அதிகமாகத் தேவைப்படும். அயல்நாட்டுச் செலாவணிக்கு அதிக விலை கொடுக்க வேண்டியிருந்தால் அயல்நாட்டுப் பண்டங்கள் நமக்குக் கிராக்கியாகத் தோன்றும். அதனால் நாம் இறக்குமதியைக் குறைப்போம். இதனால் அயல்நாட்டுச் செலாவணி நமக்குக் குறைவாகத் தேவைப்படும்.




படம் 1. நெகிழ்ச்சி மிக்கத்தேவை




படம் 2. நெகிழ்ச்சி குறைந்த தேவை




படம் 3. தேவை நெகிழ்ச்சி = 1




படம் 4. தேவை நெகிழ்ச்சி = 0




படம் 5. தேவை நெகிழ்ச்சி = ∞




படம் 6. அளிப்பு நெகிழ்ச்சி = ∞




படம் 7. மிக்க நெகிழ்ச்சியுள்ள அளிப்பு




படம் 8. அளிப்பு நெகிழ்ச்சி = 1




படம் 9. நெகிழ்ச்சி குறைந்த அளிப்பு




படம் 10. அளிப்பு நெகிழ்ச்சி = 0




படம் 11. தேவைநிலை மாறுதல்




படம் 12. அளிப்புநிலை மாறுதல்




படம் 13. பொன் திட்டத்தின் கீழ் மாற்று வீதம்




படம் 14. தடையிலாது வீதம் மாறும் திட்டத்தில் சமநிலை வீதம்




படம் 15. முதல் பெயர்ச்சியும் சமநிலை வீதமும்

பண்ட அங்காடியில் தேவையைப்பற்றிப் பேசும்போது நாம் அதன் நெகிழ்ச்சியைப் பற்றிக் கருத வேண்டி இருப்பதுபோலவே அன்னிய நாட்டுச் செலாவணித் தேவையைப் பற்றிப் பேசும் போதும் தேவை நெகிழ்ச்சியைக் கருத வேண்டும். ஆகவே செலாவணித் தேவையை நெகிழ்ச்சி மிக்க தேவை என்றும், நெகிழ்ச்சி குறைந்த தேவை என்றும் பேச இடமுண்டு.

நெகிழ்ச்சி மிக்கத் தேவையானல், அயல்நாட்டுச் செலாவணி முன்னைவிடச் சிறிது மலிவானபோது, நாம் முன்னைவிட அதிகமாக அயல்நாட்டுச் செலவாணியை வாங்குவோம். ஒரு டாலரின் மதிப்பு ஐந்து ரூபாயிலிருந்து நான்கு ரூபாயாகக் குறைந்தால், வாங்கும் டாலர் தொகையை நூறு டாலரிலிருந்து 150 டாலராக அதிகப்படுத்தக்கூடும். தேவை மிக்க நெகிழ்ச்சி யுடையது. படம் 1. ஏனெனில், மொத்தச் செலவீடு ரூ. 500-லிருந்து ரூ. 600 ஆகிறது.

இப்படிக்கின்றி நாம் வாங்கும் டாலர் 100-லிருந்து 120 ஆக மட்டு உயர்ந்தால் நம்முடைய தேவை நெகிழ்ச்சி குறைவானது என்று கூறலாம். ஏனெனில் மொத்தச் செலவீடு 500-லிருந்து 480 ஆகக் குறைகிறது, படம் 2. வாங்கும் டாலர் 125 ஆனல் நெகிழ்ச்சி = 1, படம் 3. நாம் வாங்கும் டாலர் 100 ஆகவே இருக்குமானல், நம் தேவை முற்றும் நெகிழ்ச்சி அற்றது (perfectly inelastic), படம் 4. இப்போது தேவைக் கோடு செங்குத்தான கோடாக இருக்கும். ஒரு குறிப்பிட்ட விலையில் அயல்நாட்டுச் செலாவணியை அளிப்புள்ள அளவுக்கு முழுவதையும் வாங்க முற்படுவோமானல் நம் தேவை பூர்ண நெகிழ்ச்சியுடையது (perfectly elastic), படம் 5. இப்போது தேவைக் கோடு படுகிடை அச்சுக்குச் சமதூரமான ஒரு படுகிடைக்கோடாக இருக்கும்.

இப்படியாக, சாதாரணப் பண்ட அங்காடியில் பல வகையான தேவை நெகிழ்ச்சிகளைக் காண்பதுபோலவே பண மாற்று அங்காடியிலும் பல வகைகள் இருக்கலாம். இதுவரை தேவை நிலை (state of demand) ஒரு குறிப்பிட்ட மாதிரியிருக்க, மாற்று வீதம் ஏறினலும் இறங்கினலும் தேவைக் கணியம் எப்படிப் பலவகையாகமாறலாம் என்பதை நாம் விளக்கினேம்.

இதே மாதிரி அளிப்புப் பக்கலிலும் அளிப்பு நெகிழ்ச்சி பல வகையாக இருக்கலாம். முற்றும் நெகிழ்ச்சியுள்ள அளிப்பாயின் படம் 6, குறித்த மாற்று வீதத்தில் எவ்வளவு அயல்நாட்டுச் செலாவணி வேண்டுமானலும் கிடைக்கும். அளிப்பு நெகிழ்ச்சி

மிக்கதானால் படம் 7. அயல்நாட்டுச் செலாவணிக்குக் கொடுக்கும் விலை ஏறினால், அப்போது விகிதாசாரத்துக்கு மேல், அளிக்கப் படும் தொகை உயரும். விலை இறங்கினால் விகிதாசாரத்துக்கு மேல், அளிப்புத் தொகை குறையும். நெகிழ்ச்சி ஒன்றுக்குச் சமமானால் படம் 8. அயல்நாட்டுச் செலாவணி விலை சிறிது ஏறினாலும் இறங்கினாலும் விகிதாசாரத்தில் அளிப்பு ஏறி அல்லது இறங்கி இருக்கும். அளிப்பு நெகிழ்ச்சிக் குறைவாயின் படம் 9. அயல்நாட்டுச் செலாவணி விலை ஏறினால் விகிதா சாரத்துக்குக் குறைவாகவே அளிப்பு உயரும். விலை குறைந்தால் அளிக்கப்படும் அளவு விகிதாசாரத்துக்குக் குறைவாக இறங்கும். அளிப்பு முற்றும் நெகிழ்ச்சியற்றதாயின் விலை எந்த மட்டத்தில் இருந்தாலும் அளிக்கப்படும் தொகை ஒரே கணியமாக இருக்கும், படம் 10.

பணமாற்று அங்காடியில் எந்தவிதத் தடையும் இல்லா திருப்பின் மாற்றுவீதம் மற்ற அங்காடிகளைப்போல அளிப்பாலும் தேவையாலும் நிர்ணயமாகும். நிர்ணயமான வீதத்தில் அயல் நாட்டுச் செலுத்துகள் சமநிலை அடையும். அதாவது தேவைப் பட்ட தொகையும் அளிக்கப்பட்ட தொகையும் சமமாக இருக்கும். அந்த நிலையில் தேவை நிலை மாறினால், அதாவது தேவைக் கோடு சிறிது உயர்ந்தால், மாற்று வீதம் ஏறும். தேவைக் கோடு தாழ்ந்தால் மாற்று வீதம் குறையும். இப்படியே அளிப்புக்கோடு சிறிது வலம் நகர்ந்தால் விலை இறங்கும், அளிப்புக் கோடு இடம் நகர்ந்தால் விலையேறும்.

பண மாற்று அங்காடியைப் பற்றிய கோட்பாடுகள் தேவை அளிப்பு ஆகியவைகளை நிர்ணயிக்கும் காரணிகளைப் பற்றிய தாகும். இந்தக் காரணிகளைத் தேவை நெகிழ்ச்சியை நிர்ணயிப்பன என்றும், அளிப்பு நெகிழ்ச்சியை நிர்ணயிப்பன என்றும், தேவை நிலையை நிர்ணயிப்பன என்றும், அளிப்பு நிலையை நிர்ணயிப்பன என்றும் பிரித்து உணரலாம். அளிப்புக் கோடு, தேவைக்கோடு ஆகியவற்றின் நிலையையும் நெகிழ்ச்சி யையும் பொறுத்தது விலை மட்டம். சூழ்நிலையில் மாறுதல் ஏற் பட்டால் மாறிய நிலையில் கோடுகளின் நெகிழ்ச்சியும் மாறக்கூடு மாதலால் அதற்கேற்ப விலையும் மாறும்.

**மாற்று வித நிர்ணய முறைகள்**

(1) முன்னர் நாணய மாற்று அங்காடியில் பலவகைகள் உள்ளன என்று கூறினோம். ஒரு வகையில் மாற்று வீதம் தேவை அளிப்புக்கேற்பத் தடையின்றி மாறக்கூடியது (freely

fluctuating exchange rate). தடையின்றி வீதம் மாறக்கூடிய அங்காடியானால், மேற்கண்ட முறையில் தேவை அளிப்பு நிலையையும் நெகிழ்ச்சி நிலையையும் பொறுத்து, அவ்வப்போது அங்காடி வீதம் நிர்ணயமாகும். வீதம் மேலும் கீழும் நெளிந்து கொண்டே இருக்கும். இந்த அங்காடி வீத நிர்ணயத்தில் அரசாங்கம் தேவைப் பக்கமோ, அளிப்புப் பக்கமோ தலையிடுவதில்லை.

(2) இரண்டாவது வகை அங்காடிகளில் அரசாங்கம் தலையிடுகிறது. மாற்று வீதம் ஒரு குறிப்பிட்ட நிலையில் இருக்கும்படி பார்த்துக்கொள்ள அரசாங்கம் தலையிடுகிறது. ஒவ்வொருவருக்கும் இச்சைப்படி வாங்கவும் விற்கவும் உரிமை இருந்தாலும், பணத்துறை அதிகாரிகள் மாற்று வீதம் நெளிவுக் குட்படாமலிருக்க தேவை அளிப்பு இரண்டுக்கும் உள்ள/ ஏற்படும் வேறுபாட்டைத் தாங்களே நிரப்ப முன் வருவார்கள். அயல் நாட்டுச் செலவாணியின் விலை ஏறுமானால் தேவை எச்சமாக உள்ளதாகத் தெரிகிறது. உடனே எச்சத் தேவையைப் பூர்த்தி செய்ய அரசாங்கம் அச் செலவாணி வேண்டியவர் களுக்குக் கொடுக்க முன் வந்து அளிப்புக் குறைவை நிரப்பி, வீத ஏற்றத்தைத் தடுக்கும். தேவைக் குறைவால் அயல் நாட்டுச் செலவாணி மலியுமானால் அந்த மலிவைத் தடுக்க அரசாங்கம் தலையிட்டு அயல்நாட்டுச் செலவாணியை வாங்க முன் வரும். இந்தவிதமான எதிர் நடவடிக்கையைப் பணத்துறை அதிகாரிகள் பின்பற்ற வேண்டுமானால் ஏராளமான அயல்நாட்டுச் செலாவணியை அல்லது பொன்னை அரசாங்கம் வைத்திருக்க வேண்டும். அயல்நாட்டுச் செலாவணி போதாதபோது வெளி நாட்டிலிருந்து கடன் வாங்க வேண்டியிருக்கும். முடியாதபோது (உள்நாட்டு விலையைக் குறைத்து ஏற்றுமதியை அதிகப்படுத்தி) அயல்நாட்டுச் செலாவணியைச் சம்பாதிக்க வேண்டும். இதுவும் முடியாதபோது அயல் நாட்டுப் பொருள்களுக்குத் தம் நாட்டிலுள்ள தேவையைக் குறைத்து, அதன் மூலம் அயல் நாட்டுச் செலாவணிக்குள்ள தேவையைக் குறைக்க வேண்டும்.

உண்மையில் நான்கு வீதநிர்ணய முறைகளைக் காண் கிறோம். (1) தடையிலாது மாறக்கூடிய வீத முறை (freely fluctuating rate), (2) மாறாத மாற்றுவீத முறை (fixed exchange rate), (3) நெகிழ்வுள்ள மாற்று வீத முறை (flexible exchange rate), (4) கட்டுப்பாட்டுக்குள் அடங்கிய மாற்று வீத முறை (rate under exchange control) இவைகளை இங்குச் சுருக்கமாகவே விளக்குவோம். பின்னர் விரிவாக விளக்கப்படும்.

### (1) தடையிலாது மாறும் வீத முறை

நடப்புக் கணக்குப் பேரங்கள் மட்டும் தான் தேவை அளிப்பை நிர்ணயிப்பன என்று வைத்துக் கொள்வோம். (தற்போதைக்கு முதல் பெயர்ச்சியும் பொன் பெயர்ச்சியும் ஒருதிறப் பெயர்ச்சியும் இல்லை என்று கொள்வோம்). இந்த அனுமானத்தோடு தடையிலா அங்காடியையும் அனுமானித்துக் கொண்டால், நடப்புக் கணக்கின் காரணமாகத் தேவை அளிப்பில் ஏற்படும் மாறுதலுக்குக்கேற்ப மாற்றுவீதம் சுயேச்சையாக மாறும். அயல்நாட்டுச் செலவு, வரவை எஞ்சமுடியாது. ஏனென்ருல், வரவைப் பொறுத்தே செலவு செய்ய முடியும். செலாவணித் தேவை உயர்ந்தால் (தேவைக் கோடு உயர்ந்தால்) அல்லது அளிப்புத் தாழ்ந்தால் (அளிப்புக்கோடு இடம் நகர்ந்தால்) மாற்று வீதம் ஏறி, தேவையும் அளிப்பும் சமப்பாடு அடையும். எவ்வளவு தூரம் ஏறும் இறங்கும் என்பது முன்னர்க் கூறிய தேவை நெகிழ்ச்சி, அளிப்பு நெகிழ்ச்சி ஆகியவற்றைப் பொறுத்திருக்கும்.

ஆனல் இப்படிப்பட்ட தடையின்றி மாறும் வீத முறையின் கீழ் மாற்று வீதம் நிலைபேறற்றிருக்குமா? ஒருபோது காணும் ஏற்றம் தற்காலிகமானது என்றும் பின்னர் விழுமென்றும் இறக்குமதி செய்வோர் நினைப்பார்களானல் அவர்கள் இறக்குமதி செய்வதை ஒத்திப் போடுவார்கள். அயல்நாட்டு வியாபாரிகளும் எதிர்கால வீதம் ஏறும் என்று நினைத்தால் இப்போதுள்ள வீதத்திலேயே இறக்குமதிகளைச் செய்ய விரும்புவார்கள். (ஒரு நாட்டில் வீதம் ஏறுவது மற்ருெரு நாட்டில் வீதம் குறைவிற்குச் சமம் என்பதை நினைவிற் கொள்க.) இப்படிப்பட்ட எதிர் நோக்கிச் செய்யும் யூக நடவடிக்கைகள் மாற்று வீதத்தில் நிலைபேற்றை உண்டாக்க உதவுகின்றன. எப்படியெனில் வீதம் பின்னர்க் குறையும் என்று எதிர்பார்க்கும் நாட்டினர் இறக்குமதியைக் குறைத்துச் செலாவணிக்குள்ள தேவையைக் குறைப்பார்கள். அயல்நாட்டினர் பின்னர் வீதம் ஏறும் என்று நினைத்துத் தற்போதைய இறக்குமதியைப் பெருக்கித் தம் நாட்டுன் செலாவணி அளிப்பை அதிகப்படுத்துவார்கள்.

குறுங்கால முதல் பெயர்ச்சி யில்லை என்ற எடுகோளைக் கைவிடுவோமானல், அவசியமானல் அயல்நாட்டினர் நமக்குத் தற்காலிகக் கடன் கொடுப்பார்கள், அல்லது நாம் அவர்களுக்குக் கடன் கொடுப்போம். மாற்று வீதம் ஏறும்போது அதைத் தற்காலிகமான ஏற்றமென்று நாம் கருதினல் (பின்னர் இறங்கும் என்று நினைப்போமானல்) நம் மாற்று வியாபாரிகள் இன்றைய

ஏறிய வீதத்திலேயே அயல் நாட்டிலுள்ள பணத்தை நம் நாட்டுக்குக் கொண்டுவர முயல்வார்கள். ஏனெனில் இப்போதே கொண்டு வந்தால் பின்னர் மலிவாக அயல் நாட்டுப் பணத்தைப் பெறலாம். ஆகவே குறுங்கால முதல் நாட்டுக்கு வரும். அயல் நாட்டு மாற்று வியாபாரிகளும் இப்படியே அனுப்புவார்கள். இப்படியாக யூக வாணிப முதல் பெயர்ச்சி அயல் நாட்டுச் செலாவணி அளிப்பை உயர்த்தி, மாற்று வீத ஏற்றத்தை இப்போதே அகற்றிவிடும். மாற்று வீதம்நிலை பேருடையதாகும்.

ஆனால், யூக நடவடிக்கைகள் (speculation) மாற்று வீதத்தை நிலைபேறற்றதாகச் செய்யவும் கூடும். இப்போது ஏறிய வீதமானது இன்னும் ஏறுமென்று நம் நாட்டவர் கருதினார்களானால், வியாபாரிகள் யூக வாணிபத்தி லிறங்கி இறக்குமதியை உடனே அதிகப்படுத்துவார்கள். அயல் நாட்டாரும் நம் நாட்டிலிருந்து பெற்று வந்த இறக்குமதியைக் குறைத்துக் கொள்வார்கள்; ஏனென்றால், எதிர் காலத்தில் வீதம் மாறினபின் இன்னும் குறைந்த விலையில் பெறலாமென்று நினைப்பார்கள். இந்த இரண்டு வகை நடவடிக்கைகளின் விளைவாக, ஏற்கனவே ஏறி வந்த வீதம் இன்னும் மேலேறும். இப்படி இன்னும் ஏறுமென்ற கருத்து வேரூன்றிய பின் அதே யூகம் முதல் பெயர்ச்சியை நம் நாட்டிலிருந்து உண்டாக்கும் (speculative capitals outflow). ஏனென்றால் நாட்டுப் பணத்தை அயல் நாட்டுப் பணமாக மாற்றி அங்கு வைத்திருந்தால் பின்னர் மாற்று வீதம் ஏறியதும் (நம் நாட்டுப் பணத்தின் மதிப்பு இன்னும் வீழ்ந்த பின்னர்) மீண்டும் நம் நாட்டுப் பணமாக மாற்றி இலாபம் அடைய முடியும். அதேபோது அயல்நாட்டார் நம் நாட்டில் வைத்திருந்த இருப்பை இன்றைய வீதத்திலேயே விற்றுப் பின்னர் மலிவாக வாங்கிக் கொள்ளலாம் என்று நினைப்பார்கள். இரண்டும் சேர்ந்து நம் நாட்டும் பணத்தின் மதிப்பை மேலும் விழச் செய்யும். அதாவது மாற்று வீதம் உயரும். இப்படியாக முதல் சம்பந்தமான யூகத் தேவைகளும் மாற்று வீதத்தை இன்னும் மேலேறச் செய்யும்.

இப்படி மாற்று வீதம் ஓர் உச்ச நிலையை அடையலாம். அப்போது இனியும் வீதம் மேலறுவது அரிது என்ற எண்ணம் உதித்து, வீதத்தில் நம்பிக்கை இழந்து, மேற்கண்ட நடவடிக்கைகளுக்கு எதிர் நடவடிக்கைகளை மக்கள் ஆளலாம். அப்போது மாற்று வீதம் தொடர்ந்து இறங்கிக் கொண்டே வரும்.

இந்த விதமாக மாற்று வீதத்தில் நிலையின்மை யூக வாணிபத்தால் அல்லது முதல் பெயர்ச்சியால் உண்டாகலாம்.

இப்படி நடக்கும் யூகப் பெயர்ச்சி, வியாபாரத்தை ஆபத்தான தாக்கிவிடும். இதுவே தடையிலாது மாறும் மாற்று வீத முறையின் பெரிய குறையாகும்.

## (2) மாருத மாற்று வீதம் (Fixed Exchange Rate)

அடுத்தபடி, மாருத மாற்று வீதமுடைய ஒரு முறையை விளக்குவோம். பன்னாடுகளுக்கிடையே பொன் திட்டமுறை இருந்து வருமானால் அதன் கீழ் மாருத மாற்று வீதம் இருந்து வரும். வீதங்கள் ஒரு குறிப்பிட்ட வரம்புகளுக்கப்பால் ஏறவோ இறங்கவோ முடியாது. பொன் திட்டத்தைப் பல நாடுகள் ஆளும்போது ஒவ்வொரு நாடும் தன்னுடைய பண அலகொன்றுக்கு இவ்வளவு பொன் மதிப்பு என்று வரையறை செய்திருக்கும். இந்நூற்ருண்டில் மூன்ரும் பத்தில் அமெரிக்காவும் இங்கிலாந்தும் பொன் திட்டத்திலிருந்த போது அமெரிக்காவில் ஒரு டாலருக்கு 23·22 குன்றிமணி சதவீதப் பொன் மதிப்பென்றும் இங்கிலாந்தில் ஒரு பவுனுக்கு 113 குன்றிமணி பொன் என்றும் வரையறை இருந்தது. ஆகவே மாற்று வீதம் $£1 = \frac{113}{23{\cdot}22} = 4{\cdot}86$ டாலராக இருந்தது. இப்படியே எல்லாப் பொன் திட்ட நாடுகளுக்கிடையேயும் பொன் மதிப்படிப்படையில் இன்றியமையாத ஒரு வீதம் இருக்கும். இந்த வீதத்துக்குமேல்|கீழ் மாற்று அங்காடியில் கேட்பார்களானல் மக்கள் பணத்துறை அதிகாரிகளிடம் இந்த வீதத்தில் பொன்னைப் பெற்று அயல் நாடுகளுக்கு அனுப்ப முடியும். 113 குன்றிமணிப் பொன்னை அமெரிக்காவில் இருந்து இங்கிலாந்துக்கு அனுப்ப 2 சென்ட் செலவு ஆகுமென்று வைத்துக் கொள்வோம். இப்படியானல் மார்க்கெட் வீதம் 4·84 டாலருக்குக் குறையவோ 4·88 டாலருக்கு மேற்படவோ முடியாது. அமெரிக்க அங்காடியில் 1 பவுண்டுக்குத் தரும் வீதம் 4.84 டாலருக்குக் கீழ் (4 83 ஆக) இறங்கினல், டாலர் கிராக்கி ஆனதாக அர்த்தம். உடனே மாற்று வியாபாரிகள் ஸ்டெர்லிங் உண்டியலை ($ 4·83 விகிதத்தில்)வாங்கி, இங்கிலாந்தில் 113 குன்றிமணிப் பொன்னைப் (பணத்துறை அதிகாரிகளிடம்) பெற்று, அந்தப் பொன்னைப் ·02 செலவில் அமெரிக்காவுக்குக் கொண்டு போய்ப் பணத்துறை அதிகாரிகளிடம் 4·86 டாலரைப் பெறுவார்கள். ஆங்கிலேய வியாபாரியும் பொன்னை அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்து டாலர் பெறுவான். ஒரு பவுனுக்குச் செலவு $4.83 + {\cdot}02 = 4.85$ வரவு $= 4{\cdot}86$ டாலர். ஆகவே சிறிது இலாபம் கிடைக்கும். 4 83 வீதத்தில் பொன் அமெரிக்காவுக்கு வருவதனல் இது அமெரிக்காவின்

பொன் இறக்குமதி எல்லை (gold import point) எனப்படும். இந்த வீதத்தில் அயல் நாணயத்துக்குத் தேவை அளவிலா நெகிழ்ச்சியுடையது. எதிராக அமெரிக்க அங்காடியில் £ 1க்கு $ 4·88க்கு மேல் தரவேண்டுமானால் மாற்று வியாபாரிகள் பொன்னை அமெரிக்காவில் வாங்கி இங்கிலாந்துக்கு அனுப்பி அங்கு $ 4·86-க்கு £ 1 பெறுவார்கள். இப்படிப் பொன் ஏற்றுமதி செய்யும்போது அமெரிக்காவில் வீதம் பொன் ஏற்றுமதி எல்லை (gold export point) யில் இருப்பதாகக் கூறப்படும். இந்த வீதத்தில் அங்காடியில் செலாவணி அளிப்பு நெகிழ்ச்சி அளவிலியாகிறது. இதை ஒரு படத்தால் விளக்கலாம். (படம் 13) r=சமநிலை வீதம். 4.86=பொன் ஏற்றுமதி எல்லை. 4.84=பொன் இறக்குமதி எல்லை.

பொன் ஏற்றுமதி எல்லையில் அளிப்பு அளவிலி நெகிழ்ச்சியுடையதாகிறது. ஆகவே வலப்புறம் தேவைக்கோடு நகர்ந்தால் வீதம் மாறுது.

பொன் திட்டத்தின் கீழ் மாற்று வீதம் சிறிது அளவே (கடத்துச் செலவு அளவுக்கே) மாறக்கூடும். ஆகையால் யூக முதல் பெயர்ச்சி இடையிட்டு மாற்று வீதத்தை நிலையற்றதாக்குவதற்கு வழியில்லை. எல்லாருக்கும் வீதம் பொன் ஏற்றுமதி எல்லைக்கு மேல் ஏருது என்றும் பொன் இறக்குமதி எல்லைக்குக் கீழ் இறங்காது என்றும் தெரியும். எதிரிடையாக, யூக முதல் பெயர்ச்சிகளும் நிலை பேறுண்டாக்கும் வகையாக இருக்கும். வீதம் ஏற ஆரம்பித்தால் அது தற்காலிகமாகவே இருக்கும். ஏறும் நாட்டுச் செலாவணி வியாபாரிகள் அயல் நாட்டில் வைத்திருந்த அயல்நாட்டுச் செலாவணி இருப்பைக் குறைத்து (அதாவது ஏற்றமான விலையில் விற்று) மீண்டும் பின்னர் இறங்கிய விலையில் அயல்நாட்டுச் செலாவணியை வாங்கி இலாபம் அடைய நினைப்பார்கள். இப்படியாக அயல்நாட்டிலிருந்து முதல் வருவது குறுங்கால முதல் உள்ளோட்டம். இது அங்காடியில் அளிக்கப்படும் மொத்த அயல்நாட்டுச் செலாவணியின் தொகையை அதிகப்படுத்தும். பொன் ஏற்றுமதி எல்லை அளவுக்கு வீதம் ஏறுவதைத் தடுக்கும். இந்த நிலையில் முதல் உள்ளோட்டம் (capital inflow) பொன் வெளியோட்டத்திற்குப் பதிலியாக நின்று வீதத்தை நிலைபெறச் செய்கிறது. இப்படியே வீதம் விழுமானால், அது தற்காலிகமாக இருக்கும். செலாவணி வியாபாரிகள் குறைந்த விலையில் அயல் நாட்டுச் செலாவணியை வாங்கி, அயல் நாட்டில் இருப்பை அதிகப்படுத்த நினைப்பார்கள். இப்படி நிகழும் குறுங்கால முதல் வெளியோட்டம் (capital

outflow) அயல் நாட்டுச் செலாவணிக்குள்ள தேவையை அதிகப் படுத்தும். இது பொன் இறக்குமதி எல்லை அளவுக்கு வீதம் வீழ் வதைத் தடுக்கும். ஆக, குறுங்கால முதல் வெளியோட்டம் பொன் இறக்குமதிக்குப் பதிலியாகிறது எனலாம்.

ஆகவே, பன்னாட்டுப் பொன் திட்டத்தின் கீழ் மாற்று வீதங்கள் நிலைபேறுடையனவாக இருக்கின்றன. இதற்குக் காரணம் சுயேச்சையாக ஏற்படும் பொன் பெயர்ச்சிகள் மட்டு மன்று, குறுங்கால முதற் பெயர்ச்சிகளும் ஆகும் எனலாம்.

மேலே பொன் திட்டத்தைப் பற்றிப் பொதுவாகக் கூறினோம். பொன் திட்டத்தில் வகைகள் உண்டு. அவைகளைப் பின்னர் விளக்கி, எவ்வகையிலும் மேற்கண்ட முடிவுகள் பொருந்தும் என்பதைப் பார்ப்போம்.

### (3) நெகிழ்வுள்ள மாற்று வீதங்கள் (Flexible Exchange Rates)

நெகிழ்வுள்ள மாற்று வீத முறையின் கீழ், ஒரு நாட்டுப் பணத்தின் மதிப்பு, பொன்னைப் போன்ற ஒரு பொருளோடு பிணைக்கப்பட்டு மதிப்பு நிலை நிறுத்தப்பட்டதன்று. சுயேச்சை யாகத் தேவை, அளிப்புக்கேற்ப மாறவும் விடப்படுவதில்லை. (இந்த இரண்டு முறைகளும் அரசாங்கத் தலையீடின்றி வேலை செய்கின்றன. அரசாங்கம் தலையிட்டு வீதத்தை நிலை நிறுத்தும் முறையும் ஒன்று உண்டு. அது மாற்றுக்கட்டுப்பாடு முறை.) இரண்டு வகைகளுக்கும் இடைப்பட்டது நெகிழ்வுள்ள வீத முறை. இம்முறையின் கீழ் வீதம் அன்றாடத் தேவை அளிப்புக்களால் நிர்ணயிக்கப்படுகிறதாயினும், அரசாங்கம் அவ்வப்போது செலாவணி அங்காடியில் புகுந்து, குறிப்பிட்ட வீதத்தை நிலை நிறுத்தும் கருத்தோடு, வீதம் உயர்ந்தால் அயல் நாட்டுச் செலாவணி அளிப்பை அதிகப்படுத்தும், விழுந்தால் தேவையை அதிகப்படுத்தும். இப்படி அரசாங்கம் வீதத்தை நிலைப்படுத்துவது, அங்காடியை கட்டுப்படுத்துவதாகாது. கட்டுப் பாடாயின் அரசாங்கம் தேவையையோ, அளிப்பையோ கட்டுப் படுத்த வேண்டும். இங்கு அப்படிச் செய்யப்படுவதில்லை. அரசாங்கம் அங்காடி வழியாகவே குறிப்பிட்ட வீதத்தை நிலை நிறுத்த முயலுகிறது. இங்கிலாந்திலும் பிரான்சிலும் அமெரிக் காவிலும், 1930இல் மாற்று வீதத்தில் பெரும் மாறுதல்கள் நிகழாமல் தடுப்பதற்காக, ஒரு நிதி ஏற்படுத்தப்பட்டது. இவ்வித நிதி நிலைபேறு நிதி (stabilization fund) எனப்படும். இதில், நிதியை நிருவகிக்கும் நாட்டு அரசாங்கத்தின் பணம், பத்திரங் கள், பொன் ஆகியவை இருக்கும். மாற்று வீதத்தை வீழாமல்

தடுக்கவோ அல்லது உயர்த்தவோ விரும்பினுல் இந்நிதி அங்காடியில் புகுந்து அயல்நாட்டுச் செலாவணியை வாங்கும். வீதத்தைக் குறைக்கவோ அல்லது ஏருமல் தடுக்கவோ விரும்பினுல், இந்த நிதி அயல்நாட்டுச் செலாவணியை விற்கும். பொதுவாக வீத மாறுதல்களால் நஷ்டம் ஏற்படாமலிருக்க; குவிந்த செலாவணிகள் பொன்ஞக மாற்றப்படும். வேண்டிய போது பொன்னை ஏற்றுமதி செய்து செலாவணிகள் பெறப்படும். பொன் திட்டத்தின் கீழ் நிகழ்வதைப் போலவே, முதல் பெயர்ச்சியாலும், பொன் பெயர்ச்சியாலும் வீதம் நிலைபேறு பெறுகிறது. ஆனுல் இப் பெயர்ச்சிகள் தனிப்பட்டோரால் நிகழாமல் பணத்துறை அதிகாரிகளால் நிகழ்கிறது.

தனிப்பட்டோர் செய்யும் குறுங்கால முதல் பெயர்ச்சி நிலைபேறுண்டாக்கலாம் அல்லது நிலைபேற்றைக் குலைக்கலாம். எது நிகழ்கிறதென்பது அவர்களுடைய (எதிர்காலத்தைப் பற்றிய) யூகத்தைப் பொறுத்தது. ஆனுல் இந்த நிதியின் நடவடிக்கைகள் இரகசியமாக இருப்பதால் யூக வாணிபத்துக்கு இடமிருக்காது. யூகப் பெயர்ச்சிகளைத் தடுப்பதே இந்த நிதியின் முக்கியமான நோக்கம்.

இப்படி மாற்று வீத மாறுதல்களை அடக்க முடிய வேண்டுமானுல், இந்த நிதியில் நிறைய வசதி இருக்க வேண்டும். வீதம் ஏருமல் பாதுகாக்க வேண்டுமானுல் அயல் செலா வணிக்குத் தோன்றும் தேவையைப் பூர்த்தி செய்யுமளவுக்குச் செலாவணி இருப்பு வேண்டும். இது கடினமான காரியம். எவ்வளவு சமாளிக்க முடியும் என்பது அதனுடைய பொன் அல்லது அயல்நாட்டுச் செலாவணி இருப்பைப் பொறுத்தது. இந்த முறையின் நன்மை என்னவெனில் (கட்டுப்பாடின்றி) சுயேச்சையாக அங்காடியை இயங்க விடுவதேயாகும்.

### (4) மாற்றுக் கட்டுப்பாடு (Exchange Control)

அடுத்தபடி, கட்டுப்பாடு வழியாக வீதத்தை நிலைபேறு செய்யும் முறையைப் பற்றிச் சுருக்கமாகக் கூறுவோம். முன்னே விளக்கிய மூன்று வகைகளிலும் கட்டுப்பாடு இல்லை. கட்டுப் பாடு என்பது பல அளவில் இருக்கலாம். கட்டுப்பாடு என்பது மக்கள் தேவையையும் அளிப்பையும் கட்டுப் படுத்துவதாகும். அயல் நாட்டுச் செலாவணியை நாட்டுக் குடிகள் பெறுவதற்கு அனுமதி வேண்டும். அயல் நாட்டுச் செலாவணி கிடைப்பதானுல் அதைக் கட்டுப்பாட்டு

அதிகாரிகளிடம் கொடுக்கவேண்டும். அங்காடியில் வரக் கூடிய தேவையும் அளிப்பும் அரசாங்கத்தால் இவ்விதமாகக் கட்டுப்படுத்தப்படுகிறது. இப்படித் தேவையையும் அளிப்பையும் வேண்டிய அளவுக்குக் கட்டுப்படுத்துவதன் மூலம் குறிப்பிட்ட மாற்று வீதத்தை அரசாங்கம் நிலை நிறுத்த முடிகிறது. இவ்விதத்தில் தானாக வரும் அளிப்புக் கெச்சமான தேவையிருக்குமானால் கட்டுப்பாடு அதிகாரிகள் (1) எச்சமான தேவையைத் தம்மிடமுள்ள பொன்னைக் கொண்டாவது செலாவணி இருப்பைப் கொண்டாவது அல்லது தனிப் பட்டோரின் அயல்நாட்டு வைப்பைப் பற்றிக்கொண்டாவது திருப்தி செய்யவேண்டும். அல்லது (2) எச்சமான தேவையைக் களைய வேண்டும். இதற்கு ஆளப்படும் முறை இறக்குமதியை லைசென்சுக் குட்படுத்துவது. அவ்வப்போதுள்ள செலாவணி அளிப்புக்கேற்ப லைசென்ஸ் தொகை மாற்றப் படும். நிறுவும் வீதத்தில் தேவைக்கு மேல் அளிப்பு இருக்குமாயின் கட்டுப்பாடு அதிகாரிகள் (1) பொன்னையோ அல்லது அயல்நாட்டுச் செலாவணியையோ குவிக்கலாம். அல்லது (2) லைசென்சுக் கட்டுப்பாட்டைத் தளர்த்தலாம். இப்படி ஒன்றும் செய்யாது கட்டுப்பாடு அதிகாரிகள் வீதத்தையே ஏற்றபடி மாற்றிவிடலாம்.

# 37. செலுத்து நிலையில் சமநிலைக் கேடுகளுக்குக் காரணம்

## (Sources of Balance of Payments Disequilibrium)

எந்தச் சூழ் நிலையில் ஒரு நாடு சம்பாதிக்கும் அளவுக்குமேல் அதன் இறக்குமதி இருக்கக் கூடுமென்று விசாரிப்போம். அதாவது அயல்நாட்டு வாணிபச் செலுத்து நிலையில் சமநிலைக் கோளாறுகள் உண்டாக முக்கியமான காரணங்கள் என்ன என்று பார்ப்போம். செலாவணித் தேவை ஷெடியூலும் அளிப்பு ஷெடியூலும் ஒரு நிலையில் இருக்க, செலாவணி வரவு செலவு சமமாக இருக்கிறதா அல்லவா என்பது மாற்றுவீதத்தைப் பொறுத்தது. குறிப்பிட்ட ஒரு வீதத்தில் நடப்புக் கணக்கில் சமப்பாடு இருந்தபோது, தேவைப் பட்டியலோ அளிப்புப் பட்டியலோ நிலை பெயர்ந்தால் சமக்கேடுண்டாகும். நடப்புக் கணக்கில் தோன்றும் அளிப்புக் தொகையும் தேவைத் தொகையும் சமப்பாடடையும் அளவுக்கு மாற்று வீதம் மாறுமா அன்று என்பது எந்த மாற்று நிர்ணய முறை நடைமுறையில் இருக்கிறது என்பதைப் பொறுத்தது. இந்த முறைகளைப் பற்றி மேலே குறிப்பிட்டோம். ஒவ்வொரு முறையின் கீழும் சமநிலைக் கேடு எப்படித் திருத்தப்படுகிறது என்பதைப் பின்னர்ப் பார்ப்போம். இங்கு நாம் அறிய விரும்புவது சமநிலைக்கேட்டை உண்டாக்கக் கூடிய தேவை, அளிப்புப் பட்டியல் பெயர்ச்சிகளின் காரணிகள். நாம் மாற்று வீதத்தைப் பற்றி முன் பேசிய போது பட்டியல்கள் மாறக்கூடும் என்று வைத்துக் கொண்டு, வீதங்கள் எப்படிப் பாதிக்கப்படுகின்றன என்று பார்த்தோம். இப்போது ஏன் மாறுகின்றன என்று பார்க்க வேண்டும்.

ஒரு நாட்டின் வாணிப நிலையை நிர்ணயிக்கும் காரணிகள் பலப்பலவாக இருக்கும் என்பது வெளிப்படை. ஒரு நாட்டின் செலுத்து நிலையை நிர்ணயிப்பன பல. அவைகளின் தனிச் சக்திகளைப் பிரித்துணர முடியாதிருக்கலாம். ஆயினும், என்ன விதமாகச் சக்திகள் வேலை செய்கின்றன என்பதை, இயல் அளவிலாவது நாம் பிரித்துப் பார்க்க வேண்டியிருக்கிறது. செலுத்துச் சமநிலைக் கேட்டைத் தோற்றுவாய் (sources) அடிப்படையில் இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். (1) பொருளாதாரக் கட்டமைப்பு (structure)ச் சீர்கேடு காரணமாகத் தோன்றுவன. (2) நாட்டில் வாணிபச் சுழலிலும் பணத் துறைக் காரணங்களிலும் தோன்றுவன. முதலில் அமைப்புக் காரணமாகத் தோன்றும் சமநிலைக் கேட்டை ஆராய்வோம்.

## I. கட்டமைப்புக் காரணமான சமநிலைக் கேடு (Structural Disequilibrium)

ஒரு நாட்டின் சாதன வளம், தொழில் நுட்ப வளர்ச்சி, மக்கள் விருப்புக் கோப்பு ஆகியவைகளைப் பொறுத்தன ஒரு நாட்டின் நாளாவட்ட ஏற்றுமதி இறக்குமதி. சமநிலை இருக்கும்போது ஏற்றுமதியின் மதிப்பும் இறக்குமதியின் மதிப்பும் சமப்பாடு காட்டும். (இங்கு முதற் பெயர்ச்சி அல்லது ஒருமுகப் பெயர்ச்சியில் நிகரமான எச்சப்பாடில்லை என்று வைத்துக் கொள்வோம்). ஆனால் நாடுகளுக்குள் சாதனத் தேவையிலோ சாதன வளத்திலோ மாறுதல் ஏற்பட்டால் அவைகளுக்குள் இருந்துவந்த சமப்பாடான தொடர்பு குலைந்து (பொருளாதாரக் கட்டமைப்பு மாறுதல் காரணமான) சமக்கேடு தோன்றும். இப்படி நாடுகளுக்கிடையே அடிப்படையில் மாறுதல் தோன்றும் போது அதைச் சமாளிக்க வேண்டுமாயின், பொருளாதாரக் காரணிகளில் நெகிழ்வு வேண்டும். உதாரணமாக, ஆட்சி குன்றிய சாதனம் குறைந்த கூலியைப் பெற ஒருப்பட வேண்டும், அல்லது வேறு துறைக்குச் செல்ல நகரவேண்டும். இது நிகழச் சாதனங்கள் பூரணப் பெயர்ச்சி உடையனவாக (perfect mobility) இருக்க வேண்டும். இருந்தால் இப்படித் தோன்றும் அமைப்புச் சமக்கேடு வெகு விரைவில் சீர்திருந்திவிடும். ஆனால் உண்மையில் இப்படிப் பூரண நெகிழ்ச்சி இருப்பதில்லை. ஏனெனில் அநேக தடைகள் காணப்படுகின்றன. மனப்பாங்கும், நாட்டின் நிறுவனக் கட்டமைப்பும் (institutional frame work) பொருளாதார காரணங்களும் அமைப்படையும் மாறுதலுக்கேற்பச் சாதன ஆட்சி மாறுவதைத் தடுக்கலாம். ஆகவே, அமைப்பு சம

நிலைக்கேடு பல்லாண்டு நிலைபெற்று, செலுத்து நிலைச் சமக் கேட்டை நீடித்திருக்கச் செய்யலாம். கீழே சில முக்கிய மான அமைப்புச் சமக்கேடு காரணங்கள் குறிப்பிடப்படு கின்றன :

(1) ஒரு நாட்டில் பேரளவில் முதல் அழிவு நேர்ந்தால் உற்பத்தித் திறனும் உண்மை வருமானமும் குறையும். யுத்தம் போன்ற காலங்களில் பேரளவில் குறுங்காலத்திலே முதலழிவு நேரிடுகிறது. யுத்தத்திலழிவது தவிர, பராமரிப்புக்குறைவாலும் அழிவேற்படுகிறது. இரண்டு வகையில் முதல் இழப்பு ஒரு நாட்டின் செலுத்து நிலையில் சமநிலைக் கேடுண்டாகலாம். பேரளவில் இறக்குமதி தேவை ஆகலாம். ஏனெனில் உள் நாட்டிலே வேண்டிய நுகர்ச்சிப் பொருள்களும் கச்சாப்பொருள் களும் முதல் பொருள்களும் கிடைக்காதிருக்கும். தலா உண்மை வருமானம் குறைந்து விடுவதனாலே வாங்கும் சக்தி கூடக் குறையும். உள்நாட்டில் உற்பத்தி செய்ய முடியாததனால் சுருங்கிய தேவையை நிறைவேற்றவும் பெரும் பகுதி வெளி நாட்டில் இருந்து பெறவேண்டியிருக்கும். வாழ்க்கைத் தரத்தைக் குறைப்பதைவிட இறக்குமதியை அதிகப்படுத்த அரசாங்கம் முயலும். மற்றொரு வகை என்னவெனில் ஏற்றுமதி செய்வதற்கு வேண்டிய வசதியை இழந்து போவதாலும் செலுத்து நிலை பாதிக்கப்படுவது. இங்கிலாந்து போன்ற நாடுகள் யுத்தத்தின் போது அயல்நாட்டிலிருந்த முதலீனத்தையும் ஆண்டு யுத்தத்துக்காகச் செலுத்து செய்து, பின் வருமானக் குறைவு அடைந்து, செலுத்து நிலை பாதிக்கப்பட்ட நிலைக்கு வந்தது அனுபவம்.

(2) அடுத்தபடி, நாடுகளின் சாதன வசதிகளில் மாறுதல் தொடர்ந்து நிகழுமானால் அதுவும் பொருளாதாரத் தின் அமைப்பில் சீர்கேடுகளை (structural maladjustment) உண்டாக்கும். சாதன வசதிகளின் அடிப்படையில் நாடுகள் ஒவ்வொன்றும் சில உற்பத்திகளில் சிறப்புத் திறமை கொண்டுள்ளன. சாதன வசதிகள் மாறும்போது அந்தச் சிறப்புத் தன்மைக்கு ஊனம் ஏற்படலாம். இதனால் முன்னே நாடுகளுக்குள் இருந்த தராதரத் திறமையில் மாறுதல் ஏற்பட்டு அவைகளின் ஏற்றுமதிச் சக்தி பாதிக்கப்படலாம். இதனால் செலுத்து நிலை பாதிக்கப்படலாம். சென்ற நூற்றாண்டில் இங்கிலாந்து பேரளவில் முதலும் தொழில் நுட்ப அறிவும் (மற்ற நாடுகளை விட) பெற்றிருந்தபோது, அது தொழில் புரட்சிக்கு முதலிடமாக இருந்தது. நாளடைவில்

அதனுடைய முதலும் அறிவும் பிற தேசங்களுக்குச் சென்று அங்குத் தொழில் புரட்சியைப் பரப்பின. அதன் விளைவாகச் சென்ற நூற்றாண்டின் இறுதிக்குள் அமெரிக்கா, ஜெர்மனி போன்ற நாடுகள் முன்னேற்றம் அடைந்து இங்கிலாந்தையும் பின் அடையச் செய்தன. அமெரிக்கா உலகத்திலேயே தலைமையான ஆலைத் தொழில் நாடாக முதன்மை அடைந்தது. இதனால் இங்கிலாந்தின் வியாபாரத்தில் அடிப்படையான மாறுதல்கள் ஏற்பட வேண்டியதாயிற்று. புதிய நாடுகள் தொழில் துறையில் முன்னேற்றம் அடைந்ததனால் இங்கிலாந்து போன்ற பழைய நாடுகளின் ஏற்றுமதிக்குப் போட்டிகள் எல்லா மார்க்கெட்டுகளிலும் தோன்றின. இதுவரையில் இங்கிலாந்திடமிருந்து வாங்கின நாடுகளும் தங்களுடைய தொழில் பொருள் தேவைகளைத் தாமே பூர்த்தி செய்து கொள்ளலாயின. இங்கிலாந்தின் பொருளாதார வரலாற்றில் அதனுடைய வாணிபப் பலம் குறைந்துவிட்டது விளங்குகிறது. இங்கிலாந்தின் துணி ஏற்றுமதி இந்தியா போன்ற நாடுகளின் முன்னேற்றத்தால் பாதிக்கப்பட்டது நாம் அறிந்த விஷயம். ஆனால் இங்கிலாந்து புதுத் துறைகளைக் கண்டுபிடித்துத் தொழில் முன்னேற்றத்தை அடைந்தது. ரேயான் துணியையும், மோட்டார்ச் சாதனங்களையும், மின்சாரப் பொறிகளையும், இரசாயனப் பொருள்களையும் ஏற்றுமதி செய்யலாயிற்று. ஆயினும், வியாபார நிலைமையை முன் நிலைமைக்கு மீட்க முடியவில்லை. அதனால் அநேக தொழில்கள் குன்றி ஒரு பெரிய பிரச்சினையை உண்டாக்கின. வர்த்தக நிலையில் தீர்க்க முடியாத வலுக்குறைவு ஏற்பட்டது. எப்படி இங்கிலாந்து இவ்வித நிகழ்ச்சிகளால் பாதிக்கப்பட்டதோ அப்படியே முதன்மை அடைந்த அமெரிக்காவும் ஒரு விதத்தில் பாதிக்கப்பட்டது. எல்லா வகைத் தேவைகளையும் அமெரிக்கா தானே பூர்த்தி செய்துகொள்ளும் திறமை பெற்றதனால், வெளிநாடுகளில் இருந்து இறக்குமதி செய்வது குறைந்தது. அதனுடைய செலுத்து நிலை இடைவிடாது வர்த்தக நிலை எச்சப்பாட்டைக் காட்டியது. அமெரிக்காவின் தொழில் திறமை வளர வளர, பிற நாடுகளின் பொருளாதாரத்துக்கும் அதற்குமிடையில் பெரிய இடைவெளி தோன்றியது. அமெரிக்காவோடு இலாபகரமான வர்த்தகத்தைச் செய்வது முடியாத காரியம் என்ற எண்ணம் பல நாடுகளுக்கு உண்டாயிற்று. டாலர் கிடைப்பரிய செலாவணியாக ஆயிற்று.

(3) அடுத்தபடி, நாடுகளின் அமைப்பில் சீர்கேடு உண்டாகத் தேவை மாறுதலும் காரணம் ஆகலாம். தேவை மாறுதல் என்பது ஒரு குறிப்பிட்ட அங்காடியிலிருந்து இதுவரை

வாங்கப்பட்ட பொருள்கள், யாது காரணத்தாலோ தேவை யற்றுப் போகலாம். மக்களுடைய விருப்பு வெறுப்பிலும் வருமான அளவிலும் பகிர்விலும் மாறுபாடு உண்டானால் வழக்கப்படி வாங்கி வந்த பொருள்கள் கைவிடப்பட்டுப் புதுப் பொருள்களுக்குத் தேவை உண்டாகும். வருமானம் உயரும் போது தேவை வகைகளும் மாறும் என்பது தெரிந்ததே. வருமானம் உயரும்போது பயிர்த்தொழில் பொருள்களுக்குள்ள தேவை குறைந்து ஆலைத் தொழில் பொருள்களுக்குள்ள தேவை உயரும். இது பயிர்த்தொழில் பொருள்களை ஏற்றுமதி செய்து வந்த நாடுகளின் வர்த்தக நிலையைக் குறைத்து விடும். இப்படித் தேவையில் மாறுதல் உண்டாகும்போது அதற்கேற்ப நாடுகள் தங்கள் தொழிலைத் திருத்தி அமைத்துக்கொள்ள முடியுமானால் கேடு ஒன்றும் உண்டாகாது. ஆனால் இப்படி நாடுகள் மாற முடிவதில்லை. உதாரணமாக, நெடுங்காலமாக உழைப்பாளிகளுக்குத் தேவை ஆலைகளில் அல்லது பணிகளில் உயர்ந்து வந்திருக்கிறது. பயிர்த் தொழிலில் குறைந்து வந்திருக்கிறது. ஆயினும் சாதனங்கள் பயிர்த் தொழிலி லிருந்து வெளியேறி வேண்டிய அளவுக்கு ஆலைத் தொழிலுக்குச் செல்லவில்லை. ஆகவே பயிர்த்தொழில் நாடுகளின் பொருளா தாரம் பலவீனப்பட்டு விட்டது. வெளியேற முடியாத சாதனங்கள் முன் போலவே உற்பத்தி செய்து வருவதனால் பயிர்த் தொழிலில் அமித உற்பத்தி தோன்றலாயிற்று. விலை குறைந்து ஏற்கனவே குறைந்த வருமானமுடைய பயிர்த் தொழில் உழைப்பாளிகள் மேலும் வருமானத்தை இழந்து கேடுற வேண்டியதாயிற்று.

(4) அடுத்தபடியாக, நாடுகளுக்கிடையே வர்த்தக வீதம் (terms of trade) மாறுவது ஒரு காரணமாக இருக்கலாம். வர்த்தக வீதமாவது ஏற்றுமதிக்கும் இறக்குமதிக்குமுள்ள மாற்று வீதமாகும். ஓர் அலகு ஏற்றுமதி செய்தால் அதற்கு ஈடாகக் கிடைக்கும் இறக்குமதியின் அளவை இந்த வீதம் காட்டுகிறது. ஒரு நாட்டின் ஏற்றுமதிப் பொருள்களின் சராசரி விலை, அதன் இறக்குமதிப் பொருள்களின் சராசரி விலையைவிடக் குறைந்த வேகத்தில் ஏறினால் அந்த நாட்டினுடைய வர்த்தக வீதம் அதற் குப் பாதகமாக மாறுவதாகக் கொள்ளப்படும். ஏனெனில், ஓர் அலகு ஏற்றுமதிக்கீடாக, முன்னைவிடக் குறைந்த அளவு இறக்குமதி அலகு பெறப்படுகின்றது. இந்த மாற்று வீதம் மாறக்கூடியது. ஒரு நாட்டின் ஏற்றுமதி இறக்குமதியில் ஏற்படும் நெடுங்கால மாறுதலாலும் அல்லது குறுங்கால வாணிபச் சூழல் மாறுதலாலும் இது நிகழும். ஆகவே வர்த்தக வீத மாறுதல்

முற்சொன்ன காரணங்களில் ஐக்கியமாகிறது. ஆகவே இதைத் தனிக் காரணியாகக் கூறமுடியாது. ஆயினும் பல சக்திகளின் தொகுத்த விளைவாக வர்த்தக வீதம் மாறுவதால் இதைச் செலுத்து நிலையின் சமீபக் காரணியாக வைத்துக் கூறுவது சரியே.

பயிர்த்தொழில் நாடுகளின் உற்பத்திகளின் விலை, செய்பொருள்களின் விலையைவிட வேகமாக உயர்வதாக வைத்துக் கொண்டால் அந்நாடுகளின் வர்த்தக வீதம் அவைகளுக்குச் சாதகமாக இருக்கும். ஆகவே பன்னாட்டு வியாபாரத்தில் (international trade) அவைகளின் ஆதாயம் உயர்ந்து செய்பொருள் நாடுகளின் ஆதாயம் குறையும். வர்த்தகத்தையே நம்பியிருக்கும் கைத்தொழில் நாடுகளின் செலுத்துநிலை இதனால் பாதிக்கப்படும். அமெரிக்கா போன்று அயல்நாட்டு வாணிபத்தில் அற்ப வருமானத்தையே பெறும் நாடுகள் இவ்வித வர்த்தக வீத மாறுதலால் பாதிக்கப்படாமல் இருக்கலாம். ஆனால் பேரளவில் உணவுப் பொருள்களையும், கச்சாப் பொருள்களையும் இறக்குமதி செய்யும் இங்கிலாந்து போன்ற நாடுகள், அயல் நாட்டு வாணிபத்தை நம்பி இருக்கும் நாடுகள், இவ்வித வர்த்தக வீத மாறுதலால் மிகவும் நலக்கேடு அடையும். இவைகளின் ஏற்றுமதியானது இறக்குமதிக்கு ஈடாக இருக்க முடியாது. ஆகையால் இவைகளின் செலுத்துநிலை பாதிக்கப்படலாம்.

(5) நாடுகளின் வியாபாரத் தொடர்புகளில் தடை ஏற்படுமானால் அதுவும் ஒரு நாட்டின் செலுத்து நிலையைப் பாதிக்கக்கூடும், ஒவ்வொரு நாடும் நாளடைவில் பிற நாடுகளோடு ஒரு வியாபாரத் தொடர்பைப் பெற்று அதன் விளைவாய் ஒரு விதப் பொருளாதாரச் சமநிலையை அடைந்திருக்கும். இந்தவிதத் தொடர்பு அந்த நாட்டின் பொருளாதார நிலைப் பேற்றுக்கு அவசியமாகும். இந்த வாணிபப் பாங்குக்கு (Pattern) ஏதாவது இடையூறு ஏற்பட்டால் அந்நாட்டின் நிலை பாதிக்கப்படும். நாடுகள் ஆதியில் வாணிபத் தடையிலாச் சூழ்நிலையில் வியாபாரத் தொடர்புகளை ஏற்படுத்திக்கொண்டன. தடையிலா (free) வாணிபம், பட்சபாதமற்ற (nondiscriminatory) வாணிபம், பன்முக (multilateral) வாணிபம் நிகழும்போதும் தனிப்பட்ட நாடுகள் தொடர்பு எப்படி உள்ளதென்பதைப் பற்றிக் கவலைப்படாதிருந்தன. ஏனெனில் எளிதில் தம் அளிப்பை வேறு நாட்டுக்குத் திருப்பலாம் அல்லது தம் தேவையை வேறு நாட்டில் இருந்து பெறலாம். மொத்த ஏற்றுமதி இறக்குமதி மாறாத வரையில் சமநிலை பாதிக்கப்

படாது. மொத்தத்தில் தற்காலிக மாறுதல்களைச் சரிக்கட்டிக் கொள்ளலாம். ஆனால் தடையிலா வாணிபம், பன்முக வாணிபம் தடைப்பட்டபோது இப்படிப்பட்ட நெகிழ்ச்சி வாணிபத்துக்கு இருக்காது. 1930-லிருந்து பல நாடுகள் யுத்தம் காரணமாகவோ வியாபார மந்தம் காரணமாகவோ வர்த்த கத்தையும் மாற்று வீதத்தையும் கட்டுப்பாட்டுக்குள்ளாக்கின. இதனால் ஒரு நாட்டோடு காணும் செலுத்துப் பற்றுக்குறையை வேறொரு நாட்டோடு உள்ள எச்சப்பாட்டால் சரிசெய்வது முடியாததாயிற்று. அதாவது செலாவணிகளைத் தடையின்றி ஒன்றுக்கொன்று மாற்ற முடியாமல் போய் விட்டது. இந்த நிலையில் ஒரு நாட்டின் வாணிபத் தொடர்பு முக்கியமாகிறது. ஏனெனில் அதன் சமநிலை இத் தொடர்பைப் பொறுத்ததாகிறது. ஒரு நாடு சமநிலை அடைய ஒவ்வொரு நாட்டோடும் வர்த்த கத்தில் சமப்பாடு தேட வேண்டியிருக்கும்.

(6) அமைப்பில் சமநிலைக் கேடு நீண்ட கால முதற் பெயர்ச்சியில் (long term capital flow) ஏற்படும் மாறுதலாலும் உண்டாகலாம். நெடுங்காலமாக ஒரு நாட்டிலிருந்து வந்துகொண் டிருந்த கடன் திடீரென்று நின்றுவிட்டால் இது சமநிலையைக் கெடுக்கும். அயல் நாட்டிலிருந்து பெற்று முதலை ஆண்டு வந்த நாட்டின் பொருளாதாரக் கோப்பு ஒருவிதப் பாணியைப் பெற்றிருக்கும். வெளிநாட்டு நுகர் பொருள்களை நம்பி நாட்டு முதலீடு முதற் பொருள் ஆக்கும் துறைகளில் ஈடுபட்டிருக்கலாம் அல்லது அயல் நாட்டு முதல் பொருள் இறக்குமதியை நம்பி முதலீடு நுகர்ச்சிப் பொருளில் செலுத்தப்பட்டிருக்கலாம். எப்படி ஆனாலும் முதல் வரவு தடைப்படுமானால் நாட்டின் பொருளாதாரம் பாதிக்கப்படும். ஏன் முதல் தடைப்படும் என்பதை இங்கு விளக்க வேண்டிய அவசியமில்லை. அயல் நாட்டினரது வருமானம் அல்லது சேமிப்புக் குறையலாம். அவர்கள் வேறு இடத்தில் முதலிட முடிவு செய்திருக்கலாம். காரணம் எதுவாயினும் விளைவு கடன் வாங்கி வந்த நாட்டைப் பாதிக்கும். அதனுடைய செலுத்துச் சமநிலை கெடும்.

(7) அடுத்தபடியாக, பொருளாதார, சமூக அல்லது அரசியல் கட்டுக்கோப்பு (framework) அடிப்படையில் மாறுதல் உண்டானால் இதுவும் செலுத்து நிலையைப் பாதிக்கலாம். கம்யூனிச நாடுகள் தங்களுக்குள்ளேயே வியாபாரத்தை நடத்த முயல்வதும் மேற்கு ஐரோப்பிய நாடுகள் குறிப்பிட்ட வட்டாரத் துக்குள்ளேயே வியாபாரத்தை நடத்த முயல்வதும் இவ்வித மாறுதலுக்குச் சான்றாகும். சைனா ரஷ்யாவுடன் இணைந்ததும்

இங்கிலாந்து போன்ற நாடுகளின் வியாபாரத் தொடர்பில் அடிப்படை மாறுதல் உண்டாயிற்று, சுங்க வரிகள், கோட்டா நியமனம் முதலிய தடைகளும் இந்த இனத்தைச் சார்ந்தவையே.

## II. சுழல் காரணமாக ஏற்படும் சமநிலைக் கேடுகள் (Cyclical and Monetary Disequilibrium)

இதுவரை பொருளாதாரத்தின் அடிப்படை அமைப்பில் ஏற்படும் மாறுதல்கள் எப்படிச் சமநிலைக்கேட்டை உண்டாக்கக் கூடும் என்று பார்த்தோம். அவைகளை நெடுங்கால மாறுதல்கள் எனலாம். இப்போது சில குறுங்காலக் காரணிகளை விளக்குவோம். குறுங்காலத்தில் வருமானத்திலும் விலைவாசியிலும் நாடுகளுக்குள் தொடர்பு வேறுபாடுண்டாகலாம். இவை காரணமாக எப்படிச் செலுத்துநிலை பாதிக்கப்படலாம் என்று பார்க்க வேண்டும்.

வியாபாரச் சுழல் காரணமாக ஒரு நாட்டின் வருமானம் நெளிவுக்குள்ளாகக் கூடும். துவக்கத்தில் ஒரு நாட்டின் செலுத்து நிலையில் சமநிலை இருப்பதாக வைத்துக் கொள்வோம். அப்போது நாட்டின் வருமானம் மாறினால் அது செலுத்து நிலையைப் பாதிக்கும். எப்படியெனில் வருமானம் குறைந்தால் அல்லது ஏறினால் அதற்கேற்ப இறக்குமதியும் குறையும் அல்லது ஏறும். ஏற்றுமதி பாதிக்கப்படாதிருக்கலாம். ஆகவே ஒரு நாட்டின் நடப்புக் கணக்குப் பகுதியில் பற்றுக் குறை ஏற்பட்டால் காரணம் (1) நாட்டின் வருமானம் உயர்ந்து இறக்குமதி உயர்வது அல்லது (2) இரு நாடுகளின் வருமானத்திலும் மாறுதல் ஏற்படுவது. ஒரு நாட்டின் வருமானம் ஏறி இறக்குமதி ஏறும் போது, செலுத்து நிலை பாதிக்கப்படாமல் இருக்க வேண்டுமானால், அயல் நாட்டிலும் அதேபோது வருமானம் உயர வேண்டும். ஏனெனில் அயல் நாட்டின் உயர்வு முதல் நாட்டின் ஏற்றுமதியை உயர்த்தி அதன் அதிகப்படி இறக்குமதியை ஈடு செய்யும். ஆனால் அயல் நாட்டின் வருமானம், முதல் நாட்டின் ஏற்றுமதிக்கு வேண்டிய அளவுக்கு உயருமா, அதாவது முதல் நாட்டின் இறக்குமதி ஏறிய அளவுக்கு அதன் ஏற்றுமதியைத் தூண்டுமா? விடை இரண்டு நாடுகளின் வருமானஞ்சார் இறக்குமதி நெகிழ்ச்சியைப் (income elasticity of demand for imports) பொறுத்தது. அதாவது வருமானம் சிறிது மாறினால் அதன் விளைவாக எவ்வளவு இறக்குமதி மாறும் என்பதைப் பொறுத்தது. எல்லா நாடுகளும் ஒரே அளவான நெகிழ்ச்சி உடையவையாயிருந்து, அவைகளின் வருமானமும் ஒரே

அளவுக்கு ஒரே காலத்தில் ஏறினல் ஒரு நாட்டின் இறக்குமதி அதிகமாகுமளவுக்கு ஏற்றுமதியும் அதிகமாகி, செலுத்து நிலையில் சமநிலை கெடாதிருக்கும். ஆனல் இது எதிர்பார்க்கக் கூடியதன்று. நெகிழ்ச்சியிலும், வருமான மாறுதல்களிலும், காலத்திலும், நாடுகளுக்குள் வேறுபாடு காணப்படுவது இயற்கையே. ஒரு நாட்டின் வருமானத்தையும் நெகிழ்ச்சியையும் தீர்மானிக்கும் காரணிகள் சிக்கலானவை, பல வகையானவை. பொதுப்படக் கூறின் பயிர்த் தொழில் நாடுகளின் இறக்குமதி நெகிழ்ச்சி கைத்தொழில் நாடுகளின் நெகிழ்ச்சியைவிட அதிகமாக இருக்கிறது எனலாம். பயிர்த் தொழில் நாடுகளின் இறக்குமதிகள் பெரும்பாலும் செய்பொருள்களும் முதல் பொருள்களுமாகும். இவைகளுக்குள்ள தேவை வருமான மாறுதலுக்கு எஞ்சிய விகிதாசாரத்தில் மாறும். கைத்தொழில் நாடுகளின் இறக்குமதிகள் பெரும்பாலும் கச்சாப் பொருள்களும் உணவுப் பொருள்களும். இவைகளுக்கு உள்ள தேவை, வருமான மாறுதலை நோக்க, நெகிழ்ச்சி குறைவாகக் காணப்படும். இந்த முடிவுகளுக்கு ஆய்வு ஆதாரம் இருக்கிறது. ஆகவே, ஒரு குறிப்பிட்ட அளவு வருமான மாறுதலால், கைத்தொழில் நாடுகளின் இறக்குமதி, பயிர்த்தொழில் நாடுகளின் இறக்குமதியைவிடக் குறைவாகவே மாறுகிறது. ஏற்றுமதியோ இதற்கு நேரடியாக மாறும். கைத்தொழில் நாடுகளின் ஏற்றுமதிகளுக்குள்ள தேவையின் நெகிழ்ச்சி குறைவாகவே இருக்கிறது. ஆகவே குறிப்பிட்ட வருமான மாறுதல் கைத் தொழில் நாடுகளின் ஏற்றுமதியைப் பேரளவில் மாற்றுகிறது. பயிர்த் தொழில் நாடுகளின் ஏற்றுமதி அவ்வளவு மாறுவதில்லை. இதனல் பெறப்படும் முடிவு என்னவெனில் வியாபாரச் சுழலால் உலகில் வருமானம் உயரும்போது பயிர்ப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் நாடுகளின் வருமானமும் உயரும். அப்போது அவைகளின் இறக்குமதி உயர்ந்து நடப்புக் கணக்கில் பற்றுக் குறை தோன்றும். உலக வருமானத்தில் வீழ்ச்சி ஏற்படும்போது ஏற்றுமதி விகிதாசாரத்தில் குறையாததனல் எச்சப்பாடு தோன்றுகிறது. உலக சுபிட்சக் காலத்தில் அவைகளுடைய ஏற்றுமதியைவிட இறக்குமதி அதிகம் உயர்கிறது. உலக மந்தக் காலத்தில் அவைகளின் ஏற்றுமதிக்குள்ள தேவை வீழ்கிறது. இதற்கு நேரடியான விளைவுகள் கைத்தொழில் நாடுகளில் தோன்றும். சுபிட்சமும் மந்தமும் மாறி மாறி வரும்போது நாடுகளின் செலுத்து நிலையில் கேடுண்டாகிறது. இதற்குச் சான்றுகள் வரலாற்றில் காணலாம். வருங்காலத்தில் வியாபாரச் சுழலைச் சமாளிக்க முடியும் என்று நம்ப இடமிருப்பதால் இந்தக் காரணி முக்கியத்தை இழந்துவிடலாம்.

## III. பணத்துறைக் காரணிகளாலான சமநிலைக்கேடு

அடுத்தபடி பணத்துறை நிகழ்ச்சிகள் காரணமாக நிகழும் சமநிலைக் கேட்டைப் பார்ப்போம். தேவை, அளிப்பு நிலையின் மாறுதலால் பண்டங்களுக்கிடையே இருந்த தராதர விலை மட்டத்தில் அல்லது செலவு மட்டத்தில் ஏற்படும் மாறுதல்கள் சமநிலைக் கேட்டுக்குக் காரணமாகக் கூடும் என்பதை முன்னரே கட்டமைப்பு மாறுதல் வகையில் சேர்த்துவிட்டோம். இங்குக் குறிப்பிடும் மாறுதல் ஒரு நாட்டின் பொது விலை மட்டத்திலும், உற்பத்தி செலவு மட்டத்திலும் ஏற்படும் மாறுதல். ஒரு நாட்டின் பொது மட்டம் மற்ற நாடுகளின் மட்டத்திலிருந்து வேறுபட்டால் செலுத்துச் சமநிலைக் கேடு உண்டாகலாம். பண வருமானத்தில் காணும் சுழல்கள் (cyclical income changes) நாட்டின் விலை, செலவு மட்டங்களை மாற்றும். ஒரு நாட்டின் பண வருமானம் உயர்ந்தால் சமூகத்தின் மொத்தத் தேவை குறையும். இது விலை இறக்கத்தை உண்டாக்கும். ஆகையால் வியாபாரச் சுழல் காரணமாகப் பண வருமானம் மாறும்போது, உற்பத்தியும் மாறும், விலைவாசிகளும் மாறும். இவ்வளவிலாவது, வருமான மாறுதலால் ஏற்படும் விளைவுகளையும் விலை மாறுதலால் ஏற்படும் விளைவுகளையும் பிரிக்கலாம்.

பண வருமான (money income) மாறுதல் உண்மை (real) வருமான மாறுதலைப் பிரதிபலிக்கும் அளவுக்கு வருமான விளைவு (income effect) செலுத்து நிலையைப் பாதிக்கிறதெனலாம். பண வருமான மாறுதல் விலை மட்ட மாறுதலால் ஏற்படுமளவுக்கு, விலை விளைவு (Price effect) செலுத்து நிலையைப் பாதிக்கிறதெனலாம். இரு விளைவுகளும் ஒரே திசையில் வேலை செய்யும். ஒரு நாட்டில் மட்டும் விலை மட்டம், செலவு மட்டம் ஏறுமானால் இறக்குமதி அதிகப்படும். ஏற்றுமதி குறையும். செலுத்து நிலையில் சமநிலைக் கேடு தோன்றும்.

### மாற்றுவீத மாறுதல் காரணம்

பணத்துறைச் சமநிலைக் கேடு என்பது விலை மட்ட வேறுபாட்டை அடிப்படையாக உடையது. நாடுகளுக்கிடையே விலை மட்டத்தில் வேறுபாடு, பண மாற்று வீதம் மாறுவதாலும் உண்டாகலாம். மாற்று வீதம் குறைந்தால் அந்த நாட்டின் விலை மட்டம், மற்ற நாடுகளோடு ஒப்பிட, ஏறுவதற்குச் சமமாகும். அயல் நாட்டின் விலைகள் வீழ்வதற்குச் சமமாகும். 1949-இல் ஒரு பவுண்டுக்குக் கிடைத்த டாலர் 4-லிருந்து 2·80 ஆக இறங்கின போது, அமெரிக்க விலைகள் இங்கிலாந்து விலைகளை நோக்க, 43

சதவிகிதம் ஏறியது. இது இங்கிலாந்து விலைகள் அமெரிக்க விலைகளை நோக்க 30 சதவிகிதம் வீழ்ந்ததற்கு ஒப்பானது. மாற்று வீதம் ஏறினல் இதற்கு நேரடியான விளைவுகள் தோன்றும். மாற்றுவீதம் ஒரு நிலையிலிருக்க, இரு நாடுகளுக்கிடையே சமநிலை தரும் விலை மட்டம் ஒன்றுண்டு. இதற்குமேல் விலைமட்டம் உயர்ந்தால் அந்த நாட்டினுடைய 'பணம் மிக்க மதிப்புடையதாக' (over – valued) ஆகிவிடும். ஆகவே நாடுகளுக்கிடையில் விலைவாசி மாறுதல் வேறுபாடான அளவில் நிகழ்ந்தாலும், தராதர விலைவாசிக்குப் பொருத்தமில்லாத மாற்றுவீதம் நிறுவப்பட்டாலும் செலாவணி மிகை மதிப்புத் தோன்றும். காரணம் எவ்வகையதானுலும் மிகை மதிப்பு இறக்குமதியை அதிகப்படுத்தி ஏற்றுமதியைக் குறைத்து நடப்புக் கணக்கிலும் செலுத்துக் கணக்கிலும் பற்றுக்குறையை உண்டாக்கக்கூடும்.

இப்படியாகப் பல அம்சங்கள் ஒரு நாட்டின் வெளிநாட்டுப் பொருளாதாரத் தொடர்பைப் பாதிக்கக்கூடும். இவற்றுள் சில பொருளாதார அமைப்பையே அடிப்படையாக உடையன, மற்றவை குறுங்காலத் தன்மையானவை, என்பதை நினைவிற் கொள்க.

# 38. செலுத்துச் சமநிலைக் கேட்டைத் திருத்தும் வழிகள்

## (Balance of Payments Adjustments)

ஒரு நாட்டின் செலுத்துநிலை, நடப்புக் கணக்கின் காரணமாகப் பற்றுக்குறையை உடையதாயின் அதைப் பல வழிகளால் திருத்தலாம். முக்கியமாக மூன்று வழிகளைக் கூறலாம்.

1. மாற்று மதிப்பிறக்கம். (Exchange Depreciation)
2. விலை, வருமான மாறுதல்கள். (Price and Income Changes)
3. நேரடிக் கட்டுப்பாடுகள் (Direct Controls)

இவைகளில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மாற்றுவீத முறையில் காணப்படும். மாற்று வீத மதிப்பிறக்கம் தடையிலாது மாறும் முறையிலும் நெகிழ்வுள்ள வீத முறையிலும் ஆளப்படும். விலை, வருமான மாறுதல்கள் பொன் திட்டத்தின் கீழ்க் காணப்படும். நேரடிக் கட்டுப்பாடுகள் மாற்றுக் கட்டுப்பாடு முறையின்கீழ் ஆளப்படும். இந்தப் பாகுபாடு பொதுவானதே யொழிய துல்லியமானதன்று.

முதலில் நாம் மாற்று மதிப்பிறக்க (Exchange Depreciation) வழியாகச் செலுத்து நிலையை எப்படித் திருத்தலாம் என்று பார்ப்போம். முதலில் செலுத்துச் சமநிலைக் கேடு என்ன என்பதை நினைவு கொள்ள வேண்டும். ஒரு நாடு வர்த்தகத்தில் அயல் நாட்டிலிருந்து சம்பாதிப்பதைவிட இடைவிடாது அதிகமாகச் செலவு செய்யும் போக்குடையதாய் இருந்து, பற்றுக் குறை நெடுங்கால முதல் உள்ளோட்டத்தாலேயோ ஒருமுக

வரவாலேயோ ஈடு செய்யப்படாவிடின், அந்த நாடு சமநிலைக்கேடு உடையதாகச் சொல்லப்படும். இங்கிலையை நாடு நெடுங்காலம் சமாளிக்க முடியாது. அதன் பொன்னும், அயல் நாட்டுச் செலாவணி இருப்பும், குறுங்காலக் கடன் வரவும், இறுதியும், அயல் நாட்டிலுள்ள சொத்துக்களும், எல்லாமும் அளவுடையன. ஆதலால் இம் மாதிரித் தொடர்ந்த பற்றுக்குறையை ஒரு நாடு தாங்க முடியாது.

பொருளாதார இயலில், சமநிலைக்கேடு ஒன்று உண்டானால் அநேக விளைவுகள் தோன்றி, சமநிலை தானே மீளும் என்று கருதப்படும். இது யாதொரு தடையின்றி இயங்கும் பொருளாதாரத்துக்குப் பொருந்தும். அங்காடிச் சக்தியின் மூலமாகச் சமநிலைப்பாடு தானாகவே மீளும். அங்காடிச் சக்திகளின் செயலுக்குத் தடைகள் இருந்தால் சமநிலை தானாகவே ஏற்படாது. கட்டுப்பாடுடைய அங்காடியானால் அரசாங்கம் நேரடியான நடவடிக்கைகள் எடுத்துச் சமநிலை எய்தும் வழியைத் தேட வேண்டும். ஆகவே செலுத்துச் சமநிலைக் கேடுகள் சரிப்படுவதற்கு அநேக திருத்த மாறுதல்கள் ஏற்பட வேண்டியிருக்கின்றன.

### (1) மாற்று மதிப்புக் குறைப்பு மூலம் திருத்தம் (Adjustment through exchange depreciation)

செலுத்தில் பற்றுக்குறை என்பது அயல் நாட்டுக்குச் செலுத்த வேண்டிய செலாவணியில் பற்றுக்குறையாகும். இந்த நிலையில் செய்ய வேண்டியது ஏற்றுமதியைப் பெருக்கி இறக்குமதியைக் குறைப்பது. மாற்று வீதத்தை மாற்றினால் ஏற்றுமதியைப் பெருக்கி இறக்குமதியைக் குறைக்கலாம். முன்னர் மாற்று வீதமே நாடுகளின் விலை மட்டங்களுக்குள் தொடர்பை உண்டாக்குகிறது என்றோம். ஒரு நாட்டின் மாற்று வீதம் எவ்வளவுக்கு ஏறுகிறதோ அவ்வளவுக்குப் பிற நாடுகளின் பண்டங்கள் இந்த நாட்டுக்கு விலை ஏறினதாகத் தெரியும். ஆனால் அயல் நாட்டாருக்கு இந்நாட்டுப் பண்டங்கள் மலிவாகக் காணப்படும். உதாரணமாக ரூபாய்க்கு 18 பென்சு என்றிருந்த வீதம் 16 பென்சு என்று மதிப்பிறக்கம் பெறுமானால், இந்தியன் ஒரு பவுனுக்கு முன்னைவிட அதிகம் ரூபாய் தர வேண்டியிருக்கும். அயல்நாட்டுப் பொருள் இந்தியருக்கு விலைஏறித் தெரியும். ஒரு ரூபாய்க்குக் குறைவான பென்சைக் கொடுக்க வேண்டியிருப்பதால், இந்தியப் பொருள் ஆங்கிலேயனுக்கு மலிவாகத் தெரியும். இந்திய நாட்டினரின் செலாவணித் தேவைக் கோடு இடமிருந்து

வலம் சரிவதாக இருக்கும்; அதாவது வீதம் குறைந்தால் அயல் நாட்டுப் பொருளுக்கு (ஆகவே பவுண்டுக்கு)த் தேவை அதிகப்படும். வீதம் ஏறினால் அயல் நாட்டுப் பொருளுக்குள்ள தேவை குறைந்து, அயல் செலாவணித் தேவை குறைந்து, நடப்புக் கணக்குப் பற்றுக்குறை குறையும். ஆனால் அயல் நாட்டார் தேவை மிக்கு, அவர் செலாவணி அளிப்பு அதிகப்படு மாதலால் பற்றுக்குறை குறையும். இந்த மாற்று வீத மாறுதல் செலுத்து நிலையை எவ்வளவு திருத்தும் என்பது நடைமுறையில் இருக்கும் மாற்று வீதத் திட்டத்தைப் பொறுத்தது. தடை யிலாது வீதம் மாறக்கூடிய திட்டமாயின், தேவையும் அளிப்பும் மாறும்போது மாற்று வீதமும் தானாகவே மாறும். நெகிழ்வுள்ள வீதமுறையிலும் தேவையிலும் அளிப்பிலும் ஏற்படும் மாறுதல், வீதத்தில் மாறுதலை உண்டாக்கும். பொதுவாக நெகிழ்வுள்ள திட்டத்தின் கீழ்த் தற்காலிக அல்லது பருவகால வீத மாறுதல்களை மட்டும் திருத்துவது வழக்கம். நெடுங்கால மாறுதல்கள் அடிப்படைப் பொருளாதாரக் காரணிகளால் நிகழ் வனவாதலால் திருத்த முயல்வது இல்லை.

பொன் திட்டத்தின் கீழ் அற்ப அளவே வீதம் மாறக்கூடும் என்று முன்னரே கூறியுள்ளோம். ஆகவே வீத மாறுதல் மூலம் பொன் திட்டத்தின் கீழ்ச் சமநிலைக் கேட்டைத் திருத்த முடியாது. ஆனாலும் மதிப்புக் குறைப்பு (devaluation) மூலம் வீதத்தை மாற்றுவதுண்டு. மதிப்புக் குறைப்பாவது பணத்துக்குக் கொடுத் திருந்த பொன் மதிப்பைக் குறைப்பதாகும். ஆனால் பொன் திட்டத்தினுடைய நோக்கமே மாறாத மாற்று வீதமாகையால், பொன் திட்டத்தின் கீழ் வீதத்தை மாற்றிச் சம நிலை அடைவது என்பது முரண்பாடான செயலாகும்.

மாற்றுக் கட்டுப்பாடு திட்டத்தின் கீழ் அதிகாரிகள் விருப் பப்படி வீதங்களை மாற்றிக் கொள்ளலாம். ஆனால் கட்டுப்பாடு திட்டத்தில் நிறுவப்படும் வீதம் சமநிலை நோக்கோடு இல்லாமல் இருக்கலாம். சில பேரங்கள் சம்பந்தமாக வீதங்கள் சுயேச்சையாக மாறி விடுவதுமுண்டு. சமநிலைக்காக மாற்றுக் கட்டுப்பாட்டு முறையின் கீழ் வீத மாற்றுதல் கருவியை ஆள்வது வழக்கமன்று. உண்மையில் கட்டுப்பாடு என்பது வீதம் மாறாமல் காப்பதற்காகவே தோன்றியது. செலுத்து நிலையைத் திருத்த வேண்டுமானால் வேறு முறைகள் ஆளப்படுவது வழக்கம். ஆகவே முடிவாகக் கூற வேண்டுமானால், தடையிலாது வீதம் மாறும் முறையிலும், நெகிழ்வுள்ள வீத முறையிலும் தான் வீதத் திருத்து முறை செலுத்தைச் சீர் செய்ய ஆளப்படும். பொன்

திட்டத்தின் கீழும் மாற்றுக் கட்டுப்பாட்டின் கீழும் இவ்வித வீதமாற்று முறை ஆளப்படுவதில்லை.

இனி ஒவ்வொரு முறையின் கீழும் எப்படித் திருத்தம் ஏற்படுகிறது என்று பார்ப்போம்.

**I. தடையிலாது வீதம் மாறும் திட்டத்தின் கீழ்ச் சரிசெய்தல்**
**(Adjustment under freely fluctuating exchauge rate system)**

தேவை அளிப்பு நிலைமைக்கேற்ப மாற்று வீதம் மாறுபடுமானால் அங்காடிச் சக்திகளின் மூலமாகச் செலுத்து நிலையில் சமப்பாடு உண்டாகும். முதலில் ஒரு நாட்டின் நடப்புக் கணக்குச் செலுத்து நிலையில் சமப்பாடு இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அப்போது அயல்நாட்டுச் செலாவணிக்குத் தேவை உயர்ந்தாலும் அல்லது அளிப்பு தாழ்ந்தாலும் வீதம் ஏறும். இப்படி வீதம் ஏறுவதனால் செலாவணித் தேவை குறையும், அளிப்பும் உயரும். முடிவில் ஏறிய புதிய மாற்று வீதத்தில் புதுத் தேவை அளிப்புச் சமப்பாடு உண்டாகிறது. படம் 14 இதைக் காட்டுகிறது.

ஆனால் அதேபோது வேறு செலுத்துப் பகுதிகளில் தேவை, அளிப்புக்களில் மாறுதல்கள் இருப்பின் இப்படிச் சமப்பாடு அடைவது தடைப்படாதா என்ற கேள்வி எழுகிறது.

தனியார் நெடுங்கால முதல் இயக்கம் இப்படி (long term private capital movement) இடர்ப்பாடுண்டாக்கலாம். பூர்வத்தில் மாற்று வீதத்தில் சமநிலை இருந்ததாக வைத்துக் கொள்வோம். குறுங்கால முதலியக்கமோ, ஒருதிறச் செலுத்துக்களோ இல்லையென்றும் வைத்துக் கொள்வோம். இப்போது அயல் நாட்டு மாற்றின் அளிப்பு அதிகப்படுகிறது. ஆகையால் வீதம் குறையும். எவ்வளவு விழும்? இந்த அதிகப்படி அளிப்பை ஈடு செய்யக் கூடிய அளவுக்குத் தேவை உயரும்வரை விழும். இதைப் படம் 15 காட்டுகிறது. பூர்வத்தில் மாற்றுவீதம் நடப்புக் கணக்கு தேவை அளிப்பு நிலைக்கேற்ப $r^1$-ல் இருக்கிறது. இப்போது நெடுங்கால முதல் உள்புகுவதால் அளிப்புக் கோடு வலப்புறம் நகர்கிறது. இதனால் வீதம் $r^3$ ஆக இறங்குகிறது. $Q_1 Q_2$ அளவுக்குத் தேவை அதிகப்பட்டு, நெடுங்கால முதல் உள்ளோட்டத்துக்குச் சமமாகிறது. இப்படி நெடுங்கால முதல் பெயர்ச்சியின்போது நடப்புக் கணக்கு சமப்பாடடைவது வீத மாறுதலின் வழியாக நிகழ்கிறது.

அடுத்தபடியாக, குறுங்கால முதல் இயக்கங்கள் எப்படி வீதத்தைப் பாதிக்கும் என்று பார்ப்போம். சிலபோது ஏற்றுமதி இறக்குமதிகளில் தற்காலிக மாறுதல்கள் ஏற்படும்போது நடப்புக் கணக்கில் அயல் செலாவணி எச்சப்பாடோ பற்றுக் குறையோ காணப்படலாம். ஏற்றவாறு மாற்று வீதம் அவ்வப்போது உடனே மாறவேண்டி வரும். ஆனால் குறுங்கால முதல் பெயர்ச்சி இடையிட்டு மாற்று வீதத்தை (செலுத்துச் சமநிலையை) நிலைபெறச் செய்யலாம். திடீரென இறக்குமதி அதிகப்படுமானால் அயல் நாட்டுச் செலாவணிக்குத் தேவை உயரும். இதனால் வீதம் உயரும். அப்போது மாற்று வியாபாரிகள் அயல் நாட்டில் தாங்கள் வைத்திருக்கும் இருப்பை தம் நாட்டுப் பணமாக மாற்ற விரும்புவார்கள். ஏனெனில் இப்போது ஒவ்வோர் அயல்நாட்டுப் பணத்துக்கும் தம் நாட்டுப் பணம் அதிகமாகக் கிடைக்கும். இதே காரணமாய் அயல்நாட்டுச் செலாவணி வியாபாரிகளும் இந்த நாட்டுக்கு முதலை அனுப்பி வைக்க விரும்புவார்கள். இப்படிக் குறுங்காலமுதல் அயல்நாட்டிலிருந்து இந்நாட்டை நாடும் இப்பெயர்ச்சி செலாவணி அங்காடியில் செலாவணியின் அளிப்பை அதிகப்படுத்தி நடப்புக் கணக்கில் தோன்றிய கூடுதல் தேவையை ஈடுசெய்யும். மாற்றுவீதம் ஏருமல் தடுக்கும். பின்னர் நடப்புக் கணக்கில் உபரி ஏற்படும்போது எதிர் முறையாக முதல் வெளியேற்றம் ஏற்படும். அதனால் இந் நாட்டின் செலாவணி மதிப்பு ஏறுவது தடைப்படும். இவ் விதமாக நடைமுறைக் கணக்கில் தற்காலிக உபரியும் பற்றுக் குறையும் ஏற்படும்போது அதன் விளைவாக வீதமாறுதல் நிகழாமல் சமநிலை உண்டாக்கிப் பழைய வீதத்தை நிலைநிறுத்தக் குறுங்கால முதல் இயக்கங்கள் உதவுகின்றன.

ஆனால் நடப்புக் கணக்கில் தொடர்ந்து பற்றுக்குறை நிகழுமானால் அயல்நாட்டுச் செலாவணி வியாபாரிகள் இந்த நாட்டுக்கு முதலைப் பெயர்க்க விரும்பமாட்டார்கள். ஏனெனில் எதிர்காலத்தில் மாற்று தொடர்ந்து ஏறுமென்று எதிர்பார்க்க வேண்டுமாயின் ஒரு வேளை நஷ்டத்துக்குள்ளாக வேண்டியிருக்குமோ என்று அஞ்சுவார்கள். ஆகவே, இவ்வகையில் வீதம் ஏறுதல் குறுங்கால முதல் இயக்கத்தால் தடுக்கப்படமாட்டாது. நடப்புக் கணக்கிலேயே சமநிலை உண்டாகும் வரையில் வீதம் மாறிக்கொண்டேயிருக்கும்.

மாற்று வீதம் எந்த அளவுக்கு உயர்ந்தால் அல்லது வீழ்ந்தால் சமநிலை உண்டாகும் என்பது தேவை, அளிப்பு நெகிழ்ச்சியைப் பொறுத்தது. இரண்டு நெகிழ்ச்சியும் குறைவாய்

இருப்பின் செலாவணி வீதம் அதிகமாக மாறவேண்டியிருக்கும். இங்கிலேயில் செலாவணி வீத மாறுதல் வழியாக அயல்நாட்டுக் கணக்கில் சரிக்கட்டுவது கடினமாக இருக்கக் கூடும். வீதத்தை மாற்றுவது மூலம் சமநிலே பெற முயல்வதன் ஒரு முக்கியக் குறை இதுவாகும். பண வீக்கக் காலத்தில் பற்றுக்குறை தோன்றிஞல் வீத உயர்வு மேலும் வீக்கத்தை உண்டாக்கி, மற்றும் மதிப்பிறக்கம் செய்தும் பயனற்றதாகி, மேலும் வீதம் குறைக்க வேண்டிவரும். இப்படியே வீக்கமும் மதிப்பிறக்கமும் போட்டியிட்டு நிகழும்.

கடைசியாக, மதிப்பிறக்கத்தால் யூக பேரமும் தூண்டப்பட்டு, சமநிலேயை அடைவது கடினமாகலாம். வீத மாறுதல்கள் பண்டங்களிலும் முதல் இயக்கத்திலும் யூக வாணிபத்தைத் தூண்டிவிட்டுச் சமநிலேயைக் கெடுக்கலாம். மாற்று வீதம் எந்த அளவுக்கும் தடையின்றி மாறலாமாயின், ஒரு முறை வீதம் உயர்ந்தால் அது மேலும் மேலும் ஏறிக்கொண்டே போகும் என்ற யூகத்தையும், ஒரு முறை வீழ்ந்தால் அது மேலும் மேலும் விழும் என்ற யூகத்தையும் உண்டாக்கலாம். ஏறும் வீதம் இறக்குமதி செய்பவர்களே இன்னும் அதிகமாக உடனே இறக்குமதி செய்யத் தூண்டும். அயல் நாட்டினரை இந் நாட்டிலிருந்து இறக்குமதி செய்வதைத் தள்ளிப்போடத் தூண்டும். இதனுல் நாட்டின் நடப்புக் கணக்கில் பற்றுக்குறை ஏற்படும். இதனுல் மாற்று வீதம் மேலும் உயரும்.

இதற்கு நேரடியாக இறங்கும் வீதம் இறக்குமதியைக் குறைக்கும். ஏற்றுமதியை உயர்த்தும். இப்படி யூகம் தலையிடுவதனுல் வீதமாறுதலின் அளவு அதிகப்படுகிறது. இந்தச் சூழ்நிலேயில் யூக முதல் இயக்கங்களும் மாற்று வீதத்தின் நெளிவை அதிகப்படுத்தலாம். ஏறும் வீதம் அயல்நாட்டுக்கு முதலேத் துரத்துகிறது. எல்லோரும் அயல்நாட்டுப் பணமாக மாற்ற முயலும்போது வீதம் இன்னும் அதிகமாக ஏறும். இவ்வித முதல் இயக்கங்கள் சமநிலேக்கேட்டை மேலும் மோசமாக்கும்.

சுயேச்சையாகத் தடையின்றி மாறும் வீத முறையின் நன்மை தீமைகளேச் சுருங்கக் கூறுவோம். (1) அரசாங்கத் தலேயீடு, கட்டுப்பாடு முதலிய செயற்கைத் தடைகளின்றி அங்காடிச் சக்திகளின் விளேவாகச் செலுத்து நிலே தானுகவே சீரடைகிறது. (2) சாதகமான சூழ்நிலேயில், நாட்டின் வேலே வாய்ப்பிலும் வருமானத்திலும் பெரிய மாறுதலே

உண்டாக்காமல் அயல்நாட்டுச் செலுத்துக் கணக்கு சமநிலை அடைகிறது. ஆனால் (1) வீதங்கள் அடிக்கடி பேரளவில் மாறுவது நாடுகளுக்குள் வியாபாரத்தையும் முதலீட்டையும் பாதிக்கும். (2) சில சூழ்நிலைகளில் வீத மாறுதல்கள் சம நிலையைத் தாராமல் சமநிலைக்கேட்டைக் குவியச் செய்யக்கூடும்.

## II. நெகிழ்வுள்ள வீதத் திட்டத்தின்கீழ்ச் சரி செய்தல் (Adjustment under flexible rate system)

நெகிழ்வுள்ள மாற்று வீதத் திட்டத்துக்கும் தடையிலாது மாறும் வீதத் திட்டத்துக்கும் உள்ள வேறுபாடு என்னவெனில், முன்னதில் பணத்துறை அதிகாரிகள் மாற்று வீதத்தை ஒரு வழியில் செலுத்தும் நோக்கத்தோடு தலையிடுவதாகும். இப்படி வீதத்தை ஒருவழிப்படுத்த ஆளும் முறை என்னவெனில் அங்காடியில் அயல்நாட்டுச் செலாவணியை வாங்குவதும் அல்லது விற்பதுமாகும். மாற்று அங்காடி பேரங்கள் கட்டுப் படுத்தப்படுவதில்லை. வீதம் மாறுவதற்கு வரையறையும் இல்லை. இந்தத் திட்டத்தின் கீழ்ச் சரி செய்யும் முறை அதிகாரிகளின் கொள்கைகளைப் பொறுத்தது. ஒரே வீதத்தை மாறாதிருக்கும்படி செய்வது நோக்கமாயின், பொன் திட்டத் திற்கும் இதற்கும் வேறுபாடு இல்லை. ஆனால், இந்த முறையைப் பெரும்பாலும் தற்காலிக வீத மாறுதல்களைச் சமாளிக்கவே ஆள்வது வழக்கம். அடிப்படைச் சக்திகளின் காரணமாக வீதம் மாறுவதாயின் இம்முறை வழியாகத் தலையிடுவதில்லை. வீதம் மாற விடப்படும். இந்த அளவுக்கு இம்முறை தடையில் லாது மாறும் திட்டத்துக்கு ஒப்பானதாகும். சரிக் கட்ட எவ்வளவு வீத மாறுதல் வேண்டுமென்பது தேவை அளிப்பு நெகிழ்ச்சியைப் பொறுத்தது.

இந்தத் தற்காலிக வீத மாறுதல்களை அதிகாரிகள் எதிர்ப் பார்கள் என்பது உறுதியாக நம்பப்படுமானால், குறுங்கால முதல் பெயர்ச்சி ஏற்பட்டு அதுவே சமநிலை உண்டாக்கக் கூடும். வீதம் ஏறுவது அரசாங்க மாற்று விற்பனையால் தடுக்கப்படும் என்பது உறுதியாயின் நடப்புக் கணக்கில் மாற்றுக்குத் தேவை உயர்ந்தாலும் அளிப்புக் குறைந்தாலும் வியாபாரிகள் முதலை இந்நாட்டுக்குக் கொண்டு வருவார்கள். இவ்வித முதல் பெயர்ச்சி அரசாங்க மாற்று விற்பனையை அவசியமில்லாமற் செய்து விடலாம்.

ஆனால் வீதம் தொடர்ந்து ஏறும் என்று எதிர்பார்க்கப்படின் நாட்டின் அதிகாரிகள் நாளடைவில் உயர்ந்த வீதத்துக்கு இடம்

கொடுத்தே ஆக வேண்டும் என்ற நம்பிக்கை தோன்றும். அப்போது முதல் வெளியேற்றம் உண்டாகும். இதனால் வீதம் மேலும் உயரும். யூக விளைவுகளைத் தடுக்க அதிகாரிகள் தங்கள் செலாவணி விற்பனையை இரகசியமாகச் செய்யலாம். மற்றவர்க்கு எதிர்காலத்தில் பணத்தின் மதிப்புக் குறைப்புச் செய்யப்படுமா, எவ்வளவு, எப்போது என்பது பற்றி நிச்சய மில்லாமலும் செய்யலாம். ஆனால் பேரளவில் அதிகாரிகள் செலாவணி விற்கும்போது மறைத்து வைப்பது முடியாத காரியம். அவசியம் பணத்தின் மதிப்பு குறைந்து ஆக வேண்டு மென்ற நம்பிக்கை மக்களுக்கு உறுதியாயின் தனியார் முதல் வெளியேற்றம் ஏற்படவே செய்யும். அதிகாரிகளிடம் ஏராள மான அயல்நாட்டுச் செலாவணி இருக்குமானால் அவர்கள் அவைகளை விற்பதன் மூலம் பேரளவில் வீத மாறுதல் இல்லாமற் பார்த்துக் கொள்ளக் கூடும்.

நெகிழ்வுள்ள மாற்று வீத முறையின் ஒரு தனிக்குறை ஒரு முரண்பாடான சூழ்நிலையை உண்டாக்குவதாகும். ஒரு நாட்டின் பணத்தினுடைய அயல்நாட்டு மதிப்பு வீழ்ந்த தானால் அயல்நாட்டுப் பணத்தின் மதிப்பு உயர்ந்ததாகிறது. அநேக நாடுகள் நெகிழ்வுள்ள வீதத் திட்டத்தை ஆளுமானால் ஒரு நாடு தன் பணத்தின் மதிப்பைக் குறைக்கும்போது மற்ற நாடுகள் தம் பணத்தின் மதிப்பைக் குறைக்கக் கூடாது. செய்தால் நடவடிக்கைகள் முரண்பட்டு முதல்நாடு செலுத்துச் சமநிலையை அடைய முடியாமற் போகும். ஆனால் ஒரு நாடு தன் ஏற்றுமதி மூலம் அயல்நாட்டு வாணிபத்தில் எச்சப்பாடு காண எண்ணித் தன் பணத்தின் மதிப்பை வலியக் குறைத்தால், இதன் விளைவாக மற்ற நாடுகள் பாதிக்கப்படுமாகையால், அவைகளும் தங்கள் வாணிபத்தைக் காத்துக்கொள்ள, தங்கள் பணத்தின் மதிப்பைக் குறைக்க முற்படும். ஆகவே இந்த நெகிழ்வுள்ள வீத முறை ஒரேபோது பல நாடுகளில் பயன் அளிக்க முடியாது. பயன் அளிக்க வேண்டுமானால் அவைகளுக் குள்ளே மாற்று வீத மாறுதல் பற்றி ஒரு மன ஒருமைப்பாடு வேண்டும்.

**பொன் திட்டத்தின் கீழ்ச் சரி செய்தல்**
**(Adjustment under gold standard)**

பொன் திட்டத்தின் கீழ் மாற்று வீதம் மாறாதது. ஆகவே அயல்நாட்டுச் செலுத்து நிலையை மாற்று வீதத்தை மாற்றிச் சரி செய்ய முடியாது. பொன் இயக்க நிலை வரும் வரைக்கும் வீதம்

மாறக் கூடும். ஆனால் இச்சிறு மாறுதல் அயல்நாட்டுச் செலுத்து நிலையைத் திருத்தக் கூடியதன்று. இத்திட்டத்தின்கீழ்ச் சரிக் கட்டும் சக்திகள் வேறு உள்ளன. அவை முக்கியமாக விலை மாறுதலும் வருமான மாறுதலாகும். மாற்று வீதம் மாறுவதானால் சம நிலை அதன் வழியே ஏற்படுகிறது. நாட்டின் வருமானத்திலும் மாறுதல் உண்டாவதில்லை. ஆகவே சுயேச்சையாகத் தடையின்றி மாறும் முறையிலும், நெகிழ்வுள்ள வீத முறையிலும் உள்நாட்டு வருமானமும் விலைகளும் பாதிக்கப்படுவதில்லை. ஆனால் மாற்று வீதம் மாறாத பொன் திட்டத்தின்கீழ்ச் செலுத்து நிலையைச் சரியாக்க வேண்டுமானால் பொருளாதாரத்தில் மாறுதல்கள் இன்றி அமையாதன.

### செலுத்துச் சம நிலையடையும் முறை—(1)- கிளாசிகல் கொள்கை—விலை மாறுதல் வழி

இனிப் பொன் திட்டத்தின்கீழ் எப்படிச் செலுத்து நிலை சரி செய்யப்படுகிறது என்று பார்ப்போம். துவக்கத்தில் நடப்புக் கணக்கில் சமப்பாடு உள்ளது என்று வைத்துக் கொள்வோம். பின்னர் இறக்குமதி ஏறுவதாலோ ஏற்றுமதி குறைவதாலோ, மாற்று வீதம் தாக்கப்பட்டுப் பொன் வெளி ஏற்றம் அல்லது குறுங்கால முதல் உள்ளோட்டம் துவங்கும். பொன் வெளியேற்றமும் குறுங்கால முதல் உள்ளோட்டமும் அயல்நாட்டு வாணிபக் கணக்கில் வரவு இனங்கள் ஆகும். இவை வாணிபத்தில் ஏற்படும் பற்றாக்குறையைச் சரி செய்கின்றன. குறுங்கால முதல் உள்ளோட்டம் அயல்நாட்டுச் செலாவணியை அளிப்பதன்மூலம் பொன் ஏற்றுமதிகளைக் குறைக்கின்றது. குறுங்கால முதல் உள்ளோட்டம் நடப்புக் கணக்கின் பற்றாக்குறையால் ஏன் தூண்டப்பட வேண்டும்? ஒரு காரணம், வீதம் உயரும்போது யூக வியாபாரிகள் முதலை இந்த நாட்டுக்கு அனுப்புவதால், பொன் திட்டத்தின்கீழ் மாற்று வீதம் பொன் ஏற்றுமதி நிலைக்கு மேல் ஏற முடியாது என்பதை அவர்கள் உணர்வார்கள். இரண்டாவது காரணம், நடப்புக் கணக்கில் பற்றாக்குறை உண்டாகும்போது நாட்டில் குறுங்கால வட்டி வீதங்கள் ஏறுகின்றன. இது அயல்நாட்டின் முதலை இந்நாட்டுக்குக் கவர்கிறது. வட்டி வீதம் பணத்துறை அதிகாரிகளால் வேண்டுமென்றே ஏற்றப்பட்டும் இருக்கலாம். மைய பாங்கு தன்னுடைய கழிவு வீதத்தை உயர்த்தி நாட்டில் வட்டி வீதத்தை உயர்த்தலாம். பொன் வெளி ஓடும்போது, அது ஓடக்கூடும் எனத் தோன்றும்போது, வட்டி வீதத்தை ஏற்றுவது இங்கிலாந்து பாங்கின் வழக்கம். பணத்துறை

அதிகாரிகள் இப்படிச் செய்யாவிட்டாலும் கூட, நடப்புக் கணக்கில் ஏற்படும் பற்றுக்குறை தானுகவே இவ்வித விளைவை உண்டாக்கும். எப்படி என்று பார்ப்போம்.

அயல்நாட்டு வியாபார மூலம் ஒரு நாடு பெறும் வரவு அதன் பணத்தொகையை அதிகப்படுத்தும் தன்மையுடையது. ஒரு நாடு அயல்நாட்டில் செய்யும் செலவு அதன் பணத்தொகையைக் குறைக்கும் தன்மையையுடையது. அரசாங்க நிறுவனங்களும் வணிக நிறுவனங்களும் அயல்நாட்டு உண்டியலை வாங்குவது மூலமும் விற்பது மூலமும் இவ்வித விளைவுகள் உண்டாகின்றன. முதலில் அயல்நாட்டில் இருந்து வாணிப மூலம் வரும் வரவு எப்படி ஒரு நாட்டின் பணத்தொகையை அதிகப்படுத்துகிறது என்று பார்ப்போம். பொன் திட்டத்திலிருந்த இங்கிலாந்து, அமெரிக்க நாடுகளையே உதாரணமாக ஆள்வோம். இங்கிலாந்திலிருந்து ஒருவன் அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்தால் ஏற்றுமதி செய்த ஆங்கிலேயன் ஓர் அமெரிக்கன்மீது ஓர் உண்டியலை எழுதுவான், அல்லது அமரிக்கன் ஓர் இங்கிலாந்து பாங்கின்மேல் பவுண்டில் ஒரு டிராஃப்டு அனுப்புவான். ஏற்றுமதி செய்தவனுக்குப் பணம் தேவையிருந்தால் அவன் உண்டியலைத் தன் நாட்டில் ஒரு பாங்குக்கு விற்க வேண்டிவரும். பாங்கு அவன் கணக்கில் வரவு வைத்து விடும். இதனுல் வரவு வைத்த பாங்கின் அயல்நாட்டு இருப்பு அதிகப்படுகிறது; உள்நாட்டு வைப்புப் பொறுப்பு அதிகப்படுகிறது. பாங்கின் வைப்புப் பொறுப்பு அதிகப்படுவது பணத்தொகை அதிகப்படுவதற்கு ஈடாகும்.

இதற்கு எதிரிடையாக ஏற்றுமதி செய்த ஆங்கிலேயன் தன் நாட்டுப் பணத்தில் எழுதப்பட்ட டிராஃப்டு மூலம் தனக்கு வரவு பெற்று இருப்பானுயின் பாங்கு அந்த டிராஃப்டைப் பெற்றுக் கொண்டு அவன் பேரில் வரவு வைக்கும். அதன் வைப்புப் பொறுப்புயரும். அமெரிக்க பாங்குக்கு இங்கிலாந்தில் வைத்திருந்த வைப்புக் குறையும். ஆகவே ஒரு வைப்பேற்றமும் அதற்குச் சமமான வைப்புக் குறைப்பும் நிகழ்கின்றன. ஆகவே இங்கிலாந்தின் மொத்தப் பணத்தொகையில் மாறுதல் இல்லை. அதன் உரிமையாளரே மாறுகின்ருர்கள்.

அடுத்தபடி அயல்நாட்டில் வாணிபத்துக்காகச் செலுத்தும் போது எப்படிப் பணத்தொகை பாதிக்கப்படும் என்று பார்ப்போம். ஆங்கிலேயன் ஒருவன் அமெரிக்கனுக்குச் செலுத்த வேண்டியிருந்தால் இவன் உண்டியல் மூலம் கடன் ஒப்புக்

கொண்டு இருப்பான். அல்லது ஒரு பாங்கு டிராஃப்ட் வாங்கி அனுப்பியிருப்பான். உண்டியல் முறையாயின் இங்கிலாந்து பாங்கு ஒன்று இவனுக்குப் பதிலாக அயல்நாட்டில் செலுத்தி யிருக்கும். இந்தப் பாங்கினுடைய அயல்நாட்டு இருப்புக் குறைந்து விடும். ஆங்கிலேயன் டிராஃப்ட்மூலம் அமெரிக்க னுக்குக் கொடுத்திருப்பானுனல், இங்கிலாந்து பாங்கொன்றிடம் வாங்கி இருப்பான். இப் பாங்கின் வைப்புக் குறைகிறது. அதன் அயல்நாட்டு வைப்புக் குறைகிறது. இரண்டு முறையிலும் அயல்நாட்டுச் செலுத்துக் காரணமாக நாட்டின் பணத்தொகை குறைகிறது.

ஆகவே நடப்புக் கணக்குச் செலுத்தும் வரவும் சமமா யிருப்பின் நாட்டுப் பணத்தொகையில் மாறுதல் இருக்காது. ஆனால் செலவெச்சமாயின் பண அளிப்புக் குறையும், வரவெச்ச மாயின் அளிப்பு உயரும்.

பற்ருக்குறை அல்லது எச்சப்பாடு குறுங்கால முதல் பெயர்ச்சியாலோ அல்லது பொன் பெயர்ச்சியாலோ எவ்வழி யாகச் சரி செய்யப்பட்டாலும், நடப்புக் கணக்கில் மேற்கண்ட விளைவுகள் காணம்படுவன ஆகும். பொன் பெயர்ச்சிமூலம் சரி செய்யப்பட்டால் மேலும் சில பணத்துறை விளைவுகள் காணப் படும். பொன்னுக்கும் நாட்டின் பண அளிப்புக்குமுள்ள தொடர்பு மூலம் இவ்விளைவுகள் ஏற்படுகின்றன. பொன் வெளி யேற்றம் பாங்குகளின் ரிசர்வைக் குறைக்கின்றது. பொன் உள்ளோட்டம் அதிகப்படுத்துகின்றது. பொன் பாங்கிகளிடம் இருந்தாலும் சரி, அரசாங்கத்திடம் இருந்தாலும் சரி விளைவு ஒன்றே. அரசாங்கத்திடம் இருப்பதாகவே வைத்துக்கொள்வோம். நடப்புக் கணக்கில் பற்ருக்குறை தோன்றியதாகவும், ஒரு பாங்கு அரசாங்கத்திடம் பொன்னை வாங்கி ஏற்றுமதி செய்வதாகவும், கிடைக்கும் அயல்நாட்டுச் செலாவணியை உள்நாட்டு இறக்குமதி வியாபாரிகளுக்கு விற்பதாகவும், வைத்துக்கொள்வோம். பொன்னை வாங்கும் பாங்கு, மைய பாங்கிடம் இருக்கும் தன் இருப்பின் மேல் செக்கு எழுதிக் கொடுக்கிறது. அப்போது பொன் இழந்தது காரணமாகப் பாங்கினுடைய ரிசர்வு சொத்துக் குறையும். வைப்புப்பொறுப்பும் குறையும். எதிரிடையாகப் பொன் உள்ளோட்டமாயின் அதன் சொத்துக்களில் ஏற்றமும் பொறுப் பில் ஏற்றமும் காணப்படும். ஒரு நாட்டில் வைப்புப் பொறுப்பில் 20 சதவீதம் ரிசர்வ் இருக்க வேண்டுமென்று வைத்துக் கொள்வோம். £ 100 பொன் வெளியேறினுல் பாங்கினுடைய வைப்புப் பொறுப்பு £ 500 குறையும். ஆனல் பாங்குகளினிடையே

அதிகப்படி ரிசர்வ் இருந்தால் பொன் வெளியோட்டம் இவ்விதமாகப் பாங்குகளின் வைப்புப் பொறுப்பைப் பன் மடங்காகக் குறைக்காது.

பொன் வெளியோட்டம் இல்லாமல், வெளி நாட்டு இருப்பில் இருந்து அயல்நாட்டாருக்குச் செலுத்தினாலும் விளைவுகள் இதே மாதிரிதான் இருக்கும். ஆனால் அயல் நாட்டு இரும்பும், ரிசர்வில் கணக்கு எடுத்துக் கொள்ளப்பட்டிருக்க வேண்டும். அயல்நாட்டு இருப்பும் மையப் பணத்துறை அதிகாரிகளால் பொன்னைப் போல விற்கப்படுவதாக இருக்க வேண்டும்.

பண அளிப்பைக் குறைப்பதால் பண அங்காடியில் குறுங்கால வட்டி வீதம் ஏறும். இதனால் முன் கூறியபடி அயல்நாட்டிலிருந்து குறுங்கால முதல் பெயர்ச்சி இருக்கலாம்.

இனி இவ்விதப் பணத்துறை மாறுதல்கள் அயல்நாட்டுச் செலுத்து நிலையில் எப்படிச் சம நிலையை உண்டாக்க உதவு கின்றன என்று பார்க்க வேண்டும். கிளாசிகள் (classical) கொள்கைப்படி நடப்புக் கணக்கில் பற்றுக்குறையால் பணத் தொகை குறைந்தால் விலைகள் குறையும். வாணிபத்தில் எச்சப்பாடு கண்ட மற்ற நாட்டில் பணத்தொகை அதிகப்பட்டு விலைகள் ஏறும். இதனால் விலை குறைந்த பற்றுக்குறை நாட்டிலிருந்து விலை ஏறிய எச்சப்பாடு நாட்டுக்குப் பண்டங்கள் செல்லும். பற்றுக்குறை நாட்டின் இறக்குமதி குறைந்து ஏற்றுமதி உயரும். எச்சப்பாடு நாட்டில் இறக்குமதி உயர்ந்து ஏற்றுமதி குறையும். பற்றுக்குறை மறையும் வரையில் பண அளிப்பிலும் விலையிலும் மாறுதல்கள் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டேயிருக்கும். முடிவில் பற்றுக்குறை மறையும். இந்தக் கிளாசிகள் (classical) கொள்கை பணத்தொகை கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டது. இப்பணத்தொகை கோட்பாடு உண்மையாய் இருக்கவேண்டுமானால் இரண்டு இடுகோள்கள் அவசியம். ஒன்று, வேலை நிறைவு (full employment) இருக்க வேண்டும். வேலைக் குறைவு இருந்தால் கிளாசிகள் கோட்பாடு பொருத்தமான தாகாது. இரண்டாவது, நாட்டில் விலைகளும் செலவுகளும் மாறக் கூடியனவாக இருக்க வேண்டும். அதாவது பணத்தொகை அல்லது பணச்செலவு நாட்டில் குறையும்போது விலைகள் குறைய வேண்டும். செலவுகளும் (cost) விலைகளும் (prices) மாறாத விறைப்புடையதாயின் நாட்டின் பணச் செலவு குறைந்தாலும், உற்பத்தியும் வேலை வாய்ப்பும் (employment) குறையுமேயொழியச் செலவிலும் விலையிலும் இறக்கம் காணப் பட மாட்டாது. செலவுகளும் விலைகளும் மாறாத நிலையில்

இருப்பதற்குப் பல காரணங்கள் இருக்கலாம். தொழிலாளிகள் கூலிக் குறைப்பை எதிர்ப்பார்கள். சில செலவுகள் குறிப்பிட்ட காலங்களுக்கு மாறாது இருக்க வேண்டுமென்ற ஒப்பந்தத்துக்கு உட்பட்டு இருக்கும். சர்வாதீன அம்சங்கள் மிகுந்த பொருளா பொருளாதரத்தில் செலவும் விலையும் மாறுவது கடினம். ஆகவே கிளாசிகல் கொள்கை பொருத்தமற்றதாக இருக்கக் கூடும்.

தற்காலக் கொள்கை, கிளாசிகல் கொள்கையைப் போலப் பணத்தொகை மாறுதல் வழியாக அயல்நாட்டுக் கணக்குச் சரி செய்யப்படுவதாகக் கருதுவதில்லை. தடையிலாது மாறும் வீத முறையின் கீழும், மாறா வீத முறையின் கீழும், அயல் நாட்டுச் செலுத்து நிலை சரி செய்ய உதவுவன, (செலுத்துச் சமன் கேட்டின் காரணமாக ஏற்படும்) வருமான விளைவுகளே என்பது தற்காலக் கொள்கை. கிளாசிகல் கொள்கைப்படி பணத்தொகை மாறுதல் மூலம் விலை விளைவுகள் (price effects) சரி செய்யும் சக்தியுடையன என்பதை மறுக்கவில்லை. ஆனால் சரி செய்யும் முறையை விளக்குவதற்கு அவ்வித விளக்கம் அவசியம் இல்லை என்று கூறப்படுறது. வருமான விளைவு மூலம் எப்படி அயல் நாட்டுச் செலுத்து நிலை சரி செய்யப்படுகிறது என்பதை அறிய வேண்டும்.

**செலுத்துச் சமநிலையடையும் முறை—(2) தற்காலக் கொள்கை—வருமான மாறுதல் வழி**

நாம் முதற்பாகத்தில் வருமான மாறுதல் எப்படிச் சேமிப்பு முதலீடு வேறுபாட்டாலுண்டாகிறது என்று கண்டது நினைவிருக்கும். இந்த வேறுபாடு சேமிப்பில் மாறுதலுண்டாவதால் இருக்கலாம், அல்லது முதலீட்டில் மாறுதலால் இருக்கலாம் என்றும் பார்த்தோம். இங்கு ஒரு நாடு வேறு நாடுகளோடு பொருளாதாரத் தொடர்பு வைத்து இருக்கும்போது, அதன் விளைவாக அந்நாட்டின் வருமானம் எப்படிப் பாதிக்கப்படும் என்பதை விளக்குவோம். இப்பொருளாதாரத்தில் நிகழும் மொத்தச் செலவில் ஒரு பகுதி இறக்குமதிகளுக்குச் செல்லலாம். நாட்டு வருமானம் ஒரு சிறிது ஏறினால் இறக்குமதிமேல் செய்யும் செலவும் ஓரளவு ஏறும். இந்தத் தொடர்பே இறுதிநிலை இறக்குமதி நாட்டம் (Marginal propensi ty to import) என்பது. இப்படியே அயல்நாடு ஒன்றில் வருமானப் உயரும்போது ஏற்றத்தில் ஒரு பகுதி நம் நாட்டுப் பொருள் மீது செலவு செய்யப் படுமானால், அந்நாட்டின் இறுதி நிலை இறக்குமதி நாட்டத்தைப் பொறுத்து நம்மிடம் அதிகப்படி வாங்குவார்கள்.

வியாபாரத் தொடர்பற்ற பொருளாதாரத்தில் நாட்டின் மொத்தச் செலவு = வருமானம் = நுகர்ச்சியும் + முதலீடும் ($E = Y = C + I$) என்று முன்னர்க் கூறினோம். ஆனால் அயல் நாட்டுத் தொடர்புள்ள பொருளாதாரத்தில் ஒரு நாடு ஏற்றுமதி செய்யும் மதிப்பையும் வருமானத் தொகையோடு சேர்த்துக் கொள்ள வேண்டும். ஏனெனில் ஏற்றுமதி மதிப்பு அளவுக்கு நாடு வருமானம் பெறுகிறது. முதலீட்டுச் செலவைப் போல ஏற்றுமதியும் நாட்டு வருமானத்தில் ஏற்றத்தை உண்டாக்கும். ஆகவே ஒருதிறந்த பொருளாதாரத்தில் நாட்டு வருமானம் = உள் நாட்டு நுகர்ச்சிப் பொருள்களின் மேலும் பணிகளின் மேலும் செலவு + உள் நாட்டு முதலீட்டுப் பொருள்களின் மதிப்பு + ஏற்றுமதிப் பொருள்களின் மதிப்பு ($Y = C + I + X$). ஏற்றுமதியானது வருமானத்தை ஏற்றும் என்பது போல இறக்குமதி வருமானத்தைக் குறைக்கும். ($X$ = Export)

**(அ) திறந்த பொருளாதாரத்தில் ஏற்றுமதி உயர்வதன் விளைவு**
**(Effect of increased export in an open economy)**

ஒரு நாட்டின் ஏற்றுமதி ஒரு சிறிது உயர்வதாக வைத்துக் கொள்வோம். இந்த உயர்வுக்குக் காரணம் அயல்நாட்டார் நம் நாட்டுப் பொருளின் மீது புதிதாக அவாக்கொள்வதாக வைத்துக் கொள்வோம். இதன் விளைவு என்ன? முதற்படியாக, ஏற்றுமதி செய்யும் நாட்டின் வருமானமானது ஏற்றுமதி உயர்ந்த அளவுக்கு அதிகப்படும். அடுத்தபடியாக, இந்த ஏறிய வருமானத்திலிருந்து மக்கள் ஏற்றமாகச் செலவு செய்வார்கள். (இப்படித் தூண்டப்பட்ட நுகர்ச்சியில் ஒரு பகுதி அயல்நாட்டுப் பொருள்களாக (இறக்குமதியாக) இருக்கலாம்.) இச் செலவு வருமானத்தை உயர்த்தும். இப்படிப் பெருக்கெண் (Multiplier) விதிப்படி ஒரு குறிப்பிட்ட ஏற்றுமதி உயர்வு பன்மடங்காக வருமானத்தை முடிவில் அதிகப்படுத்தும். இப்படி வாணிபத்தால் வருமானம் பெருக்குடன் மாறுவதை அயல் நாட்டு வர்த்தகப் பெருக்கு எண் (foreign trade multiplier) என்று குறிப்பிடுவார்கள்.

அடுத்தபடி, அதிகப்படி வருமானம் உண்டாவதால் நாண்டின் செலுத்து நிலை எப்படிப் பாதிக்கப்படக் கூடும் என்பதைப் பார்ப்போம். ஏற்றுமதி உயர்வதற்கு முன்னால் சம நிலை இருந்ததாக வைத்துக் கொள்வோம். அதாவது ஏற்றுமதியும் இறக்குமதியும் சமமாகவும், வருமானம் சம நிலையில் இருந்ததாகவும் வைத்துக் கொள்வோம். முன்கூறியபடி

ஏற்றுமதி ஏறியதன் விளைவாகப் பெருக்கு எண் மூலமாக வருமானம் உயர்ந்து காணப்படும். இந்நிலையில் செலுத்துக் கணக்கு எச்சப்பாட்டைக் காட்டும். இப்புது வருமானத்தில் ஓரளவுக்கு இறக்குமதியின் மேல் செலவு செய்யப்படுவதால், உள்நாட்டில் நிகழும் வருமானப் பெருக்கம் தணிக்கப்படும். அதாவது தூண்டப்பட்ட இறக்குமதி ஆரம்ப ஏற்றுமதியின் விளைவைக் குறைக்கிறது. ஆதலால் எச்சப்பாடும் தணிக்கப் படும். எச்சப்பாடு மறையாதா, மறையுமா என்பது சேமிப்பு நாட்டத்தைப் பொறுத்தது. மக்கள் புது வருமானத்தை முழுதும் நுகர்ச்சிக்கோ இறக்குமதிக்கோ செலவு செய்யாமல் ஓரளவு சேமிக்கிறார்கள் என்றால், (புதுவருமானத்தால் தூண்டப் பட்ட இறக்குமதியைப்போல) புதுச்சேமிப்பு வருமானப் பெருக் கத்தைத் தடுக்கிறது. ஆனால் ஏற்றுமதியிலிருந்துண்டான எச்சப் பாட்டை முழுதும் ரத்து செய்ய முடிவதில்லை. ஆனால் சேமிப்பு நாட்டில் முதலீடு செய்யப்படுமானால் வருமானம் உயரும். இந்த வருமான ஏற்றம் இறக்குமதியை அதிகப்படுத்திச் செலுத்து நிலையில் எச்சப்பாடில்லாமல் செய்துவிடமுடியும். ஆனால் முதலீடு உயர்வு வேண்டிய அளவுக்குத் துல்லியமாக இருக்கும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. அளவுக்கு மிஞ்சி முதலீடு உயர்ந்தால் அது செலுத்துநிலையில் பற்றுக்குறையை உண்டாக்கி விடக் கூடும்.

முதலீடு தவிர மற்றொரு சக்தியும் செலுத்து நிலையைச் சரிக் கட்ட உதவி செய்யக் கூடும். ஒரு நாட்டின் ஏற்றுமதி என்பது மற்ற ஒரு நாட்டின் இறக்குமதி. ஆகையால் மற்றதன் வருமானம் பாதிக்கப்பட்டு, அது தன் இறக்குமதியை (தன் இறுதிநிலை நாட்டத்துக்கு ஏற்ப)க் குறைத்துக் கொள்ளும். இந்த அளவுக்கு முதல் நாட்டின் ஏற்றுமதி குறைந்து, வருமானப் பெருக்கம் தணிக்கப்படும். ஆனால் இவ்வகைச் சக்தி அற்பமாகவே இருக்கக் கூடும். ஏனெனில் வருமானம் குறையும் அளவுக்கு அந்த நாடு தன் இறக்குமதியை குறைத்துக்கொள்ள முடியாமல் இருக்கலாம். ஆகவே வருமானச் சமநிலையும் (நடப்புக் கணக்கு) செலுத்துச் சமநிலையும் இணைந்து காணப்படும் என்ற அவசிய மில்லை என்று தெரிகிறது.

**(ஆ) வருமானச் சமநிலையும் செலுத்துச் சமநிலையும்**

வருமானச் சமநிலை இருப்பதற்குச் சமூகத்தின் வருமானக் கோப்பிலிருக்கும் ஒழுக்குக்குச் (leakage) சமமாக அதனுள் புகும் ஊற்றும் (seepage) இருக்க வேண்டும். ஒழுக்கு = சேமிப்பு + இறக்குமதி. ஊற்று = முதலீடு + ஏற்றுமதி.

ஆகவே வருமானச் சமநிலை வேண்டுமானால், "சேமிப்பு + இறக்குமதி = முதலீடு + ஏற்றுமதி" என்ற சமன்பாடு காணப் படவேண்டும். வருமானச் சமநிலைக்கு இந்த இரண்டு தொகை களும் சமமாக இருக்க வேண்டுமே யொழிய இறக்குமதியும் ஏற்றுமதியும் தமக்குள் சமமாக இருக்க வேண்டுமென்ற நிபந்தனை இல்லை. ஆனால் இவை இரண்டும் சமமாக இல்லா விட்டால் வேறுபாடு அளவுக்குச் சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் வித்தியாசம் இருக்கும். வருமானம் சமநிலையிலுள்ளபோது, சேமிப்பு = முதலீடு + ஏற்றுமதி — இறக்குமதி. இறக்கு மதியும் ஏற்றுமதியும் சமமாக இருந்தால், சேமிப்பு = முதலீடு. இறக்குமதி ஏற்றுமதியைவிட அதிகமாக இருந்தால், முதலீட்டை விடச் சேமிப்புக் குறைவு என்பது பெறப்படுகிறது. இறக்குமதி ஏற்றுமதியை விடக் குறைவாயிருந்தால், சேமிப்பு முதலீட்டை விட அதிகமென்பது பெறப்படுகிறது. இந்தத் தொடர்கள் முக்கியமானவை. எப்படி முக்கியமானவை என்று பார்ப்போம்.

முன்னர், ஒரு நாட்டின் நிகர முதல் வெளியேற்றம் (net capital outflow) ஏற்றுமதி உருவில்தான் நிகழக்கூடும் என்று பார்த்தோம். இந்தத் தொடர்பையே இங்கு வேறு வகையில் பெறுகிறோம். ஒரு நாடு ஏற்றுமதி எச்சப்பாடு பெற்றுள்ள தாயின் அதனுடைய சேமிப்புகள் அந்த அளவுக்கு உள்நாட்டு முதலீட்டை விட எச்சமாக இருந்திருக்க வேண்டும். Y—C = S, Y—C = I என்ற சமன்பாடுகளின்படி S = I. ஆகையால் ஒரு கால எல்லைக்குள் நிகழும் நிகர சேமிப்பு நாட்டின் முதலீட்டுக்குச் சமமாகவே இருக்கும். ஆகவே ஏற்றுமதி எச்சப்பாடு காணப் படுமானால் சேமிப்பின் ஒரு பகுதி அயல்நாட்டில் உரிமை பெறவோ (முதல் தரவோ) அல்லது அயல்நாட்டில் பொறுப்பைக் குறைக்கவோ ஆளப்பட்டிருக்க வேண்டும். அதாவது நிகர முதல் வெளியேற்றம் (net capital outflow) இருந்திருக்கும். இதற்கு எதிரிடையாக ஒரு நாடு இறக்குமதி எச்சப்பாடு உடையதாயின், அதாவது நிகர உள்ளோட்டம் உடையதாயின், அதன் உள்நாட்டு முதலீடு உள்நாட்டுச் சேமிப்பை விட எச்சமாக இருந்திருக்கும். அந்த எச்ச அளவுக்கு அதன் அயல்நாட்டுக் கடன் பளு ஏறியிருக்கும்.

இவைகளை வேறு விதமாகக் கூறலாம். ஒரு நாட்டின் நடப்புக் கணக்கில் நிகர இருப்பு சாதகமாகக் (positive net balance) காணப்பட்டால் அது வெளி நாட்டின் முதலீட்டுக்குச் சமமாகும். பாதக இருப்பு (negative net balance) காணப்பட்டால் அயல் நாட்டிலிருந்து முதலெடுப்புக்குச் சமமாகும். நடப்புக் கணக்கு

இருப்பு ஏற்றுமதி இறக்குமதி கணக்காகையால் இந்த இரண்டுக்கும் உள்ள வேறுபாடு அளவுக்கு அயல் நாட்டு முதலீடு நேர் கணியம் அல்லது எதிர் கணியம் ஆக இருக்கும். ஆகவே வருமானம் சமநிலையில் உள்ளபோது உள்நாட்டுச் சேமிப்பு = உள்நாட்டு முதலீடு + அயல்நாட்டு முதலீடு.

## (இ) உள்நாட்டு முதலீடு ஏற்றத்தின் நிகர விளைவு

சமநிலையில் உள்நாட்டு முதலீட்டுச் செலவு ஒரு சிறிது உயர்ந்தால் வருமானமும் செலுத்து நிலையும் எப்படிப் பாதிக்கப் படும்? சேமிப்பு நாட்டத்தையும் இறக்குமதி நாட்டத்தையும் பொறுத்து வருமானப் பெருக்கு எண் இருக்கும். வருமான விளைவு விஷயத்தில் ஏற்றுமதி உயர்வும் முதலீட்டு உயர்வும் ஒரு தன்மையானவை. ஆனால் செலுத்து நிலை விளைவு வேறுபடும்.

முன்னர், ஏற்றுமதி உயர்வது காரணமாகத் தோன்றும் நடப்புக் கணக்கு எச்சப்பாடு, தூண்டப்பட்ட இறக்குமதி உயர்வாலும், (அயல் நாட்டார் தங்கள் இறக்குமதியைக் குறைப்பதால்) தூண்டப்பட்ட ஏற்றுமதி வீழ்ச்சியாலும் தணிக்கப் படும் என்று பார்த்தோம். அது போலவே உள்நாட்டு முதலீடு விஷயத்திலும். ஆகவே வருமானம் உயரும்போது, இறக்குமதி ஏறுவதால் நடப்புக் கணக்கில் பற்றுக்குறை தோன்றும். இந்தப் பற்றுக்குறையைத் தணிக்கும் சக்திகள் உண்டா? நம் எச்ச இறக்குமதி அயல்நாட்டினருடைய ஏற்றுமதியாகையினால், அவர்களது வருமானம் உயர்ந்து, அவர்கள் நம்மிடமிருந்து முன்னைவிட அதிகமாக இறக்குமதி செய்ய ஆரம்பித்தால், பற்றுக்குறை தணியலாம். முழுதும் மறையுமா என்பது அவர்களுடைய இறக்குமதி நாட்டத்தின் அளவைப் பொறுத்தது. பொதுவாக, அயல்நாட்டிலிருந்து இப்படித் தூண்டப்படும் அவர்களது இறக்குமதி பற்றுக்குறையைத் தவிர்க்கும் அளவுக்குச் சக்தியுடையதாக இருக்கும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. ஏனெனில், அந்த அயல்நாடு தன் மொத்த இறக்குமதியில் ஒரு சிறு பகுதியையே எந்த ஒரு தனி நாட்டிலிருந்தும் பெறுவதாயிருக்கும்.

## (ஈ) இறக்குமதி உயர்வின் விளைவு

சுயேச்சையான வருமான மாறுதலால் தூண்டப்படாத இறக்குமதி ஏற்றம் அல்லது ஏற்றுமதிக் குறைவுகளால் உண்டாகும் விளைவுகளை எளிதில் நாம் ஊகிக்கலாம். அயல்நாட்டுப் பொருளில்விருப்பம் மிகுவதால், அல்லது நம் நாட்டு இறக்குமதி

வரிகள் குறைவதால் இப்படிச் சுயேச்சையான இறக்குமதி ஏற்றம் உண்டாகலாம். இறக்குமதி உயருமளவுக்கு உள் நாட்டுப் பண்டத் தேவை குறைவதாக வைத்துக்கொள்வோம். இதனுல் உள்நாட்டு வருமானம் குறையும். செலுத்து நிலையிலும் பற்ருக்குறை தோன்றும். வருமானப் பெருக்க எண் விதி முறையில் பன்மடங்காகக் குறையும். ஆனல் வருமானம் குறையக் குறைய இறக்குமதியும் குறைந்துகொண்டே வரும். சேமிப்பும் குறைந்துகொண்டே வரும். முடிவு நிலையில் காணும் வருமானச் சமநிலையில் சேமிப்புக் குறையும் அளவுக்கு இறக்குமதி எச்சப்பாடும் (துவக்கத்தில் இருந்ததைவிடக்) குறையும். இறக்குமதி எச்சப்பாடு மறைய வேண்டுமானல் சேமிப்பு சூன்யமாகவேண்டும், அல்லது வருமான வீழ்ச்சி சேமிப்பு குறைந்த அளவுக்கு உள்நாட்டு முதலீட்டையும் குறைக்கவேண்டும்.

தவிர, அயல்நாட்டு எதிர்விளைவும் (repercussion) வேலை செய்யும். நம் இறக்குமதி அயல் நாட்டின் ஏற்றுமதியாதலால் அயல் நாட்டின் வருமானம் உயர்ந்து, நம் நாட்டில் இருந்து அவர்களுக்கு ஏற்றுமதி உயரலாம். இவ்வேற்றுமதி இறக்குமதி எச்சப்பாட்டை ஈடு செய்யலாம். ஆனல் இப்படித் தோன்றும் ஏற்றுமதி போதுமான அளவுக்கு இருக்குமென்று எதிர் பார்ப்பதற்கில்லை.

### (உ) ஏற்றுமதி குறைவதன் விளைவு

அடுத்தபடி, சுயேச்சையாக ஏற்றுமதி குறைந்தால் அதன் விளைவு என்னவென்று பார்ப்போம். நாட்டு வருமானம் குறையும். பெருக்கு எண் முறையில் ஒரு குறிப்பிட்ட ஏற்றுமதி இறக்கம் பன்மடங்கு வருமானக் குறைவை உண்டாக்கும். நாட்டின் செலுத்து நிலையில் பற்ருக்குறை உண்டாகும். வருமான வீழ்ச்சியால் தூண்டப்பட்ட இறக்குமதிக் குறைவு இதை ஓரளவே தணிக்கும் சக்தியுடையதாக இருக்கும். நம் ஏற்றுமதிக் குறைப்பு அயல்நாட்டில் முதலீட்டை உயர்த்தும் விளைவுடையதாயின் அவர்களது வருமானம் உயர்ந்து, நம் ஏற்றுமதியும் உயரலாம். ஆனல் இது நிலையற்ற விளைவு.

இதுவரை நடத்திய ஆய்வின் பயனுக நாம் அறிவது, மாருவீத முறையின் கீழ் நாட்டு வருமானத்துக்கும் அயல் நாட்டுச் செலுத்து நிலைக்கும் ஒன்றையொன்று பாதிக்கும் தொடர்பு உண்டு என்பதும், ஒரு நாட்டின் வருமானமும்

செலுத்து நிலையும் மற்ற நாட்டின் வருமானத்துக்கும் செலுத்து நிலைக்கும் தொடர்புடையது என்பதும் ஆகும்.

### (3) விலை விளைவும் வருமான விளைவும் சேர்ந்த விளைவு

செலுத்து நிலையைச் சரி செய்வதற்கு விலை விளைவோ வருமான விளைவோ தனித்துப் போதுமானதாக இருக்காது என்று கண்டோம். ஆனால் இரண்டு விளைவும் ஒரேபோது காணப்படும்.

(அ) விலை விளைவுகள் வேலையின்மைச் சூழ்நிலையிலும் விலையும் செலவுகளும் நெகிழ்ச்சியற்ற சூழ்நிலையிலும் பலமாக இருக்கமாட்டா. இச்சூழ்நிலைகளில் பண அளிப்பில் மாறுதல்கள் விலைமட்டத்தைப் பாதிக்கா. ஆனால் வருமான மாறுதல் விளைவுகள் பலமாக இருக்கும். வாணிபம் காரணமாக வருவானம் மாறின், உற்பத்தி மாறும், வேலை வாய்ப்பு மாறும். ஆனால் வேலை நிலையும் உற்பத்தி நிலையும் பண அளிப்பு நிலையினால் பாதிக்கப்படும் என்பது தெரிந்த விஷயம். வேலை உற்பத்தி உயரவேண்டுமானால் பண அளிப்பு நெகிழ்ச்சியுடையதாக இருக்கவேண்டும். இன்றேல் வட்டி வீதங்கள் ஏறும். வேலை, உற்பத்தி ஏறும்போது பணத்தொகை ஏறு விட்டால், தேவைக்கேற்பப் பணம் கிடைக்காமல் வட்டியேறும். வியாபார நடப்புக் கணக்கில் பற்றுக்குறை காரணமாக வருமானமும் வேலையும் குறையும்போது பண அளிப்புக் குறைந்தால் அது மந்தத்தை உறுதிப்படுத்தும்.

(ஆ) வேலை நிறைவு உள்ள சூழ்நிலையில் செலுத்து நிலையில் எச்சப்பாடு ஏற்பட்டால் வருமான விளைவுகளும் விலை விளைவுகளும் ஒன்றுபடும். ஏனெனில், இப்போது வருமான ஏற்றம் என்பது பண வருமான (money income) ஏற்றமே ஒழிய, உற்பத்தி உயர்வாகாது. அதாவது வருமான ஏற்றம் என்பது உற்பத்தி மாறாத நிலையில், விலையேற்றமாகவே காணப்படும். இந்நிலையில் செலுத்து நிலை சரி பெறுவது பணத்துறை நிகழ்ச்சிகளால் நிகழுமே ஒழிய உண்மை வருமான (உற்பத்தி) மாறுதலால் இருக்காது.

ஆனால் அனுபவத்தில் விலைமட்ட மாறுதலின்றி உண்மை வருமானம் மட்டும் மாறக் காண்பதில்லை. இப்படியே உண்மை வருமான மாறுதல் இல்லாத விலைமட்ட மாறுதலிருக்காது. பேரளவில் வேலையின்மை இருந்தபோதிலும் உற்பத்தி உயரும் போது அத்துடன் ஓரளவு விலையேற்றமும் காணப்படும். வேலை

நிறைவு இருந்த போதிலும் மொத்தத் தேவையில் சிறிது ஏற்றம் உண்டானல் ஓரளவு உற்பத்தியையும் உயர்த்தக் கூடும்.

ஆகவே, செலுத்து நிலையில் ஏற்படும் கோளாறு காரணமாகத் தோன்றும் வருமான, விலை விளைவுகள் உண்மையில் அனுபவத்தில் ஒன்றுக்கொன்று உடந்தையாக நிகழுகின்றன. அவைகளின் முக்கியத்தும் சில சூழ்நிலைகளில் வேறுபடலாம்.

# 39. பன்னாட்டுப் பொன் திட்டத்தின் நடைமுறை

**பொன் திட்டத்தின் முறிவு**

முதல் பாகத்தில் பொன் திட்டத்தின் தோற்ற வரலாற்றை விளக்கமாக அறிந்தோம். பணத் திட்டத்துக்கு அடிப்படையாக இருக்க, சுமார் 1870 வரைக்கும் பொன்னோடு வெள்ளியும் பல நாடுகளிலும் போட்டியிட்டு வந்தது. 1816-இல் இங்கிலாந்து பொன் திட்டத்தை மேற்கொண்டது. பிற நாடுகள் 1871 முதல் 1875-க்கு இடையில் பொன் திட்டத்தை மேற்கொண்டன. அதற்குப்பின் 40 ஆண்டுகளுக்கு மேல் பெரும்பாலும் பொன் திட்டத்தின் கீழ்தான் உலகத்தின் வியாபாரம் நடந்து வந்தது. இந்த நீண்ட காலத்தில் பூர்வப் பொருளாதார நிபுணர்கள் விளக்கிய முறையில்தான் திட்டம் பெரும்பாலும் இயங்கி வந்தது; பணி செய்தது. மாற்று வீதங்கள் பொன் இயங்கு எல்லைகளுக்குள் நின்றன. அயல்நாட்டுச் செலுத்து நிலைக் கோளாறுகள் அற்பமாக இருந்தன. செலுத்துநிலைச் சிக்கல்கள் நாடுகளின் பொருளாதாரத்தை அலைக்கவில்லை.

இந்தத் திட்டம் 1914-இல் யுத்தம் ஆரம்பித்த சில வாரங்களில் சின்னாபின்னமாயிற்று. யுத்தத்தில் ஈடுபட்ட ஒவ்வொரு நாடும் யுத்தம் ஆரம்பித்த சில நாட்களில் தன் நாணயத்தைப் பொன்னாக மாற்றும் உரிமையை ரத்து செய்தது. பின்னர் யுத்தத்தில் பங்கு கொள்ளாத நாடுகளும்கூடத் திட்டத்தைக் கைவிட்டன. இங்கிலாந்து பாங்கு பொன் விற்பது வாங்குவது சம்பந்தமாகத் தடை செய்யாவிட்டாலும் பொன் ஏற்றுமதியைத் தடை செய்ததனால் மக்கள் ஸ்டெர்லிங்கைப் பொன்னாக்கிப் பயன் இல்லை. ஆகவே, செயல் அளவில் நோட்டுக்கு மாற்று உரிமை இல்லை என்றே சொல்லலாம். மாற்று உரிமையை நாடுகள் ரத்து செய்ததற்குக் காரணம் தங்களுடைய பொன் ரிசர்வைப் பாதுகாக்கும் நோக்கமாகும். யுத்தத்தின்போது புழக்கத்தில் இருந்த பொன் அவ்வளவும் மைய பாங்குக்குக்

கவரப்பட்டது. அநேக யுத்த நாடுகள் பொன்னைச் செலுத்தி இறக்குமதி செய்ய வேண்டி இருந்தது. ஆகவே யுத்தத்தை நடத்துவதற்குப் பொன் திட்டத்தைக் கைவிடுவது அவசியமாயிற்றெனலாம். தவிர, நாடுகள் யுத்தச் செலவை வரியாலும் கடனாலும் சமாளிப்பது முடியாதிருந்தது. ஆகவே பணப் பெருக்க மூலமும் சமாளிக்கப்பட்டது. இதனால் விலைகள் உயர்ந்தன. இவ்விலை உயர்வால் மக்கள் நுகர்ச்சியைக் குறைக்க வேண்டியதாயிற்று. ஆகவே விடுபட்ட சாதனங்கள் அரசாங்கத்துக்குக் கிடைத்தன. பொன் திட்டம் நடைமுறையில் இருப்பதாயிருந்தால், இவ்வித விலையேற்றம் சாத்தியமாய் இருக்காது. ஏனெனில் பொன் திட்டத்தின் கீழ் விலை ஏறும் போது பொன் ஏற்றுமதி உண்டாயிருக்கும். பாங்குப் பணம் சுருங்கியிருக்கும். (யுத்த காரியத்துக்காகப்) பணம் சுருங்காமலிருக்க வேண்டுமாயின், பொன் ஏற்றுமதியால் பொன் திட்டம் குலைந்திருக்கும். எப்படியும் பொன் திட்டத்தின் முடிவு இன்றியமையாததாயிற்று.

### பொன் திட்டத்தின் மீட்சி

யுத்தம் முடிந்ததும் ஒரு பெரிய வியாபார உப்புசமும் பின்னர் மந்தமும் தோன்றின. 1919-இல் பிரசல்ஸ் நகரத்தில் நாடுகள் கூடி விரைவில் பொன் திட்டத்தை மீட்க வேண்டுமென்று முடிவு செய்தன. ஆனால் யுத்தத்தின் விளைவுகளைச் சமாளிக்கப் பல ஆண்டுகள் ஆயின. 1925-இல் சிக்கல்கள் எல்லாம் மறைந்ததாகப் புலப்பட்டது. ஜெர்மனியில் வீக்கம் வளர்வது தடைப்பட்டது. அநேக நாடுகள் பணவாட்ட மூலம் வீக்கத்தைக் குறைப்பதில் ஓரளவு வெற்றி கண்டு தங்களுடைய பட்செட் நிலையில் சமப்பாடும், அயல்நாட்டுச் செலுத்து நிலையில் முன்னேற்றமும் கண்டன. பண நிர்வாகத் துறையில் பேரளவு அமைதி தோன்றியது. மைய பாங்குகள் முன்போல் பொன் திட்ட விதிகளை ஆள முடியும் போலத் தோன்றியது. அரசாங்கங்கள் மைய பாங்குகளிடம் கடனுக்குச் செல்லாத நிலை காணப்பட்டது. இங்கிலையில் பொன் திட்டத்தை மீட்பது தகுதியாகத் தோன்றியது.

பொன் திட்டம் மீண்டதற்குக் காரணம் எல்லா நாடுகளும் பழைய நிலையை அடைவதற்குக் கொண்டிருந்த அவாவும், பண வீக்கத்தினால் அனுபவித்த துன்பங்களுமாகும். பழைய நிலையை அடைவது என்பது பணத்துறை விஷயத்தில் பொன் திட்டத்தை மீட்பது என்றே கருதப்பட்டது.

பொன் திட்டத்தை மீட்பதற்குப் பல நாடுகளில் பலவிதச் சிக்கல்கள் இருந்தன. பொதுவாகக் கூறின் அமெரிக்கா பொன் திட்டத்தை நிலை நிறுத்தி வந்தது என்றே கூறலாம். ஆயினும் பேரளவில் பொன் வந்து குவிந்ததனால் பண அளிப்பு அங்குப் பெருகி விலைகள் ஏற ஆரம்பித்தன. டாலர் மட்டும்தான் பொன் திட்டத்தில் இருந்ததால் உலகத்தில் பொன்னின் மதிப்பேகூட டாலரின் மதிப்பைப் பொறுத்திருந்தது என்று கூறுவது மிகை யாகாது. ஆகவே விலை ஏற்றத்தினால் டாலர் மதிப்புக் குறைந்த போது பொன் மதிப்பும் யுத்தத்துக்கு முன்னிருந்த நிலையை ஒப்பிடக் குறைந்தது என்று கூறலாம். பொன்னின் மதிப் பிறங்கியதற்குக் காரணம் செலாவணியில் இருந்த பொன் ஐரோப்பிய மைய பாங்குகள் இடமும், அமெரிக்க பாங்கிடமும் குவிந்தது. அமெரிக்காவேயன்றி, மற்ற யுத்தத்தில் சம்பந்தப் படாத நாடுகளும் பொன்னுக்கு மாற்று உரிமையை (converti-bility) நிறுத்தியபோதிலும், பணவீக்கத்துக்கு இடம் தராமல் பார்த்துக்கொண்டதால் அவைகளின் விலை பெரும்பாலும் அமெரிக்க விலையை ஒத்திருந்தன. ஆகவே இவைகள் எளிதில் பழைய பொன் மாற்று வீதத்தை மேற்கொண்டு பொன் திட்டத்தை மீட்க முடிந்தது. இங்கிலாந்தின் விலைகள் அமெரிக்க விலையைவிட ஏறியிருந்த போதிலும் வேறுபாடு அதிகமில்லை. 1925–இல் இங்கிலாந்து ஒரு பவுனுக்கு $4{\cdot}86\frac{2}{3}$ டாலர் வீதத்தில் பழைய வீதத்தை மேற்கொண்டு பொன் திட்டத்தை மீட்டது.

பொன் திட்டத்தை மீட்பதற்கு எடுத்துக் கொள்ள வேண்டிய நடவடிக்கை, குறிப்பிட்ட விலையில் பொன்னை வாங்கவும் விற்கவும் தயார் என்று மைய பாங்கு வெளியிடுவதே ஆகும். அதோடு பொன் ஏற்றுமதியை இறக்குமதியைத் தடை யின்றி அனுமதிப்பதாகும். இந்த முறையில் 1925-லும் அதற்குப் பின்னரும் 1929-க்குள் அநேக நாடுகள் பொன் திட்டத்தை விட்டு விட்டன, ஸ்பெயினும், ருஷ்யாவும், ஐரோப்பாவில் மற்ற நாடுகளும் பொன் திட்டத்தை மீட்டன. இங்கிலாந்தின் பொன் திட்ட மீட்சி பெரிய விவாதத்துக்கு உள்ளதாயிற்று. பழைய ஸ்டெர்லிங் டாலர் வீதம் 1925-இல் பொருத்தமற்றதென்றும் £1=$4·86⅔ வீதம் ஸ்டெர்லிங்குக்கு மிகை மதிப்புத்தந்ததென்றும் பலர் எதிர்த்தனர். ஆனால் இங்கிலாந்தின் பணத்துறைச் செல் வாக்கைக் காப்பாற்ற இது இன்றியமையாததென்று வேறு சிலர் கருதினார்கள். ஆனால் அவர்கள் உண்மையில் கருதியதைவிட மிகையாகவே ஸ்டெர்லிங்குக்கு வாங்கும் திறன் உயர்த்தப் பட்டிருந்தது. இதை அதிகாரிகள் பொன் திட்டத்தை மீட்ட

போது உணரவில்லை. அமெரிக்க விலைகளுக்கும் இங்கிலாந்து விலைகளுக்கும் உள்ள வேறுபாடு நாளடைவில் மறையும் என்று நினைத்ததும் தவறாக முடிந்தது. இங்கிலாந்தின் விலைவாசிகளும் செலவுகளும் குறைய மறுத்தன. இவைகளைக் குறைக்கச் செலாவணிக் குறைப்பும் வட்டி ஏற்றமும் ஆகிய முறைகள் கையாளப் பட்டன. இதன் விளைவு வேலையின்மையை உண்டாக்குவதும் வியாபார மந்தத்தை உண்டாக்குவதுமாகவே இருந்தது. ஆயினும் விலைகள் குறையவில்லை. 1931-இல் பொன் திட்டத்தை இங்கிலாந்து கைவிடும் வரையில் பவுண்டுக்கு மிகை மதிப்பு இருந்து வந்தது. இது இங்கிலாந்தின் பொருளாதாரத்தைப் பாதித்தது. பொன் ரிசர்வைக் காப்பதற்காக இங்கிலாந்து வட்டியை ஏற்றமான அளவில் வைத்திருக்க வேண்டியதாயிற்று. இது தொழில் நிலையைப் பாதித்தது. இங்கிலாந்தின் ஏற்றுமதித் தொழில்களும் பாதிக்கப்பட்டன. அவைகளின் உற்பத்திச் செலவு குறையவில்லை; ஆகவே, அவைகளை வெளிநாட்டு அங்காடிகளில் அங்குள்ள விலைகளில் விற்க முடியவில்லை.

மற்ற யுத்த நாடுகள் புது வீதத்தில் பொன் திட்டத்தை மீட்டன. பண வீக்கத்தினால் ஏற்பட்ட விலை நிலைக்கேற்பப் புதுப் பொன் மாற்று வீதங்கள் நிர்ணயிக்கப்பட்டன. பிரான்சு நாணயத்தின் புது வீதம் முன்னில் $\frac{1}{5}$ பங்காகத்தான் இருந்தது. ஜெர்மனி, ஆஸ்திரேலியா, ஹங்கேரி முதலிய பண வீக்கத்தால் சீரழிவுற்ற நாடுகளில் புதுப் பணங்கள் பண வீக்கத்துக்கு ஏற்பப் பழைய நாணயத்துக்கு மாற்றப்பட்டுச் செலாவணியில் வந்தன.

பொன் திட்டத்தை மீட்கும் இயக்கம் 1924-இல் ஜெர்மனியில் ஆரம்பித்து 1928-க்குள் முடிந்தது எனலாம். இப்போது பொன் திட்டம் முன்னைவிட அதிக நாடுகளில் நடைமுறையில் இருந்தது. ஐரோப்பாவிலும், தென் அமெரிக்காவிலும் பல நாடுகள் முதன் முதலாகப் பொன் திட்டத்தை மேற்கொண்டன. 1929-இல் சைனா, ஸ்பெயின், மெக்ஸிகோ தவிர மற்ற நாடுகள் ஏதாவது ஒருவகைப் பொன் திட்டத்தில் இருந்தன. அநேக நாடுகள் பொன் மாற்றுத் திட்டத்தை (gold exchange standard) மேற்கொண்டன. இப்படிப் பொன் திட்டம் பரவியபோது பணத்துறையில் அநேக புதுக் கருத்துக்கள் நடைமுறைக்கு வந்தன. பொன் திட்டத்தைச் செவ்வனே ஆள்வதற்கு ஒவ்வொரு நாட்டிலும் அரசாங்கத் தலையீடு இல்லாத மைய பாங்கு ஒன்றை அமைப்பது அவசியம் என்றும், அது நாட்டின் பொன் ரிசர்வைப் பாதுகாக்கும் பொறுப்பை உடையதாக

வேண்டும் என்றும், அது சாதாரணப் பாங்குகளையும் அயல் நாட்டுச் செலாவணியையும் கட்டுப்படுத்தும் உரிமை பெற வேண்டுமென்றும் கூறப்பட்டது.

**பொன் திட்டத்தின் முறிவு**

1931 செப்டம்பரில் பொன் திட்டம் இங்கிலாந்தில் மீண்டும் நிலுவை (suspend) செய்யப்பட்டது. ஸ்காண்டினேவிய நாடுகள், போர்ச்சுகல், தென் ஆப்பிரிக்கா, ஜெர்மனி ஆகியவைகளும் பின்பற்றின. பிற நாடுகளேயன்றி அமெரிக்காவும் 1933-இல் பொன் மாற்றுரிமையை நிறுத்தியது. டாலர் மதிப்புக் குறைந்தது. மத்திய ஐரோப்பிய நாடுகள் மாற்று உரிமையை நிறுத்தி நாணய மாற்றுக் கட்டுப்பாடுகளை ஏற்படுத்தின. பிரான்சும் மற்றும் சில மேற்கு ஐரோப்பிய நாடுகளும் மட்டும் சிறிது காலம் பொன் திட்டத்திலிருந்தன. அவைகளும் 1936-இல் கைவிட்டன. இப்படி 10 ஆண்டுகளில் மறுபடியும் பொன் திட்டம் கவிழ்ந்ததற்கு என்ன காரணம் என்று அறிவது அவசியம்.

முதல் யுத்தத்துக்கு முன் பொன் திட்டம் இயங்குவது எளிதாக இருந்தது. ஏனெனில் பொதுவாகக் கூறினால் நாடுகளின் அயல்நாட்டுச் செலுத்து சமநிலையில் இருந்தது. யுத்தத்துக்கு முன், மாற்று வீதங்கள் குத்து மதிப்பாகத் தீர்மானிக்கப்படவில்லை; நாடுகளின் பொருளாதார நிலைக்கு ஏற்றவாறு இருந்தன. அதிர்ச்சிகள் அற்பமாகவும் சிரமம் இல்லாமல் தீர்க்கக்கூடியவையாகவும் இருந்தன. தவிர நாடுகள் ஒன்றுக்கொன்று ஒப்பான பொருளாதார நிலையில் இருந்தன. வியாபார மந்தங்கள்கூட இந்த ஒப்பு நிலையை அதிகமாக மாற்றவில்லை. ஏனெனில் எல்லா நாடுகளும் ஏறக்குறைய ஒப்பாக மந்தத்தால் பாதிக்கப்பட்டன. தவிர நாடுகளுக்கிடையே முதல் தடையின்றிப் பெயர்ந்தது.

ஆனால் முதல் யுத்தம் முடிந்ததும் இந்த ஒருமைப்பாடு மறைந்தது. யுத்த காலத்தில் பல நாடுகள் பல்வேறு அளவில் பாதிக்கப்பட்டன. பழைய பொருளாதாரத் தொடர்புகள் அறுப்பட்டன. பழக்கமான ஏற்றுமதி மார்க்கெட்டுகள் மறைந்தன. பழைய உற்பத்தித் திறன் அழிக்கப்பட்டது. புதுத் திறமைகள் முக்கியம் அடைந்தன. பழைய கடன் கொடுத்த நாடுகள் கடனாளி நாடுகளாகவும் பழைய கடனாளி நாடுகள் கடன் கொடுக்கும் நாடுகளாகவும் நிலைமாறின. யுத்தக்

கடன் பளுவும் நஷ்ட ஈடு பளுவும் நாடுகளின் சிக்கலை அதிகப் படுத்தின.

1925ஆம் ஆண்டில் நாடுகள் பொன் திட்டத்தை மீட்ட போது புது விகிதாசாரங்களைச் சமாளிக்கக் கூடிய அளவுக்கு நாடுகளுக்குச் சக்தி ஏற்பட்ட துண்மையாயினும் நாடுகளின் அயல்நாட்டுச் செலுத்துநிலை இயற்கையான சமநிலையை அடையும் அளவுக்கு நிலைமை திருந்தவில்லை. அநேக நாடுகள் தங்களுடைய செலுத்து நிலையை வெளிநாட்டுக் கடன் உள்ளோட்டத்தைக் கொண்டே சரிக் கட்டி வந்தன. இது திருப்திகரமான நிலை என்று கூறமுடியுமா? இவர்கள் அயல் நாட்டிடமிருந்து பெற்றது நெடுங்காலக்கடன் அன்று; குறுங் காலக் கடன். இது சிக்கலை அதிகமாக்கிவிட்டது. அடிப்படையில் நாடுகளின் பொருளாதாரம், சமநிலைக்கு முரண்பட்டதாக இருந்தது. புதுக் கடன்பட்டுப் பழைய கடனை அந்நாடுகள் சமாளித்து வந்தன.

இரண்டாவதாக, நாடுகள் மேற்கொண்ட வீதங்கள் சூழ்நிலை மாறுதலை அனுசரித்துத் தீர்மானிக்கப்பட்டவையல்ல. 10 ஆண்டுகள் வரையில் ஆட்சியில் இல்லாத பொன் திட்டத்தை மீண்டும் நிறுவியபோது நாடுகள் பழைய நிலையையே அனுமானித்து வீதத்தைத் தீர்மானித்தது தவறு. இங்கிலாந்து செய்த தவறை மேலே குறிப்பிட்டோம். நாடுகளின் விலை மட்டத்தில் ஏற்றத் தாழ்வு உண்டாவதற்கேற்ப அவைகளின் நாணயங்களுக்குள் இருக்கும் மாற்று வீதமும் மாறவேண்டும். இன்றேல் இங்கிலாந்தைப் போல மிகை மதிப்புக் கொடுக்கப் பட்ட நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலை பாதிக்கப்படும். இப்படியே பணத்தின் மதிப்பை இயற்கைக்குக் கீழே குறைத் தாலும் அது வீக்க நிலைக்குக் காரணமாகிப் பொருளா தாரத்தைப் பாதிக்கும். இதைப் புறக்கணித்து நாடுகள் நடந்தால் விளைவுகள் இன்றியமையாதவை. பொன் திட்டம் முடிவில் கவிழ வேண்டியதாயிற்று. ஆய்வின்றிப் புது வீதங்கள் நிர்ணயிக்கப்பட்டாலும் விலைகளும் செலவுகளும் நெகிழ்ச்சி இல்லாததாலும் முற்கால வியாபார நாடுகளின் போக்கு புது அம்சங்களோடு காணப்பட்டது.

மூன்றாவதாக, பொன் திட்டத்தின் கீழ் அவசியமான ஆட்ட விதிகள் (rules of the game) முன்னைப்போல உறுதியாக ஆளப்படக் கூடிய சூழ்நிலையில் இல்லாதிருந்தன. யுத்தத்துக்கு முன் பணத்துறை அதிகாரிகள், யாதொரு ஆட்சேபனையு

மின்றி, பொன் திட்டத்தின் கீழ் இன்றியமையாது எடுக்க வேண்டிய நடவடிக்கைகளைத் தயக்கமின்றி எடுத்துக் கொண்டார்கள். அவைகளின் விளைவுகளை—நல்லதோ தீயதோ—இன்றியமையாதவையாகக் கருதினார்கள். அதன் இயக்கத்தில் தலையிடவில்லை. ஆனால் இப்போது பணத்துறை நடவடிக்கைகள் பொன் திட்ட விதிகளுக்கு முரண்பட்டவையாயினும் நிலைமைக் கேற்ப எடுத்துக் கொள்ளப்பட்டன, முன்னர் அயல்நாட்டுச் செலாவணி நிலைக்கு ஏற்பப் பணத்துறை நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டு, அவைகளின் விளைவாய் உள்நாட்டுப் பொருளாதாரம் மாறவேண்டியிருந்தால் அதைப் பொருட் படுத்துவதில்லை ஆனால் இப்போது உள்நாட்டு நிலைக்கேற்பப் பணத்துறை நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு அயல்நாட்டுச் செலுத்துநிலையில் ஏற்படும் விளைவுகள் இன்றியமையாத உப விளைவுகளாகக் கருதப்பட்டன. இந்த நிலையில் 1929–ல் பெரிய வியாபார மந்தம் தோன்றியது. விலைகள் வீழ்ந்தன. இதனால் உற்பத்தி பாதிக்கப்பட்டது. நாடுகளுக்கிடையே வியாபாரம் விரைவில் சுருங்கியது. நாடுகளின் செலுத்துநிலை பாதிக்கப் பட்டது. இந்த நிலையில் அயல்நாட்டுக் கடனைக் கொண்டு பொன் திட்டத்தை நிலைப்படுத்தும் நிலை உண்டாயிற்று. ஆனால் அநேக காரணங்களால் நாடுகளுக்கிடையே முதல் பெயர்ச்சி விரைவில் சுருங்கியது. குறுங்கால முதல் பேரளவில் பொன் திட்ட நாடுகளிலிருந்து மீட்கப்பட்டது. இதன் காரணமாகவும் நாடுகளின் செலுத்துநிலை அதிக நிர்ப்பந் தத்துக்குள்ளாயிற்று. இப்படிக் குவிந்து வந்த பல இடையூறு களை அநேக நாடுகளால் சமாளிக்க முடியவில்லை. முதலா வது. பொன் ஏற்றுமதி, நாட்டின் இருப்பு அனைத்தையும் எளிதில் காலி செய்யும் அளவுக்கு வளர்ந்தது. இரண்டாவது, பொன் திட்டத்தை ஆண்டு, அதன் மூலம் விலைகளையும் கூலிகளையும் குறைப்பதானால் அது நடவாத காரியம் என்பது தெரிந்தது. ஆகவே பொன் திட்டத்தைக் கைவிடுவதைத் தவிர வேறு வழியில்லை. முதல் முதல் கைவிட்டது ஜெர்மனி. அது 1931இல் செலாவணி மாற்றுரிமையை ரத்து செய்து கட்டுப்பாடு களை நிறுவியது. பின்னர்க் கிழக்கு ஐரோப்பா நாடுகளும், தென் அமெரிக்க நாடுகளும் பின்பற்றின. இங்கிலாந்து கட்டுப்பாடுகளை நிறுவா விட்டாலும் வீதத்தை நிலைநிறுத்த முயல்வதைக் கைவிட்டது. டொமினியன் நாடுகளும் ஸ்காண்டினேவியாவும் பின்பற்றின. அநேக நாடுகள் நாளடைவில் வீதத்தை மாற்றிக் கொண்டன. அமெரிக்காவும் பழைய வீதத்தைக் கைவிட்டது. சில மாதங்கள் சென்று புது வீதத்தை ஆண்டது. 1931-க்குப் பின் நாடுகள் பல முறையில் தங்கள் அயல்நாட்டுச் செலுத்து

முறைகளை மாற்றிக் கொண்டன. 1936-இல் பொன் கூட்டமும் (gold bloc) (பிரான்சு, ஸ்விட்ஸர்லந்து, நெதர்லந்து) கலைந்தது. இதோடு பொன் திட்டத்தின் வரலாறு முடிவு அடைந்தது. பொன் திட்டம் 1914-லேயே தன் செல்வாக்கை இழந்தது. ஆனால் சட்டப்படி 1936இல் தான் மறைந்தது. 1914-க்குப் பின் வழக்கில் இருந்த பொன் திட்டம் உண்மையில் பழைய பொன் திட்டத்தின் ஒரு நிழலே யொழிய உண்மையான பொன் திட்டம் அல்லவென்று சொல்லலாம்.

**பொன் திட்டம் வேலை செய்வதற்கு அவசியமான நிபந்தனைகள்**
(Essential conditions for the working of the gold standard mechanism)

பன்னாட்டுப் பொன் திட்டம் செம்மையாக வேலை செய்வதற்குச் சில அடிப்படையான பொருளாதார, அரசியல் சூழ்நிலைகளும் உளப் பாங்குகளும் அவசியமாக இருக்கின்றன. இந்த நூற்றாண்டின் மூன்றும் பத்தில் பொன் திட்டம் உலகம் எங்கும் கைவிடப்பட்டதற்குக் காரணம் இந்தச் சூழ்நிலைகள் இல்லாமையே ஆகும். இந்தச் சூழ்நிலை வசதிகள் பின்வருமாறு: முதலாவதாக, பொன் திட்ட நாடுகள் ஒவ்வொன்றும் உள் நாட்டில் வருமானத்திலும் விலையிலும் பேரளவு நெளிவுகள் இல்லாமல் பார்த்துக் கொள்ளவேண்டும். பார்த்துக் கொண்டால் ஒரு நாட்டிலும் வியாபார மந்தம் ஏற்படாது. ஆகவே எந்நாடும் மந்தம் ஏற்படும் காரணத்தால் இறக்குமதியைக் குறைத்து அயல்நாட்டில் மந்தத்தை உண்டாக்கும் நிலை ஏற்பட்டது. எல்லா நாடுகளும் உள்நாட்டுப் பொருளாதாரச் சுகாதாரத்தைப் பார்த்துக் கொண்டால் எந்நாட்டிலும் தொத்து வியாதியான வியாபார மந்தம் தோன்றாது, பரவாது. மந்தம் தோன்ற இடம் கொடுத்தால்தான் பொன் திட்டத்தைக் காப்பாற்று வதற்காக உள்நாட்டில் பண வாட்டத்தை (deflation) ஏற்படுத்த வேண்டி வரும். ஆகவே எப்போதும் வேலை நிறைவு (full employment) என்கிற கைக்கோளை நாடுகள் பின்பற்றி நடவடிக்கை எடுத்து வந்தால் பொன் திட்டத்தை எளிதில் காக்கலாம்.

இரண்டாவது, பொன் திட்டத்தின் விதிகள் பின்பற்றப்பட வேண்டும். பொன் வந்தால் வருமானத்தையும் விலைகளையும் ஏற விடவேண்டும், பொன் வெளியேறினால் குறைய விட வேண்டும், பொன் வெளியேறும்போது அதனால் நாட்டில் பண

வருமானமும் விலையும் குறையும் என்றும், பொன் உள் வந்தால் அவை ஏறும் என்றும் முன்னரே கூறியுள்ளோம். இந்த மாறுதல்கள் செலுத்துச் சமநிலைக்கு அவசியமானவை. ஆனால் மைய பாங்குகள் இவ்வித விளைவுகளைத் தடுக்கக் கூடும். எப்படித் தடுப்பார்கள்? பொன்னை இழக்கும் நாட்டின் மைய பாங்கு வெளி அங்காடியில் செக்யூரிட்டிகளை வாங்கினால் இது சாதாரண பாங்குகளின் ரொக்க ரிசர்வை உயர்த்திப் பொன் வெளியேற்றத்தினால் உண்டாகும் வைப்பு விளைவைத் தடுக்கக் கூடும். பொன் உள் வரும்போது மைய பாங்கு செக்யூரிட்டிகளை அங்காடியில் விற்று பாங்குகளுடைய ரிசர்வைக் குறைத்தால் பொன் வருவதால் ஏற்படக் கூடிய வைப்புப் பெருக்க விளைவைத் தடுக்கக்கூடும். இப்படி எதிர் நடவடிக்கைகளால் மையபாங்குகள் பொன் இயக்கத்தின் விளைவுகளைத் தடுக்காமல் இருந்தால்தான் பொன் திட்டம் வேலை செய்யும். தடுத்தால் பொன்னை இழக்கும் நாட்டில் விலை இறங்காது. பொன்பெறும் நாட்டில் விலை ஏறாது.

ஆகவே செலுத்து நிலை சரி கட்டும் இயல்பு விளைவுகள் ஏற்பட வழி இருக்காது. தொடர்ந்து பொன் இயக்கம் ஒரே திசையில் நேர்ந்து கொண்டு இருக்கும். முடிவில் பொன் இழந்த நாடு பொன் ரிசர்வு எல்லாம் இழந்து, பொன் திட்டத்தைக் கைவிட வேண்டி வரும். உண்மையில் செலுத்து நிலை காரணமாகப் பொன் வெளியேறும் காலத்தில் மைய பாங்குகள் பொன் வெளியேற்றத்தின் விளைவுகளை வலுப்படுத்தி, தாங்கள் செக்யூரிட்டிகளை விற்பது நலமாக இருக்கலாம். ஏனெனில் பொன் பெறும் நாட்டில் வருமானமும் விலையும் பெருக்கவும், பொன் இழக்கும் நாட்டில் குறையவும் இது உதவி செய்யும். பொன் இழக்கும் நாடு மட்டும் பொன் திட்ட விதிகளைப் பின்பற்றி, பொன் பெறும் நாடு பின்பற்றாது இருந்தால் செலுத்துநிலையைச் சரிக்கட்டும் முழுப் பொறுப்பும் பாரமும் பொன் இழக்கும் நாட்டின் தோளின் மேல் இருக்கும். பொன் பெறும் நாடு பொன் இழந்த நாட்டுக்கு உதவி செய்யக் கூடியதாகத் தானும் பொன் திட்ட விதியைப் பின்பற்ற வேண்டும்.

மூன்றாவது, பொன் திட்டம் வேலை செய்ய வேண்டுமானால் உள்நாட்டு விலைகள் பேரளவு நெகிழ்ச்சி உடையனவாக இருக்க வேண்டும். பொன் பெயரும்போது இரண்டு நாடுகளிலும் விலைகள் தடையின்றி மாறும் தன்மையனவாக இருக்க வேண்டும். விலைகள் மாறினால் ஏற்றுமதி இறக்குமதி மாறிச் செலுத்து நிலை சீர் அடைய வழி உண்டாகும். ஆனால் உண்மையில் விலைகள் வேண்டிய அளவுக்கு உடனே மாறுவதில்லை. மாறுவதானாலும் அரசியல் நெருக்கடிகளை விளைவிக்

கின்றன. விலைகளுக்குள் மிகவும் முக்கியமானது கூலி. கூலிகள் எளிதில் மாற மறுக்கின்றன. தொழிலாளர் நிலையங்கள் பலமாக உள்ள சூழ்நிலையில் கூலிகள் இறங்குவது இல்லை. இதனால் பொன் வெளியேற்றத்தால் நாட்டில் பணக் குறைப்பு செய்யப்படும்போது கூலிகள், மற்ற விலைகள் வீழ்வது போல இறங்க வேண்டும். மற்ற விலைகள் இறங்கும்போது கூலி வீதங்கள் இறங்க மறுத்தால் பண வாட்ட நிலையில் வேலையின்மை யையே உண்டாக்கும். பொன் உள் வரும்போது விலை வீக்கத்தினால் வியாபாரிகள் அமித இலாபம் அடைவதைத் தடுக்க வேண்டுமானால் கூலி வீதங்களும் மற்ற விலைகளும் உயர வேண்டும். ஆகவே கூலி வீதங்கள் போதிய அளவு நெகிழ்ச்சியற்ற சூழ்நிலையில் பொன் திட்டம் வேலை செய்ய முடியாது.

நான்காவது, பொன் திட்டத்தைப் பின்பற்றும் ஒரு நாட்டில் மைய பாங்கு குறிப்பிட்ட அளவு பொன் ரிசர்வ் வைத்திருக்க வேண்டும். ஏனெனில் மக்கள் பொன்னை ஏற்றுமதி செய்ய விரும்பினால் அது அவர்களுடைய தேவையைப் பூர்த்தி செய்ய வேண்டும். எவ்வளவு பொன் வைத்திருப்பது என்பது ஒவ்வொரு நாட்டிலும் சட்ட பூர்வமாக யாதானும் ஒரு முறையில் வரையறை செய்யப்பட்டிருக்கும். முறை எதுவாயினும் மைய பாங்கு ஓரளவு பொன் இருப்பு வைத்திருக்கும். எவ்வளவு வைத்திருக்க வேண்டும் என்பது நாட்டின் பணத்துறை பேரத்தின் மதிப்பைப் பொறுத்தது. ஒரு நாட்டின் பணத்துறை பேரங்கள் எவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கு அதன் அயல் நாட்டு வியாபாரத்திலும் பேரங்கள் அதிகமாக இருந்து, அதில் பேரளவில் பற்றுக்குறை ஏற்பட்டு, பேரளவில் பொன் தேவைப் படலாம். ஆகவே, சாதாரணமாக நேரக்கூடிய இவ்விதத் தேவைகளைச் சமாளிப்பதற்கு வேண்டிய பொன்னை ஒவ்வொரு நாடும் வைத்திருக்க வேண்டும். வேண்டிய அளவு பொன் இல்லாவிடில் பொன் திட்டத்தைக் காப்பதற்காகப் பண வாட்டத்தை உண்டாக்கி மந்தத்தை ஏற்படுத்த வேண்டி வரும். எல்லா நாடுகளிலும் முதல் பெருக்கத்தாலும், மக்கள் பெருக்கத் தாலும் உற்பத்தி உயர்ந்து வரும்போது, நிறைவு வேலை வேண்டுமானால், உற்பத்தி பெருகும் அளவுக்கு வருமானமும் செலவும் உயர வேண்டும். இன்றேல் விலை மட்டம் உற்பத்திச் செலவுக்குக் குறைவாகிவிடும். இந்தச் சூழ்நிலை வாராதிருக்க எல்லா மைய பாங்குகளுடைய நோட்டு வெளியீடும் அதிகப்பட வேண்டும். வேலைக் குறைவைத் தடுக்கச் சராசரி ஆண்டுக்கு ஒரு சதவீதம் மைய பாங்கின் நோட்டு வெளியீடு வளர்ந்து

கொண்டே இருக்க வேண்டுமானால், நாடுகளின் பொன் இருப்பும் ஒரு சதவீதத்தில் ஏறிக்கொண்டேயிருக்க வேண்டும். ஆனால் பொன் உற்பத்தி இந்த வீதத்துக்கும் குறைவாக இருக்குமானால் வேலையின்மை காணப்படும். தவிர்க்க வேண்டுமாயின் கூலி வீதங்கள் வேண்டிய அளவுக்குக் குறைய வேண்டும். கூலி வீதங்கள் விறைப்பாக இருந்தால், வேலை நிறைவுக்கு இடையூறு செய்யாதபடி தேவை மாற வேண்டும். ஒரு வழி, மைய பாங்குகள் பொன்னுக்கும் தங்களுடைய பொறுப்புகளுக்கும் உள்ள விகிதாசாரத்தை குறைத்துக் கொள்வதாகும். இதனால் குறிப்பிட்ட பொன் தொகை முன்னைவிட அதிகமான நாடுகளுக்குப் பாதுகாப்பாக இருக்கப் போதுமானதாகும். பணத் தொகைக் குறைவால் வேலைக் குறைவு தோன்றாது. ஆனால் அத்தியாவசியமான வெளி நாட்டுச் செலுத்துக்கு வேண்டிய அளவுக்காவது பொன் கையில் இருக்க வேண்டும், விகிதாசாரத்தைக் குறைத்து விட்டால் மட்டும் போதாது. மற்றொரு முறை என்னவெனில் தூய பொன் திட்டத்திற்குப் பதிலாகப் பொன் மாற்றுத் திட்டத்தை (Gold Exchange Standard) மேற்கொள்வது. இதன் அம்சங்களை முதல் பாகத்தில் 27 ஆம் பக்கத்தில் விளக்கினோம். ஒரு மைய பாங்கு பொன் திட்டத்தை ஆளும் மற்றொரு நாட்டின் செலாவணி உருவில் தன் ரிசர்வை வைத்துக்கொள்கிறது. இந்த ரிசர்வ் அயல் நாட்டுச் செலுத்தில் பொன்னைப்போல் பயன்படக் கூடியது. உலகத்திலுள்ள பொன் தேவையை இந்த முறை குறைக்கிறது. ஒரு பவுண்டுக்கு ரூ. 15 என்ற மாற்று வீதத்தில் 15 ஆயிரம் ரூபாய் ரிசர்வு வைக்க வேண்டுமானால், இந்தியா இங்கிலாந்தில் ஆயிரம் பவுண்டாக வைத்திருக்கலாம். இங்கிலாந்து பாங்கு தன் பொறுப்பில் 10 இல் ஒரு பங்களவுக்குப் பொன் வைத்திருந்தால் இந்தியா 15,000 ரூபாய்க்கு 100 பவுன் வைத்திருந்தால் போதும்.

ஆனால் பொன் மாற்றுத் திட்டத்தை ஓரளவுக்கே கையாளலாம். இத் திட்டத்தையாளும் A என்னும் ஒரு நாடு தன் பொன் இருப்பை B என்னும் மற்றொரு நாட்டுக்கு இழப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அப்போது A ஆனது ஏற்றுமதிக்குப் பொன்னை விற்காமல் B-யில் இருக்கும் வைப்பிலிருந்து B-யில் செலுத்த வேண்டியோருக்குக் கொடுக்கும். இதனால் A நாட்டின் மைய பாங்கின் ரிசர்வு இருப்புக் குறைகிறதே ஒழிய, B பாங்கினுடைய ரிசர்வு இருப்பு உயர்வதில்லை. ஏனென்றால், பொன் பெயர்ச்சி ஒன்றுமில்லை. B-யில் முன்னர் வைப்பு ஒருவருக்குரியதாயிருந்தது. இப்போது வேறொருவருக்கு

உரியதாகிறது, அவ்வளவே. இங்கிலையில் செலுத்து நிலையைச் சரி செய்வதற்கு வேண்டிய அளவுக்குப் பொன் மாற்றுத் திட்ட நாடே தன் வருமானத்தையும் விலையையும் வடிக்க வேண்டியிருக்கிறது. எதிரிடையாக, பொன் மாற்றுத் திட்டத்தை ஆளும் ஒரு நாட்டுக்கு அயல்நாட்டு வியாபாரம் மூலம் வரவு வந்தாலும் அது அயல்நாட்டில் வைத்திருந்த செலாவணியின் இருப்பு உயர்கிறதே ஒழியப் பொன் வரவொன்றுமில்லை. இங்கிலையில் பொன் மாற்றுத் திட்டத்தை ஆளும் நாடே செலுத்து நிலைக்கு வேண்டிய அளவுக்கு விலைகளையும் வருமானத்தையும் பெருக்க வேண்டிய பொறுப்புடையதாகிறது. ஆகவே பொன் மாற்றுத் திட்டத்தை ஆளும் நாடு ரிசர்வை இழந்தபோது வாட்டத்தாலும், ரிசர்வைப் பெற்றபோது வீக்கத்தாலும் பாதிக்கப்படக்கூடிய ஆபத்து ஏற்படுகிறது. இந்த விளைவைத் தடுக்க வேண்டுமானால் பொன் மாற்றுத் திட்டத்தை ஆளும் நாடுகள் ஒரு முறையைப் பின் பற்றலாம் என்று மீடு (Meade) கூறுகிறார்.

இவை தன்னுடைய ரிசர்வுகளை ஒரு பன்னாட்டுப் பாங்கிடம் (international bank) இருப்பாக வைக்கலாம். இந்த பாங்கிடம் அமெரிக்கா, இங்கிலாந்து மைய பாங்குகள் தங்களுடைய பொன் அனைத்தையும் இருப்பு வைப்பதாக வைத்துக் கொள்வோம். இந்த பாங்கு சுவிட்சர்லந்தில் பால் (Basle) நகரத்திலுள்ள பன்னாட்டுத் தீர்வு பாங்கு (Bank for International Settlements) என்று வைத்துக் கொள்வோம். இதில் குறிப்பிட்ட பொன் மதிப்புடைய சுவிஸ் பிராங்கில் வைப்புகள் இருக்கும். ஆகவே இருப்பு பொன் இருப்புக்குச் சமமாகக் கருதப்படுகிறது என வைத்துக் கொள்வோம். இங்கிலாந்து அமெரிக்காவுக்கு ரிசர்வை இழந்தால் பன்னாட்டுப் பாங்கில் இங்கிலாந்தின் வைப்புக் குறைந்து, அமெரிக்காவின் வைப்பு உயரும். இதனால் இரண்டு நாடும் பாதிக்கப்படும். இரண்டும் (செலுத்துச் சமநிலைக்கு வேண்டிய) நடவடிக்கை எடுத்தாக வேண்டியிருக்கும். சுவிஸ் பாங்கு அதேபோது மைய பாங்குகளுக்குச் செக்யூரிட்டிகள் விற்பது மூலமும், அல்லது அவைகளிடம் வாங்குவது மூலமும் அவைகளின் ரிசர்வை மாற்ற முடியும். உதாரணமாக, வியாபார மந்தத்தைத் தடுக்க மொத்தப் பொன் ரிசர்வை 10 சதவீத அளவுக்கு அதிகப்படுத்த வேண்டுமென்று தோன்றியதாக வைத்துக்கொள்வோம் பன்னாட்டுப் பாங்கு இங்கிலாந்து பாங்கிடமிருந்து அப்பாங்கின் ரிசர்வில் 10 சதவீத மதிப்பளவுக்குச் செக்யூரிட்டிகளை வாங்கிக்கொண்டு ஈடாக இங்கிலாந்து பாங்கின் ரிசர்வை அதிகப்படுத்தலாம்.

இப்படியே அமெரிக்கா பாங்கிடமிருந்து செக்யூரிட்டிகளை வாங்கி அதன் ரிசர்வை அதிகப்படுத்தலாம்.

மூன்றுவது, மற்றொரு முறையாகவும் மொத்தப் பொன் ரிசர்வு அளவைக் கட்டுப்படுத்த முடியும். பொன் ரிசர்வு பற்றாக் குறை நேரும்போது மைய பாங்குகள் அனைத்தும் ஒரே போது தாம் பொன்னை வாங்கும் விலையையும், விற்கும் விலையையும், குறிப்பிட்ட வீதத்தில் மாற்றிக் கொள்ளலாம். ஓர் அவுன்ஸ் பொன்னை இங்கிலாந்து பாங்கு 4 பவுன் விலைக்கு விற்கவும் வாங்கவும் செய்வதாகவும், அமெரிக்க பாங்கு 1 அவுன்சை 20 டாலர் விலைக்கு விற்கவும் வாங்கவும் செய்வதாகவும் வைத்துக் கொண்டால், இரண்டு நாணயங்களுக்கும் மாற்று வீதம் ஒரு பவுண்டு = 5 டாலர் ஆகிறது. இப்போது இங்கிலாந்து பாங்கு தன் விலையை 25 சதவீதம் அதிப்படுத்தி ஓர் அவுன்சுக்கு 5 பவுண்டாகவும், அமெரிக்கா அதே போல் ஓர் அவுன்சுக்கு 25 டாலர் ஆகவும் ஆக்கலாம். இப்போதும் மாற்று வீதம் முன் போலவே பவுண்டுக்கு 5 டாலர் ஆக இருக்கிறது. பொன் திட்டத்தின் அம்சமான மாருத மாற்று வீதம் காப்பாற்றப் படுகிறது. ஆனால் இரண்டு நாட்டிலும் இருந்த பொன் ரிசர்வு களின் பண மதிப்பு 25 சதவீதம் டாலரிலும் பவுண்டிலும் உயர்ந்து விட்டது. இதனால் இரண்டு நாட்டின் பாங்குகளும் தம் பணச் செலாவணியை அதிகப்படுத்தி வியாபார மந்தத்தைத் தோன்றுமல் தடுக்க முடிகிறது. இப்படிப் பண மதிப்பை மாற்றுவதே மதிப்புத் திருத்தம் (revaluation) என்பர். இது மைய பாங்குகளுக்கு ஓர் இலாபகரமான நடவடிக்கை. மைய பாங்கு 200 மில்லியன் பவுண்டு மதிப்புள்ள பொன் வைத்துக் கொண்டு, அதையே மதிப்புத் திருத்தம் செய்து 250 மில்லியன் பவுண்டு ரிசர்வாக மதித்தால் எச்சம் அரசாங்கத்துக்கு வருமானம் ஆகிறது. அது (வரி ஏதும் விதிக்காமல்) செலவை அதிகரித்து, வருமான வாட்டத்தைத் தடுக்குப் சக்தி பெறுகிறது. எதிரிடையாக மைய பாங்குகளின் ரிசர்வின் மதிப்பு மிகவும் ஏற்றமாயிருப்பின் மைய பாங்குகள் பொன் வாங்கும் விலை, விற்கும் விலையைக் குறைத்து, நஷ்டம் அரசாங்கத்தின் பட்ஜெட்டைப் பாதித்து, வரி உயர்வுக்குக் காரணமாகி, வருமானத்தையும் விலையையும் குறையச் செய்யும்.

ஐந்தாவது, பொன் திட்டம் செம்மையாக வேலை செய்ய நாடுகள் பொருத்தமுள்ள மாற்றுவீதத்தைத் தேர்ந்தெடுக்க வேண்டும். கைவிட்ட பொன் திட்டத்தை மீட்கும்போது இது கவனிக்கப்பட வேண்டிய விஷயம் என்பது முன்பு கூறிய இங்கி

லாந்தின் வரலாற்றில் இருந்து தெரிகிறது. நாட்டின் பணத்துக்கு அமித மதிப்புக் கொடுக்கப்பட்டால், நாட்டின் பொன் வெளியேறுவதற்குக் காரணமாகும். நாட்டின் பணத்துக்குக் குறை மதிப்புக் கொடுக்கப்பட்டால், அது அயல்நாட்டின் பொன்னைக் காலி செய்வதற்குக் காரணமாகும். தகுந்த மாற்று வீதம், அதாவது தகுந்த பொன் விலை, என்ன என்பதை நிர்ணயிக்க அனுபவமுறையே சாத்தியமானதாக இருக்கலாம். நாடுகள் ஒன்றுபட்டுத் தகுந்த வீதத்தை (ஒன்றையொன்று ஏமாற்றும் நோக்கத்தோடின்றி) வகுத்துக்கொள்ளவேண்டும். ஒரு குறித்த பொன் விலையில் பொருத்தமின்மை காணப்பட்டால், அதை மாற்றி ஒரு புது வீதத்தை ஆண்டு பார்க்கவேண்டும். ஆனால் அதே போது ஒவ்வொரு நாடும் வேலை நிறைவுக்கு வேண்டிய உள்நாட்டு நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டே இருக்க வேண்டும்.

ஆறாவது, அயல்நாட்டுச் செலுத்து நிலையைக் கெடுக்கக் கூடிய முதற் பெயர்ச்சிகள் இருக்கக்கூடாது. ஒரு நாட்டில் விலை ஏறும்போது இலாபமும் ஏறுமென்று எதிர்பார்த்து அயல்நாட்டிலிருந்த முதல் பேரளவில் பெயருமானால், அதன் வரவால் நாட்டில் இன்னும் அதிகமாகப் பணப் பெருக்கம் ஏற்படும். பொன் திட்டத்தின் ஒழுங்குக்குப் பணக்குறைப்பு நிகழ வேண்டியபோது இப்படிப் பணப்பெருக்கம் ஏற்படுவது கெடுதலானது. முதல் இப்படிப் பெயர்வது பொன் திட்டத்தின் செயற்பாட்டைப் பாதிக்கக் கூடியது. முதலைத் திடீரென இழக்கும் நாட்டில் இது வாட்டத்தை உண்டாக்கிப் பொருளாதாரத்தைப் பாதிக்கும்.

தவிர, ஒரு நாடு மற்ற நாடுகளிலிருந்து பேரளவில் வட்டியையோ நஷ்ட ஈட்டையோ பெற்றுக்கொண்டு வந்திருக்குமானால், அதனுடைய அயல்நாட்டுச் செலுத்து நிலை தொடர்ந்து சமநிலையில் இருக்க வேண்டுமானால் அது (அயல்நாட்டில் இருந்து வாங்குவதைவிட அதிகமாகக்) கடன் கொடுக்கவேண்டும், அல்லது ஏற்றுமதி செய்வதைவிட அதிகமாக இறக்குமதி செய்ய வேண்டும். கடன் அளிக்கும் நாடு போதிய அளவு அயல்நாட்டுக்குக் கடன் கொடுக்க ஒப்பாவிட்டால், ஏற்றுமதியை விட இறக்குமதி அதிகம் செய்ய ஒப்பவேண்டும். அநேகர் ஒரு நாடு எப்போதும் எச்சமாக ஏற்றுமதி செய்வதே நல்லது என்று நினைக்கின்றனர். இது ஒரு போலி வாதம். ஏனென்றால் ஒரு நாடு அயல் நாட்டிடமிருந்து நிகர வருமானம் பெறும்போதும் இறக்குமதி (ஏற்றுமதியை விட) எச்சமாகவே இருக்க வேண்டிவரும். ஒரு நாடு அயல் நாட்டிடமிருந்து வட்டி முதலியவற்றைப் பெறுவதால் நலமடைய வேண்டுமானால் பொருளுருவில் பெறுவதைவிட வேறு

வழியில்லை. இதை அறியாமல் நாடுகள் பாதக வாணிப நிலையை எப்போதுமே கெடுதலாக எண்ணி வாணிபத்துக்குத் தடையிடுவது மூடத்தனம். கடன் அளிக்கும் நாடுகள் தமக்குரிய வட்டியைப் பெறுவதற்கு வழி அயல்நாட்டுப் பொருள்களை இறக்குமதியாக வர விடுவதேயாகும். அதைத் தடுத்தால் மற்ற நாட்டிலிருந்து பொன்னாகவே வரவேண்டும். அது முடியாவிடில் அயல்நாடுகள் கடனைத் திருப்பிக் கொடுக்க மறுக்க வேண்டும். ஆகவே பொன்னைச் செலுத்த முடியாத நிலையில் அயல்நாடுகளே பண்ட மூலமும் பணி மூலமும் செலுத்த வழி செய்வது கடன் கொடுக்கும் நாடுகளுக்கு அவசியமாகும். இப்படி நடப்பது எல்லாக் கடன் கொடுக்கும் நாடுகளுக்கும் பொருந்தும். அதிலும் பொன் திட்ட நாடுகளாயின் மிகவும் அவசியம் ஏனெனில், கடன் கொடுத்த நாடு இறக்குமதிக்குத் தடை விதித்தால், பொன்னைச் செலுத்த வேண்டிய பொறுப்பு கடன் பட்ட நாட்டுக்கேற்பட்டு, அது முடிவில் பொன் திட்டத்தையே கைவிடவேண்டி வரும்.

### பொன் திட்டத்தின் நன்மைகள்

முதலாவது, பின்பற்றும் நாடுகளுக்கிடையே மாற்று வீதம் மாறாதிருக்கும். எல்லா நாடுகளும் பொன்னைக் கணக்கு அலகாக ஆள்வதால் மாற்று வீதகங்கள் பொன் ஏற்றுமதி, பொன் இறக்குமதி எல்லைகளுக்கு இடையில்தான் மாற முடியும். நிலையான வீதங்கள் பன்னாட்டு வணிகத்துக்கு உதவுவது. பல்வேறு நாடுகளின் இயற்கை வேறுபாடுகளுக்கேற்ப உற்பத்தியும் அதனால் அவைகளுக்குள் வியாபாரமும் நடப்பது வேலை பகுப்புக்கு உள்ள நலன்களை உண்டாக்கும். இதனால் நாடுகளின் வாழ்க்கைத் தரம் உயரும். மாற்று வீதம் மாறாதிருப்பது மக்களுக்கு நம்பிக்கை ஊட்டுகிறது. குறிப்பிட்ட சூழ்நிலையில் ஒரு பொன் திட்ட நாடு எவ்விதமான பணத்துறை நடவடிக்கையை எடுத்துக்கொள்ளும் என்பது அவர்களுக்குத் தெளிவாக இருக்குமாதலால் நம்பிக்கை ஏற்படுகிறது.

இரண்டாவது, நெடுங்காலத்தை எடுத்துக்கொண்டால் பொன் ஒன்றுதான் வாங்கும் திறனில் ஏறக்குறைய ஒரு வித நிலைபேற்றைக் காட்டி வந்திருக்கிறது. பொன் திட்டத்தின் கீழ் மாற்று வீதம் நிலைபேறு அடைவதன்றியும், உலகத்தில் விலை மட்டமும் பொன்னோடு பிணைக்கப்படுகிறது. 1914-க்கு முன் பொன்னின் மதிப்பு நெடுங்காலமாகப் பேரளவில் நிலைபேறு உடையதாக இருந்தது என்பது அறிந்த விஷயம். ஆண்டு தோறும் உற்பத்தி ஆகும் பொன்னின் அளவு சிறிதாக

இருந்ததால் இந்த நிலைபேறு காணப்பட்டது. பொன் திட்டத்தின் கீழ், பொன்னின் விலை பல நாடுகளிலும் குறிப்பிடப் பட்ட நிலையில் இருப்பதால் பொன்னின் வாங்கும் திறனும் பணத்தின் வாங்கும் திறனும் ஒன்றாக இருந்தன.

மூன்றாவது, சிலர் பொன் திட்டத்தில் சுய மதிப்பு (intrinsic value) உடைய பொன் ஆளப்படுவது ஒரு சிறப்பாகக் கூறுகிறார்கள். நம்முடைய பணத்தின் மதிப்பு ஓர் உலோகத்தின் சுய மதிப்பின் பேரில் நிலை பெறுகிறது என்பது தவறான வாதம். ஆனால் பொன்னை எல்லா நாடுகளும் விரும்புகின்றன. ஆகவே. அது சிறந்தது என்பது ஒப்புக்கொள்ள வேண்டிய விஷயம்.

நான்காவது, பொன் திட்டத்தின் கீழ்ப் பேரளவில் பண வாட்டமோ வீக்கமோ ஏற்படாது. ஏனெனில், பொன் திட்ட விதிப்படி நடந்துகொண்டால் வாட்டத்துக்கும் வீக்கத்துக்கும் முடிவு தானே தோன்றும். பொன் இயங்குவதால் அளவின்றி வாட்டமும் அல்லது வீக்கமும் வளர முடியாது.

ஐந்தாவது, சிலர் பொறுப்பற்ற பணத்துறை அதிகாரிகளைப் பொன் திட்டம் கட்டுப்படுத்துகிறது என்பார்கள். அளவின்றிப் பண வீக்கத்தைக் கையாள முடியாது. பொன் சங்கிலி பணத் துறை அதிகாரிகளின் கைக்கு விலங்கிடுகிறது. ஆனால் இந்தப் பொன் சங்கிலி அரசாங்கத்தாரால் ஏற்படுத்தப்பட்ட பொன் விகிதாசரமே ஆகும். ஆதலால் அரசாங்கம் விரும்பினால் இந்த விலங்கை எடுத்தெரியலாம்.

ஆறாவது, பொன் திட்டத்தின் கீழ் எல்லா நாடுகளும் விதிப்படி நடப்பதன் மூலம் மேற்பார்வை இன்றியே ஒழுங்காக நடந்துகொள்கின்றன. ஆனால் விதியைப் பின்பற்ற வேண்டும் என்கிற விதியே தனி ஒரு நாட்டில் அதன் முழு அதிகாரத்திற்கு ஓர் எல்லையை ஏற்படுத்துகிறது.

ஏழாவது, பொன் திட்டம் சிக்கலற்றது. நிறைவேற்றக் கட்டுப்பாடுகள் பல இல்லை. பொன் திட்டம் எல்லாருக்கும் தெரிந்த விஷயம். ஆகையால் பொருளாதாரத் துறை அதிகாரிகள் எப்படி நடபபார்கள் என்பது எதிர்பார்க்கக் கூடியது. இது நாடுகளுக்கு இடையில் ஓரளவு நம்பிக்கையை உண்டாக்குகிறது. ஆனால் பொன் திட்டம் எளியமுறை என்றாவது அதை எல்லோரும் புரிந்துகொள்ள முடியும் என்றாவது நினைப்பது தவறு. பொன் பெயரும்போது அதன்

விளைவுகள் மிகவும் சிக்கலானவை. செயல் முறையில் அவைகளை அளந்தறிந்து நடக்க முடிவதில்லை.

எட்டாவது, பொன் ரிசர்வை இரண்டு வகையாகப் பிரிக்கலாம். ஒன்று, செலாவணிக்குக் காப்பாக (cover) இருப்பது மற்றொன்று, வாணிபத்துறை அதிர்ச்சி தாங்கியாக (buffer) இருப்பது. பொன், பண ரிசர்வுத் தேவைக்கு எச்சமாக இருக்குமானால் அது நாடுகளின் ரொக்கத் தன்மையை அதிகப்படுத்தி செலுத்து நிலையில் சமநிலைக்கேடு உண்டானால் தாங்குவதற்கு உதவுகின்றது. இப்படி எச்சமில்லாதபோது பொன் பெயர்ச்சிக்கு ஏற்பப் பணப் பெருக்கமும் சுருக்கமும் செய்ய வேண்டி வரும்.

ஒன்பதாவது, பொன் திட்டத்தின்படி பொன் வெளியேறும் போது ரிசர்வு குறைவதால் அநேக விளைவுகள் ஏற்பட்டு, முடிவில் வெளியேறிய பொன் திரும்பி வந்து சேர்கிறது. தவிர பல நாடுகளுக்கிடையேயும் பொன் பெயர்ந்து பரவியிருக்க இத்திட்டம் வழி செய்கிறது.

பத்தாவது, பொன் திட்டம் பொன் உற்பத்தி நாடுகளுக்குச் செல்வாதாரமாக இருப்பதும் ஒரு நன்மையாகக் கருதப்படுகிறது. பொன்னை உற்பத்தி செய்யும் ஆப்பிரிக்கா போன்ற நாடுகள் பொன் திட்டத்தின் ஆட்சியை விரும்புகின்றன.

**பொன் திட்டத்தின் குறைபாடுகள்**

மேற்கண்ட நன்மைகள் இருந்தபோதிலும், பொன் திட்டம் மீண்டும் ஆட்சிக்கு வரும் என்று நினைப்பதற்கு வழியில்லை. இதற்குக் காரணம் இரண்டு யுத்தங்களுக்கிடையில் ஏற்பட்ட அனுபவமே ஆகும். பொன் திட்டம் வேலை செய்வதற்கு வேண்டிய சூழ்நிலைகள் மாறி விட்டன; விதிப்படி நடக்க விரும்பாத நிலையில் மீட்கப்பட்டதால் அது வேலை செய்ய முடியவில்லை; இது திட்டத்தின் குறையாகாது என்று சிலர் கூறுவார்கள். ஆயினும், பொன் திட்டத்தை மேற்கொண்ட போது அதன் விதிகளைப் பின்பற்ற நாடுகள் தயாராகவே இருந்தன. ஆனால் அந்த விதிகளை அனுபவத்தில் ஆள முடியாமற் போய் விட்டது. இதுவும் பொன் திட்டத்தை ஆள்வதிலுள்ள இடர்ப்பாடுகளை வெளிப்படுத்துகின்றது.

முதலாவதாக, பொன் திட்டம் சிக்கலின்றி ஒழுங்காக வேலை செய்ய வேண்டுமானால் நாடுகளின் பொருளாதார அமைப்பில்

பேரளவில் நெகிழ்ச்சியும் நிலைபேறும் அவசியம். இவை இருப்பது தற்செயலாக ஏற்படக் கூடுமேயன்றிச் சாதாரணமாக எதிர் பார்க்கக் கூடுவது அன்று. ஆகவே பொன் திட்டம் சில வசதியான காலச் சூழ்நிலையில் பயன்படும் தோணியே யொழியப் புயல் காலத்தில் பயன்படாது. வேண்டிய நிபந்தனைகள் பூர்த்தி ஆகாதபோது பொன் திட்டத்தைக் கைவிட வேண்டியிருக்கிறது. 1914-க்கு முன் பொன் திட்டம் செம்மையாக வேலை செய்ததற்கு அக்காலத்திய பொருளாதாரப் போக்குக் காரணமாகும். நாடு களுக்குள் பொருளாதாரத் தொடர்பைப் பாதிக்கும் வகையில் பெரிய கோளாறுகள் ஒன்றும் தோன்றவில்லை. முதல் பெயர்ச்சியும் நாடுகளுக்கிடையில் ஏற்பட்ட சமநிலைக்கேடுகளைச் சீர் செய்யும் வகையில் இருந்தது.

இரண்டாவது. சாதகமற்ற சூழ்நிலையில் பொன் திட்டம் கைவிடப்பட்டது. இதற்குக் காரணம், அரசாங்கங்கள் பொன் திட்டத்தின் இன்றியமையாத கட்டுப்பாடுகளையும் விளைவு களையும் ஏற்கத் தயாராக இல்லை என்பதுண்மை. நாடுகளுக் கிடையே தொடர்ந்து செலுத்து நிலையில் சமநிலைக் கேடு வந்தபோது பொன் திட்டத்தை ஆள்வது கடினமாகி விட்டது. ஏனெனில், அது உள்நாட்டுப் பொருளாதார நலத்துக்கு முரணான நடவடிக்கைகளை அவசிய மாக்கியது. அயல் நாட்டுப் பேரத்தில் ஏற்படும் நிகழ்ச்சிகளின் காரணமாக உள்நாட்டுப் பொருளா தாரத்தைப் பாதிக்கும் விதிகளைப் பின்பற்ற நாடுகள் ஒப்பவில்லை. வேண்டுமானால், அயல்நாட்டுத் தொடர்பில் சீர்கேடு வருவதை நாடுகள் ஏற்கத் தயாராயிருந்தன. தவிர, பொன் திட்டம் சுயேச்சையாக வேலை செய்கிறது என்பதன் சிறப்பையும் மிகைப் படுத்திக் கூறக்கூடாது. பணப் பெருக்கமும் சுருக்கமும் வருத்தமான, ஆபத்தான நடவடிக்கைகள். மைய பாங்கு விரும்பிய போதிலும், விலைகளையும் செலவுகளையும் வேண்டிய அளவுக்குக் குறைக்க அதற்குச் சக்தி இல்லாமல் போகலாம். பொன் உள் வரும்போது பெருக்கத்தை வேண்டிய அளவு செய்ய முடியாமல் போகலாம். தற்காலத்தில் நாடுகள் உள் வரும் பொன்னைக் குவித்து வைக்கின்றன. அதைப் பணப பெருக்கத் துக்கு அடிப்படையாக ஆள்வதில்லை. பொன் இழந்த நாடு பொன் இழப்பால் பண வாட்டம் ஏற்பட விடுவதில்லை. அதன் கூலி களையும் வேறு விலைகளையும் பாதிக்கச் சமூகச் சக்திகள் இடம் தருவதில்லை. ஆகவே, இரண்டு நாடுகளிலும் பொன் திட்டம் சுயேச்சையாக வேலை செய்ய இடம் தரப்படுவதில்லை.

மூன்றாவது. தற்போது நாட்டின் பொருளாதார நலன் என்பது நாட்டில் வேலை நிறைவை உண்டாக்குவது என்றும்,

இந்த நோக்கத்துக்கே எல்லாவித நடவடிக்கைகளும் எடுக்கப்பட வேண்டும் என்றும் கொள்கை இருந்து வருகிறது. இந்த நோக்கத்தை முதன்மையாகக் கொண்டபோது மாற்று வீத நிலைபேற்றை அடைவது கடினமாகிறது.

நான்காவது, பொன் திட்டம் இயற்கையிலேயே பண வாட்டத்தை உண்டாக்கும் தன்மையுடையது என்பர் சிலர். பொன்னை ஆளும் நாடு தன் பொன் ரிசர்வைக் காப்பதற்குப் பண வடிப்புச் செய்யவேண்டும். ஆனால் பொன்னைப் பெறும் நாடு பணத்தைப் பெருக்க வேண்டும் என்கிற கட்டாயம் இல்லை. அதாவது பண வாட்டம் இன்றியமையாதது போலப் பணப் பெருக்கம் இன்றியமையாததன்று. மைய பாங்கு, பணப் பெருக்கத்தைத் தடுக்கச் சக்தியுடையதே யொழியப் பணத் தேவையைப் பெருக்கச் சக்தியுடைய தன்று. தவிர, நாடுகளுக்கிடையே வாணிபத் துறையில் வேறுபாடுகள் உள்ளன. சில நாடுகள் அயல் நாட்டு வியாபாரத்திலிருந்து பேரளவு வருமானத்தைப் பெறுகின்றன. சில நாடுகள் அளவிலும் (பெரியதும் சிறியதுமாக) வேறுபடுகின்றன. பொன் திட்டம் ஒரே தன்மையான நாடுகளுக்குள்—ஒரே அளவான நாடுகளுக்குள்—நடக்கும் வியாபாரத்தை அடிப்படையாகக் கொண்டது. அமெரிக்கா போன்ற நாடு பேரளவில் பொன் உள்ளோட்டத்தைப் பெற்றாலும் அதன் பணப் பெருக்கம் அதிகமாகப் பாதிக்கப்படாது. ஆனால் பொன்னை இழந்த நாடுகளில் பண வாட்டம் அவைகளைப் பரிதவிக்கச் செய்யும்.

ஐந்தாவது, பொன் திட்டம் வேலை செய்வதற்கு விலைவாசிகள் நெகிழ்ச்சி யுடையனவாக இருக்க வேண்டுமென்று கூறினோம். தொழிற் சங்கங்கள் சக்தி வாய்ந்தனவாயிருந்தால் அவை பொன் திட்டத்துக்குத் தடையாக இருக்கக்கூடும். தொழிற்சங்கங்கள் பேரம் செய்து கூலியை உயர்த்த முயல்கின்றன. கூலி உயர்ந்தால் பொன் திட்டத்தின் கீழ் வேலையின்மை ஏற்படும். கூலி ஏறினால் விலைகள் ஏற வேண்டும். ஏனென்றால் விலை மட்டம் கூலி மட்டத்தையும் உற்பத்திச் சக்தியையும் பொறுத்தது. விலைகள் ஏறாமல் தடுக்கப்பட்டால் செலவு ஏறிக் கொண்டே போகும்போது இறுதி நிலை உற்பத்தியாளர் உற்பத்தியை நிறுத்தி விடுவார்கள். ஆகவே, நாடுகள் தத்தமக் கேற்ற கூலி வீதங்களையும் விலைக் கொள்கையையும் பின்பற்ற விடப்பட வேண்டுமென்று கருதுகின்றன. பொன் திட்டம் இவ்வித உரிமையைத் தராமல் ஒரு விலை மட்டத்தை வற்புறுத்து கிறது. கூலி மட்டத்தைப் பணத்துறை நடவடிக்கைகளால்

கட்டுப்படுத்த முடியாதாகையால், கூலி ஏறவே செய்யும். வேலை யின்மை விளைவு தோன்றவே செய்யும். ஆகவே உள்நாட்டு விலைமட்டம் அவ்வந்நாட்டின் சொந்த விஷயமாக விடுப்பதே சரி என்றும், செலவு மாறுவதற்கு ஏற்ப அது மாற விடப்பட வேண்டுமென்றும் சிலர் சொல்கிறார்கள். கூலி மட்டப் பிரச்சினை பொன் திட்டத்தின் கீழ் ஏற்படும் பல பிரச்சினைகளில் ஒன்று. அது, பொன் திட்டம் எப்படி நாடுகளின் சுயேச்சைக்கு இடையூறாக இருக்கிறது என்பதைக் காட்டுகிறது.

ஆறாவது, பொன் ரிசர்வு சமமாகப் பங்கிடப்பட்டு, நாட்டின் பண அளிப்புக்கு அடிப்படையாக இருக்குமானால் அது அமித பண வீக்கத்தைத் தடுக்கும். ஆனால் இது உலகம் முழுவதிலும் பண வீக்கத்தையோ அல்லது பண வடிப்பையோ உண்டாக்கக் கூடும். இதற்குக் காரணம் பொன் அளிப்பில் ஏற்படும் மாறுதல் அன்று. எல்லா நாடுகளும் ஒரே மாதிரியாகக் கடன் பெருக்கத் தையோ சுருக்கத்தையோ ஆள்வதாகும். ஏனெனில், பொன் திட்ட விதியின் கீழ் மைய பாங்குகள் எடுக்கும் நடவடிக்கைகள் ஒன்றுக்கொன்று ரத்து செய்வனவாக இருக்கும் என்று நினைப் பதற்கில்லை. உலகம் முழுவதும் பரவும்படியான சுருக்கத்தையும் பெருக்கத்தையும் உண்டாக்கக் கூடும். அநேக நாடுகளில் சுருக்கம் தோன்றுமானால் நாளடைவில் அது மற்ற நாடுகளையும் விரைவில் பாதிக்கும். இப்படியே பண வீக்கமும் பரவக்கூடும். பொன் திட்டத்தின் இயக்கத்தில் இவ்வித ஒருமுகப் போக்கைத் தடுப்பதற்கு எந்தச் சக்தியும் இல்லை.

ஏழாவது, தற்காலத்தில் காகிதப் பணமும் பாங்குப் பணமும் பேரளவில் ஆளப்படும் நிலையில் பண நிர்வாகம் இன்றியமையாத தாகையால் பொன்னின் மதிப்பு மைய பாங்குகளுடைய கொள்கையைப் பொறுத்த தாகிறதே ஒழியப் பணத்தைப் பொன்னாக மாற்ற முடியுமா, முடியாதா என்பதைப் பொறுத்த தன்று. இன்று தூய நிர்வாகத் திட்டமோ தூய சுயேச்சைத் திட்டமோ இல்லை. பல அளவில் நிர்வகிக்கப்படும் திட்டங்களே காணப்படுகின்றன. சுயேச்சைக் குறைவான திட்டம் ஒன்று பொன் பெயர்ச்சிக்கேற்பப் பண அளிப்பை மாற்றக்கூடும். சிறிய நாடுகள் தாமாகச் சுயேச்சையாக ஒரு விலை மட்டத்தை நிறுவ முடியாதாயினும், பெரிய நாடுகள் தம் இஷ்டப்படி பணத்தை நிர்வகித்து வேறு நோக்கங்களையும் (உதாரணமாக வேலை நிறைவு நோக்கம்) நிறைவேற்ற முடியும். இனிமேல் சுயேச்சைத் திட்டம், நிர்வாகத் திட்டம் என்ற வேற்றுமையை வற்புறுத்துவதைவிட அக (internal) நிலை பேறு, பன்னாட்டு

நிலைபேறு (international stability) என்பதைக் கருதுவது முக்கியமாகும். சிலர் சுயேச்சையான பொன் திட்டம் இரண்டு வகை நிலைபேற்றையும் சாதிக்கக் கூடியது என்று கூறுகிறார்கள். இதை ஏற்க முடியாது. வெளிநாட்டு மாற்று நிலைபேற்றைப் பெற சிலபோது உள்நாட்டுப் பொருளாதார நலத்துக்கு முரணான நடவடிக்கை அவசியமாகிறது. இம்முரண் பாட்டை நீக்கும் நோக்கத்துடன் தான் சர்வதேசப் பணநிதி நிறுவப்பட்டுள்ளது. விளக்கம் பின்னர்க் காண்போம்.

எட்டாவது, சிலர் பணத்துக்குப்பின் பொன்னை ரிசர்வாகப் பூட்டி வைப்பது 'பொன்னை விரயம் செய்வதாகும் என்று நினைக்கின்றனர். பொன் பெயர்ச்சியானது குருட்டுத் தனமாகவே பண அளிப்பை மாற்ற வேண்டுமென்றால்தான் பொன் ரிசர்வு அவசியம். பண நிர்வாகம் பணத்துறை அதிகாரிகளின் விருப்பத்துக்கு விடப்பட்டால், பொன் ரிசர்வு இல்லாமலே நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ள முடியும்; அனாவசியமாகப் பொன்னைப் பூட்டி வைக்க வேண்டிய அவசியம் இல்லை. பணத்துக்கு ரிசர்வாக இருக்கும் வேலையிலிருந்து பொன் விடுபட்டால் அது நாடுகளுக்கிடையில் தோன்றும் தற்காலிகச் செலுத்துச் சம நிலைக் கேட்டைச் சரிப்படுத்த உதவக்கூடிய உயர்ந்த நீர்மைப் பொருளாக இருக்கும்.

இதனால் உள்நாட்டுப் பொருளாதார நலம் காரணமாக எடுக்க வேண்டிய பணத்துறை நடவடிக்கைகளை அச்சமின்றி எடுக்க வசதி உண்டாகும். இப்படிப் பயன்படுத்தினால் ஒழிய நாம் பொன்னைப் பூமியிலிருந்து வெட்டி எடுத்து மீண்டும் பூமியிலேயே பதுக்கி வைப்பது அறிவற்ற காரியமாகத் தோன்றும். பணத்துறைத் தேவைக்காகப் பொன்னை உற்பத்தி செய்வது வீண் வேலை என்று வாதிக்க இடமுண்டு. பல நாடுகள் ஒன்று சேர்ந்து தங்களுக்குள் ஏற்படும் பாக்கிகளைத் தீர்த்துக் கொள்வதற்குச் செயற்கையான பணக் கருவி ஒன்றை உண்டாக்கிக் கொண்டாலும், அல்லது தங்களுக்குள் ஒருவருக்கொருவர் கடன் கொடுப்பது மூலம் செலுத்து நிலையைச் சரி செய்ய முன்வந்தாலும் பொன்னுக்கு வாணிபத்தில் அவசியமிருக்காது. பொன் திட்டத்தின் சிறப்பு அது பண நிர்வாகத்தை அவசியமில்லாது செய்வதாயின், இப்போது பொன் இவ்வித வேலையைச் செய்யாத நிலையில் பொன் உற்பத்தி வீண் வேலையாகும் என்று கூறுவார் உளர். ஆனால் இவ்வாதம் ஒன்றை மறக்கிறது. உள்நாட்டுப் பண நிர்வாகத்துக்குப் பொன் தேவைப்படாவிட்டாலும், பல நாடுகளுக்கிடையே பைசல்

செய்ய இன்னும் தேவைப்படுகிறது. தவிர, மந்தத்தின் போது ஆட்களுக்குச் சும்மா கூலிக்கொடுப்பதைவிடப் பொன்னை உற்பத்தி செய்யும் வேலையைக் கொடுப்பது சிறந்தது. வேலையின்மைச் சூழ்நிலையில் இது நன்மை பயக்கும். பொன்னை உற்பத்தி செய்யும் நாட்டில் பெருக்கிமூலம் வருமானம் உயரும். வேலையின்மையால் கஷ்டப்படும் ஒரு நாடு பொருள்களை உற்பத்தி செய்து பொன்னை இறக்குமதி செய்யும்போது பொன் உற்பத்தி நன்மையே. ஏனெனில், பொன் தேவையின்றேல் பொருளுற்பத்தியும் அது தரும் வேலை வாய்ப்பும் இல்லாமற் போகலாம்.

**பொன் திட்டத்தின் எதிர்காலம்**

தானே இயங்கும் வகைப் பொன் திட்டம் மீளும் என்று தோன்றவில்லை. பழைய பொன் திட்டம் மாறாத மாற்று வீதங்கள், விகிதாசாரப் பொன் ரிசர்வு, பொன் இயக்கத்திற்கு ஏற்பப் பணப் பெருக்கம் அல்லது சுருக்கம், ஆகிய அம்சங்களுடையது. பட்செட்டில் வரவு செலவு சமப்பாடும் அவசியம். இந்த அம்சங்கள் எல்லாம் தற்கால அரசாங்கத்தின் பொருளாதாரப் பணிகளாகிய பொருளாதார நிலைபேறு, வேலை நிறைவு ஆகியவைகளுக்கு முரணானவை. பல நாடுகள் பொன் திட்ட விதிகளைப் பின்பற்ற மறுப்பதும் பன்னாட்டுப் பொன் திட்டத்தை மேற்கொள்ளத் தடையாயிருக்கும். பொன் திட்டம் பன்னாடுகள் சேர்ந்து ஒத்துழைக்க வேண்டிய திட்டமாகும். ஆகவே பொன் திட்டம் பழைய அம்சங்களோடு மீண்டும் நிறுவப்படமாட்டாது என்பது உறுதி.

ஆனால் பழைய வகைப் பொன் திட்டம் மீளாது என்பதனால் நாடுகளுக்கிடையேயுள்ள பொருளாதாரத் தொடர்புகளில் பொன் செய்யக் கூடிய பணி ஒன்றும் இல்லையென்று நினைக்கக் கூடாது. பொன் பயன்படுவதாக இருந்தால் பொன் திட்டத்தின் வழியாகத் தான் பயன்படக் கூடும் என்று நினைப்பது கூடாது. பொன் திட்டம் என்பதைப் பரந்த பொருளில் கொண்டால், நிலையான பொன் மதிப்புடைய பணங்களுடைய நாடுகளுக்கிடையே செலுத்துக்கு மிகவும் ரொக்கத் தன்மையுடைய சொத்தாகப் பயன்படலாம். பொன் திட்டம் என்பதைப் பழைய பொருளில் வைத்துக்கொண்டு வேறு பொன் ஆட்சி முறைகளைக் கண்டனம் செய்வது கூடாது. பொன் திட்டத்தைப் பரந்த பொருளில் எடுத்துக்கொண்டால் பொன்னை பணத்துறை அதிகாரிகள் உள்நாட்டுச் செலாவணிக்கு ரிசர்வகா

இருப்புச் செய்யாமல், அயல்நாட்டுச் செலாவணிக்காக வைத்துக் கொண்டு, குறிப்பிட்ட விலையில் பொன்னை அளவின்றிவாங்கவும் விற்கவும் செய்வார்களானால் பொன் திட்டம் நடைமுறையில் இருப்பதாகக் கூறலாம். மாறாத மாற்று வீதம் ஒரு நெடுங்கால குறிக்கோளாக இருக்கலாம். அன்றி நாடுகள் செலுத்துத் தகராறு வந்தபோதெல்லாம் நாணயத்தின் பொன் மதிப்பை மாற்றுவார்களானால் மாறாத வீதப் பொன் திட்டம் காணப்பட மாட்டாது. ஆனால் இந்நிலையிலும் கூடப் பல பணிகளைப் பொன் செய்ய வல்லது. வீத மாறுதல்களுக்கு இடைப்பட்ட காலத்தில், அயல்நாட்டுச் செலாவணிக்குள்ள தேவையையும் அளிப்பையும் முழு நெகிழ்ச்சியுடையதாகச் செய்து, மாற்று வீதத்தை நிலைப் படுத்தப் பயன்படும். இரண்டாவது, தற்காலிக வாணிபச் செலுத்தில் சமநிலைக் கேடுண்டானபோது பாக்கியைத் தீர்ப் பதற்கு அது வசதியான சொத்தாகப் பயன்படும். மூன்றாவது, பல நாட்டு நாணயங்களுக்கும் பொதுவான அளவை யாகப் பயன்படும். நான்காவது, பேரளவில் பொன்னை வைத்திருக்கும் நாடுகளும் அல்லது பொன்னை உற்பத்தி செய்யும் நாடுகளும், பொன்னை ஆட்சியிலிருந்து விலக்கக் கூடிய ஒரு திட்டத்தில் பங்குகொள்ள மறுக்கக்கூடும். அவைகளை இத் திட்டத்தில் சேர்த்துக் கொள்வதற்குப் பொன் ஆட்சி தூண்டுகோலாக இருக்கும்.

ஆகவே, பழைய வகைப் பொன் திட்டத்தை அப்படியே மீட்கவேண்டும், இன்றேல் பொன்னை அடியோடு கைவிட வேண்டும் என்பது சரியன்று. பொன்னைப் பன்னாட்டுச் செலுத் துத்துறையில் ஆளக்கூடும். ஆள்வது உலகத்தைப் பல்வேறு பணத் தொகுதிகளாகப் பிளவுபடாமல் காக்கும்.

**பொன் திட்டமும் காகிதத் திட்டமும்**
**(The gold standard and the paper standard)**

பொன் திட்டம் கைவிடப்பட்டுக் காகிதச் செலாவணித் திட்டம் (paper currency system) ஆளப்படும்போது, மைய பாங்கு நாட்டுச் செலாவணிக்கு ஈடாகப் பொன் கொடுக்கும் பொறுப்பை ரத்து செய்கிறது. பொன், நாட்டின் பணத்துறை நிகழ்ச்சிகளை உருப்படுத்தும் சக்தியை இழந்ததாக இருக்கும். பொன் திட்டத்தின்கீழ் மைய பாங்கு பொன்னைக் குறிப்பிட்ட விலையில் வாங்கவும் விற்கவும் செய்வதால் பொன்னுக்கும் செலாவணிக்கும் ஒரு நிலையான மதிப்புத் தொடர்பு இருக்கிறது. ஆனால் காகிதச் செலாவணித் திட்டத்தின் கீழ்ப் பொன்னுக்கும்

செலாவணிக்கும் உள்ள நிலையான தொடர்பு அறுபடுகிறது. அங்காடியில் பொன் ஒரு சாதாரணப் பண்டமாக ஆகிறது. மைய பாங்கு பொன்னைக் கொடுக்கும் பொறுப்பற்றதால் அது தன் விருப்பப்படி பண அளிப்புக் கொள்கையைக் கையாளலாம். பொன் திட்டத்தின்கீழ்ப் பணத்துறைக் கைக்கோள் (monetary policy) ஒரு குறிப்பிட்ட முறையில் இருப்பது விதியாகும். ஆனால் காகிதச் செலாவணியின் கீழ்ப் பணத்துறைக் கைக்கோள் எந்த வகையாகவும் இருக்கலாம். பணத்துறை அதிகாரிகள் பொன் திட்டம் இருப்பது போலவே நினைத்து நடந்து கொள்ளலாம், அல்லது பொன் திட்டத்துக்கு முரண்பட்ட முறையில் நடக்கலாம்.

ஆனாலும் பொன் திட்டம் கைவிடப்பட்டதாக நினைக்க முடியாது. ஏனென்றால் இன்னும் ஒரு குறிப்பிட்ட வகையில் பொன்னை இருப்புச் செய்ய வேண்டும் என்கிற சட்டம் இருந்து வரலாம். மைய பாங்கு பொன்னை விற்கவும் வாங்கவும் உள்ள பொறுப்பிலிருந்து விடுவிக்கப்பட்ட போதிலும் பொன் இருப்புப் பொறுப்பு அநேக நாடுகளில் தொடர்ந்து இருந்து வந்திருக்கிறது. பொன் இருப்புக் குறையும் போது மைய பாங்கு கடன் அளிப்பைச் சுருக்க வேண்டிய அவசியம் ஏற்படலாம்.

பொன் திட்டம் கைவிடப்பட்டாலும் பணத்துறையில் ஆளக் கூடிய கருவிகள் முன்னிருந்தவைகளே தான். அதாவது கழிவு வீதம், வெளி அங்காடி நடவடிக்கை முதலியன இப்போதும் ஆளப்படும். ஆனால் அவைகளின் ஆட்சி வேறு நோக்கத்தோடு இருக்கும். பொன் திட்டத்தைக் கைவிடுவதனால் உள்நாட்டுப் பணத்துறைக் கைக்கோளுக்கு உரிமை ஏற்படுவது உண்மை.

பொன் திட்டத்தைக் கைவிடுவதனால் புற விவகாரங்களில் என்ன விளைவு? உள்நாட்டில் நாணயத்தின் பொன் மதிப்பு குறிப்பிட்ட அளவில் இருக்க வேண்டும் என்கிற நியதி மறைந்ததும் பன்னாட்டுப் பணங்களின் மாற்றுவீதம் நிலையற்றதாகும். காகிதத்திட்ட நாட்டின் மாற்று வீதம் பொன் ஏற்றுமதி எல்லைகளுக்கு மேல் போகலாம். பொன் இறக்குமதி எல்லைக்குக்கீழ் இறங்கலாம். இதனால் மாற்று வீதங்கள் நிலையற்றவையாகின்றன. காகிதச் செலாவணித் திட்டத்தின் முக்கியமான அம்சம் பொன் திட்டத்தில் உள்ள மாற்று உறுதிப்பாடும் தானே இயங்கும் தன்மையும் இல்லாமையே. காகிதச் செலாவணித் திட்டத்தில் எந்தக் குறிப்பிட்ட விதியும் உள்நாட்டி

லேயும் புற விவகாரங்களிலேயும் இல்லை. மைய பாங்குகளுடைய கைக்கோளும் மாற்றுவீதப் போக்கும் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டன அல்ல. கட்டுப்பாடு இல்லை என்பதால் குழப்ப நிலை ஏற்படுமென்று கொள்ளக்கூடாது. அரசாங்கங்கள் நோக்கமின்றி நடக்கின்றன என்றும் நினைக்கக் கூடாது. பணத்துறை அதிகாரிகள் பொன் திட்டத்தின் கீழ் ஆண்ட கருவிகளைப் பயன்படுத்தி நாட்டின் பணப் புழக்கத்தை வேண்டியபடி திருத்தலாம். அயல்நாட்டு மாற்று வீதத்தையும் பழைய முறைகளைக் கொண்டு ஒழுங்குபடுத்த முயலலாம். குறிப்பிட்ட மாற்று வீதத்தை நிலைப்படுத்த முயலலாம். பொன் இறக்குமதியைத் தூண்டவோ ஏற்றுமதியைத் தூண்டவோ முயலலாம். தன் நாட்டுப் பணம் மதிப்பில் உயருமானால் அதைத் தடுக்கப் பொன் இறக்குமதியைத் தூண்டலாம். தன் நாட்டுப் பணம் மதிப்பு இழந்தால் அதைத் தடுக்கப் பொன் ஏற்றுமதியைத் தூண்டலாம். ஆனால் இப்படித் தூண்டப்பட்ட பொன் பெயர்ச்சிகள், பொன் திட்டம் கீழ் உள்நாட்டில் விளைவித்த பயன்களை உண்டாக்கா. ஏனெனில் மைய பாங்கின் கடன் கைக்கோள் பொன் இருப்பின்படி மாறுவதில்லை. பணத்துறைக் கைக்கோள் பொருளாதார, அரசியல் நோக்கத்திற் கேற்பப் பின்பற்றப்படும்.

பொன் திட்டம் கைவிடப்பட்டதும் ஒரு நாடு காகிதத் நிறுவும் என்று சொல்வதற் கில்லை. முதலாவதாக, ஒரு நாடு உள்நாட்டில் காகிதத் திட்டத்தையும் வெளி நாட்டுத் தொடர்பில் பொன் திட்டத்தையும் பின்பற்றக்கூடும். இரண்டாவது, ஒரு நாடு பொன் திட்டத்தைக் கைவிட்டபோதே அயல்நாட்டுச் செலுத்துக் கட்டுப்பாடுகளை நிறுவலாம். மூன்றாவது, மைய பாங்கு நோட்டுகளுக்குப் பொன் கொடுக்க வேண்டிய பொறுப்பை ரத்து செய்தாலும், பொன் ஏற்றுமதியைத் தடுக்க வேண்டிய அவசியம் இல்லை. தடுப்பது காகிதத் திட்டத்தின் இன்றி அமையாத அம்சமில்லை. நோட்டுக்கு மாற்றுரிமையை ரத்து செய்தாலே பணத் திட்டத்தின் பொன் பிணிப்பு அறுந்து விடும்.

பொன் திட்டத்தைக் கைவிட்டதும் மாற்று வீதங்கள் சுயேச்சையுடன் மாறுகின்றன. அவைகளின் போக்கு பொருளாதாரச் சூழ்நிலையைப் பொறுத்தது. அநேகமாக நாடுகள் பொன் திட்டத்தைக் கைவிட்டுக் காகிதச் செலாவணித் திட்டத்தை நிறுவுவதற்குக் காரணம், அயல்நாட்டுச் செலுத்து நிலை காரணமாகப் பொன் ரிசர்வை இழந்ததாகும். அப்போது பொன் திட்டத்தைக் கைவிட்டதும் பணத்தின் மாற்று மதிப்பு இறங்கக் கூடும். ஆனால் செலாவணி மதிப்பை இழக்க வேண்டுமென்பது

அவசியம் அன்று. காகிதச் செலாவணித் திட்டம் நடைமுறைக்கு வந்ததும் மாற்று வீதத்தில் எந்தவித மாறுதலும் ஏற்படாமலும் இருக்கக்கூடும். செலுத்து நிலை சமநிலையில் இருக்குமானால் வீதத்தில் மாறுதல் ஏற்படக் காரணமில்லை. ஆனால் பணத் திட்டத்தில் மாறுதல் உண்டானபோது அதுவே நாட்டின் செலுத்து நிலையில் பாதகத்தை உண்டாக்கலாம். யூக முதலோட்டம் தூண்டப்படலாம். பணத்தின் மதிப்புக்குறையும் என்கிற எதிர்பார்ப்பு தூண்டப்பட்டு முதல் நாட்டை விட்டு வெளியேறலாம். இதனால் மாற்று வீதம் மாறக்கூடும். சிலபோது காகிதத் திட்டம் நிறுவப்பட்டபின், இதுவரையி லிருந்த பண வாட்டம் முடிவுற்றுச் செழிப்பு வரப்போகிற தென்று கருத்துத் தோன்றலாம். இதனால் முதல் பெயர்ச்சி நாட்டை நோக்கி நிகழலாம்.

உறுதியான மாற்றுவீதமுடைய பொன் திட்டம் கைவிடப் பட்டதால், காகிதத் திட்டத்தின் கீழ் மாற்று வீதங்கள் முறை யின்றி மாறும் என்று நினைக்கக்கூடாது. மைய பாங்கு மாற்று வீத அங்காடியை அதன் இச்சைப்படி விட்டு விட்டால்தான் இது நிகழும். பெரும்பாலும் மைய பாங்கு மாற்று அங்காடியைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கும். அயல்நாட்டுச் செலா வணிகளை அல்லது பொன்னைக் குறிப்பிட்ட மாற்று வீதத்தில் விற்க வேண்டும் என்கிற பொறுப்பு அதற்கு இல்லாவிட்டாலும் அது வேண்டும்போது தலையிட்டு ஒரு வீதத்தை நிலை நிறுத்த முயலலாம். கையிலுள்ள பொன்னையும் அயல்நாட்டு உண்டி யலையும் பொன் திட்டத்தின் கீழ் ஆண்டது போலப் பயன் படுத்தலாம்.

பொன் திட்டத்தைக் கைவிட்டதால் பொன்னுக்கு வேலை இல்லையென்பது சரியன்று. அது நாடுகளுக்கிடையே செலுத்தும் காலத்தில் பயன் உடையதாகும். எல்லாராலும் ஏற்கப்படும் சிறப்பைப் பொன் இழந்தால்தான் பயனற்றுப் போகும். காகிதச் செலாவணித் திட்டத்தினால் பொன் மதிப்பை இழப்பதாக இருக்காது. உண்மையில் பொன்னின் மதிப்பு (பணத்துக்கு மாற்றும் மதிப்பு) உயர்கிறது.

**காகிதத் திட்டத்தின் மதிப்பீடு**

மாற்று வீதத்தைக் குறிப்பிட்ட அளவில் நிலைப்படுத்த வேண்டிய பொறுப்பில்லாதபோது உள்நாட்டுப் பணத்துறைக் கைக்கோள் எதுவாகவும் இருக்கலாம். இதுவே காகிதத் திட்டத்தின் சிறப்பு.

ஆனால் தடையிலாத (மாற்று) வீத மாறுதல்கள் ஏன் விரும்பப்படுவதில்லை? உள்நாட்டுப் பொருளாதார நடவடிக்கைகள், புறச் சக்திகளின் ஆட்சியிலிருந்து ஏன் விடுதலை பெறக் கூடாது? பண்டங்களின் விலைகளைத் தேவை அளிப்பு நிலைக்கேற்ப மாற விடுபடுவது போல ஏன் அயல்நாட்டுச் செலாவணியின் விலையையும் தேவை அளிப்புக்கேற்ப மாறவிடக்கூடாது?

சுயேச்சையாகத் தடையின்றி மாறும் வீதத்துக்கு அநேக எதிர்ப்புகள் உள்ளன. எதிர்ப்புக்கு முக்கியமான அடிப்படைக் காரணம் மாற்று வீத நிலையின்மை வியாபாரத்தை நிலையற்ற தாக்கும்என்பதே. முக்கியமாகக் கீழ்க்கண்ட வாதங்கள் தடையிலாது மாறும் வீதத்துக்கு எதிராகக் கொடுக்கப் படுகின்றன.

1. சுயேச்சையாக மாறும் வீதம் உள்நாட்டுப் பொருளாதார நிலை பேற்றுக்கு முரண்பட்டது. ஏனெனில் மாற்று வீதத்தின் ஒவ்வொரு மாறுதலுக்கும் ஏற்ப அவ்வப்போது இறக்குமதிப் பண்டத்தின் விலைகளும் ஏற்றுமதிப் பண்டத்தின் விலைகளும் மாறிக் கொண்டேயிருக்கும். ஆகவே சுயேச்சை முறை உள் நாட்டுப் பொருளாதாரத்தைப் பாதிக்கும். மாறும் வீதச் சூழ்நிலை உள்நாட்டு நல நடவடிக்கைகளைத் தடையின்றி எடுக்க இடம் தருகிறது என்பது உண்மையாயினும், மாற்று வீதத்தில் பேரளவில் மாறுதல்கள் ஏற்படுமானால் அவை உள்நாட்டு நிலை பேற்றை (உள்நாட்டுப் பணத்துறை நடவடிக்கையின் முக்கியக் குறிக் கோளை)ப் பாழாக்கும். நிலையான மாற்று வீதமுடைய பொன் திட்டத்தை எதிர்ப்பவர்கள், அதன் கீழ் அயல்நாட்டுச் செலுத்து நிலையைச் சரி செய்வதற்கு நாட்டின் விலைகளும் வருமானங்களும் மாற வேண்டியிருக்கிறது என்றும், சுயேச்சை மாற்று வீதத்தின் கீழ் இவ்வித விளைவுகள் இல்லையென்றும், உள்நாட்டுப் பொருளாதார நிலைபேற்றுக்கும் புற நிலை பேற்றுக்குமுள்ள முரண்பாட்டை நீக்க மாறாத வீதத் திட்டத்தைக் கை விடுவது அவசியம் என்றும் கூறுகிறார்கள். ஆனால் அடிக்கடி மாறும் வீதத்தின்கீழ் ஏற்றுமதித் தொழில்களுக்கும் உள்நாட்டு நுகர்ச்சித் தொழில்களுக்கும் இடையில் இடைவிடாது சாதனங்கள் பெயர்ந்துகொண்டே இருக்க வேண்டியிருக்கும் என்பதையும், அதனால் உள்நாட்டுப் பொருளாதார நிலைபேறு இல்லாது போகும் என்பதையும் மறந்து விடுகிறார்கள்.

2. அயல்நாட்டுப் பேர மொன்றைச் செய்ய இரண்டு செலாவணிகளின் மதிப்புகள் நிலைபேறு உடையனவாக ஆக வேண்டியிருக்கிறது. மாறும் மாற்று வீதம், ஏற்கனவே பேரத்தில்

உள்ள ஆபத்தை அதிகப்படுத்துகிறது. எல்லாப் பேரங்களும் ஆபத்தையுடையனவாகையால், அயல்நாட்டுப் பேரம் மட்டும் ஆபத்தில்லாமலிருக்க வேண்டிய அவசியமில்லையென்று கூடுவது தவறு. அயல்நாட்டு வாணிபத்தில் சாதாரண வியாபாரி ஏற்கும் ஆபத்துகளோடு கூடச் செலாவணி மாற்றுக் காரணமாகவும் ஓர் ஆபத்தை ஏற்க வேண்டியிருக்கிறது. தவிர, மாற்று வீத மாறுதல் எல்லாப் பண்டங்களின் விலையையும் பாதிக்கிறது. ஆகவே ஒரு தனி விலை மாறுதலை விடக் கெடுதலை உடையது. பொன் திட்டத்தின் கீழ் நடவடிக்கை எல்லா விலைகளையும் பாதிக்கும் வடிப்பாகவோ, வீக்கமாகவோ செய்வது ஒரு குறை பாடாயின், மாறும் வீதமும் அதே குறைபாட்டை உடையது. மாற்று வீத மாறுதல் பேரளவாக இல்லாத வரையில் மாற்று வீதத்தில் உண்டாகும் ஆபத்துகளைச் சமாளிப்பதற்கு எதிர் நோக்கு மாற்று அங்காடியில் (forward exchange market) தற்காப்புப் பேரம் (hedge) செய்து கொள்ளலாம். ஆனால் இவ் வசதிக்காகச் செலுத்த வேண்டிய விலை ஏராளம். அதைவிட வீத மாறுதல் ஆபத்தையே தாங்கிக்கொள்ளலாம்.

3. மாற்று வீதங்கள் அடிக்கடி மாறுமானால் முதல் (Capital) அடிக்கடி நாடுகளிடையே பெயர்ந்து கொண்டேயிருக்கும். ஒரு நாட்டின் செலாவணி மதிப்பிழக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டால் அந்நாட்டின் முதல் பேரளவில் வெளியேறும். இப்படிப்பட்ட யூக வெளியேற்றம் செலாவணி மதிப்பிழப்புக்குக் காரணமாகும். இப்படி ஏற்படும் மதிப்பிழப்பு மீண்டும் யூகத்தைத் தூண்டும். மதிப்பிழப்பு குவிந்துகொண்டே போகும். இந்நிலையில் மாற்று வீதம் நிலையற்றதாகும். முடிவில் மாற்று வீதக் கட்டுப்பாடு அவசியமாகலாம், அல்லது மாற்று வீத நிலைபேறு நிதியை நிறுவி வீதத்தை நிலைபெறச் செய்ய வேண்டி வரலாம்.

4. மாற்று வீதம் அடிக்கடி மாறக்கூடிய நிலையில் ரொக்க விருப்பெச்சம் (liquidity Preference) அதிகமாகும். முதல் பெயர்ச்சியினால் இலாபம் அடைய விரும்புபவர்கள் தங்கள் பணத்தைக் கூடிய மட்டும் ரொக்கமாக வைத்திருப்பார்கள். ஒரு நாட்டின் செலாவணி சற்று மதிப்பிழக்கும் குறிப்புத் தோன்றின உடனே இவர்கள் முதல் பெயர்ச்சியில் ஈடுபடுவார்கள். ரொக்க விருப்பெச்சம் உயர்வது வட்டி வீதத்தை உயர்த்தி, முதலீட்டைப் பாதித்து, வேலைக் குறைப்பை ஏற்படுத்தக்கூடும்.

5. மாற்று வீத மாறுதல்கள் நீண்டகால அயல் நாட்டு முதலீட்டுக்குப் பெரிய தடையாக இருக்கக்கூடும். அயல்

நாட்டுக் கடன் பெரும்பாலும் கடன் கொடுக்கும் நாட்டின் செலாவணியிலே குறிப்பிடப்படுவது வழக்கமாயினும் கடன் வாங்கும் நாட்டின் செலாவணியின் மாற்று மதிப்பும் நிலை பேறுடையதாக இருப்பது நல்லது. இன்றேல் கடன் பளு அதிகமாகும். நிலைபேறு கடன் கொடுப்பவனுக்கும் நல்லது. அது அவனுக்கு நம்பிக்கையை ஊட்டும்.

மேற்கண்ட வாதத்துக்கு எதிரிடையான வாதங்களைப் பார்ப்போம்.

1. அயல்நாட்டுக் கடன்கள் கடன் கொடுப்பவனுடைய செலாவணியில் குறிப்பிடப்பட்டிருந்தால் அவன் முதலுக்கு ஆபத்தில்லை. கடன் கொடுத்தவனுடைய செலாவணியின் மதிப்பு இறங்குவதானால், அவனது நிலை உள்நாட்டில் முதலீடு செய்யும் போதுள்ளதைவிட மோசமாக இருக்காது.

2. கடன் பட்டவன் நாட்டின் செலாவணியின் மதிப்பிறக்கம் அவ்வளவு கேடுடையதன்று. அந்த நாடு கடனை (அயல்நாட்டு அங்காடியில் நிர்ணயிக்கப்பட்ட விலைகளையுடைய) ஏற்றுமதிப் பொருள்கள் மூலம் திருப்பிக் கொடுக்கும். அந்நாட்டின் கடன் பளு செலாவணி மதிப்பிறக்கத்தால் அதிகப்படுவது உண்மையாயினும் அதன் ஏற்றுமதியும், தன் பணத்தில் மாற்றும்போது, அதிகமான மதிப்புடையதாகிறது.

3. கடன்பட்ட நாடு குறிப்பிட்ட வட்டித் தொகை செலுத்தும் பொறுப்பை யுடையது. பாண்டு முதலியவைகளை விற்றுக் கடன் வாங்காமல் மாறும் இலாபப் பங்கீடு (dividend) உடைய பங்குகளை விற்றுக் கடன் வாங்கியிருந்தால் மாற்று வீதத்தில் ஏற்படும் மாறுதல்கள் கடன் பளுவை அதிகப் படுத்தாது. சுயேச்சையாக மாறும் மாற்று வீதம் நாடுகளுக்குள் கடன் பெயர்ச்சியைப் பாதிக்குமென்று கூறுவதற்கு எதிராகச் சிலர் பண்டப் பெயர்ச்சி இல்லாத காலத்தில் முதல் பெயர்ச்சி அவ்வளவு இருக்கவேண்டுமா என்று கேட்கிறார்கள்.

4. சுயேச்சையாக மாறும் வீதத்தின் விளைவாக மாற்று வீதக் கட்டுப்பாடுகள், மற்றும் பல தடைகள் எல்லாம் தோன்று கின்றன என்று குறை கூறப்படுகிறது. பொருத்தமற்ற மாற்று வீதத்தை ஆள்வதே இந்த விதக் கட்டுப்பாடுகளுக்கு முக்கியமான காரணமாகும். ஆகவே, மிகை மதிப்பு கட்டுப்பாட்டுக்குக் காரணமேயொழிய மாற்று வீத மாறுதல்கள் காரணம் அல்ல.

# 40. மாறும் மாற்று வீதத்தின் கீழ்ப் பணத்தின் மாற்று மதிப்புப் பற்றிய கோட்பாடுகள்

## (Theories of exchange value of money under Free Exchanges)

I. The Balance of Payments Theory: மாற்று வீதம் வாணிப இனங்களின் தேவை அளிப்புகளால் நிர்ணயிக்கப்படும் என்கிறது இக் கோட்பாடு. அயல்நாட்டுப் பணத்தின் விலை பண அங்காடியில் சுயேச்சையான தேவை அளிப்புச் சக்திகளால் நிர்ணயிக்கப்படுகிறது என்பது மாறும் வீதக் கோட்பாட்டின் கருத்து. இந்தச் சக்திகளின் பின்னணிக் காரணிகள் ஒரு நாட்டின் அயல் நாட்டுச் செலுத்தின் இனங்கள் (items in B.P)

ஆனால், செலுத்து நிலையின் இனங்கள் சுயேச்சையாகத் தோன்றுவன என்றோ, குறிப்பிட்ட அளவுடையன என்றோ நினைக்கக் கூடாது. உண்மையில் அந்த இனங்களின் வகையும் அளவும் மாற்று வீதத்தைப் பொறுத்தன. மாற்று வீதத்தோடும் பணக் கைக்கோளோடும் சம்பந்தமற்ற காரணிகளால் செலுத்து நிலை நிர்ணயிக்கப்படுகிறதென்று நினைப்பது தவறு. இரண்டுக்கும் உள்ள தொடர்பு இருபுறத் தொடர்பாகும். இனங்களின் காரணமாக மாற்று வீதம் நிர்ணயிக்கப்படுகிறது என்பது, செலுத்து நிலையால் பண வீக்கம் தோன்றும் என்ற தலைகீழான வாதத்துக்கு இடமாகும். உதாரணமாக, ஜெர்மனியில் செலுத்து 'நிலையில் ஏற்பட்ட சமநிலைக் கேடுதான் உள்நாட்டுப் பண வீக்கத்துக்குக் காரணம் என்று தலைகீழாகக் கருதப்பட்டது. அப்போது ஓர் ஆசிரியர் காரண காரியத்தைப் பின்வருமாறு விளக்கினார்: முதலில் நஷ்டஈடு செலுத்த வேண்டியதன் விளைவாகச் செலாவணியின் மதிப்பு இறங்கியது. இதன் விளைவாய் இறக்குமதிப் பண்டங்களின் விலைகள் ஏறின. இதனால் விலைகளும் கூலியும் ஏறின. இவ்வேற்றம் செலாவணித்

தேவையை அதிகப்படுத்தியது. ஆகவே நோட்டு உற்பத்தி அதிகப்படுத்தப்பட்டது. ஆகவே பண வீக்கம் விலை ஏற்றத்திற்குக் காரணமில்லை. மாற்று மதிப்புக் குறைந்தது விலை ஏற்றத்திற்குக் காரணம் என்றார். ஆக இக்கொள்கைப்படி அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை காரணமாக மதிப்பிறக்கமும் அது காரணமாக விலையேற்றமும் தோன்றியதாகக் காரண காரியத் தொடர்பு காட்டப்பட்டது. இது மாற்று வீதத்தைப் பற்றிய ஒரு வகைச் செலுத்துநிலைக் கோட்பாடு (Balance of payments theory). இந்த வகை, இயற்கைத் தொடர்பைத் தலைகீழாகக் கூறுகிறது. இந்தக் கொள்கையின் அடிப்படைக் கருத்து இறக்குமதித் தேவை பண மதிப்பு இறக்கத்திற்குக் காரணமாகும் என்பதாகும். ஆனால் அயல் நாட்டுப் பண்டங்களுக்குத் தேவை எவ்வளவு நிர்ப்பந்தமாக இருந்தாலும் செலுத்து வசதி இல்லாவிடில் இறக்குமதி ஏற்படாது என்பதை மறந்து விட்டனர். ஜெர்மனியில் கண்ட எல்லா விலை இயக்கங்களுக்கும் காரணமாயிருந்தது பணத்தின் தொகையும் பணத்தின் புழக்க வேகமும் அதிகப்பட்டதேயாகும். பண வீக்கம் இல்லாதிருந்தால் ஜெர்மனியில் மாற்று வீதம் தொடர்ந்து வீழ்ந்திருக்காது. பணப் பெருக்கம் நிறுத்தப்பட்டிருப்பின் விலைகள் ஏறுவது நின்றிருக்கும். மாற்று வீத வீழ்ச்சி ஏற்று மதியை அதிகப்படுத்தி இறக்குமதியைக் குறைத்து ஒரு புதுச் சமநிலையை உண்டாக்கியிருக்கும்.

ஆனால் இந்தப் போலிச் செலுத்துநிலைக் கோட்பாட்டுக்குச் சான்றுபோல ஒரு சிறு நிகழ்ச்சி காணப்பட்டது. அதாவது ஜெர்மனியினுடைய மாற்று வீதம் உள்நாட்டு விலை மட்டம் ஏறுவதற்கு முன்னாலேயே வீழ்ந்ததாகும். ஆனால் இதை எளிதில் விளக்கி விடலாம். ஜெர்மனியினுடைய வரவு செலவுத் திட்டம் பேரளவில் சமப்பாடு இழந்திருந்தது. காரணம் நஷ்டஈடு பாரமும், புதுப் பண உற்பத்தி மூலம் பட்செட் பற்றாக் குறையை ஈடு செய்ததுமாகும். நஷ்டஈடு செலுத்தவும், சிதைந்த பொருளாதாரத்தைத் திருத்துவதற்கு வேண்டியிருந்த இறக்குமதிகளுக்குச் செலுத்தவும், புதிதாக உற்பத்தி செய்யப்பட்ட பணம் பேரளவில் மாற்றங்காடியில் செலவு செய்யப்பட்டது. தவிர, தொடர்ந்து பண வீக்கம் இருக்கும் என்பதும் இது பண மதிப்பையும் குறைக்கும் என்பதும் எல்லோராலும் எதிர்பார்க்கப் பட்டது. இந்த எதிர்பார்ப்பு நிகழ்காலத்திலேயே மாற்று வீதத்தைப் பாதித்தது. ஆகவே உண்மையிலிருந்த வாங்குந் திறனை விடக் குறைவாகவே மாற்றங்காடியில் செலாவணிக்கு மதிப்பு தரப்பட்டது.

**வாங்கும் திறச் சமப்பாட்டுக் கோட்பாடு**
(The Purchasing Power Party theory)

குறிப்பிட்ட குறுங்காலத்தில் (short term) ஒரு நாட்டுப் பணத்தின் புற மதிப்பு, அப்போதுள்ள அங்காடியிலுள்ள தேவை அளிப்பு நிலைகளைப் பொறுத்தது. ஆனால் நீண்ட கால (long term) மதிப்பு நாணயங்களின் வாங்கும் திற விகிதா சாரத்தைப் (ratio of purchasing power) பொறுத்தது என்பது ஒரு கொள்கை. ஒரு குறிப்பிட்ட அளவு வாங்கும் திறனைப் பெற ஒவ்வொரு பணத்திலும் எவ்வளவு வேண்டியிருக்கிறதோ அந்த வீதத்தில் பணங்களுக்கு இடையில் மாற்று வீதம் இருக்கும் என்று இது கூறுகிறது.

ஒரு நாட்டுப் பணத்தின் மதிப்பு அந்நாட்டின் விலை மட்டத்தால் நிர்ணயிக்கப்படும். இப்படி நிர்ணயிக்கப்படும் மதிப்பை உள்நாட்டு மதிப்பு என்று கூறினால், அப்பணத்தின் அயல்நாட்டு மதிப்பு அயல் நாட்டு விலை மட்டத்துக்கும் இந்நாட்டு விலை மட்டத்துக்குமுள்ள விகிதாசாரத்தைப் பொறுத்தது என்று கூறலாம். ஒரு நாட்டின் பண மதிப்பு அந்நாட்டு விலை மட்டத்தைப் பொறுத்ததாகவே, இரண்டு பணங்களுக்கிடையே மாற்று மதிப்பு இரு உள்நாட்டு விலை மட்டங்களுக் கிடையே யுள்ள விகிதத்தைப் பொறுத்திருக்கும். இதுவே வாங்கும் திறன் சமப்பாடுக் கோட்பாட்டின் கருத்து. இந்தியாவில் ஒரு பண்டம் 15 ரூபாய் விலையானால், அதே பண்டம் இங்கிலாந்தில் ஒரு பவுண்டு விலையானால், இரண்டு நாணயங்களும் மாறும் வீதம் 15 ரூபாய்=1 பவுண்டு என்று கூறலாம். இந்த இரண்டு நாடுகளின் விலை மட்டங்கள் மாருது ஒரு நிலையில் இருக்கும்போது மாற்று வீதம் 16 ரூபாய் = 1 பவுண்டு என்று ஆகுமானால், பவுண்டின் வாங்கும் திறன் இங்கிலாந்தில் இருப்பதைவிட இந்தியாவில் அதிகமாக இருக்கிறது என்று தெரிகிறது. ஆகவே மக்கள் பவுண்டை ரூபாயாக மாற்றுவார்கள். மாற்றிய ரூபாயைக் கொண்டு இங்கிலாந்தில் ஒரு பவுண்டு மதிப்புடைய பண்டத்தை 15 ரூபாய்க்கு வாங்கி, இங்கிலாந்தில் 1 பவுண்டுக்கு விற்று, ஒரு ரூபாய் இலாபம் அடைவார்கள். இந்த ஆர்பிட்ரேஜ் நடவடிக்கை ரூபாய்க்குள்ள தேவையை உயர்த்தி மாற்று வீதத்தை மீண்டும் 15 ரூபாய்க்கு ஒரு பவுண்டு என்று திருத்திவிடும்.

முதல் உலகப் போரின்போதும் அதன் பிறகும் கஸ்டவ் கேசல் (Gustav Cassel) என்ற பொருளாதார நிபுணர் இந்தக் கோட் பாட்டை வற்புறுத்தி எழுதினர். நாடுகளின் விலை மட்டங்கள் மாறும் விகிதத்தில் அவைகளின் பண மாற்று வீதமும் இருக்கும்

என்பது இவருடைய சித்தாந்தம். ஒரு நாட்டின் விலை மட்டம் ஏறினால் அதன் பணத்தின் மாற்று மதிப்பு அதே விகிதத்தில் குறையும் என்றார். உதாரணமாக, வெளி நாடுகளில் விலை மட்டம் மாறாதிருக்கும்போது இந்திய விலைகள் மட்டும் இரு மடங்கானால் ரூபாயின் மதிப்பு முன்னில் பாதியாக ஆகும். என்றார். இப்படிக் கூறியதோடு மன்றி, விலை மட்ட மாறுதல்கள் வீத மாறுதலுக்குக் காரணம் என்றும், வீத மாறுதல்கள் விலை மட்டத்தை நிரந்தரமாகப் பாதிக்கும் சக்தி உடையன அல்ல என்றும் கருதினார்.

கேசலுடைய கொள்கை அவர் எழுதிய ஆண்டுகளில் செல்வாக்குடையதாக இருந்தது. அந்த ஆண்டுகளில் மத்திய ஐரோப்பாவில் ஒவ்வோர் அரசாங்கமும் பற்றாக்குறை பட்செட் உடையதாயிருந்தது. அதோடு காகிதப் பணத்தின் தொகை பெருகிக் கொண்டும், விலைகள் தொடர்ந்து ஏறிக்கொண்டும், நாட்டுப் பணத்தின் புறமதிப்பு தொடர்ந்து இறங்கிக்கொண்டும் இருந்தன. ஆனால் அரசாங்கங்கள் கொடுத்த விளக்கம் வருமாறு: நஷ்டஈடுச் செலுத்தும், யூக முதல் பெயர்ச்சியும் இருந்ததனால் மதிப்பிறக்கம் ஏற்பட்டது என்றும், பணத்தின் மதிப்பிறக்கம் விலை ஏற்றத்திற்குக் காரணம் என்றும், இந்த விலையேற்றம் அரசாங்கத்தின் செலவு வருமானத்தை விட அதிகப் படுவதற்குக் காரணமாக இருந்தது என்றும், ஆகவே தங்களுடைய பட்செட்டுகளைச் சமன் செய்ய முடியாதென்றும், அதனால் பணத்தை உற்பத்தி செய்ய வேண்டிய தேவை ஏற்பட்டதென்றும், பணத்தின் புற மதிப்பு வீழ்ச்சி தடுக்கப் பட்டாலொழியத் தாங்கள் பணப் பெருக்கத்தின் மூலம் பட்செட்டுகளைச் சமப்படுத்துவது தவிர்க்க முடியாது, என்றும் கூறின. கேசலுடைய வாதம் சரியானதாயின் இந்த அரசாங்க வாதம் தவறானது. அவர் விளக்கப்படி, எடுக்க வேண்டிய நடவடிக்கைகளில் பட்செட் சமப்பாடு, முதல் நடவடிக்கையே யொழியக் கடைசி நடவடிக்கை அன்று. பட்செட் ஒழுங்கு பட்டால் பண உற்பத்தி நின்று விலை ஏறுவது நின்று விடும். கேசலுடைய கருத்தை அக்காலத்திய நிபுணர்கள் ஒப்புக் கொண்டார்கள். அக்காலத்திய நிகழ்ச்சிகளும் அவர் வாதத்துக்குச் சான்று தருவது போல் இருந்தன. பட்செட்களைச் சரிப்படுத்த வேண்டிய தியாகத்தை மக்கள் செய்தால் ஒழிய, பணத்தின் மதிப்பிறக்கத்தைத் தடுக்க முடியவில்லை.

**வாங்கும் திறன் சமப்பாட்டுக் கொள்கையின் குறைபாடுகள்**

1. அயல்நாட்டுச் செலாவணிக்குத் தேவை செலாவணிகளின் பொருள் வாங்கும் திறனை மட்டும் பொறுத்தது என்று

கூற முடியாது. ஏனென்றால், அயல்நாட்டுச் செலாவணி கடனைத் திருப்பிக் கொடுக்கவும் அல்லது கடன் கொடுக்கவும் தேவைப்படலாம். இந்தக் கோட்பாடு வர்த்தக இனங்களை (trade items) மட்டும் கருதுகிறது; முதல் இனங்களைப் புறக்கணிக்கிறது. கடன் சம்பந்தமான பொறுப்புகள் (முதலைத் திருப்பித் தருதல், வட்டி செலுத்தல்) பொருள் வாங்கும் திறன் தொடர்பால் பாதிக்கப்படுவன அல்ல. இந்தப் பொறுப்புகள் மாற்று வீதம் எந்த நிலையில் இருந்தாலும் தீர்க்கப்பட வேண்டியவை. கடன் வாங்குதல் வீதத்தைப் பாதிக்கும். ஆகவே நாடுகளுக்குள் வர்த்தக இனங்கள் எவ்வளவு முக்கியமானவை என்பதைப் பொறுத்தது இந்தக் கொள்கையின் விளக்க சக்தி.

2. இந்தக் கொள்கை விலைகளுக்கும் (prices) மாற்று வீதங்களுக்கும் (exchange rates) இடையில் உள்ள இருமுகத் தொடர்பைப் புறக்கணிக்கிறது. இக் கொள்கைப்படி விலைகள் தான் மாற்று வீதத்தை நிர்ணயிப்பதாகத் தெரிகிறது. உண்மையில் எதிர் முறையான தொடர்பும் காணப்படுகிறது. விலைகள் வீதத்தைப் பாதிக்கின்றனவா அல்லது வீதங்கள் விலைகளைப் பாதிக்கின்றனவா என்ற கேள்வி அனைத்தும் ஒரே திசையில் ஒரே அளவு மாறினால்தான் முக்கியமல்லாத கேள்வி யாகும். ஆனால் உண்மையில் இப்படி மாறுவதில்லை.

3. இரண்டு நாடுகளுக்கிடையே பொருளாதாரத் தொடர்புகள் மாறக்கூடும் என்பதையும், ஆகவே, நாட்டு விலைகள் மாறு விட்டாலும், சமநிலை மாற்று வீதம் மாறக்கூடும் என்பதையும் இந்தக் கொள்கை கவனிக்கவில்லை. மூன்றும் நாடு ஒன்று இவைகளோடு வாங்கவோ, விற்கவோ போட்டியிட வந்தால் இந்த இரண்டு நாடுகளுடைய வாணிபத் தொடர்பும் பாதிக்கப்படும்.

4. அயல்நாட்டுச் செலாவணியை வாங்கும் ஒருவன் அந்தச் செலாவணியைக் கொண்டு அயல் நாட்டில் வாங்கக் கூடிய எல்லாப் பொருள்களின் விலைகளைப் பற்றிக் கவலைப்பட மாட்டான். இரு நாடுகளுக்குள்ளும் வாணிபத்தில் இடம் பெறும் இனங்களில் மட்டும்தான் அவன் அக்கறை உடையவன். சில விலைகள் வெளிநாட்டுக்கு ஏற்றுமதி செய்யக்கூடாத பண்டங்களின் விலைகள்; உள்நாட்டுப் பேரத்தில் மட்டும் தான் குறிப்பு உடையன. இது காரணமாக உள்நாட்டு வாணிபத்தில் வாங்கப்படும் பண்டங்களை விட்டு விட்டு மற்றதை மட்டும் கவனிக்க வேண்டுமென்று கூறமுடியுமா? நிற்க, கச்சாப்

பொருள்கள், பயிர்ப் பொருள்கள் ஆகியவற்றின் விலைகள் உலக அங்காடியில் நிர்ணயமாகின்றன. உலகத் தேவை அளிப்பு நிலைகளைப் பொறுத்தன. இந்த விலைகள் டாலர் அல்லது பவுண்டு நாணயத்தில் குறிப்பிடப்படுகின்றன. அவை அவ்வப் போதுள்ள மாற்று வீதத்தில் தனி நாட்டு நாணயங்களில் மாற்றிக் கூறப்படுகின்றன. இப்படி நடக்கும் மாற்றுகள் மாற்று வீதத்தை நிர்ணயிப்பதில்லை. சில பண்டங்கள் அயல்நாட்டு வாணிபத்தில் இடம் பெறுவது அவைகளின் விலையைப் பொறுத்தது. உள்நாட்டு நாணயத்தில் குறிக்கப்பட்ட ஒரு விலையை அயல்நாட்டு நாணயத்தில் மாற்றிப் பார்க்கும்போது அது அயல்நாட்டில் போட்டியிடக் கூடிய விலையாக இருந்தால் இப் பண்டம் வாணிபத்தில் இடம் பெறும். உள்நாட்டு விலையிலோ அல்லது மாற்று வீதத்திலோ மாறுதல் ஏற்பட்டால் இதுவரை வாணிபத்தில் இடம் பெருத பண்டம் இப்போது இடம் பெறலாம் அல்லது இடம் பெற்ற பண்டம் இடத்தை இழக்கலாம். ஆகவே இந்தக் கொள்கைப்படி இரண்டு நாணயங்களின் வாங்கும் திறனை ஒப்பிடும்போது இப்படி மாறக் கூடிய நிலையையும் கருதவேண்டும்.

5. இரண்டு நாடுகளின் விலைக் குறியீட்டெண்களை ஒப்பிட்டுச் சமநிலை மாற்று வீதத்தை முடிவு செய்வதற்கும் வழியில்லை. குறியீட்டெண்கள் விலை மட்டம் அல்லது பணத்தின் மதிப்பு ஒருபோது எவ்வளவு என்று நிர்ணயிக்கப் பயன்படா. குறியீட்டெண்கள் குறிப்பிட்ட ஒரு காலத்துக்கும் மற்றொரு காலத்துக்கும் இடையில் ஏற்பட்ட விலை மாறுதல்களின் சராசரி மாறுதலையே காட்டப் பயன்படும். இரண்டு நாடுகளின் விலை மட்டங்கள் வெவ்வேறு போக்குடையனவாகப் புள்ளிகள் காட்டலாம். இதைக் கொண்டு ஒரு சமநிலை வீதத்தைப் பற்றி முடிவுக்கு வருவது அவசர புத்தியாகும். அடிப்படைக் காலத்தில் இருந்த வீதம் சமநிலை வீதமாக இருந்தது என்று கொள்ளக் கூடுமாயினன்றித் தற்காலிக விலை மட்டப் போக்கைக்கொண்டு எந்த முடிவுக்கும் வரமுடியாது.

6. இரண்டு நாடுகளின் இடையேயுள்ள மாற்று வீதம் இரண்டு நாடுகளின் விலை மட்டங்கள் மாருதிருந்தபோதிலும் தேவை மாறுதலால் பாதிக்கப்படலாம். வாங்கும் திறன் சமப்பாடுக் கொள்கை விலை மாறுதலை மட்டும் கவனிக்கிறது; தேவை விலையைப் பொறுத்ததாகக் கருதுகிறது; வருமானம், செலவு ஆகியவற்றில் மாறுதல் தேவையையும், வாணிபத்தையும் பாதிக்கும் என்பதைப் புறக்கணிக்கிறது. வாணிப மந்தக்

காலத்தில் பண்டங்களின் அளிப்பும் சாதனங்களின் அளிப்பும் பேரளவு நெகிழ்ச்சியுடையவைகளாக இருக்கலாம். ஆகவே தேவையில் அதிக மாறுதல் இருந்தும் விலையில் யாதொரு மாறுதலும் ஏற்படாமல் இருக்கக் கூடும். விலையை மட்டும் கவனிப்பது தவறு.

ஆகவே வாங்கும் திறன் சமப்பாடு கொள்கையைக் கொண்டு சமநிலை வீதத்தைக் கணிக்க முடியாது. ஆயினும் வேறு ஒன்றும் புலப்படாதபோது இது ஒரு வழி காட்டியாக இருக்கக் கூடும். விலை மாறுதல்கள் இவ்வித மாறுதல்களுக்கு முக்கியமான ஒரு காரணி என்பதை மறுக்க முடியாது. ஆனல் மேற்கண்ட காரணங்களால் அதை அடிப்படையாக வைத்துக் கொண்டு முடிவு செய்ய முடியாது. நாட்டினுடைய சமநிலை வீதத்தை நிர்ணயிக்கும் அளிப்பு தேவை நிலைகள் பல வகையானவை.

**சமநிலை மாற்று வீதம்** (The Equilibrium Rate of Exchange)

நாடுகள் மாருத வீதத்துக்கோ அல்லது அடிக்கடி மாறும் மாற்று வீதத்துக்கோ இரண்டுக்கும் தயாராக இல்லாதபோது ஒரு நடுப்பட்ட முறை தேவையாக இருக்கிறது. இதற் கேற்ற முறை, பெரும் சிரமமின்றி நிலைப்படுத்தக் கூடிய வீதத்தை ஒரு நாடு பின்பற்றி, நாட்டின் செலுத்து நிலையில் அடிப்படைச் சமநிலைக் கேடு உண்டானபோது அதைத் திருத்திக் கொள்ளலாம். விரும்பிய நிலைபேற்றைப் பெறப் பணத்துறை அதிகாரிகள் மாற்று அங்காடியில் தலையிட்டு அயல்நாட்டுச் செலாவணியை வாங்கவோ விற்கவோ செய்யவேண்டுமே தவிர, அயல்நாட்டுப் பேரங்களைக் கட்டுப் படுத்தக் கூடாது. மாற்றுக் கட்டுப்பாடு (exchange control) முதல் பெயர்ச்சி காரணமாகச் சமநிலைக் கேடு ஏற்படும் போது ஆளப்படலாம். நடப்புப் பேரங்கள் எந்தவிதத் தடைக்கும் உட்படக் கூடாது. பணத்துறை அதிகாரிகள் அங்காடி இயல்பான முறையில் செயல்பட உதவவேண்டுமே யொழிய அதைக் கட்டுப் படுத்தக் கூடாது. இப்படி அங்காடியைத் திருத்துவதற்குப் போதிய அளவு அயல்நாட்டுச் செலாவணியோ பொன்னே பணத்துறை அதிகாரிகளிடம் இருக்க வேண்டும்,

இப்படிப்பட்ட நடுநிலை முறையில் நிறுவப்படும் மாற்று வீதம் ஏறக்குறைய சமநிலை (equilibrium) தரக்கூடிய வீதமாக இருக்கவேண்டும். இந்த வீதத்தில் நெடுங் காலத்தி லாவது நாட்டின் செலுத்து நிலை சம நிலை காணக் கூடியதாக இருக்கவேண்டும். குறுங் காலத்தில் பொன் ரிசர்வு

இழக்கப்படலாம், பெறலப்படலாம். நெடுங்காலத்தில் ரிசர்வில் சராசரிச் சமநிலை ஏற்படுவதாக இருந்தால்போதும், சமநிலை மாற்று வீதம் என்பதற்குக் கீழ்க் கண்டவாறு நர்க்சி (Nurkse) இலக்கணம் கூறுகிறார். "குறிப்பிட்ட காலப் பகுதியில் எந்த வீதம், பன்னாட்டுச் செலாவணி இருப்பில் நிகர மாறுதல் ஒன்று மின்றி, செலுத்துச் சமநிலை நிலைபெறச் செய்கிறதோ அது சமநிலை மாற்று வீதம் எனப்படும்." மாறாத வீதத் திட்டத்தின் கீழ் உள்நாட்டு வருமானமும் வேலையும் மாறுவது மூலமும் இந்த வீதச் சமநிலை ஏற்படுகிறது. உள்நாட்டுப் பொருளாதார நலத்தைக் கைவிட்டே அயல்நாட்டுச் செலுத்தில் சமநிலை ஏற்படுகிறது. ஆகவே, நாம் விரும்பும் சமநிலை வீதம் பிற நாடுகளிலுள்ளதைவிட அதிகமான வேலையின்மையை உண்டாக்காது செலுத்துச் சமநிலை தரும் வீதமாயிருக்க வேண்டும். சமநிலை வீதத்துக்குரிய அம்சங்களாவன:

1. உள்நாட்டுப் பொருளாதாரம் சராசரியில் நிலை பேருடையதாக இருப்பதற்கு முரண்பட்ட வீதமாக இருக்கக் கூடாது. அதாவது மற்ற நாடுகளில் காணப்படுவதைவிட அதிக வேலையின்மையை உண்டாக்கக் கூடாது.

2. இந்த வீதத்தை நெடுங்காலத்தில் நிலைப்படுத்துவதற்குத் தன்னிடமுள்ள அயல்நாட்டுச் செலாவணி அல்லது பொன் ரிசர்வைக் காலி செய்யவேண்டிய அவசியம் இருக்கக் கூடாது. அல்லது உள்நாட்டுச் செலாவணியைக் குறைக்க வேண்டிய தேவை இருக்கக்கூடாது. ஏனெனில் இது முதலில் கூறிய அம்சத்துக்கு முரணாக இருக்கும்.

3. இந்த வீதம், போட்டியிட்டு நிறுவும் குறை மதிப்பு (under-valuation) வீதமாக இருக்கக்கூடாது. மற்ற நாடுகளின் வேலை, செலவு, தேவை முதலியவற்றுக்குப் பொருந்துவதாக இருக்க வேண்டும்; அவைகளைப் புரட்டும் நோக்கமுடைய வீதமாக இருக்கக் கூடாது. அயல்நாட்டுப் போட்டியில் நியாயமற்ற சக்தியை இது கொடுக்கக்கூடியதாக இருக்கக் கூடாது.

இந்த மூன்று வித நிபந்தனைகளையும் பூர்த்தி செய்யாதிருக்கிறதென்று தெரியும் ஒரு வீதத்தை உடனே கைவிட்டுப் புது வீதம் நிறுவப்பட வேண்டும். இது மறுபடியும் பொருத்தம் இல்லாது காணப்படும் சூழ்நிலை வந்தபோது மாற்றப்பட வேண்டும். இந்த விதமாகச் சூழ்நிலைக்கேற்ப வீதம் மாற்றப்படும் முறையையே நெகிழ்ச்சி மாற்றுவீத முறை என்கிறோம். நெகிழ்ச்சி என்பது, மாறும் சூழ்நிலைக்கேற்ப வீதம் நிர்ணயிக்கப்

படும் என்பதைக் குறிப்பிடுகிறது. இது பொன் திட்டத்தில் உள்ள குறையையும், சுயேச்சையாக வீதம் மாறும் திட்டத்தின் குறையையும் தவிர்க்கிறது.

மேற்கண்ட நடுநிலை முறையை ஆள்வதில் உள்ள சிக்கல் என்னவெனில் சமநிலை வீதம், அடிப்படைச் சமநிலைக் கேடு, மிகை மதிப்பு, குறைமதிப்பு, போட்டி, மாற்று மதிப்பு, இறக்கம் என்ற சொற்றொடர்களின் பொருளை வரையறை செய்ய முடியாமையாகும்.

சமநிலை வீதம் என்பதை எப்படிக் கண்டுபிடிப்பது? நீண்ட கால மாற்றுக் கட்டுப்பாட்டுக்குப் பின் இந்த வீதத்தை எப்படி நிர்ணயிப்பது? பணத்துறை அதிகாரிகள் மாற்று அங்காடியில் விற்பது வாங்குவது மூலம், மாற்று வீதத்தை ஒரு நிலையில் வைத்திருந்தார்களேயானால், இனித் தலையிடுவதில்லை என்று விட்டுப் பார்த்தால் வீதம் சமநிலை யானதா அன்று என்பது தெரியவரும். செலுத்து நிலையில் பாதகமான சூழ்நிலை இருக்குமானால் அயல்நாட்டுச் செலா வணியின் விலை ஏறும்; அதாவது தன்னாட்டுப் பணத்தின் புற மதிப்பு இறங்கி முடிவில் ஒரு சமநிலைக்கு வரும். இப்படிச் சமநிலை வீதத்தைக் கண்டுபிடிக்கலாம். ஆனால் இந்த முறை சரியானதன்று. இடைக்காலத்தில் நிகழும் வீத மாறுதல்கள் முதல் பெயர்ச்சிக்குக் காரணமாக இருக்கும். யூக சக்திகள் வேலை செய்து யூகிகள் எதிர்பார்த்த வீதங்களை உண்டாக்கும். ஆகவே இந்தச் சூழ்நிலையில் இயற்கையான ஒரு வீதம் காணப்படும் என்பது கடினம்.

அங்காடிச் சக்திகள் தாமே நாளடைவில் ஒரு வீதத்தை நிர்ணயிக்க விடுவது கடன் கொடுக்கும் நாடுகளுக்கு நன்மை தரலாம். இந்நாடு தன்னுடைய நடப்புக் கணக்கில் பேரளவு சமநிலைக் கேட்டை அடையும்போது இந்த முறையைக் கையாள லாம். அதன் செலாவணி, மதிப்பிறக்கம் (depreciation) அடையுமானால் இது கடன்பட்ட நாடுகளைக் கடனைத் திருப்பிக் கொடுக்கத் தூண்டும். ஏனெனில் கடன் கொடுத்த நாட்டின் செலாவணியில் எழுதப்பட்ட கடனைக் குறைந்த தொகையில் கடனாளி நாட்டின் செலாவணியில் பைசல் செய்யலாம். கடனாளி நாடு இப்படி மதிப்பிழந்த கடன் கொடுத்த நாட்டுப் பணத்தை வாங்கும்போது, கடன்பட்ட நாட்டுப் பணத்தின் மதிப்புயரும்.

ஆயினும் தற்காலிகமாகத் தலையிடாமை மூலம் சமநிலை வீதத்தை நிர்ணயிக்கலாம் என்பது சரியான முறையன்று. புதுச்

சமநிலை வீதத்தைத் தூண்டும் காலம் பெரும்பாலும் குழப்பமான காலம். அந்தக் காலத்தில் ஏற்படும் சக்திகளை நம்பிப் புது வீதத்தைக் கண்டுபிடிப்பது முடியாது.

### சமநிலை வீதத்திற்கு வேறு அடையாளங்கள்

சமநிலை வீதம் என்பது, செயற்கையாக ஏற்றுமதிக்குத் தூண்டுதல் தராத நடு நிலை வீதம் என்று கூறப்படுகிறது. அப்படியானால் நாட்டினுடைய ஏற்றுமதி இறக்குமதி நிலையை, மாற்று வீதம் சமநிலையிலிருந்து விலகியலற்கு அறிகுறியாக வைத்துக்கொள்ளக் கூடுமா? ஒரு காலத்தில் நிகழ்ந்த ஏற்றுமதி இறக்குமதியைப் பின் நோக்கிப் பார்த்து, அது வீதத்தின் இறக்கத்தால் தூண்டப்பட்டதா அல்லவா என்று ஒருவாறு தெளியக்கூடும். ஆனால் ஏற்றுமதியும் இறக்குமதியும் அநேக காரணிகளுக்குட்பட்டவை. இவைகளில் எது முக்கிய மானது என்பது வரலாற்றை அலசிப் பார்த்து அறிய வேண்டிய ஒன்று. வாங்கும் திறன் சமன் சோதனையை (test) ஆண்டும், கண்டுபிடிக்க முடியாத (சமநிலை வீதத்திலிருந்து வேறுபடும்) வீத விலக்குகளை (deviations) ஏற்றுமதி நிலையைக் கொண்டு கண்டுபிடிக்க முடியும் என்று நினைப்பதற்கில்லை.

அடுத்தபடி, ஒரு நாட்டின் அயல்நாட்டுச் செலாவணி அல்லது பொன் ரிசர்வு குறைவதை அந்நாட்டின் செலுத்து நிலையில் சமநிலைக் கேட்டைக் காட்டும் அடையாளமாகக்கொள்ளக் கூடுமா? அயல் செலாவணி இழப்பு, நம் நாட்டுப் பணத்தின் மதிப்பு செயற்கையான உயர்ந்த மட்டத்திலிருப்பதைக் காட்டும். பொன் அல்லது அயல்நாட்டுச் செலாவணி இருப்பிழப்பு நேரிடும் போது வீதம் மாற்றப்பட வேண்டுமென்று கூறலாம். ஆனால் இந்த யோசனை அவ்வளவு திருப்தியானது அன்று. அயல் நாட்டுச் செலாவணியில் ஒரு நாட்டுக்கு எவ்வளவு இருப்பு இருக்க வேண்டுமென்பதை நிர்ணயிப்பது கடினம். இதை நிர்ணயித்தாலன்றி எந்த அளவுக்கு இருப்பு மாறினால் மாற்று வீதம் மாற்றப்பட வேண்டும் என்று நிர்ணயிக்க முடியாது. அயல்நாட்டு இருப்புப் பொன்னாக அல்லது அயல்நாட்டுச் செலாவணியாக மட்டும் இருப்பதாக நினைக்கக்கூடாது. அயல் நாட்டில் கடன் வாங்கும் வசதியையும் இருப்பாகக் கருதலாம். கடன் வாங்கும் வசதிகள் அல்லது கடன் பேரங்கள் பொருள் பேரங்களின் மற்றொரு பங்கமாகும். முன்னர்ப் பொன் வெளிப் பெயர்ச்சிக்குப் பதிலியாகக் குறுங்கால முதல் வரவு, சமநிலை செய்யும் காரணியாக இருக்கலாம் என்று (பொன் திட்டத்தின்

கீழ்ப்) பார்த்தோம். அயல்நாட்டுக் கடன்கள், வாங்கும் நாடுகளுக்கு அயல்நாட்டில் இருப்புக் குறைவதற்குச் சமமாகும். நாட்டின் பொன் வெளியேறினாலும், அயல்நாட்டுக் குறுங்காலக் கடன் உள் வந்தாலும் நாட்டின் அயல்நாட்டு நீர்மை நிலை (liquidity) குறைகிறது. ஏனெனில் அயல்நாட்டுக் குறுங்காலக் கடன் திடீரென்று வெளியேறக் கூடும். ஆகவே அவை பொன் இருப்பு வெளியேறுவதற்குக் காரணமாக இருக்கக் கூடும்.

நெடுங்கால அயல்நாட்டுக் கடன் தொகையை நாட்டின் அயல்நாட்டு இருப்பாகக் கருதக்கூடாது. இக் கடன்கள் (தற்காலிகமாகவன்றி) செலுத்து நிலையில் சமநிலைக் கேட்டை உண்டாக்கக்கூடியன. அரிதாயன்றி இவ்வித நெடுங்கால முதல் பெயர்ச்சிகள் தொடர்ந்து நீண்டகாலம் நடக்கக்கூடியன. ஆகையால் வெளியோட்டம் இருக்கும் காலத்துக்கு வேண்டிய சமநிலை வீதமும் உள்ளோட்டம் இல்லாத காலத்துக்குரிய சமநிலை வீதமும் ஒன்றாக இரா. இரண்டுக்கும் ஒரே வீதம் பொருந்தும் என்று நினைக்கக்கூடாது. நீண்டகால முதல் ஓட்டம் ஒன்று திடீரென்று நின்றுவிட்டதாக வைத்துக்கொள்வோம். கடன் பட்ட நாடு அப்போது செலுத்து நிலையில் பெரும் சிக்கலைக் காணும். இதுவரையில் தன் பொருளாதாரத்தைச் செலுத்தி வருவதற்கு உதவியாயிருந்த கடன் திடீரென்று நின்றுவிட்டால் சிக்கல் ஏற்படும். கடன் கொடுத்த நாடும் இதுவரையில் ஏற்றுமதி அதிகமாய் எச்சமாய் இருந்த நிலையிலிருந்து, ஏற்றுமதி குறைந்த நிலைக்கு மாறுவது கடினமாக இருக்கும். இந்த நிலையில் வீதத்தை மாற்றுவது அவசியமாக இருக்கலாம்.

அயல்நாட்டுச் செலாவணி இருப்பு எவ்வளவு வேண்டும் என்பதை நிர்ணயிக்கக்கூடுமாயினும், எந்த அளவுக்கு மாறுதலை அனுமதிப்பது என்று நிர்ணயிக்கக்கூடாதாயின் சமநிலை வீதத்தை அயல்நாட்டுச் செலாவணி இருப்பு அடிப்படையில் நிர்ணயிப்பது எளிதாகாது. ஏனெனில், இருப்பு வைத்திருப்பதன் நோக்கம் வேண்டும்போது பயன்படுத்துவதாகும். இப்படி வேண்டும்போது பயன்படுவதைக் கெடுதலாக நினைக்க நியாயம் இல்லை. இருப்பு எவ்வளவு காலம் தாங்கும் என்பதே கருத வேண்டியது. ஒரு குறிப்பிட்ட காலத்தை அடிப்படையாகக் கொண்டு அந்தக் காலத்தில் ஏற்படும் செலுத்துநிலை மாறுதல்களைச் சமாளிக்கும் அளவுக்கு அது இருக்கவேண்டும் எனலாம்.

தவிர, செலுத்துநிலைக் கேட்டால் ரிசர்வு குறைந்து கொண்டே போகுமானால் செலுத்துநிலை மீண்டும் திருப்தியான

நிலை அடையும் வரைக்கும் தாங்கக்கூடிய ரிசர்வாக இருக்க வேண்டும் என்றும் கூறலாம்.

எவ்வளவு ரிசர்வு வைத்திருக்க வேண்டும் என்பதை நிர்ணயிக்கும்போது பணத்துறை அதிகாரிகள் எவ்வளவு நீண்ட காலத்தைக் கருத வேண்டும்? பருவ மாறுதல்கள் சம்பந்தமாக ஏற்படும் இழப்புகளை மட்டும் கருதிக் காலத்தை வரையறுக்கக் கூடாது. வாணிபச் சுழல் காரணமாக ஏற்படக்கூடிய இழப்புகளையும் கருத வேண்டும். ஆனால் இந்த ரிசர்வு அளவை ஒரு நாட்டிலுள்ள ரிசர்வு நிலையையும் கருதியே தீர்மானிக்க வேண்டும். ரிசர்வு நிறைய இருக்குமானால் ஒரு நாடு தன் செலுத்து நிலையில் தற்காலிகக் கேடு உண்டானால் அதைப் பற்றிப் பொருட்படுத்தாமல் இருக்கக்கூடும். ரிசர்வு அற்பமாய் இருக்குமானால் அந்த நாடு பணச் சுருக்கத்தின் மூலம் சிறு காலத்தில் செலுத்து நிலையில் சமநிலை உண்டாக்க முயலலாம், அல்லது வாணிபத் தடைகளை ஆளலாம், அல்லது பணத்தின் மதிப்பைக் குறைக்கலாம். ஆகவே எவ்வளவு ரிசர்வு இருக்கிறது என்பதைப் பொறுத்தே சமநிலை வீதமும் நிலைப்படுத்த எடுக்கப்படும் நடவடிக்கையும் தீர்மானிக்கப்படும்.

ரிசர்வு போதுமானதா என்பது பல நாடுகளின் கைக்கோள்கள் எவ்வளவு தூரம் ஒருமைப்பாடுடையன என்பதையும் பொறுத்தது. வேறுபட்ட கைக்கோள்களாயின் அதிக ரிசர்வு வேண்டியிருக்கும்.

செலாவணி ரிசர்வு போதுமா என்பது உள்நாட்டுப் பொருளாதாரக் கொள்கையையும் பொறுத்தது. உள்நாட்டு விளைவைப் பற்றிக் கவலைப்படாமல் ஒரு நாடு பன்னாட்டுச் சமநிலை ஏற்படுவதற்கு வேண்டிய நடவடிக்கைகளைப் பின்பற்றத் தயாராயிருக்குமானால் அது தன்னுடைய அயல்நாட்டுச் செலாவணி ரிசர்வைத் தக்க நடவடிக்கையால் காப்பாற்றிக் கொள்ளலாம். ஆனால் உண்மையில் நாடுகள் உள்நாட்டு வேலை வாய்ப்புப் பற்றி அதிகம் கவலைப்படுகின்றன. ஆகவே உள்நாட்டு வேலை வாய்ப்பு நிலையைக் கருதியே வீதம் சமநிலையானதா அன்றா என்று தீர்மானிக்கலாமா? அயல்நாட்டுச் செலாவணி ரிசர்வு நியாயமான அளவுக்கு இருந்து, (அயல்நாட்டுச் சிறு கால முதல் பெயர்ச்சி இல்லாதிருக்கும் நிலையில்) ஒரு நாட்டில் நிறைய வேலையின்மை இருக்குமானால் அந்த நாட்டின் மாற்று வீதம் சமநிலையில் இல்லை என்று கருத வேண்டுமா? சமநிலை வீதத்தை நிர்ணயிப்பதற்கு ஓர் அளவுகோலாக வேலையின்மையை நாம் கருதுவோமானால் தனி நாட்டின் வேலையின்மையை மட்டும் கருதி முடிவுகூற

முடியாது. மற்ற நாடுகளோடு ஒப்பிட்டால் இந்த நாட்டில் வேலையின்மை எவ்வளவு இருக்கிறது என்பதே முக்கியம். ஒப்பிடாமல் வேலையின்மையைப் பெயரளவில் எடுத்துக் கொண்டால் உலகம் பரவிய மந்த காலத்தில் எல்லா நாடுகளிலும் தான் அது காணப்படும். ஆக எல்லா நாடுகளின் வீதங்களும் சம நிலையில்லாத, மிகை மதிப்பு உடைய, வீதங்கள் என்ற அபத்த முடிவுக்கு வர வேண்டியிருக்கும். மற்ற நாடுகளோடு ஒப்பிட்டு ஒரு நாடு மோசமாக வேலையின்மையில் இருந்தால், அப்போது அந்த நாட்டின் பணம் மிகை மதிப்புடைதாய் இருக்கிறது என்று கூறலாம். இந்த நாட்டுக்கும் கூட நடப்புச் செலுத்து நிலையில் பற்றுக்குறை இருந்தாலொழிய மாற்று வீதத்தை மாற்ற நியாய மில்லை. ஏனெனில் இந்நாடு மதிப்பிறக்கம் செய்யின் இது பிற நாடுகளில் இருக்கும் பொன்னையும் செலாவணியையும் கவரும். அப்போது மற்ற நாடுகளின் செலாவணிகள் மிகை மதிப் புடையன போலத் தோன்றும்.

ஒரு நாடு உள்நாட்டு வேலை நிறைவுக் கொள்கையைப் பின்பற்றும்போது பணப் பெருக்கமேற்பட்டுச் செலுத்து நிலை பாதகமாகலாம். ரிசர்வு இழக்கப்படலாம். அப்போது வேலை யின்மையைக் காரணமாகக் கூறுது ரிசர்வு இழப்பைக் காரண மாகக் கூறி மதிப்பிறக்கம் செய்யலாம். ஆனால் மதிப்பிறக்கத்தில் போட்டி ஏற்படுமா என்பதும் கவனிக்க வேண்டிய செய்தி. ஆகவே உள்நாட்டுப் பணப்பெருக்கத்தின் விளைவாகச் செலுத்து நிலையில் பற்றுக்குறை ஏற்பட்ட பின்பே மதிப்பிறக்கத்தை ஆள்வது நல்லது. பொதுப்படக் கூறினால், ஒரு நாட்டின் அயல் நாட்டு ரொக்கச் செலாவணி போதுமானதாக இருக்கும் வரையில், செலுத்து நிலையில் ஏற்படும் பற்றுக் குறையைச் சமாளிப்பதற்கு ரிசர்வையே முதலில் உபயோகிக்க வேண்டும். அதற்கு முன்பே வீதத்தை மாற்றுவது கூடாது.

ஆகவே மாற்று வீதம் சமநிலையிலிருந்து விலகுவதை அறியும் அடையாளங்களை நிர்ணயிப்பது கடினமாக உள்ளது என்று தெரிகிறது. பழைய வகைப் பொன் திட்ட முறையின் விறைப்பையும் சுயேச்சையாய் மாறும் வீத முறையின் ஆபத்து களையும் விலக்கக்கூடிய ஒரு பன்னாட்டுச் செலுத்துத் திட்டம் நிறுவுவதாயின் அதன் அடிப்படைக் குறிக்கோள் சமநிலை வீதமாயிருக்கும். இதை நிறுவுவதில் தான் பலவித அரசியல் முரண்பாடுகளும் செயல்முறைச் சிக்கல்களும் தோன்றுகின்றன. நிலையான ஒரு வீதத்தைவிட ஒரு நாட்டின் பொருளாதாரச் சுயேச்சை எவ்வளவு தூரம் முக்கியம் என்பதே சமநிலை

வீதத்தை நிர்ணயிக்கும்போது ஆளும் அடிப்படைகளாக இருக்கும். 'செலுத்துச் சமநிலை' என்பதற்கு நாம் கொடுக்கும் இலக்கணத்தைப் பொறுத்தது. எவ்வளவு அயல்நாட்டுச் செலாவணி ரிசர்வு தேவையாகும் என்பது.

ஐயப்பாடற்ற புறவய இலக்கணம் கிடைக்கவில்லை என்பது தெளிவு. சமநிலை வீதம் என்கிற கருத்து பலவிதங்களில் பொருள் கொள்ள இடம் தருகிறது. ஒரு கோடியில் பொருள் உள்நாட்டுப் பொருளாதாரச் சுயேச்சையை அது தர வேண்டும் என்பது. மற்றொரு கோடியில் பொன் திட்ட விதிகளுக்கு இடம் தர வேண்டும் என்பது. ஆக இலக்கணம் ஒன்றை நிர்ணயித்தாலும் அதன் பொருள் பற்றி வேறுபாடுண்டாகக்கூடும். ஒரு வகையில், பன்னாட்டுச் செலுத்துச் சமநிலைக்கு அடையாளத்தை எளிதாக வரையறுக்க முடியாதிருப்பது நல்லதாகவே தோன்றுகிறது. அடையாளம் காண எல்லோருக்கும் முடியுமானால் ஓர் அடையாளம் காணப்பட்டதும் யூக முதல் பெயர்ச்சி தோன்றும். ஆகவே வீத மாறுதல் செய்ய வேண்டுமானால் திடீரென்று, யாரும் எதிர்பாராதபடி, செய்ய வேண்டும் என்பதாகிறது.

சமநிலை வீதம் நிறுவ வேண்டுமானால் பல நாடுகளின் பணத் துறை அதிகாரிகளுக்கிடையேயும் அறிவுடைய ஒத்துழைப்பு அவசியம். பொன் திட்டத்தின்கீழ் இது இன்றியமையாததாயிருந்தது. சுயேச்சையாக மாறும் வீதத்தின் அடிப்படையில் ஒத்துழைப்புக்கு வேலையில்லை; அங்காடி தானே இயங்குவதால் உள்நாட்டுப் பணத்துறை அதிகாரிகளுக்குக்கூட வேலையில்லை. ஆனால் பண மதிப்பை நெகிழ்ச்சியுடன் நிர்வகிக்கும் முறையில் பல நாடுகளுக்கிடையில் ஒத்துழைப்புத் தேவை. வீத மாறுதல் எல்லா நாடுகளையும் பாதிப்பது. ஒரு நாடு மதிப்பிறக்கத்தை மேற்கொள்ளுமானால் அது விரைவில் போட்டி மதிப்பிறக்கமாக (competitive dcpreciation) முற்றிவிடும். எல்லாருக்கும் பொதுவான செய்தி ஆதலால், கலந்து முடிவு செய்வது நல்லது. பன்னாட்டு அதிகாரிகள் நிறுவனம் ஒன்று இவ்வித இறக்கங்களின் தேவையை ஆய்ந்து அனுமதிக்க வேண்டும். அந்த நிறுவனம் நாடுகள் எப்படிப் பணத்துறையில் நடந்துகொள்ள வேண்டும் என்பதைப் பற்றி ஒரு முறையை வகுக்க வேண்டும். ஓரளவுக்குச் சுயேச்சை இருந்தபோதிலும் குழப்பம் உண்டாகும்போது ஒருவருக்கொருவர் முரணான செயல்களில் இறங்காமல் காக்க வேண்டும். இத்தகைய நிறுவனமாகவே பன்னாட்டுப் பண நிதி (International Monetary Fund) அமைக்கப்பட்டது. இதைப் பின்னர் விளக்குவோம்.

# 41. மாற்றுக் கட்டுப்பாடு

அயல்நாட்டுச் செலுத்துத் தடையிலாது நிகழும்போது அகப் பொருளாதார அதிர்ச்சியாயினும், புறப் பொருளாதார அதிர்ச்சி யாயினும், பல மாறுதல்களை விளைவித்து முடிவில் சமநிலை ஏற்படும்படி செய்கின்றது. பொன் திட்டத்தின் கீழ்ப் பொன் பெயர்ச்சி பணத் தொகையையும் விலை மட்டத்தையும் பாதிப்பதன் மூலம் சமநிலை வருகிறது. காகிதத் திட்டத்தின் கீழ் வீத மாறுதல் சில விலை மாறுதல்களைத் தவிர்த்தாலும் வேறு துறைகளில் மாறுதல் உண்டாகிச் சமநிலை வருகிறது. தடையின்றி அயல்நாட்டுச் செலுத்து நிகழும் வகையிலும், சமநிலையை உண்டாக்குவன விலை மாறுதல்களும் அல்லது மாற்று வீத மாறுதல்களும் ஆகும்.

ஆனால் இந்த விளைவுகள் அரசாங்கத்தின் குறிப்பிட்ட பொருளாதாரக் கைக்கோளுக்கு முரண்பட்டதாக இருந்தால் அது அரசியல் முறையில் ஏற்கப்படாத தாகும். அந்த நிலையில் அரசாங்கம் இந்த விளைவுகளைத் தவிர்க்கும் முறைகளை ஆண்டு, செலுத்து நிலையைச் சீர்திருத்த வேண்டி வரும். ஆகவே பண வீக்கம் அல்லது பண வடிப்பு விளைவுகளை உண்டாக்கக் கூடிய பொன் திட்டத்தை விரும்பாது. தேவை அளிப்பு மூலம் நியதியின்றி மாறும் முறையையும் விரும்பாது. அது செய்யக் கூடியது, அங்காடிச் செயல் முறையில் தலையிட்டு, நேரிடையாக அயல்நாட்டுச் செலுத்துகளை விருப்பப்படி கட்டுப் படுத்துவதாகும். ஒருபோதுள்ள நடப்பு மாற்று வீத நிலையில், அயல்நாட்டுச் செலாவணியின் அளிப்பை விடத் தேவை அதிகமாக இருக்குமானால் அதிகப்படியான, எச்சமான தேவையைக் கட்டுப்படுத்த வேண்டும். அளிப்பைக் கட்டுப் படுத்திக்கொண்டு தேவைகளிடையே பங்கீடு செய்ய வேண்டும். இப்படிச் செய்வது சமநிலைக் கேட்டின் விளைவுகளைத் தடுக்கப் பயன்படுமேயொழிய சமநிலைக் கேட்டுக்குக் காரணமான

அடிப்படைக் காரணிகளை நீக்காது. செலுத்து நிலையால் ஏற்படும் விளைவுகளையே அரசாங்கம் தடுக்க முயல்கிறது.

அரசாங்கம் இப்படிச் செலுத்து நிலையைக் கண்காணிக்கத் தலையிட்டால் அது ஆளக்கூடிய முறைகள் பல. செலுத்து நிலைக் கட்டுப்பாடுகள் 1931 லேயே தோன்றின. பெரிய மந்தத்தின் விளைவாகவும் பின்னர் ஏற்பட்ட பணத்துறை இடர்ப்பாடுகள் விளைவாகவும் அநேக மத்தியக் கிழக்கு ஐரோப்பிய நாடுகளும், தென் அமெரிக்க நாடுகளும் செலுத்துக் (payments restrictions) கட்டுப்பாடுகளை நிறுவின. அவை எல்லாம் கடன்பட்ட நாடுகள். முன்னர்ப் பேரளவில் குறுங்காலக் கடனை அயல்நாட்டிலிருந்து பெற்றன. பெரிய வியாபாரச் சகடத்தில் பலவீனம் அடைந்தன. அந்த நிலையில் பன்னாட்டுப் பணத்துறை நெருக்கடியின் போது தாக்குற்றன. அயல்நாட்டு முதல் அவைகளை விட்டு ஓடின போது சமாளிக்க அவைகளுக்குத் தகுந்த அயல்நாட்டு ரிசர்வு இல்லை. பண மதிப்பைக் குறைக்கலாம் என்றாலும், அது நாட்டின் மேலிருந்த நம்பிக்கையை இன்னும் கெடுத்து விடும். பண வாட்டத்தாலோ அல்லது மாற்று வீதத்தை மாற்றுவதாலோ நிலைமை சமாளிக்கக்கூடியதாகத் தோன்றவில்லை.

இப்படித் தோன்றிய செலுத்துக் கட்டுப்பாடுகளின் வரலாற்றை நான்கு காலப் பகுதிகளாக வகுக்கக்கூடும். 1931 முதல் 1939 வரை முதல் பகுதி. இதில் அநேக நாடுகள் புது முறைகளை முன்பின் அனுபவமின்றி உருவாக்கின. ஆயினும் உலகத்தின் பெரும்பாலான செலுத்துகள் தடையின்றியே நிகழ்ந்தன. முக்கியமான கட்டுப்பாடு நாடு ஜெர்மனி. இரண்டாவது காலப் பகுதி 1939-1945. இக்காலத்தில் அநேகமாகக் கட்டுப்பாடற்ற அயல்நாட்டுச் செலுத்து முறை மறைந்தது என்று கூறலாம். அரசியல் நெருக்கடி காரணமாகச் செலுத்து நிலை பாதிக்கப்படலாம் என்ற அச்சம் அரசாங்கத்தின் தலையீட்டுக்குக் காரணமாயிருந்தது. போர்க் கால நிலையும் இப்படித் தலையீட்டை அவசியமாகச் செய்தது. முன்னைய காலப் பகுதியில் பெற்ற அனுபவத்தை இப்போது பல நாடுகள் பயன்படுத்தின. நாடுகளுக்குள் பொருளாதாரத் தொடர்புகள் இயற்கை முறையில் இருந்ததாகச் சொல்வதற்கில்லை. பொருளாதாரப் போருக்குக் (economic warfare) கட்டுப்பாடுகள் பயன்பட்டன. பின்னர் எல்லா நாடுகளிலும் பண வீக்கத்தாலும் கட்டுப்பாடு அவசியமாயிற்று மூன்றும் காலப்பகுதி 1945-50. இதன் இயல்பு பொதுவாகக் கட்டுப்பாடு; சுயேச்சை அருமை. போர் முடிந்

தரும் நாடுகள் மீண்டும் பொருளாதாரத் தொடர்புகளை ஏற்படுத்திக்கொண்டன. அதேபோது அநேக நாடுகள் அரசாங்கக் கட்டுப்பாட்டுக்குக் குட்பட்ட பொருளாதாரச் சீரமைப்பில் இறங்கின. பொருளாதார முன்னேற்றமில்லாத அநேக நாடுகள் வலிந்து மூலதனாக்கம் (capital formation) செய்யலாயின. அநேக நாடுகளில் பண வீக்கம் அழுத்தி வைக்கப்பட்டிருந்தது. நாடுகள் கட்டுப்பாடுகளை நீக்க ஒப்பிய போதிலும் நடவடிக்கை ஒன்றும் எடுக்கவில்லை. நான்காவது காலப்பகுதி 1950 க்குப் பிற்பட்டது. இந்தப் பகுதியில் சிறிது கட்டுப்பாடு குறைவு படிப்படியாகக் காணப்பட்டது. ஆயினும் கட்டுப்பாடுகள் முழுமையும் மறைந்தன என்று சொல்வதற்கில்லை.

ஆகவே (செலுத்து) மாற்றுக் கட்டுப்பாடுகள் பல சூழ்நிலைகளில் இருந்து வந்துள்ளன. அவைகளின் முறைகளும் பலவகையாக இருந்து வந்துள்ளன. இந்த முறைகளில் பல மிகவும் சிக்கலானவை. அவைகளை இங்கு முழுவதும் விளக்கவேண்டிய அவசியம் இல்லை. முக்கியமான சிலவற்றை மட்டும் கீழே விளக்குவோம்.

### மாற்றுக் கட்டுப்பாட்டின் நோக்கங்கள்

அரசாங்கங்கள் அயல்நாட்டோடு நிகழும் பேரங்களையும் தம் நாட்டுப் பணங்களின் மதிப்பையும் ஏன் கட்டுப்பாட்டுக்குட் படுத்துகின்றன என்பதை முதலில் பார்க்க வேண்டும்.

கட்டுப்பாடில்லாதபோது இருக்கக்கூடிய வீதத்திலிருந்து வேறுபட்ட ஒரு வீதத்தை நிலை நிறுத்துவது நோக்கமாக இருக்கலாம். கட்டுப்பாடு இல்லாதபோது வீதம் தேவை அளிப்புச் சக்திகளின் விளைவாக நிர்ணயிக்கப்படும். இப்படி நிர்ணயிக்கப் படும் வீதத்துக்கு வேறுபட்ட வீதம் ஒன்றை அரசாங்கம் விரும்பக்கூடும். முதலாவதாக, சுயேச்சையாக நிர்ணயிக்கப்படக் கூடிய வீதத்தைவிட ஏற்றமான வீதத்தை விரும்பலாம். இதை மிகை மதிப்பு (overvaluation) நோக்கமெனலாம். இரண்டாவது, குறைந்த வீதத்தை விரும்பலாம். இதைக் குறை மதிப்பு (undervalation) நோக்கமெனலாம். மூன்றாவது, நீண்ட காலத்தில் தேவை அளிப்பு நிர்ணயிக்கும் வீதத்துக்கு ஒத்ததாக இருக்கும்படியும் ஆனால், தற்காலிக நெளிவுகளைத் தவிர்க்கும் படியும் நோக்கம் இருக்கலாம். இதை நெளிவுத் தவிர்ப்பு (avoidance of fluctuations) நோக்கம் எனலாம்.

(1) மிகை மதிப்பு (Overvaluation)

பொதுவாகக் காணப்படுவது மிகை மதிப்பாகும். ஒரு நாடு தன் பணத்துக்கு மிகை மதிப்புத் தர விரும்புவதற்குப் பல காரணங்கள் கூறக் கூடும். அவை அனைத்தும் நாட்டின் வாணிபத் தொடர்புகள் நிலை கேடுற்றதிலிருந்தே தோன்றுவன. நிலைக்கேட்டுக் கறிகுறி தன் நாட்டுப் பணத்தின் அளிப்பு, அயல் நாட்டிலிருந்து அதற்கு வரும் தேவையைவிட அதிகமாயிருப்பது.

உதாரணமாக, போர்க் காலத்தில் ஏற்றுமதி சுருங்கி இறக்குமதி அதிகமாகத் தேவைப்படும் நிலையில் இந்நிலை ஏற்படலாம். அயல்நாட்டுச் செலாவணிக்குள்ள தேவையைக் கட்டுப்படுத்தாது விட்டால் பணத்தின் புற மதிப்பு மிகவும் இறங்கக்கூடும். இக்காரணத்தினால்தான் பெரும்பாலும் போர்க் காலங்களில் செலாவணி மாற்றுக் கட்டுப்பாடு நிறுவப்படுகிறது. போருக்குப் பிறகும் பெரும்பாலும் இதே விதச் சிக்கல் நிலை இருக்கக்கூடும். ஆதலால் அப்போதும் மாற்று வீதத்தை காப்பாற்ற வேண்டிய தேவை ஏற்படலாம். இந்த நிலையில் பணத்தின் மதிப்புத்தானே எவ்வளவு குறைந்தாலும் செலுத்து நிலையில் சமநிலையை உண்டாக்க முடியாது. ஆகவே அரசாங்கங்கள் தலையிட்டுப் புற மதிப்பை வீழாது தடுக்க முயல்வது இயற்கையே. திடீரென்று பேரளவில் வெளிநாட்டில் செலுத்துச் செய்யவேண்டிய நாடுகள் மிகை மதிப்பை நாடுவது நல்லதே.

புற மதிப்பை உயர்த்துவதற்கு மற்றொரு காரணம் அயல் நாடுகளில் செலுத்த வேண்டிய கடன் பொறுப்பு அதிகமாக இருப்பதாகும். இந்தக் கடன் பொறுப்பு அயல்நாட்டுப் பணத்தில் கணக்கிடப்பட்டிருக்குமானால் தன் நாட்டுப் பணத்தின் புற மதிப்பை உயர்த்துவது செலுத்துப் பாரத்தைக் குறைக்கும்.

மூன்றாவது காரணம், உள்நாட்டு நிலை பண வீக்க நிலையாக இருக்குமானால், அயல்நாட்டு வாணிபம் மிகவும் முக்கியமாயின், பணத்தின் புற மதிப்பை விழ விட்டால் இறக்குமதி விலையேறும், ஏற்றுமதி எதிர்பாராத அமித இலாபம் தரும். இதனால் இறக்குமதி குறைந்து ஏற்றுமதி தூண்டப்பட்டு வீக்க நிலை இன்னும் மோசமாகும். இதனால் நாட்டின் விலை மட்டமும் கூலி மட்டமும் உயருமானால் இந் நாட்டுப் பணத்தின் வாங்கும் திறன், மற்ற நாடுகளை ஒப்பிட, மிகவும் இறங்கும். அதாவது புறமதிப்பும் குறையும். புற மதிப்பு வீழ்ச்சியும் உள் மதிப்பு வீழ்ச்சியும் ஒன்றையொன்று தூண்டி நச்சுச் சுழலை உண்டாக்கி விடும்.

ஒரு நாடு தன் பணத்துக்கு மிகை மதிப்புத் தருவதற்குப் பல காரணங்கள் கூறலாம். ஆனால் மிகை மதிப்புத் தருதல் அநேகக் கெடுதலான விளைவுகளை உண்டாக்கக் கூடும். மிகை மதிப்புத் தரப்பட்ட நாட்டின் விலைகள் பிறருக்கு மற்ற நாடுகளின் விலைகளை விட ஏற்றமாகத் தோன்றும். இதனால் ஏற்றுமதி தடைப்பட்டு இறக்குமதி தூண்டப்படுகிறது. மிகை மதிப்பீட்டின் கேடுகளை இங்கிலாந்து 1925-31 க்கிடையில் அனுபவித்தது. மிகை மதிப்பு நாட்டின் வளர்ச்சியைத் தடுக்கும் தன்மையது.

பொதுப்படக் கூறினால் இறக்குமதிக்காகவோ கடனுக்காகவோ அயல்நாட்டுக்குப் பேரளவில் செலுத்தவேண்டிய அவசரமுடைய ஒரு நாடு மிகை மதிப்பீடுதலை (overvaluation) ஆள்வது சரி. மிகை மதிப்பு பிறருக்கு நம் ஏற்றுமதியின் விலைகளை உயர்த்துகிறது. ஆனால் எங்கும் வாணிப உப்புசம் (boom) காணப்படும் காலத்தில் வெளிநாட்டுக்கனுப்பப் பொருள்கள் கிடைப்பது குறைவாயிருக்குமாதலால், மிகை மதிப்புக் காரணமாக ஏற்றுமதி அதிகமாகப் பாதிக்கப்படாது. ஆனால் வாணிப மந்தகாலத்தில் மிகை மதிப்பு ஏற்றுமதியைப் பாதிக்கக்கூடும். நாடு தன்னுடைய பணத்தின் மதிப்பைக் குறிப்பது நல்லது. ஆகவே ஒரு பொது விதியாகக் கூறினால் போர்க்காலத்திலும் பண்ட அருமைக் காலத்திலும் பணத்தின் புற மதிப்பை உயர்த்து எனலாம். மந்த காலத்திலும் பண்ட மிகைக் காலத்திலும் பணத்தின் புற மதிப்பைக் குறை எனலாம். இது ஒரு பொதுப்பட்ட கூற்று; தனிச் சூழ்நிலையில் இது பொருந்தாமல் இருக்கக் கூடும்.

### (2) குறை மதிப்பு (Undervaluation)

அநேக நாடுகள் இந்நூற்றாண்டின் மூன்றாம் பத்தில் பணத்தின் புறமதிப்பைக் குறைத்தன. புறமதிப்பைக் குறைப்பதன் விளைவுகள்; ஏற்றுமதி தூண்டப்படுவது, இறக்குமதி குறைவது, நாட்டின் விலைமட்டம் உயர்வது. ஆனால் இந்த விளைவுகள் ஏற்படுவதற்கு எல்லை உண்டு. குறை மதிப்பீடுதல் மற்ற நாடுகளின் விலைமட்டத்தைவிட இந்த நாட்டின் மட்டத்தை ஏற்றமானதாகச் செய்யும். ஆனால் இப்படி ஏற்றமாக இருப்பது இந்நாட்டின் விலைகள் ஏறுவதாலன்றி அயல் நாடுகளின் விலைகள் இறங்குவதாலும் ஏற்படலாம். எப்படி எனில் உலக வாணிபத்தில் பெரும் பங்குடைய ஒரு நாடு தன்னுடைய பணத்தின் மதிப்பைக் குறைத்தால், அதற்கேற்ப பிற நாடுகளின் விலை மட்டம் தாழ வேண்டி வரும். அதன் விலை மட்டம் உயராது. உலக வாணிபத்தில்

முக்கியமல்லாத சிறு நாடு, தன் பணத்தை மதிப்பைக் குறைத்தால் அதன் விலை மட்டம் மட்டுமே உயரும். சிறு நாடுகளுக்கும் பெரிய நாடுகளுக்கும் மற்ெருரு வேறுபாடு என்னவெனில் பெரிய நாடுகளின் நடவடிக்கைக்கு எதிர் நடவடிக்கை பிற நாடுகளால் எடுக்கப்படலாம். ஆனுல் சிறு நாடு புற மதிப்பைக் குறைத்து ஏற்றுமதியைத் தூண்டினுல் பிற நாடுகள் இதைப் பொருட்படுத்த மாட்டா. தவிர, பணத்தின் மதிப்புக் குறைப்பு நாட்டு விலை மட்டத்தைப் பாதிப்பது, ஏற்றுமதி இறக்குமதிப் பண்டங்களின் விலைகள் வழியாகத் தான். ஆதலால் பரந்த வாணிபமுடைய நாடுகளில் விளைவுகள் சிறு நாட்டை விட அதிகமாகக் காணப்படும்.

கச்சாப் பொருள்களும் உணவுப் பொருள்களும் முக்கியமான ஏற்றுமதியாக உள்ள நாடுகளுக்கு, கைத்தொழில் ஏற்றுமதி நாடுகளைக் காட்டிலும், மதிப்பிறக்கம் செய்யவேண்டிய தேவை உண்டாகலாம். ஏனெனில் மந்த காலத்தில் அவைகளின் பண்டங்களின் விலைகள் செய்பொருள் விலைகளை விட அதிகமாக வீழ்கின்றன. இவைகளை ஏற்றுமதி செய்யும் நாடுகள் தம் பணத்தின் மதிப்பைக் குறைத்தால்தான் அப்பண்டங்களின் விலைகளை (தம் நாட்டுப் பணத்தில்) நிலைப்படுத்த முடியும். இன்றேல் பெறும் விலை குறைந்து இன்னல்களை அனுபவிக்க வேண்டி வரும். ஆனுல் இறக்குமதிப் பண்டங்களின் விலைகள் ஏறலாம்; இது காரணமாகக் கச்சாப் பொருள் உற்பத்தியாளரின் வருமானத்தின் வாங்கும் திறன் குறையலாம். ஆனுல் விற்பனைப் பொருள்களின் விலை வீழ்ச்சியாலுண்டாகும் கேடு, வாங்கும் பொருளின் விலை ஏற்றத்தாலுண்டாகும் கேட்டை விட அதிகமாயிருக்கும் என்பது வெளிப்படை. ஏனெனில் விற்பனை விலையைப் பொறுத்த தல்லவா மக்கள் வருமானம்?

முன்னர், கடன்பட்ட நாடு, கடன் அயல் நாட்டின் பணத்தில் வரையறுக்கப்பட்டிருந்தால், வட்டிப் பளுவைக் குறைப்பதற்குப் பணத்துக்கு மிகை மதிப்பிடுதல் நல்லதென்றேம். ஆனுல் கடன்பட்ட நாடு கச்சாப் பொருளை உற்பத்தி செய்யும் நாடாகவும், சிறு நாடாகவும், அதன் வாணிபம் அதற்கு முக்கியமானதாகவும் இருந்தால், இம் மூன்று காரணங்களும் அதனுடைய பணத்தின் புறமதிப்பைக் குறைப்பதற்கு நியாயமாகின்றன. எந்த நியாயம் பொருந்தும்? இதற்குப் பொதுப்பட்ட விடை ஒன்றும் கொடுக்க முடியாது. சில நாடுகள் பணத்தின் மதிப்பைக் குறைத்து ஏற்றுமதியைத் தூண்டி, நிறைய அயல் நாட்டுச் செலாவணியைச் சம்பாதித்து, கடன் பொறுப்புகளைத்

தீர்க்கக்கூடிய நிலையில் இருக்கலாம். நியூசிலாந்தும், ஆஸ்திரேலியாவும் இவ்வித நோக்கத்துடன் சென்ற காலத்தில் நடந்தன. ஆனால் இவைகளைப் போலக் கடனாளியாயிருந்த ஹங்கேரி போன்றவை வாணிபத் தடைகளுக்கு முன்னிலையில் இம்முறையை ஆண்டுப் பலன் காண முடியவில்லை. பணத்துக்குக் குறை மதிப்பிட்டிருந்தால் அவைகளின் செலுத்துப் பளு இன்னும் அதிகமாகி இருக்கும்.

வேண்டுமென்றே குறை மதிப்பிடுவது சுயநலமான காரியம். ஒரு நாடு நலம் அடைய மற்றொரு நாடு இன்னலடைய வேண்டியிருக்கிறது. இப்படிப் பெறுவது நிலையற்ற நலம். ஒன்றையொன்று விழுங்குவதாகும். எல்லாரும் இந்த முறையைக் கையாளக் கூடும். பல நாடுகள் போட்டியிட்டுத் தத்தம் பணத்தின் புற மதிப்பைக் குறைத்துச் சென்றால் முடிவில் எல்லாப் பணங்களும் பதராகிவிடும்.

### (3) நெளிவுத் தவிர்ப்பு (Avoidance of Fluctuations)

மூன்றாவது நோக்கம், மாற்று மதிப்பில் ஏற்ற இறக்கங்களைத் தவிர்ப்பதாகும். மாற்று மதிப்பில் சலனத்தைத் தவிர்ப்பது ஏட்டளவில் நல்ல கொள்கை. இது நாட்டுக்கு ஒருவிதமான அமைதியையும் நெகிழ்ச்சியையும் கொடுக்கும். ஆனால் செயல்படுத்துவது கடினமாகும். தற்காலிக அனாவசியச் சலனங்களைத் தவிர்ப்பதே நோக்கமாக இருக்க வேண்டுமே ஒழியப் பொருளாதார அடிப்படை மாறுதல்களால் ஏற்பட வேண்டிய வீத மாறுதலைத் தவிர்ப்பது தவறு. ஆனால் எது தற்காலிகமான மறுதல், எது அவசியமான இயற்கையான மாறுதல் என்று காண்பது எளிதன்று. பின் நோக்கிப் பார்க்கும் போது எது தற்காலிகமானது என்று கூறமுடியும். மாறுதல் நிகழ்ந்து கொண்டே இருக்கும்போது அது தற்காலிக மானதா, அடிப்படை மாறுதலா என்று சொல்ல முடியாது. ஆகவே இந்தக் கொள்கையைப் பின்பற்றுவோர் அவ்வப்போது புத்திக் கெட்டின வரையில் ஏற்றதைச் செய்வார்கள். சமயவாதிகளாகவே நடக்க வேண்டியிருக்கிறது. மாற்றுச் சமப்பாட்டுக் கணக்கு (Exchange Equalisation Account) இந்த விதமான நோக்கத்தோடுதான் வேலை செய்தது. பன்னாட்டுப் பண நிதியின் (International Monetary Fund) கீழ் அரசாங்கங்கள் நிதியின் அனுமதியின்றிப் புற மதிப்பை மாற்றுவதில்லை என்று ஒப்புக்கொண்டுள்ளன. அடிப்படைக் கேடுகள் தோன்றியபோதுதான் மாற்று வீதத்தை மாற்ற முடியும், தற்காலிக மாறுதல்கள் புறக்கணிக்கப்படும்.

**கட்டுப்பாடு முறைகள்**

இனி மாற்றுக் கட்டுப்பாடு நடக்கும் முறைகளைப் பற்றிப் பார்ப்போம். கட்டுப்பாட்டை நிறுவ வேண்டுமானால் செலாவணிகளுக்கு உள்ள தேவை அளிப்புகளைத் திருத்த வேண்டும். இதற்கு இரண்டு வழிகள் உண்டு.

(1) தலையீடு (intervention): மாற்று வீதம் இயற்கையாக விடப்பட்டால் விரும்பாத நிலை அடையும் என்று தோன்றினால் அரசாங்கம் அங்காடியில் தானே புகுந்து குறைபட்ட தேவையோ, அளிப்பையோ நிரப்பிக் குறிப்பிட்ட வீதத்தை நிலைப் படுத்துவது.

(2) தடை (restriction): தேவை அல்லது அளிப்புக் கணியங்களைக் கட்டுப்படுத்தல். தலையீட்டு முறையாயின் ரூபாயின் மதிப்புக் குறையாதிருக்க விரும்பினால் அரசாங்கம் அங்காடியில் தானே புகுந்து ரூபாய்க்குத் தேவையை அதிகப் படுத்தலாம். தடை முறையாயின் ரூபாய் அளிப்பு அங்காடிக்கு வராமல் தடுக்கலாம். அரசங்கம் ரூபாய் மதிப்பைக் குறைக்க விரும்பினால் அது அங்காடியில் ரூபாயைத் தானே பேரளவில் அளிக்க முன் வரும். அல்லது ரூபாய்க்குத் தேவையைத் தடுக்கலாம். இந்த இரண்டு முறைகளுக்குமுள்ள வேறுபாடு என்னவெனில் தலையீட்டின் கீழ் அங்காடி இயல்புப்படி தேவை, அளிப்புகள் வேலை செய்கின்றன. தடைமுறையில் அங்காடியில் தேவை, அளிப்புகள் வேலை செய்வது தடைப்படுகிறது. ஒன்றில் அரசாங்கம் தானும் பிறரைப்போல் ஓர் அளிப்பவராக அல்லது வாங்குபவராக நிற்கிறது. மற்றொன்றில் அரசாங்கம் பொதுமக்கள் அங்காடியில் புகாமல் தலையிடுகிறது.

**தலையீடு**

அரசாங்கம் மாற்று அங்காடியில் பணத்தின் மதிப்பை ஏற்றவோ அல்லது குறைக்கவோ செய்யக்கூடுமாயினும் ஏற்றுவதே பொதுவாகக் காணப்படுவது. பணத்தின் மதிப்பை ஏற்றும் நோக்கம் இருக்கும்போது பணத்தின் மதிப்பை ஏற்றி, இறுக்கப்படுகிறது (pegging up). இறக்கும் நோக்கம் இருக்கும் போது மதிப்பைக் குறைத்து, இறுக்கப்படுகிறது(pegging down). சாதாரணமாக இறுத்தல் (pegging) என்ற சொல் மதிப்பேற்றும் நடவடிக்கையையே குறிக்கும். அரசாங்கம் இப்போதுள்ள வீதத்தைவிடத் தன் நாட்டுப் பணத்துக்கு அதிக மதிப்பைக் கொடுக்க விரும்பினால், அதன் பணத்துக்குப் போதுமான அயல் நாட்டுத் தேவையில்லை என்றுதான் தெரிகிறது. அரசாங்கம்

தேவையைத் தோற்றுவித்து இறுக்க வேண்டிய வீதத்தை நிலை நிறுத்தவேண்டும். இறுக்க வேண்டிய வீதத்தில் அங்காடி விரும்பும் அளிப்பைத் தரவும், அங்காடி அளிக்கும் தொகையை வாங்கவும் தயாராக இருக்க வேண்டும். அரசாங்கத்தின் தலையீட்டுச் சக்தி அதனிடத்திலுள்ள அயல் செலாவணி வசதியைப் பொறுத்தது. பணத்தின் மதிப்பை உயர்த்தி இறுக்க வேண்டுமானால் அரசாங்கத்தின் சக்தி குறைவாகவே இருக்கும். ஏனென்றால் இதற்கு அயல்நாட்டுச் செலாவணி அதிகமாகத் தேவைப்படும். பற்றாத போது அயல்நாட்டிலிருந்து கடன் வாங்கவேண்டி வரும். சாதாரணமாக இன்றியமையாமை ஏற்பட்டாலொழிய அரசாங்கங்கள் அயல்நாட்டிலிருந்து, பணத்தின் மதிப்பைக் காப்பாற்றுவதற்காகத் தொடர்ந்து கடன் வாங்க விரும்ப மாட்டா. அயல் நாடுகளும் இப்படித் தொடர்ந்து கடன் வாங்கும் நாட்டினுடைய பணத்தில் நம்பிக்கை வைக்கமாட்டா. தற்காலிக அவசரத் தேவைகளுக்காக மட்டும் கடன் வாங்குவது கூடும். ஆனால் பணத்தின் மதிப்பைக் குறைப்பது இவ்வளவு கடினமன்று. அயல்நாட்டுச் செலாவணியைப் பெற்றுத் தன் நாட்டுப் பணத்தை அளவின்றிக் கொடுக்க வேண்டியிருக்கிறது. தன் நாட்டுப் பணத்தைப் பெறும் வழிகள் வரிவாங்கல், கடன்வாங்கல் அல்லது பண உற்பத்தி செய்தல் ஆகியவைகளே. அளவின்றி வரி விதிப்பதை மக்கள் விரும்ப மாட்டார்கள். அயல்நாட்டுப் பணத்தைக் குவிக்கத்தாம் வரி விதிக்கப்படுவதை மக்கள் விரும்ப மாட்டார்கள். இதைவிட மக்களிடம் கடன் வாங்குவது எளியதாகத் தோன்றும். அரசாங்கம் கடன் வாங்கி, அயல்நாட்டுச் செலாவணியைப் பெற்றுத் தகுந்த வழியில் அயல்நாட்டிலேயே முதலீடு செய்து, சம்பாதித்து வட்டியைக் கொடுக்கக் கூடும் அல்லவா? ஆனால் கடன் வாங்குவதும் அளவின்றி நடக்க முடியாது. நாளடைவில் கடன் பளு அதிகமாகி விடலாம். தகுந்த வழியில் முதலீடு செய்வதும் கடினம். மூன்றாவது முறை பணத்தை உற்பத்தி செய்வது. இதற்கும் எல்லை உண்டு. அரசாங்கம் பணத்தை உற்பத்தி செய்து அயல்நாட்டுப் பணத்தைப் பெறவேண்டும். இது பண வீக்கத்தை உண்டாக்கும்; விலைகள் ஏறும். இது பணத்தின் புற மதிப்பைக் குறைக்கும். ஆகவே, பணத்தின் மதிப்பைக் குறைப்பது எளிதாக முடியும். ஒரு நாடு தன் பணத்தின் மதிப்பைத் தொடர்ந்து குறைக்க வேண்டும் என்று நினைக்காமல் ஒருமுறை மட்டும் குறைக்கும் நோக்கமுடையதாயின் இம்முறையை ஆளலாம். ஆனால் நிரந்தரமாக மதிப்புக் குறைவாக வைப்பது நோக்கமாயின் அளவற்ற பண வீக்கமே விளையும். ஆகவே மதிப்பிறக்கத்துக்கு ஓர் எல்லை

உண்டு; ஏனெனில் ஆபத்து உண்டு. ஆகவே நம் முடிவு 'தலையீடு' தற்காலிகமாக மட்டும் ஆளப்படலாம் என்பதே.

அடுத்தபடி, மாற்று நெளிவைத் தடுப்பதற்குத் 'தலையீடு' சாத்தியமா என்று பார்ப்போம். அரசாங்கம் தன் கையில் அயல் நாட்டுச் செலாவணிகளை வைத்துக் கொண்டு சிலபோது வாங்க வேண்டும், சிலபோது விற்க வேண்டும். இப்படிப்பட்ட நடவடிக்கை மாற்றுச் சமப்பாட்டுக் கணக்கின் கீழ் நடந்தது. 'தலையீடு' பொருளாதாரத்தின் அடிப்படை மாறுதல்களால் ஏற்படும் வீத மாறுதல்களைத்தவிர்க்க ஆளப்படாது; தற்காலிகச் சிறு வீத மாறுதல்களைச் சமாளிக்கவே ஆளப்படும்.

### மாற்றுக் கட்டுப்பாடு விதிமுறை

மாற்றுக் கட்டுப்பாடு ஒரு சட்டத்தின் மூலம் நிறுவப்படும். அந்தச் சட்டத்தில் முக்கியமான அம்சங்கள் சில உண்டு. எந்த அயல்நாட்டுச் செலுத்தையும் தனியார் நேரிடையாகச் செய்வது கூடாது. மைய பாங்கு அல்லது அது குறிப்பிடும் ஏஜெண்ட் மட்டும் செலுத்த அனுமதி தரலாம். அனுமதிக்குச் சில நிபந்தனை கள் உண்டு. இப்படிப்பட்ட நிபந்தனைகளின் மூலம் பணத்துறை அதிகாரிகள் அயல்நாட்டுச் செலுத்துகளைப் பொருளாதார நிலைக்கேற்ப ஒழுங்குபடுத்தச் சட்டப்படி உரிமை பெறுகிறார்கள். கட்டுப்பாட்டுக் கொள்கையின் அடிம்படையில் சில விதிகள் வகுக்கப்படும். அவைகளைச் செயல்படுத்தச் சில நடைமுறைகள் வகுக்கப்படும். இவைகளைத்தான் மாற்றுக் கட்டுப்பாடு (exchange control) என்பது. மாற்றுக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின் அடிப்படை விதி என்னவெனில், தனியார் அயல் நாட்டுச் செலுத்துத் தொகையைப் பெறவோ தரவோ கூடாது. அரசாங்கத்தின் வழியாகவேதான் இவைகள் நடக்கவேண்டும். மாற்றுக்கட்டுப்பாட்டு விதிப்படி, அரசாங்க அதிகாரம் இன்றியும் நிபந்தனைகளுக்கு உட்படாமலும் செய்யப்படும் அயல்நாட்டுச் செலுத்துச் சட்ட விரோதமானது. இந்த விதி பின்பற்றப் படுகிறது என்பதைப் பார்த்துக்கொள்ள, தணிக்கை செய்ய, வழி வேண்டும். அயல்நாட்டுப் பணத்தைப் பெறும்போதும், அயல்நாட்டுக்குச் செலுத்தும்போதும் அதை அறிய அரசாங்கத் துக்கு வசதி வேண்டும். மாற்றுக் கட்டுப்பாடு எல்லாவிதப் பண மாற்றுகளுக்கும் பொதுவாக இருக்கும். ஒருவகைப் பணச் செலுத்துக்கு மட்டும் கட்டுப்பாடு இருந்தால் வாணிபம் கட்டுப் பாடில்லாத திசைக்குத் திரும்பிவிடும். ஆகவே மாற்றுக் கட்டுப் பாடு, நாட்டினருக்கும் அயல்நாட்டினருக்கும் நடக்கும் பேரங்கள்

அனைத்துக்கும் பொதுவாக வேண்டும். குடிகள் அனைவருடைய அயல்நாட்டுச் செலாவணி வரவு செலவுகளைக் கட்டுப் படுத்த வேண்டும். அயல்நாட்டாரது செலாவணியைப் பெறு வதையும் செலவு செய்வதையும் கட்டுப்படுத்த வேண்டும். மாற்றுக்கட்டுப்பாடு விதிகள் குடிகள் அனைவரும் பெறும் அயல் செலாவணியை மைய பாங்குக்கு விற்கவேண்டுமென்றும், வேண்டிய செலாவணியை அதனிடமிருந்து பெறலாம் என்றும் கூறும். அயலார் தம் நாட்டுப் பணத்தைப் பெறுவது பற்றிச் செய்யும் ஏற்பாடு என்னவெனில், 'அயலார் கணக்குக்கள் (non-resident accounts) ஆரம்பிப்பதாகும். இதில் அயல் நாட்டினருக் குரிய பணம் வரவு வைக்கப்படும். அரசாங்க உத்தரவின் மேல்தான் பயன்படுத்தலாம். இதைத் தடை செய்த கணக்குகள் (blocked accounts) என்பர். அடுத்தபடி, எப்படி அனுமதித்த செலுத்துக்களைச் செய்வது என்பது பற்றி முறை வகுக்கப் பட்டிருக்கும். 1945-க்குமுன் ஒரு குறிப்பிட்ட அரசாங்க அலுவலகத்தின் வழியாகத்தான் வரவும் செலவும் நடைபெற்றன. பின்னர், பாங்குகள் மூலம் இவை நடைபெறுவது வழக்க மாயிற்று. அயல்நாட்டிலிருந்து பெறும் அயல் செலாவணியைப் பாங்குக்கு விற்கவேண்டும். இல்லாவிட்டால் ஷி அயல்நாட்டான் கணக்கில் பற்று எழுதப்படும். அயல்நாட்டுக்குச் செலுத்துவதா யின் அனுமதியின் பேரில் பாங்கின் மூலம் செலுத்தலாம். அயல் நாட்டான் கணக்கில் வரவு எழுதலாம். இப்படியாக அரசாங்கம் அயல்நாட்டுச் செலாவணியில் சர்வாதீனம் பெறுகிறது.

ஆனல் நாட்டினர் அயல்நாட்டுச் செலாவணி வரவை மறைக்க முயலலாம். நாட்டினரும் அயல்நாட்டினரும் மறை முகமான தொடர்பு மூலம் கட்டுப்பாட்டை ஏமாற்றலாம். அவர்கள் ஆளக்கூடிய முறைகள் பல. ஒரு சாதாரண முறை பொய் விலை எழுதுவது. அயல்நாட்டிலிருந்து வர வேண்டிய தொகை முழுவதும் அரசாங்கத்துக்குத் தெரியப்படுத்தாமல் குறைந்த தொகை மட்டும் விலைப்பட்டியலில் காணப்படும். மீதி அயல்நாட்டில் இருக்கும். இதைக் கொண்டு வேறு ஏதாவது பொருளை வேறு அயல்நாட்டில் வாங்க வைத்திருக்கலாம். சில போது விலையை அதிகமாகக் காட்டுவதுண்டு. இறக்குமதிப் பொருள்களின் மதிப்பு இப்படி அதிகமாகக் காட்டப்படும். இதனல் பொய்யாக அயல்நாட்டுச் செலாவணியைப் பெறு வார்கள். இப்படி அயல்நாட்டில் முதலைக் குவிப்பார்கள். பின்னர் அங்கு வேறு முறையற்ற காரியத்துக்குப் அயல்நாட்டுப் பணத்தை உபயோகிக்கலாம்.

ஏமாற்றும் மற்றொரு முறை, பைசல செய்வதற்குப் பதிலி சாதனங்களை ஆள்வது. இந்தப் பதிலி சாதனங்கள் எளிதில் எடுத்துக் கொண்டு போகக் கூடியனவாக இருக்கும். உண்டியல்கள், செக்குகள், பாங்கு நோட்டுகள், பாண்டுகள், நகைகள், ஸ்டாம்புகள், கலைப் பொருள்கள் முதலியவைகள் ஆளப்படலாம். ஆகவே இவைகளின் ஏற்றுமதியும் இறக்குமதியும் கூட லைசென்சுக்கு உட்பட வேண்டும். ஆனால் உண்மையில் எவ்வளவு விளக்கமாகப் பரந்த விதிகளை நியமித்த போதிலும் கட்டுப்பாடு முற்றும் ஒழுங்குற்றதாக இருக்காது. ஓரளவு கள்ளச் சந்தை (black market) இருக்கவே செய்யும். ஒருவாறாக மாற்றுக் கட்டுப்பாடுகளை நியமித்துவிட்டால் பணத்துறை அதிகாரிகள் செலுத்துநிலை சம்பந்தமான கைக்கோளைப் பின்பற்றிச் செலுத்துக்களை ஒழுங்கு படுத்த முடியும்.

மேற்கண்ட முறைகளில் நிறுவப்படும் மாற்றுக் கட்டுப்பாடு, மக்கள் பேரங்கள் நிகழ்ந்து, அவைகளின் வழியாகச் செலுத்துப் பொறுப்புக்கள் தோன்றியபோது காணப்படுகிறது. மக்கள் பேரம் செய்வதைத் தடுக்கவில்லை. அதிகாரிகள் அயல்நாட்டுப் பேரங்களைத் தடுக்காது அந்தப் பேரங்களின் விளைவான செலுத்துக்களை மட்டும் கட்டுப்படுத்துவது, கடன் கொடுத்த அயல்நாட்டான் கடனைத் திரும்பப் பெறுவதைத் தடுக்கிறது. அயல்நாட்டுக்குச் சேர வேண்டிய பணத்தைத் தடை செய்வதனால் அயல்நாட்டை வற்புறுத்திச் சில பொருளாதாரச் சலுகைகளைப் பெற, ஜெர்மனி போன்ற நாடுகள் முயன்றன. கடன் கொடுத்த நாடு பலமான நாடாயிருந்தால் அது வற்புறுத்திப் பணத்தை விடுதலை செய்ய முயலும். இதனால் நாடுகளுக்கிடையே முரண்பாடுண்டாகும். இந்த முறை போர்க்காலத்துக்குப் பின் கைவிடப்பட்டுள்ளது. இப்போது அரசாங்கத்தின் தலையீடு, பேரங்கள் தோன்றும்போதே ஆரம்பிக்கவேண்டுமென்று கருதப்படுகிறது. செலுத்துக்குக் காரணமான பேரத்தையே கட்டுப்படுத்த வேண்டும் என்கிற கொள்கை வந்துவிட்டது. ஆகவே அரசாங்கம் ஏற்றுமதியையும் இறக்குமதியையும் முதல் பெயர்ச்சியையும் கட்டுப்படுத்த வேண்டியதாகிறது. இப்படி வாணிபப் பேரங்களைக் கட்டுப்படுத்துவதைக் கணியக் கட்டுப்பாடு (quantitative restriction) என்பர். இறக்குமதி சம்பந்தமாக அரசாங்கம் தனிப்பட்டோருக்கு லைசென்சு கொடுக்கலாம். ஆனால் லைசென்சு முறை அரசாங்கத்துக்கு அதிக வேலையை உண்டாக்கும். மற்றொரு முறை இறக்குமதிக் கோட்டா (quota) முறை. இந்தக் கோட்டா அளவுக்கு முதலில் வந்தவர்களுக்கு லைசென்சு கொடுக்கப்படலாம், அல்லது முன் காலத்தில் இறக்குமதி செய்த வீதத்தில்

கோட்டாவைப் பகிர்ந்து கொடுக்கலாம். ஏற்றுமதியும் கட்டுப் பாட்டுக்கு உட்படலாம். இதன் வழியாக ஏற்றுமதியிலிருந்து பெறும் செலாவணி கட்டுப்பாட்டுக்குள் அடங்கும். எந்த அளவுக்கு எந்தப் பொருள்களை இறக்குமதிசெய்ய அனுமதிப்பது என்பது செலுத்து நிலையைப் பொறுத்தது. பேரக் கட்டுப்பாடும் செலுத்துக் கட்டுப்பாடும் இரண்டும் இருக்கும்போது பேர லைசென்சோடு செலுத்து லைசென்சும் இருக்கும். உதாரணமாக இறக்குமதி லைசென்சோடு அயல்நாட்டுச் செலாவணிக்கு லைசென்சும் தரப்படும்.

அயல்நாட்டு முதல் பெயர்ச்சியைக் கட்டுப்பாட்டுக் குட்படுத்துவது கடினம். செலுத்து நிலையில் சிக்கல் கண்டுள்ள ஒரு நாட்டிலிருந்து முதல் பெயர்ச்சி அனுமதிக்கப்படுவதில்லை. பழக்கமான நாடுகளுக்கு மட்டும் அனுமதிக்கப்படும். முதல் உள்ளோட்டமும் கண்காணிக்கப்படும். ஏனெனில் பிற்காலத்தில் இவைகளுக்கு வட்டியும் முதலும் திருப்பித்தர வேண்டிவரும். கடன் கொடுக்கும் அயல்நாட்டார் திரும்பிப் பெறுவது பற்றி உத்தரவாதம் கேட்பார்கள். நாட்டின் பொருளாதார நலம் காரணமாக முதல் பெயர்ச்சி இருந்தாலொழிய அரசாங்கம் அவர் களுக்கு உறுதி கூற முடியாதிருக்கலாம். அரசாங்கம் அனுமதிக் காத முதலினப் பெயர்ச்சி தடைப்பட்ட கணக்கில் இருக்கும்.

இதுவரை செலுத்துக் கட்டுப்பாட்டுக்கு அடிப்படையாக அயல் செலாவணிகளில் அரசாங்கம் சர்வாதீனம் பெறும் முறைகளை விளக்கினோம். கட்டுப்பாட்டின் மற்றோர் அம்சம் அரசாங்கம் எந்த வகைச் செலுத்துக்களுக்கு லைசென்சு தருவது அல்லது மறுப்பது என்பதை நிர்ணயிப்பது. எல்லா அயல் நாட்டுச் செலுத்துகளையும் வரவுகளையும் அரசாங்கத்தின் கட்டுப் பாட்டுக்கு உட்பட்டனவாகச் செய்தாலும், கேட்டதற்கெல்லாம் லைசென்சு கொடுக்கலாம். அப்போது மாற்றுக் கட்டுப்பாடு உண்டே ஒழிய மாற்று ஆட்சித் தடைகள் இல்லை என்பதாகிறது. செலுத்துக்களில் சிலவற்றைத் தடுப்பது நோக்கமாகக் கட்டுப்பாடு நடவடிக்கைகளை அரசாங்கம் ஆளுமானால் மாற்று ஆட்சித் தடைகள் தோன்றுகின்றன. எத் தடைகளை விதிக்க வேண்டும் என்பது நாட்டின் பொருளாதாரக் கொள்கையை அனுசரித்து முடிவு செய்ய வேண்டிய ஒன்றாகும். முடிவுக்கேற்ப நாட்டின் மாற்றுத் தடைகள் வேறுபடும். குறிப்பிட்ட பொருள்களுக்கு, குறிப்பிட்ட நாடுகளுக்குக் கட்டுப்பாடா, பொதுப்பட்ட கட்டுப்பாடா என்பது ஒரு முக்கியமான முடிவு. அதிகாரிகள் அயல்நாட்டுச் செலாவணியில் பெற விரும்பும்

சிக்கனத்தை வாணிப வகையிலாவது அல்லது முதற் பெயர்ச்சி வகையிலாவது தலையீடு செய்து பெறலாம்.

முதலில் பண்டக் கட்டுப்பாட்டைப் பார்ப்போம். இறக்குமதியை அரசாங்கம் வெட்டியபோது உள்நாட்டில் அயல் நாட்டுப் பொருள்கள் சில கிடைக்காமல் போகும். ஆகவே இவ் வகைப் பொருள்களின் விலைகள் ஏறும். அயல்நாட்டு விலைகளுக்கும் உள்நாட்டு விலைகளுக்கும் வேறுபாடு உண்டாகும். இந்த வேறுபாடு உள்நாட்டுத் தொழில்களுக்கு ஒருவகைப் பாதுகாப்பு வரியாக வேலை செய்யக்கூடும். இதனால் நாட்டின் பொருளாதார அமைப்பே மாறும். சிலபோது இறக்குமதித் தடைகள் காரணமாக உள்நாட்டில் அநேக துறைகளில் உற்பத்திக்கு வேண்டிய பொருள்கள் இறக்குமதியாகாமையினால் சிக்கல்கள் உண்டாகலாம். தவிர, இறக்குமதித் தடைகள் அயல்நாட்டுச் சாமான்களை வாங்கத் தடை செய்வதன் மூலம் உள்நாட்டுப் பண்டங்களையே வாங்கச் செய்து, இதனால் ஏற்றுமதியாகி வந்த பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படாமல் உள்நாட்டிலேயே விலையாகிவிடலாம்.

இரண்டாவது, முதல் பெயர்ச்சிக்குள்ள தடைகள், நாடுகளுக்கிடையே உள்ள கடன் ஒப்பந்தங்களைப் பாதிக்கின்றன. தவிர, ஒரு நாடு எடுக்கும் நடவடிக்கைகளுக்கு எதிராக, எதிர்த் தாக்கலாக (retaliation) அயல்நாடுகள் நடவடிக்கை எடுக்கக்கூடும். அந்த எதிர்நடவடிக்கைகள் முதல் நாட்டின் அயல்நாட்டுச் செலுத்துநிலையைக் கேவலப்படுத்தலாம். அயல் நாட்டிலிருந்து கடன் பெறுவது மூலம் தன்னுடைய செலுத்துச் சிக்கலைக் குறைத்துக்கொள்ள நினைக்கும் நாடு அயல்நாட்டாரோடு முரண்பாடு உண்டாகும்படி கட்டுப்பாடு நிறுவுவது சரியன்று. முதல் பெயர்ச்சி, தடைக்குட்பட்டால் இவ்விதமாக அயல்நாட்டிலிருந்து உதவி பெறுவது சாத்தியமானதன்று. சிலபோது தடையிடும் நாடுகள் எந்த நாட்டின் செலுத்து நிலையில் சிக்கல் ஏற்படுகிறதோ அந்த நாட்டுச் செலுத்துகளுக்கு மட்டும் தடைகளை விதிக்க வேண்டிவரலாம். இது வேற்றுமைப்படுத்தும் (discriminatory) நடவடிக்கையாகையால் சிக்கல்களை உண்டாக்கலாம்.

அடுத்தபடி மாற்றுத் தடைகளால் ஏற்படும் சில புதுப் பிரச்சினைகளைப் பார்ப்போம். தடைகள் செலுத்துப் பிரச்சினைகளின் விளைவுகளைத் தவிர்க்க முயல்கின்றனவேயன்றி பிரச்சினை மூலகாரணங்களைத் தவிர்ப்பன அல்ல. தடைகள் சில புதுப் பிரச்சினைகளையும் உண்டாக்கலாம். முதலாவதாக,

இறக்குமதித் தடை நடவடிக்கைகள் மறைமுகமாக ஏற்று மதியைக் குறைக்கக்கூடும். இதனால் ஏற்கெனவேயுள்ள அயல் நாட்டுச் செலாவணிப் பற்றுக்குறை இன்னும் அதிகமாகலாம். வெளிநாட்டுப் பண்டங்களில் செலவு செய்ய முடியாத பணம், உள்நாட்டுப் பொருள்களுக்குச் செலவு செய்யப்பட்டு அவைகளின் ஏற்றுமதி குறையலாம். உள்நாட்டு விலைக்கும் வெளிநாட்டு விலைக்கும் வேறுபாடு உண்டானால், ஏற்றுமதி அயல் நாட்டில் போட்டியிடச் சக்தியற்றதாகும். இதோடு அயல் நாடுகளும் தற்காப்பாகத் தங்களுடைய அயல்நாட்டுச் செலுத்து நிலையைக் காப்பாற்ற எடுக்கும் நடவடிக்கைகளும் ஏற்றுமதியைப் பாதிக்கும். இறக்குமதித் தடையினால் தூண்டப்படும் உற்பத்தி ஏற்றுமதிக்குப் பயன்படாமல் போகக்கூடும். இறக்குமதியைத் தடைசெய்து அயல்நாட்டுச் செலுத்து நிலையைச் சீர்செய்ய முயல்வதைவிட, ஏற்றுமதியை நேரிடையாகத் தூண்டிச் சரி செய்ய முயல்வது சரியான வழியாகும். ஆனால் இறக்குமதி கட்டுப்பாட்டைப்போல ஏற்றுமதித் தூண்டுதல் செயல் முறையில் எளிய காரியம் அன்று.

இரண்டாவது, மாற்றுக் கட்டுப்பாடு அயல் நாடுகளில் எதிரிடை நடவடிக்கைகளைத் தூண்டக்கூடும். இரு நாடுகளும் போட்டியிட்டுக் கொண்டு இறக்குமதியைக் குறைக்கும் நிலை வரும். இது இரண்டு நாடுகளுக்கும் பாதகத்தை விளைவிப்ப தாகையால் நாடுகள் முடிவில் ஒரு வகை ஒப்பந்தத்துக்கு வரமுயலலாம். இவ்வித ஒப்பந்தம் தோன்றினால் அது பொருளா தாரப் போரைத் தவிர்த்தாலும் மாற்றுத் தடை முறையைச் சிக்கலானதாக ஆக்கிவிடும். மாற்றுத் தடைகள் பிற நாட்டோடு கலந்து ஆலோசித்துப் பண்டங்களுக்கேற்ப அல்லது நாடுகளுக் கேற்ப அமைக்கப்பட வேண்டுமாதலால் சிக்கல்கள் உண்டாகும்.

மூன்றுவதாக, மாற்றுத் தடைகள் செயற்கையான முறையில் செலுத்து நிலையைச் சீர் செய்ய முயல்வதாகையால், நடப்பு மாற்று வீதம் சமநிலை வீதத்திலிருந்து எவ்வளவுக்கு விலகியுள்ளதோ அந்த அளவுக்கு மாற்று வீதக் கட்டுப்பாடு செய்வது கடினமான வேலையாகிப் பிரச்சினைகள் அதிகமாகும். ஆகவே மாற்று வீதத்தைத் திருத்தும் நடவடிக்கையும் தேவைப் படலாம்.

**பன்னாட்டு மாற்று ஒப்பந்தங்கள்**
**(International Exchange Agreements)**

நாடுகள் தனித்தனியே செலுத்துத் தடைகள் ஏற்படுத்தும் போது செலுத்துப் பிரச்சினை இல்லாத ஒரு நாடு பாதிக்கப்

படலாம். இதைத் தவிர்ப்பதற்குச் சம்பந்தப்பட்ட நாடு களிடையே மாற்று ஒப்பந்தங்கள் தோன்றலாம். மாற்றுக் கட்டுப்பாடுடைய இரண்டு நாடுகள் ஒன்றையொன்று பாதிக்காம லிருக்கும் பொருட்டு ஒப்பந்தத்தை நாடலாம்.

இப்படிப்பட்ட ஒப்பந்தங்களில் சிலவகைகளை விளக்குவோம். ஒரு வகை, தனிமுறையில் ஈடு (Private Compensation) எனப் படுவது. ஒரு நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்வோன் அயல்நாட்டி லிருந்து இறக்குமதி செய்யும் ஒருவனைக் கண்டுபிடித்துத் தன் ஏற்றுமதிக்குச் சேரவேண்டிய தொகையை அவனிடமிருந்து பெற்றுக்கொள்வான், அதேபோல அயல்நாட்டிலும் ஏற்றுமதி செய்பவன் முதல் நாட்டிலிருந்துஇறக்குமதி செய்பவனிடமிருந்து தொகையைத் தன் நாட்டுப் பணத்தில் பெற்றுக்கொள்வான். ஆகவே ஏற்றுமதி செய்பவர்கள் அந்தந்த நாட்டுப்பணத்திலேயே இறக்குமதி செய்பவர்களிடமிருந்து ஏற்றுமதிக்குரிய பணத்தைப் பெற்றுக்கொள்கிறார்கள். இந்த முறையின் நோக்கம் என்ன வெனில், ஏற்றுமதி செய்பவனுடைய தொகை அயல்நாட்டில் தடைக் கணக்கில் (Blocked Accounts) முடங்காமல் இருக்கச் செய்வதாகும். இம்முறையில் இரண்டு எதிர்முக பேரங்கள் தேவைப்படுகின்றன. இந்த இரண்டு பேரங்களின் மதிப்பும் சமமாக இருக்கவேண்டியிருக்கிறது. உண்மையில் இம் முறையில் பண்ட மாற்று நடக்கிறது. ஆகவே அதன் இடர்ப் பாடுகள் உள. இந்த முறையில் நான்கு தரத்தார்கள் இருக் கிறார்கள். ஒரு நாட்டிலிருந்து ஏற்றுமதி செய்பவர்களும் இறக்குமதி செய்பவர்களும் ஒருவரையொருவர் கண்டுபிடித்துச் சந்தித்து ஒப்பந்தம் செய்ய வேண்டியிருக்கிறது. இரண்டு பேரங்களிலும் தொகை ஒன்றாக இருக்கவேண்டும். ஒரே காலத்தில் பேரம் நிகழவேண்டும். ஒரு தரத்தாரைக் கட்டாயப் படுத்தி ஒப்பந்தத்துக்கு அழைத்தால் அவர்களுக்குக் கூடுதலாகக் கொடுக்கவேண்டி வரலாம். ஏற்றுமதி செய்பவன் தான் அக்கறை யுடையவன். இறக்குமதி செய்பவனுக்கு அவன் அதிகப்படி கொடுக்க வேண்டி வரலாம். இந்த முறையின் முக்கியமான குறை, வாணிபம் தொடர்ச்சியாகநடைபெறுவது முடியாததாகும். இப்படித் தனிப்பட்டோர் வழியாகப் பேரளவில் வாணிபம் நடக்க முடியாதாகையால் அரசாங்கங்களே தங்களுக்குள் ஒரு வித ஒப்பந்தத்துக்கு வரும் முறை தோன்றியது.

இவ்வகை முறையைத் தீர்வு ஒப்பந்தங்கள் (Clearing Agreements) என்பார்கள். இதை ஒருவகையாக விளக்க லாம். X நாட்டிலிருந்து செய்யப்படும் ஏற்றுமதி வரவு Y

நாட்டில் தடை செய்த கணக்கில் முடங்கிவிடும். அது போலவே Y நாட்டிலிருந்து ஏற்றுமதிகளின் மதிப்பு X நாட்டில் தடைக் கணக்கில் முடங்கிவிடும். ஆகவே இரு நாட்டிலும் வெளியேற வேண்டிய தொகைகள் இருக்கும். இந்த நிலையில் X-ல் முடங்கி உள்ள தொகையைக் கொண்டு X-ல் இருந்து ஏற்றுமதிச் செய்பவருக்குப் பைசல் செய்யலாம். அதேபோல் Y-ல் முடங்கியுள்ள தொகையை Y-ல் இருந்து ஏற்றுமதிசெய்பவருக்குப் பைசல் செய்யலாம். இவ்வகையாக, செலுத்து அவசியமின்றிக் கடன் பைசல் செய்யப்படும். இவ்வித ஒப்பந்தம் மாற்றுத்தடையுடைய இரு நாடுகளுக்கிடையே இருக்கும். ஒன்று மாற்றுத் தடையுடைய நாடாகவும் மற்றொன்று மாற்றுத் தடையில்லாத நாடாகவும் இருக்கலாம். அப்போது தடையில்லாத நாடு அயல் நாட்டில் ஏற்றுமதித் தொகையை இருப்புச் செய்து பைசலுக்கு வழி செய்யவேண்டிவரும். இந்த முறை ஆளப்படுவதற்கு இரண்டு நாடுகளுக்குள் ஒத்துழைப்புத் தேவையாகும்.

இரண்டாவது உலகப்போருக்குப் பின் இவ்விதப் பைசல் ஒப்பந்தங்கள் நடைமுறையிலிருந்து மறைந்துவிட்டன. இந்த முறையிலிருந்த இரண்டு முக்கியக் குறைகள், வணிகர்கள் காத்திருக்க வேண்டியிருந்ததும், எல்லாவிதப் பேரங்களும் ஒரு மைய நிலையத்தில் குவிக்கப்பட வேண்டி யிருந்தது மாகும். இந்தக் குறைகளைத் தவிர்ப்பதற்காகச் செலுத்து ஒப்பந்தங்கள் (Payment Agreements) என்ற முறை தோன்றியது. இந்த முறையின் தனி அம்சம் என்னவெனில், ஒப்பந்தத்தில் ஈடுபட்ட நாடுகள் ஒன்றுக்கொன்று ஓரளவுக்குக் கடன் வசதி செய்ய ஒப்புவதாகும். A நாட்டில் இறக்குமதி செய்தவன் தான் கொடுக்க வேண்டிய தொகையை மைய நிலையத்துக்குச் செலுத்திய உடனே, B நாட்டில் ஏற்றுமதி செய்தவனுக்குச் சேர வேண்டிய தொகை கொடுக்கப்படும். இதனால் செலுத்துக் கால தாமதம் தவிர்க்கப்படுகிறது. இது நாடுகள் ஒன்றுக்கொன்று கடன் வசதி செய்து கொடுக்க ஒப்புக்கொண்டால் சாத்தியமாகிறது. A நாட்டின் பணத்துறை அதிகாரிகள் B நாட்டின் பணத்துறை அதிகாரிகளுக்குக் கடன் வசதி செய்ய ஒப்புவதால் A நாட்டில் ஏற்றுமதி செய்தவன் உடனே தொகையைப் பெற முடிகிறது. ஒரு நாடு மற்றொரு நாட்டுக்கு எவ்வளவு கடன் வசதி செய்ய வேண்டுமென்பது ஒப்பந்தத்துக் குட்பட்டிருக்கும்.

செலுத்து ஒப்பந்தங்கள் செய்யப்படும்போதே வியாபார ஒப்பந்தங்கள் (trade agreement) செய்யப்படுவது வழக்கம். வியாபார ஒப்பந்தம் எந்த வகைப் பண்டங்களுக்கு எந்த

அளவுக்கு இரு நாடுகளிலும் லைசென்சு தரப்படும் என்று வரையறுக்கும். இப்படி ஒப்பந்தத்துக்கு உட்பட்ட பண்ட அளவு கோட்டா எனப்படும். வர்த்தக ஒப்பந்தம் ஒரு குறிப்பிட்ட கால வரையறைக்கு மட்டும் செய்வது வழக்கம். பொருளாதார நிலைமை மாறும்போது அதன் அம்சங்களும் மாறும்.

கடைசியாக ஸ்டெர்லிங் வட்டாரம் கையாளப்படும் முறை ஒன்றைக் கூறலாம். இந்த வட்டாரத்தைச் சேர்ந்த நாடுகள் இலண்டன் வழியாகப் பைசல் செய்து கொள்கின்றன. இலண்டன் பிற நாடுகளுடன் செய்யும் ஒப்பந்தங்களில் வட்டார நாடுகளும் சேர்ந்து கொள்கின்றன. இந்த வட்டாரத்துக்குள் ஏற்படும் பாக்கிகள் ஸ்டெர்லிங் வகையில் தீர்க்கப்படுகின்றன. பொதுவாகக் கூறினால் வட்டார நாடுகளுக்குள் தடையின்றிச் செலுத்துக்கள் இருக்கும். வட்டாரத்துக்கு வெளிப்பட்ட நாடுகளோடு செய்யவேண்டிய செலுத்துக்கள் ஓர் அயல்நாட்டுச் செலாவணித் தேக்கம் மூலமாக நடைபெறும். இப்படியாகவே டாலர் தேக்கம் (pool) நிறுவப்பட்டு ஆளப்பட்டது.

### மாற்றுத் தடைகளின்கீழ் மாற்று வீதம்
(Exchange rate under exchange restrictions)

ஒரு நாடு மாற்றுக் கட்டுப்பாட்டு விதிகளைச் செம்மையாக அமைத்துவிட்டால் அது விரும்பும் மட்டத்தில் மாற்று வீதத்தை நிர்ணயிக்க முடியும். எல்லா வீத மாற்று பேரங்களும் அதன் வழியாக அதன் உத்தரவின் பேரில் நடக்க வேண்டியிருக்கும். ஆகவே, அதற்குச் சர்வாதீன நிலை ஏற்படுகிறது. விரும்பிய வீதத்தை அது நடைமுறைக்குக் கொண்டுவர முடியும். ஆனால் மாற்றுக் கட்டுப்பாடு முறை இருக்கும்போது மாற்றுவீதம் எதுவாகவேனும் இருக்கலாம் என்று நினைக்கக்கூடாது. கட்டுப்பாட்டுக்கு உள்ளான ஒரு நாட்டின் செலாவணி பொதுவாக மிக மதிப்புடையதாக இருக்கும். அங்காடிச் சக்திகள் வேலைசெய்ய இடம் இல்லாத காரணத்தால் இந்த வீதம் உலகப் பொருளாதார நிலைக்குப் பொருத்தமற்றதாக விலகக்கூடும். மதிப்பு அதிகப்பட அதிகப்பட அந்த நாட்டின் இறக்குமதி அதிகமாகி ஏற்றுமதி குறைந்து செலுத்து நிலையில் நெருக்கடி உண்டாகும். இதைச் சமாளிக்க அரசாங்கம் மேலும் மேலும் பரந்த அளவில் கண்டிப்பான மாற்றுக் கட்டுப்பாடுகளை நிறுவவேண்டி வரும். ஒரு நாட்டின் செலாவணி வீதம் சமநிலை வீதத்திற்கு எவ்வளவு விலகி இருக்கிறதோ அவ்வளவுக்கு மாற்றுக் கட்டுப்பாடு முறையும் சிக்கலாக இருக்கும். ஆதாயத்தைக் கருதும் ஏற்றுமதி வியாபாரிகள் செலாவணியின் மிகை மதிப்பின் காரணமாக ஆதாயம்

குறையும் என்று கண்டால் ஏற்றுமதி குறையும். செயற்கையாக ஏற்றிய மாற்று வீதத்தையுடைய நாட்டின் ஏற்றுமதி குறைந்து விடும். ஆனால் இறக்குமதி இலாபகரமாக இருப்பதால் அதிகப் படும். ஆகவே அரசாங்கங்கள் மாற்றுக் கட்டுப்பாட்டுக்குடந்தை யாய் மாற்று வீத வேறுபாடுகளையும் களைய முயலவேண்டும். வீதத்தை நேரிடையாக மாற்றலாம். மறைமுக முறையாலும் இதன் விளைவைப் பெறலாம்.

**மாற்றுத் தடையின் கீழ்ப் பல்வகை வீத முறைகள்**

மாற்றுத் தடையிருக்கும்போதே அதிகாரிகள் மாரு வீதம், நெகிழும் வீதம், மாறும் வீதம் ஆகியவற்றில் எதை வேண்டுமானு லும் நிறுவலாம். அன்றியும் வேறு வீத முறைகளும் அவர் களுக்குச் சாத்தியம்.

(1) மாற்றுத் தடை முறையின் கீழ்ப் பணத்துறை அதிகாரிகள் மாற்று அங்காடியில் சர்வாதீனர்களாய் இருப்பதால் தாங்களே ஒரு வீதத்தை நிர்ணயித்து அதன்படி அயல்நாட்டுச் செலாவணிகளை வாங்கவும் விற்கவும் செய்வார்களானல் மாற்று வீதம் மாருத ஒன்ருக இருக்கும். மாற்றுத் தடைக் கட்டுப் பாட்டின் கீழ் இந்த வகை இருக்கும்போது அரசாங்கத்தின் அதிகாரத்தின்மேல்தான் யாரும் அங்காடியில் வாங்கவும் விற்கவும் கூடும்.

(2) மாற்றுக் கட்டுப்பாடுடைய அங்காடியிலே வாங்கு பவர்கள் விற்பவர்கள் நேரிடையாகப் பேரம் செய்ய அனுமதி உண்டாயின் வீத மாறுதல்களுக்கு இடம் உண்டு. பணத்துறை அதிகாரிகள் வீத மாறுதல் எல்லைகளை நிர்ணயிக்காமல் விட்டு விடுவார்கள். ஆனல் அவர்கள் யார் விற்பவர்களாக வாங்குபவர் களாக அங்காடியில் இடம்பெறலாம் என்பதை நிர்ணயிப்பதன் மூலம் மறைமுகமாக வீதத்தையும் நிர்ணயிக்கலாம். தவிர, விரும்பும்போது நேராகவும் தலையிட்டு வீதத்தைத் திருத்த முயலமாம். இப்படி மாற்றுக் கட்டுப்பாடு இருந்தும் வீதங்கள் மாறக்கூடிய அங்காடியைக் கட்டுப்பாடுடைய சுயேச்சை அங்காடி (controlled free market) என்பார்கள். கட்டுப்பாடு என்பது இங்கு அங்காடியில் இடம்பெற உள்ள உரிமையைக் கட்டுப் படுத்துவதைக் குறிக்கிறது. சுயேச்சை என்பது வீதம் மாறக் கூடியதைக் குறிக்கிறது.

(3) தடையிலாது அயல் நாட்டுச் செலுத்தை அனுமதிக்கும் மாற்று முறைகளின் கீழ் ஆர்பிட்ரேஜ் என்கிற பேரத்தின் மூலம் பல நாணயங்களுக்குள்ளும் மாற்று வீதங்கள் ஒருமைப்பாடு அடையும். மாற்றுக் கட்டுப்பாடு உள்ளபோது இவ்வித ஆர்பிட்ரேஜ் முடியாது. இந்தச் சூழ்நிலையில் பன்மை வீத முறை (multiple exchange system) நிறுவப்படலாம். இதில் பல்வகைகள் உண்டு. (a) கட்டுப்பாட்டுக்குட்பட்ட அங்காடியில் பல செலாவணிகளுக்கிடையில் உள்ள வீதங்கள், கட்டுப்பாடு இல்லாத அங்காடியில் அவைகளுக்கிடையிலுள்ள வீதங்களி லிருந்துவேறுபடலாம். இது நிகழும்போது குறுக்கு வீதங்கள் (cross rates) முறிந்ததாகக் (broken) கூறப்படும். கட்டுப்பாடு செய்யும் நாடு ஒவ்வொரு நாட்டோடும் உள்ள வியாபார நிலையைக் கருதித் தகுந்தபடி தொடர்பைக் கட்டுப்படுத்தினால் இது நிகழும். ஒவ்வொரு நாட்டோடும் தனிச் சமநிலை ஏற்பட ஒரு தனி வீதம் நிறுவப்படும். இப்படி நிறுவிய வீதங்கள் ஆர்பிட்ரேஜ் மூலம் குலைந்து போகாமல் இருப்பதற்கு ஒவ்வொரு நாட்டோடு செய்யப்படும் பேரங்கள் குறிப்பிட்ட செலாவணியில் தான் நடைபெற வேண்டுமென்று வரையறுக்கலாம். ஆனால் இப்படிச் செலாவணியை வரையறுப்பது பண்ட ஆர்பிட்ரேஜ நடப்பதைத் தடுக்க முடியாது. கட்டுப்பாடுடைய நாட்டின் இறக்குமதி வியாபாரி, மாற்று மதிப்பு மிகக் குறைவாய் நிர்ணயி கப்பட்ட நாட்டில் வாங்கி மாற்று மதிப்பு ஏற்றமாயுள்ள நாட்டுப் பணத்துக்கு விற்று இலாபமடையலாம்.

(b) மற்றொரு வகை, ஒரே நாணயத்துக்கு அதை வாங்கும் விலையும் விற்கும் விலையும் வெவ்வேறாகக் குறிப்பிடுவதாகும். இந்த வேறுபாடான வீத முறை ஒன்று அல்லது பல நாணயங் களுக்கு ஆளப்படலாம். இந்த முறை வியாபாரத்தை வளர்ப் பதற்கு ஆளப்படுவதுண்டு. அயல்நாட்டில் போட்டியிடச் சக்தியற்ற ஏற்றுமதிக்காரர்களிடமிருந்து மதிப்பிறக்கமான வீதத்தில், (அதாவது உள்நாட்டுப் பணத்தில் அவர்களுக்கு அதிகம் கிடைக்கும் வீதத்தில்) அயல்நாட்டுச் செலாவணி வாங்கப்படும். எதிரிடையாக அமித இலாபம் தரும் ஏற்றுமதி செய்வோரிடமிருந்து செலாவணியைக் குறைந்த மதிப்புடன் வாங்கலாம். இறக்குமதி சம்பந்தமாகப் பல்வகை இறக்குமதிகளுக்கும் பல்வேறு மாற்று வீதங்கள் நிர்ணயிக்கப்பட லாம். போகப்பொருள்களின் இறக்குமதிக்கு அயல் செலாவணி ஏற்றமான விலையில் விற்கப்படும். வியாபார இறக்குமதித் தடைக்குப் பதிலாக இந்த முறையை ஆள்வதுண்டு. அவசியமான

உற்பத்திச் சாதன இறக்குமதிகளின் விலையைக் குறைக்கவும் இவ்விதப் பல்வீத முறை ஆளப்படலாம்.

சிலபோது அரசாங்கத்தார் ஏற்றுமதி வழியாக வந்த அயல் நாட்டுச் செலாவணியில் ஒரு சதவீதத்தை அரசாங்கத்துக்கு விற்கவேண்டுமென்றும், அதை ஒரு குறிப்பிட்ட வீதத்தில் விற்க வேண்டுமென்றும், மீதியைக் கட்டுப்பாடுள்ள அங்காடியில் விற்றுவிடலாம் என்றும் திட்டப்படுத்தலாம். அதை வாங்கு வோர்கள் இறக்குமதி செய்ய அரசாங்கத்திடமிருந்து செலாவணி பெறுதவர்கள்.

(a) தடைப்பட்ட இருப்புகள் (blocked balances) சம்பந்த மாகவும் பல்வகை வீதங்களை நியமிக்கலாம். தடைப்பட்ட கணக்கில் இருந்து ஓர் அயல் நாட்டானுக்கு மாற்ற அரசாங்கம் அனுமதிக்கும்போது அவர்களுக்குள் ஒரு வீதம் தோன்றலாம்.

மேற்கண்ட முறைகளை ஆண்டு வீதங்களை மாற்றுவதற்குப் பதிலாக மறைமுகமாக வீத மாறுதலின் விளைவுகளை உண்டாக்கக் கூடும். அவைகளின் நோக்கம் வீதத்தைத் திருத்தும் நோக்கத் தைப் போன்றதாகும். அந்நியச் செலாவணி வாங்குபவர்கள் மாற்று வரி (exchange tax) என்ற ஒரு வரியைச் செலுத்த வேண்டியிருக்கலாம். சில போது இறக்குமதி லைசென்ஸ் கட்டணத்துக்கு உட்பட்டதாக இருக்கலாம். அல்லது ஏலத்தில் விடப்படுவதாக இருக்கலாம். நாட்டிலுள்ள பல்வகை வரிகள், உதாரணமாக இறக்குமதி வரி, விற்பனை வரி, போக வரி ஆகியவை செலுத்து நிலைக்கேற்ப மாற்றப்படலாம். இதே போல ஏற்றுமதியிலிருந்து கிடைக்கும் செலாவணிக்கும் கழிவுகள் இருக்கலாம். ஏற்றுமதி செய்பவர்களுக்குச் சில சலுகைகள் தரப்படுவதுண்டு. ஏற்றுமதியைப் பொறுத்து ஒரு விகிதத்தில் இறக்குமதிக்கு லைசென்ஸ் தரப்படலாம். சில போது அவசியமான இறக்குமதிகள் செய்வதாக இருந்தால் தான் ஏற்றுமதி அனுமதிக்கப்படுமென விதிக்கப்படலாம். அரசாங்கம் சில பண்டங்களின் ஏற்றுமதியையும் இறக்குமதியையும் சர்வா தீனப்படுத்திக்கொண்டு அவைகளை உள்நாட்டில் தனி விலையில் விற்கக்கூடும். இப்படி மறைமுகமாக அரசாங்கம் மாற்றுவீத விளைவுகளைத் தேடுவதற்குக் காரணங்கள் பல இருக்கக்கூடும். எல்லாரும் அறியும்படி பல்வகை வீத முறையை ஆள்வதற்கு விருப்பம் இல்லாமையும், தன்மானமும் காரணமாக இருக்கலாம், தற்காலிகமாக நடவடிக்கை எடுக்க வேண்டிய போதும் இம் முறை சிறந்ததாகக் கருதப்படலாம். அரசியல் சூழ்நிலையால் இம்முறை பொருத்தமாதானதாக ஆகலாம்.

**அனுபவத்தில் மாற்றுத் தடையின் விளைவுகள்**
**(Effeets of exchange control in practice)**

பெரிய மந்தம் இந்த நூற்றுண்டின் மூன்ரும் பத்தில் பல நாடுகளின் செலுத்து நிலையைக் குலைத்தபோது மாற்றுக் கட்டுப்பாடுகள் நடைமுறைக்கு வந்தன, இரண்டாம் யுத்தத்தின் துவக்கத்தில் இம் முறை அநேகமாக எல்லா நாடுகளிலும் ஆளப்பட்டது.

மாற்றுக் கட்டுப்பாடுகளை முதன் முதலில் ஆண்ட நாடுகள், அசாதாரணமான செலுத்து நிலைச் சிக்கல்களைத் தவிர்க்க ஆண்டன. பூர்வீக முறைகளால் சமாளிக்க முடியாதபோது இந்த முறை அவசியமாயிற்று, ஆனல் இரண்டாம் யுத்தம் துவங்கியபோது முன் எச்சரிக்கையாகத் தற்காப்புக்காக ஆளப்பட்டுப் பின் அரசாங்கத் தலையீட்டுக்குக் காரணமான ஒரு பொருளாதாரக் கருவியாக வளர்ந்தது. அரசாங்கங்கள் பொருளாதாரத்தைச் சீர்திருத்தும் நிலையில் இவை பயன்பட்டன. யுத்த காலத்தில் மாற்றுக் கட்டுப்பாடு அரசாங்கத்தின் கட்டுப்பாடு நடவடிக்கைகளில் முக்கியமானதாக இருந்தது. பண வீக்கத்தின் விளைவுகளைத் தடுக்க அவசியமாயிற்று. உள்நாட்டின் தேவைக்கேற்ப ஏற்றுமதிகள் இறக்குமதிகளை ஒழுங்குபடுத்த இது அவசியமாயிற்று. யுத்தம் முடிந்த பிறகும்கூடப் பண வீக்கத்தை அழிக்க முடியாததால் இவை நிலைக்கவேண்டியதாயிற்று. தவிர பொருளாதாரச் சீரமைப்புக்கும் மாற்றுக் கட்டுப்பாடு இருந்தாகவேண்டி இருந்தது. ஆகவே தற்காலத்தில் மாற்றுக் கட்டுப்பாடு அரசாங்கப் பொருளாதாரக் கருவிகளின் முக்கியமான ஒன்ருக அமைந்துவிட்டது. ஆனல் அதன் விளைவுகள் சில கெடுதலானவை என்பதில் சந்தேகமில்லை.

பொன் திட்டத்தின் கீழ் உள்நாட்டு மதிப்பும் வெளிநாட்டு மதிப்பும் தாமே ஒருமை பெற்றன. காகிதத் திட்டத்தின் கீழ்புற மதிப்பு உள்நாட்டு மதிப்புக்கு ஏற்றவாறு மாறியது. மாற்றுக் கட்டுப்பாடு முறையின் கீழ் புற மதிப்பும் அகமதிப்பும் தொடர்பற்று விட்டன. உள்நாட்டு விலைகளும் மாற்று வீதங்களும் வழி பிரிந்தன. ஒன்றுக்கொன்று பொருத்தமாக வேண்டிய அவசியம் இல்லாது ஆயிற்று. இப்படித் தொடர்பற்றதன் விளைவாக உள்நாட்டு விவகாரத்தையும் அயல்நாட்டு விவகாரத்தையும் தனித்தனியே நிருவகிக்கும் வாய்ப்பு அரசாங்கத்துக்குக் கிடைத்தது. பொதுவாக உள்நாட்டுப் பொருளாதார நிலைபேறு நோக்குடன் நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடிந்தது

மாற்றுக் கட்டுப்பாடு நிறுவப்பட்டதும் செலாவணி மாற்று உரிமை (exchange convertibility) தானாகவே முடிவடைந்தது. அதாவது இரண்டு நாணயங்களுக்குள் மாற்றும் வசதி போய் விட்டது. மாற்று உரிமை உள்ள வரையில் குறுக்கு வீதங்கள் பொருத்தமாயிருக்கும். தவிர, மாற்றுரிமை தரும் ஒரு நாட்டின் பணம் அயல்நாடுகளுக்குள் எப்படி ஆளப்படுகிறது என்பதைப் பற்ற அந்நாடு கவலைப்பட வேண்டியதில்லை. மற்றொரு நாட்டின் வியாபாரத்தில் தனக்கு எச்ச வரவு இருக்குமானால் அதனால் கேடு ஒன்றும் இல்லை. ஏனெனில் எச்சத்தை மாற்றி (மற்றொரு நாட்டுக்குச் செலுத்த வேண்டிய) பற்றுக்குறைக்கு ஈடுபடுத்தக் கூடும். நாடுகளுக்குள் பற்றும் வரவும் எளிதாக ஒன்றுக்கொன்று சரிக்கட்ட முடியும். இதனால் நாடுகளுக்குள் பன்முக வாணிபம் சாத்தியமாயிருந்தது. முதல் யுத்தத்துக்கு முன் இப்படிப்பட்ட பன்முக வாணிபத்தொடர்பு இருந்தது. உதாரணமாக, தென் கிழக்கு ஆசியா, அமெரிக்கா ஐக்கிய நாடுகள், மேற்கு ஐரோப்பிய நாடுகள், இந்த மூன்று வட்டாரங்களுக்குள்ளும் பன்முக வாணிபம் சுலபமாக நடைபெற்றதற்குக் காரணம், மாற்று உரிமை ஆகும். தென் கிழக்கு ஆசிய நாடுகள் நிறைய டாலர் சம்பாதித்தன. அமெரிக்காவுக்கு ஐரோப்பிய நாடுகள் கடன் பட்டிருந்தன. ஐரோப்பிய நாடுகளுக்குத் தென் கிழக்கு ஆசிய நாடுகள் கடன்பட்டிருந்தன. ஆகவே மூன்று தொகுதிகளுக் கிடையே கடன் பரிவர்த்தனை எளிதாக இருந்தது. இப்படியாக மாற்றுரிமை பன்முக வாணிபத்தை வளர்க்கிறது. ஆனால் மாற்றுத்தடை பன்முக வாணிபத்தைக் குலைக்கிறது. ஏனெனில் ஒரு நாட்டுப் பணத்தை மற்றொரு நாட்டுப் பணமாக மாற்ற உரிமையில்லை. அரசாங்கம் அனுமதித்த அளவுக்குத்தான் மாற்ற முடியும். சில வகை நாணய மாற்றுக்களை மட்டும்தான் அரசாங்கம் அனுமதிக்கும். மாற்றுரிமை இல்லாதபோது ஒவ்வோர் அயல்நாட்டுச் செலாவணி சம்பந்தமாகவும் அரசாங்கம் தனித்தனி நடவடிக்கை எடுக்கிறது. ஏனெனில், எல்லாச் செலாவணிகளும் ஒரே அளவில் கிடைப்பரியனவாகா. செலுத்து நிலையில் பற்றுக்குறையிருந்த போதிலும், பயன்படுத்த முடியாத சில செலாவணிகள் ஒரு நாட்டினிடம் இருக்கக்கூடும். ஒருபுறம் பயன்படுத்தக்கூடாத செலாவணியைச் சம்பாதிக்க நாடுகள் தயங்கின. மற்றொருபுறம் சம்பாதிக்க முடியாத நாணய நாடுகள் கடன் கொடுக்க மறுத்தன. ஆகவே நாடுகள் சோடி சோடியாக நேரடி ஒப்பந்தம் செய்து ஏற்றுமதி இறக்குமதியைச் சரிக்கட்டும்படி பார்த்துக்கொள்ள வேண்டி இருந்தது. இப்படி நடக்கும் வியாபார முறையை இருமுக வாணிபம் (bilateral trade) என்பார்கள். இருமுக வாணிபம் என்பது

பன்னாட்டு வாணிபங்களையும் செலுத்துக்களையும் பகுதிப்படுத்துவதாகும். இதனால் நாடுகளிடையே வாணிபம் ஆக்கத் திறனில் போட்டி அடிப்படையில் நடக்க முடியாது போகிறது. மலிவான நாட்டில் வாங்க வழியில்லை. விலை ஏற்றமான நாடுகளில் விற்க வழியில்லை. வாணிபப் போக்கே நாடுகளுக்குள் வேற்றுமைப்படுத்தும் (discriminatory) வகையில் நிகழும். இயற்கையாகவே இருமுக வியாபாரத்தில் ஈடுபட்ட இரு நாடுகளுக்குள் எச்சரிக்கையாகவே பேரம் நடக்கும். இருமுக பேரத்தில், பற்றுக்குறை தோன்றும் நாடுகளோடு வியாபாரத்தை குறைக்கவேண்டிக் கட்டுப்பாடு அதிகமாகவும், எச்சம் தோன்றும் நாடுகளோடு வியாபாரத்தைப் பெருக்கவேண்டிக் கட்டுப்பாடு குறைவாகவும் இருக்கும். செலுத்துக்குக் கிடைக்காது பற்றுக் குறைக்குக் காரணமாகும் பணம் கடின செலாவணி (hard currency) என்றும், எளிதாகக் கிடைக்கும் பணம் மெதுச் செலாவணி (soft currency) என்றும் குறிப்பிடப்படுவது வழக்கம். அவ்வப்போதுள்ள செலுத்துநிலைக்கேற்ப இருமுக வாணிபத்தின்கீழ் ஒரு நாடு தன்னுடைய வாணிபக் கைக்கோளை (commercial policy) அடிக்கடி மாற்றிக்கொண்டே இருக்க வேண்டும். இருமுக வாணிபத்தில் சமநிலைக் கேடு உண்டாகும் போது இரண்டு நாடுகளும் சேர்ந்து கடன் பட்ட நாட்டின் ஏற்றுமதியை உயர்த்த முயலலாம். அல்லது இறக்குமதியைக் குறைக்க முயலலாம். முன்னதே சிறந்தது; ஆனால் கடினமானது. ஆகவே, சாதாரணமாக நிகழ்வது வியாபாரத்தைக் குறைப்பதாகும். ஆகவே இருமுக வாணிபத்தினால் வியாபாரத்தின் திசை மாறுவதோடு அளவும் குறைகிறது.

மாற்றுத் தடையின் மற்றொரு விளைவு நாடுகளுக்குள் நடக்கும் முதல் பெயர்ச்சி குறைவதாகும். அயல்நாட்டார் கடன் தருவதையும் அல்லது முதலீடு செய்வதையும் மாற்றுக் கட்டுப்பாடுகள் குறைக்கும். அயல்நாட்டாருக்குச் சேரவேண்டிய தொகை தடைக் கணக்கில் வைக்கப்பட்டபோதும் அது பின்னர் விடுவிக்கப்பட்டபோதும் அவர்களுக்கு நஷ்டத்தை உண்டாக்கும் அதனால் புதுக்கடன் தடைப்படும். மற்றொரு விளைவு ஒவ்வொரு நாடும் தன் நிறைவை (self-sufficiency) நாடுவதாகும்.

**மாற்றுக் கட்டுப்பாட்டின் சிறப்புகள்**

'தலையீடு' சாதாரணமாகக் கெடுதல் இல்லாது இருக்கக் கூடும். நீண்ட காலத்தில் பணத்தின் மதிப்பை ஏற்றமான நிலையில் நிறுவுவதற்கு அதற்குச் சக்தியில்லை யாதலால் தற்காலிக

மாறுதல்களுக்குப் பயன்படக் கூடும். இந்த ஆட்சியில் தவறில்லை. மாறாத விறைப்புக்கும் ஓயாத நெளிவுக்கும் இடைப் பட்ட நிலைக்கு இது உதவக்கூடியது. ஆனால் இப்படி ஆள்வது தான் கடினமாக இருக்கிறது. எது தற்காலிக மாறுதல், எது தானாகத் திருந்தக்கூடியது, எது அடிப்படையான மாறுதல் என்று கண்டுபிடிப்பது கடினம். தலையிடுமுன் எது சமநிலை வீதம் (equilibrium rate) என்பது தெரிந்திருக்க வேண்டும். இதை அறிவது எளிதன்று. தவறாக முடிவு செய்து தலையிட்டால் அடாது செய்வதாகிப் படாது படவேண்டி வரும். எது சமநிலை வீதம் என்பதைத் தீர்மானிக்க முடிந்தாலும் குறிக்கோளை அடைவதற்கு வேண்டிய வசதி தன்னிடத்திலுள்ளதாகக் கற்பனை செய்து கொண்டு, பின் தத்தளிக்க நேரிடலாம். நிரந்தர மாறுதல்களைத் தற்காலிக மாறுதல்களாக வைத்துக் கொண்டு அயல் நாட்டுச் செலாவணியை விரயம் செய்ய நேரலாம்.

மாற்றுத் தடையோ மிகவும் வெறுக்கத் தக்க விஷயம். அது மக்களின் சுயேச்சையைப் பாதிக்கிறது. ஆனால் இந்தக் கட்டுப்பாடும் சில சூழ்நிலைகளில் தவிர்க்க முடியாததாக லாம். 1947-இல் ஐரோப்பாவின் நிலைமையை உதாரணமாகக் கூறலாம். எல்லா நாடுகளுக்கும் உணவுப் பொருள்களையும் கச்சாப் பொருள்களையும் வாங்க நிறைய டாலர்கள் தேவைப் பட்டன. ஆனால் டாலரைச் சம்பாதிக்க முடியவில்லை. இந் நிலையில் அவைகளுக்குச் சமநிலை வீதம் என்ற ஒன்று இருந்ததாக நினைக்க முடியாது. ஏனெனில், டாலரை எவ்வளவு தான் விலை யேற்றமுடையதாகச் செய்தாலும் டாலருக்குத் தேவையைக் குறைக்க முடியாது. வேண்டிய பொருள்கள் அமெரிக்காவில் மட்டுமே கிடைக்கும். ஏற்றுமதிப் பொருள்களின் விலைகளை எவ்வளவுதான் குறைத்தாலும் ஏற்றுமதி உயர வழியில்லை. ஏனென்றால் உற்பத்திச் செய்யச் சக்தியில்லை. அந்த நிலையில் மாற்று அங்காடியைச் சுயேச்சையாக வீதத்தை நிர்ணயிக்கும்படி விட்டிருந்தால், ஐரோப்பிய நாணயங்களின் மதிப்பு பாதாளத்தி லாழ்ந்திருக்கும். இந்த நிலையில் கட்டுப்பாடு அவசியம் யுத்த காலங்களிலும் கட்டுப்பாடு அவசியமாகலாம். தவிர, முதல் பெயர்ச்சி ஏராளமாகிச் செலுத்துநிலை அவதிப்படும்போதும் அவசியமாகலாம். மாற்று அங்காடியில் நடக்கும் பேரங்களில் முக்கியமான ஒன்று முதல் பெயர்ச்சி ஆகும். முதல் பெயர்ச்சி, பண்ட வியாபாரத்தைவிட, அதிகமான கேடு விளைவிக்கக் கூடியது. ஒரு நாடு எந்தவித மாற்றுக் கட்டுப்பாட்டையும் ஆளாமலே தன்னுடைய செலுத்துநிலையில் பண்ட ஏற்றுமதி இறக்குமதி மூலம் சமநிலையை அடைய முடியும். ஆனால் முதல்

பெயர்ச்சி சமநிலையைக் கெடுத்துவிட்டால் அந்தநிலையில் மாற்றுக் கட்டுப்பாடு அவசியமாகும். 1931-இல் மத்திய ஐரோப்பாவில் இருந்து முதல் வெளியேறியபோது கட்டுப்பாடு அவசியமாயிற்று. ஆகவேதான், பன்னாட்டுப் பண நிதியை நிறுவியபோது நாடுகள் பண்ட வகை பேரத்தினால் ஏற்படும் செலுத்துப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு மாற்றுக் கட்டுப்பாடுகளை ஆள்வது கூடாது என்றும் முதல் பெயர்ச்சிக் காரணமாகப் பிரச்சினைகள் ஏற்பட்டால் கட்டுப்பாடு அவசியமாகக் கூடும் என்றும் எல்லாராலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. ஆனால் எந்த பேரம் முதல் பெயர்ச்சிக்காக நடக்கும் பேரம், எது வியாபார காரணத்துக்காக நடக்கும் பேரம் என்று கண்டுபிடிப்பது கடினமாக இருக்கும். பேரளவில் முதல் வெளியேற முயலும்போது முதல் பெயர்ச்சியுட்பட எல்லாமும் கட்டுப்பாட்டுக்குள்ளாக வேண்டியிருக்கும். ஆனால் முதல் பெயர்ச்சிக் கட்டுப்பாடு நிரந்தரமாக இருக்க முடியாது. நாடுகளுக்கிடையே முதல் தடையின்றிப் பெயர்வது அவசியம். அதன் வழியாகத்தான் உலகத்தில் பல நாடுகள் முன்னேற்றம் அடைய முடிந்தது.

முடிவாக மாற்றுக் கட்டுப்பாடு பற்றி என்ன சொல்லக்கூடும் என்றால், அவைகளைக் கூடியமட்டும் தவிர்க்க வேண்டும் என்பதே. சிலபோது அது அவசியமாக இருக்கலாம். ஆனால் இந்தக் கட்டுப்பாட்டை எப்போது, எதற்கு ஆளலாம் என்பதைப் பற்றிப் பல நாடுகளுக்குள் ஒருவிதக்கருத்து ஒற்றுமை அவசியம். இன்றேல் இந்த முறை சுய நலத்துக்கு ஆளப்பெற்று நாடுகள் எல்லாவற்றையும் பாதிக்கலாம். சர்வதேசப் பண நிதி இவ்வித ஒழுக்கத்தை நாடுகளுக்கிடையே நிலை நிறுத்தும் கொள்கையை உடையது.

# 42. சமநிலைக்கேட்டைத் திருத்தும் முறையைத் தேர்தல்

## (Choice of method of adjustment of disequilibrium)

சமநிலைக் கேடு உண்டானபோது அதைத் திருத்துவதற்கு ஆளக்கூடிய முக்கியக் கருவிகள் மாற்று மதிப்பிறக்கம் (exchange depreciation), பண வடிப்பு (deflation), கட்டுப்பாடுகள் (trade and exchange controls). இவைகளில் எந்த முறை செம்மையானது? இந்தக் கேள்விக்கு எளிய விடை கிடையாது. எந்த முறையை ஆள்வது என்பது மூன்று விஷயங்களைப் பொறுத்தது.

1. நடப்புக் கணக்கில் சமநிலையை ஏற்படுத்தும் சக்தி.

2. அதனால் உள்நாட்டுப் பொருளாதாரத்தின்மேல் ஏற்படும் விளைவு.

3. பன்னாட்டு வாணிபத்தின்மேல் விளைவு.

மூன்றாவது அடிப்படையின் பேரில் மட்டும் தீர்மானிப்பதாயின் கட்டுப்பாடுகள் வேறு வழியில்லாதபோதுதான் ஆளப்பட வேண்டும். கட்டுப்பாட்டு முறையின் குறைகளை முன்னர் ஆய்ந்துள்ளோம். இயற்கையாக நடக்கும் வாணிபத்துக்குத் தடை ஏற்படுத்துவதன் மூலம் இது உலக வாணிபத்தின் அளவையும் பயனையும் குறைக்கின்றது. ஆயினும் கட்டுப்பாடு சில சூழ்நிலைகளில் இன்றியமையாததாகலாம். நாடுகளின் விலைகளும் செலவுகளும் போதிய நெகிழ்ச்சியுடையவையாய் இருந்தால், தேவை அளிப்பு நெகிழ்ச்சிகள் ஏற்றமாயிருந்தால், உற்பத்தி சாதனப் பெயர்ச்சி எளிதாக

இருந்தால், மதிப்பிறக்கமுறை அல்லது வடிப்பு முறையை ஆண்டு, நடப்புக் கணக்கின் பற்ருக்குறையைக் களைந்து விடலாம். ஆனால் இவ்வித உத்தமச் சூழ்நிலைகளைக் காண்ப தரிது. உண்மையில் சூழ்நிலைகள் இம்முறைகளை ஆள வசதி செய்யா. ஆகவே விரும்பாத கட்டுப்பாட்டு முறையும் சிலபோது ஆளவேண்டி வரலாம்.

ஒரு முறை எல்லாச் சூழ்நிலைகளிலும் பொருத்தமானதென்று நினைக்க முடியாது என்பது வெளிப்படை. சமநிலைக்கேடு பல்வேறு காரணங்களால் தோன்றுவதால் அவைகள் எல்லா வற்றுக்கும் ஒரே முறை பொருத்தமானதாக இருக்க முடியாது. இப்போது காரணங்களைக் கூறிப் பல்வகைச் சமநிலைக் கேடுகளைச் சமாளிப்பதற்கு ஆளக்கூடிய பல்வகை முறைகளை ஆராய்வோம்.

## (A) பணத்துறைக் காரணமான சமநிலைக் கேடுகள் (Monetary Disequilibrium)

### (1) பணவடிப்பு (deflation)

முதலில் விலை மட்டமும் செலவு மட்டமும் (மற்ற நாடுகளை ஒப்பிட) மிக அதிகமாக இருக்குமானல் சமநிலைக் கேடு உண்டாகலாம். இந்த நிலையில் அடிப்படைத் திருத்த முறை பண வாட்டத்தின் மூலம் விலை மட்டத்தையும் செலவுகள் மட்டத்தையும் குறைப்பதும், மாற்று மதிப்பைக் குறைப்பது மாகும். இறக்குமதிக் கட்டுப்பாடு சரியான முறை அன்று. ஏனெனில் அது சமநிலைக் கேட்டின் அடிப்படைக் காரணத்தை நோக்காது அதன் புறத் தோற்றமாகிய செலுத்து நிலைத் தாக்குதலை மட்டும் தடுக்கிறது. வாட்டம், மதிப்பிறக்கம் ஆகிய இரண்டு திருத்த முறைகளில் எது தகுதி என்பதைச் சமயத்துக் கேற்ப முடிவு செய்ய வேண்டி வரும். வடிப்புச் சக்திகள் (பொன் திட்டத்தின் கீழ் உண்டாவது போல) தாமாகவே ஏற்படலாம் அல்லது அரசாங்கத்தின் பணத்துறை, அல்லது வரித்துறை நடவடிக்கைகள் மூலம் தூண்டப்படலாம். எது வாயினும் கூலியும் விலைகளும் நெகிழ்ச்சியற்ற நிலையில், இவை வேலையின்மையை உண்டாக்குந் தன்மையன. கூலி நெகிழ்ச்சி இன்மை தொழிற்சங்கங்களுடைய எதிர்ப்பாலும் சர்வாதீனப் பழக்கங்களாலும் ஏற்படலாம். வடிப்பு வழியாக (வரு மானத்தைக் குறைத்து) நடப்புக் கணக்கின் பற்ருக்குறையை நீக்கலாமாயினும் அவைகளின் பொருளாதார, சமூக விளைவுகள் விரும்பத்தகாதவை.

**(2) மதிப்பிறக்கம் (exchange depreciation)**

மாற்று மதிப்பிறக்க முறையினால் வேலையின்மை உண்டாகாது. தகுந்த சூழ்நிலையிருப்பின் இது எளிதில் சமநிலைக் கேட்டை நீக்கும். ஆகவே இந்த முறை பணவாட்ட முறையை விடச் சிறப்புடையதாகத் தோன்றும். ஆனால் இந்த முறையையும் எச்சரிக்கையாக ஆள வேண்டும். விலை — செலவு மட்டம் அமிதமாக உயர்ந்து இருப்பதால் ஒரு நாட்டில் சமநிலைக் கேடு ஏற்பட்டுள்ளதாகவும் அதை நாம் தீர்க்க முயல்வதாகவும் வைத்துக்கொள்வோம். மாற்று மதிப்புக் குறைப்பு உள்நாட்டு விலைகளையும் செலவுகளையும் அயல்நாட்டு விலை — செலவு மட்டத்துக்குக் கொண்டு வரலாம். ஆனால் சமநிலைக் கேட்டின் மூல காரணம் மிகைப்பட்ட பண வீக்கமாயின் இந்த முறை தற்காலிக நன்மையையே தர முடியும். இம் முறை பண வீக்கத்தைத் தடுக்காது. எதிரிடையாக அது இறக்குமதியின் விலையை ஏற்றி, கூலி உயர்வுக் கோரிக்கைகளைத் தூண்டி விட்டு, உள்நாட்டின் பண வீக்கத்தை அதிகப்படுத்தும். அது தற்காலிகமாகப் பயன் தருவதாயினும் ஏற்றுமதியைத் தூண்டிப் பண வீக்கத்தை அதிகப்படுத்திவிடும். இவ்விளைவுகளால் வெளிநாட்டைவிட உள்நாட்டில் விலைகள் வேகமாக ஏறிக் கொண்டே இருக்குமானால் மறுபடியும் மதிப்பிறக்கம் செய்ய வேண்டி வரும். இந்த மாதிரி நிலையில் தான் யூக முதல் பெயர்ச்சியும் யூகப் பண்ட வாணிபமும் தோன்றிச் செலுத்து நிலைக்கு மேலும் கெடுதலை உண்டாக்குகின்றன. ஆக, மதிப்பிறக்க முறை நடப்புக் கணக்குப் பற்றுக்குறையைச் சமாளிப்பதற்குத் தகுதியானதன்று.

**(3) வீக்க எடுப்பும், மதிப்பிறக்கமும் சேர்ந்த முறை (disinflation plus depreciation)**

பண வாட்டம் வேலையின்மையை உண்டாக்குவதாகவும், மதிப்பிறக்கம் தொடர்ந்து நிகழ்ந்து பண வீக்கத்தை உண்டாக்குவதாகவும் இருக்குமானால் வேறு என்ன செய்வது? இந்நிலையில் இரண்டு முறைகளையும் ஒருங்கே ஆளலாம். முதலாவதாகத் தக்க பணத்துறை, வரித்துறை நடவடிக்கைகளால் பண வீக்கத்தை நிறுத்த வேண்டும். (ஆனால் நிறுத்தும் முயற்சி விலை வீழ்ச்சியைத் துவக்கக்கூடாது.) இப்படிப் பண வீக்கத்தைத் தணிப்பதை வீக்க எடுப்பு (disinflation) என்பார்கள். விலைகளைக் குறிப்பிட்ட மட்டத்தில் நிறுவிய பின்னர் மதிப்பிறக்க முறையை ஆளலாம். இது வெளிநாட்டில் செலவு—விலை மட்டத்தோடு உள்நாட்டுச் செலவு—விலை

மட்டத்தை ஒத்ததாகச் செய்யும். இப்படிக் கலப்பு முறையால், வேலை நிலை பாதிக்கப்படாமல், அதேபோது செலுத்து நிலை மேலும் மோசமாகாமல் காப்பாற்றிக்கொள்ளலாம்.

ஆனால் இந்த முறையை ஆள்வது எளிதன்று. பலமான பண வீக்கச் சக்திகள் செயற்படும்போது அவைகளைக் களைவது கடினம். இதை விடக் கடினம், தகுந்த அளவுக்குக் கூடாமல் குறையாமல் வீக்க எடுப்பு முறைகளை ஆள்வது. ஏனெனில் அளவுக்கு மிஞ்சி நடவடிக்கை எடுத்துகொண்டால் அது எதிரிடையாக வாட்டத்தையும் வேலையின்மையையும் உண்டாக்கக்கூடும். ஆகவே முடிவு, எந்த அளவுக்கு மதிப்பிறக்கம் தேவை என்பதை நிர்ணயிக்க நேரான முறை ஒன்றும் இல்லை. குறித்த விலை மட்டத்தில் செலவு மட்டத்தில் சமநிலை உண்டாக்குவதற்கு எந்தச் சதவீதத்தில் மதிப்பிறக்கம் செய்ய வேண்டும் என்பதைக் கணிக்க வழியில்லை. ஆனால் இந்தச் சிக்கல்கள் காரணமாக இந்த முறையைத் தகுதி அற்றது என்று தள்ளி விடுவது சரி அன்று. இந்த வழியாகத் தான் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டும். படிப்படியாக அனுபவத்தின் வழி நின்று தகுந்த நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டியது இன்றியமையாததாகிறது.

(B) வியாபாரச் சுழல் காரணமான சமநிலைக்கேடு (Cyclical Disequilibrium)

அடுத்தபடியாக, வேறு நாடுகளில் வியாபாரச் சகடம் காரணமாக நமக்கு ஏற்படும் நடப்புக் கணக்குச் சமநிலைக் கேட்டை எப்படித் திருத்துவது என்பதைப் பார்ப்போம். இது மேலேகூறிய பணத்துறைக் காரணத்தால் தோன்றிய சமநிலைக் கேட்டை விடத் திருத்துவதற்குக் கடினமானது. வடிப்பு முறையை ஆளமுடியாது. மந்த நாடுகளுக்கு இது யாதொரு நலமும் செய்யாது. அவைகளின் ஏற்றுமதியைக் குறைத்துச் சிக்கலை அதிகப்படுத்தும். மந்தமுடைய நாடுகள் சகடக்களைவு (anti-cyclical) நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். அவைகளின் மந்தத்தால் செலுத்துப் பிரச்சினை ஏற்பட்ட நாடுகள் வடிப்பு முறையை ஆண்டு தாமும் மந்தத்துக்குள்ளாவது முறையன்று. சரியான முறை யாது? செலுத்துப் பிரச்சினை நாடுகள் வருமான மட்டத்தை வேலை நிறைவு பெறும் நிலையில் இருத்துவதற்கு வேண்டிய நடவடிக்கைகளையே எடுக்க வேண்டும். அதேபோது மந்தமுடைய நாடுகளும் உள்நாட்டில் வருமானத்தை உயர்த்துவதற்கு மும்முரமாக நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். இப்படி இரு நாடுகளும் நடப்பது

நல்லது. ஏனெனில், செலுத்துப் பிரச்சினை நாடுகள் தாங்களும் மந்தத்தில் வீழாமல் காப்பாற்றிக் கொள்ளும். இறக்குமதிக் குறைப்பின் மூலம் பிறரைப் பாதிக்காமலிருக்கும். மந்தமுடைய நாடுகள் மேலும் மந்தத்தில் ஆழாமல் தப்பும்.

மேற்கண்ட முறையின் குறை என்னவெனில், செலுத்துப் பற்றுக்குறை நாடுகள், மந்த நாடுகளில் மீட்சி சித்திக்கும் வரையிலும், பற்றுக்குறையை அனுபவித்துக் கொண்டே இருக்கும். இதற்குத் தகுந்த ஒரு பரிகாரம் என்னவெனில், மந்த நாடுகளே தாம் மீட்சி பெறும் வரைக்கும், பற்றுக்குறை நாடுகளுக்குக் கடன் வசதி செய்வதாகும். அதாவது மந்த நாடு ஏற்றுமதிக்கு உடனே செலுத்துக் கேட்கக்கூடாது. இவ்வகை ஏற்றுமதி அதன் மந்த நீக்கக் கோட்பாட்டுக்கு முரண்பட்டதாக இருக்காது உதவுவதாகவே இருக்கும். வேலையில்லாச் சாதனங்களுக்கு வேலை கிடைக்கும். மந்தமுடைய நாடுகள் மேற்கண்ட முறையில் கடன் வசதி செய்ய விரும்பாவிட்டால் குறுங்கால அயல்நாட்டுக் கடன் போதுமான அளவு பற்றுக்குறைகளுக்குக் கிடைப்பதாக இருக்கவேண்டும். நாடு அயல் நாட்டுச் செலாவணிகள் கிடைக்கக் கூடிய பன்னாட்டுத் தேக்கம் (pool) ஒன்று இவ்வித வசதியைச் செய்யக்கூடும். இத்தகையதே பன்னாட்டுப் பண நிதி (International Monetary Fund).

### (C) கட்டமைப்புக் காரணமான சமநிலைக் கேடு (Structural Disequilibrium)

சமநிலைக் கேடு நாட்டின் பொருளாதார அடிப்படையிலே ஏற்படும் மாறுதல்களால் தோன்றுவதாயின் அதற்குத் தகுந்த நடவடிக்கைகள் என்ன? இப்படித் தோன்றும் சமநிலைக் கேட்டைச் சமாளிப்பது எளிதில், விரைவில் முடியக்கூடிய காரியம் அன்று. அடிப்படை அமைப்பில் சமநிலைக்கேடு பல வகைகளில் தோன்றக்கூடியது. அவை எல்லாம் ஒரே வகையான பரிகாரத்துக்கு இடம் தருவன அல்ல. முக்கியமான சில வகைகளை மட்டும் எடுத்துக்கொண்டு அவைகளைச் சமாளிப்பது எப்படி என்று பார்ப்போம்.

போர் போன்ற ஒரு பெரிய நாச காரணத்தால் நாட்டின் முதல் பேரளவில் அழிந்து விட்ட ஒரு நாட்டை எடுத்துக் கொள்வோம். முதலழிவு நாட்டின் உற்பத்திச் சக்தியைக் குறைத்து, ஏற்றுமதி வருமானத்தைக் குறைத்து, நுகர்ச்சிக்கும் முதலீட்டுக்கும் அதிகப்படியான இறக்குமதித் தேவையைத்

தூண்டிச் சிக்கலை உண்டாக்கலாம். செலுத்து நிலைச் சமப் பாட்டை மட்டும் கருதினுல் அதை எளிதில் சீர்திருத்த முடியும். ஆனுல் உடனே செலுத்துச் சமநிலை ஏற்படுத்த எந்த முறையை ஆண்டாலும் அதன் விளைவு மக்களின் வாழ்க்கைத் தரத்தைத் தற்காலிகமாகவோ நிரந்தரமாகவோ முன் நிலையை விடக் குறைந்த நிலைக்குத் தாழ்த்திவிடும்.

ஒரு நாட்டில் பண்டங்களின் மொத்தக் கிடைப்பு அதனுடைய நிகர உற்பத்தி, இறக்குமதி, ஏற்றுமதி ஆகிய வற்றைப் பொறுத்தது. ஆகவே நடப்புக் கணக்குச் செலுத்து நிலையில் பற்ருக்குறை நாட்டின் நுகர்ச்சிக்குப் பண்டக் கிடைப்பு அதிகப்பட்டதைக் காட்டுகிறது. இந்த முறையில் பார்த்தால், இறக்குமதி எச்சத்தை நீக்க முயல்வதும் ஏற்று மதியை உயர்த்துவதும் பண்டங்கள் கிடைப்பைக் குறைப்ப தாகும். ஆனுல் பொதுவாக இவ்வித விளைவு முக்கியமானதன்று. ஏனெனில், அயல்நாட்டுப் பண்டங்களின் கிடைப்பு அவ்வளவு இன்றியமையாததாக இருக்காது; ஓரளவு உள் நாட்டு உற்பத்தி அதிகப்பட்டு அதை ஈடு செய்யக் கூடும்.

ஆனுல் போர் அழிப்பினுல் உற்பத்திச் சக்தி பெரிதும் குறைந்து அதனுல் சமநிலைக் கேடு உண்டாகுமானுல் விளைவு வேறு விதமாக இருக்கும். போருக்கு முன்னிருந்த நிலைக்கு உற்பத்திச் சக்தியை மீட்க முடியாது. மீட்பதற்கு அழிந்து போன முதலை ஈடு செய்ய வேண்டும். நடப்புக் கணக்கில் சமநிலை கண்டு, இம் முதலீட்டையும் செய்ய வேண்டுமாயின் நுகர்ச்சியைக் குறைக்கவேண்டும். அரசியல் நிலை இதற்குத் தடையாக இருக்கலாம். தவிர, நடப்புக் கணக்குச் சமநிலைக் காகப் பலவிதக் கட்டுப்பாடுகளும் வேண்டியிருக்கும். இவை களினுல் ஏற்படும் இன்னல்களுக்கு மக்கள் தயாராக இருக்க மாட்டார்கள்.

ஆகவே போரில் முதலழிந்த நிலையிலுள்ள நாடுகளுக்குக் குறுங்காலப் பரிகாரம் ஒன்றும் இல்லை. ஆனுல் நெடுங்காலப் பரிகாரம் கடன் வாங்குவது. வாழ்க்கைத் தரத்தைக் குறைக் காமல் முதலைப் பழைய நிலைக்குக் கொண்டுவர வேறு வழியில்லை. இயற்கையான உற்பத்திச் சக்தி மீண்டதும் நடப்புக் கணக்கில் விரைவில் சமநிலைகாண முடியும்.

அடுத்தபடி அடிப்படைப் பொருளாதார அமைப்பில் சம நிலைக் கேடு உண்டாகும் மற்ருெரு வகையைப் பார்ப்போம். ஒரு நாட்டில் அதனுடைய தராதர (comparative) உற்பத்திச்

சக்தியில் மாறுதல் ஏற்படுவதனுல் வாணிபம் கெட்டுச் சமநிலைக் கேடு காணப்படலாம். இப்படித் தராதர உற்பத்திச் சக்தியில் மாறுதல் ஏற்படுவதற்குக் காரணம் இந்த நாட்டைவிட அயல் நாட்டில் பல தொழில்துறைகளில் முன்னேற்றங்கள் உண்டாகி இருக்கலாம். இந்த வகைச் சமநிலைக் கேட்டைத் திருத்துவதற்கு நாடுகளின் சாதன வசதிகளை மாற்றவேண்டும். நாடுகள் புதுத்துறைகளில் ஈடுபடவேண்டும். இது நெடு நாளைய வேலை. நிறைவுப் போட்டி (perfect competition) தான் இதைச் சாதிக்கும். கூடிய மட்டும் போட்டிச் சூழ்நிலையை உண்டாக்கிச் சாதனப் பெயர்ச்சிக்குள்ள இடையூறுகளைக் களைய வேண்டும்.

ஆனல் இவ்வித நடவடிக்கைகளைச் சுலபமாக எடுக்க முடிவதில்லை. ஏனெனில் பொருளாதாரத்தின் சில பகுதிகள் அயல் நாட்டு உற்பத்தியாளர்களுடைய போட்டிக்குப் பயந்து காப்பை (protection) நாடும். வாணிகத்தையும் மாற்றையும் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்துவதே எளிதான வழியாகத் தோன்றும். ஆனல் இத்தகைய கட்டுப்பாடுகள் அடிப்படைச் சமநிலைக் கேடுகளைக் களைவன அல்ல.

பழைய பொருளாதார நிபுணர்கள் இப்படிப்பட்ட அடிப்படை அமைப்புச் சமநிலைக் கேட்டைச் சமாளிப்பதற்கு வகுத்துள்ள முறை கட்டுப்பாடுகளை நீக்குவதாகும். ஆனல் தற்காலத்திய சமுதாயத்தில் இது நடவாது. இப்போது எங்கும் சர்வாதீனமும், விறைப்பான விலையும், பெயர்ச்சி குன்றிய சாதனங்களும் காணப்படுகின்றன. சுயேச்சை அங்காடிச் சக்திகள், எதிர்பார்க்கும் சாதனப் புனர்ப் பகிர்வைச் (redistribution) செய்யாமல், எதிர்பார்த்த புதுத் தராதரச் சிறப்புக்களை (comparitive advantages) தோற்றுவிக்காமல், மந்தத்தையும் வேலையின்மையையும் தோற்றுவிக்கலாம். தவிர, மிகவும் வேகமாக முன்னேறும் பொருளாதாரத்தையுடைய ஒரு தலைசிறந்த தொழில் முன்னேற்றமுடைய நாடு இருக்குமானல், அதன் செயல்களின் விளைவாக மற்ற எல்லா நாடுகளின் பொருளாதார அமைப்புகளும் இடைவிடாது மாறுதலைச் செய்து கொண்டே இருக்கவேண்டி வரும். ஒரு புது நிலைக்கு ஏற்றவாறு அமைப்பைத் திருத்திக்கொண்டதும் மற்றொன்று கிளைத்துக் கொண்டே இருக்கும். இப்படி மற்ற நாடுகளில் சமநிலைக்கேடு தோன்றிக்கொண்டே இருக்கும். சில பொருளாதார நிபுணர்கள் இவ்வித நிலை தான் ஐரோப்பிய நாடுகளின் டாலர் பற்றுக்குறை பிரச்சினைக்குக் காரணமாயின என்று நினைத்தார்கள். இது உண்மையாயின், அந்நாடுகள் டாலர் இறக்குமதியைக் குறைப்

பதற்கு வேண்டிய பட்சபாதகமான நடிவடிக்கைகளையும் மாற்றுக் கட்டுப்பாடுகளையும் விதிப்பது சரியான முறையாயிருந் திருக்கும். ஆனால் இவ்வித முடிவுக்கு வருவதற்கு முன் வேறு வகைப் பரிகாரங்கள் உண்டா என்று ஆராய வேண்டும்.

**மாற்றுக் கட்டுப்பாடு அவசியமாகும் நிலைகள்**

முன்னர் வேறு வகையில் சமநிலைக் கேடு களைய முடியாத போதுதான் வாணிப மாற்றுக் கட்டுப்பாடுகள் அவசியமாகும் என்று கூறினோம். இத்தகைய நிலை எப்போது உண்டாகலாம் என்று பார்ப்போம். உலக வாணிபத்தில் முக்கியமானஒரு நாட்டில் மந்தம் ஏற்பட்டு, அது காரணமாகப் பிற நாட்டுகளில் செலுத்து நிலையில் சமநிலைக் கேடு உண்டானால் இவ்வித நிலை ஏற்படலாம். தவிர ஒரு நாட்டின் பொருளாதாரத்தில் போதிய நெகிழ்ச்சிகள் இல்லாதபோதும் சுயேச்சை அங்காடிச் சக்திகள் வழியாகச் சமநிலை அடைவது முடியாதபோதும் இந்தவித முறை அவசிய மாகலாம். அமெரிக்கா போன்ற மிகவும் தொழில் முன்னேற்ற முடைய நாடுகளில் புதுப் புது முன்னேற்றங்கள் தோன்றுவதன் காரணமாகவும் இவ்வித நிலை ஏற்படலாம்.

சுயேச்சை அங்காடிச் சக்திகள் பணத்துறைக் குழப்பத்தி னாலோ அரசியல் குழப்பத்தினாலோ வேலை செய்யத் தவறினால் இந்த நிலை ஏற்படும். பறக்கும் பண வீக்கத்தினைப் பற்றிய பயம், மாற்று மதிப்புக் குறைப்பு, போர், புரட்சி, இன்னும் இது போன்ற நிகழ்ச்சிகள் ஒரு நாட்டிலிருந்து முதல் வெளியேறு வதற்குக் காரணமாக இருக்கக்கூடும். இந்த நிலையில் அடிப் படையான பரிகாரம் வீக்கத்தைத் தடுப்பது, அல்லது பயங்களைக் களைவது. ஆனால் இவைகளைச் செய்ய முடிவதில்லை. ஆகவே மாற்றுக் கட்டுப்பாடு தவிர, வேறு வழியாகச் சமநிலைக் கேட்டை நீக்க முடியாது.

சிறு காலத்தில் பேரளவுக் கட்டமைப்பு மாறுதல் செய்வது அவசியமாகும் போதும் மாற்றுக் கட்டுப்பாடு அவசியமாகலாம். போர் முடிந்த பின் சீரமைப்புக் காலத்தில் இது தேவைப்படும். போர்க் காலத்தில் நிறைவேற்ற முடியாத தேவைகள் போருக்குப்பின் குவிந்து தோன்றுவதாலும் பண வீக்கம் அழுத்துவதாலும் நுகர்ச்சியைக் கட்டுப்படுத்தி முதலாக்கம் செய்வது கடினமாக இருக்கும். அப்போது அயல்நாட்டுச் செலாவணி நுகர்ச்சிக்குப் பயன்படாமல் தடுப்பதற்கு மாற்றுக் கட்டுப்பாடுகள் தேவையாகலாம். கட்டுப்பாட்டால் இறக்குமதியைத் தடுத்தால் அது உள்நாட்டுப் பொருள்களுக்குத்

தேவையைத் திருப்பும் என்றும், இதனால் முதலீடு வேலைகளுக்குச் செல்லும் சாதனங்கள் நுகர்ச்சித் தொழில் வழியில் திருப்பப் பெறும் என்றும் நினைக்கலாம். சுயேச்சையான அங்காடித் திட்டத்தின் கீழ் (சாதனப் பெயர்ச்சி அதிகமாக இருக்குமாதலால்) இது உண்மை ஆகலாம். ஆனால் இச் சூழ்நிலை போருக்குப் பின் காண்ப தரிது. பண வீக்கம் அடக்கப் பட்டு, நியாயமான மாற்று வீதங்கள் அமைக்கப்பட்டு, முதலீட்டு வேலை பெரும்பாலும் நிறைவேறினொலொழிய, நாடுகள் மாற்றுக் கட்டுப்பாட்டைக் கைவிடுவதற்கு வழி இல்லாமல் இருக்கும்.

**நம் முடிவு என்ன?**

எல்லாச் சூழ்நிலைகளுக்கும் பொருத்தமான திருத்து முறை ஒன்றில்லை என்பதே. மதிப்பிறக்க முறை சிலபோது தகுந்த தாயினும் நாட்டில் பணத்துறைக் கோளாறுகள் உள்ளபோது பயன்படாது. வடிப்பு முறை விலைகளும் செலவுகளும் நெகிழ்ச்சியுடையபோது தான் பொருத்தமானது, இன்றேல் வேலையின்மையை உண்டாக்கக்கூடும். வாணிப, மாற்றுக் கட்டுப்பாடுகள் பொதுவாக எப்போதும் வணிபத்தைப் பாதிப்பன. ஆனால் சிலபோது அவைகளை ஆள்வது தவிர வேறு வழியில்லா திருக்கலாம்.

தவிர, செலுத்துச் சமநிலைக்கேடு ஒரு தனிக் காரணியால் மட்டும் தோன்றும் என்று நினைப்பதற்கில்லை. பொதுவாகப் பணத்துறை சிக்கல், வாணிபச் சுழல், கட்டமைப்பு மாறுதல்கள் ஆகிய அனைத்தும் ஒருசேர, பல்வேறு அளவில், காரணமாக இருக்கக்கூடும். ஆகவே நேரான முறையைக் குறிப்பிடுவது கடினம்.

# 43. பன்னாட்டுப் பணத்துறை நிறுவனங்கள்

## (International Monetary Institutions)

இரண்டாம் உலகப் போர் முடிந்த பின் எல்லா நாடுகளிலும் பன்னாட்டுப் பேரங்கள் எல்லாம் கட்டுப்பாட்டுக் குட்பட்டிருந்தன. நாடுகள் பணத்தின் மதிப்புகளை இறுத்திருந்தன. மாற்று வீதங்கள் பன்னாட்டுச் செலுத்துகளில் சமநிலை காண்பதாக இல்லை.

நாடுகளிடையே பொருளாதார நிலைமை மிகவும் மாறுபாடாக இருந்தது.

(1) பணவீக்கம் பல அளவில் காணப்பட்டது. பல அளவில் அழுத்தி வைக்கப்பட்டிருந்தது.

(2) உற்பத்தித் திறனில் மிகவும் வேறுபாடு காணப் பட்டது. அமெரிக்கா முதன்மையான நாடாக இருந்தது. ஐரோப்பா போரினால் மிகவும் பாதிக்கப்பட்டு ஆக்க சக்தி குறைந்து உணவுக்கும் முதலுக்கும் அமெரிக்காவை எதிர் பார்த்தது.

(3) உலகத்தின் பணத்துறைப் பொன்னில் 2/3 பங்கு அமெரிக்காவில் முடங்கி இருந்ததால் நாடுகளுக்குள் செலுத்துப் பிரச்சினை மிக மோசமாக இருந்தது.

இந்த நிலையில் தடையிலாத பன்முக வாணிபமும், பன்முகச் செலுத்து முறையும் நாடுகளின் அவாவாக இருந்தன. இவைகளை நிறைவேற்ற வாணிபத்துக்குள்ள தடை களும், மாற்று வீதங்களிடையே இருந்த முரண்பாடுகளும் போக வேண்டும். இவை இருப்பதற்கு உள்ள மூல காரணங்களைக்

களையவேண்டும். ஒவ்வொரு நாட்டிலும் வேலை நிறைவு காணப்பட வேண்டும். இவைகளுக்கேற்ற நடவடிக்கைகளை மேற்கொள்ளும் மனப்பான்மை உண்டான சூழ்நிலையில் தோன்றியவை (1) பன்னாட்டுப் பண நிதி (International Monetary Fund), (2) பன்னாட்டுப் பாங்கு (International Bank for Reconstruction and Development), ஆகியவை.

## பன்னாட்டுப் பணநிதி

### (The International Monetary Fund)

போர் முடிந்ததும் பணத்துறையில் குழப்பம் ஏற்படலாமென்றும், பணத்துறையில் உலகின் எல்லா நாடுகளுக்கிடையேயும் ஒத்துழைப்புத் தேவை என்றும் உணர்ந்து போர் முடிவதற்கு முன்னரே 1943இல் அமெரிக்க, பிரித்தானிய நிபுணர்கள் சில யோசனைகளைக் கூறினார்கள். முடிவில் இரண்டு திட்டங்கள் வெளிவந்தன : 1. ஒயிட் திட்டம் (White plan) 2. கீன்ஸ் திட்டம் (Keynes Plan). இவை நிபுணர்களாலும் அரசாங்கங்களாலும் ஆராயப்பட்டன. ஓராண்டுக்குப் பின் கூட்டுக் கூற்று (joint statement) ஒன்று நிபுணர்களால் வெளி வந்தது. அது அமெரிக்காவில் பிரிட்டன்உட்ஸ் (Brittonwoods) என்ற இடத்தில் 1944 ஜூலையில் கூடிய மாநாட்டில் சமர்ப்பிக்கப் பட்டது. இந்தக் கூட்டம் மேற்படி கோரிக்கைகளின் அடிப்படைத் தத்துவங்களை ஒப்புக்கொண்டு பன்னாட்டுப் பண நிதியையும், பன்னாட்டுச் சீரமைப்பு, முன்னேற்றப் பாங்கையும் (International Bank for Reconstruction and Development) நிறுவுவதற்கு விவரமான திட்டங்களைத் தயாரித்தது. முதலில் நாம் பன்னாட்டுப் பண நிதியைப் பற்றிப் பார்ப்போம்.

நிதியின் விதிகளை (articles) நான்கு வகைகளாகப் பிரிக்கலாம். (1) கை ஒப்பமிட்ட நாடுகள் பணத்துறையில் பின்பற்ற வேண்டிய ஒழுக்கம் பற்றியன, (2) ஒழுக்கத்தைக் கைவிடாமல், தற்காலிகச் செலுத்து நிலைப் பிரச்சினைகளைச் சமாளிக்க உதவும் பாங்கு வசதிகளைப் பற்றியன, (3) பல நாடுகளுக்கும் பொதுப்பட ஒரே சமயத்தில் தோன்றும் சிக்கல்களுக்கெதிரான ஏற்பாடுகள் பற்றியன, (4) நாடுகளுக்கிடையே இடைவிடாது ஆலோசனை செய்வதற்கு வேண்டிய வசதிகள் பற்றியன. இவை அனைத்துக்கும் அடிப்படையிலிருந்த பெருநோக்கம் பொன் திட்டத்தின் குறைகளை நீக்கி அதன் நன்மைகளை மட்டும் பெறுவது.

(1) இனி இவ்விதிகளை விளக்குவோம். ஒரு நாட்டின் ஒழுக்க விதிகளில் அடங்கியவை: (1) தன் பணத்தின் சமத்வ மதிப்பைக் (par-value) காப்பது. மதிப்பை அடிப்படைச் சம நிலைக்குக் கேடு (fundamental disquibrium) ஏற்படும்போது தான் மாற்றக் கூடும். அதுவும் நிதியின் அனுமதியின்பேரில்தான் மாற்றக்கூடும். குறிப்பிட்ட எல்லைக்குமேல் மாற்ற நினைத்தால் நிதியின் அனுமதி கிடைக்குமென்ற உறுதியில்லை. (2) ஒப்புக் கொண்ட சமத்வ மதிப்பைப் பலவகை மாற்று வீதங்களாலும் (multiple exchange rates) சமத்வ மதிப்புக்கு விலகிய பேரத் தாலும் பயனற்றதாகச் செய்யக் கூடாது. (3) மாற்றுக் கட்டுப் பாடுகள் முற்றும் தடை செய்யப்படா விட்டாலும், அளவோடு ஆளப்படவேண்டும். கருத்தென்னவெனில் பொதுவாக நடப்பு வர்த்தகக் கணக்குப் பேரங்கள் தடையின்றி இருக்கவேண்டும். ஆனால் இதற்கு அரிய செலாவணி (Scarce currency) சம்பந்த மாக விதிவிலக்கு உண்டு.

(2) அடுத்து, பாங்கு செய்யும் வசதிகள் என்னவென்று பார்ப்போம். தற்காலிகமாகச் செலுத்துச் சிக்கல் தோன்றும் போது தம் ஒழுக்கத்தைக் கைவிடாது சமாளிக்க வசதிகள் செய்யப்பட்டன. ஒவ்வொரு நாட்டுக்கும் கடன் கோட்டா (credit quota) நிர்ணயம் செய்யப்பட்டது.

(3) அடுத்தபடியாக, நாடுகள் அனைத்துக்கும் பொதுவான சிக்கல்கள் ஒரே சமயத்தில் வந்தபோது எடுக்கவேண்டிய நடவடிக்கைகள் வருமாறு: (a) எல்லா நாடுகளுடைய சமத்வ மதிப்புக்களும் ஒன்றாக மாறக்கூடுமே ஒழியத் தனித்தனியே மாறக் கூடாது. (b) அரிய செலாவணி சம்பந்தமாக எல்லா நாடுகளும் குறிப்பிட்ட நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளலாம். (4) கடைசியாக, நாடுகளுக்குள் ஆலோசனைகள் செய்ய அமைப்பு ஒன்று நிறுவப்பட்டது.

**நோக்கங்கள்**

இந்த நிதியின் அடிப்படை நோக்கங்களாக ஒப்பந்தத்தின் முதல் விதியிலேயே குறிப்பிடப்பட்டிருப்பன: (1) பன்னாட்டு வாணிபம் வளர, பல திறச் சமனோடு பெருக, வசதி செய்வதும், அதன் வழியாக எல்லா அங்கநாடுகளிலும் வேலை வாய்ப்பும் உண்மை வருமானமும் உயர்நிலைக்குப் பெருக, நிலைபெற, உதவி செய்வதும், (2) மாற்று வீதத்தின் நிலை பேற்றை வளர்ப்பதும் நாடுகளுக்கிடையே ஒழுங்கான மாற்று

ஏற்பாடுகளை நிலைபெறச் செய்வதும், அவைகளுக்குள் போட்டியான மதிப்பிறக்கத்தைத் தவிர்ப்பதும். (3) அங்கத்தினரிடையே நடப்புப் பேரங்கள் சம்பந்தமாகப் பன்முகச் செலுத்து முறை (multilateral system of paymants) நிலைக்க உதவுவதும், உலக வாணிபத்தைக் குறைக்கும் மாற்றுக் கட்டுப்பாடுகளை நீக்குவதும். (4) தகுந்த பாதுகாப்புகளுடன் நிதியின் பொருளைக் கிடைக்கச் செய்து அங்கத்தினருக்கு நம்பிக்கை யூட்டி நாட்டுச் செழிப்பையும் பன்னாட்டுச் செழிப்பையும் அழிக்கும் நடவடிக்கைகளை ஆளாமல் செலுத்துச் சமநிலைக்கேடுகளைத் திருத்த வாய்ப்புண்டாக்குவதும், அங்கத்தினர்களுடைய பன்னாட்டுச் செலுத்துநிலையில் ஏற்படும் சமநிலைக்கேடுகளின் காலத்தையும் வன்மையையும் மேற்கண்ட முறைகளில் குறைத்தலும், ஆகியன.

பணத்துறை நடவடிக்கைகள் ஒவ்வொரு நாட்டிலும் தத்தமது நலத்திற்கும், பிறநாடுகளின் நலத்திற்கும் முரண்பட்ட நிலையில் இராமல் பாதுகாப்பது முக்கியமான நோக்கமாகத் தெரிகிறது. நாடுகள் தாங்கள் எடுக்கும் பணத்துறை நடவடிக்கைகளைத் தீர ஆலோசித்து, தன்னலத்தை மட்டும் கருதாமல் முடிவுக்கு வரும்போது ஒரு கட்டுப்பாடு தோன்றுகிறது. இதற்கு வேண்டிய வசதிகளை நிதி செய்கிறது. இந்த வகையில் உதவுவதற்காக இதனோடு ஒரு பன்னாட்டு பாங்கு நிறுவப்பட்டது. அது நாடுகளுடைய நெடுங்கால முதல் தேவையைப் பூர்த்தி செய்யும். இந்தப் பன்னாட்டுப் பண நிதி தற்காலிக மாற்றுத் தேவைகளை மட்டும் சமாளிக்க உதவும். முற்காலத்தில் பொன் திட்டம் பன்னாடுகளுக்கிடையே மாற்று நிலைபேற்றை உண்டாக்கப் பயன்பட்டது. அந்தத் திட்டம் போதிய நெகிழ்ச்சி இல்லாமையால், அதன் நடப்புக்கு வேண்டிய சூழ்நிலைகள் மாறியமையால், கைவிடப்பட்டது. பேரங்கள் பல வகையான கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டிருக்கும் நிலையில் பொன் திட்டம் வேலை செய்ய முடியாது என்று முன்னர்க் கூறினோம். ஆகவே ஒரு நெகிழ்ச்சியுடைய பன்னாட்டுப் பண அமைப்பு அவசியமாக இருந்தது.

### அமைப்பு

அடுத்தபடி, நிதியின் அமைப்பற்றிப் பார்ப்போம். நாடுகளுக்கிடையே தொடர்ந்த ஆலோசனையும் ஒற்றுமையும் நிகழ பாங்கும் நிதியும் சில அங்கங்களை உடையன. நிதிக்கு ஒரு கவர்னர் சபை இருக்கிறது. அதில் ஒவ்வோர் அங்கநாடும் ஒரு

கவர்னரையும் (அவருக்கு ஒரு மாற்றாளை (alternate) யும்) நியமித்திருக்கின்றது. இந்தச் சபை ஆண்டுக்கு ஒரு முறையாவது கூட வேண்டும். இந்த நிதிக்கு நிர்வாக டைரக்டர்கள் 12 பேர்கள். இவர்களில் 5 பேர் மிகப் பெரிய கோட்டாவையுடைய நாடுகளாலும், மற்ற 7 பேர் மற்றவர்களாலும் நியமிக்கப்படுகிறார்கள். தவிர இந்த நிதியின் அலுவலர்கள், கூடிய மட்டும் எல்லா நாடுகளிலிருந்தும் திறமை மிக்கவர்களாய்த் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

**நிதியும் மாற்று நிலைப்பேறும்** (The fund and exchange stability)

நிதியின் உடனடி நோக்கம் நாடுகளிடையே மாற்று வீதத்தில் நிலைபேறு உண்டாக்குவதும் நாடுகளுக்கிடையே ஒழுங்கான மாற்று வீத ஏற்பாடுகளைச் செய்வதும். நாடுகளின் மாற்று வீதத்தில் நிலைபேறு இருக்கவேண்டுமானால், எல்லா நாடுகளுடைய பணங்களுக்கும் ஒரு பொது அளவைப் பொருளில் மதிப்பு நிர்ணயிக்கப்பட வேண்டும். ஆகவே ஒவ்வொரு நாட்டுப் பணத்தின் சமத்வ மதிப்பும் (par-value) பொன் அளவையில் குறிப்பிடப்பட வேண்டும் என்று நியமிக்கப்பட்டது. ஆகவே பொன் திட்டத்தின் கீழ் இருந்ததைப் போல ஒவ்வொரு நாட்டின் பணத்துக்கும் ஒரு பொன் ஈடு மதிப்பு இருக்கும். இரண்டாவது, நாடுகளின் பணங்களுக்கிடையே மாற்று வீதங்கள் குறிப்பிட்ட எல்லைகளைக் கடவாமலிருக்க விதிக்கப்பட்டன. அதாவது தேவை அளிப்புக்கேற்ப மாற்று வீதம் மாறலாம். ஆனால் குறிப்பிட்ட பொன் ஈடு மதிப்புக்கு மேலோ கீழோ குறிப்பிட்ட வரம்புக்கு மேல் விலகக்கூடாது.

ஆகவே முதலில் எல்லா நாடுகளுடையே பணங்களுக்கும் பொன் சமத்வ மதிப்பு (gold parity) முடிவு செய்யவேண்டியிருந்தது. நிதியின் ஒப்பந்தத்தில் கையொப்பமிடுவதற்கு முந்திய 60 ஆவது நாளில் எந்த வீதம் இருந்ததோ, அதுவே பொன் சம வீதமாக எடுத்துக்கொள்ளப்பட்டது. இந்த வீதம் பொருத்தமானதன்று என்று ஒரு நாடு நினைத்தால், அல்லது இந்த வீதத்தை நிலைக்கச்செய்ய முயல்வது காரணமாக நிதியைப் பாதிக்குமளவு உதவி வேண்டியிருக்குமென்று நிதிக்குப்பட்டால், நிதியும் நாடும் சேர்ந்து கலந்து ஒரு தகுந்த வீதத்தை நிர்ணயிக்கலாம். குறிப்பிட்ட காலத்துக்குள் இது சம்பந்தமாக ஒப்பந்தம் ஒன்றும் ஏற்படவில்லையாயின், சம்பந்தப்பட்ட நாடு நிதியிலிருந்து விலகிக்கொண்டது என்று எடுத்துக் கொள்ளப்படும்.

**சமத்வ மதிப்பை மாற்றுதல் (Changing the par-value)**

சமநிலையை மீட்பதற்கு முடியாமல் ஓர் அங்க நாடு சிரமப் படும்போதும், தற்போது உள்ளது பொருத்தமான வீதமன்று என்று தோன்றியபோதும் வீதத்தை மாற்றவேண்டிய அவசியம் ஏற்படலாம். இதற்கு ஒரு கட்டுப்பாடான ஒழுங்கான முறை ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இவ்வித ஏற்பாடு பொன் திட்டத்தின் பெருங்குறையான விறைப்பைத் தவிர்த்தது. ஆனால் அங்கத்தினர்களுடைய மாற்று வீதத்தை மாற்றுவதற்கு நிபந்தனைகள் உண்டு. (1) நாடு அதைக் கோரவேண்டும். (2) நிதியினுடன் கலந்துதான் மாற்ற வேண்டும். (3) சம நிலைக் கேட்டைத் திருத்துவதற்கு அன்றி வேறு காரணத் திற்காக மாறுதல் கோரக்கூடாது. கோரப்படும் மாறுதல் சம மதிப்பில் 10 சதவீதத்திற்கு மேற்படாதிருக்குமானால் நிதி தடை செய்யாது. மேற்படுமானால் நிதி ஒப்பலாம் அல்லது ஒப்ப மறுக்க லாம். ஆனால் கோரப்பட்ட மாறுதல், அடிப்படைச் சமநிலைக் கேட்டைத் திருத்துவதற்கு அவசியமென்று தெளிவானபின், மாறுதல் கோரும் நாட்டின் உள்நாட்டுச் சமூக அல்லது அரசியல் கைக்கோள்கள் காரணமாக நிதி தடை எழுப்பக்கூடாது. இப்படி மாறுதலுக்கு இடம் தருவது அறிவுடைமையா என்பது மிகவும் வாதிக்கப்பட்டு, முடிவில் ஓரளவு நெகிழ்ச்சி தருவதே அறிவுடைமை என்றும், நிதியின் அறிவுறுத்தல் (moral suasion) வழியாகவே முறைகெட்ட நடவடிக்கைகளைத் தடுக்க முயல வேண்டுமென்றும் கருதப்பட்டது.

**வீத ஒழுங்குப்பாடு**

எல்லாப் பணங்களின் சம மதிப்பையும் ஒரே விகிதத்தில் ஒரேபோது மாற்ற, அதாவது பொன் மதிப்பை ஏற்றவோ இறக்கவோ, நிதிக்கு உரிமை உண்டு. ஆனால் இந்த உரி மையை ஆளவேண்டுமாயின் 10 சதவீதத்திற்கு மேற்பட்ட கோட்டாவுடைய நாடுகள் ஒவ்வொன்றின் சம்மதமும், ஓட்டு ரிமையுடைய நாடுகளின் பெரும்பாலானவைகளின் (majority) சம்மதமும், வேண்டும். ஒரு நாடு 72 மணி நேரத்துக்குள் தான் மாற்ற விரும்பவில்லை என்று தெரிவித்தால், அந்த நாட்டின் மாற்றுவீதத்தை நிதி மாற்றக்கூடாது. நிதிக்கு இப்படிப் பட்ட அதிகாரம் கொடுத்ததற்குக் காரணம், பொன் போதாமையால் அல்லது நாடுகளுக்கிடையே பொன் பரவ லில் மிக்க ஏற்றத்தாழ்வு உண்டாவதனால், உலக வாணிபப் பெருக்கம் தடைப்படும் என்றும், வாணிபத்துக்கு வேண்டிய பொன் இன்மையால் வடிப்பு நிலை உண்டாகி விலை கட்ட

மைப்பில் (உதாரணமாக, செய்பொருள் பயிர்ப்பொருள்களுக் கிடையிலும், பொன் விலை பண்ட விலைகளுக்கிடையிலும்) முரண்பாடுகள் உண்டாகும் என்றும் அஞ்சியதேயாகும். எதிர்காலத்தில் பொன் போதாமையால் நாடுகள் பாதிக்கப் படும்போது நிதி பொன்னின் மதிப்பை உயர்த்தலாம், அதாவது பணங்களின் பொன் - மதிப்பைக் குறைக்க லாம். இப்படிப்பட்ட பொதுப்பட்ட நடவடிக்கையை நிதி எடுக்க வழியில்லையாயின், நாடுகள் ரிசர்வு பிரச்சினை காரண மாகத் தனித்தனியாக நடவடிக்கை எடுத்து நிதியின் முயற்சிகளைப் பாழாக்கும். பழைய பொன் திட்டத்தின் கதியே நிதியின் திட்டத்துக்கும் ஏற்படும்.

சமத்வ மதிப்புக் குறிப்பிடும் விலைக்கு வேறுபட்ட விலையில் பொன்னை விற்கவோ வாங்கவோ கூடாது. வேறு விலையில் பொன் பேரங்களைச் செய்வார்களானால், சம வீதத் துக்கு வேறான வீதத்தில் பொன் ஏற்றுமதி மூலம் அயல்நாட்டுப் பேரங்களைப் பைசல் செய்யத் தனி வணிகர்களுக்கு வசதி செய்வதாகும். இது மறைமுகமாக, ஒப்பிய மாற்று வீதத் துக்கு வேறுபட்ட வீதத்தில் வாணிபம் நடத்துவதாகும்.

ஒழுங்கான குறுக்கு வீதங்கள் (orderly cross rates) நாடுகளின் செலாவணிகளுக்கிடையே நிலைபெறுவதற்கு நிதி மிகவும் முக்கியத்துவம் கொடுத்துள்ளது. ஏனென்றால் ஒழுங்கற்ற குறுக்கு வீதங்கள் வாணிபத் தொடர்புகளை இயற்கைப் போக்கிலிருந்து திரித்துவிடும். உதாரணமாக, இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும்அதிகாரப்பூர்வமான மாற்று வீதம் £ 1=$ 3 ஆக இருக்கும்போது அங்காடியில் லீரா—ஸ்டெர் லிங், லீரா—டாலர் வீதங்களில் முரண்பாடுண்டாகி £ 1=$ 4 ஆக இருப்பின், ஸ்டெர்லிங் வட்டார (sterling area) நாடுகளின் பொருள்கள் இத்தாலிக்குச் சென்று அங்கிருந்து அமெரிக் காவுக்குச் செல்லும். இது சுற்றுவழி. இதனால் ஸ்டெர்லிங் வட்டார நாடுகள் நேரடியே டாலருக்கு விற்க முடியாமல், தேவையில்லாத லீராவைப் பெறவேண்டியிருக்கிறது.

சமத்வ மதிப்பு நிறுவப்பட்ட பின் அதை மறைமுகமாகக் குறைக்கக் - கூடாது என்பதற்குப் பல கட்டுப்பாடுகள் இருந்தன. முதலாவதாக, பலபட்ட மாற்று வீதங்கள் (multiple exchange rates) தடுக்கப்பட்டன. இத்தடை இன்றேல் ஒரு நாடு அடிப்படைச் சமநிலைக் கேடில்லாத

போதும், இம்முறையை ஆண்டு, தன் வர்த்தகர்கள் உலக அங்காடிகளில் மும்மரமாகப் போட்டியிடச் செய்ய முடியும். விளைவில் இந்த முறை மதிப்பிறக்க முறைக்கு ஒப்பாகும். மறைவாக அதே வேலையைச் செய்கிறது. நிதியின் அனுமதி யின்றி எந்த அங்கநாடும் வேறுபடுத்தும் (discriminatory) செலாவணி ஏற்பாட்டையோ, பலபட்ட மாற்று வீதங் களையோ ஆளக்கூடாது. கணியக் கட்டுப்பாடுகளை (quan titative restrictions) விட இதை நிதி அதிகமாக வெறுத்தது என்று நினைக்க இடம் இருக்கிறது. இதற்குக் காரணம் ஒழுங்கற்ற குறுக்கு வீதங்கள் (disorderly cross rates) போன்றே இதன் விளைவுகளும் இருக்கும் என்ற கருத்தாகும். தவிர, திறமையுள்ள நிருவாக அலுவலகர்கள் இல்லாத நாடுகள் செலாவணிக் கட்டுப்பாடுகளைச் செய்வது கடினமாதலால் அதற்குப் பதிலாக இந்த வழியை நாடும். இலாபம் அரசாங்கத்துக்குச் சேர்கிறது என்ற தூண்டுகோலும் இருக்கும். ஆகவேதான் நிதி இவ்வகை நடவடிக்கையை மிகுதியும் வெறுக்கிறது.

## நிதி வசதிகள்

ஒவ்வோர் அங்கத்தினருக்கும் ஒரு கோட்டா உண்டு. கோட்டாவே செலுத்தவேண்டிய சந்தாவை நிர்ணயிக்கிறது இதில் ஒரு பகுதி (25%) பொன்னுகவும், மீதி தன்னுட்டுச் செலாவணியாகவும் செலுத்தவேண்டும். இப்படியாக நிதிக்கு நடப்பு முதல் (working capital) சேர்கிறது. இதைக் கொண்டு அங்கத்தினருக்கு ஆபத்தில் உதவலாம். நாடுகள் சில சந்தர்ப்பங்களில் தம் பணத்தைக் கொடுத்து அயல்நாட்டுச் செலாவணியைப் பெறலாம். நிதி நெடுங்காலக் கடன் வசதி செய்வதற்காக ஏற்படுத்தப்படவில்லை. தொடர்ந்து அயல்நாட்டுச் செலாவணியை நிதியினிடம் நாடுகள் வாங்கிக்கொண்டேபோனுல் கடன் பெறும் நாடுகளின் செலாவணி குவிந்து. கடன் தரும் நாடுகளின் செலாவணி வரண்டு போகும். ஆகவே ஒரு நாடு தன்னுடைய கோட்டாவில் 25 சத வீதத்துக்கு மேல் ஓராண்டில் வாங்க முடியாது. ஆனல் இந்தக் கட்டுப்பாட்டை நிதி அவசியமானபோது தளர்த்தலாம். நிதியின் பண வசதி யைத் தொடர்ந்தோ, பேரளவிலோ பயன்படுத்தாத ஒரு நாட்டுக்கு இந்த விதச் சலுகை காட்டப்படலாம். நிதியிடம் பெறும் உதவிக்கு வட்டி உண்டு. கோட்டாவை ஆள்வது ஏற ஏற, வட்டி ஏறும்; வட்டி, கால நீட்டிப்பையும் பொறுத்தது.

நிதியின் வசதி சம்பந்தமான விதிகள் கீன்சினுடைய திட்டத்தைப் பின்பற்றாது, ஒய்ட்டினுடைய திட்டத்தைப் பெரும்பாலும் பின்பற்றின. கீன்சு திட்டத்தில் நிதியின் பெயர் செலாவணி யூனியன் (currency union). அதற்கு ஒரு புது வகையான காகிதப் பணத்தை (Bancour) உற்பத்தி செய்ய அதிகாரம் இருக்கும். எல்லா அங்கத்தினர்களும் தீர்வில் அதை ஏற்றுக் கொள்வார்கள். ஒவ்வொரு நாடும் அதற்கு எதிராகக் குறிப்பிட்ட அளவுக்கு (overdraft) மிகைப்பற்று உரிமை பெறும். பன்னாட்டுப் பண நிதியின் கீழ்ச் சாத்தியமாவதைவிட அதிகமாக இந்தத் திட்டத்தில் மிகைப்பற்று உரிமை இருக்கும். மற்றொரு முக்கிய வேறுபாடு, நிதியின் முறைப்படி எச்சப்பாடு நாடு (surplus country) தன் துவக்கச் சந்தா அளவுக்கே தன் செலாவணியை நிதிக்குக் கொடுக்கும் பொறுப்புடையது. கீன்சு திட்டத்தில் மொத்த (பற்றுக்குறை நாடுகளின்) மிகைப்பற்று வசதி அளவுக்குப் 'பாங்கர்' பெற்றுக்கொண்டு தன் பணத்தைக் கொடுக்கவேண்டும்.

உதவி வேண்டிய காரணம் எதுவாயினும் கீன்சு திட்டத்தின் கீழ், கோட்டாவில் முக்கால் பங்கு வரைக்கும் உதவி பெறலாம். ஆனால் பொன், அயல் நாட்டுச் செலாவணி, உள்நாட்டுச் செலாவணி அல்லது அரசாங்க பாண்டுகளை ஈடு வைக்க வேண்டும். கோட்டாவில் பாதிக்கு மேற்படும் போது அங்கத்தினருடைய செலாவணியின் மதிப்பைக் குறிப்பிட்ட அளவுக்குக் குறைப்பதும், முதற் பெயர்ச்சிக்குக் கட்டுப்பாடு விதிப்பதும், பொன் அல்லது வேறு ரொக்க ரிசர்வு இருந்தால் அதைச் சமர்ப்பிப்பதும் கோரப்படலாம். உள்நாட்டுப் பொருளாதாரத்தைத் திருத்துவதற்கு வேண்டிய உள்நாட்டு நடவடிக்கைகளை எடுக்கும்படி கோரப்படலாம். இந்த நிபந்தனைகள் எல்லாம் எந்த நாடும் ஏற்கக்கூடியன; நிறைவேற்றக் கூடியன. ஆகவே இந்த நிபந்தனைகள் ஒரு நாடு நெடுங்கால வசதி பெறுவதற்குத் தடையாக இரா.

ஆனால் பன்னாட்டுப் பண நிதியின் விதிப்படி, தொடர்ந்து அல்லது பேரளவுக்கு முதற் பெயர்ச்சி ஏற்பட்டால் அதைச் சமாளிக்க உதவி கிடைக்காது. சமத்வ மதிப்பை (Par-value) அனுமதியின்றி மாற்றினாலும் உதவி எதிர்பார்க்க முடியாது. தவிர வேறு சில நிபந்தனைகளும் உள்ளன. நிதியின் பண வசதிகள் நடப்புப் பேரங்கள் சம்பந்தமாக மட்டும் பயன்படுத்தப் படலாம். முதல் பேரங்களுக்குக் கிடைக்க மாட்டா. தவிரவும், சில பேரங்கள் அல்லது சிலவகை அங்கத்தினர்கள் உதவிக்கு

அருகதை உடையவர்கள் அல்லர். தகுதியை நிதி அவ்வப்போது தீர்மானிக்கும்.

நிதியின் சித்தாந்தம் இந்த வசதி தற்காலிகச் சமநிலைக் கேட்டுக்கே பயன்பட வேண்டும் என்பது. நிதி நிலைக்க வேண்டுமானால், நாடுகள் தாம் வாங்கிய அளவுக்கு அயல் செலாவணியை அல்லது பொன்னைக் கொண்டு தம் நாட்டுப் பணத்தை மீட்கவேண்டும். ஆகவே நிதி வசதி தற்காலிகம் என்பதை வலியுறுத்த ஓர் அங்க நாடு சில சூழ்நிலைகளில் தன் பணத்தை மீட்கும் கடமையுடையது. இந்தச் சூழ்நிலைகளின் வரையறைகளைப் பார்த்தே, முன் கூட்டியே, ஒரு குறிப்பிட்ட சூழ்நிலை தற்காலிகமா அன்று என்பதை நிதி முடிவு செய்ய முடியாது. நிதி தன்னுடைய அறிவுக்கு ஏற்றவாறு முடிவு செய்யவேண்டியிருக்கிறது. சம நிலைக்கேடு சிலபோது சீக்கிரம் தானே தீர்ந்துவிடும் என்ற கருத்தில் தற்காலிக மானதாகக் கருதப்பட்டு நடவடிக்கை இல்லாது விடலாம். உதாரணமாக, ஓர் ஆண்டில் ஒரு நாடு மழையின்மையால் பேரளவில் இறக்குமதி செய்ய நேர்வதைக் கூறலாம். மற்றச் சூழ்நிலைகளில் அதிகாரிகள் தகுந்த நடவடிக்கைகளை எடுத்துத் திருத்துவார்கள் என்ற உறுதியிருந்தால்தான், அவை தற்காலிகமானவை என்று கருதக் கூடும். அப்படியானால் நிதியே முன்கூட்டி எந்த விதமான நடவடிக்கை வேண்டும் என்பதையும் இவைகளை அதிகாரிகள் எடுப்பார்களா என்பதையும் தீர்மானிக்க வேண்டியிருக்கும்.

**நிதியும் பன்முக வாணிபத் தீர்வும்**
**(The fund and multilateral settlement)**

நடப்புப் பேரங்கள் சம்பந்தமான செலுத்துகள் பன்முகத் தீர்வு முறையில் நடக்க உதவுவது நிதியின் ஒரு குறிக்கோள். ஆனால் இதை எப்படி நிறைவேற்றுவது என்பதைப் பற்றித் தெளிவாக நிதியின் அமைப்பில் காணப்படவில்லை. அமைப்பில் எந்தக் குறிப்பிட்ட செலாவணியும் நாடுகளுக்கிடையே பொதுச் செலாவணி என்று கூறப்படவில்லை. பொன், மதிப்பளவையாக மட்டுமே உள்ளது. அதை வேண்டுமானால் ஆளலாம்; நியதியில்லை. புதுப் பன்னாட்டுப் பணம் ஒன்றும் படைக்கப்படவில்லை. மாற்றுக் கட்டுப்பாட்டை நிதி தடுப்பதால் எல்லாப் பணங்களும் ஒன்றுக்கொன்று மாறக் கூடியன என்று நினைக்கலாம். ஆனால் அன்னியர்கள் தமக்குள் மாற்றிக் கொள்ளலாம் என்ற மாற்றுரிமை நியதி விதியில் இல்லை. ஆகவே மாற்றுரிமை தருவது நாடுகளின் விருப்பத்தைப்

பொறுத்தது. ஆகவே நிதி நேரடியாகப் பன்முகத் தீர்வுக்கு (multilateral settlement) வழி செய்யவில்லை. ஆனால் தன் பணத்தையுடைய மற்றொரு நாடு, நடப்பு பேரங்களின் விளைவாகச் சமீபத்தில் அப் பணம் தன் கைவசம் வந்ததாக, அல்லது நடப்புப் பேரங்களுக்குச் செலுத்துவதற்குத் தனக்கு மாற்றுதல் அவசியம் என்பதாகக் கூறினால், அந்தப் பணத்துக்குரிய நாடு மீட்டுக் கொள்ளவேண்டும். மீட்கும்போது மற்ற நாட்டின் நாணயத்திலாவது பொன்னிலாவது கொடுக்கலாம்.

தன் கோட்டாவுக்கு மிஞ்சி நிதியில் தேங்கியுள்ள தனது பணத்தை ஒரு நாடு பொன்னைக் கொண்டு மீட்கலாம். ஆண்டு தோறும் தேக்கத்தில் ஏற்படும் உயர்வில் பாதிக்கு, ஓரளவுக்குத் தன் ரிசர்வு நிலையை அனுசரித்து, மீட்க வேண்டும். தேக்க உயர்வைக் காட்டிலும் ஏற்றமாக ரிசர்வு குறைந்திருந்தால் மீட்க வேண்டியதில்லை. மீட்பின் விளைவாக (1) நாட்டின் ரிசர்வுக் கோட்டாவுக்குக் கீழ் குறையவோ, (2) நாட்டின் பணம் நிதியில் 75%க்குக் குறையவோ, (3) நிதியில் மற்ற நாட்டின் பண இருப்பு 75% மேற்படவோ, காணப்பட்டால், இந்நிலைகள் வருமளவுக்கு மீட்பு நடக்கக் கூடாது.

மீட்பு விதிகள் நிதியின் பொன், மற்றும் மாற்றுரிமையுள்ள பணங்களின் இருப்பை அதிகப்படுத்தும் நோக்கமுடையன. மீட்புக்குப் பொன்னோ மாற்றுரிமையுள்ள பணமோ வேண்டியிருந்ததால் பல நாடுகள் இப் பொறுப்பை ஏற்கத் தயங்கின. ஆகவே மாற்றுரிமை யற்ற பணத்தை நிதியிலிருந்து வாங்கிய நாடு அப் பணத்தைக் கொண்டே தன் பணத்தை மீட்கலாம் என்ற ஏற்பாடு தோன்றியது.

**வாணிபத்தின் மீதும் செலுத்தின்மீதும் உள்ள தடைகளை நீக்கல்**
(Removal of restrictions on trade and payments)

நிதியின் மற்றொரு நோக்கம் உலக வாணிபத்தின் வளர்ச்சியைத் தடை செய்யும் மாற்றுக் கட்டுப்பாடுகளை நீக்குவது. நிதியின் உத்தரவின்றி எந்த அங்க நாடும் நடப்புப் பேரங்கள் காரணமாக எழும் சொத்துகளுக்கும் பெயர்ச்சிகளுக்கும் (transfers) தடை விதிக்கக்கூடாது, ஆனால் இதற்கு இரண்டுவித விலக்குகள் உண்டு. ஒன்று அரிய செலாவணிப் பிரிவு (scarce currnecy clause); மற்றொன்று இடைக்கால ஏற்பாடு (transitional arrangement) சம்பந்தமானது. போருக்குப் பின்வரும் இடைக் (transitional) காலத்தில் அங்க நாடுகள், மாறும் சூழ்நிலைக்கு ஏற்ப, நடப்புப்

பேரங்கள் சார்பாய் ஏற்படும் செலுத்துக்கள், பெயர்ச்சிகள் (transfers) மீது கட்டுப்பாடுகளை விதிக்கலாம். ஆனால் நாடுகள் நிதியின் அயல்நாட்டுச் செலாவணிக் கைக்கோள்களை இடைவிடாது மனத்தில் வைக்க வேண்டும். முக்கியமாகத் தடைகளின்றியே பைசல் செய்யக்கூடிய நிலை ஏற்படும் என்று தோன்றியதும் இந்தக் கட்டுப்பாடுகளை விலக்கிவிட வேண்டும். இடைக் காலமென்பது நிதி ஆரம்பித்த 5 ஆண்டுகள் என்று விளக்கப்பட்டது. அந்தத் தேதிக்கு மேல் கட்டுப்பாடுகளை வைத்திருக்கும் நாடுகள் அவைகளை மேலும் வைத்திருப்பதைப் பற்றி நிதியோடு கலந்து பேச வேண்டும். அவசியம் என்று கருதினால் நிதி ஒரு நாட்டிடம் குறிப்பிட்ட கட்டுப்பாடு அல்லது கட்டுப்பாடுகள் நீக்கப்பட வேண்டுமென்று கோரலாம். இதற்கு நாடு விடைகொடுக்க அவகாசம் தரவேண்டும். ஒரு நாடு நிதியின் நோக்கத்துக்கு முரணான கட்டுப்பாடுகளை வைத்திருப்பதில் பிடிவாதமாயிருந்தால் நிதியின் பண வசதிகளை ஆள்வதற்கு அந்த நாட்டுக்கு உரிமையில்லை என்று நிதி தெரிவிக்கலாம்.

நிதியின் அதிகாரம் அயல்நாட்டுச் செலுத்து நிலை சம்பந்தமான கட்டுப்பாடுகள் சம்பந்தமானது. அயல்நாட்டு வாணிப சம்பந்தமான கட்டுப்பாடுகள் (சுங்கம், கோட்டா முதலியன) பன்னாட்டு வர்த்தக அமைப்பின் (International Trade Organisation) அதிகாரத்துக்குட் பட்டவை. இந்த அமைப்பு ஹவானா சாசனம் (Havana Chartrr) என்பதிலிருந்து உண்டானது. இது நாடுகள் ஒன்றுக்கொன்று சுங்கக் குறைப்பு பேரங்கள் நடத்த வேண்டிய முறையையும் விதியையும் விளக்கியது. இந்தச் சாசனம் இன்னும் நாடுகளால் மேற்கொள்ளப்படவில்லை. தற்காலிகமாகச் "சுங்க வரி, வாணிபம் சம்பந்தமான பொது ஒப்பந்தம்" (General Agreement on Trade and Tariff) என்பதன் கீழ் நடவடிக்கைகள் எடுத்து வரப்படுகின்றன. ஆனால் வணிகக் கட்டுப்பாடு நீக்கம் நிதியின் செயலுக்கும் அவசியமானது. நிதி அங்கத்தினர்களின் அயல்நாட்டுத் தொடர்பு பணத்துறையில் ஒழுங்காக நடக்க வேண்டுமென்ற நோக்கத்தையுடையது. பன்னாட்டு வர்த்தக அமைப்பு (I. T. O) வாணிபத் துறையில் இருந்த அயல்நாட்டுத் தொடர்பு ஒழுங்காக இருக்கப் பார்த்துக் கொள்ள நிறுவ வேண்டியிருந்தது. இரண்டு அமைப்புக்களும் பல காரியங்களில் ஒன்றையொன்று கலந்து கொள்ள வேண்டும். நாடுகள் செலுத்துநிலைச் சிக்கல்கள் தோன்றியபோது தற்காலிகம் என்று சொல்லித் தடைகளை விதிக்கின்றன; ஏனென்றால் வேறு முறைகள் நிதியால் கருதப்

படுவன எல்லாச் சூழ்நிலைக்கும் பொருந்துவனவாக இல்லை. சில முறைகள் திருப்திகரமாக இல்லை. தவிர, பல கட்டுப்பாடுகள் தொழிற்காப்பாக, வருவாய்க்காக விதிக்கப்படுகின்றன. பல தடைகளை நீக்கவேண்டுமானால் நாடுகள் நேரடியாகக் கலந்து பேரம் செய்து ஒன்றுக்கொன்று விட்டுக் கொடுக்கும் முறையே சரியானது. ஆனால் அந்த முறையை நிதி பின்பற்ற வில்லை.

**சமநிலைக் கேட்டின்போது நடவடிக்கை (action in disequilibrium)**

தற்காலிகமான சமநிலைக் கேடு உண்டானபோதுதான் நிதியிலிருந்து வசதி கிடைத்தது. தானாகத் திருந்தக்கூடும் என்று நினைக்கமுடியாத சமநிலைக் கேடு சம்பந்தமாக உதவி பெற முடியாது. வசதியைச் சிறிது காலத்துக்கு மட்டும் பயன் படுத்தலாம். தவிர, அதைச் சமாளிக்கத் தகுந்த நடவடிக்கை உடனே எடுத்துக்கொள்ளப்படவேண்டும் என்கிற நம்பிக்கையும் வேண்டும். தகுந்த நடவடிக்கை என்றால் என்ன? பொதுவாகக் கூறினால், சமநிலைக் கேட்டைப் பரிகரிப்பது நல்லதே அன்றி அழுத்தி வைப்பது சரியான முறையன்று என்பது நிதியின் கருத்து. (1) எச்சப்பாடு நாடுகள் தம் இறக்குமதித் தடைகளைக் குறைப்பது அவசியம். (2) பற்றுக்குறை நாடுகள் பேரளவில் அல்லது தொடர்ந்து நிகழும் முதல் பெயர்ச்சியைத் தடுக்க மாற்றுக் கட்டுப்பாட்டை ஆளலாம். உண்மையில் இப்படி நடவடிக்கை எடுக்காத நாடுகள் நிதியில் பண வசதிகளைப் பயன் படுத்திக் கொள்ளத் தகுதியுடையனவாகக் கருதப்படமாட்டா. (3) உள்நாட்டு விலை தொடர்ந்து ஏறக்காணும்போது உள் நாட்டுத் தேவையைக் குறைக்க வேண்டும். (4) மாற்று வீதத்தை மாற்றுவதற்கும் நிதி இடம் தருகிறது.

ஆனால் மேற்கண்ட பரிகார முறைகள் எல்லாச் சூழ்நிலைகளுக் கும் பொருந்தா. முதல் பரிகாரம் எச்ச நாடுகள் தொழில் பாது காப்பாக வரிகளை வைத்திருப்பதைத் தடுக்கவில்லை. இரண்டாவது பரிகாரம் அயல்நாட்டுப் பற்றுக்குறையானது முதல் வெளி யேற்றத்தினால் ஏற்படாதபோது பயனில்லை. ஏற்பட்டாலும் முதல் வெளியேற்றத்தைத் தடுப்பதற்குப் பல செயல்முறைத் தடைகள் இருக்கின்றன. மூன்றும் பரிகாரத்துக்குத் தேவை மிக்கு பண வீக்க நிலை ஏற்படவேண்டும். இது அயல்நாட்டுப் பற்றுக்குறையை உண்டாக்கக் கூடும் என்பதுண்மை. ஆனால் இது மட்டுமா விலை ஏறுவதற்குக் காரணம்? சாதனங்கள் முழுவதும் ஆளப்படாத நாடுகளிலேகூடப் பற்றுக்குறை ஏற்பட்டு, நிவர்த்திக்க வேண்டிய அவசியம் உண்டாகலாம்.

நான்காவது பரிகாரம், மாற்று வீதத்தை மாற்றுவது, சில சூழ் நிலைகளில் கடினமாக இருக்கக்கூடும்.

நிதி, இந்தப் பரிகாரங்கள் எல்லாம், முக்கியமாக மாற்று மதிப்புக் குறைப்பு, பயனற்றன என்பதை உணர்ந்திருந்தது. ஆனால் கூலி ஏறுசுழல் (wage spiral) காரணமாக ஏற்படும் சிக்கலைப் பற்றி நிதி கருதியதாகத் தெரியவில்லை. எல்லா நாடு களிலும் வாணிபம் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டிருக்கும்போது மாற்று வீதத்தைத் திருத்துவதால் மட்டும் பயன் இல்லை என்பதை நிதி கவனித்ததாகத் தெரியவில்லை. பண மதிப்பைக் குறைத்துச் சமநிலை காணவேண்டுமானால் பேரளவில் மதிப்புக் குறைப்புத் தேவைப்படும். இது பற்றுக்குறை நாடு களின் ஏற்றுமதிப் பளுவை அதிகப்படுத்தலாம். பொது ஒப்பந்தம் (G. A. T. T.) வாணிபத் தடைகளை எல்லாம் நீக்கினு லொழிய மாற்றுக் குறைப்பினால் அதிகப் பலன் ஏற்படாது.

**அரிய செலாவணி** (scarce currency)

பன்னாட்டுச் சமநிலைக் கேடு தோன்றும்போது அதைச் சமாளிக்கும் முறையை 'அரிய செலாவணிப் பிரிவு' (scarce currency clause) கூறுகிறது. ஒரு குறிப்பிட்ட செலாவணி ஏராளமாகத் தேவைப்பட்டு அந்தச் செலாவணியைச் சமாளிப்பது முடியாது என்கிற நிலை வரும் என்று நிதி பயந்தால், அந்தச் செலாவணியை அரிய செலாவணி என்று நிதி வெளி யிடலாம். தன் கையிலுள்ள அரிய செலாவணியை நாடுகளின் தேவை, பன்னாட்டுப் பொருளாதார நிலை, முதலியவைகளை அனுசரித்துப் பங்கீடு செய்யலாம். இப்படி விளம்பரப்படுத்திய பின், நிதியைக் கலந்து, நாடுகள் அரிய செலாவணிப் பேரங் களுக்குக் கட்டுப்பாடுகள் விதிக்கலாம்.

இந்தப் பிரிவின் முக்கியக் குறை என்னவெனில், ஒரு செலாவணி கிடைப்பு அருமையாகும் என்ற நிலைக்கு நிதி வந்தாலொழிய இந்தப் பிரிவை ஆள முடியாது. பற்றுக்குறை நாடுகள் அருமையை உணர்ந்தால் போதாது. உதாரணமாக அமெரிக்க டாலர், நிதி வேலை துவங்கிய நாளாகவே உலகத்தில் அரிய செலாவணியாக இருந்துவந்த போதிலும், நிதியைப் பொறுத்தமட்டில் டாலர் நிறைய இருந்ததினால் மேற்கண்ட பிரிவின் கீழ், அரிய செலாவணியாக வெளிடப்படவில்லை. பிரிவில் கண்ட வாசகப்படி ஒரு செலாவணிக் கிடைப்பு அருமையாகத் தோன்றக்கூடிய நிலை இருந்தாலும் போதும்; நிதி நடவடிக்கை எடுக்க உரிமை பெறுகிறது. ஆயினும் நிதியில் அருமை தோன்ற

வேண்டும். ஒரு செலாவணி நிதிக்கு வெளியில் அருமையாக இருந்தபோதிலும் அது இந்தப் பிரிவின் கீழ் நடவடிக்கை எடுக்க முடியாது. எந்தச் செலாவணியும் இந்தப் பிரிவின் கீழ் அரியது என்று அறிக்கை செய்யப்படாததனால், செலுத்து அல்லது வாணிபம் சம்பந்தமாக உள்ள கட்டுப்பாடுகள் எல்லாம் (அயல் நாட்டுச் செலுத்துச் சிக்கல்களைச் சமாளிப்பதற்கு ஏற்பட்ட) இடைக்கால நடவடிக்கைகள் என்று கருதக்கூடியவையா கின்றன. இதனால் நிதிக்கு, உலகத்தில் இருக்கிற கட்டுப்பாடுகள் அல்லது தடைகளில் எவை சரியானவை, அவைகளை எப்படி விதிக்கலாம் என்று தீர்மானிக்க வேண்டிய பொறுப்பு இல்லாமல் போய்விட்டது. முக்கியமாக, இவ்விதத் தடைகள் கோட்டா முறையாக இருக்க வேண்டுமா அல்லது சுங்க வரியாக இருக்க வேண்டுமா, பற்றுக் குறை நாடுகள் வேறுபடுத்தும் (discriminating) தடைகள் போடுவதற்கு என்ன ஏற்பாடு என்பவை பற்றி ஆய இடமில்லாமற் போய்விட்டது.

நிதியின் விதிகளில் மந்தச் சூழ்நிலையில் நாடுகள் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பது குறிப்பிடப்படவில்லை. ஒவ்வொரு நாடும் மந்தம் வெளிநாடுகளுக்குப் பரவாத வகையில் நடக்க விதிக்கப்படவில்லை. நடப்பதைத் தடுத்திருக்க வேண்டும். மந்தத்தைத் தீர்க்க எடுக்கும் நடவடிக்கைக்கு முரண்பட்ட நடவடிக்கையை அயல்நாடு எடுக்கக்கூடாதென்று கூறவில்லை. பன்னாட்டு வர்த்தக அமைப்பு (International Trade Organisation) விதிகளில் இவ்விதக் கருத்துகள் காணப்படுகின்றன. நிதி விதியிலும் காணப்படவேண்டும்.

**நிதியும் வீதமும்**

நிதியின் அடிப்படை நோக்கம் தடைகளால் பகுக்கப்படாத உலகப் பொருளாதாரம். இப்பொருளாதாரத்தில் நடப்புப் பேரங்கள் சம்பந்தமான செலுத்துகள் விஷயத்தில் மாற்றுக் கட்டுப்பாடுகள் இரா. வீதங்கள் குறிப்பிட்ட நிலையில் நிலைக்கச் செய்யப்படும். மாற்றுவதாயின் நிதியின் ஒப்புதல் தேவை; அடிப்படைச் சமநிலைக்கேடு இருக்கும்போதுதான் மாற்றப்படும்.

பொன் திட்டத்தின் சிறப்பியல்புகளையும் இந்நூற்றாண்டின் மூன்றாம் பத்தில் இருந்த மாற்று நெகிழ்ச்சியையும் தன்னகத்தே கொண்ட ஓர் ஏற்பாடே நிதியாக உருப்பெற்றது. நிலையான வீதங்கள் பொன் திட்டத்தின் சிறப்பைத் தரும். வீத மாறுதல் பற்றிய யூக வாணிபம் இருக்கலாகாது. முதல் பெயர்ச்சிகள் தடுக்கப்படுமாதலால் மூன்றாம் பத்தில் கண்ட மாற்றுப்

பிரச்சினைகள் நாடுகளுக்குத் தோன்றுது. மாறுதலுக்கு முன் நிதியைக் கலக்கவேண்டுமாதலால் வீதத்தை மாற்றும் போட்டி இராது.

மற்ருெரு பக்கம், பொன் திட்டத்தின் குறைபாடுகளைத் தவிர்ப்பதும் நிதி ஏற்பாட்டின் நோக்கம். பொன் திட்டத்தின் கீழ் ஒரு நாடு உள்நாட்டில் வருமானக் கேடடைந்தே செலுத்தில் சமநிலை பெற முடியும். பொன் திட்டத்தைக் கைவிட்ட பின் ஒரு நாடு உள்நாட்டில் வேலை நிறைவுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து கொள்ளலாம். ஆனல் இதன் விளைவாகச் செலுத்து நிலை பாதிக்கப்பட்டால் சமாளிக்க வேண்டுமல்லவா? இதற்கு நாடுகளிடையே நிறையப் பொன் ரிசர்வு அவசியம். வீதத்தை மாற்றிச் சமாளிக்க நிதியின் விதிகள் இடம் தரா. நிதியிடம் வீதத்தை மாற்ற அனுமதி பெறுவதற்குள் ஏராளமாகப் பொன்னை இழக்க நேரிடும். ஆகவே இடைக்காலத்தில் கட்டுப்பாடு முறைகளை ஆளவேண்டி வரும். ஆகவே, பொன் திட்டத்தின் கீழும் மூன்றும் பத்திலும் தேவைப்பட்டதற்கு மேல் நாடுகளிடம் ரிசர்வு இருக்க வேண்டியிருக்கும். நிதி ஓரளவுக்கு உதவி செய்ய ஏற்பாடு செய்துள்ளது. ஏற்பாடுகளும் ஒரு நாட்டுக்குப் போதவில்லையானல் அடிப்படைச் சமநிலைக்கேடு தோன்றும். நாட்டுக்கு அப்போது வீதம் மாற்ற உரிமை தரப்படுகின்றது. எல்லா நாடுகளுக்குமே ஒரு நாணயம் போதாதபோது 'அரிய செலாவணி' விதி நடைமுறைக்கு வரும். இது குறிப்பிட்ட நாட்டின் செலாவணி சம்பந்தமாகக் கட்டுப் பாடுகள் விதிக்க உரிமை தருகிறது.

### நிதியின் நடைமுறைக் கைகோள்

நிதி நிறுவிப் பல ஆண்டுகளாகின்றன. நாடுகளுக்கு இது ஒரு சோதனைக் காலமாக இருந்தது. நிதி எதிர்பாராத சிக்கல்களைச் சமாளிக்க வேண்டியிருந்தது.

முதல் பிரச்சினை ஒவ்வொரு நாட்டுக்கும் துவக்கச் சமநிலை வீதத்தை (initial par-values) நிர்ணயிக்க வேண்டியிருந்தது. எல்லா நாடுகளும் யுத்தத்துக்கு முன்னிருந்த வீதத்தை ஆளப் போவதாக அறிவித்தன. இவ் வீதங்கள் அனைத்தும் டாலர் அடிப்படையில் பார்த்தால் மிகை மதிப்பு வீதங்கள். ஆயினும் நிதி தடை சொல்லாமல் ஏற்றது. காரணங்கள் பல. (1) அன்றைய சூழ்நிலையில் வீதத்துக்கு ஏற்றுமதி இறக்குமதி களை ஒழுங்குபடுத்தும் சக்தி இல்லை. நாடுகளுக்கு ஏற்றுமதி சக்தி இல்லை. இறக்குமதிகள் இன்றியமையாதனவாயிருந்தன.

(2) வீதங்களைக் குறைக்க மதிப்பிறக்கம் செய்திருந்தால் அப்போதிருந்த பண வீக்க நிலை மேலும் கேவலமாயிருக்கும். டாலர் பற்றாக்குறை அதிகப்பட்டிருக்கும். (3) எவ்வாறாயினும் நாடுகளின் வீதங்களைத் தன் கட்டுப்பாட்டுக்குக் கொண்டு வருவது அத்யாவசிய மாயிருந்தது.

இப்படி நிறுவப்பட்ட வீதங்கள் நாளடைவில்—நாடுகளின் ஆக்கத்திறன் செம்மையானவுடன்—திருத்தப்படும் என்று கருதப்பட்டது. 25 நாடுகள் திருத்தின. (உதாரணமாக பிரிட்டனில் மதிப்பிறக்கம்.) இவை உலக வாணிபத்தில் 65%-க்குப் பொறுப்புள்ளவை.

நிதி சமநிலை வீதத்தை நிர்ணயமாய் அறியவேண்டியிருந்ததற்குக் காரணம் போட்டி மதிப்பிறக்கம் (devaluation) கூடாதென்பதே. இந்த லட்சியம் நிறைவேறியது. ஆனால், சில குறைபாடுகள் காணப்பட்டன. சில நாடுகள் இன்னும் வீதத்தைத் தக்கபடி திருத்தவில்லை. திருத்தம் செய்ய முடிவு செய்த நாடுகள் திடீரெனப் பேரளவில் மதிப்பிறக்கம் செய்தன. (உதாரணம் பவுண்டு இறக்கம் 30·5%). மதிப்பிறக்கம், அடிப்படைச் சமநிலைக்கேடு நிகழ்ந்தால்தான் அவசியமாகும் என்பது நிதியின் விதி. ஆனால், மதிப்பிறக்கங்கள் கோரப்பட்டபோது இதை ஆராய நேரமில்லை; ஆய்வு செய்வது யூகப் பண வாணிபத்துக்கு இடம் தரும்.

துவக்க வீதங்களை அறிவித்தபோது சில நாடுகள் சிறிது அவகாசம் கேட்டன. சில பல்வீத முறையை (Multiple Exchange Rate System) ஆண்டன. இதிலிருந்து பொருக்கிய வீதங்களை நிதி ஏற்றுக்கொண்டது. ஆனால். விரைவில் இவை நிலைமைக்குப் பொருத்த மற்றுவிட்டன; நடைமுறை வீதம் வேறாகிவிட்டது. வீதங்கள் விஷயத்தில் நிதி கண்டிப்பாக இல்லை. 1960 வரையிலும்கூட 13 நாடுகள் வீதத்தை நிர்ணயிக்கவில்லை. தவிர, வீத நெகிழ்ச்சியை (Flexible rate) நிதி அனுமதித்தது. நிறுவிய வீதத்தைக் கைவிட்டு, கனடா நாடு மிதக்கும் வீதத்தை ஆண்டது. பல்வீத நாடுகளை, ஒரே வீத நிறுவலுக்கு முதற்படியாக, மிதக்கும் வீதத்தை ஆள அனுமதித்தது. நாடுகள் விரைவில் ஒரு வீதத்தை நிறுவுவதாக உத்தரவாதம் அளித்தன.

இரண்டாவது பிரச்சினை மாற்றுக் கட்டுப்பாடுகள். நிதி, நடப்பு வர்த்தகப் பேரங்களுக்குத் (Current Transactions) தடையிருக்கக் கூடாது என்ற நியதி உடையது. அது அளித்த வசதிகள்—பண வசதிகள்—இந்த நோக்கமுடையன. வீதங்

களில் நியதி உண்டாக்கியதும் இதே நோக்கத்துடன்தான். ஒவ்வொரு நாடும் அதன் செலாவணிக்குத் தடையிலா மாற்றுரிமை தர வேண்டும் என்று கோரப்பட்டது. வர்த்தக பேரச் செலுத்துகளுக்குத் தடை ஏதும் இருக்கக்கூடாது. செலாவணிகளுக்கிடையே எந்தவித பேதமும் காட்டக்கூடாது. ஆனால், யுத்தத்துக்குப் பின் எல்லா நாடுகளும் அயல் செலாவணி (டாலர்) பற்றுக்குறையினால் அவதியுற்றன. ஆகவே மாற்றுகள் தடையிலாது விடப்பட்டிருந்தால், வீதங்களில் நிலைபேறு காண முடியாது. ஆகவே நிதி, தற்காலிகமான தடைகளை அனுமதித்தது. ஒரு சில நாடுகள் தவிரப் பிற தடைகளை ஆண்டன. மாற்றுக் கட்டுப்பாடு இரு சூழ்நிலைகளில் நிதியால் அனுமதிக்கப் பட்டது: (1) அரிய செலாவணி (scarce currency) சம்பந்தமாக, (2) குறுக்கு வீதங்களில் குழப்பம் (confusion of cross rates). இதற்குக் காரணம் சில நாடுகள் தங்கள் செலாவணிக்கு மாற்றுரிமை (convertibility) தராமையே.

இப்படியாக நிதி நிறுவிய சில ஆண்டுகளுக்கு இலட்சியங்களைப் பூரணமாக நிறைவேற்ற முடியாவிட்டாலும், பேரளவில் நாடுகளுக்கிடையே மாற்றுகளைத் தடைகளிலிருந்து தளர்த்தியது ஒரு பெரிய சாதனை என்பதை மறுக்க முடியாது. அநேகமாக மாற்றுரிமை ஐரோப்பிய நாடுகளில் காணப்பட்டது. வர்த்தகச் செலுத்துத் தடைகள் குறையலாயின. வீத நிலைபேறுக்கு வேண்டிய உதவி செய்து, பல நாடுகளை நேரடிக் கட்டுப் பாட்டுக்குப் பதிலாக மறைமுகக் கட்டுப்பாட்டுக்கு மாறும்படி செய்தது. தடையுள்ள நாடுகளுடன் ஆண்டுதோறும் கலந்து தடை தளர்த்துவது விஷயமாகப் பேச்சு நடத்தியது. பிரிட்டன் சூயஸ் தகராறின்போது மாற்று நெருக்கடியில் அகப்பட்ட போது இதுவரையில் செய்யாத ஒரு காரியத்தை நிதி செய்தது. 100% கோட்டாவுக்குச் சமமான கடன் உதவி தந்தது.

மூன்றாவது, கடன் உதவிக் கைகோள்: நிதியின் முக்கிய உதவி, பற்றுக்குறையாகும் அயல் செலாவணியை நாடுகளுக்குக் கொடுப்பது. அன்றைய சூழ்நிலையில் எல்லா நாடுகளும் பற்றுக்குறையில் அவதிப்பட்டதால், தடையின்றி நிதியிலிருந்து மாற்றுகளை எடுப்பதாயின், நிதி சமாளிக்க முடியாது. ஆகவே சில நிபந்தனைகளின்பேரில்தான் அயல் மாற்றுப் பெறும் உரிமை செயல்பட்டது. பணத் துறையில் நெருக்கடி (crisis) இருக்க வேண்டும்; உதவி செய்தால் நெருக்கடி தீர்வதாக இருக்க வேண்டும். நிதி அவசியத்தை ஆய வேண்டும். ஆயினும்

நாடுகள் தாராளமாக நிதி உதவியை ஆள அனுமதிக்கப்பட்டன. பின்னர்ப் பொருளாதார நிலைபேறு (economic stabilisation) சம்பந்தமாக [உதாரணமாகத் திட்டம் (plan) சம்பந்தமாக] மாற்று நெருக்கடி ஏற்பட்டாலும் உதவி செய்ய முன்வந்தது. முன்னேற்பாடு கடன் (Stand-by Credit) முறையை அமலுக்குக் கொண்டுவந்தது. இதன்படி கடன் தொகை நிர்ணயமாகி, வேண்டும்போது வேண்டுமளவு எடுக்கலாம். இது ஒரு பெரிய உதவி—உதாரணமாக இந்தியாவுக்கு. நிதியிலிருந்து எடுக்கும் (drawing) தொகை விஷயத்திலும் அநேக தளர்ச்சி முறைகள் தோன்றின. பொன் ஈடான கோட்டா வன்னியில், நிதியில் ஒரு நாட்டின் நாணய இருப்பு, கோட்டாவுக்கு எச்சமாயின் இதில் 25% அளவுக்கு அன்றியும், மேலும், நியாயமான அளவுக்கு, உதவி தர நிதி முன்வந்தது.

பின்னர்க் கொரியா யுத்தத்தின் விளைவாக, டாலர் நெருக்கடி குறைந்தபோது, நிதி ஆட்சி குறைந்தது. நாடுகளின் செலுத்துச் சமநிலை சிக்கல்கள் முடிந்தபாடில்லையாயினும், நிதியை நாடல் குறைவாக இருந்தது. 1956-க்குப்பின் மீண்டும் பேரளவில் நிதி உதவ வேண்டிய தாயிற்று. நிதியின் பொன், டாலர் ரிசர்வு பாதியாகிவிட்டது. பின்னர் சூயஸ் நெருக்கடியின்போது நிதி பெரும் தாக்குதலைப் பெற்றது.

இந்தச் சூழ்நிலையில் அமெரிக்கா, 'கோட்டாக்களை 50% உயர்த்த வேண்டும் என்று நிதிக்கு ஒரு கோரிக்கை விடுத்தது. 1959 பிப்ரவரியில் இது ஏற்கப்பட்டு அமலுக்கு வந்தது. இதற்குப்பின் நிதியின் உதவிக் கைகோளிலேயே பெரும் மாறுதல் ஏற்பட்டது. அதை அறியுமுன் ஒரு விஷயம்.

**நிதித்திட்டம் ஒரு பொன் திட்டமா?**

நிதியில் பொன் திட்டத்தின் சாயலைக் காணலாம். பொன் திட்டத்தைப் போலவே நிதி ஒரு பன்னாட்டுப் பணத் தொடர்பை உருவாக்க முயன்றது. நிதி பொன் திட்டத்துக்கு நேர் முரணானது என்பதை ஒப்புவதற்கில்லை. நிதி முறையும் பொன் திட்டத்தைப் போலவே பன்னாட்டுப் பணத் துறை நடவடிக்கைகளில் ஒரு முறைப்பாட்டை உண்டாக்க முயன்றதனால் அநேக அம்சங்களில் ஒற்றுமை இருக்கக் காண்பதில் ஆச்சரியம் இல்லை. ஆனால், அநேக முரண்பட்ட நலங்களை ஒருங்கிணைக்க வேண்டியிருந்ததால் சில முரண்பாடான அம்சங்களும் நிதியமைப்பில் காண்கிறோம்.

நிதி நாடுகளின் செலாவணிகளைப் பொன் அடிப்படையில் அமைத்து, மாற்றுவீதம் ஒரு பொன் கணியத்துடன் சமநிலை

யுடன் இருக்கும்படி நாடுகள் பார்த்துக்கொள்ள வேண்டும் என்று —பொன் திட்டத்தைப்போலவே—நியமித்தது. சமப்பாடு மதிப்புகள் (par-values) பொன்னில் அல்லது டாலரில் நியமிக்கப் பட்டன. ஆகவே டாலர் சமன்பாடு, பொன் சமன்பாட்டுக்குப் பதிலாகத் தோன்றியது. இதற்குக் காரணம் நிதி பன்னாட்டுப் பேரங்களைத் தீர்க்கும் மையமாக இல்லாமலிருந்ததும். ஆகவே அது பொன்னைக் கட்டுப்படுத்த சக்தி யற்றிருந்தது மாகும். நாடுகள் ஏற்கெனவே டாலர் திட்டத்தில் இருந்தன எனலாம். நிதி அதைப் பின்பற்றியது. ஆகவே நிதி முறையில் பொன் ஒரு கற்பனை அடிப்படையே எனலாம். தவிர டாலரும்கூட பொன் திட்டத்தில் இல்லை. டாலரைப் பொன்னாகத் தடையின்றி மாற்ற முடியாது. ஆகவே டாலரின் பொன் மதிப்பு நிலையானதாக இல்லை. ஆகவே நிதி நிறுவிய பன்னாட்டுத் திட்டம் டாலரானது பொன் திட்டத்தில் இருப்பதாகக் கற்பனை செய்துகொண்ட ஒரு திட்டமாகும்.

பொன் திட்டத்தில் காண்பதுபோல, குறிப்பிட்ட டாலர் மாற்று வீதம் (1%க்கு அப்பால்) ஏறவோ குறையவோ கூடாது. ஒரு நாடு பொன்னை வாங்கும் அல்லது விற்கும்போது விலைச் சமப்பாடு மதிப்புக்கு 1% அளவுக்குத்தான் மேலோ கீழோ பிறழலாம். இங்கு 'நாடு' என்பது பணத் துறை நிர்வாகத்தை. டாலரையும் பொன்னையும் சமமாக மதிக்கும்வரை முரண்பாடில்லை. பொன்னுக்குப் பதில் ஓர் அயல் நாணயத்தை ஒரு நாடு வாங்க விரும்பினால், நிதியிடம் பொன்னை விற்றுப் பெற வேண்டும். (ஆனால், பொன் உற்பத்தி செய்யும் நாடுகள் நேரடியாக விற்கலாம்.) ஆகவே பொன் அங்காடி ஒன்று வெளியில் நடைபெற அனுமதிக்கப்படுகிறது. பணத் துறைக் கல்லாத பொன் விஷயத்தில் நிதி ஒன்றும் செய்யமுடியாது. இது பொன் திட்டத்திற்கு வேறுபட்ட அம்சம். பொன்னை வட்டத்துடன் (premium) வாங்க அல்லது விற்கப்படுவதை நிதி தடுக்க முடியவில்லை. ஆகவே உலகப் பொன் அங்காடி ஒரு முறையற்ற முறையில் நடந்தது.

தவிர, மாற்று வீதத்தை ஏகதேசமாக மாற்ற நிதி அனுமதித்தது. பொன் திட்டத்தில் இது முடியாது. மாற்றுவது முறையோடு மாற்றப்பட வேண்டும், அவ்வளவே. நிற்க, நாடுகள் மேற்கொண்ட வீதங்கள்—முன்னர்க் கூறியபடி—நாட்டின் அடிப் படை நிலைமைக்குப் பொருத்தமாக இருந்தன என்பதற்கில்லை. மிதக்கும் நாணயங்களாலாவது நாளடைவில் ஒரு தக்க வீதத்தை அறிய முடியலாம்; நிர்ணயமான வீதத்தை ஆண்ட நாடுகளுக்கு

இவ்வித வாய்ப்பில்லை. தவிர, வீதத்தை மாற்றும்போது நிதி ஆய்ந்து பார்க்க நேரமில்லை; ஆயும் தாமதத்தால் ஆபத்தும் ஏற்படக்கூடும்.

பொன் திட்டத்தின்கீழ் நாணயங்களை ஒன்றுக்கொன்று தடையின்றி மாற்றக்கூடும்; பொன்னாகவும் மாற்றக்கூடும். ஆனால், நிதியின் முறையில், பொன்னைப் பெற, பொன்னாக மாற்றக்கூடிய செலாவணியை முதலில் ஒரு நாடு பெறவேண்டும். ஒரு நாணயத்தைப் பொன்னாக்குவதற்குத் தடையாக அநேக மாற்றுக் கட்டுப்பாடுகள் (exchange controls) இருந்தன. ஆகவே நிதி முறையைப் பொன் திட்டத்துக்கு நேரான ஒப்புடையதாகக் கூற முடியாது. ஆனால் சிலர், இந்த மறைமுகப் பொன் பெறும் முறை பொன் மாற்றுத் திட்டத்தின் (Gold Exchange Standard) கீழும்தான் காணப்பட்டதென்றும், பொன் மாற்றுத் திட்டத்தில் செலாவணியின் கணியம் பொன் ரிசர்வு அடிப்படையில் குறிப்பிட்ட அளவில் இருந்ததால் பொன்னாக மாற்றுதலுக்கும் எல்லை இருந்ததுபோலவே நிதிமுறையின் கீழும் அயல் நாணயத்தை வாங்குவதற்கு எல்லை இருக்கிறது என்றும் கூறலாம்.

பொன் ஆட்சியின்மையினால் வேறுபாடு இருந்தபோதிலும், அடிப்படையில் நிதி முறை பொன் மாற்றுத் திட்டத்தினை ஒத்திருக்கிறது, அங்கத்திய நாடுகளின் செலாவணிகளே பொன் போன்றவை. இம் முறையில் எல்லாச் செலாவணிகளும் சமமானவை. ஆனால், பொன் திட்டம் வேலை செய்ய ஒரு மையம், கேந்திரம்—இலண்டனைப்போல—வேண்டியிருக்கிறது. நிதிமுறையில் இது இல்லை. பொன் திட்டத்தில் காணும் தடையிலாப் பொன் பெயர்ச்சி, பொன் பெயர்ச்சியினால் ஏற்படும் கடன் கட்டுப்பாடு முதலியன இல்லையாதலால், ஒரு மையம் இல்லை. பொன்னைக் கட்டுப்படுத்துவது நியூயார்க், நிதி யன்று. ஆகவே எல்லா நாடுகளின் செலாவணிகளும் சமம் என்பதற்கில்லை. நிதியின் சுமுகமான இயக்கம் அமெரிக்க சபையின் நிருவாகச் சக்தியைப் பொறுத்திருக்கிறது.

நிதி மாறுவீத முறையை நிறுவியுள்ளது. இது நிலைபேறுடன் இருக்க, அங்க நாடுகளின் விலை மட்டங்கள் பொருத்தமாயிருக்கும்படி நிர்வகிக்கப்பட வேண்டும். இதற்குப் பொன் திட்டத்தில் காணும் சில அம்சங்கள் தேவை; நிதியில் அவை இல்லை. நிதியின் கடன் நாடுகளுக்குக் கிடைக்கும் முறைமை பொன் திட்டத்தில் பொன் கிடைப்பதற்கு ஒத்தவகையிலும் விளைவுடனும் இல்லை. ஓர் அங்கநாடு தன் கோட்டாவில் 25%ஐ பொன்னாகவும் அல்லது பொன்னாக மாற்றக்கூடிய செலாவணியாகவும் மீதியைத் தன்

செலாவணியாகவும் செலுத்தும் போது, பொன் / மாற்றக்கூடிய செலாவணி ஆகியவற்றில் உரிமை நிதிக்குச் செல்கிறது. இவை முடக்கப்படுவதால் பன்னாட்டு நீர்மை (international liquidity) இந்த அளவுக்குக் குறைகிறது. தன் செலாவணியை (75%) செலுத்துவது இந் நீர்மையை அதிகப்படுத்துவதாகும். ஆனால், இதை ஒரே முறைதான் ஆளமுடியும். இதனால் ஒன்றுக்கு மற்றொரு நாணயம் மாறுகிறதே ஒழிய, புது வசதி (நீர்மை அதிகரிப்பு) ஏற்படவில்லை. கோட்டாவை அதிகரித்தால்தான் உலக நீர்மை அதிகரிக்கும். உலக வாணிபம் அதிகரிக்கும் வீதத்தில் நீர்மை அதிகரிக்க வேண்டும். நீர்மை நெகிழ்ச்சி நிதியில் இல்லை: வெளியிலிருந்து வரவேண்டியிருந்தது. அமெரிக்கா இவ்வகையில் பேரளவில் உதவி செய்வது மூலம் உலக நீர்மைக்கு உதவியது.

**நிதிச் சீர்திருத்தம்**

பன்னாட்டு ரிசர்வு யுத்தத்துக்குப் பிந்திய காலத்தில் வளரத் தான் செய்தது. (முக்கியமாகப் பொன்னும், அமெரிக்க டாலரும் உலக நீர்மையை அதிகப்படுத்தின). நெருக்கடிகளின் காலத்தில் மைய பாங்குகள் ஒன்றுக்கொன்று பரிவர்த்தனை (swap) மூலம் உதவிக்கொண்டன; அதாவது ஒன்றின் செலாவணியை மற்றொன்றுக்கு முன்கூட்டிய கடனாகத் தந்தன. 1968இல் இவ்வகை வசதி 7 பிலியன் டாலர் அளவாக இருந்தது. திடீரென்று நிகழும் யூக பேர இயக்கங்களைச் சமாளிக்க உதவின.

ஒரு சாரார் பன்னாட்டு நீர்மை போதிய வேகத்துடன் வளரவில்லை என்கின்றனர்: ஆகவே விரைந்து நடவடிக்கை வேண்டும் என்பர். 1950-லிருந்து உலக வாணிபம் ஆண்டுக்கு 7·5% வீதம் வளர்ந்தது. ஆனால், பொன் ரிசர்வு 1·47 வீதம், மொத்த நீர்மை 2·7% வீதம் தான் வளர்ந்தன. ஆயினும், இவ்வாறு வளர்ந்த நீர்மையும், வியாபகத்தில் நாடுகளிடையே சமனாக இல்லை. முக்கியக் கைத்தொழில் நாடுகளில்தான் வளர்ச்சி அதிகம். ஆகவே இரு பிரச்சினைகள்—நீர்மைக் கணியம், நீர்மை வியாபகம் பற்றி—தோன்றுகின்றன. அமெரிக்காவின் பற்றுக்குறை வாணிபம் (deficit in trade) உலக நீர்மையை அதிகரித்து வந்துள்ளது; இது நிரந்தரமாக இருக்க முடியாது.

ஆனால், ஒரு சிக்கலான பிரச்சினை: 'போதுமான' நீர்மை யாது? இந்த வினாவுக்கு இங்கு விடை காண முயல மாட்டோம். நீர்மைப் பிரச்சினைக்கு வழங்கப்பட்ட பல யோசனைகளை இங்குச் சுருக்கமாகக் குறிப்பிடுவது மட்டுமே சாத்தியம்.

### (அ) நெகிழ்ச்சியான மாற்று வீதங்கள்

பல பொருளாதார நிபுணர்கள் (J. E. Meade முதலியோர்) மாறு வீதமுறையினால் சதா அயல்நாட்டுச் செலுத்துப் பிரச்சினை இருந்துகொண்டே இருக்கும் என்றும், இதனால் வாணிபத்துக்குத் தடைகள் தூண்டப்பட்டுக்கொண்டே இருக்கும் என்றும், தடையின்றி மாறக்கூடிய வீதமுறை சிறந்தது என்றும் கூறுகின்றனர். மாறும் வீதம் செலுத்துப் பிரச்சினையைத் தீர்க்கும் என்பதும், பன்னாட்டு நீர்மை வசதிப் பற்றாக்குறைப் பிரச்சினை எழாது, பன்னாட்டு செலுத்து முறை தானே இயங்கி சரி செய்து கொள்ளும் வகையானதாக இருக்கும் என்பதும், உண்மை. ஆனால் அநேக இடர்ப்பாடான விளைவுகள் ஏற்படும். உதாரணமாக, சமநிலைக் கேடுண்டாக்கும் நாணய யூக வாணிபம், பணவீக்கத்தின் விளைவு. பரவலாக இந்த மாதிரி மாறும் வீத முறை உலகில் ஆளப்படும் என்று தோன்றவில்லை. எதிரிகள் பலர்.

### (ஆ) பொன் விலையை உயர்த்தல்

ஒருசாரார் பொன்விலையை உயர்த்தினால், நீர்மைப் பிரச்சினை இராது என்பர். இதனால் உள்ள பொன் இருப்பின் மதிப்பு உயர்ந்து, நீர்மை அதிகரிக்கும். அமெரிக்காவும் EEC நாடுகளும், உலக நாணயப் பொன் ரிசர்வில் 75-80% உடையன. இதனால் இவையே நலம் பெறும். சிலர் இவ் விலை ஏற்றம் பொன் உற்பத்தியை உயர்த்தும் என்பர்; சிலர் இதை மறுக்கின்றனர். விலை ஏறினால் முடக்கிலிருக்கும் பொன் வெளிவரும் என்பர் சிலர். ஆனால், இவ்வித விலை ஏற்றம் ஒரே ஒரு தடவையுடன் நிறுத்த முடியுமா? மீண்டும் மாற்றப்படும் என்ற எதிர்பார்ப்பை உண்டாக்கினால் முடக்கிய பொன் வெளிவருமா? பொன் விலை ஏற்றம் பணவீக்கத்தை அதிகப்படுத்தலாம். பொன் வியாபகம் நாடுகளிடையே சமமாயில்லை. சில நாடுகளே நலம் பெறும்; சிலநாடுகள் உலக நன்மையை எண்ணி, பொன்னைக் குவிக்காமல் அயல் செலாவணிகளை மட்டும் வைத்திருந்தன; இவை இப்போது நலம் பெறமாட்டா; நேர்மைக்கு நீதியில்லை என்பதாகிவிடும். விலை ஏற்றத்தால் பொன் உற்பத்தி செய்யும் நாடுகள்—ஆப்பிரிக்கா, சோவியத் யூனியன் ஆகியவற்றின்—உற்பத்தி உயர்ந்து அவையே நலம் பெறும்; இதற்குத் தடை அரசியல். சிலர் இதைப்பற்றிக் கவலையில்லை; உலகப் பொன் ரிசர்வு மதிப்புயர்ந்தால் போதும், நாளடைவில் பொன் குறைவான நாடுகளும் பொன்னைப் பெற்றுப் பலனடையலாம் என்பர்.

ஒரு சிலர் பொன் மதிப்பை உயர்த்துவதுடன் பழைய தூய பொன் திட்டத்துக்குத் திரும்ப வேண்டும் என்பர். (உதாரணமாக பிரான்சுநாட்டு, Jacques Raeuff; சுவிஸ் நாட்டு M.Heilperin.) பொன் மட்டும் ரிசர்வாக இருக்கும்; ரிசர்வு நாணயங்கள் என்றிருக்காது. இவ்வித நடவடிக்கை உலகில் நாளடைவில் பணவடிப்பு (deflation) நிலையை உண்டாக்கும். நாடுகள் தயாரா? பொன்னைப் பன்னாட்டு ரிசர்வாக ஆள்வது மனிதனின் வியர்த்திமான வேலை: பொன்னை வெட்டி எடுத்துப் பூட்டி வைப்பது அறிவா? ஆகவே மேற்கூறிய இரண்டு முறைகளும் சாத்தியமில்லை.

## (இ) ஓர் உலக மைய பாங்கு (A World Central Bank)

இது பண இயலுலகின் ஒரு பழங்கனவு. ஒரு நாட்டில் மைய பாங்கு பாங்குகளின் நீர்மையை உண்டாக்குவது, கட்டுப்படுத்துவதுபோலவே எல்லா நடுகளுக்கும் ஒரு மைய பாங்கு செய்யலாம் என்பது யோசனை. ஓர் உலக மைய பாங்கும், ஒரே ஓர் உலகச் செலாவணியும் இருந்தால் நீர்மைப் பிரச்சினை தீர்ந்துவிடும். ஆனல், அநேகப் பிரச்சினைகள் தோன்றுகின்றன. (1) நாடுகள் தம் பணத்துறை சுயேச்சையை விட்டுக் கொடுக்குமா? பணத்துறை, மையபாங்கு, நிதி, மற்றும் பிற பொருளாதார விவகாரங்களிலும் மையப்பாடு அவசியமாகிவிடும். நாடுகள் ஒப்புமா? (2) பாங்கின் நடைமுறைக் கைகோளை எவ்வாறு நிர்ணயிப்பது? எவ்வளவு நீர்மையைச் சிருஷ்டிப்பது? உலகில் பணவீக்கச் சூழ்நிலை இருந்தாலும், நாடுகளுக்கு மைய பாங்கு நீர்மைக்கு உதவ வேண்டுமா? அல்லது வடிப்பைத் தூண்ட வேண்டுமா? சுழலைச் சமாளிக்க நடவடிக்கை எடுத்தபடி இருக்க வேண்டுமா?

இப்போதைய உலக நிலையில் இந்த யோசனை ஏட்டுச் சுரைக்காய்.

## (ஈ) கீன்சுத் திட்டம் (Keynes' Plan)

இது தற்போதைய பணத் திட்டத்தைத் திருத்தும் நோக்கமுடையது. கீன்சு 1943-லேயே ஒரு பன்னாட்டுத் தீர்வுசெய் மைய ரிசர்வு பாங்கை (International Central Reserve Bank) நிறுவ வேண்டுமென்று யோசனை கூறினார். ஆனல், அவர் கொடுத்த பெயர் தீர்வு யூனியன் (Clearing Union). பாங்கோர் (Bancor) என்ற ஒரு சர்வதேச செலாவணியைப் பொன் அடிப்படையில் மாரு மதிப்புடன் சிருஷ்டிக்க வேண்டும் என்ருர். அவரது திட்டத்தில் பொன்னும் இந்தப் பாங்கோர்களும்தான் பன்னாட்டுச் செலுத்தில் ஆளப்படும்.

ஒரு நாடு இரு வழிகளில் பாங்கோரைப் பெறலாம்; பொன் கொடுத்து அல்லது யூனியனிலிருந்து மிகைக் கடன் (overdraft) வாங்கி. ஆனால் பொன்னைக்கொண்டு பாங்கோர் வாங்கலாமே ஒழிய, பாங்கோரைக் கொண்டு பொன் வாங்க முடியாது.

இந்தத் தீர்வு யூனியன் யோசனையின் அடிப்படைத் தத்துவம், செலுத்து நிலையில் பற்றுக்குறை உபரி ஆகியவை சுழல் முறையில் தோன்றுவன என்பதாகும். பற்றுக்குறை நாடு நீர்மை வேண்டின் யூனியனிலிருந்து கடன் பெறலாம். ஒவ்வோர் அங்கநாட்டுக்கும் ஒரு கோட்டா உண்டு. இது அதன் ஏற்றுமதி, இறக்குமதிகளின் கூட்டுத் தொகையைப் பொறுத்திருக்கும். ஒரு நாடு கோட்டாவில் ¼க்கு மேல் ½க்குக் கீழ் ஆளுமானால், தான் வாங்கும் கடன் மீது 1% வட்டியை செலுத்த வேண்டும். ½க்கு மேலாயின், 2%.

உபரி நாடுகளும்கூட, அமித நீர்மைக்குத் தண்டனையாக ஒரு கட்டணம் கொடுக்க வேண்டும். இந்தத் திட்டத்தின் உட்கிடை, செலுத்துச் சமநிலை சுழல் காரணமாகத் தற்காலிகமானது என்பது. இதனுடன் இணைந்த ஒரு நம்பிக்கை, குறுங்காலத்திலேயே நாளாவட்டத்தில் இயற்கையான திருத்தங்கள் தாமே நிகழ்ந்து செலுத்துப் பிரச்சினை ஒரு நாட்டுக்கு தீர்ந்துவிடும் என்பதும், இதற்கேற்ற நடவடிக்கைகள் எடுக்கப்படும் என்பதும். யூனியன் கட்டணமின்றி நீர்மை பெறவேண்டுமாயின், பற்று நாடு உபரி நாட்டிலிருந்து கடன் பெறவேண்டும். ஆகவே இத் திட்டத்தில் முதல் பெயர்ச்சி விரும்பத்தக்க ஓர் அம்சமாகும்.

கீன்சுடைய திட்டம் பலச் சிறப்புகளை உடையது. உலக பாங்குக் கோரிக்கையைப்போல நடக்காத நினைவன்று; எளியது. ஆனால் பற்றுக்குறை, உபரி தோன்றும் காரணம் சம்பந்தமாகப் பிரச்சினையைச் சுருக்கமாக்கிக் கொண்டுள்ளது; நாடுகள் எடுக்கும் பரிகார நடவடிக்கையிலும் அதிகம் நம்பிக்கை வைக்கிறது. இப்படி நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு, அவை பயனளித்தால் நீர்மைப் பிரச்சினை ஏது?

**(உ) பெர்ன்ஸ்டீன் திட்டம் (Bernstein Plan)**

இது தற்போதைய பன்னாட்டுப் பண நிதியைத் திருத்தும் நோக்கமுடையது. பின்னர்ப் பார்க்கப்போகும் டிரிஃபின் திட்டமும் இவ்வகையதே.

தற்போது நிதிக் கோட்டா ஆட்சிக் கட்டுப்பாடு உடையது. இவை முதல் நிலை ரிசர்வுகள் (first line reserves) அல்ல. கோட்

டாவில் முதல் 25% (பொன் பகுதி) வரைக்கும் உதவி நாட்டின் இச்சைப்படி ஆளக்கூடியது. மேலும் 25% கூட ஏறக்குறைய இச்சைப்படி ஆளக்கூடியதே மேற்பட்டால் நிபந்தனைகள் கடுமையானவை.

பெர்ன்ஸ்டீன் முதல் யோசனை ஒவ்வொரு நாட்டின் கோட்டா அதன் நடைமுறை இருப்புகளுடன் (Working Balances) இணைக்கப்பட வேண்டும் என்பது. இதனால் பன்னாட்டு நீர்மைக் கணியம் அதிகப்படும்.

இரண்டாம் யோசனை, ஒரு ரிசர்வு அலகு (reserve unit) சிருஷ்டிப்பது. அங்கத்தினருக்குக் குறிப்பிட்ட தொகைகள் இந்த அலகுகள் ஒதுக்கப்படும். ஈடாக ஒவ்வொரு நாடும் சம அளவுக்குத் தன் செலாவணியை நிதிக்கு அளிக்கும். ரிசர்வு யூனிட்டுகள் செலுத்துக் கணக்குத் தீர்வில் ஆளப்படும், பற்றுக்குறை நாடுகள் ரிசர்வு அலகு கணக்கிலிருந்து ரிசர்வு அலகுகளைக் கடன் வாங்கி, பற்றுக்குறையைத் தீர்க்கும். பற்றுக்குறை நாடுகள் உபரி நாட்டு மைய பாங்குகளிடம் நேரடி பேரம் பேச வேண்டிய அவசியமிருக்காது.

பன்னாட்டு ரிசர்வு (நீர்மை)த் தொகையைப் பெருக்குவது பற்றி பெர்ன்ஸ்டீனுடைய துவக்கத் திட்டம் பேசவில்லை யாயினும், ரிசர்வு அலகுகளைப் பெருக்குவது மூலம் நீர்மையை அதிகரிக்கக்கூடும்; ஆண்டுதோறும் சிறிது சிருஷ்டிக்கலாம். எவ்வளவு என்பதை ஐந்தாண்டுக்கொருமுறை கூடிப்பேசி முடிவு செய்யலாம்.

திட்டத்தில் பல கவர்ச்சியான அம்சங்கள் உள. உள்ள நிறுவனத்தை ஆண்டு அதைச் சிறப்பிக்கிறது. செயல் சாத்தியமானது. இதிலும் கீன்சு திட்டத்தைப்போல முதல் பெயர்ச்சி ஒழுங்குமுறை அவசியம் தெளிவாகிறது. முக்கியக் குறைபாடு ரிசர்வு அலகு விஷயத்தில் மக்களது நம்பிக்கை எவ்வாறிருக்கும் என்ற ஐயப்பாடு. பொன் ஆளப்படலாம்; அலகுகளின் மதிப்புப் பொன்னில் கூறப்படலாம். இதற்கு உத்தரவாத மளிக்கலாம். ஆனால் அலகுகள் தடையின்றிப் பொன்னுக்கு மாற்ற முடியுமா, முடியாதா? மாற்ற முடியுமாயின், தற்போதைப்போல், அலகைக் கைவிட்டுப் பொன்னை நாடும் பீதி உண்டாகலாம், மாற்ற முடியாதாயின், உபரி நாடுகள் அலகுகளை ஏற்க மறுக்கலாம். திட்டம் முறியும்.

தவிர, நாளடைவில் அலகுகளின் பின்னணிச் சொத்து முழுதும் மலிவுச் (soft) செலாவணிகளாக ஆகிவிடலாம். மதிப்பிறக்கங்களை (devaluations) உண்டாக்கும் மதிப்பிறங்கிய செலாவணிகளை வைத்திருக்கும் நாடுகளின் நஷ்டத்தை யார் ஏற்பது?

நீர்மையைச் சிருஷ்டிப்பதற்கு எந்த அளவுகோலை ஆள்வது என்பதற்கும் விடையில்லை.

**ட்ரிஃபின் திட்டம் (Triffin Plan)**

மேற்கண்டதைவிடப் புரட்சியானது. இவர் தற்போதைய பொன் அடிப்படைத் திட்டத்தைக் கண்டிக்கிறார். எப்படியும் காகித ரிசர்வு செலாவணிக் காலம் வந்தே தீரும் என்கிறார். எல்லா ரிசர்வுகளும் மையப்படுத்தப்பட வேண்டும். நிதி மையப் பாங்காக வேலை செய்யும் நாடுகள் இதனிடம் வைப்புகள் துவங்கும். தற்போதைய நாட்டு மைய பாங்குகளின் ரிசர்வுகளே வைப்புகளாகச் செல்லும். ஒவ்வொரு நாடும் இவ் வைப்பளவுக்குக் கடன் தந்ததாகும். வைப்புக் கணக்குக்குப் பொன் உத்தரவாதம் தரப்படும். தம் ரிசர்வில் குறைந்தபட்சம் 20%ஐ ஆவது நாட்டு மைய பாங்குகள் டிபாசிட் செய்யவேண்டும்.

பின், படிப்படியாக நிதி தன் செயல்களை விஸ்தரித்து, அயல் செலாவணி உருவில் தன் ரிசர்வை அதிகரிக்கும். ஆனால், போகப் போக இச் செலாவணிகள் கழிக்கப்பெற்று, வைப்புகளும் பொன்னும்தான் ரிசர்வில் இருக்கும்.

அவசியமானால் நிதி வெளி அங்காடி நடவடிக்கைமூலம் பன்னாட்டு நீர்மையைக் கட்டுப்படுத்தும். தனியாரிடம் செக்யூரிடிகள் வாங்குவதுமூலம் நீர்மையை அதிகப்படுத்தப்படும். நிதி தரும் செக்கு அந்நாட்டு மைய பாங்கு மூலம் நிதி வைப்புக்குச் செல்லும். பன்னாட்டு நீர்மையை நெடுங்காலத்தில் அதிகரிக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தி டிரிஃபின் இந்தத் திட்டத்தை வகுத்தார். இது தொடர்ந்த ரிசர்வு சிருஷ்டிப்பினால் உலகில் பண வீக்கத்தை உண்டாக்கக்கூடும் என்று சிலர் முறையிட்டதனால், சிலர் ஆண்டுக்கு 3 / 4 / 5% வீதம் அதிகரிக்கலாம் என்றனர். இதற்கு எந்த உறுதியான வீதமும் வரையறுக்க முடியாது.

குறைபாடு யாது? நீர்மையில் பொன் அங்கம் பெறுகிறது. பொன்னுக்கும் வைப்புக்கும் மாற்று வசதி உண்டு. விரும்பினால் ஒரு மைய பாங்கு தன்னிடமுள்ள நிதி சர்டிபிகேட்டுகளைப்

பொன்னுக்கலாம். நம்பிக்கை இதனால் காக்கப்படுகிறது. ஆனால் நம்பிக்கை இழந்தால்? நிதி தாங்காது. ஆகவே இத் திட்டம் பழைய பாணியிலேயே செல்கிறது எனலாம்.

மைய அங்காடி நடவடிக்கை ஒரு புதுமையான யோசனை. உலக மைய பாங்கு பாணியில் இது நிதியை மாற்றுகிறது. ஆகவே முன்னர்க் கூறிய குறைகள் பொருந்தும். நாடுகள் சம்மதிக்கமாட்டா.

**விசேஷப் பற்றுரிமை (Special Drawing Rights)**

மேற்கண்ட திட்டங்கள் ஒவ்வொன்றிலும் குறைகள் கண்டோம். பொதுவாக அவை தற்போது சாத்தியமாகாத அளவு புரட்சிகரமா யுள்ளன. தற்போதுள்ள பன்னாட்டுத் திட்டத்தையே சிறிது சீர் செய்தால் போதாதா? யுத்தத்துக்குப் பின் உலக வாணிபம், இந்தத் திட்டத்தின் கீழேயே, 7% ஆண்டு தோறும் வளர்ந்திருப்பதே அதன் தகுதிக்குச் சான்றல்லவா? ஆனால், இவ் வளர்ச்சி எளிதில் ஏற்படவில்லை; கொடுத்த விலை ஏராளம். தவிர்க்க முடியாதா? பல நாடுகள் உபரியாயின் பண மதிப்பை ஏற்றவும், பற்றுக்குறையாயின் இறக்கவும் செய்ய வேண்டும். நிதியின் தலைமையில் இதை முறையுடன் செய்ய வேண்டும். ஆகவே மாற்று நெகிழ்ச்சி சிறிது தேவைப்படுகிறது. மூதல் பெயர்ச்சி விஷயத்தில் மைய பாங்குகள் தமக்குள் ஒத்துழைக்க வேண்டும்.

சமீபத்தில் (1967) விசேஷ பற்றுரிமைகள் தோன்றின. இப் பற்றுரிமைகள் சிருஷ்டிக்கப்பட்டபோது இவைகளைக் காகிதப் பொன் (paper gold) என்றனர். இவை புது ரிசர்வு சொத்துகள். முதலில் மூன்று ஆண்டுகளுக்கு ஆண்டுதோறும் 3½ பிலியன் டாலர் அளவுக்குச் சிருஷ்டிக்கத் தீர்மானிக்கப்பட்டுப் பின் டிசம்பர் 1972 முடிய 9½ பிலியன் தோன்றின. ஒவ்வொரு நாட்டுக்கும் தற்போதைய நிதிக் கோட்டா வீதத்தில் இந்த ரிசர்வு பங்கிடப்பட்டது. இந்தியாவின் பங்கு 3½%. இவை நாடுகளிடையே பைசல் செய்ய ஆளப்படலாம். இவ்வுரிமைச் சீட்டுகளைக்கொண்டு பிற செலாவணிகளைப் பெறலாம். ஒரு முக்கிய அம்சம்; ஆட்சிக்கு நிபந்தனைகள் இல்லை; இவைகளுக்குப் பின்னணி சொத்து ஒன்றும் இல்லை. நாடுகள் ஏற்கும் என்ற பரஸ்பர நம்பிக்கையின்மேல் இவை ஆளப்படுகின்றன.

இத் திட்டம் போதுமான நீர்மையைத் தந்துள்ளதா என்பதைப் போகப் போகப் பார்க்கவேண்டும்.

**இந்தியாவும் நிதியும்**

துவக்கத்தில் ரூபாயின் சமப்பாடு மதிப்பு $1 = ரூ. 3·339
1949இல்
(30·5% மதிப்பிறக்கம்) = ரூ. 4·76 —(Re. 1=0·186621 gram)
ஜனவரி 1966இல்
(36·5% மதிப்பிறக்கம்) = ரூ. 7·50 — (0·118516 gram)
இப்போது = ரூ. 7·70

இந்தியா பல தடவைகளில் முன்னேற்பாட்டுக் கடன் (Stand-by Agreements) மூலம் உதவி பெற்றிருக்கிறது. இந்தியாவுக்கு 170 கோடி மதிப்புள்ள SDR அளிக்கப்பட்டுள்ளது.

**நிதி சாதித்ததென்ன ?**

சில நோக்கங்கள் ஓரளவு நிறைவேறியுள்ளன. நாடுகளுக்கிடையே பன்னாட்டுப் பணத்துறைப் பிரச்சினை பற்றிக் கலந்து ஆலோசிக்கவும் ஒத்துழைப்பாக நடக்கவும் வசதியேற்பட்டுள்ளது. விறைப்பில்லாத மாற்று வீதங்கள் இருந்துவருகின்றன. போட்டியிட்டு வீதங்களை மாற்றுவது காணப்படவில்லை. ஒழுங்கினமற்ற மாற்றுவீதத் தொடர்புகள் காணப்படவில்லை.

# 44. நாடுகளுக்குள் முதலீடும் பன்னாட்டுப் பாங்கும்

## பன்னாட்டு முதலீடு

பின் தங்கிய நாடுகளின் முன்னேற்றப் பொறுப்பு அவைகளுடையதேயாயினும் வெளியிலிருந்து உதவி இல்லாமல் முன்னேறுவது மிகவும் கடினமான காரியம். பிற நாடுகள் பின் தங்கிய நாடுகளுக்குச் செய்ய வேண்டிய நேரடியான உதவி அந்நாடுகளுக்கு முதலீட்டுக்கு உதவி செய்வதும் தொழில் நுட்ப அறிவைத் தருவதுமாகும். பின் தங்கிய நாடுகளின் வாழ்க்கைத் தரம் உயர்வதற்குப் பெருந் தடையாக இருப்பது அந்நாடுகளின் சேமிப்புக் குறைவே. ஆகவே துவக்கத்திலாவது ஓரளவுக்கு வெளிநாட்டிலிருந்து முதல் வருவது முன்னேற்றத்திற்கு வழியாகும். முதல் ஒரு நாட்டுக்கு வரும்போது அது பொருள் உருவில் வரும். முதலைப் பெறும்போது நாட்டின் ஏற்றுமதியை விட இறக்குமதி அதிகமாக இருக்கும். இறக்குமதியானது, ஏற்கனவே வறிய நிலையிலுள்ள உள்நாட்டு நுகர்ச்சியைக் குறைக்காமல் முதலீடு செய்ய வசதி செய்யும். ஆனால் இறக்குமதிப் பொருள்கள் உற்பத்திக் காரணிகளாக, முதல் பொருளாக, இருக்க வேண்டிய அவசியம் இல்லை. நுகர்ச்சிப் பொருளாக இருந்தாலும் அது நுகர்ச்சிக்குப் பயன்பட்டு, உள்ள நாட்டுச் சாதனங்களை முதல் பொருள் ஆக்குவதில் ஈடுபடுத்த வழி செய்கிறது. முதலைப்போல அயல்நாட்டிலிருந்து தொழில் நுட்ப அறிவும் வந்து, நாட்டின் உற்பத்திச் சக்தியை அதிகப் படுத்துகிறது.

முதல் உலகப் போருக்கு முந்திய காலத்தில் உலகத்தில் பொருளாதார நிலையும் அரசியல் நிலையும் நாடுகளுக்குள் பேரளவில் முதல் (capital) பெயர்வதற்கு ஏற்றவையாயிருந்தன. அயல்நாட்டு முதல் பெயர்ச்சி நாடுகளின் முன்னேற்றத்திற்கு,

வாழ்க்கைத்தரம் உயர்வதற்கு முக்கியக் காரணமாக இருந்தன என்பதை மறுக்க முடியாது. முதல் உலகப் போருக்குப் பிறகு அயல்நாட்டு முதல் பெயர்ச்சி அளவிலோ பயன் படுவதிலோ முன்னிருந்தது போல முக்கியமாக இல்லை. 1905—1913 ஆண்டுகளுக்கிடையில் இங்கிலாந்து மட்டும் ஆண்டுதோறும் சராசரி 143 மில்லியன் பவுண்டுக்கு முதல் ஏற்றுமதி செய்தது. 2ஆம் பத்தில் பின் தங்கிய நாடுகளுக்கு ஆண்டுதோறும் முதல் பெயர்ச்சி 500 மில்லியன் டாலருக்கு மேல் இருக்கவில்லை. மந்தக் காலத்தில் அயல்நாட்டு முதலீடு இல்லை என்றே சொல்லும்படி முதல் பெயர்ச்சி சுருங்கி விட்டது. 1946லிருந்து 1951 வரை ஆண்டுக்குச் சராசரி நெடுங்கால முதல் வெளியேற்றம் அமெரிக்காவிலிருந்து 2700 மில்லியன் டாலர். இது தவிர இனும்கள் வேறு. ஆனால் இந்தத் தொகையில் 900 மில்லியன் டாலர் தான் தனியார் முதலீடாகும். மீதி அரசாங்கங்களுக்குள் முதலீடு. தவிர இந்த முதலீடும் முழுதும் பின் தங்கிய நாடுகளுக்குச் சென்றன என்று சொல்வதற்கில்லை. தனியார் முதலீடு மிகவும் அற்பமாக இருந்ததற்குக் காரணம் அவர்கள் நாடுகளில் முதல் இல்லாமை யன்று. முதல் பெயர்ச்சிக்குச் சாதகமான தூண்டு கோல்கள் இல்லாமையே ஆகும். ஒன்று, பின் தங்கிய நாடுகளே கூட அயல்நாட்டு முதலைப் பெறத் தயங்கின. முற்காலத்தில் இருந்த வல்லரசுகள் முதலைக் கொண்டு வெளி நாட்டில் ஆதிக்கம் பெற்றது இவைகளுக்குப் பயத்தை உண்டாக்கி விட்டது. பெருங் கடன் பட்டால் அது பொருளாதார அடிமைக்கும், உள்நாட்டு விவகாரத்தில் அன்னியர் தலை யீட்டுக்கும், முடிவில் சுயேச்சை இழப்புக்கும் காரணமாகும் என்ற பயம் தோன்றியது. இதனால் சிலபோது முதல் பெயர்ச்சிக்குத் தடை இடுவது காணப்பட்டது. இரண்டாவது, வெளிநாட்டிலிருந்து பெற்ற முதலை, உள்நாட்டின் முன்னேற்றத் திற்கு வேண்டிய உற்பத்தித் துறைகளில் ஆண்டு பொரு ளாதாரத்தை ஊக்கும் சூழ்நிலை இல்லை. தனியார் முதல் பெரும்பாலும் தாதுப் பொருள்களை அல்லது கச்சாப் பொருள் களைச் சேகரித்து வெளியே ஏற்றுமதி செய்வதற்கு ஆளப் பட்டது. இப்படி ஏற்றுமதிக்கு மட்டும் முதலீடு ஆளப் பட்டதால் நாடுகளின் பொருளாதாரம் அடிப்படையில் அதிகமாக மாறவில்லை. இதனால்தான் நாட்டின் கைத்தொழில், பயிர்த் தொழில் முன்னேற்றத்துக்கு வேண்டிய முதலைப் பெரும்பாலும் அரசாங்கமே தேட வேண்டுமென்று கூறப்படலாயிற்று. அரசாங்க முதலைக் கொண்டு அடிப்படை நிறுவப்பட்டபின் தனியார் முதல் வரலாம். ஆகவே இதுவரையில், பின் தங்கிய

நாடுகளின் நெடுங்காலத் தேவையான அளவுக்கு, முதலீட்டுத் தொகை இல்லை; அதாவது உள்நாட்டு வேலை வாய்ப்பு நிலையைப் பெரிதும் மாற்றக்கூடிய அளவில் இல்லை. இந்த நிலையைச் சீர்திருத்த நாடுகளின் ஒத்துழைப்பு அவசியம். பின் தங்கிய நாடுகளின் பொருளாதார வளர்ச்சியில் மற்ற நாடுகளுக்கும் பொறுப்பு உண்டு. உலகம் பகுக்க முடியாத ஒரு இணைந்த இடமாக ஆகி விட்டபடியால் உலகப் பொருளாதார நலத்தையும் தனிப்பட்ட நாடுகள் கவனிக்க வேண்டியிருக்கிறது. அரசாங்க நிலையில் ஒத்துழைப்பது தனியார் முதலீடுகளுக்குப் பதிலாக வன்று. தனியார் முதலீட்டுக்கு வேண்டிய வாய்ப்பை உண்டாக்கு வதற்காகவே அரசாங்கத்தின் முதலீடு முதலில் தேவைப் படுகிறது. சமீபக் காலத்தில் இந்தத் திசையில் முக்கியமான இரண்டு முயற்சிகள் தோன்றின: (1) சீரமைப்புக்கும் வளர்ச்சிக்கும் உதவும் பன்னாட்டுப் பாங்கு. (2) அமெரிக்க நாடு தந்த தொழில் நுட்ப உதவி. இந்த இரண்டும் பன்னாட்டு ஒத்துழைப்பின் மூலம் பின்தங்கிய நாடுகளை ஊக்குவதற்கு ஏற்பட்டன.

பன்னாட்டுப் பாங்கு பிரிட்டன்வுட்ஸ் கூட்டத்தில் தோன்றியது. பன்னாட்டு நிதி ஏற்படுத்தியபோதே இதுவும் தோன்றியது. இரண்டு அமைப்புகளும் உடன் பிறந்தவை. ஒன்றுக்கொன்று நிரப்பும் பணிகளை உடையன. பன்னாட்டுப் பணத்துறைத் தொடர்புகளில் ஒத்துழைப்பை உண்டாக்குவதற்கு இரண்டும் தோன்றின.

**பன்னாட்டுச் சீரமைப்பு–முன்னேற்றப் பாங்கு வகையரு**
**(International Bank for Reconstruction and Development etc.)**

'உலக பாங்கு வகையரு' என்பதில் உலக பாங்கும், பன்னாட்டு நிதிக் கார்ப்பரேஷனும் (I.F.C.), பன்னாட்டு வளர்ச்சிச் சங்கமும் (I.D.A.) அடங்கும். மூன்றையும் ஒரு சேரப் பார்ப்பது பயனுடையது. உலக பாங்கின் பணியில் விடுபட்டிருந்த பகுதிகளை நிரப்புவதற்காக மற்ற இரண்டும் தோன்றின. 1960–ல் எளிய (soft) கடன் தருவதற்காக International Development Association நிறுவப்பட்டது. இது 50 ஆண்டு காலக் கடன் தரும். பணிக்கட்டணம் தவிர, வட்டி கிடையாது. நிருவாகம் பாங்குக்கும் இதற்கும் பொது. International Finance Corporation தனியார்தொழில் முயல்வை ஊக்குவதற்கு அரசாங்கங்களின் நிதியை கொண்டு நிறுவப்பட்டது (1956). நிருவாகம் தனி.

நிதியைப் போலவே பாங்கும், முன்னாளைய மோசமான அனுபவங்களின் விளைவாகவும், போர் முடிந்தபின் ஏற்படக்கூடிய தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவும், தோன்றியது. முதல் உலகப் போர் வரையிலும் இருந்து வந்த முதல் பெயர்ச்சி நின்று விட்டதும், இரண்டாவது உலகப்போருக்குப் பின் பேரளவில் நாடுகளின் சீரமைப்புக்காகவும் முன்னேற்றத்திற்காகவும் முதல் தேவைப்பட்டதும் எல்லோருக்கும் தெளிவாகி இருந்தது. பாங்கினுடைய முக்கிய நோக்கங்கள் அதனுடைய அமைப்பு விதிகளில் காணப்படுகின்றன. அவை (1) அநேக நாடுகளின் புனர் நிர்மாணத்துக்கும் முன்னேற்றத்திற்கும் உதவுவது, (2) தனியார் முதலீடு செய்வதற்கு வேண்டிய ஊக்கத்தைத் தருவது, (3) தனியார் முதலீடு எளிதாகக் கிடைக்காதபோது தகுந்த நிபந்தனையுடன் உற்பத்திக் காரியங்களுக்குப் பாங்கு உதவி செய்வது, என்பன.

ஏன் சர்வதேசப் பாங்கு அமைக்கப்பட வேண்டும்? நெடுங் காலமாகத் தனியார் மூலமாகவே கடன் தருவது வழக்கமாக இருந்து வந்துள்ளதே, இப்போது ஒரு புது நிறுவனம் தோன்றுவதற்குக் காரணம் என்ன? நாடுகள் ஒரு நிறுவனத்தின் மூலமாகக் கடன் கொடுப்பதும் வாங்குவதும் சரியானதென்று நினைத்ததேயாகும். கடன் வாங்க வேண்டிய நிலையில் இருந்த நாடுகள் கடன் பெரும்பாலும் அமெரிக்க ஐக்கிய நாட்டிலிருந்து தான் வர வேண்டியிருக்கும் என்று உணர்ந்திருந்தன. அமெரிக்க நாடு மட்டுமே பேரளவில் கடன் கொடுக்கும் சக்தியை உடையது. ஆனால் அமெரிக்கக் கடன் எப்போதும் கிடைக்கும் என்ற நம்பிக்கை நாடுகளுக்கு இல்லை. அமெரிக்காவின் உள்நாட்டுப் பொருளாதார நிலைக்கேற்ப அதன் கடனளிப்பு மாறும் என்ற பயம் ஏற்கெனவே அனுபவத்திலிருந்து தோன்றியது. ஆகவே கடன் வாங்க வேண்டிய நிலையிலிருந்த நாடுகள் தங்களுக்கு வேண்டிய குறைந்தபட்ச முதல், அமெரிக்காவின் கொள்கைகளைப் பொறுத்தில்லாமல் கிடைக்கவேண்டுமென்று கருதின. பன்னாட்டுப் பாங்காயின் எந்த ஒரு தனி நாட்டின் அதிகாரத்துக்கும் உட்பட்டு இராது. இதனால் எதிர்காலச் சாம்ராச்சிய பயமும் நாடுகளுக்கு இராது. பாங்கின் கடன் இரண்டொரு நாடுகளுக்கே சென்றாலும் அந்தக் கடன் சம்மந்தமான உரிமை எல்லா நாடுகளுக்கும் பொதுவாகப் பாங்கினிடம் இருக்கும், இப்படியே அமெரிக்காவும் தான் பெரும்பாலும் கடன் தொகையைக் கொடுக்க வேண்டுமென்று அறிந்திருந்த போதிலுக் பாங்கு மூலம் கொடுப்பது தனக்கு இரு வகையில் நல்லது என்று கருதியது. பாங்கு மூலமாகக் கொடுக்கும்

கடன் ஏற்கெனவே கொடுத்து வந்த வழக்கத்தைப் பின்பற்று வதாக இருக்குமே யொழியப் புதிதன்று. இரண்டாவது, கடன் கொடுப்பதிலுள்ள ஆபத்து அமெரிக்காவை மட்டும் தாக்காது; எல்லா நாடுகளுக்கும் பொதுவாக இருக்கும்.

### அமைப்பு

பாங்கினுடைய அமைப்பைப் பார்ப்போம். ஒவ்வொரு நாடும் பாங்கில் அங்கம் வகிக்கும் உரிமையுடையது. ஆனல் அது பாங்குச் சாசனத்தில் கையெழுத்திட வேண்டும். இதோடு இணைந்த அமைப்பான பன்னுட்டு நிதியிலும் அங்கம் வகிக்க வேண்டும். துவக்கத்தில் 44 நாடுகள் அங்கம் வகிக்கும் நாடுகளாக இருந்தன. பின்னர் 56 நாடுகள் அங்கம் வகித்தன. முக்கியமான நாடுகள் எல்லாம் இதில் அங்கம் வகித்தன. ஆனல் ரஷ்யா, ஸ்விட்சர்லாந்து, அர்ஜன்டைனு முதலியவை சேரவில்லை. இந்தப் பாங்கின் அதிகாரம் பெற்ற மூலதனம் 10 பில்லியன். இது பின்னர் இரு முறை உயர்ந்தது. ஓரிலட்சம் பங்குகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது. அங்கம் வகிக்கும் ஒவ்வொரு நாட்டுக்கும் ஒரு கோட்டா,அதனுடைய பொருளாதார முக்கியத்துத்துவக்கேற்பப் பகிர்ந்து கொடுக்கப்பட்டது. இந்தக் கோட்டாவுக்கு ஏற்ப நாடு களும் சந்தா செலுத்த வேண்டியிருந்தது. மொத்தச் சந்தா $ 22·4 பிலியன், 2·2 பிலியன் தான் செலுத்தப்பட்டது. 30·6·66இல் பாங்கில் 103, IDAயில் 96, IFCயில் 81 அங்கத்தினர் இருந்தனர்.

பாங்கை நடத்த ஒரு தலைவரும், கவர்னர் சபையும், நிர்வாக சபையும் உண்டு. இவர்கள் ஒருசில நாடுகளிலிருந்து வந்துள்ள னர். காரணம் நியமன ஓட்டு சந்தாத்தொகையைச் பொறுத்திருப் பது. அமெரிக்காவின் ஓட்டுப் பங்கு 25·5%. இங்கிலாந்தின் பங்கு 20·5%. கவர்னர்சபை பொதுப்பட்ட கொள்கை விவகாரங்களைப் பார்த்துக்கொள்கிறது. நிர்வாக போர்டு வாரா வாரம் கூடுகிறது. இதன் அங்கத்தினர் 16 பேரும் ஒரு நாட்டுக்கோ பலவற்றுக்கோ நியமிக்கப்பட்ட பிரதிநிதிகள் ஆவர். ஒவ்வொருவரும் தத்தம் நாட்டின் பங்குக்கு ஏற்ப வாக்கு உரிமையுடையவர். நிருவாக டைரக்டருடைய அதிகாரம் கவர்னர்களால் தரப்படுவ தாகும். முக்கியமான நபர் தலைவர் ஆவார். இவர் நிருவாகத்தைப் பார்ப்பவர். அலுவலர்கள் கடன் சம்பந்தமான எல்லாவிதப் பேரங்களையும் செய்கிருர்கள். மனுக்களை ஆராய்ந்து நிருவாக டைரக்டர்களுக்குச் சிபார்சு செய்கிருர்கள். அலுவலர்கள் பல நாடுகளிலிருந்தும் எடுக்கப்படுகிருர்கள்.

**நடைமுறைக் கைக்கேள்**

பாங்கு ஒரு கடை நிலை உதவி நிறுவனமாகும். கடன் வாங்குபவர்கள் தகுதி உடையவர்களாயினும் வேறிடத்தில் எளிய நிபந்தனையுடன் கடன் பெற முடியாதென்று தெரிந்தால்தான் பாங்கு தலையிடும். அந்நிய சொலாவணியைத் தேவை உள்ள வரை தருகிறது தற்போதுள்ள கடன் வசதிகளுக்குப் பதிலாக உதவுவதற்காகப் பாங்கு ஏற்பட்டதன்று. சந்தாவில் 10 சதவீதமே ரொக்கமாகப் பாங்கில் செலுத்தப்படுவதால் பாங்கினுடைய கடன் அளிப்புச் சக்தி அதிகம் இல்லை. ஆனால் சொந்த முதல் அளவுக்கு மட்டும்தான் நடவடிக்கைகள் இருக்குமென்று கருதவில்லை. பாங்கு தன் பெயரில் பாண்டுகளை வெளியிட்டு முதல் தேடிக் கடன் கொடுக்கலாம். 30-6-66 வரை 5·2 பிலிய டாலர் கடன் வாங்கியுள்ளது, பெரும்பாலும் அமெரிக்காவில். தனியார் கடன் கொடுக்க அது உத்தரவாதம் செய்யலாம். மூன்று வகையாக இந்தப் பாங்கு கடன் கொடுக்கமுடிகிறது. (1)சந்தாப் பணத்தைக் கொண்டு தரும் நேரடியான கடன்:—பாங்கு சந்தாப் பணத்தைக் கடன் கொடுக்கலாம். தன்னிடத்தில் வந்த சந்தாத் தொகையிலிருந்தும், ஒதுக்கத்திலிருந்தும், எச்சத்திலிருந்தும் கொடுக்கலாம். நிதி குறிப்பிடும் பண உருவில் கடன் தரவேண்டும். இதனால் மதிப்பிழந்த பணத்தில் கடன் கொடுப்பது தவிர்க்கப்பட்டது. (2) கடன் வாங்கிய பணத்திலிருந்து கடன் கொடுத்தல்:—பாங்கு பாண்டுகளை விற்றுக் கடன்வாங்க உரிமை பெற்றது. ஆனால் எந்த நாட்டில் பாண்டுகளை விற்கப் பாங்கு நினைக்கிறதோ அந்த நாட்டின் அனுமதி வேண்டும். தவிர பாண்டு விற்கும் நாட்டின் பணம் அல்லாத வேறு பணத்தில் அந்தக் கடன் குறிப்பிடப்படுவதாயின் அந்நாட்டின் அனுமதியும் வேண்டும். ஏனெனில் நாட்டின் அனுமதி இல்லாவிட்டால் அந்தப் பணத்தைப் பயன் படுத்த முடியாது. வேறு நாட்டிலிருந்து கடன் வாங்கிக் கொடுக்கப்பட்ட கடன் தொகையை, அந்த நாட்டிலிருந்து பாங்கு வாங்கிய அளவுக்குமேல் அதே பணத்தில் திருப்பிக் கொடுக்க வேண்டியதில்லை. ஆகவே, பாங்கு 1000 மில்லியன் டாலர் பாண்டுகளை விற்று டாலர் கடன் வாங்கியிருந்தால், தனக்குச் சேர வேண்டிய கடன்களை இந்தத் தொகைக்கு எச்சமாக டாலரில் பாங்கு வசூலிக்க முடியாது. இது பாங்கு டாலரில் கடன் பட்ட அளவுக்குமேல் அதனிடம் கடன் பட்ட நாடுகள் அரிய நாணயத்தில் திருப்பிக் கொடுக்க வேண்டிய அவசியமில்லாமல் செய்கிறது. பெரும்பாலும் இதுவரை இந்தப் பாங்கில் இருந்து அமெரிக்க டாலர்களே தேவைப்பட்டு வந்துள்ளன. இந்தத் தேவையைப் பூர்த்தி செய்வதற்காக அமெரிக்க அங்காடியில்

நிறைய பாண்டுகளை விற்றது. விற்பது கடினமாக இல்லை. (3) பாங்கு தனியார் முதல் அங்காடியில் கடன் பெறும்படி வழிகாட்டி விடலாம். ஆனால் தன்னுடைய உத்தரவாதத்தை முழுத் தொகைக்கோ அல்லது ஒரு பகுதிக்கோ கொடுக்கலாம். எந்த நாட்டிலிருந்து பணம் பெறப்படுகிறதோ அந்த நாட்டின் அனுமதியைப் பெற்றுக்கொண்டுதான் இவ்வித உத்தரவாதத்தைப் பாங்கு தரும். இப்படி அனுமதி கொடுத்த பிறகு அந்த நாடுகள் அந்தப் பணத்தை மாற்றுவதற்குத் தடை செய்ய முடியாது.

IDA அங்காடியில் கடன் வாங்கலாமாயினும், வட்டியில்லாது தான் கடன் தருவதால், அதற்குக் கடன் வாங்கும் சக்தி இல்லை. அதன் நிதி அரசாங்கங்களிடமிருந்தும், உலக பாங்கிடமிருந்தும், வருகின்றன. IFC க்கு நிதி சந்தா, தன்னிடமுள்ள செக்யூரிடிகளை விற்றல், உலக பாங்கிலிருந்து கடன், ஆகியவற்றின் மூலம் வருகிறது.

பாங்கிலிருந்து யார் கடன் வாங்கலாம்? எந்த அங்கத்தினரும் வாங்கலாம். ஒரு நாட்டின் சந்தாவுக்கும் அது கடன் வாங்குவதற்கும் நேரடியான பிணைப்பு ஒன்றுமில்லை. ஆனால் எல்லாக் கடன் தொகைகளும் சேர்ந்து பாங்கின் மொத்தச் சந்தா, எச்சம் அல்லது ரிசர்வுக்கு அதிகமாக இருக்க முடியாது. பாங்கு தனிப்பட்ட நபருக்கோ தொழில்களுக்கோ அங்க நாடுகளுக்கோ கடன் தரலாம். பெரும்பாலும் பாங்கு தனியாருக்குக் கடன் தருவதில்லை. வேண்டுமானால் சம்பந்தப்பட்ட அரசாங்கத்தின் உத்தரவாதம் வேண்டியிருக்கும். அரசாங்கங்கள் இப்படி உத்தரவாதம் தரத் தயங்கும். கடன் வாங்குபவர்களும் அரசாங்கத்தின் தலையீட்டுக்குப் பயந்து இந்தவித உத்தரவாதத்தை நாடமாட்டார்கள்.

அடுத்தபடி கடன் கொடுக்கும் முறையைப் பார்ப்போம். கடன் குறிப்பிட்ட காரியத்துக்கே (project) தரப்படும். இம் முறையின் சிறப்பு: செலவு—நலக் கணக்குப் போட முடிவது, செலவைத் திட்டப்படிக் கட்டுப்படுத்துவது. ஆயினும் இம்முறை குறைபாட்டுக்குள்ளானதாக இருக்கிறது பெரிய நாடுகளுக்கே தான் உதவி கிடைக்கிறதாம். சமீபத்தில் 'programme financing' துவங்கியுள்ளது; தவிரவும் 'maintenance loans' தரப்படுகின்றன. கடன் மனு வந்தவுடன் முதல் படியாகப் பாங்கினுடைய அலுவலர்களால் ஆய்வு ஒன்று நடத்தப்படுகிறது. மனு ஆழ்ந்து சிந்திக்க வேண்டியதாகக் கருதப்

பட்டால் மேற்கொண்டும் ஆராய்ச்சி செய்யப்படும் என்று மனுதாரர்களுக்கு தெரிவிக்கப்படுகிறது. சாதகமான முடிவு செய்யப்பட்டு, அதற்குள் மனுதாரர் வேறு நாடுகளில் வேறு வழியில் நிதி பெற முடியாதிருந்தால், கடன் கொடுக்கலாம் என்று சிபார்சு செய்து நிர்வாக டைரக்டர்களுக்கு அறிவிக்கப்படும். அவர்கள் முடிவு செய்வார்கள். கடன் கொடுத்தபின் பாங்கினுடைய அலுவலர்கள் அவ்வப்போது பணம் சரியான வகையில் குறிப்பிடப்பட்ட வகையில், பயன்படுத்தப் படுகிறதா என்று சோதிப்பார்கள்.

கடன் கொடுக்கும் கொள்கையினுடைய அம்சங்களைப் பார்ப்போம். கடன் கொடுப்பதற்குமுன் பாங்கு முக்கியமாக ஐந்து நிபந்தனைகளை வைத்து முடிவு செய்கிறது. (1) பாங்கினுடைய தலையீடின்றி நியாயமான நிபந்தனைகளுடன் வேறு எங்கும் கடன் வாங்க முடியாதிருக்க வேண்டும். நேராகப் முதலாளிகளுடன் பாங்கு போட்டியிடக்கூடாது என்பது கருத்து. (2) உள் நாட்டிலேயே தகுந்த முயற்சி செய்தும் பணத்தைச் சேகரிக்க முடியவில்லையாக வேண்டும். (3) கடன் கோரும் நாடு நம்பிக்கைக்குரிய நாடாக இருக்க வேண்டும். நாட்டினுடைய சக்தியும், கடனையும் வட்டியையும் திருப்பிக் கொடுக்கக்கூடிய விருப்பமும் முக்கியமானவை. முக்கியமாக இதைத் தீர்மானிக்க, கடனை ஆளும் திட்டம் தானாகவே கடனைத் தீர்க்கும் சக்தி உடையதா என்பதும், திட்டத்திலிருந்து வந்த வருவாயை அயல்நாட்டு நாணயமாக மாற்றும் சக்தி இந்நாட்டுக்கு உண்டா என்பதையும் கவனித்துப்பின் முடிவு செய்ய வேண்டியிருக்கும். நாடு அயல்நாட்டுச் செலாவணிக் கடனைத் திருப்பிக்கொடுக்க வேண்டிய அளவு சம்பாதிக்கக் கூடிய முறைகளைப் பின்பற்றுமா, அதற்குச் சக்தி உண்டா என்பதைப் பற்றி ஆராய வேண்டும். (4) மிகவும் அவசியமான திட்டங்களுக்காகவா பணம் தேவைப் படுகிறது என்று பார்க்கவேண்டும். (5) கடன் வாங்கும் நாடு தொழில் நுட்ப அறிவு நிறைவுற்றும், நிதி வகுத்தும், செயல் முறை வகுத்தும், குறிப்பிட்ட திட்டங்களை நிறைவேற்றச் சக்தி உடையதா என்று தீர்மானிக்க வேண்டும். இவை இருப்பின் ஒவ்வொரு திட்டத்துக்கும் அதனதன் தகுதிக்கு ஏற்ப, பாங்கு கடன் கொடுக்க முடிவு செய்கிறது. திட்டத்தை நிறைவேற்றுவதற்கு எவ்வளவு அயல் நாட்டுச் செலாவணி தேவையோ அவ்வளவே பாங்கு கடன் கொடுக்க முன் வருகிறது. அயல் நாட்டுச் செலாவணி தேவை இல்லாத பகுதிகளுக்கு உள் நாட்டிலேயே நிதியைத் திரட்டிக் கொள்ள வேண்டும்,

பாங்கு கொடுக்கும் கடன்கள் எந்த நாட்டிலாவது செலவிடப்படலாம். இது பன்முக வாணிபத்தை வளர்ப்பது என்ற பாங்கின் கோட்பாட்டுக்கு ஏற்றதாக இருக்கிறது. கடன் கொடுத்த நாட்டில் வாங்குவதற்கே பயன்படுத்தப்பட வேண்டு மென்ற நிபந்தனையுடைய கடனைப் பிணைத்த கடன் (tied loans) என்பார்கள். இவ்விதக் கடன்கள் அரசாங்கங்கள் கடன் கேட்கும்போது தோன்றுவது வழக்கம். அமெரிக்காவின் வெளி நாட்டு வாணிபத்தை வளர்க்க நிறுவப்பட்ட அமெரிக்க ஏற்றுமதி இறக்குமதி பாங்கு பெரும்பாலும் இவ்விதப் பிணைத்தக் கடன் களையே தருகிறது.

30-6-1966 இல் நிலை: இதுவரை பாங்கு 9·6 பிலியன் டாலர் உதவி செய்ய ஏற்றுக்கொண்டிருந்தது. I AD : 1·4 பிலியன் : 1 FC : 0·2 பிலியன். 1965-66 ல் மட்டும் ஏற்பு மூன்றுக்கும் 1159 மிலியன். இதில் 55% வளர்ச்சி குறைவான நாடுகளுக்கு. ஆயினும் இது போதாது என்பது குறை. ஜனவரி 1971 வரையில் கொடுத்த கடன் 15,000 மிலியன். முதலில் புனர் நிர்மானக் கடன் (மேற்கு ஐரோப்பிய நாடு களுக்கு) முக்கியமான அம்சமாக இருந்தது. பின்னர்க் கடன்கள் முழுதும் வளர்ச்சிக்காக (development) கொடுக்கப்பட்டு வருகின்றன. முதலில் கொடுக்கப்பட்ட கடன்கள் எந்தக் குறிப் பிட்ட வேலைக்காக என்று வரையறை செய்யப்படாமல் இருந்தன. ஆனால் நாடுகளுக்கு அமெரிக்க அரசாங்கத்தின் நேரிடையான பண உதவி கிடைத்த பின், பாங்கு தன்னுடைய வசதிகளைக் குறிப்பிட்ட திட்டங்களுக்கு மட்டும் தர வரையறுத்துக் கொண்டது. சில கடன்கள் மார்ஷல் திட்டத்தில் கலந்துகொண்ட நாடுகளுக்கும் சென்றாலும் பெரும்பான்மை வளர்ச்சியை நாடும் பின்னடைந்த நாடுகளுக்கே சென்றது. குறிப்பிட்ட திட்டக் கடன்களில் முக்கியமானவை மின்சார வசதிக்கும், போக்குவரத்து வசதிக்குமாகக் காணப்பட்டன. இவை முன்னேற்றத்திற்கு அடிப்படைத் தொழில்கள். தனியார் முதலீட்டுக்கு அவை இலாபகரமாக இல்லாதிருப்பினும் பொது நன்மைக்காக இவை மேற்கொள்ளப்படவேண்டியன. பெரும் உதவி பெற்ற துறைகள் முறையே: போக்குவரவு, (34·5%) ; மின் (30·8%); தொழில் (15·8%). விவசாயம் (9·2%) கல்வி (0.9%).

பாங்குக்குப் பொருள் வசதி எங்கிருந்து வந்தது என்று பார்ப்போம். அங்கத்தினர்கள் தங்கள் சந்தாவில் 2 சத வீதத்தை டாலர் அல்லது பொன் உருவில் செலுத்தவேண்டிய

கடமை உடையவர்கள். இவைகளையே பாங்கு அங்கத்தினர்கள் அனுமதியின்றிக் கடன் கொடுக்க முடியும். அமெரிக்கா பாங்கின் துவக்கத்திலேயே தன் முழுச் சந்தாவையும் கொடுக்க ஒப்புக் கொண்டதால் 720 மில்லியன் டாலர் கடன் கேட்ட உடனேயே கிடைத்தது. மற்ற நாடுகளும் பின்னர் ஒவ்வொன்றாக தாம் இன்னும் செலுத்த வேண்டிய மீதிச் சந்தாவைக் கொடுக்கத் தயாராக இருப்பதாகக் கூறின. ஆனால், தேவை பெரும்பாலும் டாலருக்குத்தான் இருந்தது. ஆகவே பாங்கு தன்னுடைய பாண்டுகளை அமெரிக்க அங்காடியில் விற்று, டாலரைப் பெற்றது. சில பாண்டுகள் கனடா, இங்கிலாந்து, ஸ்விட்சர் லாந்து முதலிய நாடுகளில் விற்கப்பட்டன. மொத்தச் சந்தா 9000 மில்லியன் டாலர். இதோடு ரிசர்வு, எச்சம் (surplus) சேர்த்தால் பெறும் தொகை, பாங்கின் கடன் கொடுக்கும் சக்தியைக் காட்டும்.

பாங்கு கொடுக்கும் பணத்துக்கு வட்டி மிகவும் குறைவாகவே இருக்கிறது. கடன் வாங்கும் நாடுகளில் காணப்படும் வீதத்தை விடக் குறைவு. எல்லாக் கடனாளிக்கும் ஒரே வீதந்தான் வாங்கப் படுகிறது. ஆனால் நாட்டின் வட்டியையும், காலத்தையும், பாங்கு கடன் வாங்கியிருந்தால் அதன் செலவையும் பொறுத்துச் சிறிது வேறுபாடு காணப்படலாம். பொதுவாக வட்டி வீதம் = பாங்கு கடன் வாங்கிய வீதம் + கமிஷன். கமிஷன் முதலில் $1\frac{1}{2}\%$ ஆக இருந்து, குறை கூறலுக்குப் பின்பு குறைக்கப் பட்டுள்ளது ($\frac{1}{8}\%$). வட்டி வீதம் 6% வீதம் (பொதுவாக) வாங்கப் படுகிறது. IDA கடன்களுக்கு வட்டி இல்லை. பணிக் கட்டணம் (service charge) $\frac{3}{4}\%$ உண்டு. கடன் காலம் 50 ஆண்டுகள்.

திருப்பிக் கொடுத்தல் விஷயத்தில் பாங்கு மிகவும் நெகிழ்ச்சியைக் காட்டுகிறது. கடன் காலம், திட்டக் காரியத்தின் விளைவுக் காலத்துடன் இணைந்தது. பெரும்பாலும் 25 ஆண்டு கள். தயா காலம் 2/5 ஆண்டுகள். கடன் காலத்தை நீட்டிக்கலாம் அல்லது வருடாந்தரச் செலுத்துத் தொகையைக் குறைக்க லாம். அயல்நாட்டுச் செலாவணியில் தீர்க்க வேண்டிய காரணத்தால் ஒரு நாட்டின் மாற்று வீதம் மிகவும் பாதிக்கப் படும் போலிருந்தால், அப்போது பாங்கு அந்த நாட்டின் சந்தா நாணயத்திலேயே கடனைத் திரும்பப் பெற்றுக் கொள்ள ஒப்பலாம். ஆனால் கடனாளி தன் நாணயத்தைப் பாங்கின் விருப்பப்படி ஆளவும், தன் நாணயத்தின் மாற்று மதிப்பை நிலைப்படுத்தச் சக்தி தோன்றியவுடன் தன் பணத்தை மீட்டுக்

கொள்ளவும் ஒப்பவேண்டும். தனியார் கடன் கொடுப்பிலிருந்து முக்கிய வேறுபாடு கடன் எளிதில் கிடைப்பதாகும்.

பாங்கானது அங்க நாட்டின் எல்லைக்குள் உள்ள எந்தத் தொழில் நிறுவனத்திலும் பங்கு எடுத்துக்கொள்ளலாம் அல்லது கடன் கொடுக்கலாம். கடன் பெறுவது அரசாங்கமாக இல்லாமல், நாட்டின் ஒரு பகுதியாக இருப்பின் எந்த நாட்டின் எல்லைக்குள் அது இருக்கிறதோ அந்த நாட்டு அரசாங்கம் இந்தக் கடனைத் திருப்பிக் கொடுப்பதாக ஏற்றுக் கொள்ளவேண்டும். பாங்கினுடைய செல்வாதாரத்தைக் காப்பாற்றவும், தகுந்த வழியில் பயன்படுத்தவும் நான்குவிதக் கட்டுப்பாடுகள் உள்ளன : இவையே முன்னர்க் கூறிய அம்சங்கள்.

(1) கடன் கொடுப்பதற்கு முன் விற்பனர்களால் குறிப்பிடப் பட்ட திட்டங்கள் கடன் கொடுக்கத் தகுதியானவையா என்று ஆராயப்பட வேண்டும். குறிப்பிட்ட திட்டத்துக்கு வரையறுப் பதன் நோக்கம் கடன் ஆக்க வேலைகளுக்கு ஆளப்பட வேண்டும் என்பதேயாகும்.

(2) பாங்கு கடன் வாங்குவோருடைய எதிர்காலச் சக்தியைக் கவனித்துக் கடன் கொடுக்க வேண்டும். கடன் வாங்குவோருக்குத் திருப்பிக் கொடுக்கும் சக்தி உண்டாகுமோ என்பதைப் பார்க்கவேண்டும். தனியார் கடன் கொடுத்தால் கடனைத் திருப்பிக் கொடுக்கச் சத்தியுடையவர்களா என்றே பார்ப்பது வழக்கம். நாடு, பெயர்ச்சிச் சிக்கலைத் தாங்க முடியுமா என்று கவனிப்பதில்லை. நாம் அயல்நாட்டுக் கடனைத் தீர்க்கவேண்டுமானால் அதற்கேற்ப நடப்புக் கணக்கில் ஏற்றுமதி எச்சம் காணப்பட வேண்டுமென்றும் கடன் வாங்கும்போது நாட்டின் இறக்குமதியில் எச்சம் காணப்பட வேண்டுமென்றும் கூறினோம். இந்த நினைந்தனைகள் நிறைவேறுமா என்பது இரு நாடுகளின் பொருளாதார, வாணிப, பணத்துறைக் கோட்பாடு களையும் நாடுகளில் வாணிபச் சூழலின் நிலையையும், மற்றக் கட்டுக்கடங்காத காரணிகளையும் பொறுத்தது. எதிர் காலத்தில் எப்படி, எவ்வளவு எளிதில் கடனைத் திருப்பிக் கொடுக்கக்கூடும் என்பது பற்றி முன் கூறமுடியாது. ஆனால் எவ்வளவு தூரம் கஷ்டங்கள் உண்டென்பதை மதிப்பிடக்கூடும். ஆனால் கடன் பெற்ற நாடு கடுமையான மாற்றுச் செலாவணி நெருக்கடியில் அவதிப்படும்போது பாங்கு கடன் நிபந்தனைகளைத் தளர்த்த அதிகாரம் பெற்றிருக்கிறது. மூன்று ஆண்டு வரை ஒரு நாடு தன் செலாவணியிலேயே செலுத்த அனுமதிக்கவும் கடன் கால அளவை நீடிக்கவும் செய்யலாம்.

(3) கடன் வாங்கப்பட்ட குறிப்பிட்ட இனத்தின் செலவுக்காக மட்டும் அது பயன்படுத்தப்படவேண்டுமென்று பார்த்துக் கொள்ள ஒவ்வொரு இனத்துக்கும் செலவு ஆக ஆகக் கடனை ஆள்வதற்குத் தனித்தனிக் கணக்குகள் வகுக்கப்பட்டுள்ளன.

(4) குறிப்பிட்ட இனத்துக்கு அவசியமான அயல் நாட்டுச் செலாவணித் தேவையை மட்டும் பூர்த்தி செய்வதற்காக இந்தக் கடன்கள் தரப்படுவன. எந்தத் திட்டத்துக்கும் தேவையான உள்நாட்டுச் செலாவணியை உள் நாட்டிலேயே அரசாங்கம் சேகரித்துக் கொள்ளவேண்டும். ஆனால் உள்நாட்டிலே நியாயமான நிபந்தனையின் மேல் இந்தத் தொகை பெறமுடியாதபோது வெளியில் கடன் பெறலாம். தவிர, உள்நாட்டில் முதலீடு காரணமாக அயல்நாட்டு செலாவணிக்குத் தேவை உயருமானால் அப்போது பாங்கு அத் திட்டத்துக்கு வேண்டிய உதவி செய்வதோடு, மேலும் அயல் நாட்டுச் செலாவணி உதவி செய்யலாம்.

**பாங்கின் நடவடிக்கையைப் பற்றிய மதிப்பீடு**

சர்வதேசப் பாங்கு பன்னாட்டு ஒத்துழைப்பில் ஒரு முக்கியமான சாதனை என்று கூறுவது மிகையாகாது. முதல் அம்சம், பன்னாடுகளின் பொறுப்பு என்கிற தத்துவத்தை நடைமுறைக்குக் கொண்டு வந்தது. அன்றி, பாங்கு நேரிடையாக அநேக சாதனைகளுக்கும் காரணமாக உள்ளது. மின்சார வசதிகள், போக்குவரத்துச் சாதனங்கள், பாசன வசதிகள், பயிர்த்தொழில் முன்னேற்றம், கைத்தொழில் சாதனங்கள் முதலியவைகளுக்கு உதவியது மூலம் பல நாடுகளின் முன்னேற்றத்திற்கு அடிகோலியது. தவிர, பாங்கு பெரிய நிபுணர்களை உடைய ஆலோசனைக் குழுக்களைக் கடன் வாங்கிய நாடுகளுக்கு அனுப்பி அவைகளுக்கு அறிவுத் தானம் செய்தது. நாடுகளின் பொருளாதாரப் பிரச்சினைகளைத் தீர்க்க யோசனை கூறுகிறது. இப்படிப் பல்வேறு சாதனைகள் இருந்தும் பாங்கு முற்றும் வெற்றி பெற்றுவிட்டது என்று சொல்வதற்கு வழியில்லை. அதன் நோக்கங்களைக் கருதினால் அதனுடைய சாதனை குறைவாக உள்ளது.

இந்தப் பாங்கை நிறுவும்போது இருந்த ஒரு அடிப்படையான நம்பிக்கை, பொருளாதாரத்தில் பின் தங்கிய நாடுகளில் தனியார் முதல் அயல்நாடுகளிலிருந்து பேரளவில் புகுந்து முன்னேற்றத்திற்கு வழி செய்யும் என்பது. பாங்கு தனியார் கடனுக்கு உத்தரவாதம் அளித்தும், நேராகக் கடன் கொடுத்தும்,

அல்லது தொழில்களில் பங்கு எடுத்துக்கொண்டும், பின் தங்கிய நாடுகளில் தனியார் முதல் புகுவதற்குத் தூண்டுகோலாக இருக்கும் என்று நினைக்கப்பட்டது. அதனுடைய செயல்களின் விளைவாக ஏற்படும் வாய்ப்புகள் தனியார் முதலைக் கவரும் என்று நினைக்கப்பட்டது. ஆனால் பின் தங்கிய நாடுகளுக்குச் சென்ற தனியார் முதல் அவைகளின் தேவையை நோக்க மிகவும் அற்பமாக இருந்து வந்துள்ளது. பாங்கினுடைய உத்தரவாதத்தின் மேல் இந்தப் பிரதேசங்களுக்குப் பேரளவில் தனியார்முதல் போகும் என்ற எதிர்பார்ப்புப் பொய்த்துவிட்டது. பாங்கினுடைய லேவாதேவி பெரும்பாலும் அது நேரடியாகத் தன் பணத்தைக் கொடுப்பதாகவே முடிந்தது. தான் கடன் கொடுக்கும் நாட்டினுடைய அரசாங்கம் அதன் தனியார் கடனுக்கு உத்தரவாதம் தரவேண்டும் என்கிற நிபந்தனை தனியார் பாங்கிடம் கடன் வாங்குவதற்குத் தடையாக இருந்தது. இப்படிப்பட்ட உத்தரவாதம் தம்முடைய தொழில் நடைமுறையில் அரசாங்கம் தலையிடுவதற்குக் காரணமாகும் என்று தனித் தொழில் அதிபர்கள் நினைத்தனர்.

இந்தக் குறையை நீக்குவதற்கே பன்னாட்டு நிதிக் கார்ப்பரேஷன் என்ற (International Finance Corporation) அமைப்பு ஒன்று நிறுவப்பட்டது. இது அற்ப முதலே (100 மிலியன் டாலர்) உடையதாக இருந்ததால் முதலில் மிகவும் உதவ முடியவில்லை. பின்னர்ப் பாங்கிடமிருந்து கடன் வாங்க அனுமதி பெற்று, கைத் தொழில் துறையில் தன் பணியை விருத்தி செய்துள்ளது.

தனியார் முதல் வழியாக நெடுங்கால முதல் உதவி நடவாததற்குக் காரணம் உலகத்தில் அரசியலிலும் பொருளாதாரத்திலும் உள்ள சீர்கேடு என்றும் சொல்லலாம். நாடுகளுக்குள் அச்சம் பல வகையில் தோன்றியுள்ளது. இவைகளை நீக்கினாலொழியத் தனியார் முதல் பெயராது. இந்த விதமான சூழ்நிலைகளைத் திருத்துவது பாங்கினுடைய சக்திக்கு உட்பட்டதன்று. பின்தங்கிய நாடுகளின் சூழ்நிலை பேரளவு முதலீட்டுக்கு ஏற்றதாக மாறும் வரையில் பாங்கு தனியார் கடன் பெறத் தன் உத்தரவாதத்தைப் பேரளவில் தருவது முடியாது.

அடுத்தபடி, பாங்கு கொடுத்துள்ள கடன் தொகை அற்பமானது என்பது ஒரு குறையாகக் கூறப்படுகிறது. பாங்கு தரும் கடன் வாங்கும் நாட்டின் உற்பத்திச் சக்தியை உயர்த்த வேண்டும். அதோடு அயல்நாட்டு முதலீட்டுக்கும் தனியார்

முதலீட்டுக்கும் வாய்ப்புகளைப் பெருக்கவேண்டும். சென்ற காலத்தில் பாங்கின் கடன்கள் இவ்வகையிலேயே இருந்தன. ஆனால் தொகை மிகவும் அற்பமாக இருந்தது. பின்தங்கிய நாடுகளின் வருமானத்தை ஆண்டுக்கு 2 சதவீதம் உயர்த்துவதற்கு உதவ வேண்டுமென்பதை நோக்க உதவி மிகவும் அற்பமாகும்.

1965-66-ல் IBRD; IDA கொடுத்த 1123 மிலியன் டாலர் உதவி 32 நாடுகளுக்குச் சென்றன. இதில் 12 ஆப்ரிக்காவில்; 8 ஆசியா, மத்திய கிழக்கு நாடுகளில் உள்ளவை. மொத்தத் தொகையில் ஆசியா, மத்திய கிழக்கு நாடுகள் முதன்மையாக உள்ளன. இந்தியா எல்லாவற்றிலும் பெரிய தொகை பெற்ற போதிலும் பெரும்பாலும் IDA கடன். எல்லாம் பொதுத் துறைக்கே. ஜூன் 1971 வரை IDA $ 3340 மிலியன் கடன் தந்திருக்கிறது. அதிகம் பெற்றது இந்தியா. பாங்கு ஏன் அதிகமாகக் கடன் கொடுக்கவில்லை?

(1) கடன் கொடுப்பதில் மிகவும் அமிதமான எச்சரிக்கை. பாங்கினுடைய தத்துவமே ஒரு காரணம். தனியார் கடன் கொடுப்பதைத் தூண்டுவதே தன் பணியாகக் கருதுகிறது என்றால் இதற்கும் போதிய சாதனை இல்லை.

(2) பின்தங்கிய நாடுகளில் பொருளாதாரத்துக்கு முக்கியத் தடை முதலின்மை மட்டுமன்று என்று பாங்கு அலுவலர்கள் நினைக்கிறார்கள். பின் தங்கிய நாடுகள் உற்பத்தி வளர்ச்சியில் முதலைப் பயன்படுத்துவதற்கு வேண்டிய சக்தியற்றவைகளாக இருக்கின்றன. முதல் திறம்பட ஆளப்பட வேண்டுமானால் அது வேலை செய்வதற்கு வேண்டிய சூழ்நிலை இருக்க வேண்டும். முன்னேற்றத்திற்கு முதல் அவசியமே. ஆனால் அதுமட்டும் போதாது. பொருளாதார, அரசியல், சமூகச் சூழ்நிலைகள் பொருளாதார முன்னேற்றத்திற்கு வசதி செய்யும்படி மாற வேண்டும். இன்றேல் முதல் பயன்படாது. அநேகப் பின் தங்கிய நாடுகளில் சூழ்நிலை பொருளாதார வளர்ச்சிக்கு ஏற்றதாக இல்லை.

(3) சில விதிகள் பாங்கினுடைய நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துகின்றன. பாங்கு தன் கொள்கைப்படி திட்டங்களுக்கு உதவி செய்ய ஒப்புவதாயின் 'திட்டம் இலாபகரமானதா என்பதைக் கவனிக்கும். இந்தச் சோதனையை ஆண்டால் அநேகத் திட்டங்கள் நிராகரிக்கப்பட வேண்டும். அநேகப் பெரிய முதலீடுகள் இந்த வகையில் நிராகரிக்கப்படலாம். தனித் தனித்

திட்டங்களை எடுத்துக்கொண்டால் அவை நேரடியாக இலாபகரமாக இல்லாம விருக்கலாம். நாட்டின் பொருளா தாரத்தைப் பொதுப்படக் கருதிப் பார்த்தால் அவை அவசியமாக இருக்கலாம். ஆனால் பாங்கானது பரந்த நோக்கத்தோடு கடன் கொள்கையை மாற்றுமானால் விரைவில் அதனுடைய பொருள் வசதிகள் செலவாகிச் சிக்கல் ஏற்படலாம். ஆகவேதான் பாங்கு எச்சரிக்கையாக இருப்பதாகத் தெரி கிறது. நாடுகள் பாங்குக்குக் கொடுக்க ஒப்புக்கொண்ட சந்தாவை அதிகப்படுத்த வேண்டும். அன்றியும் பாங்கு கடன் கொடுப்பது அல்லது கடன் உத்தரவாதம் தருவது சம்பந்தமான அதிகாரம் அதிகப்படுத்தப்பட வேண்டும். கடன் வாங்கும் நாடுகளின் கடன் மீட்சிப் பொறுப்பு சிக்கலானது. இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பது கடன் வாங்கிய நாடுகளின் உற்பத்தித் திறன் கடன் அதிகப்படுவதைப் பொறுத்தது; அதோடு அந்த நாடுகளின் பணத்துறை, நிதித்துறை நடவடிக்கைகளையும் பொறுத்தது. தவிர, கடன் கொடுக்கும் நாடுகளில் வேலை நிறைவும் தடையிலா வாணிபக் கைக்கோளும் இருக்க வேண்டும். அதாவது பன்னாட்டுப் பொருளாதாரம் ஒழுங்காக நடக்க வேண்டுமானால், அதற்கு வேண்டிய முயற்சிகள் இருந்தாலொழிய, பின் தங்கிய நாடுகளுக்கு முதல் பெயர்ச்சி எளிதாக நடவாது. பொதுவாகக் கூறினால் பாங்கு இப்போது உள்ளதைப்போல அதிக எச்சரிக்கையாக இருக்கக் கூடாது. அதேபோது கடன் வசதியால் மட்டும் பின்தங்கிய நாடுகள் முன்னேறி விடும் என்றும் நாம் நினைக்கக்கூடாது. கடன் கொடுக்கும் நாடுகள் தாராளமாக உதவ முன் வருவதோடு, கடன் வாங்கும் நாடுகளுக்குத் தீவிரமாக முதலை ஆளச் சக்தி வரவேண்டும்.

# 45. வாணிபச் சுழல்கள்

## (Trade Cycles)

தொழில்களின் (business) நிலையில் காலத்துக்குக் காலம் ஏற்ற இறக்கங்கள் காணப்படுகின்றன. நிலைபேற்றைவிட நெளிவுகளே தொழிலின் இயற்கை போலத் தோன்றுகின்றது. இந்த நெளிவுகளில் பல வகைகள் காணப்படுகின்றன. இவைகளை (1) நெடுங்காலப் போக்குகள் (secular trends), (2) பருவகால நெளிவுகள் (seasonal fluctuations), (3) சுழல் (cyclical) நெளிவுகள், (4) பலவகை நியதியற்ற நெளிவுகள் (miscellaneous random fluctuations) என்று பகுக்கலாம்.

இவைகளில் நெடுங்காலப் போக்கென்பது நாட்டு உற்பத்திப் போக்கைக் காட்டுவது. இது முதலில் முன்னேறும் முறையில் காணப்படுமாயினும், பின்னேக்கியும் இருக்கலாம். ஆனால் இங்கு நாம் பல சுழல் நெளிவுகளை உள்ளடக்கிய ஒருமுகப் போக்கையே குறிப்பதாக வைத்துக்கொள்வோம். இயற்கைப் பருவ மாறுதல்கள் தொழிலில் ஒரு நியதியான மாறுதல்களை உண்டாக்குகின்றன. ஆனால் சில, சமூகப் பழக்கவழக்கங்களால் ஏற்படுபவை. தீபாவளி, கிருஸ்துமஸ் முதலிய பண்டிகைகள் பருவகால மாறுதல்களுக்குக் காரணமாயிருக்கின்றன. புள்ளி இயல் முறைகளை ஆண்டு நெடுங்காலப் போக்கின் உறுத்தலையும் பருவகால மாறுதல்களின் உறுத்தலையும் களைந்துவிட்டுப் பார்த்தால் தொழில் துறைப் புள்ளிகள் சுழல் நெளிவுகளைப் புலப்படுத்தும். இவ்வகை நெளிவின் சிறப்பான தன்மை தொழில் பெருக்கமும், சுருக்கமும் (expansion and contraction) மாறி மாறி வருவதும் மாறுதலின் காலத்திலும் பண்பிலும் ஒரு நியதி காணப்படுவதுமாகும். தனித்தனித் தொழிலிலும் இவ்விதச் சுழல் காணப்படலாம். ஆனால் வாணிபச் சுழல் என்பது எல்லாத் தொழில்களிலும் ஒரேபோது ஒரே மாதிரி நெளிவைப்

புலப்படுத்தும். ஆகவே தனித்துறைச் சுழல்களுக்கும் (specific cycles) பொது வாணிபச் சுழல்களுக்கும் (trade cycles) வேற்றுமை உணர வேண்டும்.

வாணிபச் சுழல்களுக்குள் சுழலின்கால நீடிப்பிலும்(duration) நெளிவின் அலைவிலும் (amplitude) வேறுபாடு காணப்படுகிறது. இதைக் கொண்டு மைனர் சுழல்கள் (minor cycles), மேஜர் சுழல்கள் (major cycles) என்று பகுப்பதுண்டு. 1862-இல் க்ளமெண்ட் ஜுக்லர் (Clement Juglar) என்ற பிரெஞ்சுப் பொருளாதார நிபுணர் வர்த்தக உலகில் அடிக்கடி தோன்றும் நெருக்கடிகள் (crisis) தனிப்பட்ட நிகழ்ச்சிகளல்ல என்றும், அவை ஒரு சுழலின் அங்கமென்றும், ஒவ்வொரு சுழலிலும் செழிப்பு (prosperity), நெருக்கடி (crisis), முறிவு (liquidation) ஆகியவை ஒன்றன்பின் ஒன்ருக வரும் என்றும் கண்டுபிடித்தார். இரண்டு நெருக்கடிகளுக் கிடைப்பட்ட நெளிவை மேஜர் சுழல் என்ருர். நெருக்கடி என்பது பண அங்காடியில் ஏற்படும் ஒரு கலக்க (disturbance) மாகும். இந்தச் சொல்லின் கருத்துப் பலருக்குப் பலவாறிருக்கு மாதலால் மேஜர் சுழல் என்பது இரண்டு மந்தங்களுக் கிடையில் காணும் நெளிவு எனலாம். இந்த வித மேஜர் சுழல்களை 'ஜுக்லர் சுழல்' என்பது வழக்கம். மேஜர் சுழல்களிலே ஏறுமுகத்திலேயும், ஓரளவுக்கு இறங்குமுகத்திலேயும் குட்டிச் சுழல்கள் காணப்படுகின்றன. இவைகளை 'மைனர் சுழல்கள்' என்பது வழக்கம். மேஜர் சுழல்களின் காலம் சுமார் 8 ஆண்டுகள்; மைனர் சுழல்களின் காலம் சுமார் 40 மாதங்கள். மேஜர் சுழல் என்பது மைனர் சுழல்களின் தொகுதியே என்பது கிட்சின் (Kitchin) என்பாரது கொள்கை. நமக்கு முக்கியமானவை மேஜர் சுழல்களேயாகும். மைனர் சுழல்களை நாம் உணர்வதுகூட இல்லை. மேஜர் சுழல்களே பேராற்றலுடனும் விளைவுடனும் காணப்படும். ஆனால் அமைப்பைப் பொறுத்தமட்டில் இரண்டு வகைகளுக்கும் வேறுபாடொன்று மில்லை. இதனால் சிலர் இரண்டையும் ஒன்ருக வேறுபாடின்றி விளக்குகின்றனர்.

அடுத்தபடி, நெடுங்கால நெளிவுகளும் உள்ளன என்பதை உணரவேண்டும். இவைகளை நீளலைகள் (long waves) என்பதுண்டு. இவை 50-60 ஆண்டுச் சுழல்கள். வரலாற்றில் சென்ற நூற்ருண்டில் ஒவ்வொரு கால் பகுதியிலும் விலை ஏற்றம் அல்லது இறக்கம் இருந்ததாகப் படிக்கிரும். அவை இவ்வினத்தைச் சேர்ந்தவை. இந்நெடுங்காலப் போக்குகளைச் சுழல் என்று பேசுவது சரியா என்பதுகூட ஐயமானது. பொன் விலை மாறுதலால் நிகழ்ந்திருந்தால் இவை சுழலினத்தில் சேரா,

ஆயினும் மேஜர் சுழல்களுக்கும் இவைகளுக்கும் தொடர்புள்ளதாகத் தோன்றுவதால் அலைகள் என்று கூறலாம். கொண்ட்ராடியஃப் (Kondratieff) என்பவர் இவைகளை வற்புறுத்துவதனால் இவைகளை 'கொண்ட்ராடியஃப் சுழல்கள்' எனக் குறிப்பிடுவது வழக்கம். இந்தச் சுழலில் மேல் நோக்குமுகத்தில் மேஜர் சுழல்களின் உச்ச நிலைகள் ஒன்றையொன்று மிஞ்சுவதாகவும் இறங்குமுகத்தில் அடிமட்ட நிலைகள் ஒன்றுக்கொன்று தாழ்ந்ததாகவும் இருக்கின்றன.

ஆக, நாம் மூவ்வகைச் சுழல்களைக் காண்கிறோம். (1) சிறுகால 40 மாத வாழ்வுள்ள மைனர் சுழல்கள், (2) மூன்று மைனர் சுழல்களை உள்ளடக்கிய மேஜர் அல்லது ஜுக்லர் சுழல், (3) ஆறு ஜுக்லர் சுழல்களை உள்ளடக்கிய கொண்ட்ராடியஃப் சுழல், என்பன.

வாணிபச் சுழல் கைத்தொழில் புரட்சியுற்ற நாடுகளில்தான் காணப்படுகிறது. பராமரிப்புப் பொருளாதாரத்தில் (subsistence economy) காணப்படுவதில்லை. இதில் உற்பத்தியைப் பெருவாரியாக மாற்றுவதற்குரிய பொருளாதார அங்கங்களில்லை. காரணமும் இல்லை. பண ஆட்சி ஏற்பட்டு, அங்காடிக்காக உற்பத்தி செய்யும் நிலை வந்தபின்தான் இவ்விதக் காரணங்கள் தோன்றலாயின. ஆகவே, சிலர் சுழல்களை முதலாளித்துவத்தின் (capitalism) விளைவாக நினைக்கின்றனர்.

**வாணிபச் சுழலின் முகங்கள்** (Phases of the trade cycle)

அநேகச் சுழல்களின் தன்மையை ஆய்ந்ததன் பயனாகச் சிலப் பொது அம்சங்கள் தெளிவாகின்றன. ஒரு சுழலில் நான்கு முகங்கள் காணப்படுகின்றன: பூரிப்பு (boom), நெருக்கடி (crisis), மந்தம் (depression), மீட்சி (recovery).

நெருக்கடிதான் ஒரு சுழலை மற்றொன்றிலிருந்து பிரிப்பது. இரண்டு நெருக்கடிகளுக்கிடைப்பட்ட காலம் ஒரே அளவாக இருக்குமென்பதற்குப் போதிய ஆதாரமில்லை. சராசரியை வைத்துக்கொண்டு தான் நாம் காலத்தைப் பற்றிப் பேசவேண்டியிருக்கிறது. நாம் இங்கு மாதிரிச் (typical) சுழல் ஒன்றை விளக்குவோம். இந்த மாதிரிச் சுழலில் காணும் அம்சங்கள் அனைத்தும் ஒவ்வொரு சுழலிலும் அப்படியே காணப்படாமல் வேறுபாடுகள் இருக்கக் கூடும்.

முதலில் பொருளாதாரம் தற்காலிகச் சமநிலையில் (temporary equilibrium) இருப்பதாக வைத்துக்கொள்வோம். இந்நிலையில் உற்பத்தி செய்வோர் உற்பத்தியை ஏற்றவோ குறைக்கவோ காரணமில்லை. இந்தச் சமநிலை இடைவிடாது தாக்குதலுக்குட்பட்டிருக்கும். தாக்குதலின் காரணம் நாட்டுப் பொருளாதாரத்துக்குப் புறம்பாகத் (outside) தோன்றலாம். பயிர் விளைவில் மாறுதல்கள், போர்கள், கண்டுபிடிப்புகள், பொன்விளைவில் மாறுதல்கள், இவையனைத்தும் பொருளாதாரம் முழுவதையும் ஒருசேரத் தாக்கக்கூடியன. இப்படித் தோன்றிய தாக்குதலின் தொழிற்றுறை விளைவுகள் நாட்டின் தொழில் அமைப்பு, நிதி அமைப்புக்களைப் பொறுத்தன. இவ்விளைவுகள், உற்பத்தி, பாங்குப் பணம், பணப் புழக்க வேகம், வட்டி, இலாபம், கூலி வீதம், முதலீடு முதலியவைகளைப் பாதிக்கும்: துவக்கத்தில் காணும் விளைவுகள் குவிந்து பெருகும் தன்மையுடையன. இதுவே சுழல்களின் அலைபோன்ற தன்மைக்குக் காரணமாயிருப்பது. சுழலைத் தூண்டும் காரணி எதுவாயினும் போக்குகள் ஒரே மாதிரியாக இருக்கும்.

## பூரிப்பு (Boom)

துவக்கத்தில் தூண்டும் காரணி எதுவாயினும் அது இலாபத்தை அதிகப்படுத்துவதன் மூலம் தொழில் துணிவோரைத் தங்கள் தொழில் நடவடிக்கைகளைப் பெருக்கச் செய்கிறது. அவர்கள் சாதனங்களை அதிகமாக வாங்குவதன் மூலம் நாட்டில் வேலையும் வருமானமும் பெருகும். நுகர்ச்சிப் பொருளுக்குத் தேவை பெருகும். துவக்கத்தில் சாதனங்கள் வேலையின்றி இருந்திருப்பின், உற்பத்தியைப் பெருக்கி இப் புதுத் தேவையை நிறைவேற்ற முடியும். விலை ஏறலாம். சாதனங்கள் வருமான உயர்வைப் பெறும் காலத்துக்கும் அவர்களது உற்பத்தி நாட்டுக்கு கிடைக்கும் காலத்துக்கும் இடைப்பட்ட காலத்தில் விலைகள் ஏறும். ஆனால் உற்பத்தி அதைவிட வேகமாக உயரும். ஏற்கனவே நிறுவனத்தின் சக்தி முழுதும் ஆளப்படாதிருந்ததால் முதலில் உற்பத்தி உயருமளவு செலவு ஏறாது. ஆனால் நாளடைவில் உற்பத்தி நெகிழ்ச்சி (output elasticity) குறையும். முடைகள் (bottlenecks) தோன்றும். செலவு உயரும். குறித்த காலத்தில் அளிப்புச் செய்ய முடியாது. விலை ஏறும்.

விலை ஏற்றத்துடன், பணத் தொகைப் பெருக்கமும் இன்றியமையாது நிகழும். பாங்குகள் கடனளிப்பை அதிகப்படுத்துவது பூரிப்புக் காலத்தின் ஓர் அம்சம். பணத்தொகை உயராவிடின்

புழக்க வேகமாயினும் உயர்ந்து விலை ஏறும். ஆயினும் இவ் வேகத்தில் ஏற்றம் உற்பத்திக்கேற்பவே இருக்கும். ஆகவே விலை ஏற வேண்டுமானால் பணத்தொகை மாறுதலே காரணமாக இருக்கும். விலை ஏறும் காலத்தில் முதல் பொருள் தொழில்களின் விலைகள், நுகர்ச்சிப் பொருள் தொழில்களின் விலைகளைவிட அதிகமாக ஏறும்.

ஆனால் விலை ஏற்றம் எல்லாத் துறைகளிலும் ஒரே அளவாக இருப்பதில்லை. சில்லறை விலையை விட மொத்த விலை அதிகம் உயர்கிறது இவைகளிலும் பண்ணைப் பொருள்கள், கச்சாப் பொருள்கள் விலைகள் மிகவும் உயரும். அடுத்தபடியே வினை முற்ருப் பொருள்களும், வினை முற்றிய பொருள்களும். இது விலைத் தொடர்புகளில் கலக்கமுண்டாக்கி, வருமானப் பகிர்வில் மாறுதலை உண்டாக்குகிறது. விலைகள் மாறுவதில் நெகிழ்ச்சி வேறுபாடுண்டாகையால் செலவுகளின் கட்டமைப்பில் (cost structure) வேறுபா டுண்டாகிறது. கச்சாப் பொருள் விலைகள் அதிகம் ஏறும். பின்னர்க் கூலி ஏறும், பின்னர்ச் சம்பளம், பின்னர் வட்டி வீதம். எல்லாவற்றுக்கும் பிற்பட்டவை வாடகை, வாரம், வரி. இப் போக்கின் விளைவாய் இலாபம் அதிகமாகும். ஏனெனில் உற்பத்தியாளர் செலவினங்கள் விலைக்குப் பின் தங்குகின்றன. மாருச் செலவினங்களே அதிகமுடைய தொழில்களெல்லாம் மாறுஞ் செலவினங்களதிகமுடையவைகளை விட அதிக இலாபம் பெறுகின்றன.

இலாபம் உயர்ந்தும் இன்னும் ஏறும் என்ற நம்பிக்கை உண்டானதும் செக்கூரிட்டி அங்காடியில் விலைகள் ஏறும். இலாபம் மிகுவதிலிருந்தே பூரிப்பின் குவிவு (cumulation) தோன்றுகிறது போலும். இலாபம் முதலீட்டைத் (investment) தூண்டுகிறது. இது சாத்தியமாக, பணப்புழக்கம் அதிகமாக வேண்டும். ஆகவே பாங்குப் பணம் அதிகம் தேவைப்பட்டு, பாங்குகளும் பெருக்க முன் வருகின்றன. இதே காரணத்தால் பணப்புழக்க வேகமும் அதிகப்படும். முதலீடு பெரும்பாலும் முதற் பொருளுற்பத்தியிலிருக்கும். கூலி வினியோகம் ஏராளமாக இருக்கும். இந்தப் புது வருமானத்துக்கேற்ப நுகர் பொருள்கள் அங்காடியில் கிடைக்கமாட்டா. விலை ஏற்றம் வலுப்பெறும். இந்தப் பூரிப்பின் அடிப்படைச் சக்தி ஒன்று எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கை வலுப் பெறுதலாகும். செக்கூரிட்டி, நிலம், வீடு முதலியவைகளின் விலை ஏறுவது இதனாலே தான். பாங்கர் களும் இந்த நம்பிக்கைச் சூழ்நிலையால் தாக்கப்படுகின்றனர்.

சில்லறை வாணிர்கள், மொத்த வணிகர்கள், உற்பத்தி செய்வோர், அனைவரும் சரக்கு இருப்பை (stock) அதிகப்படுத்து கின்றனர். இன்னும் விலை ஏறும் போது இலாபம் பெறும் நோக்கம் இதற்குக் காரணம். இதுவும் உற்பத்தியை ஊக்குகிறது.

இப்படியாகப் பூரிப்புப் பரவிப் பீறிடுகிறது. இப் பெருக்கம் வேலை நிறைவு நிலை வரும் வரை நிகழும் என்று நினைக்கலாம். ஒருவர் உற்பத்தி மற்றவர் தேவையைத் திருப்தி செய்வதால் ஒருவர்க்கொருவர் ஆதரவாய்ப் பெருக்கம் முடிவின்றி நடக்கலாம் என்று நினைக்கலாம். அதுதானில்லை. பெருக்கச் சக்தி எப்படியோ வலுவிழக்கிறது. பூரிப்பிலேயே பெருக்கத்தைச் சிதைக்கும் மூலங்கள் உள்ளன. அவையாவன:

(1) விலைகளை விடச் செலவுகள் ஏற ஆரம்பிக்கும். சாதனப் பற்றுக்குறை அங்கு மிங்கு மாகத் தோன்றுவதே இதற்குக் காரணம். உள்ள சாதனத்தைக் கொண்டே உற்பத்தியைப் பெருக்கும்போது சராசரிச் செலவு ஏறுகிறது. இதனால் இலாபம் குறைகிறது.

(2) விலையை ஏற்ற முடிவதில்லை. காரணம் பாங்குகள் பணப் பெருக்கத்துக்கு ஒரு நிலையில் முட்டுக்கட்டை போடுவதும், நுகர்வோர் எதிர்ப்பும். பொன் திட்டத்தின் கீழ்ப் பாங்குகளின பணப் பெருக்கச் சக்திக்கு எல்லையுண் டென்றறிவோம். வேறு திட்டங்களின் கீழும் எல்லையுண்டு. பாங்குகள் கடன் பங்கீடு (rationing of credit) துவக்கும்போதே வணிகர்கள் திணறு வார்கள். நிற்க விலைகள் எல்லாவற்றையுமே மாற்ற முடியாது. அநேகம் ஒப்பந்தத்துக் குட்பட்டவை. பிற நுகர்வோர் எதிர்ப்புக் குள்ளாகும். சில நுகர்ச்சித் தேவைகளுக்கு நெகிழ்ச்சிக் குறைவு. ஒரு நிலைக்கு மேல் விற்பனையை அதிகப் படுத்துவது முடியாது. ஆகவே சரக்கு இருப்பு அதிகப்படும். தவணை விற்பனைக்கும் (hire purchase) கூட எல்லை தெரியும்.

இவ்வித இடர்ப்பாடுகள் வரவர அதிகமாகிக் கொண்டே போகும். நம்பிக்கை பாதிக்கப்படும். முதலீட்டு வாய்ப்புகள் குறைவாகத் தோன்றும். எதிர்பாராத ஒரு நிகழ்ச்சி - விளைவு மோசமாவது, அரசியல் கோளாறு போன்றவை - ஒரே அடியாகக் குழப்பத்தை உண்டாக்கிவிடும். அடிப்படையில் தவறு என்ன வெனில் பொருளாதாரத்தின் பல பகுதிகளும், ஒன்றுக்கொன்று பொருத்தமின்றி வளர்ச்சி யுறுவதாகும். இது பூரிப்பின் இன்றியமையாத அம்சம்.

**நெருக்கடி (Crisis)**

இது திடீரெனச் சிறு நேரத்தில் நிகழ்வது எனலாம். இது கீழ் நோக்கிய திருப்பத்துக்குக் (down turn) காரணம். இதிலிருந்து மந்தம் துவங்குகிறது. இந்த நெருக்கடியின் அடையாளங்கள்: செக்கூரிட்டிகளைப் பேரளவில் போட்டியிட்டு விற்றல், பாங்குத் திட்டத்தில் சில முறிவுகள் அல்லது கோளாறுகள், விலைகளின் நெடு வீழ்ச்சி. அரைகுறையாக உற்பத்தியைப் பாதியில் நிறுத்த முடியாதாகையால் சிறிது காலம் உற்பத்தி ஓடிக்கொண்டிருக்கலாம். ஆனால் புது உற்பத்திக்குத் திட்டமிருக்காது. கருதிய திட்டங்கள் பல எடுக்கப்படமாட்டா. முதற் பொருள் தேவை குன்றுவதே முதற்படி. எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கை குலையும் செக்கூரிட்டிகள் வலிந்து விற்கப்படும். காரணம் நஷ்டத்தைத் தவிர்க்கவோ அல்லது பாங்குகளுக்குக் கடனைத் திருப்பிக் கொடுக்கவோ இருக்கலாம். பண மார்க்கெட்டில் முடக்கல் தொழில் முதலிடுவோர்கள் பண்டங்களை விற்றுப் பொறுப்புகளைச் சாமளிக்கத் தூண்டும். இதனால் விலைகள் விழும். புதுச் செக்கூரிட்டிகள் ஒன்றும் வெளிவரா. இப்படிச் செக்கூரிட்டி அங்காடி, பண அங்காடி, பண்ட அங்காடிகளில் நெருக்கடி துவங்கும். வீழ்ச்சி, தொழிலுலகு முழுவதையும் பாதித்து ஒரு பெரும் பீதியில் (panic), பின்னர் முறிவில் (liquidation) முடியலாம். முறிவின் வேகம் பூரிப்பின் உச்சத்தையும் மக்கள் மனோ நிலையையும் பாங்குத் திட்டத்தின் வளமையையும் பொறுத்தது.

பீதி (panic) உண்டாவது நம்பிக்கையிழந்த எல்லோரும் ரொக்கத்தன்மை அடைய விரும்புவதனாலாகும். நம்பிக்கை இழப்புக்கு அண்மைக் காரணம் ஒரு நிறுவனமோ, பாங்கோ முறிந்ததாக இருக்கலாம். பூரிப்பு நெருக்கடியாகவோ, பீதியாகவோ, எப்படி முடிந்தாலும் ஒரு நீண்டகால மந்தம் இதற்குமேல் வருகிறது.

**மந்தம் (Depression)**

இது தொழில் சுருங்கும் காலம். உற்பத்தியும் வேலையும் குறைகின்றன. இது எல்லாத் துறைகளிலும் நிகழ்ந்தாலும் வேறுபாடுண்டு. சில்லறை வாணிபம் அதிகம் பாதிக்கப்படுவதில்லை பயிர்த்தொழில் போன்றவை பருவகாலத்தாலும் இதேபோது பாதிக்கப்படலாம். ஆலை, சுரங்கம், கட்டடம், போக்குவரவுத் தொழில்களில் அதிகமாகக் காணப்படும். நுகர்ச்சி நிலைக்கு எவ்வளவு தொலைவில் ஒரு தொழிலிருக்கிறதோ அவ்வளவுக்கும் மந்தம் அதிகம்.

உற்பத்தி சுருங்கியபோதிலும் சராசரி விலை மட்டம் விழுகிறது. துவக்கத்தில் இதற்குக் காரணம் சரக்கு இருப்பைக் காலி செய்ததாகலாம். பின்னர்ப் பணத்தொகைச் சுருக்கம் காரணமாகலாம். பணச்சுருக்கத்துக்குக் காரணம் உற்பத்தி வேலை குறைவதும் எதிர்கால வாய்ப்பைப் பற்றிய அவநம்பிக்கையும். கடன்கள் திரும்பக் கொடுக்கப்படும். புதுக் கடன் வாங்கப்படாது. பணப்புழக்க வேகமும் குறையும். எதிர்காலம் எப்படியோ என்றஞ்சிச் சேமிக்கத் தோன்றும். இலாப நம்பிக்கை இல்லாததனால் பணம் முடங்கிக் கிடக்கும். விலைகள் விழுந்துகொண்டே இருப்பதால் எதையும் வாங்குவதை ஒத்திப்போடத் தோன்றும். விலை வீழ்ச்சியின் அடிப்படைக் காரணம் வருமானச் சுருக்கமேயாகும். மந்தத்திலும் விலைகள் பல விதத்தில் மாறுகின்றன. சில அற்பமாகவே விழுகின்றன. பல மிகுதியாக வீழுகின்றன. விலைகளின் இயல்புத் தொடர்புகள் மாறும். இதே போது செலவுகளுக்குள் உள்ள தொடர்பு மாறும். ஏனெனில் பல செலவுகளும் ஒரே வீதத்தில் விழா. இப்படி விலைகளும் செலவும் பல வீதத்தில் விழுவதால் இலாபம் குறைகிறது. பின் நஷ்டம் தோன்றும். நம்பிக்கை தளர்கிறது. தயக்கம் தோன்றுகிறது. இது மேலும் உற்பத்திக் குறைப்பு, விலை வீழ்ச்சி, இலாபக் குறைவு அல்லது நஷ்டம், உற்பத்திச் சுருக்கம், வேலையின்மை ஆகியவற்றை ஒன்றன்பின் ஒன்றாக உண்டாக்குகிறது. வருமானம் குறையும். பாங்குப் பணம் குறையும். புழக்க வேகம் குறையும். மேலும் விலைகள் விழும். இப்படிக் குவியும் விளைவுகளே மந்தத்தைத் தாங்க முடியாதவையாக்குகின்றன. இப்படி முதிர்ந்த மந்தம் விரைவில் முடியலாம், நீடிக்கலாம். அரசாங்கத்தைத் தலையிட வேண்டுமென்று நிர்ப்பந்தம் செய்யலாம். அரசாங்கத் தலையீடின்றியும் தானே நாளடைவில் முடிவுறுவதற்கு வேண்டிய வித்துக்கள் மந்தத்திலேயே உண்டு. பூரிப்புத் தன்னாலே முடிவுறுவதுபோல மந்தமும் முடிவுறும்.

**மீட்சி (Recovery)**

விலை-செலவுகளின் போக்கில் ஒரு திருப்பநிலை ஏற்படுகிறது. ஒரு நிலைக்குப் பின் விலையின் வீழ்ச்சி நின்றுவிடுகிறது. காரணம் சரக்கிருப்புச் சூன்யத்துக்கு வருவது. உற்பத்தியை எளிதில் கட்டுப்படுத்தக்கூடிய துறைகளில் இது முதலில் நிகழும். உறுதிப்பொருள்கள் (durable goods) மந்தம் நீடித்தபோது தேய்வுற்று இப்போது புதுப்பிக்கவேண்டிய நிலை வரும். தொழில்களிலும் முதற் பொருள்களைப் புதுப்பிக்கவேண்டி வரும். எதிர்பாராத புதுத் தேவைகளைச் சமாளிக்க முடியாமலிருக்கும்.

இப்படித் திருப்தியாகாத தேவையே மந்தத்தின் வலிவைக் குறைக்கும். செலவுகளும் குறையத் துவங்கும். செலவு செய்யாத தால் பண மிதப்புக் காணப்பட்டு வட்டி குறையும். பாண்டு களின் விலை ஏறும். ஒப்பந்த வட்டி வீதமும் குறைக்கப்படும். வாடகை, வரி முதலியவையும் குறைக்கப்படும். கூலியும் குறை யும். தொழிலாளிகள் சூழ்நிலையை உணர்ந்து கூலிக் குறைப்பை ஏற்பர். இன்றேல் மேலும் வேலை இழக்கவேண்டும் என்பதை அறிவர். வேலையை இழக்காமலிருக்கத் திறமை காட்டி வேலை செய்வர். இதனால் உற்பத்திச் செலவு குறையும். திறமையற்ற தொழிலாளிகள், தொழிலதிபர்கள் வெளியேறுவர். இந்த நிகழ்ச்சிகளால் நஷ்டம் குறையும். சில துறைகளில் தேவை தலைதூக்கி விலை ஏறி இலாபமும் தோன்றலாம். வெற்றி கண்ட ஒருவரைப் பலரும் பின்பற்றுவர். நம்பிக்கை பரவும். இதே போது ஏதாவது ஒரு சாதகமான நிகழ்ச்சி திருப்பத்தைத் துவக்கலாம்.

நிலைமை மாறியதன் முதல் அறிகுறி செக்யூரிட்டி விலைகள் ஏறுவதும், கட்டடத் தொழிலும், உற்பத்திக் கருவித் தொழில் களும் மீண்டும் புத்துயிர் பெறுவதும். பங்கு அங்காடியின் எழுச்சி உற்பத்திப் பெருக்கத்தைத் தூண்டும். இலாபம் எதிர் பார்க்கப்படுவதால் செக்யூரிட்டி விலைகள் ஏறும். குறைந்த வட்டியும் துணைசெய்வதால் முதலீடு தூண்டப்படும். புதுப் பங்கு வெளியீடுகள் தோன்றும். புதுக் கண்டுபிடிப்புகள் இப்போது தான் ஆட்சிக்கு வரும். இவ்விதமாக முதல் பொருள் முதலீடு வளரும். இவைகளே முதன் முதலில் மீட்சியில் தலை எடுப்பன. இதன் விளைவாய் வருமானம் உயரும். இது உற்பத்தி வளர்ச்சிக்கு அடிப்படையாகும். தொழில்கள் புத்துயிர் பெற்றுப் பூரிக்கின்றன. பூரிப்பு முற்றிக்கொண்டே போகும். மற்றும் ஒரு சுழல் துவங்கும் நிலை வரலாம்.

# 46. வாணிபச்சுழல் கோட்பாடுகள்

## (The Theories of the Trade Cycle)

வாணிபச் சுழலை விளக்கப் பல பொருளாதார நிபுணர்கள் கொடுத்துள்ள கோட்பாடுகளைக் கீழ்க்கண்டவாறு வகைப் படுத்தலாம். இவ்வகைப்பாட்டில், பெரும்பான்மை ஒற்றுமை பற்றிச் சிலருடைய கருத்துகள் ஒரே தலைப்பின் கீழ்க் கொடுக்கப் பட்டுள்ளன:

(1) தூய பணவழிக் கோட்பாடு—ஹாட்ரி.
(The Purely Monetary Theory)

(2) மிகை முதலீட்டுக் கொள்கைகள்—
(The Over-investment Theories)

(a) பணவழி விளக்கம் (The Monetary Over-investment Theories)

(b) பணச் சார்பற்ற உண்மைப் பொருள்வழி விளக்கம். (The Non-monetary Over-investment Theories)

(i) புதுமை புகுத்தல் கோட்பாடு

(ii) கேசலது மிகை முதலீட்டுக் கோட்பாடு

(iii) ஸ்பியதாஃப் கோட்பாடு

(iv) முடுக்கிக் கோட்பாடு (The Acceleration).

(3) சேமிப்பு—முதலீட்டுக் கோட்பாடு.

(4) பெருக்கி—முடுக்கி பிணைப்புக் கோட்பாடு.

(5) குறை நுகர்ச்சிக் கோட்பாடுகள் (The Under-consumption Theories).

(6) உளச்சார்புக் கோட்பாடுகள் (The Psychological Theories)

(7) விவசாயச் சார்புடைய கோட்பாடுகள் (The Agricultural Theories).

எந்த ஒரு கோட்பாடும் ஒரு சுழலின் பல நிலைகளையும் விளக்க வல்லதாக வேண்டும். அவை: பொது அம்சங்கள், எழுச்சி முகம் (upswing), உச்சத் திருப்பம் (upper turning point) அல்லது நெருக்கடி (crisis), வீழ்முகம் (downswing) அல்லது மந்தம் (depression), கீழ்த் திருப்பம் (lower turning point) அல்லது மீட்சி (revival), காலத்தன்மை, ஆகியன. இந்த அம்சங்கள் அனைத்தையும் விளக்கக்கூடிய கோட்பாடு எது என்று ஆய வேண்டியிருக்கிறது.

## ஹாட்ரியின் பணக் கோட்பாடு

### (Hawtrey's Monetary Theory)

ஹாட்ரி என்ற ஆங்கிலப் பொருளாதார நிபுணர் விரிவான முறையில் இக்கோட்பாட்டை விளக்கியுள்ளார்; வாணிபச் சுழல் "முற்றிலும் ஒரு பணத்துறை நிகழ்ச்சி" (a purely monetary phenomenon) என்றார். பண ஓட்டத்தில் (flow of money) மாறுதலே பொருளாதார நிலையில் மாறுதல்களுக்கும், செழிப்பும் மந்தமும் மாறி மாறி வருவதற்கும் காரணம் என்றார். பண வழியான பண்டத் தேவையால் பண ஓட்டம் பெருகும்போது வாணிபம் மும்முரமாகிறது; உற்பத்தி உயர்கிறது. விலைகள் ஏறுகின்றன. தேவை விழும்போது, வாணிபம் தணிகிறது. உற்பத்தி சுருங்கும். விலை விழும். பண ஓட்டத்தை (flow of money) அதாவது பண்டத் தேவையை நிர்ணயிப்பது நுகர்வோர் செலவீடு (consumers' outlay), அதாவது அவர்கள் வருமானத்திலிருந்து செய்யும் செலவு. 'செலவீடு' என்பதில் நுகர் பொருள் செலவு மட்டுமன்றி அவர்கள் வருமானத்தில் சேமித்துப் புது முதலீட்டில் செலவு செய்வதும் அடங்கும்.

பணத்துறைக்குப் புறம்பான காரணிகள்—பூகம்பம், போர், வேலை நிறுத்தம், விளைவுக் குறைவு முதலியன—பொது வறுமையை உண்டாக்கலாமாயினும், தனித் தொழில் நிலைமைகள்

தனிப் பகுதிகளில் வறுமையை உண்டாக்கலாமாயினும், சுழல் சம்பந்தமான ஒரு பரந்த மந்தத்தை இவ்வகைக் காரணிகள் நுகர்வோர் செலவீடு மாறுதல் சம்மந்தமின்றி உண்டாக்க முடியாது. நுகர்வோர் செலவீடு மாறுவது பணத்தொகையில் மாறுதல் ஏற்படுவதால் உண்டாவது. பண வடிப்பு (deflation) மந்தத்தை உண்டாக்கவல்லது என்பதும், பண வீக்கம் (money inflation) பூரிப்பை உண்டாக்குமென்பதும் அறிந்த விஷயம்.

பணத்தொகை குறைந்தால் தேவை குறையும். தேவையை எதிர்பார்த்து உற்பத்தி செய்தவர்கள், விற்பனை மோசமாகி இருப்புயரக் காண்பார்கள். நஷ்டம் உண்டாகும். உற்பத்தி குறையும். வேலையின்மை வளரும். துன்பகரமான கூலிக் குறைப்பும், பிற வருமானச் சுருக்கமும் காணப்படும். பணப் பெருக்கமாயின் எதிரிடையான விளைவுகள் காணப்படும். ஹாட்ரி கருத்துப்படி வாணிபச் சுழல் என்பது பண வடிப்பு, வீக்கம் ஆகியவற்றின் ஒரு சிற்றளவு மாதிரி (model) யாகும். செலாவணி குறைவதால் நுகர்வோர் செலவீடு குறைவதன் மூலம் மந்தம் தோன்றுகிறது. பணப் புழக்க வேகம் (V) குறைவதனால் மந்தம் வலியுறுத்தப்படுகிறது. எதிரிடையாகச் சுழலின் செழிப்பு முகத்தில் பண வீக்க சக்திகள் வலுப்பெறுகின்றன.

பண ஓட்டம் ஓர் அளவில் நிறுத்தப்படக் கூடுமானால், இவ்வித நெளிவுகள் இருக்கமாட்டா. ஆனால் இது எளிதாகச் சாதிக்கக்கூடிய காரியமன்று. ஏனெனில் தற்காலம் பணமும், கடன் முறையும் இயற்கையாகவே நிலைபேறற்றவை (Our modern money and credit system is naturally unstable). சமநிலையி லிருந்து சிறிது விலகினாலும் போதும்; பன்மடங்கு சரிவோ எழுச்சியோ இன்றியமையாது நிகழும்.

பாங்குப் பணம் தான் முக்கியமான செலாவணி என்பது ஹாட்ரியின் அனுமானம். அதன் அளவை நிர்ணயிப்பன கழிவு வீதம், வெளி அங்காடி நடவடிக்கை முதலியவை. பணத் தொகையை மாற்றும் சக்தி தனிப்பாங்கைப் பொறுத்ததன்று; பாங்குத் திட்டத்தைப் பொறுத்தது.

இனி இக் கோட்பாட்டின்படி சுழலின் பல முகங்களை ஹாட்ரி எப்படி விளக்குகிறார் என்று பார்ப்போம். எழுச்சி முகம் (up swing) பணப் பெருக்கத்தின் மூலம் துவக்கப்படுகிறது. எவ்வளவு தூரம் பணம் பெருகுகிறதோ அவ்வளவுக்கு எழுச்சி

போகும். பணப் பெருக்கம் எப்படி ஏற்படுகிறது? பாங்குகள் கடன்கொடுக்கும் நிபந்தனைகளைத் தளர்த்துவதனால் ஏற்படுகிறது. முக்கியமான நிபந்தனை கழிவு வீதம். ஆனால் அற்பக் கழிவு வீத மாறுதலா வணிகர்கள் கடன் வாங்கும் தொகையைப் பாதிக்கவல்லது என்ற ஐயம் எழலாம். ஹாட்ரியின் விடையாவது: தொழிலுலகில் ஒரு முக்கியப் பகுதிக்குக் கழிவு வட்டி வீதம் முக்கியம்: இதுவே வணிகர்கள் (merchants) தொகுதி. இவர்கள் கடன் வாங்கியே இருப்பு வைப்பவர்கள். வட்டி குறைந்தால் இவர்கள் இருப்பை உயர்த்துவார்கள். உற்பத்தியை அதிகமாக்க ஆணை இடுவார்கள். உற்பத்தி உயர்வது நுகர்வோர் வருமானத்தையும் செலவீட்டையும் அதிகப்படுத்தும். இது தேவையை உயர்த்தும். வணிகர்கள் தங்கள் இருப்புக் குறைவதைக் கண்டு மேலும் உற்பத்திக்கு ஆணை இடுவார்கள். இதனால் மறுபடியும் வருமானமும், செலவீடும் உயர்ந்து நச்சு வட்டம் (vicious circle) தோன்றும். இதைக் குவிந்து பெருகச் செய்வது குவிந்த பணப் பெருக்கம்.

உற்பத்தி அளவின்றி வளர முடியாது. உற்பத்தி உச்சநிலையை ஒவ்வொரு துறையும் எட்டும் நிலை வரவர, ஒவ்வொரு துறையும் விலைகளை ஏற்றும். விலை ஏற ஏற வணிகர்கள் மேலும் கடன் வாங்கக் காரணம் உண்டாகிறது. விலை ஏறுவது கடனைத் தூண்டுவது போலவே, வட்டி வீழ்ச்சியும் தூண்டுகிறது. விலை ஏற்றம் இலாபத்தை உயர்த்தி இருப்பை அதிகப்படுத்தத் தூண்டுகிறது. உற்பத்தி செய்வோரும் இப்படியே கடன் வாங்கி உற்பத்தியைப் பெருக்குகின்றனர். விலை ஏற்றம் இப்படிப் பணப் பெருக்கத்தைத் தூண்டுகிறது. மற்றொன்றும் உடந்தையாக இருக்கும். பணத்தொகை பெருகுவதன்றிப் பணப் புழக்க வேகமும் உயர்கிறது. விலைகள் ஏறி வாணிபம் மும்முரமாக இருக்கும்போது வணிகர்களும் உற்பத்தியாளரும் கடன் வாங்குவதன்றிக் கையில் மந்தக் காலத்தில் தம்மிடம் குவிந்த பணத்தையும் செலாவணியில் விடுகின்றனர். இத்தொகை அதிகமாக இருந்திருப்பின் பாங்கிடம் செல்லாமலே கூடத் துவக்கத்தில் நுகர்வோர் வருமானமும் செலவீடும் உயர்ந்திருக்கக்கூடும். ஆகவே பணத்தொகையுடன் செலாவணி வேகமும் வேலை செய்யும். பணப் புழக்க வேகமும் நிலைபேறற்று (unstable) வளரக்கூடியது.

இப்படியாக, எப்படியாவது துவக்கப்பட்டால், பின்னர்த் தானாகப் பெருக்கப் போக்கு வலுப்பெறும். பாங்குகள் மேற்கொண்டு தூண்டுதலாக யாதொன்றும் செய்ய வேண்டிய

தில்லை. உண்மையில் பாங்குகள், பெருக்கம் எல்லை தாண்டிப் போய் வீக்கத்தில் முடியாமலிருக்க எச்சரிக்கையாக இருக்க வேண்டி வரும். வட்டியை மிகவும் உயர்த்த வேண்டியிருக்கும். சிறு உயர்வு இந்நிலையில் போதாது.

செழிப்பு முடிவு, பண வசதி குறைக்கப்பட்டதும் தோன்றும். எழுச்சி விரைவு நிலையை அடைந்துவிட்டபோது அதைத் திடுக்கிடும்படி குலுக்கி நிறுத்தினால்தான் நிற்கும். ஆகவே எழுச்சி முடிவை நாடி எடுக்கப்படும் நடவடிக்கை அதை நிறுத்துவதோடு பின் சுருக்கச் செய்வதாகவும் இருக்கக்கூடும். சுருக்கலானது குவிந்து வளர்ந்து மந்தத்தை உண்டாக்கும் வரைக்கும் நிகழும். பண வசதியில் தடையில்லாதிருந்தால் எழுச்சி தொடர்ந்து வளர்ந்துகொண்டே போகும். இது வீக்கத்தில் முடியு மென்பது உண்மையாயினும், தடுக்க வேறொன்றும் இயற்கையில் இல்லை. பண வசதி அளவின்றிக் கிடைக்காமைக்கு மனிதனின் செயற்கைத் தடையே காரணம். பொன் திட்டம் அல்லது வேறு வகைத் தடை, சட்ட பூர்வப் பணத்தின் (legal tender) உற்பத்திக்கு இருக்கும் வரை பாங்குகள் ஒரு நிலையில் பணப் பெருக்கத்துக்கு முற்றுப் புள்ளி வைக்க வேண்டியே இருக்கும். பணத்தைச் சுருக்கவும் வேண்டியிருக்கும். சட்டபூர்வப் பணம், ரொக்கம் (cash), வாணிபப் பெருக்கக் காலத்தில் சில்லறை பேரத்துக்காக இழுத்துக் கொள்ளப்படும். கூலி உயர உயர மக்கள் ரொக்கத் தேவை உயரும். ஆனால் பணப் பெருக்கம் நிகழ்ந்து, விலை ஏறி, தொழில் முயல்வோர் செலவீடு உயர்ந்த பின்னரே ரொக்கத் தேவை உயருமாகையால், ரொக்க இழுப்பு, பணப் பெருக்கத்துக்குப் பின் தங்கியே தோன்றும். ஆனால் ஒரு நிலையில் மைய பாங்கு பணத்தின் மாற்று மதிப்பைக் காப்பாற்றும் பொறுப்புடன் பாங்குகளுக்குப் புது ரொக்கம் தர மறுக்கும். ஆகவே பாங்குகள் பண வசதியைக் குறைக்க முற்படும். இப்படிக் குறைக்கத் துவங்கிவிட்டாலும் மக்களின் ரொக்க இழுப்பு உடனே நிற்காது. இழுப்பு அதிகப்பட்டுக்கொண்டே இருக்கும். ஏனெனில் முன்னரே நிகழ்ந்த பணப் பெருக்கத்தின் விளைவு இப்போது தான் ரொக்க ஆட்சியை மும்முரப்படுத்தி இருக்கும். மைய பாங்கு உதவி நின்றுவிட்ட நிலையில் இப்படி ரொக்கம் ஏராளமாக வெளியேறுவதைக் கண்ட பாங்குகள் புதுக் கடனைக் குறைப்பதன்றிக் கொடுத்த கடனையும் வற்புறுத்தி வாங்க முயன்று மொத்தச் செலாவணியைக் குறைக்கும்.

இதனால் மந்தம் தொடங்குகிறது. மந்தமும் குவிந்து பெருகுந் தன்மையுடையது. விலை வீழ்ச்சியே மந்தத்தை வலுப் படுத்த வல்லது. வட்டி குறைவாயிருந்தும் மந்தம் வலிவிழக்காது. விலைகள் விழும்போது மேலும் விழுமென்று வணிகர்கள் அஞ்சுகின்றனர். இருப்பைக் குறைத்து, உற்பத்திக்கு ஆணையைக் குறைக்கின்றனர். இது நுகர்வோர் வருமானத்தையும் செல வீட்டையும் குறைக்கிறது. இருப்பைக் குறைத்தபோதிலும் விற்பனை விரைவில் குறைவதால் தேக்கம் வளர்கிறது. கடன் வாங்குவது குறைக்கப்படுகிறது. முன்னர் எழுச்சியில் வேலை செய்த காரணிகள் இப்போது மந்தத்துக்கு காரணிகளாக இருக்கின்றன.

மீட்சி (revival) எப்படி உண்டாகிறது? மந்தக் காலத்தில் கடன்கள் தீர்க்கப்பட்டதும்,பாங்குகளின் ரொக்கம் அதிகரிக்கும். ரொக்க வீதம் முன்னிலைக்கு மீள்வதன்றி, மிஞ்சவும் கூடும். இதற்குள் வட்டி வீதம் மிகவும் தாழ்ந்த நிலைக்கு இறங்கி இருக்கும். அவநம்பிக்கையும், விலை வீழ்ச்சியும், இவ்வட்டி வீழ்ச்சியைப் பயன்படுத்திக் கொள்ளாமலிருக்கச் செய்கின்றன. ஆனால் ஒரு சிலர் துணிந்து கடன் வாங்கலாம். மைய பாங்கு, ரொக்கத்தை வெளி அங்காடி முறையால் சமூகத்தில் புகுத் தலாம். பாங்குகளின் ரொக்க வீதம் உயரும். முதலில் புதுப் பணம் பழைய கடனைத் தீர்க்க ஆளப்படலாம். பின்னர் மைய பாங்கு இடைவிடாது பணத்தைப் பெருக்கி விடுமானால், நுகர்வோர் வருமானமும் செலவீடும் உயர்ந்து, பெருக்கத்துக்கு வித்தாகும். சழிவு வீத மாறுதலும் வெளி அங்காடி நட வடிக்கையும் இவ்வகையில் மீட்சியைத் துவக்க முடியும். என்பது ஹாட்ரியின் நம்பிக்கை. பொது மராமத்து முதலிய சிறப்பு முறைகள் அவசியமிரா என்றார். மந்தத்திலிருந்து மீட்சிக்கு உதவும் முக்கியக் காரணி பாங்குகளின் ரொக்க நிலையில் ஏற்படும் மாறுதலே என்றார். மந்தத்தில் ரொக்கம் மக்களிடமிருந்து வந்து குவியும். பாங்குள் சுருக்கும் நடவடிக்கை எடுத்தபின் சிறிது காலம் சென்றே அதன் விளைவு உச்ச நிலையை அடையும். ஆகவே பாங்குகள் பணச் சுருக்கம் போதுமானதென்று நிறுத்திய பின்பும் ரொக்கம் மக்களிட மிருந்து வந்துகொண்டே இருக்கும். பாங்குகளிடம் அமிதமாக ரொக்கம் குவியும். இதனால் மீண்டும் பண வசதியைப் பெருக்கப் பாங்குகள் தூண்டப்படும். புதுச் சுழலுக்கு இது வித்தாகும்.

ஹாட்ரியின் கொள்கைப்படி பொன் திட்டத்தின் கீழ்ச் சுழல் இன்றியமையாதது. ஏனெனில் அதன் கீழ் மக்களிட

மிருந்துரொக்கம் மீளல் பாங்குகள் பணப் பெருக்கம் துவங்கியும், காணப்படுகிறது. மக்கள் ரொக்கத்தைக் கவர்தல் பாங்குகள் சுருக்கம் துவங்கியும் காணப்படுகிறது. பணப் பெருக்கம் துவங்கிய உடனேயே ரொக்க வரவு நிற்குமாயின், வழக்கமான ரொக்க வீதத்தைக் கடக்கும் நிலையில் உடனே பணப் பெருக்கத்தை நிறுத்திவிடலாம்.

பணச் சுருக்கம் துவங்கிய உடனே ரொக்கம் வந்து சேருமாயின், வழக்கமான ரொக்க வீதம் வந்ததும், மேலும் சுருக்க நடவடிக்கை எடுக்காமல் இருக்கலாம். ஆகவே கால இடையீடு தான் பெருக்கம் அளவு கடந்து போகவும், சுருக்கம் அளவு கடந்து போகவும் செய்கிறது. இந்த அளவுகடந்த நிகழ்ச்சிகளே சுழலுக்குக் காரணமாகின்றன. தானே இயங்கும் பொன் திட்டம் (automatic gold standard) கைவிடப்பட்ட பின் வாணிபச் சுழல் முன்போன்ற கால ஒழுங்கோடு காணப்படவில்லை என்பதை ஹாட்ரி சான்றாகக் குறிப்பிட்டுக் காட்டுகிறார்.

இந்தக் கொள்கையின் வழியே அவர் தரும் படிப்பினை என்ன வெனில் மைய பாங்கும் மற்றப் பாங்குகளும் ரிசர்வை முக்கியமாகக் கருதக் கூடாது; பண ஓட்டத்தையே, வருமானச் சக்தியையே கவனிக்க வேண்டும். பாங்குப் பணியின் குறிக்கோள், நுகர்வோர் செலவீடு நிலைபேறுடைய தாக (static) இருக்கச் செய்ய வேண்டும் என்பதே. நிலை பேறுடையதாக இருக்கச் செய்வதாவது. (மக்கள் தொகையில் மாறுதல், முதல் தொகை மாறுதல் முதலியவற்றால்) சாதனக் கிடைப்பு மாறுவதை அனுசரித்து அவைகளுக்கேற்பப் பணத் தொகையை மாற்றிச் சாதன விலைகளை நிலைபெறச் செய்வதாகும்.

## மிகைப் பண முதலீட்டுக் கோட்பாடு
## (Monetary Over-investment Theory)

ஹாட்ரியின் தூய பண வழி விளக்கம் சுழலின்போது ஏன் முதற் பொருளுற்பத்தி அமிதமாக வளர்ச்சியுறுகிறது என்பதை விளக்கவில்லை. இக்குறையை நிவர்த்தி செய்வது மிகைப் பணமுதலீட்டுக் கோட்பாடு. இதன் சிறப்பான ஆசிரியர் ஹேயக் (Hayek) என்பவர். ஹாட்ரியைப் போன்றே பண அளிப்பு நெகிழ்ச்சியை அனுமானித்துக் கொண்டு, அதன் விளைவாய் எப்படி உற்பத்தி அமைப்பில் ஒரு திருப்பம்

ஏற்படுகிறது என்பதை விளக்கி இந்தத் திருப்பத்துக்கும் சுழலுக்கும் உள்ள காரண காரியத் தொடர்பை இவர் விளக்குகிருர்.

ஒரு குறிப்பிட்ட நேரத்தில் சமூகத்தின் சாதனங்கள் உற்பத்தியின் பல படிகளில் (stages) ஆளப்படுகின்றன. சில படிகள் நுகர்ச்சிப் படிக்கு நெடுந் தூரத்தில் உயர் நிலையில் இருப்பின், இவைகளை மேனிலைப் படிகள் (higher stages) எனலாம். இப்படிகளே உற்பத்திச் சாதனங்கள் உருவாகும் படிகள். நுகர்ச்சிக்கு அருகிலுள்ளவைகளைக் கீழ்நிலைப்படிகள் (lower stages) எனலாம். எல்லாப் படிகளையும் சேர்த்து உற்பத்திக் கட்டமைப்பு (structure of production) எனலாம். இவ்வமைப்பில் ஒரு நியதி உண்டு. நியதிப்படுத்துவன மக்களின் செலவும் சேமிப்பும். மக்கள் வருமானத்தைச் செலவு செய்யலாம் அல்லது சேமிக்கலாம். மக்கள் சேமிப்பது, அந்த அளவுக்கு எதிர்காலத் தேவையை நோக்கி மேற்படிகளில் முதலீடு செய்ய வசதி செய்வதாகும். மக்கள் செலவு செய்வது, கீழ்ப்படிகளில் நுகர்ச்சிப் பொருளுற்பத்தியில் முதலீடு செய்ய வழி செய்வதாகும். மக்கள் இப்படி வருமானத்தை இரு படிகளிலும் பங்கீடு செய்வதற்கேற்பப் பொருளாதாரத்தின் உற்பத்திக் கட்டமைப்பும் முதற் பொருள்களையும் நுகர்ச்சிப் பொருள்களையும் உண்டாக்க வேண்டும். இப்படிப்பட்ட அமைப்பு நிலைபெற வழி செய்வது வட்டி வீதம். எப்படி என்று பார்ப்போம். வருமானத்திலிருந்து செலவு செய்யப்படும் பகுதி நுகர்ச்சிப் பொருள்களை வாங்கச் செல்கிறது. சேமித்த பகுதி நேரடியே முதற் பொருள்களில் செல்வதில்லை. சேமிப்புகள் பாங்குகளுக்கும், இன்சூரன்சுக் கம்பெனிகளுக்கும், பங்கு வணிகர்களுக்கும், பிற நிதி நிலையங்களுக்கும் (financial institutions) செல்கின்றன. இவை வழியே தொழில் முயல்வோர்களுக்குச் சென்று முதற்பொருளாக்கத்தில் ஆளப்படுகின்றன. இது மக்கள் வருமானப் பங்கீட்டுக்குப் பொருத்தமான விளைவு. வட்டியின் வேலை பணச் சேமிப்பையும் முதலீட்டையும் ஒன்றுக்கொன்று பொருந்தச் செய்வது. அதன் செயலால் சேமிப்புத் தேவையும் அளிப்பும் சமநிலை அடைகின்றன. ஆகவே இதை இயற்கையான வட்டி வீதம் (natural rate of interest) அல்லது சமநிலை வட்டி வீதம் (equilibrium rate of interest) எனலாம். ஏனெனில் இதை விட அதிகமான வட்டியிலும் குறைவான வட்டியிலும் தேவை-அளிப்புச் சமப்பாடு இராது வட்டி வீதம் இப்படி இயற்கையான வட்டி வீதமாயின், சேமிப்பு உயர்ந்தால் (செலவு குறைக்கப்பட்டு) அதன் விளைவாக, நுகர் பொருள் உற்பத்தியை நோக்க,

முதற் பொருள் உற்பத்தி அதிகப்பட வேண்டும். சேமிப்பு உயர்வு வட்டியைக் குறைத்துச் சாதனங்களை முதற்பொருளில் ஈடுபடுத்தச் செய்யும். சேமிப்புக் குறைந்தால் வட்டி ஏறிச் சாதனங்களை முதற் பொருளில் ஈடுபடுத்துவதை விட, நுகர் பொருளில் அதிகம் ஈடுபடுத்தச் செய்யும். சேமிப்பு - செலவு களுக்கிடையே விகிதம் மாறுவது அதற்கேற்ப உற்பத்திக் கட்டமைப்பில் மாறுதலை உண்டாக்கும்.

இப்படி மேற்படிகளுக்கும் கீழ்ப்படிகளுக்கும் பொருத்தம் இருக்கும்போது உற்பத்திக் கட்டமைப்பில் செங்குத்துச் சமநிலை (vertical equilibrium) இருப்பதாகக் கூறலாம். இப்படிப்பட்ட பொருத்தம் இல்லாதபோது செங்குத்துச் சமநிலைக் கேடு (vertical disequilibrium) அல்லது பொருத்தக்கேடு (maladjustment) இருப்பதாகக் கூறலாம். பொருளாதாரத்தில் சாதனங்கள் எப்போதும் இடம் பெயர்ந்துகொண்டே இருக்கும் என்பது வெளிப்படை. ஆயினும் இப்பெயர்ச்சியால் உற்பத்திக் கட்டமைப்பில் யாதொரு பொருத்தக் கேடும் உண்டாவதில்லை யாயினும் மேற்கண்ட செங்குத்துக் கட்டமைப்பில் பொருத்தக் கேடுண்டாகும் என்பது இக்கோட்பாட்டின் அடிப்படை. இதற்குக் காரணம் பாங்குத் திட்டத்தின் நடத்தையாகும். பாங்குகள் மக்கள் சேமித்துத் தந்ததை மட்டும் முதலீட்டுக்குத் தருவதில்லை; அதோடு தாங்களே உற்பத்தி செய்யும் பணத்தையும் தருகிறார்கள். சேமிப்புத் தரகர்களாக மட்டும் இருப்பார்களே யாயின் சேமிப்புக்கும் முதற் பொருள் உற்பத்திக்கும் பொருத்தம் கெடாது நிலைபெற்று வரும். முதலீட்டு மிகை ஏற்படாது. ஆனால் பாங்குகள் தம் பாங்குப் பணத்தைப் பெருக்கி வட்டி வீதத்தைக் குறைத்து மிகை முதலீட்டை உண்டாக்கலாம். இப்படி இவர்கள் பணம் தரும்போது இவர்கள் வசூலிப்பதை அங்காடி வீதம் (market rate) அல்லது பண வீதம் (money rate) எனலாம். இதுவும் சேமிப்பு, தேவைகளால் நிர்ணயிக்கப்படுமாயினும் இயற்கையான வட்டிக்கு வேறுபட்டது. அங்காடி வீதம் இயற்கையான (சமநிலை) வீதத்துக்குக் குறைவாயிருப்பின் தேவை சேமிப்பை மிஞ்சும். பாங்குப் பணம் பெருகிப் பூர்த்தி செய்யும். தொழில் முயல்வோர் ஏராளமாகக் கடன் வாங்கி முதலீடு செய்ய முற்படுவர். அங்காடி வீதம் சமநிலை வீதத்தைவிட ஏற்றமாயிருப்பின் கடன் தேவை குறையும். சேமிப்பில் ஒரு பகுதிக்குத் தேவை இல்லாது போய்விடும். பாங்குப் பணம் திரும்பி, பண வடிப்பு (deflation) நிகழும். இந்தவாறு இயற்கை வீத, அங்காடி வீதத் தொடர்பின் விளைவை விளக்கியவர் விக்சல் (Wicksell) என்ற ஸ்வீடன் தேசத்துப்

பொருளாதார நிபுணர். இத்தொடர்பை ஹேயக் ஆண்டு தம் கோட்பாட்டை அமைத்துள்ளார்.

இவரது கோட்பாட்டின்படி எழுச்சி (upswing) எப்படித் துவங்குகிறது? இயற்கையான வட்டியும் அங்காடி வட்டியும் வேறுபடுவதே காரணம். கடன் அளிப்புச் சேமிப்பிலிருந்து அல்லது பாங்கு உற்பத்தி செய்த பணத்திலிருந்து வரும். தேவை, வட்டியைப் பொறுத்திருக்கும். குறைந்த வட்டியில் அதிகம் விரும்பப்படும். ஒரு நிலையில் சேமிப்பும் தேவையும் நிர்ணயிக்கும் இயற்கை வீதத்தைவிட அங்காடி வீதம் குறைவாக உள்ளதாகக் கொள்வோம். அதாவது சேமிப்பு செய்த அளிப்பை விடத் தேவை அதிகமாகி, எச்சம் பாங்குப் பணத்தைக் கொண்டு பூர்த்தி செய்யப்படுவதாக வைத்துக் கொள்வோம். இதனுல் கடன் பெருக்கம் ஏற்படுகிறது. விலைகள் ஏறும். இதனுல் இலாபம் அதிகப்படும். ஆகவே கடன் தேவை ஷெடியூல் உயரும். ஆனுல் சேமிப்பு அதிகப்படாது. ஆகவே இயற்கை வீதம் ஏறும். இதனுல் இரண்டுவித வட்டி வீதங்களுக்கும் இருந்த வேறுபாடு அதிகப்படும். பாங்கு பழைய வீதத்தை நிலைநிறுத்த முயன்முல் மீண்டும் பணப் பெருக்கம் செய்ய வேண்டி வரும். இதனுல் விலை மேலும் ஏறும். இலாபம் அதிகப்படும். நச்சுவட்ட வீக்கம் (vicious circle of inflation) துவங்கும் இதுவரை இக்கோட்பாட்டின் போக்கு ஹாட்ரியின் பண வழி விளக்கத்திற்கு வேறுபட்டதாக இல்லை. இரண்டுவித வட்டிகளை வேறுபடுத்தியதே புதியது.

ஆனுல் இது சுழல் விளக்கத்தின் ஒரு பகுதியே ஒழிய முழுமையுமன்று. மிகை முதலீட்டுக் கோட்பாட்டின்படி இப் பணத்துறை நிகழ்ச்சி உற்பத்திக் கட்டமைப்பில் ஒரு திரிபை (distortion) உண்டாக்குகிறது. திரிபாவது சாதன ஆட்சியில் ஒரு பகிர்வுக் கேடு (mal-distribution) உண்டாவது. இது தான் இக்கோட்பாட்டின் உண்மைப் பொருள் பக்கம் (real aspect). வட்டியின் பணி பணத்தேவையைப் நிர்ணயிப்பது மட்டுமன்று. உற்பத்தியின் பல பகுதிகளில் சாதனங்களை ஒதுக்கீடு (allocation) செய்ய வழி காட்டுவதுங்கூட. உற்பத்திக் கட்டமைப்பில் செங்குத்துக் கட்டமைப்பு வட்டி வீதத்தால் நிர்ணயிருக்கப்படுகிறது. பொருளாதார முன்னேற்றம் என்பது இந்தச் செங்குத்துக் கட்டமைப்பை நீட்டும் போக்கேயாகும். உற்பத்தியானது சுற்று முறை (round about) அல்லது முதலாளித்துவ முறையாகி விட்டது. ஆகவே ஓர் அலகு நுகர் பொருளுற்பத்திக்குப் பல முதற் பொருள் அலகுகள் வேண்டி

யிருக்கின்றன. நுகர்ச்சிப் பொருளுற்பத்தி ஒரு சதவீதம் அதிகமாக வேண்டின், பல சதவீதத்தில் முதற் பொருளுற்பத்தி வேண்டியிருக்கிறது. இந்த உற்பத்தி நீட்சிக்கு எல்லை வகுப்பது சேமிப்புவீதம் (rate of saving). சேமிப்புயர்ந்து முதல் கிடைத்து வட்டி குறையுமானால் உற்பத்தி நீட்சி செய்ய வசதி உண்டாகிறது. எப்படி எனில் சேமிப்புயரும்போது நுகர் பொருள் தேவை குறைவதன் மூலம் சாதனங்கள் விடுவிக்கப்படுகின்றன. சேமிப்பு முதல் அங்காடிக்கு (capital market) வருமானால் வட்டி விழும். புது முதலீடு தூண்டப்படும். புது முதல் கிடைக்குமானால் முதலீட்டு வாய்ப்புக்குக் குறைவே இல்லை. புதுப் புது உற்பத்தி முறைகள் காத்துக்கொண்டிருக்கின்றன. இவைகளில் எவற்றை முதலில் எடுத்துக்கொள்வது என்பது வட்டி வீதத்தைப் பொறுத்தது. வட்டி குறைவானால் நெடிய உற்பத்தி முறைகளில் முதலீடு செய்வது ஆதாயமாகும். வட்டி நிலையே எந்தச் சுற்று முறையை எடுத்துக்கொள்ளலாம் என்று நிர்ணயிக்கும்.

சேமிப்புயர்ந்து வட்டி இறங்குமானால் தேவை அதிகப்படும். இதுவரை இலாபகரமாயில்லாத முதலீடுகள் இப்போது சாத்தியமாகும். சாதனங்கள் கீழ்ப்படிகளிலிருந்து மேல்படிகளுக்கு நகரும். உற்பத்தி முறை நீளும். முடிவில் ஒவ்வொரு உள்ளீட்டாலும் (input) பெறப்படும் நுகர் பொருள் அலகுகள் அதிகப்படும். பாங்குப் பணம் பெருகி வட்டி இறங்கினாலும் இதே விளைவு தான். வேலை நிறைவு நிலை (full employment) இல்லையானால் சாதனங்கள் நுகர் பொருளை உற்பத்தி செய்யும் துறைகளிலிருந்து கவரப்படும். இவை சுருங்கி, மேற்படிகள் விரியும்.

பாங்குப் பணத்தைக் கொண்டு சாதனங்களுக்குப் போட்டியிடும்போதும் விளைவு இப்படித்தானிருக்கும். சாதன விலை ஏறிக் கீழ்ப்படிகள் தோற்றுச் சாதனங்களை இழக்கும். இப்படி மேற்படிகள் வளரவேண்டின், கீழ்ப்படிகளின் உற்பத்தியான நுகர் பொருள்களுக்குத் தேவை அதிகப்படக்கூடாது. அதிகப்படாமலிருக்கக் காரணமுண்டு. பணப் பெருக்கத்தின் விளைவாய் உயரும் வருமானம் கைக்கு வரக்காலம் பிடிக்கும். சில வருமானங்கள், ஒப்பந்தத்துக் குட்பட்டிருப்பவை, மாறக் காலம் செல்லும். இவை மாறுமுன் பணம் சேமிப்பு நாட்டமதிகமுடையவர் கைகளில் முடங்கலாம். ஆகவே நுகர்ச்சியில் செலவு குறையலாம். ஆனால் சிறிது வலிந்த சேமிப்பு (forced saving) இருக்கும். இதன் விளைவும் நுகர்ச்சியைக் குறைத்துச் சாதனங்களைமேற்படிகளுக்கு இழுத்துச் செல்வதே. வலிந்த சேமிப்பாவது அதிகப்படியாக

முதலீட்டுக்குத் தேவையான உண்மைப் பொருள் முதலை (real capital), விலை ஏற்றத்தின் மூலம் மக்களிடமிருந்து பறிப்பது. பாங்கில் கடன் வாங்கினவர்களின் வாங்குத் திறன் உயர்ந்தால், அவர்கள் சாதனங்களுக்கு அதிக விலை கொடுத்து, நுகர் பொருள் உற்பத்தித் துறையிலிருந்து சாதனங்களைக் கவர்கின்றனர். ஆகவே நுகர் பொருள் உற்பத்தி குறைகிறது. அந்த அளவுக்குச் சமூகம் நுகர்ச்சியைக் குறைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. இது விருப்பமில்லாத சேமிப்பு. ஆகவே வலிந்த சேமிப்பு. இதன் உண்மைக்கு நுகர் பொருள்களின் விலை ஏற்றமே சான்றாகும்.

இந்தப் பணப் பெருக்கமும் முதலீடும் ஏன் முடிவுற வேண்டும்? நெருக்கடி (crisis) தோன்றக் காரணம் என்ன? மக்கள் தங்களுடைய செலவு நாட்டத்தை (propensity to spend) மாற்றிக்கொள்ளவில்லை. விலை ஏற்றத்தாலேதான் நுகரமுடியாதிருக்கின்றனர். வருமானம் இடங் கொடுத்தவுடன் பழையபடி செலவு செய்ய முற்படுவர். தொழில் முயல்வோர் முதலிடுவதன் மூலம் இவர்களுக்கு வருமானங் கிடைத்ததும் நுகர்ச்சியைப் பழைய அளவுக்குப் பெருக்க முயல்கின்றனர். இதனால் நுகர்பொருள்களின் விலைகள் ஏறும். ஏறுவதற்குக் காரணம் செலாவணி பெருக்கம் ஒருபுறம், நுகர் பொருள் கிடைப்பருமை மற்றொருபுறம். நுகர்பொருள் விலை ஏறுவதனால் அவைகளின் உற்பத்தியில் ஈடுபட்டவர்களின் இலாபம் அதிகப்படுவதுண்டு. சாதனங்களுக்கு அதிக விலை கொடுத்து வாங்க முற்படுவார்கள். மேற்படியிலுள்ள உற்பத்தியாளர் தங்கள் துறையில் அவ்வளவு ஆதாயம் இருப்பதாகக் காணமாட்டார்கள். சிலர் நஷ்டத்தையும் காணலாம். ஆகவே சாதனங்கள் மேற்படிகளிலிருந்து கீழ்ப்படிகளுக்குக் கவரப்படும். இதனால் மேற்படிகளில் அநேக திட்டங்கள் கைவிடப்படும் அல்லது அரைகுறையாக நிற்கும். கீழ்ப்படிகளில் தேவை வளர்கிறதேயொழிய மேல் படிகளில் வளரவில்லை. இதனாலே தோன்றுவன நஷ்டமும் உற்பத்தி நிறுத்தமும். இப்படிப் பூரிப்பு முடிவுக்கு வருகிறது. ஆனால் ஓர் ஐயம் எழலாம். நுகர் பொருள் உற்பத்தி இலாபகரமாக உள்ள இங்கிலையில் மேனிலை உற்பத்திகளும் இதன் காரணமாக இலாபகரமாக ஆகிவிடாதா. ஆகா. (1) பூரிப்பில் சாதனங்கள் எல்லாம் ஆளப்பட்டு வேலை நிறைவு உள்ளமையால் மேற்படிகள் வளர வழியில்லை. (2) முதற்பொருள் தேவையை நோக்க நுகர் பொருள் தேவை உயர்கிறது. நுகர் பொருளுற்பத்தியில் இலாபம் உயர்வதால் அவைகளுக்குரிய முதற் பொருள்களை உண்டாக்க அவைகளில்

ஈடுபட்டோர் துடிப்பர். அவர்கள் கடன் வாங்கி உறபத்திக் கட்டமைப்பை நீட்ட முயல்வர். ஆனால் சேமிப்பு உயராததனால் வட்டி ஏறும். மேல் நிலையில் தான் வட்டிச் செலவு முக்கியமானது. ஆகவே அவை பாதிக்கப்படுகின்றன. இப்படியாக நெருக்கடிக்குக் காரணம் முதல் கிடைப் பருமை (scarcity of capital) யாகும். கிடைப்பருமைக்குக் காரணம் சேமிப்புக் குறைவு (under-saving) அல்லது மிகை நுகர்ச்சி (over-consumption). மக்கள் நுகர் பொருளில் செலவு செய்வதைக் குறைத்து, சேமிப்பார்களே யாயின் அது மேல் படிகளில் முதல் பொருள் ஆக்கத்துக்குப் பயன்படும். உற்பத்திக் கட்டமைப்பில் முறிவு ஏற்படாது. மக்கள் நடத்தை உள்ளபடியிருக்க, முறிவைத் தவிர்க்க வழியில்லை. இந்த மிகை முதலீட்டுக் கோட்பாட்டினர் இந் நிலையைப் பாங்குப் பணத்தைக் கொண்டு சமாளிக்க முடியா தென்கின்றனர். வலிந்த சேமிப்பு மூலம் நிலையான உற்பத்திக் கட்டமைப்பு விரிவை ஏற்படுத்த முடியாதென்பர். ஏனெனில் பாங்குப் பணத்தைப் பெருக்கி மேல்படிகளுக்குச் சாதனத்தைப் பெற முயன்றால் இதற்கு முடிவே இருக்காது. தவிர, பொன் திட்டத்தின் கீழ்ப் பாங்குகளின் பணப் பெருக்கத்துக்கும் அளவுண்டு. ஒரு நிலையில் வட்டி ஏற்றப்படவேண்டி வரும். தாள் பணத் திட்டத்திலும் ஓர் எல்லையுண்டு. ஆகவே முறிவு தவிர்க்க முடியாதது. முறிவு மூலம்தான் சேமிப்புக்கு ஏற்ப உற்பத்திக் கட்டமைப்பு சீர்திருந்த முடியும். இந்த விளக்கத்தில் முக்கியமான ஓர் அம்சம் புதுச் சுற்று முறைகள் முடிவு பெறாமல் நிற்பதாகும். முடிந்து விட்டால் நுகர் பொருள் தேவைகளைப் பூர்த்தி செய்ய முடியுமல்லவா? ஏன் சில முடிவு பெறாமல் இருக்க வேண்டும்? உற்பத்தியின் பகுப்பின்மை (indivisiblity) என்பர்.

மந்த நிலையைப் பற்றி இக்கோட்பாடு கூறுவதென்ன? மந்தம் என்பது சேமிப்புக்கேற்ப உற்பத்திக் கட்டமைப்புச் சீர்திருந்தும் நிலையாகும். பூரிப்புக் காலத்தில் நீட்சி பெற்ற கட்டமைப்புச் சுருங்க வேண்டும், அல்லது மக்கள் நுகர்ச்சிச் செலவீடு குறையவேண்டும். செலவீடு குறைய வேண்டின் கூலி முதலிய வருமானங்கள் குறையவேண்டும். இது மிகவும் துன்பமான வழி. தற்காலச் சமூகங்களில் கூலி நெகிழ்வு இல்லையாதலால் இது எளிதில் முடியாது. கட்டமைப்பைச் சுருக்குவதற்கு நெடுங்காலம் பிடிக்கும். மேனிலைகளிலிருந்து சாதனங்கள் இலாபகரமான கீழ் நிலைகளுக்குப் பெயர வேண்டும். இது மெதுவாகத்தான் நடக்கும். உற்பத்தி முறைப் போக்கில் பண்டங்கள் வினைமுற்றிய நிலைக்கு வரவர மேனிலைகளில்

சாதனங்கள் விடுதலை பெறும். ஆனால் கட்டமைப்புச் சுருங்குவதால் நெடிய மேனிலைகளிலிருந்து விடுதலை பெறும். ஆட்கள்கீழ் நிலைகளின் தேவைக்கு எச்சமாக இருப்பர். ஆகவே வேலையின்மை வளர ஆரம்பிக்கும்.

இந்த விதமாக அமைப்பு முறையில் மந்தத்தை விளக்கினால், குவிந்து சருக்குவதை விளக்க முடியாது. ஆகவே இக் கோட்பாட்டினர் முடிவில் பணவடிப்பும் (deflation) அவசியமாதலை ஒப்புக்கொண்டனர். இப்படி வடிப்பு நிகழ்வதாகக் கொண்டாலன்றி மந்தம் எல்லாப் படிகளிலும் எல்லாத் துறைகளிலும் காணப்படுவதற்குக் காரணம் கூற முடியாது. ஆகவே இரண்டாம் நிலை வடிப்பு (secondary defiation) என்ற ஓர் அம்சத்தை இவர்கள் ஏற்கின்றனர். அதாவது, வடிப்புத் தனியாகத் தோன்றுவதில்லை; உற்பத்திக் கட்டமைப்பில் ஏற்படும் பொருத்தக் கேட்டினால் தூண்டப்படுகிறது. இவ்வடிப்பு ஒரு தூண்டப்பட்ட வடிப்பு.

எப்படி வடிப்பு மந்தத்தத்தை நீட்டிக்கிறதென்பதறகுப் பல விளக்கங்களுள்ளன. சிறந்த ஒன்று ஸ்ட்ரைகல் (Strigel) தந்தது. அது வருமாறு: பூரிப்பு முறிந்த நிலையில் பாங்குகள் கடன் கொடுப்பதை நிறுத்துவதோடு தம் ரொக்கத் தன்மையை உயர்த்த வேண்டிக் கடனை மீட்க முயலும். தொழில் நிறுவனங்களும் ரொக்க இருப்பை வலுப்படுத்த முயலும். முதல் புதுக்க நிதி (amortisation fund) பணத்தை முடக்கி வைக்கும். இப்படி எல்லாரும் ரொக்கத் தன்மையை நாடுவது பணமுடக்கில் (hoarding) முடியும். விலைகள் விழும். இது முதலீட்டைக் குறைக்கும். வட்டி குறைவாய் இருக்கும். ஆயினும் வட்டி வீதத்துக்குக் கீழ் இலாபவீதம் இறங்கும். மந்தத்தில் வட்டி வீதம் மிகவும் குறைவாய் இருப்பதற்குக் காரணம் பணம், முதலீட்டு அங்காடிக்குப் போகாமல், ரொக்கமாக வைக்கப் படுவதே. –

மீட்சி (recovcry) எப்படி உண்டாகிறது? பொருளாதாரம் அவதிப்பட்டுத் தானாகவே சமநிலை அடையும். சமநிலையில் பாங்குகள் பணப்பெருக்கத் தவறு செய்யாதிருப்பின் சம நிலைக்கு கேடொன்றும் உண்டாகாது. சமநிலைக்கு வேண்டிய அளவுதான் பணம் புழங்கவேண்டும். இது எவ்வளவென்று நிர்ணயிப்பது கடினம். வாணிபத்துறையில் புழக்க வேகத்தையும் (V) தொழிலமைப்புப் படிகளில் பெருக்கத்தையும் அல்லது சுருக்கத்தையும் பொறுத்தது. இதை நோக்கிப் பணத்தொகை

நிர்வகிக்கப்பட வேண்டும். மந்தத்தின்போது எங்கும் அவ நம்பிக்கை சூழ்ந்துள்ள நிலையில் பண வட்டி வீதம் இயற்கை வட்டிக்குமேல் நிற்கும். விலைகள் வீழ்ச்சி நின்றதும் நம்பிக்கை பிறக்கிறது. நடப்புப் பண வட்டி வீதம் இருந்த நிலையில் இருந்தாலும் சமநிலை வட்டி வீதம் இதற்கு மிஞ்சிவிடும். ஏனெனில் கடன் தேவைக்கோடு மேலெழும். ஆனால் பாங்குகள் அப்போது ரொக்கத் தன்மை மிகுந்திருக்குமாதலால் தேவையைப் பூர்த்தி செய்ய இசையும். ஆகவே முடங்கி இருந்த ரொக்கம் முதல் அங்காடியில் புகும். இதனால் எழுச்சி (upturn) தோன்றுகிறது. புற நிகழ்ச்சியான, கண்டுபிடிப்புப் போன்ற எதுவும் தூண்ட அவசியமில்லை.

## மதிப்பீடு

இக்கோட்பாடு மிகவும் சாதுர்யமான ஒன்று. ஆனால் அநேக எதிர்ப்புகள் உள்ளன. வேலை நிறைவு எடுகோள் சரியன்று என்பதும், வட்டி வீதம் அவ்வளவு முக்கியமன்று என்பதும் எதிர்ப்போர் வாதம். வேலை நிறைவு எடுகோளை ஆண்டால்தான் மேனிலைப்படிகள் நீளும்போது கீழ்நிலைகள் பாதிக்கப்படும் என்று கூறலாம். ஆகவே ஆளாத சாதனங்களிருப்பின் சுழலுக்கு இடமில்லையே என்ற ஐயம் உண்டாகலாம். உண்மையில் நாம் பூரிப்பிலும் மந்தத்திலும் முதற் பொருள், நுகர்பொருள் இரண்டிலும் ஒரே திசை மாறுதலைக் காண வில்லை. ஏன்? முதற்பொருளுக்குத் தேவை நுகர்பொருள் தேவையிலிருந்து தோன்றுவது தானே? இதற்கு விடை ஷெ எடுகோள். இப்படி இன்றி ஆளாத சாதனங்கள் இருந்தால் இருதுறைகளிலும் உற்பத்தி பெருகலாம். அப்போது வட்டி குறைந்ததும் மேனிலை நீட்சி தடையின்றி நிகழலாம். நுகர் பொருள் துறையிலிருந்து சாதனங்களைக் கவரவேண்டியதில்லை. புது வருமானம் நுகர் பொருள் விலைகளை ஏற்ற நியாயமில்லை. நுகர் பொருளுற்பத்திக்கு வேண்டிய சாதனங்கள் கிடைக்கும். ஆக இரு துறைகளும் ஒரு சேர வளரலாம். ஆனால் எல்லாச் சாதனங்களும் ஆளப்படும் ஒரு நிலைவருமல்லவா? அப்போதும் பணம் பெருகுமானால் கோட்பாடு கூறிய விளைவுகள் தோன்றும்.

அடுத்தபடி, வட்டி வீதத்துக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருக்கிறது. எதிராளிகள் வட்டி அவ்வளவு நெகிழ்வுடையதன்று என்றும், தொழில் முடிவுகள் அப்படி வட்டியைப் பொறுத்தன அல்ல என்றும், குறுங்காலத்தில் வட்டியைவிடப் புத்தாக்கம் முதலியன முதலீட்டை நிர்ண

யிப்பன என்றும் கூறுகின்றனர். இவர்களுக்கு மறுப்பாக, ஹேயக், வட்டி மாறவில்லையாயினும்கூட உற்பத்திக் கட்டமைப்பு மாறுதலடையும் என்றும், இது இலாபவீத மாறுதலால் ஏற்படும் என்றும் கூறுகிறார். பூரிப்பில் நுகர்பொருள் தேவையில் ஏற்படும் உயர்வு, விகிதாசாரத்திற்குமேல் முதலீட்டுப் பொருள் உற்பத்தித் தேவையை ஊக்குகிறது. இத் துறையின் கூலியாட்கள் நுகர்ச்சியை அதிகப்படுத்துகின்றனர். அதனால் நுகர்பொருள் துறையில் வேலைநிறைவு நிலை உண்டாகும். ஆனால் அளிப்பு நெகிழ்ச்சி இராது. ஆகவே விலை ஏறும். இதற்கேற்பக் கூலி உடனே ஏறமுடியாமையினால் உண்மைப் பொருள் கூலி (real wages) விழும். இதனால் நுகர்பொருள் துறையில் இலாபம் உயரும். இது முதற் பொருள் ஆக்கத்தைத் தூண்டுமென்று நினைக்கலாம். ஆனால் உண்மைப் பொருள் கூலி விழுவதனால் இது தடைப்படுகிறது. எப்படியெனில் உண்மைப்பொருள் கூலி இறக்கமானது, குறைந்த முதலாட்சி முறைகளை ஆள்வதை இலாபகரமானதாகச் செய்கிறது. பொறிகளை ஆள்வதைவிட ஆட்களை ஆள்வது இலாபகரமாக இருக்கிறது. உறுதி மிக்க பொறிகளை ஆள்வதைவிட மட்டரகப் பொறிகளை ஆளத் தோன்றும். ஆகவே நுகர்பொருள் தொழில்களுக்கு வேண்டிய சிறப்பான பொறிகளுக்குத் தேவை சிறிது உயருமானாலும் பொதுவாக முதலீட்டுப் பொருள்களுக்குத் தேவை குறையும். இப்போக்கு, விலைகளும் இலாபமும் ஏறிக் கொண்டிருக்கும் வரை காணப்படும். முடிவு விளைவு, நெடிய முதலாட்சி முறை (capitalistic method) குறைவது. ஆகவே பெருக்கத்தில் காணும் நுகர்பொருள் தேவைப் பெருக்கம் முடிவில் முதல் பொருள் தேவையில் சுருக்கத்தை உண்டாக்குகிறது. இது பின்னர் எல்லாத் துறைகளிலும் கேடு விளைவிக்கிறது. இப்படி வரும் மந்தம் மீண்டும் முதலீட்டுத் தேவை மீளும் வரையில் இருக்கும். மந்தத்தில் விலை விழுமளவுக்குப் பணக் கூலி விழாததனால், உண்மைப் பொருள் கூலி உயர்வதால் இலாபம் குன்றுவதால் குறுகிய முதலாட்சி முறைகள் ஆதாயமாக இரா. நெடிய முறைகள், ஆள் குறைக்கவல்ல பொறியாட்சி முறைகள், ஆதாயமாக இருக்கும். ஆகவே மேனிலை உற்பத்திப் படிகளுக்குத் தேவை உயரும். இது வருமானத்தைப் பெருக்கி, தேவையைப் பெருக்கும். இது மீண்டும் முதற்பொருள் உற்பத்தியின் விரிவைத் தூண்டும். இப்படியாக நெடிய முதலாட்சி முறை மீட்கப்படுகிறது. மீண்டும் நுகர்பொருள் தேவை தடைசெய்யும் வரை இது நிகழும்.

## பணச் சார்பற்ற மிகை முதலீட்டுக் கோட்பாடுகள்
(Non-monetary over-investment theories)

இவ்வகைக் கோட்பாடுகளில் பணத்துறை மாறுதல்கள் இடம் பெறவில்லை. பணச்சார்பற்ற மாறுதல்களால் சுழல் விளக்கப்படுகிறது. இவ்வகையில் தரப்படும் விளக்கங்களில் சிலவற்றைக் கூறுவோம் :

(1) ஷும்பீட்டரது புதுமை புகுத்தல் கோட்பாடு.

(2) கேசலுடைய மிகை முதலீட்டுக் கோட்பாடு.

(3) ஸ்பியதாஃப் உடைய கோட்பாடு.

(4) முடுக்கிக் கோட்பாடு.

**புதுமை புகுத்தல் கோட்பாடு**

இந்தக் கோட்பாட்டில் முதல் இரண்டும் அடங்குகின்றன.

(1) ஷும்பீட்டரது புதுமை புதுக்கல் கோட்பாடு (Theory of Schumpeter's innovation).

(2) கேசலுடைய மிகை முதலீட்டுக் கோட்பாடு (Cassel's over-investment theory).

இரண்டும் முதலாளித்துவத்தின் இயல்பிலிருந்து சுழல் தோன்றுகிறது என்பவை. முதலாளித்துவம் அசல நிலையில் இருக்க முடியாது. மூறை மாற்றத்தால், புதுமை புகுத்தலால் மாறிக்கொண்டே இருக்கும் என்பது அடிப்படைத் தத்துவம்.

**ஷும்பீட்டரது புதுமை புதுக்கல் கோட்பாடு**

உற்பத்தி முறையிலும் பணத்தின் மதிப்பிலும் மாறுதல் ஒன்றுமில்லாத பொருளாதாரத்தில் சுழல்கள் தோன்ற, நிலைக்கா. இப்பொருளாதாரம் அசல நிலையில் (static state) இருக்கும். போர், மாசூல் பஞ்சம் முதலிய புற நிகழ்ச்சிகள் அடிக்கடி கலக்கிய போதிலும் இவை சுழலின் தன்மையை உண்டாக்க வல்லன அல்ல. வளர்ச்சிக் காரணிகளான (growth factors) மக்கள் பெருக்கம், முதலாக்கம் போன்றவையும்கூடத் தொடர்ந்த சமநிலையின்மையை (disequilibrium) உண்டாக்கா. இவை சிறு திருத்தங்களால் ஜீரணிக்கப்பட்டுச் சமநிலை குன்றுதிருக்கும்.

இப்படிப்பட்ட பொருளாதாரமன்று நமது முதலாளித்துவப் பொருளாதாரம். அதன் தன்மை தொழில் துணிவோரின் செயல்களால் நிர்ணயிக்கப்படுகிறது. இவர்கள் புதுமை புகுத்தலிலே கண்ணுயிருப்பவர்கள். புதுமைகள் பொருளாதாரத்தை மாறிக்கொண்டே (dynamic) இருக்கும்படி செய்கின்றன. தானுகச் சமநிலை எய்துவதைத் தடுத்து ஒரு முகமாக மாறச்செய்பவை இவையே. இவை உற்பத்திச் செலவை மட்டும் குறைப்பதன்றி உற்பத்தி முறையில், சாதனக் கலப்பு முறைகளில் மாறுதலை உண்டாக்குகின்றன. இவை தொழில் துணிவோரின் எதிர்கால நம்பிக்கையை ஊக்குகின்றன. தொழில் துணிவோரை முதல் பொருளை ஏராளமாக வாங்கும்படி தூண்டுகின்றன. முதலீடு ஏராளமாகத் தேவைப்படுகிறது. கைம்முதலும் (working capital) வேண்டப் படுகிறது.

ஒரு சிலர் மட்டும் புதுமைகளைப் புகுத்திஞல் இது ஒரு பூரிப்பை (boom) உண்டாக்காது. ஒன்றன்பின் ஒன்ருக நிகழ்ந்தாலும் போதாது. உண்மையில் புதுமைப் புகுத்தல் ஒரே அடியாகப் பேரளவில் நிகழ்வது வழக்கம். புதுமைகள் அலை அலையாக வந்துகொண்டிருக்கும். காரணம் என்னவெனில் தனித் தொழில் துணிவோனுக்கு ஒரு புதுவழியில் போகத் தயக்கம் இருக்கும். வேறு சிலர் துவங்கினதும் எல்லாரும் ஒருசேரப் புகுவார்கள்.

இவ்விதம் தோன்றும் பெருக்கம் (expanion) பாங்குகளால் உதவப்படுகிறது. பாங்கிடம் கடன் வசதி பெற்றவர்கள் போட்டியிட்டுச் சாதனங்களைப் பெற முயல்வர். விலை ஏறும். இந்தப் புதுமை புகுத்தல் கருவிப்பொருள் உற்பத்தி செய்வோனுடைய வருமானத்தை அதிகப்படுத்தும். கூலி வருமானம் உயரும். நுகர்பொருள் தேவை உயரும். ஆனுல் பொருளாதாரம் முதல் பொருள் ஆக்கத்தி லீடுபட்டிருந்த காரணத்தால். நுகர் பொருள்கள் போதா. அவைகளின் விலை ஏறும். இலாபம் பெருகும். சாதனங்கள் எல்லாம் ஆளப்பட்டுவிட்ட வேலை நிறைவு நிலை இல்லையாயினும் கூட விலைகள் ஏறும். ஏனெனில் கூலி வருமானம் உயர்ந்ததும் நுகர்பொருள் தேவை உயர்ந்து விலைகள் ஏறும்.

இந்தப் பூரிப்பு முடிவுக்கு வரும். பூரிப்பிலேயே இதற்கு வித்துக்கள் உள்ளன. புதுமுறைகள் நுகர்பொருள் உற்பத்தியைப் பெருக்கும். இவை அங்காடிக்கு வரும்போது பெருக்கும்

குன்றும் நிலை வரும். எப்போது இவ்விளைவு வரும் என்பது புதுமுறைகளின் கருப்ப காலத்தைப் (gestation perion) பொறுத்தது. விலைகளும் செலவுகளும் ஏறிப் புதுமுறைகளும் தோன்றியுள்ளபோது சமூகத்தில் சிக்கல்கள் உண்டாகும். உற்பத்தியானதைச் சமூகம் சீரணிக்க முடிவதில்லை. திடீரெனப் பேரளவில் தோன்றியதனுல் முடிவதில்லை. போட்டி மும்முரமாகும். சிலர் முறிவர். இதுதான் மந்தத்துக்குத் துவக்கம். தொழில் துணிவோர் இப்படிப் பெருக்கத்தை நிறுத்த வேண்டி வந்ததும் பாங்குக்குப் பணம் மீளும். பணச் செலாவணி குறையும். மந்தம் வலுப்பெறும்.

இப்படியாகப் புதுமைகள் புகும்போது பூரிப்புத் தோன்றுகிறது. புதுமைகளின் விளைவுக்கு ஏற்பப் பொருளாதாரம் சமாளிக்க முயலும்போது மந்தம் தோன்றுகிறது. ஆகவே முன்னேற்றம்(progress)கலக்கமற்ற ஒரே திசை முற்போக்கன்று. சுழல் தன்மையுடன் தான் முன்னேற்றம் காணப்படுகிறது. ஆனுல் முன்னேற்றத்துக்கும் இவ்வித நெளிவுகளுக்கும் முரண்பாடுகளில்லை. இவைகளின் வழியேதான் பொருளாதாரம் முன்னேறுகிறது.

புதுமைகளின் விளைவுக்கு ஏற்பப் பொருளாதாரம் திருந்தும் நிலையில் காணப்படுவது மந்தம். மீண்டும் விலைகளுக்கும், செலவுகளுக்கும் செம்மையான தொடர்பு தோன்றும். பலவீன பாகம் மறைகிறது. சிரமத்துடன் ஒரு புதுச் சமநிலை ஏற்படுகிறது. புதுமுறைக் கடன், விலைத் தொடர்புகள், குறைந்த விலைகள், சூன்ய லாபம் ஆகிய அம்சங்கள் காணப்படும்.

இப்போது புது அலை வரலாம். மீண்டும் புதுமைகள் ஒரே அடியாக எங்கும் தோன்றிப் பூரிப்பை உண்டாக்கலாம். சுழல் ஆரம்பமாகும்.

ஆகவே இக்கொள்கையின்படி சுழல்கள் புதுமைகள் மூலம் ஒரு பொருளாதாரம் முன்னேறும்போது ஏற்படும் வளர்ச்சி வலிப்புகளாகும். முன்னேற்றத்தில் இவை இன்றியமையாதவை.

**கேசல் மிகை முதலீட்டுக் கோட்பாடு**
**(Cassel's Non-monetary over-investment theory)**

ஷூம்பீட்டரைப்போலக் கஸ்டவ் கேசல் என்ற ஸ்வீடன் தேசத்துப் பொருளாதார நிபுணரும், பெருக்கம் முதலாளித்துவச்

சமூகத்தின் முன்னேற்ற மாறுதலின் விளைவு என்கிறார். ஆனால் மந்தம் வருவதற்கு இவர் தரும் காரணம் வேறு. புதுமைகளின் விளைவு காரணமாக மந்தம் வருமென்பார் ஷூம்பீட்டர். மிகை முதலீட்டால் வரும் என்பார் கேசல்.

ஒவ்வொரு முன்னேற்றக் காரணியும் பேரளவில் முதலீட்டை ஊக்குகிறது. இதுவே பூரிப்பு. முன்னேற்ற முறைகள் வாய்ப்புக் காகக் காத்திருக்கும். வாய்ப்பு கிடைத்ததும் ஆளப்படும். முதலீடு பெருகும். இது முடிவதேன்? நுகர் பொருளின் அமித உற்பத்தியன்று. நேர் எதிரிடையாகப் பற்றாக்குறை. முதற் பொருள்கள் பூரிப்பின்போது நுகர்ச்சியைத் திருப்தி செய்ய இடைவிடாது வேலை செய்ய வேண்டியிருக்கும். பொருள்களுக்குத் தேவை ஏராளமாக இருக்கும். இதனாலே நிலைமுதலுக்குத் தேவையான பொருள்களும் கிடைப்பரியதாகிக் கிராக்கி விலையில் விற்கும். நிகழ்ந்த தவறு என்னவெனில் நுகர்பொருள் தேவையை மிகைப்படுத்தி மதிப்பிட்டதன்று. முதலீட்டுக்கு வேண்டிய சேமிப்பைச் சரியானபடி மதிப்பிடாதது. சேமிப்புத் தேவையான அளவில் மதிப்பிடப்படாமல் குறைவாக மதிப்பிடப்பட்டுள்ளது. பூரிப்பில் தேவையாகும் பேரளவு நிலை முதல் சாத்தியமாக வேண்டுமானால் மக்கள் அவைகளின் உற்பத்திக்கு வேண்டிய சாதனங்களை விடுதலை செய்யவேண்டும். அதாவது சேமிப்புச் செய்ய வேண்டும். பூரிப்புச்சியில் விளைவு (yield) வட்டியைவிட மிக அதிகமாக இருக்கும். வட்டி குறைவாயுள்ள மட்டும்தான் முதலீடு இலாபகரமாயிருக்கும். இப்படிக் குறைவாயிருப்பதற்குச் சேமிப்புப் போதிய அளவு இருக்கவேண்டும். ஆனால் பூரிப்பின் முடிவு காலத்தில் இலாபத் திற்கு எச்சமாகக் கூலி ஏறுவதால் சேமிப்புக் குறைகிறது. இலாப வருமானமுடையோரே சேமிப்பவர்கள், கூலி வருமான முடையோர் சேமிக்க முடியாது. பூரிப்பின் துவக்கத்தில் இலாபம் ஏற்றமாக இருக்கும். சேமிப்பும் முதலாக்கமும் அதிகமாக இருக்கும். பின்னர்த் தொழிலாளிக்கு ஏற்படும் கிராக்கியால் கூலி இலாபத்தை விழுங்குகிறது. சேமிப்பு போதாததாகிறது. இதன் முதல் அறிகுறி வட்டி ஏறுவதுதான். இதனால் முதற் பொருள் களின் மதிப்பு வீழ்கிறது. ஆகவே அவைகளை உற்பத்தி செய்வோர் விற்பனையில் ஏமாற்றமடைகின்றனர். எல்லா நிலை முதலும் முற்றும் நிலை வரும்போது முதல் நெருக்கடி ஏற்படு கிறது. முதற்பொருளுற்பத்தி செய்தவர்கள் அவைகளை விற்கக் கஷ்டப்படுகின்றனர். கையிலுள்ள வேலையை முடிப்பதற்கான நடப்புச் செலவுக்கும் அவர்களுக்கு முதல் போதாமலிக்கும். ஆகவே துவக்கிய சில வேலைகளை அரைகுறையாய் விட்டுவிட

வேண்டியிருக்கும். இதனால் நஷ்டமுண்டாகும். பாங்குகள் கடன் கொடுப்பதானால் ஓரளவு இந்தச் சிக்கல்கள் வெளியில் தெரியாமலிருக்கும். ஆனால் விரைவில் முதிர்ந்து முதற்பொருள் விலைகள் விழுந்ததும், வேலைகளை நடுவில் நிறுத்தியதும், பாங்குகளும் கடன் கொடுக்கத் தயங்கும். அப்போது தான் முதல் போதாமை வெளிப்படையாகத் தெரியும். பூரிப்பு முடிவுக்கு வரும்.

ஆகவே நெருக்கடி (crisis)யின் காரணம் முதல் அங்காடியின் வரட்சி. மக்கள் சேமிப்பு அற்பம். நிலைமுதல் உற்பத்தியின் வேகத்தைச் சமூகம் தன் சேமிப்புச் சக்திக்கு அதிகமாகத் தூண்டிவிடுவதால் முறிவு முடிவில் ஏற்படுகிறது.

**ஸ்பியதாஃப் கோட்பாடு** (Splethoff's theory)

ஸ்பியதாஃப் (Spiethoff) என்பவரும், கேசலைப் போன்று மிகை முதலீட்டுக் கொள்கை உடையவர். இவரும் நிலை முதல் உற்பத்திப் பெருக்கம்தான் பூரிப்புக்கு வித்து என்றார். இருவருடைய கொள்கைப் படிக்கும், சுழலில் முதற் பொருள், முக்கியமாக நிலை முதல் உற்பத்திதான் அதிக மாறுதலைக் காண்பிக்கிறது. நுகர்ச்சிப் பொருள் உற்பத்தி இப்படிச் சுழல் முறையில் மாறுவதாகத் தெரியவில்லை.

பெருக்கம் நிகழும் முறையை இவர் கீழ் வருமாறு விளக்குகிறார்: முதலீடு மலிவான வட்டியினால் துவங்குகிறது. இதனால் வருமானமும் செலவுச் சக்தியும் உயர்கின்றன. முதலில் முதற் பொருள்களுக்கும், இரும்பு, சிமிட்டி, மரம், கல் முதலிய முதலீட்டு (investment materials) மூலப் பொருள்களுக்கும் தேவை உயர்கிறது. பின்னர் நுகர் பொருள்களின் விலைகள் கூட ஏறுகின்றன. இது மேலும் முதலீடு செய்யத் தூண்டுகிறது. இலாபம் பெருகி, முதலீட்டுக்கு நிதி திரள்கிறது. இது முதலீடு செய்ய மன இசைவை உண்டாக்குகிறது. இப்படிப் பெருக்கம் குவிந்து கொண்டே போகிறது. இந்தப் பெருக்க முகத்தில் பண நெகிழ்ச்சி (elasticity supply of money) அவசியம். முன் சென்ற மந்தத்தின்போது பணம் குவிந்திருக்கும். அது இப்போது பெருக்கத்தில் பயன்படும். ஆகவே பாங்குத் திட்டம் முதலில் ஒன்றும் செய்ய வேண்டியிராது. பின்னர் உதவ வேண்டிவரும்.

பெருக்கம் முடிவுறக் காரணம்: முதல் பற்றுக்குறை (capital shortage). முதல் பற்றுக்குறை என்றால் பாங்குப் பணம்

இதை நிவர்த்தி செய்யக்கூடும் என்பதன்று. உண்மைச் சிக்கல் பல பொருள்களின் உற்பத்தி அளவில் ஒரு பொருத்தமின்மை (maladjustment) உண்டாவதாகும். இவர் பொருள்களை நான்கு வகைகளாகப் பிரிக்கிறார்: (1) நடப்பு நுகர்ச்சிக்கான பொருள்கள் (goods for current consumption) (உணவு, உடை முதலியன). (2) உறுதியான நுகர்பொருள்கள் (durable and semi-durable consumption goods), (3) உறுதியான முதற் பொருள்கள் (durable capital goods), (4) உறுதியான முதற் பொருள்களைச் செய்வதற் கவசியமான மூலப் பொருள்கள் (materials required for durable goods) (எஃகு, சிமெண்ட்).

இவைகளின் உற்பத்திக் கிடையில்தான் ஒரு பொருத்த மின்மை பூரிப்பில் தோன்றுகிறது. இவை ஒன்றுக்கொன்று நிரப்புந் (complementary) தன்மையுடையனவாதலால், (1)இல் குறைபாடெனில் பிற மிகை உற்பத்தியாகின்றன எனலாம் மிகை உற்பத்தி (over-production) (2)லும் (3) லும் ஏற்படு கிறது. இதனால் மூலப்பொருள் (4) உற்பத்தியும் அமிதமாகும். மிகை உற்பத்தி (தேவைக்கும் அளிப்புக்கும் வேறுபாடு)க்குக் காரணம் என்ன? முதற் கருவிகளை நிறுவப் பணம் முதலி (capital)லிருந்து வருகிறது. ஆகவே உறுதி முதற் பொருள்களின் உற்பத்திக்கும் விற்பனைக்கும் தேவையான பணம், முதலீட்டுக்கு வரும் முதலைப் பொறுத்தது. இந்தப் 'பண முதல்' பூரிப்பின் கடைசிக் காலத்தில் பல காரணங்களால் சுருங்குகிறது. கூலிகள் உயர்கின்றன. இது சேமிப்பைக் குறைக்கிறது. உற்பத்தி அதிகமாக வேண்டியதன் நிமித்தம் வீண் செலவு உண்டாகும் முறைகள் (wasteful methods) ஆளப் படுகின்றன. ஆகவே நஷ்டம் ஏற்படும், முதற் பொருள் தேவை தாழும்.

தேவைப்புறத்தில் நிகழும் வீழ்ச்சியை விட அளிப்புப் பக்கத்தில் ஏற்படும் உயர்வு முக்கியம். பூரிப்பில் கட்டப்பட்ட புதிய முதற் பொருள்களில் பெரும்பான்மையானவை, (மீண்டும் புதிய முதற் பொருள்களை உற்பத்தி செய்வதற்கு வேண்டிய) மூலப் பொருள்களை உற்பத்தி செய்வதில் ஆளப்படுகின்றன. தேவை சுருங்கிக் கொண்டிருக்கும்போது அளிப்பு உயர்ந்து கொண்டிருக்கிறது. அமித உற்பத்திக் குடந்தையாக இருப்பது உற்பத்திமுறை. அதாவது, (நிலை முதல் உற்பத்தியில் ஆளப் படும்) மூலப் பொருள்கள் முன்போல இயற்கையாக வளரும் பொருள்களல்லாமல், எஃகு, சிமெண்டு போன்ற உயிரில்லாப் (inorganic) பொருள்களாக இருப்பதால் அளவின்றி உற்பத்தி

செய்ய முடிதலும், நிலை முதல் நிறுவ ஆரம்பித்ததிலிருந்து அவை உற்பத்தி செய்யத் தொடங்குவதற்கு நெடுங்காலம் ஆவதும், இந்தப் பொருள்கள் எல்லாம் உறுதியானவையாக இருப்பதும், உற்பத்தி முறையின் அம்சங்களாகும்.

இப்படி 2-ல் மிகை உற்பத்தி ஏற்படுகிறது. பணம் இருந்தால் நிலைமையைச் சமாளிக்க முடியாதா? முடியாது. சிலவகை நிரப்புப் பொருள்களில் பற்றுக்குறையிருக்கும் வரை பணம் மட்டும் என்ன செய்யும்? சில நிரப்புப் பொருள்கள் இன்மையால்(2 3 வகைப்பொருள்களைச் செய்வதற்குவேண்டிய) மூலப் பொருள்களையும், கருவிகளையும் முழுப் பயன்படுத்த முடியாத நிலை ஏற்படுகிறது. வேண்டியவை நிரப்புப் பொருள் களும், தொழிலாளிகளும் (labour), நுகர்ச்சிப் பொருள்களும். மக்கள் வருமானத்தில் ஒரு பகுதியை நுகர்வதைத் தவிர்ப் பார்களாயின், இவை விடுதலை பெறும். பூரிப்புத் தொடர்ந்து செல்லும்.

மந்தத்துக்கு இவர் தரும் காரணம் பூரிப்பு முடிவால் அவநம்பிக்கை (pessimism) தோன்றுவதாகும். முதலீடு குறைகிறது வருமானமும் செலவுச் சக்தியும் குறைகின்றன. பணம் முடக்கி வைக்கப்படுகிறது (hoarded). விலைகள் விழுகின்றன. இது அவநம்பிக்கையை வலுப்படுத்துகிறது.

மீட்சி எப்படி? மந்தத்தில் முதற் பொருள் உற்பத்திச் செலவு குறைவது முதலீட்டைத் தூண்டும். கூலிகள் குறைவாக இருக்கும். கச்சாப் பொருள் விலை குறைவாக இருக்கும், வட்டி இறங்கி இருக்கும். புது உற்பத்தி முறைகளும் இருக்கும். கேசல் வட்டி குறைவதை அதிகம் வற்புறுத்தினர். ஆனல் ஸ்பியதாஃப் புத்தாக்கங்கள், கண்டுபிடிப்புக்கள் தூண்டாமல் செலவுக் குறைவு மட்டும் மீட்சியைத் தூண்டச் சக்தி அற்றது என்று நினைத்தார். இங்கு ஷும்பீட்டருடைய புதுமைப் புகுத்தல் கோட்பாடும் நினைவிற் கொள்ளத் தக்கது.

**வேக வளர்ச்சிக் காரணமாக மிகை முதலீடு**
**(Over-investment dut to Acceleration)**

பண மிகை முதலீட்டுக் கோட்பாடு (monetary over-investment theory) மிகை முதலீட்டுக்குக் காரணம் பணத்துறையில் காண்கிறது. பணத்துறைச் சார்பற்ற மிகை முதலீட்டுக் கோட்பாடு (non-monetary over-investment theory) தொழில் நுட்ப மாறுதல்கள், புதுமை புகுத்தல் முதலியவற்றைக்

காரணமாக வற்புறுத்துகிறது. இவ்விரண்டுக்கும் மிகவும் ஒற்றுமை உண்டு. இரண்டும் பெருக்கத்துக்குத் தூண்டுதல் முதலீட்டுப் பக்கத்திலிருந்து வருகிறதாகவே கூறுகின்றன. ஆனால் முதலீடு மாறுதல் நுகர் பொருள் தேவையைப் பாதிக்கிறது. நுகர் பொருள் தேவை மாறுதல் பெருக்க-சுருக்க விளக்கத்தில் ஒரு முக்கியமான அம்சம்.

ஆகவே நுகர் பொருள் தேவை மாறுதலுக்கும் வாணிபச் சுழலுக்கும் உள்ள தொடர்பை விளக்கும் ஒரு கொள்கையைப் பார்ப்போம். இக் கொள்கை என்னவெனில் நுகர்பொருள் தேவையில் அற்ப மாறுதல் இருந்தாலும், அது உற்பத்திப் பொருள்களின் (producers' goods) தேவையில் பன்மடங்கு மாறுதலை உண்டாக்குகிறது என்பது. இந்தக் கொள்கை தனித்தே சுழலுக்கு விளக்கம் தருவதாக இல்லை. பல்வேறு விளக்கங்களில் இது கலந்து நல்ல விளக்கம் தரக்கூடியதாக உள்ளது. இங்கு நாம் இக் கொள்கை எப்படி மிகை முதலீட்டுக் கோட்பாடுடன் இணைந்து பயன்படும் என்றே பார்க்கப் போகிறோம். நுகர் பொருள் தேவை மாறுதல் உற்பத்தி மேனிலைகளில் பன்மடங்கு மாறுதலை உண்டாக்குவது 'உறவு' (Relation) எனப் படும். இது எப்படி மிகை முதலீட்டுச் சக்திகளுடன் கலந்து சுழலுக்கு விளக்கமாகக் கூடும் என்று பார்ப்போம்.

முதலில் இக்கருத்தின் அடிப்படையைப் புரிந்து கொள்வோம். கீழ் நிலையில் ஏற்படும் தேவை மாறுதல்கள் மேனிலையில் பன்மடங்கு மாறுதலை உண்டாக்குமென்பது, உற்பத்தியில் எல்லா நிலைகளுக்கும் பொருந்தும். ஆகவே நுகர் பொருள் நிலைக்கு மேல் போகப் போக மேனிலை மாறுதல் மடங்கு அதிகமாயிருக்கும். தேவை வளர்ச்சியின் வேகம் தணிந்தால்கூட இதுவே மேனிலைத் தேவையைப் பன்மடங்கு குறைக்கக்கூடும். இந்தத் தத்துவத்தை மூன்று வகைகளில் ஆயலாம்:

(1) வினை முற்றிய பொருள் (final goods) களுக்குள்ள தேவை மாறுதல், அவைகளைச் செய்யும் உறுதி உற்பத்திப் பொருள் (durable producers' goods) களில் மாறுதலை உண்டாக்குவது.

(2) உறுதி நுகர் பொருள்களின் (கார், ரேடியோ) பணிகளுக்குள்ள தேவை அப் பொருள்களின் உற்பத்தியில் மாறுதலை உண்டாக்குவது.

(3) ஒரு பொருளுக்குத் தேவை மாறுதல் அதன் மேனிலை வினைமுற்றுப் பொருள்களின் இருப்பில் (stock) மாறுதலை உண்டாக்குவது.

ஒரு பொருளுக்குள்ளே தேவை ஏன் மாறுகிறதென்ற பிரச்சினையை எழுப்பாது மாறுதலுண்டானால் எப்படி அதிலிருந்து மேனிலைப் பொருள்களின் தேவை மாறும் என்று மட்டும் பார்ப்போம்.

**1. உறுதி உற்பத்திப் பொருளின் தேவை மாறுதல்**

ஒரு பொருள் (சீலைகள்) ஆண்டுற்பத்தி 100 அலகுகள் என்போம். அதை உற்பத்தி செய்ய முதற் பொருள் (பொறி) 500 அலகுகள் தேவை. ஒரு பொறியின் ஆயுட்காலம் பத்தாண்டென்றும் வைத்துக் கொண்டால், பொறியில் 50 அலகுகளை ஆண்டுதோறும் புதுப்பிக்க வேண்டியிருக்கும். ஆகவே பொறிகளுக்கு ஆண்டுத் தேவை இவ்விதப் புதுப்பிக்கும் (replacement) தேவையே. இப்போது சீலைக்குத் தேவை 10% உயர்கிறது என்று வைத்துக் கொள்வோம். அதாவது 10 சீலை அலகுகள் அதிகம் வேண்டியதிருக்கிறது. இதை நிறைவேற்றச் சாதனத்தில் 10% (அதாவது 50 அலகுகள்) புதுத் தேவை உண்டாகும். ஆகவே ஷை புதுக்குத் தேவை 50, இப் புதுத் தேவை 50: ஆக 100 பொறி அலகுகள் ஆண்டுதோறும் வேண்டப்படும். ஆகவே 10 சதவீதப் பண்டத் தேவை உயர்வு, பொறி அலகில் 100 சதவீத உயர்வை (50லிருந்து 100) உண்டாக்குகிறது. பன்மடங்கு சாதனப் பெருக்கீடு நிகழ்கிறது.

சாதனம் 20 ஆண்டுகள் உழைக்கக்கூடியதாயின், ஆண்டு தோறும் புதுக்குத் தேவை $\frac{500}{20} = 25$ ஆக இருக்கும். அப்போது 10 சதவீத நுகர் பொருள் தேவை உயர்வு நிகழ்ந்தால் சாதன அலகுத் தேவை 25 லிருந்து 75 ஆக உயரும். இது 200% உயர்வு. சாதன உழைப்புக் காலம் 5 ஆண்டுகள் ஆயின், சாதனப் புதுக்குத் தேவை $\frac{500}{5} = 100$ + புதுத் தேவை 50, ஆக 150 (50% உயர்வு). சாதனத்தின் வாழ்வுக் காலம் சூன்யமாயின் (உதாரணமாக நிலக்கரி), அதாவது உறுதியான உற்பத்திச் சாதனம் ஒன்றுமில்லையாயின், மூலப்பொருள்களும் (material) உழைப்பும் தான் இருப்பின், இம் மூலப் பொருள்கள் மட்டுமே புதுப்பிக்கப்பட வேண்டியிருக்கும். 100 அலகு நுகர் பொருளுற்பத்திக்கு 500 அலகு சாதனம் ஆளப்படுவதாயின், இந்த 500-ம் புதுப்பிக்கப் படும். தேவை 10% (110-க்கு) உயர்ந்தால் மூலப் பொருள் 550-க்குத் தான் உயரும். சாதனப் பெருக்கீடு (magnification) ஒன்றும் இல்லை.

**வாணிபச் சுழல் கோட்பாடுகள்**

இந்த உதாரணத்தில் நாம் இரண்டு எடுகோள்களை ஆண்டுள்ளோம். அவையாவன:—

(1)ஏற்கனவே உள்ள சாதனத்தில் ஆளப்படாத மீதி சக்தி (unused capacity) இல்லை.

(2) முதற் கருவி தேவைக்கும் (capital requirement) உற்பத்திக்கும் ஒரே நிலையான விகிதத் தொடர்பு (capital - output ratio) இருக்கிறது.

நம் உதாரணத்தில் நுகர் பொருள் அலகுத் தேவை 10% உயர்ந்தபோது, சாதன உற்பத்தி 50 அலகுகள் உயருமென்று கூறினோம். நுகர்பொருள் பெருக்கமும், சாதன பெருக்கமும் 10 : 50 வீதத்தில் இருக்கின்றன.

இந்தச் சாதன உற்பத்தி உயர்வு நிலைக்க வேண்டுமானால் நுகர் பொருள் தேவை ஆண்டுதோறும் 10% (சிலைகள்) அதிகம் தேவையாக இருக்க வேண்டும். அடுத்த ஆண்டில் தேவை உயர்வு 5%க்குக் குறைந்தால் சாதனத்துக்குள்ள தேவைக் கணியம் (absolute demand) குறையும், பட்டியலைப் பார்க்க.

| | நுகர் பொருள் தேவை | சாதனத் தேவை | சாதனப் புதுக் குத் தேவை | சாதன புதுத் தேவை | மொத்த சாதனத் தேவை |
|---|---|---|---|---|---|
| துவக்க நிலை | 100 | 500 | 50 | 0 | 50 |
| 10 % உயர்வு | 110 | 550 | 50 | 50 | 100 |
| 5 %க்கு இறக்கம் | 115 | 575 | 50 | 25 | 75 |

ஆகவே நுகர் பொருள் தேவையின் உயர்வில் வீதம் குறைந்தாலுங் கூடச் சாதனத்துக்குள்ள மொத்த தேவை (100லிருந்து 75க்கு) குறையும். ஆகவே புதுக்குத் தேவை மாறாதிருக்க, நுகர் பொருள் தேவையின் வீதம் மாறினாலே கூட சாதனத்தின் மொத்தத் தேவை பேரளவில் பாதிக்கப்படுகிறது; நுகர் பொருளின் மொத்தத் தேவைக் கணியம் குறைய வேண்டியதில்லை.

### 2. உறுதி நுகர் பொருள்களில் மாறுதல் (durable consumption goods)

மூன்று வகைகளில், இதுவே முக்கியமானது. வீடு, கார், மரச் சாமான்கள் ஆகியவை நெடிய ஆயுளுடைய உறுதிப்பொருள்கள். இவைகள் விஷயத்திலும் மேற்கூறியவாறு நுகர்பொருள் தேவை மாறுதலுக்குப் பன்மடங்காக முதற் பொருள் உற்பத்தியில் மாறுதல் தோன்றுகிறது. ஓராண்டுக் குடியிருப்புக்கு இடத் வீடுகள் 100 அலகுகள் என்றும், இதை உற்பத்தி செய்பவை 1000 தேவை என்றும் கொள்வோம். ஆண்டுதோறும் வீடுகள் புதுக்குத் தேவை 10% ஆனால் இதற்காக 100 வீடுகள் ஆண்டுதோறும கட்ட வேண்டும். குடியிருப்பு இடத் தேவை 10% உயர்ந்தால், ஆண்டு தோறும் வீடு உற்பத்தி (100+100) 200 ஆக (100%) உயரும். கார் முதலியவைகளுக்கும் இப்படியே. தேவை உயரும் வீதம் குறைந்தாலும் முன்னர் முதற் பொருள்களுக்குக் காட்டிய உதாரணப்படி கார், வீடு முதலியவற்றின் உற்பத்திக் கணியம் பேரளவில் குறையும்.

### 3. இருப்புச் சரக்கில் (stock) மாறுதல்

உற்பத்தியில் அல்லது விற்பனையில் ஒரு மாறுத வீகிதம் சரக்கு இருப்பு வைப்பது வணிகரின் வழக்கமாயின், பண்டத்துக் குத் தேவை மாறும்போது இருப்பு மாறி பண்ட உற்பத்தியும் பன்மடங்காகப் பாதிக்கப்படும். மாதந்தோறும் 1,00,000 சிலைகள் விற்பதாக வைத்துக் கொள்வோம். அரை மாத விற்பனை (50,000) அளவுக்கு இருப்பு வைப்பதாகக் கொள்வோம். மக்கள் தேவை 10% உயர்ந்தால் விற்பனைக்காக 10% × 1,00,000 = 10,000 அலகு களும், கூடுதல் இருப்புக்காக (10% × 50,000) = 5000 அலகுகளும் ஆக 15,000 சிலைகளுக்குக் கூடுதலாக உற்பத்தி செய்ய ஏற்பாடு வேண்டும். ஆகவே தேவையில் 10% உயர்வு உற்பத்தியை 15% உயரச் செய்கிறது. ஒரு மாத விற்பனை அளவுக்கு (1,00,000) இருப்பு வைப்பதாயின், தேவை 10% உயர்ந்தபோது புதுத் தேவைக்கு 10,000 மும் இருப்புக்காக 10,000 மும் சேர்த்து ஆக மொத்தம் 1,20,000 உற்பத்தி செய்ய வேண்டும். ஆகவே உற்பத்தி மாற வேண்டிய மடங்கு விற்பனைக்கும் இருப்புக்கும் உள்ள வீதத் தைப் பொறுத்தது. வீதம் அதிகமானால் மடங்கும் அதிகம். தேவை இறங்குமானால் உற்பத்தியும் பன்மடங்காகக் குறைக்கப் படும். முன் கூறிய இரண்டு இனங்களுக்கும் இதற்கும் வேற்றுமை உண்டு: விற்பனைக்கும் இருப்புக்கும் அவ்வளவு உறுதியான வீதாசாரம் இருப்பதில்லை.

மேலே விளக்கிய போக்கு, குவிதல் (cumulation) தன்மையுடையதாக இருக்கக்கூடும். மக்களின் தேவையில் உயர்வு, வணிகர்களின் இருப்புத் தேவையைச் சில மடங்குகள் உயர்த்துகிறது. மக்கள் தேவை, வணிகர்களின் வழக்கமான வீதப்படி இருப்புத் (stock) தேவை, எதிர்காலத்து விற்பனை உயர்வைச் சமாளிக்கத் தேவை ஆகியவை ஒன்று சேர்கின்றன ஆகவே உற்பத்தியாளர் தங்கள் வழக்கமான புதுக்குத் தேவையோடு, (replacement demand) கூடுதலான உற்பத்திச் சாதனத் தேவையை உண்டாக்குவர். சாதன உற்பத்தியாளரும் இப்படியே வழக்கத்துக்கு மேல் உற்பத்திக்குத் திட்டமிடுவர். ஆகவே நுகர் தேவையில் சிறு மாறுதல் முடிவில் பன்மடங்காக சாதனத்துக்கும் மூலப் பொருளுக்கும் தேவையைக் குவிக்கிறது. அடியில் சிறு மாறுதல் மேனிலைகளில் பன்மடங்கான மாறுதலாகப் பெருக்கிறது. இதை Accelerator அல்லது Relation (உறவு) என்று குறிப்பிடுவர்.

இந்தத் தத்துவத்தை விளக்கிய J. M. க்ளார்க்கு என்பாரும் இது சுழலை விளக்கப் போதுமானதென்று கருதவில்லை. இது பயன்பட, பாங்குப் பண அளிப்பு முழு நெகிழ்ச்சியுடையது என்று கொள்ள வேண்டியிருக்கும் என்பதை உணர்ந்திருந்தார். பணப் பெருக்கமின்றி, ஒரு துறையில் முதலீட்டுப் பெருக்கம் தொழிலில் எழுச்சி முகத்தை (upturn) உண்டாக்க முடியாது. இந்தத் தத்துவம் மிகை முதலீட்டுக் கொள்கையுடன் இணைக்கப்பட்டால், சுழலின் அம்சமொன்றை விளக்கப் பயன்படும். பின்னர் இத் தத்துவம் மற்றொரு கருத்துடன் சேர்ந்து சுழல் விளக்கத்துக்கு ஆளப்படக் கூடியதைப் பார்ப்போம்.

## குறை நுகர்வுக் கோட்பாடுகள்
## (Under-consumption theories)

இவ்வகைக் கோட்பாடுகளின் மையக் கருத்து, உற்பத்தியாகும் பொருள்களை அவைகளின் செலவை ஈடுகட்டும் விலையில் கூட நுகர்வோரால் வாங்க முடியாததனால் சுழல் உண்டாகிறது என்பது. இக் கோட்பாடுகள் எளிதில் எல்லோருக்கும் புரிவதாக உள்ளதால் மிகவும் பரவியுள்ளன. நாம் முதலில் ஆழமற்ற வகைகளைப் பார்த்துவிட்டுப் பின்னர்ச் சீரிய வகைகளை ஆய்வோம்.

### (A) வாங்குத் திறன் பற்றுக் குறை

ஒரு கோட்பாடு, உற்பத்திப் பொருள்களை வாங்குவதற்குப் போதிய வருமானத்தைப் பொருளாதாரம் தோற்றுவிக்க

முடியாததால் சுழல் தோன்றும் என்கிறது. இதன் அடிப்படை என்னவெனில், செலவினங்களில் இரண்டு வகை உண்டு. ஒன்று நுகர்வோருக்கு வருமானமாவன; மற்றொன்று அவர்களுக்கு வருமானமாகாதன. வருமானமாகும் பகுதி மட்டுமே மீண்டும் உற்பத்தி செய்த பண்டங்களை வாங்க அங்காடிக்கு வருகிறது. ஆகவே போதிய வாங்கும் திறன் தோன்றவில்லை. வருமான மாகாதன யாவை? டக்ளஸ் என்ற ஒருவர் புதுக்கு (renewal) நிதி, தேய்மான (depreciation) நிதி ஆகியவற்றைக் குறிப்பிட்டார். இவை பின்னர்ச் செலவு செய்யப்படலாமாயினும், முதலில் இவை வருமானக் குறைவை உண்டாக்குகின்றன என்றார்.

இது ஒரு நிறுவனத்தை மட்டும் கருதினால் உண்மையாகலாம். ஆனால் எல்லா நிறுவனங்களையும் எடுத்துக்கொண்டால் சில ஒதுக்கீடு (reserve) செய்யும்போது மற்றவை செலவு செய்யக்கூடு மல்லவா? ஒருவேளை முன்னர்ச் செழிப்பில் செய்த பெரிய முதலீடுகள் காரணமாக மந்தக் காலத்திலும் ஏராளமாக ரிசர்வு ரொக்கமாய் வைக்கலாம். இப்போது புதுக்கு வேலையில் செலவு செய்யத் துணிவு வராது. ஆகவே வாங்குந்திறன் போதுமான அளவு விநியோகமாகாமல் இருக்கலாம். ஆனால் இதை மந்தம் வலியுறுவதற்குக் காரணமாகக் கூறலாமே யொழிய மந்தத் தோற்றத்தை விளக்க இது பயன்படாது.

டக்ளஸ் வாதத்தை மற்றொரு வகையாக விளக்குகிறார். தொழில்களின் செலுத்துகள் இருவகை: (1) தனி நபருக்குச் செலுத்தப்படுபவை: கூலி, சம்பளம், இலாபப் பங்கீடு போல்வன. (2) நிலையங்களுக்குச் செலுத்தப்படுவன: பொறி, மூலப்பொருள், முதல் ஆகியவற்றுக்குச் செலுத்தப்படுவன. முறையே இவைகளை A, B என்று குறிப்பிட்டால் இரண்டும் செலவினங்களாக நுகர் பொருள் விலையின் கூறுகளாகும். A மட்டுமே நுகர்வோர் வாங்குந்திறனாக வருமான ஓட்டத்தில் இருக்கும். ஆகவே விலை A + B ஆக இருக்க, வாங்குந்திறன் A அளவாகவே இருக்கும். இதனால் வாங்குந்திறனில் B அளவுக்கு குறைபாடு (deficiency) ஏற்படுகிறது. இது ஈடு செய்யப்பட்டா லன்றி, உற்பத்தி நிற்க வேண்டியதுதான். சிறிது காலத்துக்குக் இக் குறைபாட்டைப் பாங்குக் கடனால் நிரப்பலாம். விற்பனை செய்து கடனைத் தீர்த்து விடலாம் என்ற நம்பிக்கையில் ஒரு நிறுவனம் பாங்கிடம் கடன் வாங்கி B வகைச் செலவு செய்ய லாம். ஆனால் தன் உற்பத்திப் பொருளை விற்பனை செய்த பின்பு பெற்ற தொகையை பாங்குக் கடனைத் தீர்க்க ஆள வேண்டும். ஆகவே B வழியே தோன்றும் பற்றுக்குறை நிரந்தரமாக இருந்த

படியே இருக்கும். பழைய கடனடைந்தால் புதுக் கடன் வாங்கக் கூடாதா என்றால், பாங்குக் கடனுக்கும் எல்லையுண்டு. தவிர பாங்குகள் இலாப நட்டமுடையன. பணத்திற்குக் கிராக்கி உண்டாக்கினால்தான் அவை இலாபம் சம்பாதிக்க முடியும். ஆகவே பாங்குகள் சாதாரணமாகப் பணக் கிராக்கி, வடிப்பு (deflation) நோக்கமே உடையவை. கடன் கொடுத்தாலும் உடனே திரும்பிப் பெறுகின்றன. இடைவிடாது பணக்குறைவை ஏற்படுத்துகின்றன. ஆகவே பாங்குகளின் பணச் சர்வாதீனத்தைத் தகர்ப்பதே நிவர்த்தி வழி. கடன் வசதி அரசாங்கத்தின் கீழ் இருக்கவேண்டும். இது டக்ளஸ் வாதம்.

இந்த விதமாகப் பாங்குகள் எப்போதும் பண வடிப்புக்குக் காரணமாயிருக்கின்றன என்பது உண்மையன்று என்பதை நாமறிவோம். பாங்குகள் பணத்தை அளவுக்கு மிஞ்சிப் பெருக்குதலும் உண்டு.

இக் கோட்பாடுடையோர் தேய்மான நிதிக்குச் செல்லும் பணம் செலாவணியில் புகுந்து வாங்குந் திறனுகிறதில்லை என்பதை நிரூபிக்கவில்லை.

## (B) மிகைச் சேமிப்பு

மற்றொருவகைக் கோட்பாடு வந்த வருமானம் முழுதும் செலவு செய்யப்படாது, ஒரு பகுதி சேமிக்கப்படுவதனால் கோளாறு உண்டாகிறதென்கிறது. சேமிப்பைக் குறை கூறும் பொருளாதாரத் துறையினரைக் 'குறை நுகர்ச்சியினர்' (under-consumptionists) என்று குடுப்பிடுவதுண்டாயினும் அவர்கள் வற்புறுத்துவது மிகைச் சேமிப்பையே ஆகும்.

இவர்கள், சேமிப்பு முதலீட்டுக்குப் பே கும் என்பதை முழுதும் புறக்கணித்துப் பேசுகின்றனர். முதலீடாகாச் சேமிப்பு வடிப்பு விளைவுடையது என்ப துண்மையானல் பூரிப்பு எப்படித் தோன்றுகிறது? சேமிப்பு முதலீடாவதால்தானே பூரிப்பு சாத்தியமாகிறது.

இவ்வளவு தெளிவற்ற முறையில் இக் கோட்பாடு கூறப் படுவதில்லை, சேமிப்பு முதலீடாகிறதென்பதை மறக்கவில்லை. சேமிப்பை முதலீடு செய்யாததனால் சுழலேற்படுகிறதென்று கூறவில்லை. சேமிப்பை ஆண்டபோதும் நுகர்ச்சிக் குறைபாடு தோன்றுகிற தென்பர். மூவருடைய கொள்கைகளை இங்குக் குறிப்பிடலாம்.

### (அ) ஃபாஸ்டர், கேட்சிங்ஸ் கொள்கை (Foster and Catchings theory)

சமூகம் தன் வருமானம் முழுவதையும் செலவு செய்வதில்லை. ஒரு பகுதியைச் சேமிக்கிறது. தொழில்களும் சேமிக்கின்றன. தொழிலின் ஆக்கம் அனைத்தும் வருமானமாகப் பகிர்ந்தளிக்கப் படுவதில்லை. ஒரு பகுதி முதற் பொருள் ஆக்கத்துக்காக நிறுத்தி வைக்கப்படுகிறது. மக்களுக்குப் பகிர்ந்தளிக்கப்படும் வருமானத் தில் ஒரு பகுதி சேமிக்கப்படுகிறது. இந்தச் சேமிப்பு, பாங்குகள், பங்கு அங்காடிகள் மூலம் தொழிலுக்கே மீண்டும் செல்கின்றது. முதற் பொருள்கள் வாங்க ஆளப்படுகின்றது. சேமிப்புக்கேற்ப முதலீடு நடப்பதால் வாங்குந் திறனில் குறைபாடு தோன்றுவ தில்லை. ஆனால் நாளடைவில் புது முதற்பொருள்கள் நுகர் பொருள்களை அங்காடியில் கொண்டு வந்து கொட்டும்போது, பழைய உற்பத்தியையும் புது உற்பத்தியையும் ஒருசேர வாங்கு வதற்கு வேண்டிய வாங்கும் திறன் இராது. விலை விழும். இது பணத்தொகைக் கோட்பாட்டின் அடிப்படையில் கூறப் படுவது. T பெருகி, M பெருகாவிடின் விலை விழும். பாங்குப் பணத்தை வேண்டிய அளவு பெருக்கிச் சமாளிக்கக்கூடாதா? கூடும். பாங்குகள் பணப் பெருக்கம் செய்து உதவினாலும் கோளாறு தள்ளிப் போடப்படுகிறதே ஒழிய நிவர்த்தியாகாது. ஏனெனில் பாங்குக்கடன், உற்பத்தியாளருக்கு அவர்களின் சொத்து அல்லது இலாபச் சாத்தியத்தின் பேரில்தான் கிடைக்கும். கடன் கிடைப்பது உற்பத்தியைப் பெருக்க உதவுகிறதேயன்றி நுகர்ச்சியை நேரடியாகப் பெருக்காது. நிகழ்வது என்னவெனில் ஆக்க வேலையில் கடன் ஆளப்படுகிறது. பின்னர் கூலி மூலம் நுகர்ச்சிக்குச் செல்கிறது. இந்த அளவுக்கு (சேமிப்பின் உதவியால் செய்யப்பட்ட) நுகர் பொருள்களை வாங்க வழி செய்கிறது. கடனைக் கொண்டு புதிதாக உற்பத்தியாகும் நுகர் பொருள்கள் அங்காடிக்கு வரும்போது மீண்டும் அவைகளை வாங்குந் திறன் போதாததாகக் காணப்படும். ஆகவே விலைகள் விழும். மீண்டும் பாங்குக் கடனை எதிர்பார்க்க வேண்டியதுதான். வருமானம் உயர உயர, சேமிப்பு விகிதம் அதிகப்படுவதனால், ஈடு செய்ய வேண்டிய வாங்குந்திறப் பற்றுக்குறை வளர்ந்து கொண்டே இருக்கும். ஆகவே பாங்குக் கடன் வளர் வீதத்தில் பெருகிக்கொண்டே இருக்க வேண்டும். இன்றேல் விலைகள் விழும். ஆனால் பாங்குகள் இப்படிச் செய்ய முடியாது. அவைகளுடைய ரிசர்வு நிலை தடையாக இருக்கும். நாளடைவில் சேமிப்பின் விளைவு தோன்றவே செய்யும். வாங்குந்திறப் பற்றுக் குறையினால் நெருக்கடி வரவே செய்யும். இதுவே சிக்கனத்தால் ஏற்படும் விபரீத விளைவு.

இந்த வாதம் சரியா? ஹேயக் சுழலை உண்டாக்காதபடி சேமிப்பை முதலீட்டில் ஆள முடியுமென்கிருர். இக்கோட்பாடு சேமிப்பு எவ்வளவு சிறு அளவில் இருந்தாலும் கோளாறு விளைவிக்கும் என்கிறது. பேரளவில் சேமிப்பு நிகழ்ந்தால் அல்லது சேமிப்பு வீதம் மாறினுல் அதன் விளைவைச் சமாளிப்பது கடினமாகலாம். சுழல் விளைவுகள் தோன்றலாம். அற்ப சேமிப்பும் ஆபத்தானதென்பதை ஒப்ப முடியாது. வட்டி வீதம் நெகிழ்வுடையதாயின் எவ்வளவு சேமிப்பும் முதலீட்டில் ஆளப் படும். உற்பத்தி அதிகப்படும். விலை சிறிது விழவும் கூடும். இதனுல் சுழல் ஒன்று துவங்காது.

ஆகவே சிலர் எல்லாச் சேமிப்பும் ஆபத்தானதன்று. உத்தம அல்லது சமநிலைச் சேமிப்புக்கு மேற்பட்டால் தான் ஆபத்து என்று ஒப்புக்கொள்கின்றனர். இவர்களில் ஒருவர் ஜ. எ. ஹாப்சன் (Hobson) என்பார்.

### (ஆ) ஹாப்சன் கோட்பாடு

இவர் பண வருமானம் இல்லாததனுல் நுகர்ச்சிக் குறைவாக இருக்கிறதென்று வாதிக்கவில்லை. உற்பத்திச் செலவானது கூலி, வட்டி முதலிய உருவில் வருமானமாகிறதென்றும், இவை உற்பத்தியான பொருளை வாங்கப் போதுமானதென்றும் கூறுகிருர். சேமிப்பு ஆபத்தானது என்று நினைக்கவில்லை. சேமிப்பு மூதலீடாகும் என்பதை ஒப்புக் கொள்கிருர். ஆனுல் இவர் பயப்படுவது அமித சேமிப்பு. அமிதமாகச் சேமித்து முதலீடு செய்தால், இலாபகரமான விலையில் விற்கக்கூடிய அளவுக்கு மேல், நுகர்ச்சிப் பொருள்களை உண்டாக்குவோம் என்பார். ஹேயக், பாங்குப் பணத்தின் மூலம், வலிந்த சேமிப்பு (forced saviugs) ஏற்பட்டு அமித முதலீடுண்டாக்கிக் கோளாறு ஏற்படும் என்ருர். ஹாப்சன் சுயேச்சையான சேமிப்பும் (voluntary savings) கோளாறுகளுக்குக் காரணமாகலாமென்று நினைத்தார். தற்காலப் பொருளாதார நிலையில் அதிகமான சுயேச்சை சேமிப்பு இன்றியமையாதது என்று நினைத்தார். காரணம் சமூகத்தில் காணப்படும் வருமான ஏற்றத் தாழ்வு (inequality of income). சமூக வருமானத்தில் மிகப் பெரும் பகுதியை ஒரு சிலர் பெறுகின்றனர். பெரு வருமானமுடைய வர்களே பேரளவில் சேமிக்கின்றவர்கள். வருமானம் உயர உயரச் சேமிப்பு வீதமும் உயர்கிறது. நிறைய வருமானம் பெறு பவர்கள் எல்லாவற்றையும் செலவு செய்ய வழியும் இராது. ஆகவே சேமிப்பு, முதலீட்டை நாட வேண்டியிருக்கிறது. புது மூதற்பொருள்கள் தோன்றுகின்றன. நாட்டின் உற்பத்திச்

சக்தி பெருக்கமடைகிறது. இப்பெருக்க வேலைப்பாடு பாங்குப் பண விருத்திக்கிடம் தருகிறது. விலைகள் ஏறுகின்றன. சேமிப்பும் அதிகரிக்கிறது. இப்படிப் பெருக்கத்தால் ஏற்படும் வருமானம், சமூக வகுப்புகளிடையே சமமாகப் பரவுவதில்லை. காரணம் விலை ஏறும்போது கூலி ஏறுதல் பின் தங்குவதாகும். ஆகவே புது வருமானம் பிற வகுப்பினரிடம் குவிகிறது. இவர்களோ முழுதும் செலவு செய்ய முடியாமல் சேமிப்பவர்கள், முதலீடு செய்பவர்கள். இவர்கள் புது வருமானத்தைச் செலவு செய்ய முடியாமைக்குக் காரணம் தம் நுகர்ச்சி வகைகளை எளிதில் மாற்ற முடியாமை. இதேபோது புது முதற் பொருள்கள் நுகர்பொருள்களை அங்காடியில் கொண்டுவந்து கொட்டும். இப்போது தான் நெருக்கடி (crisis) துவங்கும். இவைகளை இலாபகரமான விலையில் வாங்க ஆளிருக்கமாட்டார்கள். அமித உற்பத்தி (over-production) நிலை ஏற்படும். இதனால் விலைகள் விழ ஆரம்பிக்கும். நஷடத்தைத் தவிர்க்க, உற்பத்தி நிறுத்தப்படும். இது வருமானத்தைக் குறைத்து வேலையின்மையைத் தோற்றுவிக்கும். ஆலைகளை மூடுவது வருமானத்தையும் நுகர்ச்சிச் செலவுச் சக்தியையும் குறைக்கும். முதற் பொருள் துறையிலும் வேலை நிற்கும். ஏனெனில் இலாபம் சுருங்கியபோது சேமிப்புக் குறையும். ஆகவே முதலீடு குறையும். சேமிப்பு நிகழ்ந்தாலும், அது பாங்குகளில் போய் முடங்கும். இப்படி முதலீடு தடைபடுவது முதற்பொருள் துறைகளில் வேலையின்மையை உண்டாக்கினும், இது நுகர்ச்சி வீதத்துக்கும் மெய்ப்பொருள் முதலுக்கும் (real capital) சம நிலைத் தொடர்பை உண்டாக்கும். முடிவில் முதலீடு நிரம்பக் குறைவாகிச் சாதாரண நுகர்ச்சிக்கு வேண்டிய பொருள்களையும் உண்டாக்கப் போதாத அளவுக்குச் சுருங்கும். அப்போது முதலீடு செய்யச் சேமிப்பு ஆளப்படும். இதனால் மீட்சி (recovery) துவங்கும். பின்னர் எழுச்சியும் பூரிப்பும் தொடரும்.

சமூகத்தில் வருமான ஏற்றத் தாழ்வுகள் உள்ளவரைக்கும் பூரிப்பும் மந்தமும் இன்றியமையாதன என்பது ஹாப்சனின் கருத்து. இக்குறைபாட்டை நீக்குவதே சுழலை நீக்கும் வழி. செல்வத்தை சேமிப்புச் செய்வோரிடமிருந்து ஏழைகளுக்குச் செல்லச் செய்யவேண்டும். உயர்வீத வருமான வரி மூலம் சமூக நலச்செயல்களை (social services) வளர்த்து ஏழைகளின் வருமானத்தை உயர்த்த வேண்டும். (தொழிலாளர் சங்க மூலம்) கூலி உயர்வு, சர்வாதீன முறிப்பு, சமூக உடைமை வளர்ச்சி ஆகிய முறைகளை அவர் ஆதரித்தார்.

## சேமிப்பு - முதலீட்டுக் கோட்பாடு

தொழில் முயல்வோர் முதற்பொருள்களையும் நுகர்பொருள் களையும் உற்பத்தி செய்கின்றனர். எவ்வளவு என்பதை அவர் கள் அவ்வப்போதுள்ள அங்காடி நிலையையும் எதிர்பார்க்கும் நிலையையும் அனுசரித்து முடிவு செய்கின்றனர். உற்பத்தியின் போது அவர்கள் சாதனங்களில் செலவு செய்வதன் மூலம் வருமானத்தை உண்டாக்குகின்றனர். இதிலிருந்தே மக்கள் வேண்டியவற்றை வாங்க வேண்டும். வருமான முழுதும் நுகர் பொருளில் செலவு செய்யப்படாமல் ஒரு பகுதி சேமிக்கப் படலாம். எதிர் காலத்தில் உபயோகிக்க இவை கையிருப்புச் செய்யப்படுகின்றன. இந்தச் சேமிப்பு முதலங்காடி மூலம் முதலீட்டுக்குப் பயன்படலாம். நிறுவனங்களே இலாபத்தி லிருந்து சேமித்து நேரடியாக முதலீடு செய்யலாம்.

ஆகவே வருமானம் பெறுவோரிடமிருந்து இரண்டு வழிகளி னூடே பணம் தொழில் முயல்வோருக்குச் செல்கிறது. ஒன்று செலவு செய்வதன் மூலம்; மற்றொன்று சேமிப்பின் மூலம். தொழில் முயல்வோர் நுகர்பொருள், முதற்பொருள் இரண்டை யும் எந்த விகிதாசாரத்தில் உற்பத்தி செய்யவேண்டுமென்று நினைக்கின்றனரோ அந்த விகிதத்தில் செலவும் சேமிப்பும் நிகழு மாயின் பொருளாதாரம் சமநிலையிலிருக்கும் எனலாம். தொழில் முயல்வோர் முதல் பொருள் உற்பத்தி விகிதத்தை உயர்த்தி நுகர் பொருள் உற்பத்தி விகிதத்தைக் குறைப்பார்களாயின் அதே போது சமூகம் தன் சேமிப்பை அதே விகிதத்தில் உயர்த்த வேண்டும். இப்படிச் செய்தால் நுகர்பொருள் உற்பத்தி குறைந்தபோது அதற்குத் தேவையும் குறையும். சமநிலை கெடாது.

ஆனால் உண்மையில் இப்படிப்பட்ட இயைபு காணப்படுவ தில்லை. காரணம் எளிதாகக் கூறிவிடலாம். சேமிப்புச் செய் பவர்கள் வேறு, அவர்கள் மனப்போக்கு வேறு. முதலீடு செய் பவர்கள் தொழில் முயல்வோர். அவர்களின் முதலீட்டை நிர்ண யிப்பன கண்டுபிடிப்புகள், போர்க்குறிகள். வாணிப எதிர்பார்ப்பு கள் ஆகியன. சேமிப்பு முடிவுகளை நிர்ணயிப்பன எதிர்காலத் தேவை முதலியன. இவ்விரு திறத்தினரும் ஒருவரையொருவர் கலந்து முடிவு செய்வதில்லை, மற்றவரின் செயலைக் கருதியும் கூடப் பார்ப்பதில்லை. சேமிப்பு வீதத்தைவிட முதலீட்டுவீதம் பெரிதும் அடிக்கடி மாறக்கூடியது. வருமானம், வாழ்க்கைத்தரம் ஆகியவை மாறினால்தான் சேமிப்பு வீதம் மாறும். ஆனால் முதலீடு அவ்வப்போதுள்ள பொருளாதாரச் சூழ்நிலையைப் பொறுத்து

மாறும். ஆகவே, சேமிப்பும் முதலீடும் சமமாக இருக்குமென்று எதிர்பார்ப்பதற்கில்லை. தவிர, நுகர்பொருளில் செய்யப்படும் செலவு நேரடியாக உற்பத்தியாளருக்குச் செல்கிறது. ஆனால் சேமிப்பானது பாங்குகள், இன்சூரன்சுக் கம்பெனிகள் ஆகிய நிதி நிலையங்களின் வழியாக முதலங்காடி மூலம் தொழில் துணிவோருக்குப் போய்ச் சேரவேண்டியிருக்கிறது. இந்த வழியாகச் சேமிப்பு முதலீட்டுக்குச் செல்லுமா என்பது பல காரணிகளைப் பொறுத்தது. முதலங்காடியில் சேமிப்பு அளிக்கப்படவேண்டும். இப்படி வரும் அளிப்பு அவ்வப்போதுள்ள தேவையுடன் நேர்பட்டு, வட்டி வீதம் மாறித் தேவைக்கும் அளிப்புக்கும் சமநிலை உண்டாக வேண்டும். சேமிப்பு அதிகப்பட்டால் வட்டி வீதம் குறைந்து சேமிப்பு அவ்வளவும் முதலீட்டில் ஆளப்படும்.

முதலீட்டுத் தேவை உயர்ந்தால் வட்டி வீதம் ஏறும். இதனால் சேமிப்பும் போதுமான அளவுக்கு அதிகப்படும். இவ்விதமாகத் தேவை அல்லது அளிப்பு மாறும்போது வட்டி விகிதம் நெகிழ்ந்து கொடுத்து மாறி இரண்டுக்கும் சமப்பாடு ஏற்படுத்துகிறது. இது ஒழுங்காக வேலை செய்யும் உத்தமமான முதல் அங்காடியின் போக்காகும். பூர்வப் பொருளாதாரத் துறையினர் இந்த முறையில்தான் முதல் அங்காடி மூலம் சேமிப்பு முதலீட்டுக்குச் செல்கிறதென்று கருதினர். தாமாகவே சேமிப்பும் முதலீடும் சமமாகுமென்று கருதினர். இப்படியானால் சமநிலைக் கேடு உண்டாவதற்கு இடமில்லை. வருமானத்திலிருந்து செய்யும் செலவுக்கும் சேமிப்புக்கும் ஈடாக நுகர்பொருள் உற்பத்தியும் முதற்பொருள் உற்பத்தியும் நிகழும். சேமிக்கப்பட்டது முதலீடு வழியாக மீண்டும் வருமான ஓட்டத்தில் சேர்ந்துவிடுகிறது. ஆகவே "ஜே. பி. சே" (J. B. Say) என்பவர் 'அளிப்பு தனக்கு வேண்டிய தேவையைத் தானே படைத்துக் கொள்கிறது' (supply creates its own demand), என்றார்.

**கீன்சுடைய சேமிப்பு-முதலீடு கோட்பாடு**

மேற்படி சேமிப்பு-முதலீடு தொடர்பைக் கீன்சு ஏற்கவில்லை. வட்டி வீதம் சேமிப்பையும் முதலீட்டையும் சமப்படுத்துகிறது என்பதை மறுத்தார். வட்டியானது சேமிப்பு முதலீடுகளால் நிர்ணயிக்கப்படுவதன்று; வட்டியை நிர்ணயிப்பன பணத் தொகையும் (volume of money). பணத்துக்குள்ள ரொக்க விருப்பெச்சத் தேவையும் (demand for liquidity preference) என்றார். ஒருவன் செய்யும் முதல் தீர்மானம், வருமானத்தில் எவ்வளவு சேமிப்பதென்பது. இரண்டாவது தீர்மானம், சேமித்ததில்

எவ்வளவைப் பண உருவில் வைத்திருக்கவேண்டுமென்பது. சேமித்துவிட்டதால் மட்டும் முதலீடு செய்ய முடிவு செய்ததாகக் கொள்ளக்கூடாது. முதலீடு செய்யாமல் பல உருவங்களில் சேமிப்பை வைத்திருக்க விரும்பலாம். ரொக்கமாக வைத்திருக்கலாம். இதற்கு நல்ல காரணங்கள் உண்டு. அன்றாடப் பேரங்களுக்காகவும் எதிர்பாராத திடீர்ச் செலவுகளுக்காகவும் யூக வாணிபத்துக்காகவும் ரொக்கத்தை வைத்திருக்க விரும்பலாம். இந்த மூன்று நோக்கங்கள் கூடிய தேவைக்கு ஏற்ப வட்டி இருக்கும். வட்டியும் ஒரு வருமானம். இந்த மூன்று ரொக்கத்தேவைகளையும் புறக்கணித்து ஒருவன் பணத்தைப் பிறருக்குக் கொடுக்க முன்வரவேண்டுமானால் அவனுக்குத் தகுந்த கூலி அல்லது ஈடு தரவேண்டும். ஒருவனது ரொக்க விருப்பம் எவ்வளவுக்கு வலுவாக இருக்கிறதோ அவ்வளவுக்கு வட்டி ஏற்றமாக இருந்தாலொழிய அவன் பணத்தைப் பிரிய இசையமாட்டான். ஆகவே வட்டி என்பது முதல் தேவையையும் சேமிப்பு அளிப்பையும் சமப்படுத்தும் விலையன்று. நாட்டின் ரொக்க இருப்பையும் ரொக்கத் தேவையையும் சமப்படுத்தும் விலையாகும். பண அங்காடியில் ரொக்கம் விரும்புபவர்களுக்கும் ரொக்கத்தை வைத்துக்கொண்டு எப்படி அதை ஆள்வது என்பதைத் தேர்வு செய்துகொண்டு இருப்பவர்களுக்கும் இடையே வட்டி தீர்மானமாகிறது. ஆகவே சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் நேரடியான தொடர்பு இல்லை. மக்களது சேமிப்பையும் ரொக்கத் தேவையையும் நிர்ணயிக்கும் காரணிகள் ஒருவகை. முதலீட்டை நிர்ணயிக்கும் காரணிகள் வேறு வகை.

உண்மையில் சேமிப்பு என்பது நுகர்ச்சிச் செலவைக் குறைப்பது மூலம் வருமான ஓட்டத்தைக் குறைப்பதாகும். இது தொழில் முயல்வோருடைய நம்பிக்கையைப் பாதித்து முதலீட்டைக் குறைக்கக்கூடும். ஆகவே சேமிப்பு முதலீட்டுக்கு நேரான வழி என்று கருத இடமில்லை. சேமிப்பு முழுவதும் முதலங்காடி மூலம் கிடைக்கப்பெற்றாலும், வட்டி இறங்கினாலும், தொழில் துணிவோர் அதை வாங்கிப் பயன்படுத்த முன் வராமல் இருக்கலாம். ஏனென்றால் முதலீடு தொழிலின் தற்கால நிலையையும் எதிர்காலத்தைப் பற்றிய கருத்தையும் பொறுத்தது. வட்டி வீதம் முதலீட்டை நிர்ணயிக்கும் முக்கியக் காரணியன்று என்பது அநேக விசாரணைகளினால் தெளிந்த ஒரு முடிவு. வட்டி வீதத்தைவிட முக்கியமான வேறு பல காரணிகள் முதலீட்டை நிர்ணயிக்கின்றன. ஆகவே முதலீட்டுக்கும் சேமிப்புக்கும் நேரான தொடர்பு இல்லை எனலாம்.

சேமிப்பும் முதலீடும் இப்படி வேறுபட்ட காரணிகளால் நியமிக்கப்பட்டுச் சமப்பாடு இல்லாதிருக்குமானால் இதன் விளைவு என்ன என்பதைப் பார்ப்போம். ஒரு சமூகம் தன்னுடைய சேமிப்பு வீதத்தை அதிகப்படுத்தி விட்டதாக வைத்துக் கொள்வோம். இதனால் பாங்கில் பணம் தேங்கி நிற்கும். பணப் புழக்க வேகம் குறையும். தொழில் முயல்வோர் செய்யும் முதலீடு இதற்குச் சமமாக இல்லாவிட்டால் சேமிப்பளவுக்கு நுகர்ச்சிப் பொருள் தேவை குறையும், விலை இறங்கும். இதனால் வருமானம் குறையும். இதனால் எதிர்பார்த்த அளவுக்குச் சேமிப்பு முடியாதாகும். சேமிக்க முயன்ற சமூகம் சேமிப்பைச் செய்ய முடியாமல் போகிறது. விலை வீழ்வதனால் தொழில் முயல்வோர் உற்பத்தியில் நஷ்டத்தை அடைந்து கூலியையும் பிற செலவுகளையும் குறைக்க முயல்வார்கள் ஆயினும் பயனில்லை. ஏனெனில் மக்கள் வருமானம் பாதிக்கப் படுகிறது. விற்பனை உயர வழியில்லை. மக்களின் சேமிப்பு நாட்டம் மாறுதிருக்கும் வரையில் இவர்களது முயற்சிக்குப் பயனில்லை. தனிப்பட்டோர் தம் சேமிப்பினால் செல்வம் அதிகப் படுவதாக நினைத்த போதிலும் எல்லாரையும் சேர்த்துப் பார்க்கும்போது, வருமானம் சுருங்குவதனால் சேமிப்பும் மொத்தத்தில் சுருங்கவே செய்யும். ஆகவே சேமிக்க முயல்வது வடிப்பைத் (deflation) துவக்குகிறது. இந்தச் சூழ்நிலையில் நம்பிக்கை இழந்த மக்கள் ரொக்கத்தை முடக்க ஆரம்பிப்பார்க் ளானால் மந்தம் வலுப்படும்.

இந்த நிலையிலிருந்து மீள வேண்டுமானால் சேமிப்பு நாட்டம் அல்லது முதலீடு நாட்டம் மாற வேண்டும். உண்மையில் மந்தம் முற்றிய ஒரு நிலையில் இம்மியளவு சேமிப்பும் முடியாத அளவுக்கு வருமானம் குறையலாம். அதேபோது சாதனப் புதுக்கல் அவசியமும், எளிதான பண வசதியும், மலிவான சாதனங்களும் முதலீட்டைத் தூண்டலாம். இப்படிச் சேமிப்புக் குறைந்து முதலீடு அதிகமாகும்போது வடிப்பு நின்று எழுச்சி காணப் படலாம்.

இதற்கு எதிரிடையாக முதலீடு உயர்வதன் விளைவுகளைப் பார்ப்போம். இந்த முதலீடு உயர்வு ஏற்படப் பணவசதி இருக்க வேண்டும். முதலீடு வருமானத்தை அதிகப்படுத்திப் பொருள் களுக்கு உள்ள தேவையை உயர்த்தும். இதனால் நுகர் பொருள் விலை ஏறும். பின்னர்ச் சாதனங்களின் விலையும் ஏறலாம். ஆனால் இது பின் தங்கியே நிகழ்வதால் இலாபம் பெருகிக் காணப்படும். இது உற்பத்தியை அதிகப்படுத்தத் தூண்டும். இப்படியாக

எழுச்சி மேலும் மேலும் விரிவடையும். முடிவில் வேலை நிறைவு நிலை வரும். மேலும் முதலீடு செய்யப்படுமாயின் விலைகள் ஏறும். வீக்கம் துவங்கும். சேமிப்பைவிட முதலீடு அதிகமாகி வருமானம் உயரும்போது அதிகப்படி வருமானத்தில் அதிகப்படியாகச் சேமிக்கப்படும். ஒரு நிலையில் அதிகப்பட்ட முதலீட்டுக்குச் சமமாகச் சேமிப்பும் இருக்கும். சமநிலை ஏற்படும்.

இப்படியாக, முதலீட்டை விட சேமிப்பு எச்சமாகும்போது மந்தம் தோன்றி, வருமானத்தைக் குறைத்து, சேமிப்பு முதலீட்டு அளவுக்குச் சுருங்கி சமப்பாடு உண்டாகிறது. முதலீடு சேமிப்பை மிஞ்சும்போது வருமானம் வளர்ந்து, சேமிப்பு உயர்ந்து முதலீட்டுக்குச் சமமாக ஆகிறது. ஆகவே சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் சமப்பாடு உண்டாவது வட்டி வீதம் மாறி, ஒன்றுக்கொன்று சமப்பாடு செய்வதனாலன்று என்றும், வருமான மாறுதலே இரண்டுக்கும் இடையில் மாறிச் சமப்பாடு தோன்றுகிறதென்றும் தெரிகிறது.

ஆகவே சமநிலைக் கேடாவது முதலீடு முடிவும் சேமிப்பு முடிவும் பொருத்தமற்றுப் போவது என்றும், இச் சமநிலைக்கேடு பூரிப்பாகவோ அல்லது மந்தமாகவோ உருப்படும் என்றும் காண்கிறோம். இந்தச் சேமிப்பு—முதலீடு தீர்மானங்களின் மாறுபாட்டினால் வாணிபச் சுழலை விளக்க முடியுமா என்றும் இனி ஆராய்வோம்.

நாட்டின் உற்பத்தி அளவும் வேலை நிலையும் தொழில் முயல்வோர் தீர்மானத்தைப் பொறுத்தது என்பார் கீன்சு. அவர்கள் தீர்மானம் அவர்களுடைய இலாப எதிர்பார்ப்பைப் பொறுத்தது. அவர்கள் உற்பத்திக்குச் செலவு செய்த தொகையும், விற்பனையிலிருந்து எதிர்பார்க்கும் தொகையும் சமமாக இருக்குமானால் லாபா நஷ்டமிராது. அவர்கள் உற்பத்தியைக் கூட்டவோ, குறைக்கவோ தூண்டுதல் இராது. உற்பத்தி அளவுக்கு ஏற்ப வேலையாள்களுக்கும் தேவை மாறுமென்று நாம் பொதுவாகக் கொள்வோமானால், லாபா நஷ்டம் இல்லாதபோது ஆள் எடுப்பை அவர்கள் மாற்றத் தூண்டுதல் இராது என்று கூறலாம். விற்பனை வருவாய் இரண்டு பகுதிகளையுடையது. மக்கள் நுகர்ச்சிக்குச் செய்த செலவு ஒன்று. மற்றொன்று புது முதலீட்டுக்குச் சமூகம் செலவு செய்தது. இந்த இரண்டும் சேர்ந்தது தான் செயல்படு தேவை (effective demand). உற்பத்தி செலவும் இந்தச் செயல்படு தேவையும் சமமாக இருந்தால் இலாபமோ நஷ்டமோ இராது. உற்பத்தியில் சமநிலை காணப்படும்.

இந்தச் சமநிலை, வேலை நிறைவு ஏற்பட்ட போது காணும் சமநிலையாக இருக்க வேண்டிய அவசியமில்லை. ஆனால் பூர்வப் பொருளாதாரிகள் இப்படி நினைத்தனர். ஏனென்றால் சாதனங்கள் தேவையின்றி இருக்குமானால், அவைகளின் விலை குறைந்து அவைகளும் ஆளப்படுமாதலால், யாதொரு சாதனமும் இம்மியளவும் வேலையின்றி இராது. வேலை நிறைவு எப்போதும் காணப்படும் என்றனர். ஆனால் கீன்சினுடைய கொள்கைப்படி வேலை நிறைவு இல்லாமலே கூடச் சமநிலை ஏற்படக்கூடும். எப்படி? துவக்கத்தில் சமநிலை இருப்பதாக வைத்துக் கொள்வோம். எக்காரணத்தாலோ சமூகத்தின் சேமிப்பு உயர்ந்தால் (சம அளவுக்கு முதலீடு உயர்ந்தாலொழிய) செயல்படு தேவை (effective demand) குறையும். உற்பத்தி சுருங்கும். சேமிப்புக்கு ஏற்ப முதலீடு உயர வேண்டும் என்கிற நியதியில்லையாகையால், உற்பத்தி குறைவது இன்றியமையாதது. வேலையளவும் குறையும். வருமானம் குறையும். அப்போது ஒரு நிலையில் குறைந்த உற்பத்தியின் அளிப்பு விலையும் (supply price), அதன் விற்பனை வருவாயும் சமமாகும்போது சமநிலை ஒன்று தோன்றும். இந்தச் சமநிலை வேலை நிறைவுச் சமநிலையன்று. இந்தக் குறை வேலைச் சமநிலை (under-employment equilibrium) மக்களுடைய நுகர்ச்சி தாழ்ந்த மட்டத்தில் இருக்கிற வரைக்கும் மாறாது. இப்படியே சமூகம் சேமிப்பைக் குறைத்து வருமானத்தில் முன்னை விட அதிகப் பகுதியை நுகர்ச்சிக்குச் செலவு செய்தால் (முதலீடு இதே அளவுக்குக் குறைந்தாலொழிய) மொத்தச் செயல்படு தேவை உயரச் செய்யும். விற்பனை வருவாய் உற்பத்தியின் அளிப்பு விலையை விட எச்சமாக இருக்கும். இந்த இலாபத்தைக் கருதித் தொழில் முயல்வோர் உற்பத்தியையும் வேலையும் அதிகப்படுத்துவார்கள். சமூகத்தின் வருமானம் உயரும். முடிவில் உற்பத்தி அளிப்பு விலையும் விற்பனை வருவாயும் சம நிலைக்கு வரும். அப்போது ஒரு புதுச் சமநிலை தோன்றும். இது நுகர்வு உயர்ந்த மட்டத்தில் உள்ள வரைக்கும் நிலைத்திருக்கும்.

ஆகவே வேலை நிறைவுக்கு முன் பல நிலைகளில் சமநிலை ஏற்படக் கூடும். ஆனால் முழு வேலை நிலைக்கு மேல் மெய்ப் பொருள் (real) சமநிலை காண முடியாது. ஏனென்றால் அதற்கு மேல் உற்பத்திப் பெருக்கம் முடியாது. விலை ஏற்றம்தான் காணப்படும். ஆகவே சமநிலை காண்பதற்கும் வேலை நிறைவிற்கும் நேரடியான இணைப்பில்லை. எந்த உற்பத்தி மட்டத்திலும், நுகர்ச்சிச் செலவும் முதலீட்டுச் செலவும் விற்பனை வருவாய்க்குச் சமமாக இருக்குமானால் சமநிலை ஏற்பட்டு விடும். ஆகவே நுகர்வு

அல்லது சேமிப்பு ஒரு கொடுத்த நிலையில் இருக்க, சமநிலை ஏற்பட வேண்டுமானால் முதலீடு மாற வேண்டியிருக்கிறது.

இனி முதலீட்டை நிர்ணயிக்கும் காரணிகள் எவை என்று பார்ப்போம். முதலீட்டை நிர்ணயிப்பன: முதலின் இறுதி நிலைத் திறனும் (marginal efficiency of capital), வட்டி வீதமும். முதலின் இறுதி நிலைத் திறன் என்பது இறுதி நிலை முதலின் எதிர்பார்த்த ஆயுட் கால விளைவுக்கும் அதனுடைய அளிப்பு விலைக்கும் (supply price) உள்ள விகித (ratio) மாகும். அளிப்பு விலை என்பது அந்த முதலை உற்பத்தி செய்து அளிப்பதற்கு உரிய செலவாகும். இந்தச் செலவையும் முதல் பொருள் ஆயுள் காலத்தில் சம்பாதிக்கும் விளைவையும் ஒப்பிட்டு, அளிப்பு விலையின் மேல் சம்பாத்தியம் (return over supply price) எந்தச் சதவீதத்தில் இருக்கிறது என்று தொழில் முயல்வோர் கணிப்பார்கள்.

இந்த வீதத்தை வட்டிவீதத்தோடு ஒப்பிட்டுப் பார்ப்பார்கள். சம்பாத்திய வீதம் ஏற்றமாயிருந்தால் முதலீட்டைச் செய்ய முன் வருவார்கள். இன்றேல் குறைப்பார்கள். இந்த இறுதி நிலைத் திறன் என்பது முதலீட்டில் இருந்து பெறும் எச்ச விளைவு வீதமன்று. எதிர்பார்க்கும் விளைவு வீதமாகும். புதுக்கண்டு பிடிப்புகள் எதிர்பார்ப்பை அதிகப்படுத்தும். விலை ஏறுமென்று எதிர்பார்த்தாலும் இது அதிகப்படும். எதிர்பார்ப்பு, தொழில் துணிவோருடைய மனோநிலையைப் பொறுத்தது. உலக நிகழ்ச்சிகள் பல அவர்களுடைய எதிர்கால நம்பிக்கையைப் பாதிக்கும். எதிர்காலத்தைத் தெளிவாக அறிய முடியாதா கையால் எதிர்பார்க்கும் விளைவு நிச்சயமற்றது. ஆயினும் நிகழ் கால அனுபவத்தையும் மற்றவர்களுடைய கருத்துகளையும் அடிப்படையாகக் கொண்டு ஒவ்வொரு தொழில் முயல்வோரும் முதலீட்டைச் செய்வதா வேண்டாமா என்று முடிவு செய்வான்.

எக்காரணத்தாலோ முதலீடு அதிகப்படுமானால் ஏற்படும் விளைவு என்னவென்று கீன்சைப் பின்பற்றி பார்ப்போம். முதலீட்டுச் செலவு மக்களின் வருமானத்தை உயர்த்தும். அந்த வருமானத்திலிருந்து அவர்கள் ஒரு குறிப்பிட்ட பகுதியை நுகர்ச்சிக்குச் செலவு செய்வார்கள். இதைக் கீன்சு இறுதிநிலை நுகர்ச்சி நாட்டம் (marginal propensity to consume) என்பார். இதுபற்றி நாம் முதல் பாகத்தில் 225ஆம் பக்கத்தில் படித்தோம்.

கீன்சு கூறியபடி முதலீடு உயர்ந்து, அதனால் வருமானம் உயரும்போது செலவு வருமான உயர்வு அளவுக்கு உயர்வதில்லை.

ஒருவர் செலவு மற்றவர் வருமானமாகிப் படிப்படியாகப் பலர் கையில் போகும்போது ஒவ்வொருவரும் தத்தம் வருமானத்துக்குக் குறைவாகவே செலவு செய்வதனால் முடிவில் வருமானப் பெருக்கம் வரண்டு போகும். முதலில் செய்த முதலீட்டுச் செலவுக்கும் முடிவில் காணப்படும் வருமானப் பெருக்கத்துக்கும் ஒரு தொடர்பு காண முடியும். அந்தத் தொடர்பு பெருக்கி (multiplier) எனப்படும். (இது பற்றி முதல் பாகம் 229ஆம் பக்கத்தில் பார்த்தோம்.)

பெருக்கியின் தொகை நுகர்ச்சி நாட்டத்தைப் பொறுத்தது. எவ்வளவு நுகர்ச்சி நாட்டம் அதிகமாக உள்ளதோ, அதாவது சேமிப்பு நாட்டம் குறைவாக உள்ளதோ, அவ்வளவுக்கும் வருமானப் பெருக்க மடங்கு (பெருக்கி) அதிகமாக இருக்கும். இந்தப் பெருக்கி மற்றொரு முக்கிய விஷயத்தைக் காட்டுகிறது. முதலீடு பல படிகளாகத் தாண்டிச் செல்லும்போது ஒவ்வொரு படியிலும் சேமிப்பு நிகழ்கிறது. இச்சேமிப்புகளைக் கூட்டினால் தொகை முதலீட்டுக்குச் சமமாகும். (இதுபற்றி முதல் பாகம் 227ஆம் பக்கத்தில் பார்க்க.)

அடுத்தபடியாக, சேமிப்பு உயர்வதன் விளைவைப் பார்ப்போம். இது வருமானத்தைக் குறைத்து வணிகர்களின் எதிர்பார்ப்பைப் பாதித்து அவர்கள் உற்பத்தியைக் குறைக்கும். இது சமூகத்தின் வருமானத்தைக் குறைத்து அவர்களுடைய சேமிப்பையும் குறையச் செய்யும். இதனால் சேமிப்பை உயர்த்தச் செய்த முயற்சி பலிக்காது. அப்போது நிகழ்ந்து வரும் முதலீட்டுக்குச் சமமாகவே சேமிப்பு இருக்கும். இந்தச் சமப்பாட்டை வருமானச் சுருக்கம் உண்டாக்கும்.

இதனால் நாம் அறிவது முதலீடு மாறுமானால் அதற்கேற்பச் சேமிப்பு மாறி முதலீட்டுக்குச் சமமமாக ஆகும் என்பது. முதலீடு செயற்படாவிடின் சேமிப்பு விருப்பம் செயற்படாது என்பது தெரிகிறது. ஆகவே தற்காலத்தில் பொருளாதாரத்தின் நடத்தை முதலீட்டைப் பொறுத்தது என்று கூறலாம். முதலீட்டுக்கு ஏற்பச் சேமிப்பு இருக்குமானால் சமநிலை கெடாது. முதலீட்டுக்கு எச்சமாகவோ குறைவாகவோ சேமிப்புச் செய்ய முயன்றால் வருமான விளைவுகள் மூலம் அது வியர்த்தமாகும். சேமிப்பைக் குறைக்க நினைத்தால் அது முடியாது. முதலீடு எச்சமாயிருப்பதால் வருமானம் உயர்ந்து முதலீட்டு அளவுக்குச் சேமிப்பு தானாக வந்து சேரும். சேமிப்பை அதிகப்படுத்த முயன்றால் அதுவும் முடியாது. முதலீடு

குறைவாக இருப்பதனல் வருமானம் குறைந்து சேமிப்பு முதலீட்டளவுக்குச் சுருங்கும். இப்படி வருமான மாறுதல் மூலம் சேமிப்பும் முதலீடும் சமமாகின்றன.

இனிக் கீன்சினுடைய கொள்கைப்படி வாணிபச் சுழலை விளக்க முடியுமா என்று பார்ப்போம். அவர் தன்னுடைய கோட்பாட்டைச் சுழலுக்குப் பொருத்திக் கூறவில்லையாயினும், அவருடைய கொள்கையைக் கொண்டு நாம் சுழலின் போக்கை விளக்கலாம். வாணிபச் சுழல் என்பது முதல் இறுதிநிலைத் திறனுக்கும் வட்டி வீதத்துக்கும் உள்ள தொடர்பில் ஏற்படும் நெளிவுகளைப் பொறுத்தது எனலாம். ஏதோ ஒரு காரணத்தால், உதாரணமாகப் புதிய கண்டுபிடிப்பு ஒன்ருல் அல்லது வேறு சூழலால், வணிகர்கள் முதலிட முன்வருவதாக வைத்துக் கொள்வோம். இது வருமானப் பெருக்கத்துக்குக் காரணமாகும். முன்சொன்ன முறையில் பெருக்கி வேலைசெய்யும். இப்படி வருமானம் பெருகும்போது பணத்துறையிலிருந்து எத் தடையும் ஏற்படவில்லை என்று வைத்துக்கொள்வோம். அப்போது பூரிப்புத் தடையின்றி நிகழும். வேலை நிறைவு வரையிலும் பொருளாதாரம் ஓடலாம். இந்தப் பூரிப்பு முடிவுக்கு வருமா? பெருக்கம் மேலும் மேலும் நிகழும்போது ஒரு நிலையில் நுகர்ச்சி நாட்டம் குறையும் என்று கீன்சு கருதினர். வருமானம் உயர்ந்தும், அது உயரும் வீதத்தில் நுகர்ச்சி மாருது. தவிர, புது வருமானத்தில் பெரும் பகுதி நுகர்ச்சி நாட்டம் குறைவாயுள்ள முதலாளி வர்க்கத்துக்குப் போய்ச்சேரும். வேலை பெருகப்பெருகத் தனியாரும் அரசாங்கமும் பொதுநலத்துக்குச் செய்துவந்த செலவு குறையும். இப்படி நுகர்ச்சி குறைவது வருமானத்துக்கும் நுகர்ச்சிச் செலவுக்கும் இடையிலுள்ள இடைவெளியை அதிகப்படுத்துகிறது. இதைச் சீர் செய்வதற்கு வேண்டிய முதலீட்டின் அளவையும் அதிகப்படுத்துகிறது. ஆனல் நுகர்ச்சி நாட்டம் குறைந்துள்ள நிலையில் தொழில் முயல்வோர் எதிர்பார்ப்புகள் மங்கி இருக்குமாதலால் அவர்கள் முதலிட முன்வரமாட்டார்கள். பூரிப்புக் காலத்தில் முதற்பொருள் உற்பத்திக்குத் தேவை அதிகமாக இருக்குமாதலால் அவைகளை உற்பத்தி செய்வதற்கு வேண்டிய சாதனங்களின் விலைகள் ஏறி அவைகளின் அளிப்பு விலை (supply price) ஏறும். அதேபோது முதற்பொருள் உற்பத்தி அதிகப்பட்டுக்கொண்டே இருப்பதால் அவைகளின் எதிர்பார்த்த விளைவு குறைந்து கொண்டே போகும். ஏனென்ருல் அவைகளால் உற்பத்தியாகப் போகும் பண்டங்களை விற்பது கடினமாக இருக்கும். ஆகவே முதற்பொருள் விலைகள் ஏறுவதும் அவைகளின் விளைவு

குறைவதும் ஒரேபோது காணப்படுவதால் இறுதிநிலைத் திறன் மிகவும் விழும். வட்டியை மேலும் மேலும் குறைத்து இறுதி நிலைத் திறனுக்குக் கீழாக இருக்கும்படி செய்ய முயலலாம். ஆனால் இந்தச் சூழ்நிலையில் வட்டி வீதமும் ஏற ஆரம்பிக்கும். ஏனென்றால் மக்களுடைய ரொக்க விருப்பம் (liquldity preferenec) ஏறியிருக்கும். பூரிப்புக் காலத்தில் பேரத்துக் காகவும் எதிர்பாராச் செலவுக்காகவும் யூக வாணிபத்துக்காகவும் ரொக்க விருப்பம் உயரும். ஆனால் பாங்குகள் தம்முடைய ரிசர்வு நிலையைக் கருதி எச்சரிக்கையாக இருக்கத் துவங்கும். இதனால் வட்டிவீதம் ஏறும். முதலின் இறுதி நிலைத் திறன் குறையும்போது வட்டி ஏறுவது நெருக்கடிக்குக் காரணமாகும். இப்படிப் பூரிப்பு முடிவுக்கு வரும். மந்தம் தோன்றும்.

முதலீடு குறைவது மந்தத்தின் அம்சம். வேலை குறையும். வருமானம் குறையும். எல்லாப் பண்டங்களுக்குமுள்ள தேவைகளும் குறையும். முதலீடு குறைவது பெருக்கி வழியாக வருமானத்தைப் பன்மடங்காகக் குறைக்கும். பெருக்கி பெரிதாக இருந்தால் அதற்கேற்ப வருமானச் சுருக்கமும் பெரிதாக இருக்கும். இந்த நிலையில் மக்கள் ரொக்க இருப்பு உயரும். வணிகர்களுடைய நம்பிக்கை சிதறும். நிகர முதலீடு அற்பமாகும். இப்போது பணத் தேவை குறையும். ஆகவே வட்டி வீதம் குறையலாம். ஆயினும் தொழில் 'முயல்வோரை இது தூண்டாது. இந்த மந்தத்தை மோசமாக்குவன பங்கு அங்காடியில் விலை வீழ்ச்சியும் பண்ட அங்காடியில் (எச்ச இருப்புக் காரணமான) விலை வீழ்ச்சியும்.

ஆனால் நாளடைவில் வணிகரது சரக்கு இருப்புகள் செலவாகிவிடும். இருப்பு வைத்திருப்பதில் செலவுகள் இருக்குமாதலால் அவைகளைத் தள்ளிவிடுவது நலமாகத் தோன்றும். தவிர, பழமை (obsolescence) காரணமாகவும், தேய்வு காரணமாகவும் முதற் பொருள்கள் அரிதாகிக் கொண்டு வரும். இந்த நிலையில் முதற் பொருளை மீண்டும் உற்பத்தி செய்வது இலாபகரமாகத் தோன்றலாம். முதலின் இறுதி நிலைத் திறன் உயரலாம். வட்டி வீதம் தாழ்வாக இருக்குமாதலால் இது மீட்சிக்கு அடிகோலும். மீண்டும் ஒரு சுழல் துவங்கும்.

ஆகவே வாணிபச் சுழல் என்பது முதலின் இறுதிநிலைத் திறனில் ஏற்படும் நெளிவுகளின் விளைவு என்பதாகிறது. முதலீட்டில் நிகழும் வேறுபாடுகளே ஊஞ்சலாடி மக்களுடைய வருமானத்திலும் வேலையிலும் மாறுதல்களை உண்டாக்குகின்றன.

சுழல்களைச் சமாளிக்க என்ன செய்யலாம்? முதலீட்டை ஏற்றபடி மாற்ற வேண்டுமென்பது கீன்சினுடைய கருத்து. மந்தத்தில் முதலீடு ஊக்கப்பட வேண்டும். அதை ஊக்குவதற்கு நுகர்ச்சி உயர வேண்டும். இதற்காக அரசாங்கம் தன்னுடைய செலவை அதிகப்படுத்தி வேலை இல்லாதார்க்கு வருமானம் உண்டாக்க வேண்டும். கூலியைக் குறைத்து மந்தத்தைத் தீர்க்க முடியாது. ஏனென்றால் கூலிக் குறைப்பு வருமானத்தைக் குறைத்து, அதனால் விற்பனையைப் பாதித்து, வணிகர்களின் எதிர்காலத்தைப் பற்றிய நம்பிக்கையைக் குலைத்து, முதலீட்டைப் பாதிக்கிறது. மந்தக் காலத்தில் தனியார் முதலீடு செய்ய முன்வரமாட்டார்கள். ஆகையால் அரசாங்கமே இந்தப் பொறுப்பை ஏற்க வேண்டும். தொடர்ந்து முதலீடு தேக்கமாயுள்ள நிலையில் என்ன செய்யலாம்? மக்களிடையே உள்ள வருமான ஏற்றத் தாழ்வுகளைக் குறைத்துச் சமூகத்தின் நுகர்ச்சியை அதிகப்படுத்த வேண்டும். இரண்டாவது. இயற்கையாக ஏற்படக் கூடிய வீதத்துக்குக் குறைவாக வட்டி வீதத்தைக் குறைக்கவேண்டும். மூன்றுவது, அரசாங்க முதலீடு செய்யும் துறைகள் மேலும் மேலும் விரிவடைய வேண்டும்.

## பெருக்கி, முடுக்கி பிணைந்த கோட்பாடு

### (Multiplier-Accelerator interaction Theory)

முன்னர் முதலீடு உயர்ந்தால் அது எப்படிப் பன்மடங்காக வருமான உயர்வை உண்டாக்குகிறது என்றும், இந்த மடங்குப் பருமன் நுகர்ச்சி நாட்டத்தைப் பொறுத்தது என்றும், இந்த மடங்கைப் பெருக்கி (multiplier) காட்டுமென்றும் கண்டோம். இப்போது எப்படி நுகர்ச்சி உயர்வு முதலீட்டை உறவு மூலமாகப் பன்மடங்காக உயர்த்துமென்பதைப் பார்க்கவேண்டும். பின்னர் இரண்டும் ஒன்றை யொன்று தாக்கி எப்படிச் சில சூழ் நிலைகளில் சுழலை உண்டாக்கக்கூடும் என்று பார்ப்போம். இதை முதலில் விளக்கியவர் ஹாரடு (Harrod).

யாதோ ஒரு காரணத்தால் முதலீடு உயர்வதாக வைத்துக் கொள்வோம். இதன் விளைவாகப் பெருக்கி வேலை செய்யும். மொத்த வருமானம் நுகர்ச்சி நாட்டத்தைப் பொறுத்துப் பன்மடங்காக வளரும். இந்த வருமான உறவு (relation) மூலமாக முதற்பொருள் தேவையையும் (copital goods), பண்ட இருப்புத் (stock) தேவையையும் அதிகப்படுத்தும். இதனால் மீண்டும் புது முதலீடு ஏற்பட்டு அது மீண்டும் பெருக்கி வழியாக வருமானத்தைப் பன்மடங்காக உயர்த்தும். இப்படியே மேலும்

மேலும் பெருக்கியும் முடுக்கியும் வேலைசெய்து வேலை நிறைவு நிலையை உண்டாக்கும். இப்போது சில இயக்க நிர்ணயிகள் (dynamic determinants) தலையிட்டுப் பொருளாதாரத்தைச் சுருக்கச் செய்யலாம். இந்த நிர்ணயிகள் பெருக்கக் காலத்திலேயே தோன்றுவன. அவையாவன:

1. சேமிப்பு நாட்டம் (propensity to save).

2. இலாபம் மிகுதல் (the shift to profit).

3. முதலாட்சி வீதத்தில் மாறுதல்(changes in capital ratio)

சேமிப்பு நாட்டம் வருமானம் உயரும்போது உயரும். குறுங்காலத்தில் வருமானம் உயரும்போது சேமிப்பு விகிதம் வளர்விகிதமாக இருக்கும். ஆகவே தேவையின் வளர்ச்சி வீதமும் குறைகிறது. தவிர, இலாபம் உயர்வதும் சேமிப்பு விகிதத்தை அதிகப்படுத்தும். இதுவும் நுகர்ச்சியைக் குறைக்கும். முதற் பொருள் விகிதம் (capital ratio) பெருக்கத் துவக்கத்தில் உயரலாம். காரணம்: புது கண்டுபிடிப்புகளின் ஆட்சி, உற்பத்தி முறை நீடிப்பு. இப்படிச் சேமிப்பு (முதலீட்டில்) ஆளப்பட்டு, வருமானம் உயர்ந்து, நுகர்ச்சி வளரும்: ஆனல் புதுக் கருத்துக்கள் எல்லாம் ஆளப்பட்டு வட்டி வீதமும் உயரும்போது, (முதல் விகிதம் அதிகமான) நீண்ட முதலீட்டு முறைகள் இலாபகரமாக இருக்கமாட்டா. ஆகவே முதற் பொருள் ஆட்சித் தணியும். இதுவே பெருக்கத்தின் வேகத்தைக் குறைக்கும். இவைகளின் விளைவாக வருமானத்தில் சேமிக்கப் படும் வீகிதம் நாளடைவில் உயரும். செலவு விகிதம் குறையும். இதனல் பழைய முதலீடுகள் எதிர்பார்த்த பயனைத் தராது மோசம் செய்யும். தவிர, புது முதலீடு வீதமும் குறையும். இதனல் வருமானம் குறைந்து, நுகர்ச்சி வீதமும் குறைந்து, 'உறவு' வழியாக முதலீட்டையும், முதலீட்டுத் தொகையையும் பழைய நிலைக்குக் குறைவாகவே குறைக்கும். இப்போது பெருக்கி மூலமாக வருமானமும் நுகர்ச்சியும் பழைய நிலையை விடக் குறையும். இது முதலீட்டைப் பாதித்துச் சூன்ய மட்டத்துக்குக் கூடக் கொண்டு வரலாம். அப்போது மிகவும் மோசமான மந்தம் தோன்றும்.

இந்த மந்தத்துக்கு முடிவுண்டாக்குவது எது? மந்தத்திலும் ஓரளவு புதுக்கல் (replacement) அவசியம் நடக்கும். இம் முதலீடு நுகர்ச்சியை மீட்கிறது. இப்போது இயக்க காரணிகளும் பெருக்கத்துக்குச் சாதகமாக வேலை செய்யும். சேமிப்பு நாட்டம்

குறைவாயிருக்கும். இலாப மிகுதி இராது. குறைந்த வட்டியினாலும் புதுக் கண்டுபிடிப்புக்களினாலும் முதலாட்சி விகிதம் உயரும். இப்படி ஒரு புதுச் சுழல் துவங்கும். இதில்முக்கியமான பாத்திரமாக இருப்பது உறவு (முடுக்கி (acceleration)) ஆகும். இப்படிப் பெருக்கியும் முடுக்கியும் சேர்ந்து சுழல்களை உண்டாக்குவது போலத் தெரிகிறது. பெருக்கி மட்டும் சுழலை உண்டாக்க முடியாது. அது வருமானப் பெருக்கத்தை அல்லது சுருக்கத்தை உண்டாக்கும்; முடுக்கியும் சேர்ந்தால்தான் அது வருமானத் திருப்பத்தையும் உண்டாக்கும். பெருக்கி எண் ஓர் அளவுக்கு வருமானத்தைக் கொண்டு சென்ற பின், முடுக்கி அதற்கு மேல் வேலை செய்கிறது. ஆனால் பின்னர் வருமான உயர்வு வீதம் குறையும்போது, முடுக்கியே இறக்கத்துக்குக் காரணமாகி, பெருக்கி மட்டும் குறிப்பிடும் நிலைக்குக் கீழே வருமானத்தைக் கொண்டுபோகிறது. மீண்டும் சுழலொன்று துவங்கும்.

இந்தப் பெருக்கித் தத்துவங்கள் எப்படிச் சுழலை விளக்கும் என்பதைப் பற்றி ஆராய்ச்சிகள் நடந்துள்ளன. ஒரு தூண்டு கோல் சுழலைத் துவக்குமானால் தூண்டுகோலின் சக்தி எந்த அளவு இருந்தால் எவ்வகையான சுழலைக் காணலாம் என்பதைப் பற்றி ஆய்வுகள் நடந்தன. நுகர்ச்சி நாட்டம் எந்த அளவில் இருந்தால், அதோடு நுகர்ச்சி மாறுதலுக்கும் முதலீடு மாறுதலுக்கும் எந்தவிதத் தொடர்பு இருந்தால், என்னென்ன விளைவுகள் தோன்றும் என்று ஆயப்பட்டது. சாமுவேல்சன் (Samuelson) என்ற அமெரிக்கப் பொருளாதார நிபுணர் நுகர்ச்சி நாட்டத்துக்கும் முடுக்கிக்கும் சில (எண்) மதிப்புகள் கொடுத்து அவை இரண்டும் பிணைந்து வேலை செய்தால் எப்படி ஐந்து விதமான நெளிவுகள் காணப்படும் என்பதை 1939 இல் ஒரு கட்டுரையில் விளக்கினார்.

அவருடைய ஐந்து வகைகளில் மூன்று வகைகள் சுழலை உண்டாக்கக்கூடிய வகைகளாக இருந்தன. அவை யாவன,

1. தணிந்த சுழல்கள் (Damped oscillations).

2. ஒரு சீரான நெளிவுடைய சுழல்கள் (Regular cycles).

3. வெடிக்கும் சுழல்கள் (Explosive cycles).

இவைகளில் இரண்டாவது அரியது. மற்ற இரண்டும்தான் சாத்தியம். ஆயினும் நிகழ்ந்த சுழல்களைப் பார்த்தால் ஒன்றும்

இந்த இரண்டு வகையிலும்கூடச் சேர்வதாகப் படவில்லை. ஆனல் இவைகளைக் கொண்டு ஒருவாறு நிகழ்ந்த சுழல்களை விளக்க முடியும். ஜே. ஆர். ஹிக்சு (Hicks) என்னும் ஆங்கிலப் பொருளாதாரி முடுக்கியைக் கொண்டு வெடிப்பில்லாத ஒரு சுழலை விளக்கியுள்ளார். அவருடைய விளக்கத்தை அறிவோம்.

**ஹிக்சுடைய கோட்பாடு**

இதுவரையில் கொடுத்து வந்த விளக்கங்களைப் போலன்றி இவர் வளரும் பொருளாதாரத்தை (growing economy) அனுமானிக்கிருர். இவர் கருத்துப்படி வாணிபச் சுழல் பிரச்சினை ஒரு வளரும் பொருளாதாரப் பிரச்சினையாகக் கருதப்படவேண்டும். அதாவது நெளிவுகள் பொருளாதாரத்தின் முன்னேற்றப் போக்கில் (rising trend) ஏற்படும் விளைவு. ஆகவே வளர்ச்சிக் காரணிகளான மக்கள் தொகைப் பெருக்கம், தொழில் நுட்ப முன்னேற்றம் ஆகியவற்றில் ஒன்றின் காரணமான சுயேச்சை முதலீடுகள் (autonomous investments) சுழலைத் துவக்குவதாக இருக்கும். இந்த வளர்ச்சிக் காரணிகளே நெளிவின் போக்கை நிர்ணயிக்கும். சுயேச்சை முதலீடு ஒரே சதவீதத்தில் உயர்ந்துகொண்டே போவதாக ஹிக்சு அனுமானிக்கிருர். அப்படியாஞல் வருமான வளர்சிக்கு ஒரு சமநிலைப் பாங்கு (Pattern or condition) இருக்கும். இது நகரும் சமநிலையாக (moving equilibrium) (ஒவ்வொரு நிலையிலும் முதலீடும் சேமிப்பும் சமமாக, இரண்டும் வருமானத்தில் ஒரு குறிப்பிட்ட விகிதமாக) இருக்கும். இந்தக் கோட்பாட்டின்படி பெருக்கியும் முடுக்கியும் கலந்து உண்டாக்கும் சுழல்கள் பொருளாதாரத்தின் முன்னேற்றப் போக்கில் ஏற்படும் நெளிவுகளேயாகும். அதாவது சுழல்கள் ஒரு நிலைத்த நிலையிலிருக்கும் (stationary) சமநிலையில் தோன்வதன்றி, நகரும் சமநிலையில் தோன்றும். ஹிக்சுடைய விளக்கத்தில் முடுக்கி, வருமான உயர்வுக்கும் அதனல் தூண்டப்பட்ட முதலீட்டுக்கும் உள்ள விகிதம்.(சாமுவேல்சன் கொண்டது போல நுகர்ச்சிக்கும் முதலீட்டுக்கும் உள்ள விகிதமன்று). ஹிக்சு பெருக்கிக்கும் முடுக்கிக்கும் அனுமானிக்கும் எண் மதிப்புகள் மாருதன (constant). அவை எந்தக் கலக்கம் (disturbance) தோன்றினும் நிலைபேறு கேட்டை (instability) பலமாக உண்டாக்கும். தன்மை யானவையாக இருக்கும். ஆகவே சமநிலையில் இருந்து நிலை பிறழ்ந்தால் தானே திருத்திக் கொள்ள முடியாமல் வெடிப்பு வகையில் நகர்ந்து கொண்டு போகும்.

பொருளாதாரம் ஒரு சமநிலையில் இருக்கும்போது ஒரு கலக்கம் தோன்றுவதாக வைத்துக் கொள்வோம். உதாரணமாக,

சுயேச்சை முதலீட்டின் விதம் அதிகப்படுவதாக வைத்துக் கொள்வோம். உற்பத்தியும் வருமானமும் பெருக்கிக்கு ஏற்ப உயரும். இந்தப் பெருக்கம் முதலீட்டைத் தூண்டும். தூண்டுதல் அளவு முடுக்கியைப் பொறுத்தது. இந்தப் புது முதலீடு பெருக்கி மூலம் மீண்டும் வருமானப் பெருக்கத்தை உண்டாக்கும். மீண்டும் முடுக்கி மூலம் முதலீடு பெருகும். இப்படி ஒன்றையொன்று தூண்டும். இப்போது உற்பத்தி சமநிலை வீதத்துக்கு (equilibrium rate) மேல்பட்டு உயர்ந்துகொண்டே போகும். முதலீடு இயல்பான போக்குக்கு (normal rate) மேலாக ஏறிக்கொண்டே போகும். ஒரு மாதிரிச் (standard) சுழலில், பெருக்கி முடுக்கிகளின் அளவுகள் வெடிப்பு வகைப் பெருக்கத்தை உண்டாக்குவதாக இருக்கும். வேலை நிறைவு என்ற ஒரு உச்சமட்டம் இல்லையேல் முடிவே இராது. வளரும் சமூகத்தில் உற்பத்திமட்டம் மேலும் மேலும் உயர வாய்ப்பு நிறைய இருந்தாலும், மேலும் உயர முடியாத நிலை ஒன்று வரும். அப்போது வேகம் தணியவே செய்யும். வளர்ச்சி வேகம் தணிந்து இயற்கை வேகத்துக்கு வரும். முதலீட்டு வீதம் குறைந்து இயற்கை வீதத்துக்கு வரும். இப்போது பெருக்கி, முடுக்கி இரண்டும் சேர்ந்து எதிர்த்திசையில் வேலை செய்யத் துவங்குகின்றன. குறையும் முதலீடு வருமானத்தைக் குறைக்கிறது. இது முதலீட்டைக் குறைக்கிறது. இப்படியே ஒன்றையொன்று கீழே தள்ளுகிறது. முடுக்கி தொடர்ந்து வேலை செய்தால் சமநிலைக்குக் கீழும் உற்பத்தி இறங்கும். வெடிப்புத் தன்மையினால் முன்னர் ஏறியதைவிட வீழ்ச்சி அதிகமாக இருக்கும்.

ஆனால் இவ்விறக்கப் பாதையில், முடுக்கியானது ஏறும் பாதையில் காட்டிய வேகத்துடன் காணப்படுவதில்லை. மந்தம் பலமானதாயின் தூண்டிய முதலீடு (induced investment) சூன்யத்துக்குக் குறையலாம். ஆயினும் முதற்பொருள்கள் நடப்பு உற்பத்திக்கு வேண்டியதைவிட எச்சமாக இருக்கலாம். இந்த எச்ச சக்தி (excess capacity) களையப்பட வேண்டும், தேய்ந் தொழிய வேண்டும். இதற்குக் காலம் பிடிக்கும். ஆகவே இறங்கு முகத்தில் முடுக்கியின் வேகம் தணிகிறது. இது நல்லது. இதுதான் சுழலை மேலும் ஆழாமல் தடுக்கிறது. வீழ்ச்சி ஒரு தளத்துக்கு வந்ததும் முடுக்கி பலமிழக்கிறது. தூண்டப்படும் முதலீடு இல்லை, ஆனால் இயற்கை முதலீடு இருந்துவரும். அது இப்போது வேலை செய்யும். பெருக்கிமூலம் உற்பத்தி மீண்டும் பெருகத்தொடங்கும். சிறிது காலத்துக்குச் சிறிது எச்ச உற்பத்தி (excess capacity) வசதி இருக்கலாம். ஆனால் முடிவில் தொடர்ந்த தேய்மானத்தின் விளைவாய் உச்ச சக்தி மறைந்ததும்

முடுக்கி மீண்டும் வேலை செய்யத் தொடங்கும். தூண்டிய முதலீடு மீண்டும் காணப்படும். இப்போது உற்பத்தி இயற்கை வீதத்துக்கு மேற்பட்ட வேகத்துடன் நடக்கும். மீண்டும் உற்பத்தி சமநிலையைத் தாண்டி நிறைவு வேலையை நோக்கிச் செல்கிறது. சுழல் மீள்கிறது. உச்சிக்குச் சென்றால் திரும்பியே ஆக வேண்டும். அடிக்குச் சென்றால் மேல் நோக்கி எழுந்தே ஆக வேண்டும். சுழலின் வெடிப்புத் தன்மையை உச்சியில் அடக்கி வைப்பது வேலை நிறைவு; அடிமட்டத்தில் அடக்கி வைப்பது முடுக்கியின் தணிவு.

இதுவே ஹிச்சு கொடுத்த விளக்கம். இவர் வரைந்த மாதிரிச் சுழல் (model cycle) பல் வகையில் திருத்தப்படலாம். அவரே சில திருத்தங்களைக் கூறியுள்ளார்.

ஹிக்சினுடைய விளக்கம், சுழலை ஒரு தொழில் நுட்ப நிகழ்ச்சியாக மட்டும் காட்டுகிறது. இதில் வாணிப எதிர்பார்ப்புகளும் (business expectations) தீர்மானங்களும் இடம் பெறவில்லை. முதலீட்டை நிர்ணயிப்பன இவை அன்று. ஹான்சன் என்பவர் கீன்சினுடைய முதலின் இறுதி நிலைத் திறனை (merginal efficiency of capital)யும் சேர்த்து ஹிக்சின் விளக்கத்தை உறுதிப்படுத்துகிறார்.

## பயிர்த்தொழிலும் வாணிபச் சுழலும்
## (Agriculture and the business cycle)

**மாசூல் கோட்பாடுகள் (Harvest Theories)**

பயிர்த்தொழில் நிலைமையில் மாறுதலுக்கும் கைத்தொழில் நிலைமையில் மாறுதலுக்கும் உள்ள தொடர்பு பற்றி அநேக கோட்பாடுகள் உள்ளன.

மாசூல்களில் மாறுதல் வாணிபத்தின் செழிப்பைப் பாதிக்கும் என்பதை வணிகர்கள் ஒப்புக்கொள்வார்கள். குடியானவர்களுடைய செழிப்பு வாணிபத்தை நிர்ணயிக்கும் என்பது ஓரளவு உண்மை. பொருளாதாரத் துறையினர் பயிரின் முக்கியத்தை உணர்ந்து வாணிபச் சுழலின் காரணங்களைக் கூறும்போது பயிர் விளைவு மாறுதலையும் ஒன்றாகக் கூறுகின்றனர். சிலர் இதைச் சுழலுக்குக் காரணமாகவே கூறுகின்றனர். இவரது கருத்தைத்தான் ஆராய வேண்டியிருக்கிறது.

முதலில், பயிர் நிலைமை ஒரு காரணமா, காரியமா என்ற கேள்வி எழுகிறது. பயிர்த்தொழில் நிலையும் வாணிப நிலையும் ஒரே வகையாக மாறுவதாகக் கண்டபோது எது காரணம், எது காரியம்? பயிர்த்தொழில் நிலைதான் காரணம் என்று கூறுவதற்கு என்ன ஆதாரம்? மாசூல்களின் நிலை தட்பவெப்ப மாறுதலுக்கேற்ப மாறும் தன்மை உடையது. மொத்த விளைவில் மாறுதல் நிலத்தின் விளைவுத் திறன் மாறுதலாலும், பயிர் செய்யப்பபட்ட நிலத்தின் பரப்பு மாறுதலாலும் ஏற்படுகின்றது. தவிர, விளைவுத் திறன் பயிர் முறையைப் பொறுத்ததாயினும் தட்பவெப்ப நிலை மாறுதலால் பெரும்பாலும் நிர்ணயிக்கப்படுகிறது. ஆகவே மனிதன் முயற்சியைவிட இற்கையின் சக்தியே விளைவு மாறுதலுக்கு முக்கியக் காரணியாக உள்ளது. ஆகவே விவசாய உற்பத்திக்கும் கைத்தொழல் உற்பத்திக்கும் தொடர்பு இருக்குமானல் காரணம் விவசாயமாகத்தான் இருக்கவேண்டும். உண்மையில் வாணிபத் துறையில் ஏற்படும் மாறுதல்கள் பயிர்த் தொழில் பொருள்களுக்கு உள்ள தேவையைப் பாதிக்குமானாலும் பயிர்த்தொழில் வாணிபத் தொழில் மாறுதலுக்கேற்ப உடனே தன்னை மாற்றிக்கொள்ள முடிவதில்லை. ஒரு வாணிபச் சுழலின் வாழ்நாளாகிய ஆறு, ஏழு ஆண்டுகளில் பயிர்த் தொழில் இப்படித் தேவைப்படும் மாறுதலை அடைய முடியாது. ஒரு விவசாய முறையை மாற்ற வேண்டுமானாலும் பல மாதங்களுக்கு முன்னுடியே நடவடிக்கை வேண்டியிருக்கிறது. ஆகவே தேவை மாறுதல் நிலைத்திருக்கும் என்று நிச்சயம் இருந்தாலொழிய முயற்சி செய்யப்படாது. மாறுதல் மிகவும் செலவு பிடிக்கும் நடவடிக்கை ஆகும். மீண்டும் தேவை வீழ்ந்தால் சுருக்குவது கடினம். விலை வீழ்ச்சியின் பாரத்தைக் குடியானவர்களே தாங்க வேண்டியிருக்கும். ஆகவே உடனடியாக உற்பத்தி குறையாது. விலை இறக்கத்தால் வருமானம்தான் குறையும். இவ்வகையான காரணங்களால் விவசாய உற்பத்திதான் காரணி என்று கூறமுடியும்.

அடுத்தபடி, விவசாய உற்பத்தி மாறுதல் எப்படித் தொழில் சுழலின் காரணியாக வேலை செய்யும் என்று பார்ப்போம். விவசாய உற்பத்தியில் மாறுதல்கள், மாசூலின் அளவில் மாறுதல் வழியாகவும் மாசூலின் மதிப்பில் மாறுதல் வழியாகவும் வாணிபத்தைம் பாதிக்கக்கூடும். மாசூல் அளவில் மாறுதலின் விளைவை முதலில் பார்ப்போம். மாசூல் அளவுக்கேற்ப வேலை வாய்ப்பு மாறும். மாசூல் அறுவடைக்கு, கடத்துவதற்கு, பதனிடுவதற்கு, விற்பதற்கு ஆட்கள் தேவைப்படும். உற்பத்தி பேரளவில் உயர்ந்தால் குடியானவர்கள் தங்களுடைய கருவிகளை

(equipments) அதிகப்படுத்த வேண்டி வரும். இரயில்வேக்கள், மில்கள் தங்களுடைய வசதிகளை அதிகப்படுத்த வேண்டி வரும். ஆகவே தொழில் துறையில் பரந்த நடவடிக்கைகள் காணப்படும். ஆனால் விவசாயப் பொருள் உற்பத்தி அதிகப்பட்டால் அவை களின் விலைகள் வீழும். வீழும் அளவு, பொருள்களுக்குள்ள தேவை நெகிழ்ச்சியைப் பொறுத்தது. நெகிழ்ச்சிக் குறைவா யிருந்தால் வீழ்ச்சி அதிகமாக இருக்கும். இவ்வீழ்ச்சி விவசாயப் பொருள்களை ஆளும் எல்லாத் தொழில்களுக்கும் இலாபத்தை அதிகப்படுத்தும். தொழிலாளிகளின் வாழ்க்கைச் செலவைக் குறைக்கும். அதனால் கூலியேற்றம் கேட்கமாட்டார்கள். பொதுவாகக் கைத்தொழில் அனைத்தும் நலமடையும்.

விளைவு நிலை மாசூல் அறுவடைக்கு முன்னாலேயே யூகிக்கப் படக்கூடும். ஆகவே தொழில் துறையோர் மாசூல் நிலையில் நம்பிக் கையுடன் நடக்கலாம். யூக பேரத்தால் அங்காடியில் விலைகள் முன்னாடியே மாறும். வணிகர்களும் நல்ல மாசூலை எதிர் பார்த்துத் துணிவாக உற்பத்திக்காணையிடுவர். விவசாய விளைவு அதிகப்படுவது விலை வீழ்ச்சி மூலம் நுகர்ச்சியைத் தூண்டு வதோடு தொழில்களை உற்பத்தியைப் பெருக்கத் தூண்டு கிறது. இதனால் விவசாயப் பொருள்களுக்குள்ள உண்மைப் பொருள் தேவை (real demand) உயர்கிறது. வேலை நிறைவுச் சூழ்நிலை இல்லாமலிருந்தால் தொழிலாளிகள் உற்பத்தியை அதிகப்படுத்த (தம் வாங்கும் சக்தியை அதிகப்படுத்த)த் தயாராக இருப்பார்கள். வேலை நிறைவுச் சூழ்நிலை இருக்குமானால் அப்போது மாசூல் பெருக்கம் கேட்டை விளைவிக்கும். விவசாய உற்பத்தி சம்பந்தமாக அதிகமான அளவுக்கு முதலும் ஆட்களும் தேவைப்படும். இது வேலை நிறைவு நிலையில் வட்டியை உயர்த்தவும் காரணமாகலாம். சிறு அளவு செலவுத் தொகை ஏறினாலும் தாங்க முடியாத நிலையில் தொழில் இருக்கும்போது, இந்த வட்டி ஏற்றமொன்றே மந்தத்தைத் தூண்டும் சக்தியுடைய தாகக்கூடும்.

ஆகவே விவசாய உற்பத்தி அதிகப்படுவது வேலை நிறைவு வருகிற வரைக்கும் கைத்தொழில் பெருக்கத்துக்குத் தூண்டு கோலாக இருக்கும்.

அடுத்தபடி, விவசாய உற்பத்தியின் மதிப்பு (value) மாறுவதன் விளைவுகளைப் பார்ப்போம். விவசாயிகள், மற்றவர்கள் ஆகிய இரு தரத்தாருக்குமிடையே வாங்கும் சக்தி கை மாறுவதன் மூலம் விவசாய உற்பத்தி மாறுதலின் விளைவு

தொழிலைப் பாதிக்கும். விவசாய உற்பத்தி பெருகுவதால் தொழில் பெருக்கத்துக்கு வழி உண்டானபோதிலும் வாங்கும் திறன் கைமாறுவது பாதகத்தை உண்டுபண்ணலாம். விளைவு நிச்சயமில்லை. பயிர்ப் பொருளுக்குத் தொழிலின் தேவை நெகிழ்ச்சியற்றிருந்தால், உற்பத்தி அதிகமாகும்போது குடியானவர்கள் இலாபமடைந்து மற்றவர்கள் இழப்பார்கள். நெகிழ்ச்சியுடைய தாயின் குடியானவர் இழப்பர். மற்றவர்கள் இலாபமடையவர். நெகிழ்ச்சி ஒன்றுக்குச் சமமானால் வாங்கும் திறன் கைமாறாது. முக்கியமான விளைவுகள் ஒன்றுமிரா. ஆகவே நிலையை ஆய்ந்து பார்க்க வேண்டும். விவசாயப் பண்டங்களுக்குத் தேவை நெகிழ்ச்சியற்றதென்று வைத்துக் கொள்வோமானால் உற்பத்தி அதிகப்பட்டு விலை குறையும்போது விவசாயப் பொருள் களின் மேல் செய்யப்படும் செலவுத் தொகை குறையும். இந்தக் குறைந்த தொகையிலும் பெரும்பகுதி போக்குவரத்து, வினியோக காரியத்தில் போய்விடும். குடியானவர்களுக்குச் செல்லும் பகுதி சிறிதாக இருக்கும். அவர்களுடைய செலவுச் சக்தி குறையும். மற்றவர்கள் செலவுச் சக்தி ஏறும். நுகர்வோர் பயிர்ப் பொருள் வாங்களில்மீத்தும் பணத்தைத் தொழில் பொருளில்செலவுசெய்ய முடியும். ஆனால் சில தொழில்கள் மற்றவைகளைவிட நலம் அடையும். குடியானவர்கள் தேவையைப் பூர்த்தி செய்யும் தொழில்கள் மந்தப்படும். மற்றவை பெருகும். இது சுழற் பெருக்கத்தை (cyclical expansion) உண்டாக்குமா? குடியானவர்களல்லாத மக்கள் செலவு செய்யும் வேகம் குடியானவர்களுடைய செலவு வேகத்தைவிட அதிகமாயிருந்தால், வாங்கும் திறன் கை மாறிய தன் விளைவாகத் தொழில் நடவடிக்கை தூண்டப்படலாம். வாங்கும் திறன், செலவு செய்யும் பகுதிகளிலிருந்து சேமிக்கும் பகுதிகளுக்கு மாறுமானால் சுழல் பெருக்கத்துக்குக் காரண மாகலாம். ஆனால் இப்படி வாங்கும் திறன் பெயரும்போது எப்படிப் பல பகுதிகள் பயனடைகின்றன என்பதைப் பற்றி ஒன்றும் உறுதியாகக் கூற முடியாது. ஏனெனில் பல சமூகப் பகுதிகளின் செலவுப் பழக்கத்தைப்பற்றி ஒப்பிட நமக்குச் சான்றுகளில்லை. ஆகவே வாங்கும் திறன் பெயர்ச்சி சுழலைத் தூண்டும் என்று உறுதியாகச் சொல்வதற்கில்லை.

மேலே வெளி நாட்டுத் தொடர்பற்ற நாட்டை அனுமானித்தோம். ஏற்றுமதி முடியுமானால் அதன் விளைவு என்ன வென்று பார்ப்போம். மகசூல் அதிகமான போது ஏற்றுமதி உயரும். அயல்நாட்டுத் தேவையும் உள்நாட்டுத் தேவையும் சேர்ந்து நெகிழ்ச்சியை ஏற்றமானதாகச் செய்யலாம். ஆகவே விலை விழ வேண்டியிராது. அதனால் விவசாய வருமானம் அதிகப்

படலாம். இந்த வருமானம் பொன் உருவில் பெறப்பட்டால் நாட்டின் செலாவணி பெருகலாம். வட்டி இறங்கும். பொருளா தாரப் பெருக்கத்துக்கு வழி உண்டாகும்.

ஆகவே பொதுவாக நல்ல மாசூல் தொழில்களுக்குத் தூண்டு கோலாக இருக்கின்றன எனலாம். மாசூல் குறைவாக இருந்தால் இதற்கு எதிரிடையான விளைவுகளை எதிர்பார்க்கலாம். ஆகவே மாசூல் குறைந்து பயிர்விலைகள் உயர்ந்திருக்கும்போது கைத் தொழில்களில் மந்தம் காணப்படும். நல்ல மாசூலும் மட்ட விலையும் இருக்கும்போது தொழிலில் செழிப்புக் காணப்படும். இது அனுபவத்தில் உண்மையாகக் காணப்படுமானால் விவசாய மாறுதல்கள் சுழலுக்குக் காரணம் என்று கூறலாம். ஆனால் அனுபவமோ சரியான முடிவு தரவில்லை. புள்ளி இயல் முறையில் செய்த ஆய்வுகளில் மாசூல் அளவுக்கும் தொழில்துறை நெளிவுகளுக்கும் தெளிவான தொடர்பு காணமுடியவில்லை. இப்படி அனுபவம் சரியான முடிவு தராமைக்குக் காரணம், இந்தக் கொள்கையில் சில ஏற்காத எடுகோள்கள் ஆளப்படுவ தாகும். நாம் மாசூல் என்று பேசும்போது ஏதோ குறிப்பிட்ட ஒரு பொருள் மட்டும்தான் ஒரு நாட்டில் உற்பத்தியாவதாய் நினைப்பதாகத் தெரிகிறது. உண்மையில் அநேக பொருள்கள் அநேகச் சூழ்நிலைகளில் விளைவிக்கப்படுவதனால், ஒவ்வொன்றின் உற்பத்தியும் விற்பனையும் வெவ்வேறு விதமாக நிர்ணயிக்கப் படும். ஆகவே மாசூல் மாறுதல்களின் விளைவுகள் ஒன்றுக் கொன்று ஈடு செய்பவையாக இருக்கலாம். தவிர, பல விலைகளை உடைய பொருள்கள் அங்காடிக்கு ஒரேயடியாக வருவதில்லை. ஆகவே தொழில் துறையில் விளைவுகள் ஒரேயடியாகக் காணப் படுவதில்லை. மாசூல் மாறுதலின் விளைவு பரந்து காணப்படும். சுழலைத் துவக்கும் சக்தி இராது. தவிரவும் மாசூல்களை இருப்புச் செய்யக்கூடுமானால் விலை மாறுதலைக் கட்டுப்படுத்தக் கூடும். தவிர, விவசாய நிலை பொருளாதாரத்தைப் பாதிக்க வேண்டு மானால் விவசாயம் பொருளாதாரத்தில் மிக முக்கியமாக இருக்க வேண்டும். முன்னேற்றம் அடைந்த நாடுகளில் பொருளாதாரம் விவசாயத்தைப் பொறுத்தன்று. ஆகவே அறுவடைநிலை தொழில் துறை விளைவுகளுக்குப் பின்னணியில் ஒரு சக்தியாக இருக்கும் என்றுதான் நாம் கூற முடியும்.

## சூரியப் புள்ளிக்கோட்பாடுகள்
## (Sun-spot Theory)

விவசாய விளைவு இயற்கையைப் பொறுத்தது என்பது உண்மையானால் இந்த இயற்கையில் சுழல் உண்டா என்ற ஐயம்

தோன்றுகிறது. ஜெவன்ஸ் S. Jevons என்ற ஆங்கிலப் பொருளாதார நிபுணர் சூரியனிடத்தில் உள்ள புள்ளிகள் மாறுவது தொழில் உலகில் மாறுதலை உண்டாக்கும் என்கிறார். சூரியப் புள்ளிகள் சராசரி 10·5 ஆண்டுச் சுழலைப் பெற்றிருந்தன. அவர் சென்ற நூற்றாண்டில் கண்ட சில நெருக்கடிகள் சூரியப் புள்ளிகள் தோன்றிய காலத்தில் தோன்றின. இவை இரண்டையும் அவர் பிணைத்தார். சூரியப் புள்ளி உற்பத்தியில் மாறுதலை உண்டாக்கி வாணிபச் சுழலை உண்டாக்குகிறது என்று நினைத்தார். ஜெவன்ஸ் இரண்டுக்கும் உள்ள காரண காரியத் தொடர்பை விளக்க முயன்றார். சூரியப் புள்ளிகள்→தட்பவெப்ப நிலை→விவசாயம்→தொழில் நிலை—இப்படித்தொடர்பு காண முயன்றார். சிலர் சூரியப் புள்ளி காரணமாயினும் அது விவசாயத்தின் வழியாகத்தான் இருக்க வேண்டுமென்ற அவசிய மில்லை என்று கூறினார்கள். இரசாயன முறையில் தொடர்பு சிலரால் தரப்பட்டது. புள்ளிகள்→மனிதனுடைய சுகாதாரம் →உள்ளம்→தொழில்நிலை—என்று இப்படிக் காரண காரியத் தொடர்பு கண்டனர்.

பொருளாதாரத் துறையினர் இவ்விதக் கருத்துக்களை ஏற்கவில்லை. ஆனால் விவசாயத்துறை மாறுதல் சுழலைப் பாதிக்கும் என்பதைப் பற்றி ஐயப்பாடில்லை.

## உளச்சார்பான காரணிகள்

### (Psychological causes)

உளச்சார்புக் காரணி என்பது பொருளாதார நிலையைப்பற்றி மக்களின் மனப்பாங்கு (attitude of miud) மாறுவதாகும். புற வுலகில் உண்மையில் மாறுதல் ஒன்று ஏற்பட்டதோ இல்லையோ, மனம் ஒருவாறாக நினைக்கின்றது. அதைப் பெரிதாக்கி அதனடிப் படையில் மனிதன் நடக்கிறான். ஆனால் பொதுவாகக் கூறின், புறவுலகில் கண்ட ஒரு மாறுதலின் அடிப்படையில்தான் மன உலகில் மாறுதல் ஏற்படும். ஆனால் மன உலகில் அது திரித்துணரப்படலாம்; மிகைப்படுத்தப்படலாம்.

உலகில் எல்லா மாறுதல்களும் ஒரு நியதிப்படி ஆண்டு தோறும் நிகழ்வனவாயின் மன உலகில் மாறுதலுக்கு இடமில்லை. நியதி இன்றி மாறும் உலகிலும்கூட வருவதை மனம் துல்லியமாக முன்னறிய முடியுமாயின்கூட, எதிர் காலத்தைப் பற்றித் தவறு தலான முடிவுகள் செய்யப்படமாட்டா. உலகில் இடைவிடாது மாறுதலும் மனிதன் அறியாமையும் கண்கூடாயின் படியால்,

முடிவில் தவறுகள் காணப்படுகின்றன. ஆகவே மனநிலைக் காரணிகள் என்பன இந்தத் தவறுகளேயாகும். விஷயங்களைப் பற்றித் தவருக எண்ணி முடிவு செய்து கொள்கிறோம்.

ஏன் மனம் தவருக எண்ண வேண்டியிருக்கிறது? ஒரு காரணம் தற்காலச் சுற்று வழி உற்பத்தி முறை; இரண்டாவது, பொருளாதாரத் துறையில் முடிவுகள் தனித்தனிப் பொருளாதார அலகுகளால் (economic units) ஒன்றுக்கொன்று சம்பந்த மின்றி முடிவு செய்யப்படுவது; முன்னையது முதலாளித் துவத்தின் அம்சம். இரண்டாவது இன்றியமையாததன்று. இவை எப்படி எதிர்காலத்தைப் பற்றிய கருத்தில் தவறை உண்டாக்குகின்றன? முதலீட்டுக்கும் விளைவுக்கும் நுகர்ச்சிக்கும் நெடிய காலம் வேண்டியிருக்கிறது. ஆகவே எதிர்காலத்தை மிக முன்னேக்கி உற்பத்தி நடக்க வேண்டியிருக்கிறது. நடக்கப் போவதை அனுசரித்து இன்று நடவடிக்கை எடுக்க வேண்டி யிருப்பதால் தவறுண்டாவது எளிது. இடைவிடாது மாறுதல் களுக்குட்படும் இயக்கப் பொருளாதாரத்தில் (dynamic economy) தவறுகள் அதிகமாகும். உற்பத்தி செய்யுமிடத்துக்கும் நுகர்ச்சி இடத்துக்கும் தூரம் அதிகமாயின் இதற்கேற்பவும் தவறுண்டாகலாம். நுகர்வோர் விருப்புகள் மாறுவது மற்ரொரு நிச்சயமற்ற காரணி. விருப்பை நிலைப்படுத்தச் செய்யும் விளம்பரங்களும் நிச்சயமான விளைவையுடையன அல்ல. நிற்க, தொழில் முயல்வோருக்கிடையே போட்டிகள் நிறைய உண்டாகையினல் இதுவும் விளைவு நிச்சயமின்மையை (uncertinty) அதிகப்படுத்துகிறது. உற்பத்தி செய்பவர்கள் பலரும் தேவை மாறுதலால் பலனடையத் தம் முதலீட்டை அதிகப்படுத்தும்போது அமித உற்பத்தியிலேயே முடியும்.

செலவு சம்பந்தமாகவும் தவருன முடிவு செய்யப்படலாம். விற்பனையை எதிர்பார்க்கும் அளவுக்கு உற்பத்தியை உயர்த்தச் சாதனங்களை வாங்கும் விஷயத்தில் முன் கூடிய ஒப்பந்தம் செய்து கொள்ளலாம். ஆனல் உழைப்பு, முதல் ஆகியவற்றுக்கு இது முடியாது. அவ்வப்போதுள்ள விலையில்தான் வாங்க வேண்டும். ஆகவே செலவின் போக்கைப் பற்றித் தவருன எண்ணங்கள் உண்டாகலாம்.

இத்தகைய முன் கணிப்புத் தவறுகளை (errors of forecast) ஓர் உதாரணத்தால் விளக்கலாம். ஒரு பொருளின் உற்பத்தி துவங்கி அது முடியும் இடைக் காலத்தை கருப்பக் காலம் (gestation) என்போம். இக்காலம் பெரும்பாலும் நீண்டது. போட்டிப்பொருளாதாரத்தில், இக் கால இடையீடு காரணமாகத்

தவறுண்டாகிப் பொருத்தக் கேடும் கோளாறுகளும் ஏற்படுகின்றன. எக்காரணத்தாலோ நுகர் பொருள் தேவை உயர்ந்ததாக வைத்துக்கொள்வோம். விலை உயரும். தொழில் முயல்வோர் தங்கள் உற்பத்தியை அதிகப்படுத்துவர். இதனால் தொழிலுலகில் நடவடிக்கை அதிகமாகும். ஆனால் இடைக் காலத்தில் நுகர் பொருள் ஆக்கம் அதிகமாக இராது. விலைகள் ஏறிக் கொண்டே இருக்கும். இது இன்னும் அதிகமாக உற்பத்தியைப் பெருக்கத் தூண்டும். விலையை மட்டும் கருதித் தொழிலதிபர் தவறான முடிவுக்குத் தூண்டப்படுகின்றனர்; தனித்தனியே தவறைச் செய்கின்றனர். கூடிக் கலந்து ஆலோசிக்க வழியில்லை. ஆகவே கருப்பக் காலத்தில் சிறு தேவை மாறுதல் பன்மடங்காக உற்பத்தி செய்ய (தவறாக)த் தூண்டுகிறது. கருப்பக் காலம் முடிந்ததும் உற்பத்தி அதிகமாகக் காணப்பட்டு, விலைகள் விழுந்து, இதுவே அவநம்பிக்கை மனோ நிலைக்கு வித்தாகிறது. ஆகவே பூரிப்பென்பது (boom) முதிர்வு காலத்தில் வேரூன்றிய தவறினால் உண்டாகிறது. தவறின் பருமன், ஆகவே பூரிப்பின் நீட்சி, இந்த கருப்பக் காலத்தின் நீட்சியைப் பொறுத்திருக்கும்.

இப்படி அவ்வப்போதைய விலையை மட்டும் கருதியதால் உண்டாகும் தவறுதலான மிகைப் பெருக்கம் (over expansion) யூக வாணிபத்தால் மிகைப்படுத்தப்படும். யூக வணிகர் இன்னும் விலை ஏறும்போது இலாபமடைய எண்ணி இருப்பை அதிகப் படுத்துவார்களாகையினால் இவர்கள் தேவையும் தவறான உற்பத்திப் பெருக்கத்தை அதிகப்படுத்தும். விலை இறங்கும்போது இவர்களும் அவநம்பிக்கையுடன் இருப்பைக் குறைப்பார் களாகையினால் மந்தத்துக்கு இவர்களும் உதவியவராவார்கள்.

ஏன் எல்லாருமே ஒருசேர ஒரேபோது ஒருமனதாய் நம்பிக்கையையோ அவநம்பிக்கையையோ கொள்ள வேண்டும்? காரணம் எல்லாருமே விலையின் மேல் கண் வைப்பது. தவிர, நம்பிக்கை-அவநம்பிக்கை (optimism and pessimism) ஒரு தொற்று வியாதி. எல்லாரையும் ஒரு சேரப் பிடிக்கவல்லது. இன்றி, நம்பிக்கையுடன் ஒருவன் செலவு செய்தால் அதை வருமானமாகப் பெற்றவர்களும் நம்பிக்கை பெறுகின்றனர். தவிர, நம்பிக்கையுடைய வணிகன் தாராளமாக இக்காலத்தில் கடன் கொடுப்பானாதலால் அவனிடம் பேரம் செய்யும் சில்லறை வணிகனும் நம்பிக்கையுடன் கடன் கொடுப்பான். இப்படி நம்பிக்கை பரவுகிறது.

ஆனால் என்றோ ஒரு நாள் உண்மை புலனாகும். நஷ்டம் தோன்றும். அப்போது முன் சொன்ன முகாந்தரங்கள் எதிர் முறையில் வேலை செய்யும். முடிவில் தொழில் சுருக்கம் ஒரு நிலைக்கு வந்ததும், உற்பத்தி அனாவசியமாக மிகவும் குறைக்கப் பட்டு விட்டதாகத் தோன்றி, நம்பிக்கை மீண்டும் பிறக்கும். சுழல் துவங்க இடமுண்டாகும்.

இப்படியாக இந்த உளநிலை மாறுதல் கோட்பாடு சுழலை விளக்குகிறது. ஆனால் இவ்விளக்கம் தனியாகச் சுழலை விளக்க வியலாது. பிற கோட்பாடுகளுடன் சேர்ந்து விளக்க உதவும். உண்மையில் புறவுலகில் நிகழும் மாறுதலே மன உலகில் மாறுதலுக்குக் காரணமாக இருக்குமாதலால், மூல காரணம் உண்மைப்பொருள் காரணிகளே (real factors). நெருக்கடிக்கும் மீட்சிக்கும் தக்க விளக்கம் தர இதனால் முடியாது. நெருக்கடி தவறை உணர்வதால் உண்டாவதென்பது உண்மை. ஆனால் ஏதாவது ஒரு புறவுலக நிகழ்ச்சி—உதாரணமாக முதல் போதாமை, தேவைத் தயக்கம், பாங்கு உதவி நிறுத்தம், கூலி உயர்வு முதலியன—துணை செய்யும்போது தான் தவறு உணரப்படும். மீட்சியின்போதும் ஏதாவது ஒரு காரணம்—நுகர் பொருள் பற்றுக்குறை, புதுக் கண்டுபிடிப்பு, பணப் பெருக்கம், செலவு குறைவு ஆகியன—துணை செய்ய வேண்டும். உளநிலை, குவிப்புக்கு நல்ல விளக்கம் தருமேயொழியத் துவக்கத்துக்கு விளக்கம் தராது. இந்த அளவுக்கு இவ்வகைக் கோட்பாடுகள் உண்மை உடையன.

### முடிவுரை

சுழல் பற்றிப் பல கோட்பாடுகளைப் பார்த்தோம். அவை சுழலில் உள்ள பல சிக்கலான சக்திகளைப் புலப்படுத்தின. சில சக்திகள் வெளியிலிருந்து வந்து பொருளாதாரத்தில் புகுந்து சுழல்களை உண்டாக்குகின்றன என்றும் சில சக்திகள் பொருளா தாரத்தின் அங்கத்திலேயே இருப்பன என்றும் தெரிகிறது. சுழலின் போக்கைப் பல்வேறு வழிகளில் விளக்கக்கூடும் என்பதும் தெரிகிறது. எல்லாக் கோட்பாடுகளும் சுழலை யாதோ ஒரு வழியில் விளக்குவதால் எல்லாமே சரியானவையாகத் தோன்றுகின்றன. ஆனால் இவைகளில் எது முழுதும் உண்மை? ஒவ்வொன்றும் ஓர் அம்சத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டு விளக்குகிறது.

தற்காலப் பொருளாதார இயல் உலகில் சுழலை ஒரு முதலீட்டுச் சுழலாகக் (investment cycle) கருத வேண்டுமென்று

கூறுகிறது. நுகர்ச்சி சுமாராக நிலையான ஒன்றானதால், முதல் மிகவும் மாறக் கூடியதாகையினால், இதையே மாறுதலுக்கு மூல காரணியாக நினைக்க இடமுண்டு. ஆனால் முதற் பொருள் உற்பத்தி பேரளவில் நெளிவதே முதலீடு மாறுவதன் அறிகுறியாக இருக்கிறது. இந்த நெளிவுகள் எப்படி உண்டாகின்றன என்பதற்குப் பல விளக்கங்கள் தரப்படுகின்றன. அவை யாவன:—

அமித சேமிப்பு, வலிந்த சேமிப்பு (forced savings), இலாப ஏற்றம், ஒரேபோது பல கண்டுபிடிப்புக்கள், அமிதத் துவக்க முதலீடு, முடுக்கி (acceleration), முதலின் இறுதிநிலைத் திறனில் மாறுதல் ஆகியவை.

பல கொள்கைகளையும் ஊன்றிப் பார்த்தால் அவைகளில் பெருக்கப் போக்கும் சுருக்கப் போக்கும் ஏறக்குறைய ஒரே வகையாக விளக்கப்படுகின்றன. கருத்து வேறுபாடு திருப்பத்தைப் (turning point) பற்றித் தான் காணப்படுகின்றது. எப்படி மந்தம் பெருக்கமாக மாறுகிறது அல்லது பெருக்கம் மந்தமாக மாறுகிறது என்பதில் தான் கருத்து வேறுபாடு. பெருக்கம் துவங்கினால் எப்படி அது வளருகிறது என்பதை விளக்க முடியும். இந்த விளக்கத்தில் ஒவ்வொரு கொள்கையும் சில அம்சங்களை வற்புறுத்துகிறது. அவைகள் அனைத்தையும் நாம் ஒப்புக் கொள்ளுவதில் இடர்ப்பாடில்லை.

கீழ்த்திருப்பத்தைப் பற்றி (down turn) ஒன்று மட்டும் எல்லாக் கொள்கைகளும் ஒப்புக் கொள்கின்றன. இது வேறு புற நிகழ்ச்சிகள் இதை உண்டாக்கக் கூடுமாயினும் பொருளாதாரத்திலே பெருக்கத்தின்போதே இந்தத் திருப்பத்துக்கு வேண்டிய சில சக்திகள் தோன்றுகின்றன என்பது. இந்தச் சக்தி பணம் போதாமை என்பர் சிலர். உற்பத்திக் கட்டமைப்பில் மாறுதல் என்பர் சிலர். சிலர் சேமிப்புக் குறைவு என்பர். சிலர் சேமிப்பு அதிகம் என்பர். இன்னும் சிலர் தொழில் முயல்வோர்களின் எதிர்பார்ப்புகளில் மாறுதல் என்பர். இன்னும் சிலர் முடுக்கியைக் (acceleration) காரணம் என்பர்.

மந்தத்தில் இருந்து மேல் திரும்புவதும் (upturn) சம்பந்தமாக இந்த அளவுக்குக்கூட ஒப்புதல் காணப்படுவதில்லை. சிலர் மந்தத்தில் பொருளாதாரமே தோற்றுவிக்கக் கூடிய திருப்பச் சக்தி அற்பமானது என்று நினைக்கின்றனர். இவர்கள் கருத்துப்படி ஏதாவது ஒரு புறச் சக்தி பொருளாதாரத்தைத் தூக்க வேண்டியிருக்கிறது.

இப்படி விளக்கங்கள் வேறுபடுவதனுல் நிவர்த்திக்கான நடைமுறை ஆலோசனைகள் வேறுபடுகின்றன. சிலர் தானுகவே திருப்பம் நிகழுமாதலால் அரசாங்கத் தலையீடு கூடாது என்பர், அல்லது தலையிட்டாலும் இயற்கையில் உண்டாகக்கூடிய சக்திகளை வலுப்படுத்தும் வகையில் இருக்க வேண்டும் என்பர். இந்தச் சுய திருப்பச் சக்தியில் நம்பிக்கை இல்லாதவர்கள் புறச் சக்தி தலையிடுவதற்குக் காத்திருப்பார்கள். அது வரத் தவறினுல் அரசாங்கம் தலையிட வேண்டும் என்பார்கள்.

# 47. நிலைபேறு

## (Stabilisation)

தற்காலப் பொருளாதாரத்தின் ஓர் அம்சமாகச் சுழல்கள் காணப்படுகின்றன. ஆதலால் அடிப்படை நடவடிக்கைகளை எடுத்துச் சுழலைத் தவிர்க்க வேண்டும். சமீபக் காலத்திய பெரிய மந்தம் அநேக நாடுகளில் வேலையின்மையின் கொடுமைகளைப் புலப்படுத்தியது. அது முதற்கொண்டு எல்லா நாடுகளும் அதைக் கட்டுப்படுத்துவதைப் பொருளாதாரத் துறையின் நோக்கமாகக் கொண்டுள்ளன. ஆனால் விரும்பியபடி செய்வது கடினம். சுயேச்சைப் பொருளாதார முறையால் அதைத் தவிர்ப்பதா, அல்லது கட்டுப்பாட்டுப் பொருளாதார முறையில் (Controlled econmy) தவிர்ப்பதா என்பது ஓர் அடிப்படைப் பிரச்சினை. சுயேச்சைப் பொருளாதாரத்தில் என்ன செய்யக் கூடும் என்பதைப் பற்றியே நாம் இங்கு ஆராயப் போகிறோம். சுழலில்லா நிலைபேறு நடவடிக்கைகளைப் பல விதங்களில் வகைப்படுத்தலாம். முக்கியமாகப் பணத்துறை நடவடிக்கைகள், நிதித்துறை நடவடிக்கைகள், பொருளாதார அமைப்பின் அங்க மாறுதல் சம்பந்தமான நடவடிக்கைகள் என்று வகுக்கலாம்.

நாம் இங்கு இந்த நடவடிக்கைகளைப் பொதுப்படவே ஆராய்வோம். இவை பொருளாதார இயலில் வேறு துறைகளோடு சம்பந்தப்பட்டவையாகையினால் இவைகளின் விளக்கத்தை அங்குக் காண வேண்டும்.

### (i) பணத்துறை நடவடிக்கைகள்

### (Monetary Measures)

எல்லாக் கோட்பாடுகளாலும் பணத்தொகை மாறுதல் சுழலின்போக்கில் முக்கிய அம்சமாகக் கூறப்படுகின்றது. பண

அளிப்பு உதவி செய்யாவிடில் அநேக சக்திகள் சிக்கலை உண்டாக்கச் சக்தியற்றிருக்கும். ஆகவே பணத் தொகையை நிருவகிப்பதன் மூலம் சுழலைக் கட்டுப்படுத்தலாம் என்பது ஒரு கொள்கை. பணத்துறை நடவடிக்கைகள் பாங்குகளைக் கட்டுப் படுத்துவதன் மூலம் வேலை செய்யும். பாங்குகளைக் கட்டுப் படுத்தும் பொறுப்புடையது மைய பாங்கு. மைய பாங்கு கட்டுப்பாட்டுக்கு ஆளும் முறைகள் பலவற்றையும் முன்னரே கண்டுள்ளோம். முதலில் இங்குக் கழிவு வீதக் கட்டுப்பாட்டைப் பார்ப்போம்.

மைய பாங்கு கழிவு வீதத்தை உயர்த்திஞல் பாங்குகள் மைய பாங்கிடம் கடன் வாங்குவது குறையும். கழிவு வீதம் உயர்ந்தால் அங்காடி வட்டி உயரும். இது சில முதலீடுகளை இலாபகரமற்றதாகச் செய்யும். தொழில் முயல்வோரின் நம்பிக்கையைப் பாதிக்கும். இதஞல் தொழில் பங்குகளின் மதிப்பும் பண்டங்களின் விலையும் வீழும். முதலீடு குறையும். தகுந்த சூழ்நிலைகளில் கழிவு வீத மாறுதலே பணவீக்கக் காலத்தில் நிலைபேற்றை உண்டாக்கக் கூடும். ஆஞல் இது எச்சரிக்கையாக ஆளவேண்டிய ஒரு கருவி.

கழிவு வீதத்தைக் குறைத்தால் இதற்கு எதிரிடையான விளைவுகள் தோன்றும். பணம் மலிவாகக் கிடைப்பதஞல் முதலீடு பெருகி மந்தக் காலத்தில் நிலைபேறுண்டாகலாம்.

கழிவு வீதக் கோட்பாடு அநேக எடுகோள்களை உடையது. கழிவு வீதம் மாறினதும் பாங்குகள் வட்டி வீதத்தை மாற்றும் என்று அனுமானிக்கப்படுகிறது. பாங்குகள் புறக் கணித்தால் இந்தக் கருவி பயனற்றது. பெருக்கம் துவங்கும் போது பாங்குகளிடம் எச்ச ரிசர்வு இருக்குமாஞல் பாங்குகள் கழிவு வீதம் ஏறியதைப் புறக்கணிக்கலாம். பாங்குகள் மைய பாங்கிடம் கடன் வாங்குவதாயிருந்தாலும் அங்காடி வட்டி வீதம் உடனேயே மாருமல் இருக்கக்கூடும். வர்த்தகத் துறை வட்டிகள் மட்டும் மாறலாம். மற்ற வகைக் கடன் வட்டிகள் மாறுவது கடினமாக இருக்கலாம். இவ்விதக் காரணங்களால் கழிவு வீத மாறுதலை மட்டும் நம்ப இடமில்லை.

ஆகவே வெளி அங்காடி நடவடிக்கைகளை மைய பாங்கு எடுக்க வேண்டியிருக்கிறது. இந்த நடவடிக்கைகள் நேரடி யாகப் பாங்குகளின் ரொக்க நிலையைப் பாதிக்கின்றன. கழிவு வீத மாறுதலைவிட இரு வகைகளில் இது சக்தி வாய்ந்தது.

(1) இதன் சக்தி பாங்குகள் கடன் வாங்க வருவதைப் பொறுத்ததன்று. மையபாங்கு விரும்பும்போது ஆளக்கூடியது. (2) விளைவு நேரடியாக உடனே காணப்படும். ரொக்க நிலை நேரடியாகப் பாதிக்கப்படும். ஆனால் பாங்குகள் வேறு வழியில் மைய பாங்கிடம் உதவி பெற முடியாத நிலை இருக்க வேண்டும். இன்றேல் இது சக்தி யற்றதாகும். வேறு வகையில் உதவி பெறுவதுண்டாயினும் அந்த உதவி கடினமாக்கப்பட வேண்டும். இதனால் கழிவு வீதக் கருவியும் இதுவும் இரண்டும் சேர்ந்து ஆளப்படுவது வழக்கம். இப்படி வெளி அங்காடி நடவடிக்கையோடு சேர்ந்து கழிவு வீதம் ஆளப்பட்டபோதும் இதனுடைய சக்தி பல சூழ்நிலைகளைப் பொறுத்தது. முதலில் பெருக்கக் காலத்தில் இதன் சக்தியைப் பார்ப்போம்.

(1) பெருக்கக் காலத்தில் நம்பிக்கையும் இலாபமும் அதிகமாயிருப்பதால் வட்டி உயர்வைப் யாரும் பொருட்படுத்தாமல் இருக்கலாம். காரணம் மொத்தச் செலவில் வட்டிச் செலவு ஒரு சிறு பகுதியே. ஆனால், நாளடைவில் ஏறும் வட்டி பங்குகளின் மதிப்பைக் குறைத்து முதலீட்டைத் தடுக்கும். நிற்க, நடவடிக்கை பூரிப்பு முதிர்ந்த பின் எடுக்கப்படுமாயின் முன்னுடியே வினைமுற்றி விட்டிருக்கும்.

(2) வட்டி உயர்வு அயல் நாட்டிலிருந்த பணத்தைக் கவர்ந்து உள்நாட்டுக் கட்டுப்பாட்டைப் பயனில்லாது செய்து விடலாம். பொன் திட்டத்தின் கீழ் இது நிகழும்.

(3) பணத்தொகை மாறினும் பணப்புழக்க வேகம் அதற்கு எதிரிடையாக மாறலாம். பணப்புழக்கத்தைக் கட்டுப்படுத்த முடியாது.

(4) வெளி அங்காடி நடவடிக்கை எடுக்க மைய பாங்கிடம் போதுமான அளவுக்குச் செக்யூரிட்டிகள் இல்லாமல் இருக்கலாம். இருந்தாலும் விற்பதில் ஏற்படும் நஷ்டத்தைத் தாங்கமுடியாமல் இருக்கலாம். ஆகவே, பெருக்க காலத்தில் முதலில் தான் இது ஆளக்கூடியதாக இருக்கும். ஆனால் சமீப காலத்தில் அரசாங்கத்தின் கடன் தொகை ஏராளமாக வளர்ந்துவிட்டதால் போதுமான அளவு செக்யூரிட்டிகள் இருக்கும் என்று எதிர் பார்க்கலாம்.

(5) அரசாங்கம் நிறையக் கடன் பளுவுடையதாகையால் அது வட்டி வீதத்தை உயர்த்தத் தயங்கலாம். செக்யூரிட்டியின் மதிப்பு வீழ்வதை விரும்பாமலிருக்கலாம்.

(6) பணத்துறை நடவடிக்கைகள் எல்லாம் பலன் தர வேண்டுமானல் தகுந்த காலத்தில் ஆளப்படவேண்டும். அவசரப்பட்டு ஆண்டால் வேலை நிறைவு நிலையை அடைவது தடுக்கப்படும். காலம் தாழ்த்தினல் பூரிப்பை அடக்க முடியாது; பண வீக்கம் உண்டாகிவிடும். எப்போது தலையிடுவது, எவ்வளவு தலையிடுவது என்பதை நிர்ணயிப்பது கடினம். பொன் பெயர்ச்சியையும் ரிசர்வு நிலையையும் அறிகுறியாக ஆளலாம். ஆனல் எல்லாப் பொன் வெளியேற்றங்களும் கெடுதலாகக் கருத முடியாது. ஹாட்ரி போன்றவர்கள் ரிசர்வைக் கவனிப்பதால் சிக்கல் உண்டாகிறது என்று கூறுவார்கள். சிலர், விலை மட்டத்தை அறிகுறியாக வைத்துக்கொள்ளவேண்டும் என்பர். ஆனல் இதுவும் பொருத்தமானதன்று. ஏனெனில் விலை மாறுதல்கள் பல காரணங்களால் நிகழலாம்.

அடுத்தபடி மந்தக் காலத்தில் கழிவு வீதம் பயன்படுமா என்று பார்ப்போம். வீக்கக் காலத்தைவிட அதன் சக்தி மந்தத்தில் குறைவாகவே இருக்கிறது. மந்தத்திலிருந்து மீளுவது வருத்தமான, மெதுவான வேலை. இழந்த நம்பிக்கையைத் தூண்டுவது, எழுப்புவது கடினம். பணம் மலிவாகக் கிடைத்தாலும் தொழில் துறையோர் வாங்க முன்வருவதில்லை. எதிர் காலம் மிகவும் இருட்டாக இருப்பதால் இது இயற்கை. இந்த நிலையில் வெளி அங்காடி நடவடிக்கைகூடப் பயன்படாது. பாங்குகளுடைய கடனை மலிவாகச் செய்யுமேயொழிய முதலீட்டை தூண்ட முடியாது. பாங்குகளிடம் ரிசர்வு குவிந்து வருமானல், மேலும் பணப் பெருக்க சக்தியை உண்டாக்கினல் திடீரென்று பணவீக்கம் தோன்றுமோ என்ற அச்சத்துக்கும் இடமுண்டு.

ஆகவே, கழிவு வீத மாறுதல், வெளி அங்காடி நடவடிக்கைகள், தகுந்த நேரத்தில் தகுந்த அளவில் ஆளப்பட்டாலொழியப் பயன்படா. ஆனல் இது முடியாது. ஆகவே வேறு முறைகளை அரசாங்கம் நினைக்கவேண்டியிருக்கிறது. அந்த முறையில் ஒன்று ரிசர்வு விகிதத்தை மாற்றுவது. இந்தக் கருவி வைப்புகளுக்கு எதிராக இருக்கவேண்டிய ரிசர்வு வீதத்தை மாற்றுகிறது. இது எளிதில் ஆளக்கூடிய கருவி. பணப் பெருக்கம் வேண்டும்போது பாங்குகள் வைத்திருக்க வேண்டிய ரிசர்வு விகிதத்தைக் குறைக்கலாம். பணச் சுருக்கம் வேண்டும் போது விகிதத்தை உயர்த்தலாம்.

நாம் இதுவரை குறிப்பிட்ட பணத்துறை நடவடிக்கைகளை ஒரு தனிப்பட்ட நாடு ஆள முடியுமா என்று பார்ப்போம். ஒரு

நாடு எடுக்கும் நடவடிக்கைகளை அதன் அயல் நாட்டுத் தொடர்பு பாதிக்கக்கூடும். உதாரணமாக, பொன் திட்டத்தின் கீழ் உள்நாட்டுப் பொருளாதார நிலையைச் சமாளிக்க எடுக்கும் நடவடிக்கைகள் சில, அயல் நாட்டுப் பொருளாதாரத் தொடர்பில் பாதகமான விளைவுகளை உண்டாக்கலாம். பொன் திட்டத்தின் கீழ் அயல் நாட்டுப் பொருளாதாரத் தொடர்பு நிலை பெறுவதற்கு அவசியமான மாருமாற்று வீதத்தைப் பெறவும் உள்நாட்டு வேலை நிறைவைப் பெறவும் எடுக்க வேண்டிய நடவடிக்கைகளுக்குள் முரண்பாடு ஏற்படலாம். மாற்று வீதத்தைக் காக்க வடிப்பு அவசியமாகலாம். ஆனால் இது உள்நாட்டில் மந்தத்தை உண்டாக்கும். தவிர அயல் நாட்டில் மந்தம் இந்த நாட்டின் ஏற்றுமதியைப் பாதித்து வேலை நிறைவைக் குலைக்கலாம். அப்போது இந்த நாடு எதிர் நடவடிக்கை எடுக்கவேண்டியிருக்கும். இப்படி அயல்நாட்டுத் தொடர்பால் ஏற்படும் விளைவுகளை, முரண்பாடுகளை முன்னரே ஆய்ந்துள்ளோம்.

## (ii) அரசாங்க நிதித்துறை நடவடிக்கைகள்

பணத்துறை நடவடிக்கைகள் அவ்வளவு சக்தி வாய்ந்தன அல்ல என்பதை அறிந்தோம். ஆகவே அரசாங்கம் பொதுத்துறை செலவு–வரவு (expenditure-revenue) வழியாக நிலைபேறு செய்ய முடியுமா என்று பார்ப்போம். நாட்டின் பொருள் ஆக்கத்தில் மூன்று பகுதிகள் உள்ளன.

(1) தனியார் நுகர்ச்சிச் செலவு

(2) தனியார் முதலீட்டுச் செலவு

(3) அரசாங்கச் செலவு

அரசாங்கம் தன்னுடைய செலவுகளை மாற்ற முடியுமானால் அல்லது தனியார் செலவுகளை மாற்ற முடியுமானால் நாட்டின் மொத்தச் செலவை, ஆகவே வருமானத்தை, மாற்றமுடியும். பல துறைகளில் செலவு செய்யும் வீதம், வசூலிக்கும் வரிகளின் வகை, வரிகளின் வியாபகம், பொதுக்கடன் மீது வட்டி ஆகியவற்றை அரசாங்கம் மாற்றிச் சமூகத்தின் செலவுச் சக்தியை மாற்றக்கூடும். சுயேச்சைப் பொருளாதாரத்தில் இது பொருத்தமான வழி. எல்லோருக்கும் பழக்கமான வழி. சுழலின் காரணம், பணத்தொகைக் கோளாறுகள் அன்று என்று நினைப்போருக்கும் பிடித்தவழி. கீன்சுடைய செல்வாக்கில் இந்த

வழிகள் எல்லா நாடுகளிலும் ஆதரவு பெற்றுள்ளன. மந்த காலத்தில் இவை மிகவும் பயன்தரக் கூடியன என்பது கீன்சினுடைய முடிவு. செல்வம் மிகுந்த சமூகத்தில் செல்வம் வளரவளர வருமான ஏற்றத்தாழ்வுகள் இருக்கும் சூழ்நிலையில் நுகர்ச்சி விகிதம் குறைவாகவும், சேமிப்பு அதிகமாகவும் இருக்கும். நுகர்ச்சி குறைவாகிக்கொண்டே இருப்பதால் அதை ஈடு செய்ய முதலீடு அவசியம். மந்தத்தில் இந்த முதலீட்டைச் செய்யத் தனியார்கள் முன் வரமாட்டார்கள். இது அரசாங்கத்தின் பொறுப்பு. அரசாங்கம் ஆளக்கூடிய முறைகள் இரண்டு வகையானவை: (1) செலவை மாற்றுவது. (2) வரிகளை மாற்றுவது.

செலவை மாற்றுவது இரு வகையாக நிகழலாம். பொது மராமத்து வேலைகளில் செலவை அதிகப்படுத்தலாம், செலவு செய்யும் மக்கள் தொகுதிக்கு வருமானத்தை மாற்றலாம். வரிகளை மாற்றுவதன்மூலம் 'முதலீடு அல்லது நுகர்ச்சியைத் தூண்டிவிடலாம்.

அரசாங்கத்தின் செலவுகளும் வரிகளும் பொருளாதார நெளிவுகளுக்கு ஏற்ற மாதிரி இருக்கும்படி அமைத்தால் செலவுகளும் வருவாயும் தாமாகவே பொருளாதார நிலைக்கு ஏற்ப மாறும். இவைகளைச் சுயேச்சை நிலைபேறு காரணிகள் (automatic stabilisers) என்பார்கள். இப்படிப்பட்ட காரணிகள் சுருக்கக் காலத்தில் அரசாங்க செலவைத் தாமாகவே உயர்த்தும், பெருக்கக் காலத்தில் தாமாகவே குறைக்கும். இப்படியே வருவாயையும் பெருக்கக் காலத்தில் உயர்த்தும், சுருக்கக் காலத்தில் குறைக்கும். இந்தக் காரணிகளுக்கு உதாரணமாக வருமான வரி, வேலையில்லாமை இன்சூரன்சு கட்டணம், சமூக நலக்காப்புச் செலுத்துகள் ((social security payments). விளை பொருள் விலை ஆதரவுகள் (price support to agricultural products) ஆகியவைகளைக் கூறலாம். இந்தக் காரணிகள் மக்கள் வருமானத்தில் ஏற்படும் நெளிவுகளைக் குறைக்கின்றன. ஆனால் இவை முதல் படியாக மட்டும் பயன்படும். மராமத்து வேலை, வரித் திட்ட மாறுதல் முதலிய பிறவும் அவசியமாகும்.

முதலில் மராமத்து வேலைகள் எப்படி உதவும் என்று பார்ப்போம். பொதுக் கட்டடங்கள், ரோடுகள், காடு வளர்ப்பு, நீர்ப்பாசனத் திட்டங்கள், போக்கு வரவுச் சாதனங்கள் ஆகியவை இதில் அடங்கும். இந்தத் துறையில் ஏராளமான

செலவு செய்ய வாய்ப்பு இருக்கிறது. இந்தச் செலவு உறுதியான பண்டங்களுக்குத் தேவையை உண்டாக்குகிறது. இலாபத்தை நாடி அரசாங்கம் செலவு செய்யாததால் நினைத்தபோது இந்த வேலைகளை மேற்கொள்ளலாம் அல்லது கைவிடலாம். தனியார் துறையில் முதலீடு அவசியமாகும்போது இதை உடனடியாக மேற்கொள்ளலாம். சாதாரண மக்களைப்போல அரசாங்கம் நடப்பதானால் அது சுபிட்சக் காலத்தில் வாங்குதலைப் பெருக்கவும் மந்தக்காலத்தில் வாங்குதலைக் குறைக்கவும் செய்யும். இது வீக்கத்தையே வடிப்பையோ வலுப்படுத்தும். ஆகவே அரசாங்ம் இப்படிச் செய்யக்கூடாது, மந்தக் காலத்தில் செலவுப் பெருக்கத்துக்கும், பெருக்கக் காலத்தில் செலவுச் சுருக்கத்துக்கும் அது வழி செய்யவேண்டும். மந்தக் காலத்தில் மக்கள் வேலையின்றி இருப்பார்களேயொழியச் சாப்பிடாமல் இருக்க மாட்டார்கள். அவர்களைப் பயன்படுத்துவது நாட்டுக்குக் கூடுதல் செலவின்றி ஆக்கத்திற்கு வழி செய்வதாகும். ஆகவே அரசாங்கம் அவர்களை ஆக்க வேலையில் பயன்படுத்தத் தயாராக இருக்கவேண்டும். வேலையின்மையைத் தாக்குவதற்கு ஏற்ற அளவு மராமத்துத் திட்டத்தை வைத்து இருக்க வேண்டும். சில சிக்கல்கள் இதில் ஏற்படலாம்.

1. மராமத்து வேலை பிராந்திய அதிகாரிகளின் அதிகாரத்துக் குட்பட்டிருக்கலாம். இது நடவடிக்கை எடுப்பதில் நெகிழ்ச்சிக் குறைவை உண்டாக்கலாம். மைய அரசாங்கத்தின் மராமத்து வேலைகள் எளிதில் மாற்றக்கூடியன. ஆனால் பிராந்திய அதிகாரிகளுக்கு மானியம் கொடுத்து அவர்களையும் ஊக்க முடியும். இன்றேல் அவர்களும் சாதாரண மனிதர்களைப்போல மந்தத்தில் சுருக்கியும், பெருக்கத்தில் பெருக்கியும் செலவு செய்வார்கள்.

2. அரசாங்கமும் சில மராமத்து வேலைகளை இஷ்டப்படி மாற்ற முடியாதிருக்கலாம். இராணுவத்துறையில் மராமத்து வேலைக்கு நெகிழ்ச்சிக் குறைவு. வீக்கக் காலத்திலும் இச்செலவைக் குறைக்க முடியாது. பள்ளிக்கூடங்களைக்கூட மந்தக் காரணத்தினால் அதிகப்படுத்த முடியாது, பெருக்கக் காரணத்தினால் குறைக்க முடியாது. ஆகவே மராமத்து வேலைகள் சூழல் எதிர்ப்பு நடவடிக்கைகளுக்கு உடன்படா. மராமத்து வேலைகளின் நெகிழ்ச்சி சூழ்நிலைகளைப் பொறுத்தது. ஆனால் முன் கூட்டியே பல திட்டங்கள் வகுத்து வைத்திருக்கலாம். மந்தம் வந்தவுடனே தக்க திட்டம் நடைமுறைக்கு வரும்.

மராமத்து வேலைகள் பயன்பட வேண்டுமானால் அளவில் பெரியதாய் இருப்பதோடு தகுந்த காலத்தில் ஆளப்படவேண்டும். இன்றேல் கேடு விளைவிக்கலாம். எந்த நேரத்தில் மராமத்து நடவடிக்கை துவங்க வேண்டும் என்பதைப் பற்றிப் பொருளாதாரத் துறையினருக்குள்ளே கருத்து வேறுபாடுகள் உள்ளன. ஈண்டு விரிக்கில் பெருகும். இந்நடவடிக்கை வேலையின்மை அதிகமாக உள்ள இடங்களில்தான் அதிகம் தேவைப்படும் என்பது வெளிப்படை. ஆனால் வேலையின்மை அதிகமாக இருக்கும் தொழில் மலிந்த பிரதேசங்களில் மராமத்து வேலைக்கு இடமில்லாமல் இருக்கலாம். தொழிலாளிகள் இடம் பெயர்வார்களானால் பிரச்சினை குறையும். ஆனால் அவர்களைப் போகச் செய்ய முடியாது.

மராமத்து முறையை ஆள்வதற்கு நிதியை எப்படித் தேடுவது என்பது மற்றொரு பிரச்சினை. முக்கியமாக இரண்டு வழிகள் உள்ளன: (1) நல்ல காலத்தில் வரி மூலம் சேமித்து மந்தக் காலத்தில் செலவு செய்வது. (2) மந்தக் காலத்தில் கடன் வாங்கி நல்ல காலத்தில் வரி மூலம் வசூல் செய்து கடனைத் தீர்ப்பது. இரண்டு முறையிலும் நல்ல காலத்தில் வரியும், மந்தக் காத்தில் செலவும் நிகழ்கின்றன. ஆனால் இந்த இரண்டு முறைகளுக்கும் ஒரு வகையில் வேறுபாடுண்டு. வரியிலிருந்து ஒதுக்கி (reserve) வைப்பது நேர்மையான முறையாகத் தோன்றும். நல்ல காலத்தில் வரி வசூல் நன்றாக இருக்கும். எச்சமும் காணப்படும். இப்படி ஒதுக்கிய தொகை வேண்டும்போது நிச்சயமாகக் கிடைக்கும். ஆனால் கடன் வாங்குவதாயின் இந்த நிச்சயம் இல்லை. சேமித்த நிதியை ஆளாவிட்டால் வேறொரு காலத்தில் அதை ஆளமுடியும். ஆனால் கடன் முறை சுபிட்சக் காலத்தில் ஆளப்படாவிட்டால் மந்தக் காலத்தில் இந்த (வாங்காத) தொகை கிடைக்கும் என்று நினைக்க முடியாது. வாங்கும் சக்திகூட மந்தக் காலத்தில் குறையும். ஆகவே வரியிலிருந்து ஒதுக்கி வைப்பது சிறந்த முறையாகத் தெரிகிறது. ஆனால் இந்த ஒதுக்கீடுகளை ஆள்வதில் சிறு இடையூறுகள் உள்ளன. ஒதுக்கீடு உள்ள வரையில் அரசாங்கங்கள் மக்களைத் திருப்தி செய்வதற்காக எந்த முகாந்தரத்திலாவது அதைப் பயன்படுத்த விரும்பும். தவிர, இந்த ஒதுக்கீட்டுத் தொகையை ரொக்கமாக வைப்பதா, எதிலாவது முதலீடு செய்வதா என்பது ஒரு பெரிய பிரச்சினை. முதலீடு செய்வதாயின் திடீரென்று ரொக்கமாக்கப்படவேண்டுமானால் அப்போது முதலீடு அங்காடி பாதிக்கப்படும். தவிர, ஒதுக்கீடு வேண்டிய அளவுக்குச் செய்வது கடினமாக இருக்கும், ஒரு

சராசரி வருமானத்தை வைத்துக்கொண்டு அதற்கு மேட் பட்டதைச் சேமித்தால் இது போதாமல் இருக்கலாம்.

ஆகவே கடன் வாங்குவது இன்றியமையாத மற்றொரு முறையாக இருக்கும். இந்த முறையிலும், அநேக இடர்ப்பாடு கள் உள்ளன. பற்றுக்குறை வரவு செலவுத் திட்டத்தைத் தயாரித்துக் குறைவுக்குக் கடன் வாங்க வேண்டியிருக்கும். ஆனால் பற்றுக்குறைத் திட்டத்தை எல்லாரும் ஆதரிப்பதில்லை. சமன் செய்த பட்செட்டில் (balanced budget) அநேக நன்மைகள் உள்ளன என்பர். அலட்சியமாக அரசாங்கம் செலவுக்குத் திட்டம் செய்யாது. ஆகவே வரியும் விதிக்காது. பண வீக்கத்துக்கு இடம் கொடுக்காது. உண்மை. ஆனால் ஆண்டுதோறும் சமன் செய்யும் திட்டம் அவசியமா? டால்டன் என்ற நிபுணர் பல ஆண்டுக் காலத்தில் மொத்தத்தில் வரவுக்கும் செலவுக்கும் சமப்பாடு இருந்தால் போதும் என்றார். ஓர் ஆண்டு என்பது பொருளா தாரத் துறையில் முக்கியமான அளவை அன்று. பொருளாதார மாறுதல்கள் பட்செட் ஆண்டை அனுசரித்து ஏற்படுவதில்லை. தொழில்கள் காலம் கெட்டிருக்கும்போது பயன்படுத்த வேண்டிச் சுபிட்ச காலத்தில் ரிசர்வு ஒதுக்கி வைக்கின்றன. ஒதுக்கீட்டை மந்தக் காலத்தில் கூலியாகவும் சம்பளமாகவும் வருவாய்க்கு மேல் கொடுக்கின்றன. ஆகவே தொழிலுலகத் திட்டம் வாணிபச் சுழலை அனுசரித்ததாக இருக்கிறது. ஆகவே அரசாங்க வரவு செலவுத் திட்டமும் ஒரு சுழலின் பல்லாண்டுக் காலத்தில் சமப் பாடு அடையுமானால் போதும். ஆனால் சுழலின் காலம் நிச்சய மன்று. ஆயினும் வேறு வழியில்லை. மந்தக் காலத்தில் பற்றுக்குறைத் திட்டமும், சுபிட்ச காலத்தில் உபரித் திட்டமும், மொத்தத்தில் சமப்பாட்டுக் குறிக்கோளுடன் அமைக்க வேண்டும். இதற்கு முதல் இடையூறு வரவு செலவுத் திட்டத் தின் கால எல்லையைப் பற்றிய பழக்கம். இரண்டாவது இடையூறு மந்தக் காலத்தில் அரசாங்கமும் மற்ற அரசாங்க நிறுவனங்களும் கடன் வாங்க முடியும் என்ற நிச்சயமின்மை. இராச்சிய அரசாங்கங்கள், அல்லது வட்டார அரசாங்கங்கள் வேண்டிய அளவு கடன் வாங்குவது முடியாமல் இருக்கலாம். அவைகளுடைய வருமானம் மந்தத்தில் குறைவாக இருக்கும். இது அவைகளின் கடன் மதிப்பை (credit status)ப் பாதிக்கும். ஏற்கனவே நிறையக் கடன்வாங்கி இருக்கலாம் அல்லது அவைகள் கடன் வாங்குவதற்கு அதிகாரம் வரம்பு இடப்பட்டிருக்கலாம். ஆகவே மைய அரசாங்கம் கடன் வாங்க முடியுமானாலும் இவை கடன் வாங்குவது கஷ்டம். ஆகவே மைய அரசாங்கம் மான்யங்கள் கொடுத்து உதவ வேண்டியிருக்கும்.

கடனைத் திருப்பிக் கொடுப்பதிலும் அநேக பிரச்சினைகள் உண்டு. மந்தத்தில் வாங்கப்பட்ட கடன்கள் ஆக்க வேலையில் ஆளப்பட்டு அடுத்த சுபிட்சத்தில் திருப்பிக் கொடுக்க முடியும் என்றும் கருதப்படுகிறது. இன்றேல் அரசாங்கத்தின் கடன் மதிப்பு பாதிக்கப்படும். திருப்பிக் கொடுப்பதற்கு முதலீடு செய்த துறையிலிருந்தே ஆதாயம் வருவது ஒரு வகை. மற்றொன்று அரசாங்கத்தின் மொத்த வரி வருவாயிலிருந்து கடனைத் திருப்பிக்கொடுப்பது. மந்தத்தில் ஏற்பட்ட கடனை சுபிட்சத்தில் தீர்க்க வேண்டுமானல் அந்தக் கடன் குறுங்காலத்தில் ஆதாயம் அளிக்கக்கூடியதாக இருக்கவேண்டும். இது சாத்தியமில்லாமலிருக்கலாம். வீடு கட்டுதல் போன்ற துறைகளில் நாலைந்து ஆண்டுகளில் முதலை மீட்பது முடியாது. அடிக்கடி மந்தங்கள் வராமல் இருக்குமானல் சுபிட்ச காலம் நீண்டிருக்கும்; அந்தக் காலத்தில் கடனை ஈடுசெய்யும் அளவுக்கு ஒதுக்க முடியும். தவிர, சில பொதுத்துறை மராமத்து வேலைகள் யாதொரு விளைவையும் தராதனவாக இருக்கலாம். இவை சம்பந்தமான கடனை வரிகள் மூலம் தீர்ப்பதானல் சாதாரண வரிமூலம் பணத்தை வசூலித்துக் கடன் கொடுத்த செல்வந்தருக்கு வட்டி கொடுக்க வேண்டியிருக்கும். இதனல் பல கேடுகள் உண்டாகும். ஆனல் இந்தக் குறையைச் சரியான வரிமுறையால் தவிர்க்கலாம்.

மேற்கண்ட முறைகள் கடனைத் திருப்பிக்கொடுக்கப் போதாத பட்சத்தில் அரசாங்கம் பணத்துறை நடவடிக்கைகளை எடுக்கவேண்டி வரலாம். மராமத்து வேலைக்காக அரசாங்கம் மைய பாங்கிடம் கடன் வாங்கி இருந்தால் திருப்பிக் கொடுப்பதை ஏற்றவாறு சீர்திருத்திக் கொள்ளலாம். திருப்பிக்கொடுத்த தொகையை மைய பாங்கு சூழ்நிலைக்கேற்ப முடக்கி விடலாம் அல்லது மீண்டும் செலாவணியில் விடலாம்.

## (iii) பொதுத்துறைச் செலவும், பொருளாதார நிலைபேறும்

(Public expenditure and economic stabilisation)

பொதுத்துறைச் செலவுகள் எவ்வளவு தூரம் மந்தத்தைத் தவிர்க்கும் என்பதை ஆராயவேண்டும். பொதுத்துறைச் செலவில் இரண்டு வகையுண்டு. ஒன்று குழாய் நிரப்புதல் (pump priming) எனப்படும். மற்றொன்று ஈடுசெய் செலவு (compensatory spending) எனப்படும். தண்ணீர் பம்பில் முதலில்

சிறிது தண்ணீர் ஊற்றி அடித்தால் பின்னர்த் தொடர்ந்து தானே வரத் தொடங்கும். இதுபோல அரசாங்கம் முதலில் சிறிது பொதுத் துறைச் செலவு செய்தால் பின்னர்ப் பொருளாதாரம் தானே பெருக்கப் போக்கடையலாம். தற்காலிகக் கோளாறுகளைச் சமாளிக்க இது போதுமானதாக இருக்கலாம். ஈடுசெய் செலவென்பது தனியார் முதலீடு குறைந்தபோது அதை ஈடுசெய்ய எடுத்துக்கொள்ளும் நடவடிக்கை. இந்தச் செலவு பொருளாதாரத்தைச் சுயேச்சையாகச் சுயவேகம் கொண்டு திருப்திகரமாக வேலை செய்யச் செய்விக்கும் என்று நினைப்பதற்கில்லை. வேண்டிய அளவுக்குக் குறைவாகத் தனியார் முதலீடு இருக்கும் வரைக்கும் பொதுத்துறையில் ஈடுசெய் செலவு தொடர்ந்து நிகழவேண்டும். இது கீன்சினுடைய தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது. அவர் தத்துவப்படி தனியார் முதலீட்டுக் குறைவைப் பொதுத் துறை முதலீடு ஈடுசெய்ய வேண்டும்.

பொதுத்துறைச் செலவீடு பன்மடங்காக வருமான உயர்வை உண்டாக்குகிறது. காரணம் முன்னர்க் கூறிய பெருக்கியும் (multiplier) முடுக்கியும் (acceleration) வேலை செய்வது. முதன் முதலில் செலவு செய்யும்போது துவக்க வேலை வாய்ப்பு என்றும் (primary employment), அதனால் வருமானம் பெற்றோர்கள் செலவு செய்வதனால் தூண்டப்படும் வேலைவாய்ப்புகள் இரண்டாம்படி வேலை வாய்ப்பு என்றும் (secondary employment) கூறப்படும். மொத்தத்தில் எவ்வளவு வேலை புதிதாகத் தோன்றுகிறது என்பது வேலைகளின் தன்மைகளைப் பொறுத்தது. எந்தப் பொதுத்துறை மராமத்து வேலையைச் செய்வது என்பதை இதையனுசரித்துத் தீர்மானிக்க வேண்டும்.

பொதுத்துறைச் செலவுகள் பெருக்கி மூலம் வருமானத்தையும் வேலையையும் பெருக்கும் என்று கூறினோம். ஆனால் இந்தப் பொதுத்துறைச் செலவின் விளைவை ரத்து செய்யக்கூடிய சில சூழ்நிலைகள் இருக்கலாம். பொதுத்துறைச் செலவு முறையை ஆளும்போது அதன் உப விளைவாகவே வடிப்புச் சக்திகள் தோன்றலாம். இவைகளே ரத்து செய்யும் விளைவுடையன. முதலாவது, பொதுத்துறைச் செலவு உயரும்போது அரசாங்கத்தினுடைய வரிப்பளு தனியார் செலவைக் குறைக்கலாம். ஆகவே வரி முறையை ஆளாது கடன் வாங்கலாம். ஆனால் கடன் முறையும் வடிப்பு விளைவை யுடையதாகக் கூடும். இப்படி இல்லாமல் இருக்க வேண்டுமானால் கடன் பணமும் தனியார் முதலீட்டுக்கு ஆளப்படாத பணமாக இருக்கவேண்டும். பாங்குகளிடமிருந்து கடன் வாங்கினால், இந்தக் கடன் புதுப் பண உற்பத்தியால்

உண்டாவதானல், அல்லது முடங்கி இருந்த வைப்பிலிருந்து வருவதானல், தனியார் செலவைப் பாதிக்காது. ஆனல் பாங்குகள் கடன் கொடுப்பதற்கு வேண்டிய எச்ச ரொக்கத்தை உண்டாக்கக் கூடியது மைய பாங்கு. ஆனல் அதுவும் ரிசர்வு கட்டுப்பாட்டுக்குட்பட்டது. அந்த நிலையில் மேலும் அரசாங்கம் கடன் வாங்க முயன்ருல் தனியார் பயன்படுத்தக்கூடிய பணத்தையே வாங்க வேண்டியிருக்கும். இரண்டாவது, மராமத்து இலாகாவில் செலவு செய்வதற்காக வேறு இலாக்காக்களில் சிக்கனம் செய்தால் இதுவும் வடிப்பு விளைவையுடையது. வரியைக் கொடுக்கும்போது மக்களும் தொழில்களும் அனுவசியம் என்று கூறி சில துறைகளில் செலவைக் குறைக்க வற்புறுத்துவர். இதற்கு அஞ்சிச் சில துறைகளில் அரசாங்கம் செலவைக் குறைத்தால் அதற்குத் ஈடாகத் தனியார் செலவு உயருமானல் கேடில்லை. ஆனல் மந்த காலத்தில் தனியார் முதலீடு நிகழுமா என்பது சந்தேகம்; மூன்ருவது, அரசாங்கத்தின், மராமத்து வேலைகள் தனியார் துறையில் அவநம்பிக்கையை உண்டாக்கி விடலாம். தனியார் முயற்சித் துறையில் அரசாங்கத் தலையீடு பரவுவதாகத் தொழில் துறையோர் நினைத்தால் அவர்கள் முதலீடு குறையும். மந்தக் காலத்தில் இப்படிப்பட்ட நினைப்பைத் தூண்டுவது சாத்தியம். மறைமுகமாகவாவது அரசாங்க வேலை தனியார் துறையைப் பாதிக்கலாம். அரசாங்கத் தேவை கூலியை உயர்த்தலாம், மற்றச் சாதனங்களின் விலையையும் உயர்த்தலாம், அரசாங்கத் தலையீட்டின் பயமும் தனியார் துறை முதலீட்டைப் பாதிக்கலாம்,

ஆகவே இப்படிப் பல காரணங்களால் பொதுத்துறைச் செலவுகள் எதிர்பார்த்த அளவுக்குப் பலன் தராமல் இருக்கலாம். செலவு எவ்வளவு பலன் தரும் என்பதைத் திட்டவட்டமாக முன் கூட்டிக் கணிக்க வழியில்லை. ஆனல் பொதுத்துறைச் செலவுகள் உதவக்கூடும் என்பது மட்டும் அனுபவத்தில் தெரிகிறது. மற்ற நடவடிக்கைகளோடு இதுவும் எடுக்கப்பட்டால் பலன் தரலாம்.

**நுகர்ச்சித் தொகையை நிலைப்படுத்துவது**
**(Stabilising the volume of consumption)**

மந்தம் தோன்றியதும் புதுப் பணத்தை நுகர்வோர்களுக்குக் கிடைக்கும்படி செய்தால் அவர்கள் அதைச் செலவு செய்வதன் மூலம் உற்பத்திக்குள்ள பணத் தேவை குறையாமல் பார்த்துக் கொள்ளலாம், அல்லது தேவையை அதிகப்படுத்தலாமல்லவா? விலைகள் விழா. இலாபங்கள் குறைந்து முதலீடு பாதிக்கப்

படாது. மீட்சி தொடர்ந்து நிகழ்ந்து வேலை நிறைவு ஏற்படும். அப்போது எச்சமான பணத்தைக் கவர்ந்து பூரிப்பு (boom) உண்டாகாமல் பார்த்துக்கொள்ளலாமல்லவா?

இந்த முறையில் ஆளக்கூடிய பல நடவடிக்கைகளை ஆராய்வோம்.

(1) தொழில் ரிசர்வுகள் :— நிறுவனங்கள் சாதாரணமாக வருமானத்தில் ஒரு பகுதியை ஒதுக்கி வைத்திருக்கும். மந்தக் காலத்தில் இவை செலவிடப்பட்டால் நிலைபேறுக்கு உதவும். எல்லா ரிசர்வுகளும் இப்படிப்பட்டவையன்று. தேய்மான ரிசர்வு மந்தத்தில் முதலீட்டுக்கு ஆளப்படுவது நிலையில்லை. ஆனால் இலாபப் பங்கீடு சமப்பாடு (dividend equalisation) நிதி, மந்தக் காலத்தில் விநியோகிக்கப்படுவதால் பயன்படும். வேலையின்மை ரிசர்வுகளும் மந்தக்காலத்தில் பயன்படக் கூடும். பொதுவாக எல்லா ரிசர்வுகளும் பயன்படுமாயினும் அவைகளின் தொகை நாட்டின் வருமானச் சக்தியை நிலைப்படுத்துவதற்குப் போது மானதாக இராது. அநேக நிறுவனங்களில் நிதிகள் அற்பமாக இருக்கும். தவிர ரிசர்வுகள் ஏதாவது ஒரு வழியில் நிறுவனத்திலேயே ஆளப்பட்டிருக்கும். முதலீட்டை அமித மாக்கிப் பூரிப்புக்குக் காரணமாகி இருந்திருக்கும். இந்த அளவுக்கு (பூரிப்பின் விளைவான) மந்தத்துக்கும் காரணமாகும்.

(2) வேலையின்மை இன்சூரன்சு தொகை :— இந்தத் தொகை நிச்சயமாகத் தொழிலாளிகளுக்கு மந்தத்தில் கிடைக்கும். இந்த இன்சூரன்சு தொகையைக் கட்ட வேண்டியதற்கு அஞ்சியே தொழில் அதிபர்கள் வேலை யின்மையைக் குறைக்க முயல்வார்கள். இதுவே நிலைபேறுக்கு உதவும் எனப்படுகிறது.

ஆனால் தொழில் அதிபர்களின் நடவடிக்கை இந்த நம்பிக்கைக்கு இடம் கொடுக்கவில்லை. செலவில் கூலித் தொகை பெரும் பகுதியாக உள்ள தொழில்களில் மட்டும் அவர்கள் வைத்திருக்கும் 'வேலையின்மை ரிசர்வு' பெரும் தொகையாக இருக்கும். தவிர மந்தக் காலத்தில் இன்சூரன்சு கட்டணப் பொறுப்புக்கு அஞ்சி அவர்கள் வேலை கொடுக்க முன் வராமலிருக்கலாம். தவிர, தனித்தனி முதலாளிகள் செய்யும் முயற்சி பிரச்சினைத் தீர்வுக்குப் போதாது. இது பருவ நெளிவுகளையே சமாளிக்க உதவும். எல்லாத் தொழில் களும் ஒரேபோது மந்தத்தில் இருக்கும்போது அவை ஆளக் கூடிய நிலைபேறு முறைகள் பயன்படமாட்டா. சுழல் கால வேலை

யின்மை ஒரு தனி நிறுவனப் பிரச்சினை அல்லது தொழில் பிரச்சினை அன்று. நாட்டுப் பொருளாதாரப் பிரச்சினை. அரசாங்கம்தான் அதைத் தீர்க்க முடியும்.

அடுத்தபடியாக, வேலையின்மை இன்சூரன்சு ரிசர்வு நுகர்வோர் வருமானத்தை நிலைப்படுத்துமா என்று பார்ப்போம். ரிசர்வானது தொழிலாளிகளின் கூலியிலிருந்து கழிக்கப்பட்ட தொகைகளின் தொகுதி. கழிக்கப்பட்டபோது அவர்களுடைய செலவு சக்தி குறைக்கப்பட்டிருக்கும். ஆனால் அந்த ரிசர்வு முதலீட்டுக்குச் சென்றிருந்தால் அதில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு வரிப் பளுவை முதலாளி குறைத்துக் கொள்ளலாம். முதலீடு தூண்டப்படுகிறது; அமிதமாக இருக்கும்படி தூண்டப்படுகிறது. இந்த ஒதுக்கீடு அரசாங்கப் பாண்டுகளில் இடப்பட்டிருந்தால் அவைகளின் விலை ஏறி முதலீட்டைத் தூண்டும். ஆகவே இரண்டு வழியிலும் பூரிப்புத் தூண்டப்படுகிறது. பூரிப்பைத் தணிக்கும் சக்தியாக இல்லாமல் இன்சூரன்சு நிதி தூண்டும் சக்தியாக இருக்கிறது. ஏனென்றால் இன்சூரன்சு ரிசர்வு பணத்தை நுகர்ச்சியிலிருந்து முதலீட்டுக்கு மாற்றுகிறது மந்தம் வந்தபோது பாண்டுகளை விற்க வேண்டியிருக்கிறது. விற்பனை, வடிப்பு விளைவை உடையதாயிருக்கும். பாண்டுகளை வாங்கு வோரே பணத்தை நுகர்ச்சிக்குச் செலவழித்திருக்கக் கூடியவர் களாயின் பணம் கைமாறுகிறதே ஒழிய வாங்கும் சக்தியில் கூடுதல் ஒன்றுமில்லை பாண்டுகளின் விலை வீழ்வதனால் வட்டி வீதம் உயரும். இது மந்தத்திற்கு நேர் முரணான நிகழ்ச்சி. ஆகவே சில சூழ்நிலைகளில் வேலையின்மை இன்சூரன்சு ரிசர்வு பூரிப்பையும் மந்தத்தையும் அதிகப்படுத்தும். இந்த விளைவுகளை எப்படித் தடுப்பது? ரிசர்வை அரசாங்கப் பாண்டில் இட்டிருந் தால், அதை நிறுவனங்கள் விற்கும்போது மைய பாங்கு தலையிட வேண்டும். பூரிப்பில் குறைந்த வட்டி வீதமானது முதலீட்டுப் பெருக்கத்தைத் தூண்டினால் மைய பாங்கு வெளி அங்காடி நடவடிக்கை மூலம் பாண்டுகளை விற்று முதலீட்டின் விளைவை ரத்து செய்யவேண்டும். மந்தக்காலத்தில் விற்கப்படும் பாண்டு களை வெளி அங்காடியில் மைய பாங்கு வாங்க வேண்டும். ஆகவே இன்சூரன்சு ரிசர்வை நேரடியாக மையபாங்கில் வைப்பு வைத்து விடுவது நல்லதாகத் தோன்றுகிறது. அது தகுந்த நடவடிக்கை எடுத்துக்கொள்ளும். பூரிப்பைக் கட்டுப்படுத்த அது எடுத்துக் கொள்ளும் நடவடிக்கைகளுக்கு இது உதவும். ஏற்கெனவே பணம் மலிந்துள்ள நிலையில் மைய பாங்கின் வடிப்பு முயற்சி சக்தியற்று இருக்கலாம். ஆனால் இன்சூரன்சு பணம் மைய பாங்குக்கு வருவது மூலம் வடிப்புச் சக்தி அதிகப்படும். மந்தம் வந்தபோது இந்த

நிதியிலிருந்து செலவு செய்வது பாங்குகளுடைய ரொக்கநிலையை உறுதிப்படுத்திப் பண மலிவை உண்டாக்க வழி செய்யும். வேலை இல்லாதவர்களுக்குப் பணம் புதிதாகக் கிடைக்கிறது. அவர்கள் செலவு செய்வது தொழிலுக்கு சுபிட்சத்தை உண்டாக்கும்.

ஆனால் வேலையின்மை இன்சூரன்சு ரிசர்வுகளை ஆள்வதில் சில கஷ்டங்கள் இருக்கின்றன. இன்சூரன்சு தொகை தொழிலாளிகளுக்கு மந்தத்தில் ஒரு நிச்சயமான ஊன்று கோலாகையினால் அதன் பலத்தினால் கூலிக் குறைவுக்கு இடம் கொடுக்கமாட்டார்கள். விலை வீழும்போது இப்படி மறுப்பது இன்னும் நிலைமையை மோசமாக்கிவிடும். தவிரவும், இன்சூரன்சு நிதி நெடுநாளைக்குத் தாங்காது. சிறு மந்தங்களைச் சமாளிக்கப் போதுமே யொழிய பெரிய மந்தங்களைச் சமாளிக்கப் போதாது.

ஆகவே இன்சூரன்சு நிதியைக் கொண்டு சுழலைச் சமாளிப்பது கடினம். இன்சூரன்சினுடைய நோக்கம் வேலை யில்லாத காலத்தில் உதவுவதுஆகும். அதைக்கொண்டு பொருளா தார நிலைபேறு பிரச்சினையைச் சமாளிப்பது முடியாது. சமூகத்தின் வருமானத்தை நிலைப்படுத்த அது போதாது. தொலாளிகளின் வருமானத்தைக்கூட அதனால் நிலைப்படுத்த முடியாது. தொழிலாளிகளாக இல்லாத மக்கள் எவ்வளவோ பேர் வருமானமின்றி இருக்கின்றனர். இவர்களுக்கு இது ஒன்றும் உதவாது. ஆகவே எல்லாருடைய வாங்கும் சக்தியையும் நிலைப் படுத்தும் திட்டம் ஒன்று வேண்டியிருக்கிறது.

### நுகர்வோர் வருமானத்தை நிலைபேறு செய்தல்

மந்தம் வந்ததும் நுகர்ச்சியை நிலைபேறு செய்யவேண்டும். மந்தத்தினால் வருமானம் இழந்தவர்கள் அனைவருக்கும் உதவி வழங்க வேண்டும். எல்லாருக்கும் எப்படி வழங்குவது? ஒரு முறை, வரிகளை எல்லாம் குறைத்து, இதனால் ஏற்படும் நஷ்டத் தைக் கடன்கள் வாங்குவதன் மூலம் சமாளிப்பது. இப்படிச் செய்ய வரிகள் மாற்றக்கூடிய நெகிழ்ச்சியுடையனவாக இருக்க வேண்டும். மந்தக் காலத்தில் குறைக்கவும் பெருக்கக் காலத்தில் உயர்த்தவும் முடிய வேண்டும். இந்த நெகிழ்ச்சியை எப்படி உண்டாக்குவது என்பதை இங்கு விளக்க இடமில்லை.

வரியை மாற்றுவதோடு மற்றொரு முறை கடனை ஆள்வது. அரசாங்கம் கடன் வாங்கிப் பல வழிகளில் நுகர்வோருக்குப் பண உதவி செய்யக்கூடும். கூலியில் ஒரு பங்கை அரசாங்கம் கொடுக்கலாம். இதனால் நிறுவனங்கள் ஆள் குறைப்பைக் குறைத்துக்கொள்ளும். வாழ்க்கைக்கு அவசியமான

பொருள்களை உற்பத்தி செய்பவர்களுக்கு மான்ய உதவி செய்யலாம். இது விலையைக் குறைக்கும். அல்லது குறைந்த வருமானமுடையவர்களுக்குத் தலா வீதம் பண உதவி செய்யலாம். அரசாங்கம் இவ்விதமான உதவிகள் கொடுத்து நுகர்வோர் செலவீட்டை நிலைபேறு செய்யப் போகிறதாக வெளியிட்டாலே அதுவே தொழில் அதிபர்களுக்கு ஊக்கம் அளிக்கும். அவசியமானால் இந்த விளம்பரத்தை உறுதிப்படுத்த மராமத்து வேலைகளைத் துவக்கலாம்.

இந்த வகை நடவடிக்கைகள் நிலைபேறு பிரச்சினைத் தீர்வை எளிதாகத் தீர்க்கக்கூடும் என்று நினைக்கலாம். இப்படிப்பட்ட நேரடியான முறைகளில் உள்ள சிறப்பு என்னவெனில் பொது மராமத்து வேலை முறையைவிட எளியது; விளைவு நிச்சயமானது, பொதுத்துறைச் செலவு முறையைப் போல எதற்குச் செலவு செய்வதென்பதை அரசாங்கமே முடிவு செய்யவேண்டியதில்லை. ஆனால் வரிக் குறைப்பு மூலம் வருமானத்தை உயர்த்தினால் சொற்ப வருமானம் உடையவர்களைத் தவிர மற்றவர்கள் தாம் பெறும் பணத்தை முழுவதும் செலவு செய்வார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. அரசாங்க மராமத்துச் செலவு முறை இவ்வகையில் சிறந்தது. ஏனெனில் பணம் செலவு செய்வோர் கைக்குப் போகிறது.

மற்றொரு முறை தனியார் முதலீட்டு வரிகளைத் திருத்துவது மூலம் தூண்டுவது. பொதுத்துறை நடவடிக்கைகள் பரவும்போது அதுவே தனியார் துறையில் அச்சத்தை உண்டாக்கி விடலாம். ஆகவே தொழில் வரிகளை மாற்றுவது மூலம் முதலீட்டைத் தூண்டலாம். அநேக முறைகள் ஆளக் கூடும். கம்பெனி லாபப் பிரிவினை (dividend) மீது வரியை நீக்கல், பிரிக்காத இலாபத்தின் மேல் ஒரு நிலையான வீதம், இலாபத்தி லிருந்து முதலீடு செய்தால் குறைந்த வரி வீதம், தேய்மானங் களுக்கு அதிகக் கழிவு ஆகிய முறைகளை ஆளலாம், ஓர் ஆண்டு நஷ்டத்தை மற்றோர் ஆண்டு இலாபத்திலிருந்து ஈடு செய்ய அனுமதிக்கலாம்.

இந்த முறைகள் நேரடியாக நுகர்ச்சியை உயர்த்த எடுக்கும் நடவடிக்கைகளைப் போல அவ்வளவு தேவையைப் பெருக்கும் சக்தியுடைன என்று நினைக்க முடியாது. ஏனெனில் துவக்கத்தில் முதலீடு மிகவும் தூண்டப்படலாம். ஆனால் பின்னர் ஆவேசம் தணியும். மந்த நிலையில் வரிக் குறைப்பு, வட்டிக் குறைப்பு முதலியன அவ்வளவு பயன்படா.

முடிவு

இதுவரை நுகர்ச்சியை அதிகப்படுத்துவது மூலம் நிலைபேறு அடையும் முறையைப் பார்த்தோம். அரசாங்கத்தின் செலவை அதிகப்படுத்துவது மூலம், வரிகளைக் குறைப்பது மூலம், பணப் பெருக்கம் செய்வது மூலம் மந்தத்தைச் சமாளிக்க வேண்டும் என்றோம். ஆனால், இரண்டு சங்கடங்களை நாம் தவிர்க்க வேண்டும். முதலாவது, மந்தம் வராமல் தடுப்பதற்கு எடுத்துக் கொள்ளும் நடவடிக்கைகள் வீக்க நிலையை (inflation) உண்டாக்கக்கூடாது. வாங்கும் திறன் பெருக்கம், வேலை நிறைவு நிலைக்குப்பின் நிகழுமானால் வீக்கம் தோன்றும். அநேகப் புதுப் பிரச்சினைகள் கிளம்பும். இந்த நிலை வராமல் வருமான நிலைபேறு செய்ய வேண்டும். இரண்டாவது, அரசாங்கச் செலவு மூலம் நிலைபேறு செய்ய வேண்டுமானால் ஏராளமாக மந்தக் காலத்தில் கடன் வாங்கிச் செழுமைக் காலத்தில் திரும்பக் கொடுக்கப்பட வேண்டும். இன்றேல் பொதுத்துறைக் கடன் தாங்க முடியாததாகி விடும். வரி கொடுப்போர்களிடமிருந்து பாண்டு வைத்திருப்போருக்கு நாட்டின் வருமானம் மாறும். வரி செலுத்துபவர்கள் உழைப்பாளிகளாகவும் பாண்டு வைத்திருப்போர் ஆக்க வேலையில் இல்லாதவர்களாகவும் இருந்தால் நாட்டின் பளு ஆக்க வேலையில் ஈடுபட்ட பகுதியின்மேல் விழும். பாண்டுகள் சமூகத்தில் பரவி இருக்குமானால் இந்தப் பளு குறைவாயிருக்கும். கடன் ஏறுவதை விட வேகமாக சமூகத்தின் வருமானம் ஏறினால்தான் கடன் பளு சிரமமாகத் தோன்றாது. கடன் பெற்று நடக்கும் பொதுத்துறைச் செலவு நாட்டின் ஆக்க சக்தியை உயர்த்தினாலும் பளுவைச் சமாளிக்க முடியும்.

வாணிபச் சுழலும் கூலியும் (The Trade Cycle and Wages)

மந்தம் ஏற்படும்போது தொழில் முயல்வோர் செலவுகளைக் குறைக்க முடியாத பட்சத்தில் சாதனங்கள் வாங்குவதைக் குறைத்துக் கொள்வார்கள். வேலையின்மை அதிகமாகும். இதனால் மந்தம் நீடிக்கும். அவர்களின் செலவுகளில் முக்கியமாகக் கூலி நெகிழ்ச்சியற்றது என்று கருத இடமிருக்கிறது. இதற்குக் காரணங்கள் பல கூறலாம்.

(1) வாழ்க்கைத்தரத்துக்கு இன்றியமையாத அளவுக்குக் கூலியைத் தொழிலாளிகள் எதிர்பார்க்கின்றனர். அதற்குக் கீழ்க் குறைப்பதை எதிர்ப்பார்கள்.

(2) தொழிலாளிகள் தங்கள் உழைப்பு இன்றியமையாதது என்று நினைத்துக் கூலிக் குறைப்பை எதிர்ப்பார்கள். தம் வேலைக்குத் தேவை, நெகிழ்ச்சியுள்ளது என்பதை அவர்கள் அறியாமல் இருக்கலாம்.

(3) கூலிக் குறைப்பை ஏற்றுக்கொண்டால் பின்னர் மீண்டும் உயர்த்துவது கடினம் என்றும், ஒரு தடவைக் குறைப்பு மேலும் மேலும் குறைப்புக்கு இடம் கொடுக்கும் என்றும் தொழிலாளர்கள் நினைக்கிறார்கள்.

(4) தொழிலாளிகளுக்கு வேலையின்மை இன்சூரன்சு திட்டமிருந்தால் அவர்கள் கூலிக் குறைப்பை எதிர்க்கும் சக்தி பெறுகிறார்கள். இந்த உதவி இல்லாதபோது பட்டினிக் கிடக்க வேண்டுமோ என்ற அச்சத்தில் கூலிக் குறைப்பை ஏற்றுக் கொள்வார்கள்.

(5) கூலிக் குறைப்பு சமூகத்தின் வாங்கும் திறனைக் குறைத்து வேலை நிலைபேற்றைக் (employment stabilisation) கடினமாக்கும் என்கிற கொள்கையும் வேலைக் குறைப்புக்குத் தடையாக இருக்கிறது. கீன்சு என்பவர் தொழிலாளர்கள் மந்தக் காலத்தில் கூலிக் குறைப்பை எதிர்ப்பது சரி என்று கூறினார். அவருடைய சித்தாந்தப்படி கூலிக் குறைப்பு நாட்டின் வாங்கும் திறனைக் குறைத்து மந்தத்தை அதிகப்படுத்தும்.

ஆக இப்படிப் பல காரணங்களால் கூலிச் செலவு நெகிழ்ச்சியற்றதாயுள்ளது. இதை மனத்தில் கொண்டு நாம் எந்த அளவுக்குக் கூலியை மாற்றும் முறையால் பொருளாதார நிலைபேற்றைச் சாதிக்க முடியும் என்று பார்ப்போம். கூலி என்பது உற்பத்தி செய்ய ஏற்படும் ஒரு செலவினம். ஆனால் இந்தச் செலவே தொழிலாளிகளின் வருமானம். ஆகவே செலவைக் குறைக்கும் நோக்கத்தோடு கூலியைக் குறைத்தால் வருமானமும் குறையும். அதனால் உற்பத்திக்குத் தேவை குறையும். வாணிபச் சுழல் நோக்கில் பார்க்கும்போது கூலி விறைப்பு (rigidity) சுழலில் நெளிவுகளை அதிகப்படுத்துவதாகத் தெரியும். மந்தக் காலத்தில் மற்ற விலைகள் விழும்போது கூலி குறையாதிருந்தால் நஷ்டத்தை அதிகப்படுத்தும். மந்தத்தை வலுப்படுத்தும். மீட்சிக் காலத்தில் கூலியானது பிற விலைகளின் மாறுதலுக்குப் பின் தங்குவதால் இலாபத்தை அதிகப்படுத்தி அளவு கடந்த பெருக்கத்துக்குத் தூண்டுகோலாக இருக்கும். தற்காலத்திய கூலிகள் எளிதில் மாறாமை இவ்விதமாகச் சுழலை வலுப்படுத்தும் காரணியாக இருக்கிறது. ஆகவே செலவு

என்கிற முறையில் கூலியைக் கருதினால் கூலியில் நெகிழ்ச்சி உண்டாக்குவது அவசியமாகிறது.

ஆனால் கூலியை ஒரு செலவு என்று மட்டும் நினைக்க முடியாது. அது வாங்கும் சக்திக்குத் தோற்றுவாய். ஆகவே, கூலி மாறுவதால் மக்களின் வாங்கும் சக்தி மாறும்போது தொழில் முயல்வோரின் விற்பனையைப் பற்றிய எதிர்பார்ப்பு (expectation) பாதிக்கப்படும். ஆகவே மந்தக் காலத்தில் பரிகார முறையில் முரண்பாடு தோன்றும். தொழில் முயல்வோர் கூலியை ஒரு செலவினமாக மட்டும் கருதிக் குறைக்க விரும்புவார்கள். தொழிலாளிகள் கூலியை வருமானமாகக் கருதிக் குறைப்பை எதிர்ப்பார்கள். கூலியைக் குறைத்தாலும் எல்லா உழைப்பாளிகளும் வேலைக்கு வருவார்கள். உழைப்பாளிகளுக்குத் தேவை (demand for labour) மிக நெகிழ்ச்சியுடையது என்று தொழில் முயல்வோர் நினைக்கின்றனர். இப்படியானால் கூலியைக் குறைத்தால் தொழிலதிபர்கள் அதிகமான ஆட்களை வேலைக்கு எடுப்பார்கள். இதனால் மொத்தத்தில் கூலி வருமானம் அதிகப்படும்.

ஆனால் இந்தவித முடிவு அநேகக் காரணங்களால் பொய்யாகலாம். முதலாவது, கூலிக் குறைப்பு பண்டத் தேவையைக் குறைத்து விலை வீழ்ச்சிக்குக் காரணமாகலாம். ஆகவே கூலிக் குறைப்பால் வந்த இலாபம் விலை வீழ்ச்சியால் அழியும். வடிப்புச் சக்திகள் வேலை செய்யும். விலை வீழ்ச்சியினால் நலப்படுபவர்கள் மாறா வருமானம் பெறுபவர்கள். அவர்கள் அதிகமாகச் சேமிப்பு நாட்டம் உடையவர்கள். ஆகவே மொத்த சமூகத்தின் வாங்கும் சக்தி குறையும். இரண்டாவது, ஒரு தரம் கூலியைக் குறைத்தால் மேலும் மேலும் குறைக்கக்கூடும் என்கிற நம்பிக்கை தொழில் முயல்வோருக்கு உண்டாகி அவர்கள் இன்னும் பொறுத்துப் பார்க்கலாம் என்று ஆள் எடுப்பை ஒத்திப் போடலாம். ஆகவே கூலி குறைந்தும் ஆள் எடுப்புக் குறையும், அல்லது ஏறாது. ஆனால் ஒரே ஒரு முறைதான் கூலிக் குறைப்பு, மீண்டும் நிகழாது என்பது நிச்சயமானால் இந்த விளைவு இராது. மூன்றாவது, கூலி குறைந்தும் விலைகள் குறையவில்லையானால் அல்லது காலம் தாழ்ந்து குறையுமானால் அது இலாபத்தை அதிகப்படுத்திவிடும். ஆயினும் பெருக்கம் காண முடியாமல் இருக்கலாம். ஏனென்றால் மந்தத்தில் முதலீடு செய்வதைவிடச் சும்மாவிருந்து பணத்தைப் பழைய பாங்குக் கடனைத் தீர்க்க அல்லது கையில் வைத்திருக்கத் தொழில் முயல்வோர்கள் முடிவு செய்யலாம். நான்காவது, கூலியும் விலையும் குறைந்து

செலாவணிக்குப் பணத் தேவையைக் குறைக்கலாம். இதனால் வட்டி வீதம் இறங்கலாம். இது முதலீட்டைத் தூண்டலாம். ஆனால் வட்டி குறைப்புக் காரணமாக மட்டும் மந்தக் காலத்தில் முதலீடு செய்ய முன்வர மாட்டார்கள். தவிர, வட்டியைக் குறைக்க வேண்டுமானால், கூலியைக் குறைப்பது மூலம் சாதிப்பதைவிட, நேரடியாகப் பணத்துறை நடவடிக் கையால் வட்டியைக் குறைத்துவிடலாமே.

ஆகவே நாம் இரண்டு முரண்பட்ட கொள்கைகளுக் கிடையில் இருக்கிறோம். இரண்டில் எது சரி? எது தவறு? இரண்டிலும் சிறிது உண்மை இருக்கிறது. சூழ்நிலைக்கேற்ப இரண்டும் சரியாயிருக்கலாம். ஆனால் கூலிக் குறைப்பு என்பது ஒரு பொருளாதாரப் பிரச்சினை மட்டும் அன்று. ஓர் அரசியல், சமூகப் பிரச்சினையும் கூட. ஆகவே இதைச் செம்மையான முறையாகக் கருத முடியாது. வேறு முறைகளை ஆண்டு மந்தத் தைச் சமாளிப்பதே சரியான முறை. கூலியை, வாங்கும் சக்தி என்ற முறையில் கருதினால் அதைச் செழிப்பை உண்டாக்கப் பயன்படுத்த முடியும் என்று தோன்றுகிறது. மீட்சி உண்டாவ தற்குக் கூலியை உயர்த்தலாம். இந்த முறை தொழிலாளி களுக்கு மிகவும் பிடித்தமாயிருக்கும். ஆனால் இது தொழில் முயல்வோருக்கு வெறுப்பாயிருக்கும். பின்னால் நன்மை அடை வோம் என்று நம்பி மந்தக் காலத்தில் கூலியை உயர்த்தத் தொழில் முயல்வோர் யாரும் ஒருப்பட மாட்டார்கள். வெளியே போகும் பணத்தில் தமக்கு எவ்வளவு திரும்பும் என்பது நிச்சய மில்லை. வருவதும் காலம் தாழ்ந்து வரும். ஆனால் தொகுதியாகத் தொழில் முயல்வோரை எடுத்துக்கொண்டால் அவர்கள் செலவீடு அவர்களுக்கே வருவாயாகத் திரும்பும் என்பது நிச்சயம். ஆனால் நுகர்பொருள் தொழில்களில் உடனே மீளும்; முதற் பொருள் தொழில்களில் கால தாமதம் ஆகும். இந்த நிலையில் தொழில் அதிபர்களைத் தூண்ட பாங்குப் பணம் எளிதில் கிடைக்க வேண்டும். ஆனால் மந்தத்தில் தொழில் முயல்வோர் பாங்குக் கடனை நாடுவதில்லை. ஏனெனில் எதிர்காலத்தைப்பற்றி அவர்களுக்கு நம்பிக்கையில்லை. ஆகவே கூலி ஏற்றும் முறையை மந்தக் காலத்தில் ஆள்வது எளிதன்று.

# கலைச்சொற்கள்

| | | |
|---|---|---|
| அட்வான்சு | — | Advance |
| அடகு | — | Hypothecation |
| அறிவுறுத்தல் | — | Moral suasion |
| அனுமதிக்கப்பட்ட | — | Authorised |
| அசையாச் சொத்து | — | Real property |
| அரிய | — | Scarce |
| ஆர்பிட்ரேகர் | — | Arbitraguer |
| ஆள்சார்ந்த | — | Personal |
| இயக்கங்கள் | — | Movements |
| இரண்டாம் நிலை | — | Secondary |
| இருப்புநிலைக் குறிப்பு | — | Balance Sheet |
| இருதிற | — | Bilateral |
| இயல்பான | — | Normal |
| இயற்கையான | — | Natural |
| இறுத்தல் | — | Pegging |
| இறுதிநிலைத் திறன் | — | Marginal efficiency |
| ஈடுசெய் | — | Compensatory |
| உத்தரவாதம் | — | Guarantee |
| உத்தரவாதம் தருதல் | — | Under writing |
| உபரி | — | Excess, Surplus |
| உண்டியல் | — | Bill |
| உண்டியல் தரகர் | — | Bill brokers |
| உண்மைப் பொருள் | — | Real |
| எச்சப்பாடு | — | Surplus |
| எச்சரிக்கை | — | Precaution |
| ஏற்றுமதி இரசீது | — | Bill of lading |
| ஒப்பந்தம் | — | Agreement |
| ஒழுக்கு | — | Leakage |
| ஒழுங்கு விதிகள் | — | Regulation |

கடன் தீர்வு ஒதுக்கீடு — Amortisation
கடன் கடிதங்கள் — Letters of credit
கடன் கட்டுப்பாடு — Credit control
கடன் கருவிகள் — Credit instruments
கட்டமைப்பு — Structure
கட்டடச் சங்கங்கள் — Building Societies
கருவிகள் — Instruments
குவியும் — Cumulative
குவித்தல் — Hoarding
குழாய் நிரப்பு — Pump priming
குறை மதிப்பீடு — Uuder-valuation
கூட்டுப் பங்கு — Joint stock
சதவீதம் — Percentage
சபை — Board
சமநிலை — Equilibrium
சமநிலைக்கேடு — Disequilibrium
சர்வாதீனம் — Monopoly
சரக்கு — Merchandise
சரக்கிருப்பு — Inventory
செக்கு — Cheque
செக்கூரிட்டி — Security
செங்குத்தான — Vertical-
செயல்விதி — Article
செலவீடு — Outlay
செலாவணித்தன்மை — Negotiability
செலுத்துநிலை — Balance of payments
செலுத்து — Payment
செழுமை — Prosperity
சேமிப்பு பாங்கு — Savings Bank
சுருக்கம் — Contraction
சுதேச — Indigenous
சுற்று முறையான — Round-about
தொகுதி பாங்கு முறை — Group Banking System
தடை செய்த கணக்கு — Blocked account
தவணைகொள் பேரம் — Hire purchase
தவணை வைப்பு — Time deposit
துணை ஈடு — Collateral
தூண்டுகோல் — Incentive
தூண்டப்பட்ட — Induced
நீர்மை — Liquidity

| | |
|---|---|
| நிலைபேறு | — Stability |
| நுகர்வோர் கடன் | — Consumer credit |
| நெகிழ்வுள்ள | — Flexible |
| நெடுங்கால | — Long term |
| பதுக்கல் | — Hoarding |
| பத்திரம் | — Bond |
| பங்கீடு | — Ration |
| பணவடிப்பு | — Deflation |
| பண உண்டியல் | — Finance bill |
| பணச்சார்புடைய | — Monetary |
| பண வருமானம் | — Monetary income |
| பற்றுக்குறை | — Deficit |
| பன்னாட்டு | — International |
| பன்னாட்டுப் பணநிதி | — International Monetary Fund |
| பன்னாட்டுப் பாங்கு | — International Bank |
| பாங்கு வீதம் | — Bank Rate |
| பாங்குத் திட்டம் | — Banking system |
| பாங்கிடை | — Inter-bank |
| பிரயாணிச் செக்கு | — Travellers' cheque |
| புலனாகும் | — Visible |
| புலனாகா | — Invisible |
| புறக்குறிப்பு | — Endorsement |
| புனருத்தாரணம் | — Reconstruction |
| புதுமைப்புகுத்தல் | — Innovation |
| பின்புற | — Backdoor |
| பூரிப்பு | — Boom |
| பெருக்கம் | — Expansion |
| பெருக்கி | — Multiplier |
| பொற்கட்டி | — Bullion |
| பொதுநிதித்துறை சார்ந்த | — Fiscal |
| பொறுப்புகள் | — Liability |
| பொறுக்கான | — Selective |
| பொருத்தக்கேடு | — Maldistribution |
| பொன் பெயர் எல்லை | — Gold points |
| மதிப்பிழப்பு, மதிப்பிறக்கம் | — Depreciation |
| மதிப்புக் குறைப்பு | — Devaluation |
| மதிப்பேற்றம் | — Appreciation |
| மந்தம் | — Depression |
| மறுகழிவு | — Rediscount |
| மறுகோள் | — Repurchase |

| | |
|---|---|
| மாற்றுவீதம் | — Exchange rate |
| மாற்றுக் கட்டுப்பாடு | — Exchange control |
| மாற்றுத்தடை | — Exchange restriction |
| மாற்றுச் சமன்கணக்கு | — Exchange equalisation account |
| மாற்றுபாங்கு | — Exchange Bank |
| மாறிடைக்காலம் | — Transitional |
| மிகை முதலீடு | — Over-investment |
| மிகைச்சேமிப்பு | — Over-saving |
| மிகைமதிப்பு | — Over-valuation |
| மீட்சி | — Revival |
| முடுக்கி | — Acceleration |
| முதல்பெயர்ச்சி | — Capital movement |
| முதனிலை | — Primary |
| முதலீடு டிரஸ்ட் | — Investment trust |
| முறிவு | — Failure |
| முன்னோக்கிய | — Forward |
| மையபாங்கு | — Central Bank |
| யூகவாணிபம் | — Speculation |
| வடிப்பு | — Deflation |
| வழி வந்த | — Derived |
| வலிந்த | — Forced |
| வணிக பாங்கு | — Commercial Bank |
| வர்த்தகச் சுழல் | — Trade cycle |
| விகிதம் | — Ratio |
| விளைவு | — Yield |
| விருப்பம் | — Option |
| வீதம் | — Rate |
| வெளியங்காடி நடவடிக்கை | — Open market operation |
| வெளியீடு | — Issue |
| வேறுபாடு செய்தல் (பேதங் காட்டல்) | — Discrimination |
| வேலையின்மை | — Unemployment |
| வேலைநிறைவு | — Full employment |
| ரிசர்வு | — Reserve |
| ரொக்கக்கடன் | — Cash credit |
| லாபப் பங்கீடு | — Dividend |